# ஆனந்தரங்கப் பிள்ளை

# நாட் குறிப்பு

தொகுதி ஆறு

கலை பண்பாட்டுத் துறை

புதுவை அரசு

1998

☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி VI

☆ மக்கள் பதிப்பு

☆ 1988, ஏப்ரல்

☆ விலை :

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
புதுவை 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர் எல். இராமமூர்த்தி

பிரத்தியேகமான

ஆனந்த ரங்கப்பிள்ளையவர்களது

சொஸ்த லிகித

# தினப்படி சேதி குறிப்பு.

ஆறாம் புத்தகம்

**விலை ரூபாய் 3**

கிடைக்குமிடம் :-

**அரசாங்க புத்தகசாலை, புதுச்சேரி.**

சந்தானம் பிரின்டிங் ஒர்க்ஸ், புதுவை.

1956

### பிரத்தியேகமான

# ஆனந்த ரங்கப்பிள்ளை

# தினப்படி சேதி குறிப்பு.

## சொஸ்த லிகிதம்

### ஆரும் புத்தகம்

**விபவ ௵ ஐப்பசி ௴ 6 உக்கு 1748 ஆ ஒக்தோபர் ௴ 18 உ வெள்ளிக்கிழமை.**

இத்தினிநாள் காலத்தாலே ஸ்ரீ துரையவர்களுக்கு வந்த கபுரு என்னவென்றால்:- நேற்று இராத்திரி ஏழு மணிக்கு அரியாங்குப்பத்திலிருந்த பலகை தட்டுமுட்டுகள் சமஸ்தமும் போட்டுக் கொளுத்தின; வெளிச்சம் நேற்று இராத்திரி ஏழு மணிக்குத்தானே தெரிந்து, பாளையத்தைக் கொளுத்திப்போட்டு அப்பாலே இங்கிலீஷ்காரன் பவுன்சுகளெல்லாம் வாங்கிப்போகிறதை துரையுடனே மேலே மெத்தையின் பேரிலே இருந்துக்கொண்டு பேசிக்கொண்டிருக்கும்போது சொன்னேன். அந்தபடிக்குத்தானே இன்று காலையில் இங்கிலீஷ் பவுன்சுகளெல்லாம் வாங்கிப் போய் ரெட்டிச்சாவடிக்குச் சேர்ந்ததென்று அதிகாலமே ஆறு மணிக்கெல்லாம் சேதி வந்தது. அந்த க்ஷணமே 500-600 சிப்பாய்களையும் குதிக்கார திராகோம் வெள்ளைக்காரரையும், துலுக்கச் சேவுகர்களையும் மூசியே துக்கேனையும் (Duquenne) அனுப்பி உள்ளே போய்ப் பார்த்து இருக்கிற சேதிக்கும், இங்கிலீஷ்காரன் பவுன்சு இந்த மட்டுக்கும் போனதென்கிற சேதியும் சொல்லி அனுப்பச்சொல்லி அனுப்பினபடிக்கு மூசியே துக்கேன் (Duquenne) முதலான பேரெல்லாம் அரியாங்குப்பம் போய் சேர்ந்து நம்முடைய கொடியும் போட்டு அப்பால் மனுஷரையும் அனுப்பி இங்கிலீஷ் பவுன்சு எதுவரைக்கும் போனதென்று விசாரிக்க அவர்கள் தூக்குணாம்பாக்கம் மார்க்கமாய்ப் போய் தேவனாம்பட்டணம் சேரத்தக்கதாக யோசனை பண்ணி தூக்குணாம்பாக்கம் போய்ச் சேர்ந்ததாய் சேதி தெரிந்துக்கொண்டுச் சொல்லியனுப்ப அப்பால் துரையவர்கள் வண்டி

யேறிக்கொண்டு அரியாங்குப்பம் போய்ப் பார்த்து, மறுபடி பதிஞேரு மணிக்கு வந்து சேர்ந்த உடனே என்னை அழைத்தனுப்பிவைத்து நயினர் சேவுகர் அங்கே போய் பார்க்கவில்லையென்றும், நீயனுப்பித் திட்டமாய் விசாரிக்கப்போகாதாவென்றும் இதுக்கெல்லாம் நான் சொல்லவேணுமா வென்று பார்த்திருக்கவேணுமென்று சொல்லி சீக்கிரத்தில் நயனர் மனுஷர்களை அனுப்பச்சொல்லி பார்க்கத்தக்கதாக கிதாய் நயினருக்குச் சொல்லச் சொன்னர். அந்தப்படிக்குத்தானே பெரியண்ண நயினரை அழைப்பித்து அந்த க்ஷணமே மனுஷர்களை அனுப்பச்சொல்லி சொன்னேன். அவனுமந்தபடிக்கு நாலுதுப்பாக்கிக்காரர்களை அனுப்பிவைத்தான். அப்பால் நாளை காலையில் நம்முடைய கிராமங்களுக்கு தமுக்குகளை அனுப்பி குடிகளை யெல்லாம் வரச்சொல்லி தமுக்குப்போடச்சொல்ல அனுப்பென்று சொன்னர். அந்தப்படிக்கு பெரியண்ண நயினரை அழைப்பித்து அரியாங்குப்பம், ஒழுகரை, முருங்கப்பாக்கம், அவுஷ்பாக்கம், காலா பட்டு, குண்டுகிறுமம் இதுகளுக்கு யெல்லம் மனுஷர்களை அனுப்பி தமுக்கும் கூட அனுப்பின உடனே குடிகளெல்லாம் வந்துசேர்ந்து சுகமாய் அவரவர் செய்கிற தொழில் செய்துக்கொண்டு சுகத்திலேயிருக்கச் சொல்லி துரை உத்தாரமென்று தமுக்குபோடச் சொல்லி வயணமும் சொல்லி போகிறவர் களுக்கு படிக்குக்கூட சாராய கிடங்கில் குடிக்கச்செய்து போகச்சொல்லி சொன்னபிறகு தானியம் விஸ்தாரமாய் அழைப்பிக்கத் தக்கதாக எந்த எத்தனமுண்டோ அந்த எத்தனம்பண்ணி தானியம் அழைப்பிக்க சொல்லச் சொன்ஞர். என்னலே ஆனமட்டுக்கும் பிரயாசைப்பட்டு அகப்பட்டமட் டுக்கும் அழைக்கின்றேன் என்று சொன்னேன். இதில் வழுதாவூர் கில்லே தார் மிராசலாவுத்திகானும் (Mirzala uddine Khan) பழய கில்லேதார் மாறு உசேன்கானும் (Hussain Khan) துரையவர்களுக்கு மோபார்க்கு காகிதமெழுதி அனுப்பினது பார்ந்துக்கொண்டு துரைக்கு நீர் சத்துருவை ஜெயம்பண்ணுகிறதற்கு மோபார்க்கு பாதியெழுதிஞர்களென்று சொன்ன தற்கு அதை உற்சாகமாய் கேளாமல் அலச்சியமாய் பதிலுத்தாரமெழுதிக் கொடுக்கச்சொன்ஞர். அவர்கள் (கடிதம் கொண்டுவந்தவர்கள்) இனும் கொடுக்கச்சொல்லுவாரென்று பார்த்தார்கள், அவர் (துரை) இவர்களை போகச் சொல்லென்று போகச்சொல் என்கிற வாக்கியமாய்ச் சொன்ஞர் அப்பால் பதில் காகிதமும் யெழுதிக்கொடுத்து பேருக்கு 5 ரூபாயும் கொடுத்து போகச்சொன்னேன்

இன்றைய தினம் நம்முடைய புதுச்சேரி துறைக்கு வடவண்டை பாரிச மாயிருந்து இங்கிலீஷ்காரன் கப்பல்களெல்லாம் பாயெடுத்து ஓட வீராம் பட்டணம், அரியாங்குப்பம் துறைக்கு நேராய் கொண்டுவந்து வைத்து பிடித்து இரண்டு ஒரு படி மேலாகசேர்ந்து ஓடிப்போனது. இரண்டு கப்பல்

கன் தேவனும்பட்டணத்துக்குப் போனது மற்ற கப்பல்களெல்லாம் அங்கே தானே லங்கர்போட்டுக்கொண்டிருந்தான்

**விபவ ௵ ஐப்பசி ௴ 7 ௳ 1748 ஆ ஒக்தோபர் ௴ 19 ௳ சனிவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே துரை அவர்கள்ண்டைக்குப் போனவிடத்திலே கிராமம் கிராமத்துக்கு தமுக்குப்போட்ச்சொல்லி அனுப்பினு யாவரென்று கேட்டார், நேற்று சாயங்காலமே அனுப்பிவைத்தேன், இன்னேரம் அபிஷேகப்பாக்கம், அரியாங்குப்பம், ஒழுகரை, முருங்கப்பாக்கம், குண்டுகிராமம், காலாப்பேட்டு இதுகளெல்லாம் தமுக்குப்போட்டு ஆம் (ஆயிருக்கும்) மத்தியானத்திற்குமேல் போட்டோமென்று கபுருவந்து சொல்லுவார்களென்று (நான் சொன்னேன் )

அதற்கு நல்லது சென்னபட்டணத்திற்கும் இதற்கும் தபாலே 30 மலையப்பன் சேவுகர்கள் 100 பேர் சேக்கு இப்ராஹிம் (**Shaik Ibrahim** சேவுகர்கள் 100 பேர் (**Abdul rahman**) அப்துல் ரஹிமான் அபிமான் சிப்பாய்கள் 100 பேர் ஆக 300 பேர் 30 தபாலுக்கும், தபாலுக்கு பத்து பத்து பேர் விழுக்காடு வைத்தால் சென்னபட்டணத்தை வழி சோனுமாரி கட்டாது அப்பால் இங்கிலீஷ்கார மனுஷர்களைக் கண்டால் பிடிக்கிறது, அகப்படாவிட்டால் சுட்டுப்போடுகிறது. அவர்கள் 100–50 பேர்களுடனே வந்தால் நம்முடையவர்களையும் கும்பலாய் கூட்டிக்கொண்டுபாய் மேல் விழுந்து சுட்டுத்தள்ளிபோடச்சொல்லி உத்தாரம் கொடுத்து அனுப்புகிறது மல்லாமல் நம்முடைய தட்டுமுட்டுகள் போகிறது வருகிறது போய்வருகிற மனுஷர்களை பத்திரமாய் விசாரித்துக்கொள்ளச் சொல்லி அனுப்பச்சொல்லியும் சொன்னர். நல்லதென்று சென்னபட்டணத்திற்கும் இதற்கும் மனுஷர்களிருக்கிறயிடம் யெழுதிப்பார்க்க 31 இடங்களானது அந்த முப்பத்தோரு வழிக்கும் (இடத்திற்கும்) 310 பேருண்டே அதற்கு அப்துலயிமான் சிப்பாய்கள், 100 சேக்கு இப்ராம் சிப்பாய்கள், 100 மலையப்பன் சிப்பாய்கள், 110 ஆக முன்னூற்றிபத்து பேருக்கும் மேலே எழுதியிருக்கப்பட்ட ஒடுதியும் அந்தந்த பேரெழுதி ஒரு தாவுக்கு பத்து பேர் கையிலே அந்த தாவு சீட்டுக் கொடுத்து அனுப்புகிறது அந்த சீட்டு படிக்கு அந்த தாவிலே போயிருக்கிறதென்று பவ்வத்து பேருக்கு ஒரு சீட்டு விழுக்காடு அப்துலயிமான் தாலுக்கு சிப்பாய்களுக்கும், சேக்கு இப்ராம் தாலுக்கு சிப்பாய்களுக்கும் மலையப்பன் சிப்பாய்களுக்கும் சீட்டுக்கொடுத்து கடுதாசி (**cortauches**) இருபது விழுக்காடு ஜனம் ஒன்றுக்கு கொண்டுப் போகச்சொல்லி உத்தாரப்படிக்கு ஷேக் அப்துலயிமான் சிப்பாய்களுக்கு **கடுதாசி (cortauches)** கொடுத்து இருக்குதென்றார்கள், ஷேக் இப்ராம்

தாலுக்கு சிப்பாய்களுக்கு பவ்வத்து இருக்கிறது; மற்ற பவ்வத்து வாங்கிக் கொண்டு போரோமென்று உத்திரவும் நடக்கவேண்டியதற்குக் கேட்டுக் கொண்டு இராத்திரிக்கு நம்முடைய சாவடியிலே இருந்து நாளைக் காலையிலே அவரவருக்கு எழுதிக்கொடுத்த உத்திரவுபடிக்கு போறோமென்று போனார்கள். மலையப்பன் சேவுகர்களுக்கும் அப்படித்தான் தாவுக்கு சீட்டுக் கொடுத்து நடக்கவேண்டியதற்கு உத்திரவும் சொல்லி போகச்சொல்லி இருக்குதென்று கடுதாசி கேட்டால், பரிச்சேதமாய் கடுதாசி இல்லையென்றார்கள். நல்லது நீங்கள் போங்கள் நாளைக் காலையில் வாங்கி அனுப்புகிறோமென்று போகச்சொல்லி ஆப்பால் இந்த மூன்று வகுப்பாரும் இருக்க வேண்டியது முன் மலையப்பன் தாலுக்கு அப்பால் ஷேக் இப்ராம் தாலுக்கு அப்பால் அப்துலயிமான் தாலுக்கு இந்தபடிக்கு திட்டப்படுத்தினபடிக்கு அவரவர் தாவுக்குப் போகச்சொன்னபடிக்கு இரண்டு வகுப்பு சிப்பாய்கள் புறப்பட்டு நம்முடைய சாவடியைப் போய்ச் சேர்ந்தார்கள். மலையப்பன் சேவுகர்கள் போகாமல் நின்றார்கள்.

மற்றப்படிக்கு வெத்திலைத் தோட்டம் போடவேணுமென்று வாசுதேவன் மகன் வந்து கேட்டதற்கு குண்டுக்குள்ளே ஒரு மரமாகிலும் இருக்கப்போகாது. கவனிப்பார்களை அல்லாமல் செடி, வீடுவாசல் ஒன்றும் இருக்கப்போகாது. இப்போ வெட்டிப்போட்ட தோட்டங்கள் கூட கிளைத்துக்கொண்டு இருக்கிறதைக் கூட வேரைப் பிடுங்கிச் சரிப்பண்ணி இருக்கிறது. உழுது விரைத்துப்போடச்சொல்லி உத்தாரம் கொடுத்து வெத்திலை தோட்டக் குண்டுசாலைக்குள்ளே கவையில்லை. அப்பாலே போட்டுக் கொள்ளச்சொல்லி உத்தாரம் கொடுத்தது மல்லாமல் மூன்று காசுக்கு ஒன்பது வெற்றிலை அல்லவே முன் விற்றது. இனிமேல் எழு வெற்றிலை வில்லுங்களென்று உத்தாரம் கொடுத்தார்.

அப்பால் பரிச்சேதம் உள்ளே போனவர்கள் வெளியே வரப்போகாதென்றும் இருக்கிறவர்களை இவ்வளவு ஜனமென்று எழுதிக்கொண்டு அவரவர்கள் வெளியே போனால் முசியே தெலார்ஷ் (Delarche) சிட்டை வாங்கிக்கொண்டு வெளியேபோய் மறுபடி உள்ளே வரும்போது சீட்டைக் காட்டிவிட்டு வரவேணுமென்று, முசியே தொர்ஷுக்கு உத்தாரம் கொடுத்தார் அந்தப்படிக்கு வழிச்சாரி சேவுகர்களுக்கெல்லாம் தாக்கீது பண்ணி வைத்ததென்று வழிச்சாரகாரர் வந்து சொன்னார்கள்.

**விபவ ஸு ஐப்பசி மீ 8 உ க்கு 1748 ஆ ஒக்தோபர் மீ 20 உ ஆதிவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனப்போலே நேற்று உத்திரவுபடிக்கு ஸ்தானத்துக்கு ஸ்தானம் பத்து பேர்

விழுக்காடு ஷேக் இப்ராம் சிப்பாய்களும், அப்துலயிமான் சிப்பாய்காளும் இருநூறுபேர்களானதே மலேயப்பன் சேவுகர்கள் 110 பேருக்கு இப்போ எத்தனை கடுதாசி இருக்கிறதோ (cortauches) அத்தனை கடுதாசிபோக மற்ற கடுதாசி (cortauches) ஜனம் ஒன்றுக்கு 20 விழுக்காடு கணக்குப் பார்த்து மற்றதுக்கு ஒரு சீட்டெழுதிவாவென்று சொன்னார் அதிலே முசியே லாசு (Law) வந்தார். லாசைப் பார்த்து மலேயப்பன் சேவுகருக்கு எத்தனைக் கடுதாசி இருக்கிறதோ, அதைப் பார்த்துக்கொண்டு மற்றக் கடுதாசி இப்போதானே கொடுத்து அனுப்பிவிடு என்று சொல்லி நேற்று இராத்திரி சிப்பாய்கள் பாளேயக்காரர்கள் சேவுகரை துப்பாக்கியுடனே வெளியே விடவேண்டாமென்று வாசற்படி காவல்காரனுக்குச் சொல்லி யிருக்கிறது. ஆனபடியினாலே வாசற்படி காவர்காரனுக்கு விட்டுவிடச் சொல்லி உத்தாரம் கூட யெழுதிக்கொடுத்து அனுப்பிவிடென்று துரை சொன்னார். அவனழைத்துக்கொண்டுபோய் எண்ணிப்பார்க்க 650 கடுதாசி யிருந்தது, மற்ற கடுதாசிகள் கொடுத்து பாக்கின் கல்லுகள் யெல்லாம் பரி சோதித்து வெளியிலே அனுப்பிவிட்டான். ஏகத்துக்கு 31 வழிக்கு நேற்று இராத்திரிபோன சிப்பாய்கள்கூட இதுகூட 310 பேரும் போனார்களிவர் களுக்குச் சொல்லி அனுப்பின உத்திரவுயென்னவென்றால்: சென்னபட்ட ணத்திற்கும் இதற்கும் 31 இடத்திலேயிருக்கிறதாகவும் இங்கிலீஷ்காரரை சேர்ந்த பாளேயக்காரர், மனுஷரவர்கள், மனுஷர் ஆராகிலும் கூட்டமாய் வந்தாலும் நம்முடையவர்களும், 50-60 பேர் சேர்ந்து அவர்களைப் பிடித்து அனுப்புகிறது, பிடிக்கிறதற்கு அகப்படாவிட்டால் சுட்டுப்போடுகிறது மல்லாமல் நம்முடைய சாமான்களேயும் தட்டுமுட்டுகளேயும் மனுஷர்போகிற வர்களுக்கு உபத்திரமில்லாமல் பத்திரமாய்ப் பார்க்கிறது என்று உத்திரவு கொடுத்து அனுப்பச் சொன்னபடிக்கு உத்திரம் கொடுத்து நேற்றுபோன சிப்பாய்களுக்கும் இன்றுபோன மலேயப்பன் சேவுகருக்கும் சொல்லி அனுப்பி வைத்தேன். நேற்று இராத்திரி நாம் வைத்த ஷேக் இப்ராம் சேவுகர்களுக் கும் மலேயப்பன் சேவுகருக்கும் அந்நனே நகராருபண்ணியவன் இன்றைக்கு காலேயில் அந்த பிரஸ்தாபமெட்டாதபடியினாலே வேளேயினுடைய குண மென்று எண்ணிக்கொண்டேன். மற்றபடி விசேஷித்த சமாச்சாரங்கள் விந்தையாயொன்றும் கேழ்விப்படவில்லே.

நமாபுலூர் திருச்சினாப்பள்ளிக்குப் போனதாகவும் மகமதலிகான் (Muhammad Ali Khan) எதிரே வாலிகொண்டாபுரத்துக்கு இப்புரத்தில் தானே எதிரேவந்து அழைத்துப்போனதாகவும் போகச்சொல்லிக் கொண்டாபுரத்திலே உசேன்சாயபு (Hussain) வாலிகொண்டைக்கு 2000 ரூபாய் நதிர்வைத்து விழுந்ததற்கும் வேரே ரெண்டாயிரம் ரூபாய்க்கு

கொடுத்ததாகவும்-உடையார்பாளையத்தில் நான் 40000 விராகனுக தீர்த்துக் கொண்டு இப்போ 20000 விராகனும் இன்னும் மூன்று மாதகெடுவுக்கு 20000 விராகன் கொடுக்கவும் தீர்த்துக்கொண்டதின்பேரிலே லஸ்கா (இராணுவம்) திருச்சிறுப்பள்ளிக்கு போனதென்றும் திட்டபடி செல்ல கனகாரயப்பிள்ளை நபாபுக்கு எதிரே வந்து 200 விராகன் நதிர்வைத்து விருந்துக்கு 300 விராகனும் ஆக 500 விராகனும் கொடுத்து சந்தித்துக் கொண்டாரென்றும் புதுச்சேரியின் மேரிமல யிரங்கியிருந்து சண்டை பண்ணினவன் வெகு ஜனங்களை போக்கடித்துக்கொண்டு நிருவாகமில்லாமல் பேர்விட்டானென்று நாபாபுக்குச் சமாசாரம் வந்ததின்பேரிலே நவாபு அன்வர்திகான் சாயபு சொன்னது: நான் முன்னே தானே சொல்லவில்லையா, பிராஞ்சுக்காரர் (invalide) பலத்து இருக்கிறார்கள் இங்கிலீஷ்காரர் நாமற்று க்ளா இருக்கிறார்கள் என்று சொல்லவில்லையாவென்று சம்பர்திராயன் முதலானபேர் கச்சேரியிலே பேசியிருந்தாற்போலேயும், முன்னே இங்கிலீஷ்காரர் பக்ஷமாய் பேசினவர்களெல்லாம் முகம் கரிபூசிக்கொண்டு இப்போ திரும்பி பேசுகிறார்களென்றும் விருத்தாஜலத்தண்டையிலே முத்துமல்லாரெட்டி லஸ்கர் ஓடிவந்தவனுக்கும் தமக்கும் வெகு பேச்சுகள் நடந்தது என்றும் வக்கில் சுப்பயன் காகிதம் உடைத்துரண்டையிலே லஸ்கரிலேயிருந்து எழுதினது இரண்டு பிரானே பிள்ளையாண்டான்கள் கொண்டு வந்தார்கள்.

**விபவ ஐப்பசி மீ 9 உ க்கு 1748 ஒக்தோபர் 21 உ சோமவாரம்.**

இற்றைநாள் துரையவர்கள் வீட்டிற்குப் போன விடத்திலே துரை என்னைப் பார்த்து உன் பெண்ஜாதி தகப்பன் பேரென்னவென்று கேட்டார். சேஷாத்திரி பிள்ளையென்று சொன்னேன் செங்கல்பட்டு பாளயக் காரனுயென்று கேட்டார். ஆம் என்றுச் சொன்னேன். ஆனால் உன்னுடைய அம்மாருயிருந்து இங்கிலீஷ்காரருடனே கூடிக்கொண்டு பெத்து நாய்க்கனுக்கு மத்தத்து அனுப்பிக்கொண்டு அவனுக்கு புதுச்சேரி உளவெல்லாம் சொல்லிக்கொண்டிருப்பானேன். இவருக்கு நாங்களென்ன பொல்லாப்பு பண்ணினோம் என்று கேட்டார். அய்யா பெத்துனுய்க்கருக்கும் இவருக்கும் வெகுநாளாய் சினேகமுண்டு; ஒரு பெத்துனுய்க்கன்மாத்திரமல்ல பாளையக்காரர் துலுக்கர் சமஸ்தமான பேர்களுக்கும் அவர் சினேகம் பண்ணியிருக்கிறது மல்லாமல் அவரை பொல்லாதவரென்று ஒருத்தர் சொல்லத்தக்கதில்லை. இதல்லாமல் பாளயக்காரர் விருத்தியே அவருக்கு தெரியாதென்றும் முசதகிரி பணத்தை தெரியுமென்றும், சமஸ்தமான போது துலுக்கர் பாளயக்காரர், வர்த்தகர் குடிகள் கூட சொல்லிக் கொள்ளுகிற பேச்சு நீங்கள் நன்றாய் விசாரித்துப்பாருங்கள்; ஒரு இடத்

திலே ஒருத்தருக்கொருத்தர் பொல்லாப்பென்றால் அங்கே தலைவைத்துப் படுத்துக்கொள்கிறதில்லை அப்படிப்பட்டவர் இந்த இங்கிலீஷ்காரருக்கு மத்தத்து வந்து உங்கள் பேரிலே இராஜ காரியம் பண்ணினாரென்றால், இது மெத்த ஆச்சரியம். அவருடைய நடத்தை காரியம் சமஸ்தமும் நன்றாயறிவேன். ஆனபடியினாலே நீங்கள் சொன்ன காரியத்திலே எவ்வள வாக உண்டாகியிருந்தால் நான் அதற்கு உத்திரவாதம் பண்ணுகிறேன். உங்களுடனே எப்போதும் என்பேரிலே அபாண்டம் சொல்லுகிறதுபோல் இது என் பேரிலே அபாண்டம் போட்டு உமக்கு கோபம் வர பண்ணினதே யல்லாமல் மற்றப்படி அற்பத்தளவிலே (கொஞ்சமாகிலும்) உண்டானால் நான் ஆக்கினைப்படுகிறேன் (உள்படுகிறேன்) ஆனால் ஸ்வாமி முகத்தைப் பார்த்து நியாயமா விசாரித்து விளங்கி குற்றமுள்ள விடத்திலே தண்டி யுங்களென்று கெட்டியாய் சொன்னதற்கு பெத்தனாய்க்கருக்கும் உங்கள் மாமனாருக்கும் ரொம்ப சிநேகமாவென்று கேட்டார். ஆனால் பெண் சுருபமெல்லாம் ஒன்றுதான்; தாய், தங்கச்சி சமஸ்தமான பேரும் பெண் சாதி கூட ரூபமொன்றேயல்லாமல் வேரேயில்லையே; அப்படியிருக்க எல் லாருடனே சினேகம் ஆசையெல்லாம் ஒன்றாயிருக்கப் பெண்ஜாதியை கண்டால்மாத்திரம் அந்த நினைப்பு வருவதென்ன மற்றைய பேரைக் கண் டால் அந்த நினைப்பு வராமலிருக்கிறதென்ன சகலமும் நீங்களறியாதது ஒன்றுமில்லை. இது கெட்டியாய் அபாண்டமென்று சொன்னதற்கு, என் கெட்டியாய் கூப்பிடுகள் (கூவுகிறாய்) யென்று சொல்லிப்போட்டு உள்ளே போய்விட்டார்.

அப்பால் சந்தாசாயபு (Chanda Sahib) மகன் வீட்டு ராசோபண்டிதன் வந்து மூபார்க்குமாதிசொல்லவேணுமென்று சொல்லுகிறானென்று சொல்ல அதற்கு (துரை) ஒரு உத்திரமும் சொல்லாமல் சந்தா சாயபு (Chanda Sahib) யெப்போ வருவாரென்று கேட்டார். பண்டிதர் சீர்ப்பி (Sirpi) லிருந்து சேர்ந்து அப்பாலேழுதியனுப்புகிறோமென்று சொல்லியிருக்கிறா ரென்று சொன்னதற்குத் துரையவர்கள் சொன்னது, படேசாயபு மகன் இரண்டு மூன்று நாளைக்கு முன்னே வந்தவன் சந்தா சாயபு வரும்பேச்சே யில்லை. சும்மா பொய் சொல்லுகிறீர்களென்று சொன்னார், வருகிறதானால் 3 மாதமானதே வருகிறானாவென்று சொன்னார், அதற்கு ராசோ பண்டிதன் அபித்து சாயபு (Abid Sahib) சரீர சௌஸ்தமில்லாததினாலேயும் மழை காலத்தினாலேயும் வரமாட்டாமல் நின்றார்கள். இனிமேல் நல்ல காலம் கொஞ்சநாளையிலே சித்திரக்கல் (Chitterakal) வந்து சேர்ந்து எழுதி யனுப்பப்போகிறாரென்று சொன்னதற்கு அது மெய்யென்று சொல்லிப் போட்டு உள்ளேபோனார். இராசோ பண்டிதனிருந்துக்கொண்டு இத்தனை

அநுமானமாயிருக்கும்போது எங்கள் பேச்சு நாங்கள் வருகிறதிலே அது தான் அசாசியமாயிருக்கிறதென்று சொல்லிவிட்டுப் போய் அப்பால் அப்துலயிமான் வழியாய் அம்மாளுக்குச் சொல்லி அனுப்பி மூன்று மணிக்கு வந்து மோபார்க்கு மாதி கொடுத்துப்போட்டு இராஜசாயபு (Raja Sahib) போனான். படேசாயபு (Bade Sahib) மகன் காதாலிகானும் (Kâder Ali Khân) வந்து மோமார்க்குமாதி கொடுத்துப்போட்டுப்போனான்

இற்றைநாள் அம்மாள் சேவுகருக்கு குண்டு சாலே வெளியேயிருந்து வழிக்கு வழி பாப்பாரை உள்ளே விடாமலும் வூரிலேயிருந்து பணம், காசு கொண்டு வெளியே போகாமல் பத்திரமாய் பார்க்கவும், வேருக்கார மனுஷரை பிடிக்கவேண்டுமென்று கொண்டுபோய் 100 பேர் சேவுகரையும் வைத்தார்கள். முள்ளு காவிலே பொத்துக்கொண்டதென்று ஒருத்தன் வாங்கிப்போட்டால் குணமென்று சொன்னதற்கு முள்ளைவாங்கிப்போட்டு வதிலே ஆயபுக்டாவின் கதை ஆனதென்று பட்டணத்திலுண்டான ஜனங்கள் தாபந்தப்பட்டதை காகிதத்திலே எழுதமுடியாது.

**விபவ ஹு ஐப்பசி மீ 10 உக்கு 1748 ஆ ஒக்தோபர் மீ 22 உ சோமவாரம்**

இற்றையநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப்போன விடத்திலே துரையவர்கள் கடைக்கு நெல், அரிசி வந்ததாவென்று கேட்டார் வந்ததென்று சொன்னேன். அப்பால் சாவடி டாப்பு யடித்து சொன்னதும் இங்கிலீஷ்காரன் போய் ஐந்தாறு நாள் ஆகிறது. இன்னும் கும்பினீருக்கு வரவேண்டிய விழுப்புரத்து நெல் அழைப்பிக்கிறது மல்லாமல், பின்னையும், 200 கிரிசை 300—400 மட்டுக்கும் அழைப்பிக்க வேணுமென்று சொன்னதற்கு இன்னம் தானியம் வரவில்லையென்று கோபம் பண்ணினார். வெளியே ஓலேபோய் இரண்டு நாள் ஆகிறது அப்போதே நெல் வரும் புதுச்சேரிக்கு இரண்டு மாதமாய் பிடித்து வெளியேயிருந்து ஒரு வஸ்துவும் வருந்து இல்லாமல் போனது மல்லாமல் வெளியிலேயிருந்து வந்தால் என்னமோ ஏதோ இங்கிலீஷ்காரன் தண்டுக்கும், போக்குவருத்துமா இருந்தோமே யென்று புதுச்சேரியார் வந்திருந்த விடத்திலே இங்கிலீஷ்கார மனுஷர்கள் கையிலொப்புக்கொடுத்த பயங்களுமில்லாமல் இங்கிலீஷ்காரன் வாங்கியதெல்லாம் சுத்தமாய் 3 நாள்தான் ஆனது. ஆனபடியினாலே இனிமேல் வருத்து உண்டாயிருக்குமென்று உம்முடனே சொன்ன உத்திரம் சொல்லுகிறதேயல்லாமல் தானியத்தைக் காணேமென்று விருதாவாய்க்கோபித்துக் கொண்டு, அப்பாலே முசியே கொர்னேத்தை (Cornet) அழையென்றார். முசியே கொர்னேத் வந்த உடனே தானியத்திற்கு எவ்வளவு கொடுத்திருக்கிறதென்று கேட்டார். அப்பால் கொர்னேத் கொடுத்திருக்கிற தொகையைச்

மசானனூர் என்னை முன்னேதானே கேட்டபோது சொன்னதுபடிக்கே சொன்னான்.

இதல்லாமல் 300—400 கரிசைமட்டுக்கும் நெல் வேணும் கேட்ட மட்டுக்கும் வரசாகன் கொடுவென்று உத்தாரம் கொடுத்துப்போட்டு முசியே கொர்னேத்துடனே என்னைப்பார்த்து இந்த சண்டைவந்ததே தமிழரைத் தொட்டு, துலுக்கரைத் தொட்டு ஒரு வொத்தாசையும் உதவியுமில்லை. இதல்லாமல் பட்டணத்து சுத்துக்கோட்டை காக்கிற சோல்ஜர்கள் சிப்பாய்கள் கூலிக்காரர்களுக்கு நெல் வேணுமென்று கேட்டால் இந்த சண்டையிலே தாங்கள் வந்து அல்லவோ எங்கள் வீட்டில் நெல் இருக்கிறது கூலிக்காரர்களுக்கும், சிப்பாய்களுக்கும் வேண்டுமானால் எடுத்துக்கொள்ளுங்கள் என்று சொல்லாமல் அந்த நெல்லை இங்கிலீஷ்காரன் வருவது மெய்யாய் (நினைத்து) குதிரியிலே போட்டும் ஒரு இடத்திலேயிருந்த நெல்லை ஒரு இடத்திலே ஒளித்து வைத்தும் அப்பால் புதயல்போட்டதுமல்லாமல் அந்தரங்கத்திலே குரைத்தது விற்றும் அப்பால் வாணியர்களுடைய செக்காடுகிற மாட்டை சோல்ஜர்களுக்கு சோட்டுக்காக அடிக்கிறதற்கு பிடித்து வந்தால் அவர்களெல்லாம் கூக்குறல்போட்டுக்கொண்டு ஓடிவந்து சொன்னார்கள். இந்த பாவமுண்டா? இப்படி பின்னையும் தமிழர் பொல்லாதவர்களென்கிறதற்கு அடியென்ன உண்டோ அந்த அடியெல்லாம் சொல்லித்தமிழர்கள் இங்கிலீஷ்காரன் புதுச்சேரியை வாங்கிக்கொள்ளுவான் அவரவர்கள் கும்பினியிலே கொடுக்கல் வாங்கலும் வெள்ளைக்காரர் கையில் கொடுக்கல் வாங்கலும் யெடுத்துக்கொள்ளலாமென்று நினைத்திருந்தார்களென்றும் பரிச்சேதமாய் தமிழர் பொல்லாத மனதுடையவர்களென்றும் சொல்ல வேண்டிய ஜாடையெல்லாம் சொன்னார். அதிலே முசியே கொர்னேத் இரண்டும் கேட்ட பாவி என்னைப்பார்த்து ஸ்ரீ குவர்னதோர் அவர்கள் சொன்னதெல்லாம் மெய்தான். தமிழர் மெத்த பொல்லாதுடையவர்கள் இந்த சமயத்திலே யென்ன நல்ல மனது காண்பித்தார்கள் என்று கேட்டான். (அதற்கு நான்) ஆனால் நான் சொல்லுகிறவார்த்தைக்குக் கோபமில்லாவிட்டால் சொல்லுகிறேனென்று சொன்னேன் (கொர்னேத்) சும்மா சொல்லென்று சொன்னார். அப்போ துரையவர்கள் தமிழர் ஒத்தாசையுமில்லை. துலுக்கர் ஒத்தாசையுமிந்த சண்டைக்கில்லை என்று சொன்னது மெய்தான். தமிழர், துலுக்கர் மாத்திரம் வெள்ளைக்காரர் ஒத்தாசைக்கூட இல்லை. அதெதினாலே என்றால் அவருக்கு லோகத்தை யெல்லாம் ரக்ஷிக்கப்பட்ட ஸ்வாமியினுடைய ஒத்தாசை அவருக்கும் அவருடைய உதவி ஒத்தாசை மற்ற சமஸ்த ஜனங்களுக்குமாக அண்டியிருக்கும்போது அவருக்கு ஒருத்த

ருடைய ஒத்தாசை யென்ன கவையிருக்கிறது. சமஸ்தமான ஜனங்கள் இந்த பட்டணத்து ஜனங்கள் இனிமேல் ஆற்காடுமட்டுக்கும் இருக்கப்பட்ட ஜனங்கள் கூட இவருடைய ஒத்தாசைக்கும் உதவிக்கும் காற்றுக்கொண்டிருக்க ஸ்வாமி முசியே துப்ளேக்ஸை பிறப்பித்து இருக்கிறபடியினாலே அவர் ஒருத்தர் ஒத்தாசை கோருகிறாரென்று நீர் சொல்லுகிறது நியாயமல்ல. இதுவுமல்லாமல் எந்த வெள்ளைக்காரனும் என்ன இந்த சமயத்துக்கு உதவி செய்தான். வெள்ளைக்காரத் தெருவிலே குறைந்தது 250–300 கரிசை நெல் இருக்குமோ தமிழர்கொண்டுபோய் ஒளித்து வைத்ததும் கூட ஆறேறு மரக்கால் நெல் அளவிலே இந்த சமயத்துக்குக் கொடுத்தார்கள் ஒரு நியாயத்திற்கு தமிழர் உதவினார்போலே மற்ற யெந்த ஜாதியும் சொல்லப்போகாது. அதெப்படியென்றால் : இரண்டு மாத முற்றிகைக்கு குறைந்தது பட்டணத்துக்குள்ள ஜனங்கள் போய்விட்டபடியினாலே தினம் ஒன்றுக்கு 5 கரிசை விழ்க்காடு 60 நாளைக்கும் 300 கரிசை நெல் இந்தப்பட்டணத்திலே தமிழர்தானே கொடுத்து முத்துகைக்கு நிர்வாகம் பண்ணினார்கள், இதல்லாமல் கும்பினீருக்கும் துரையவர்கள் கேட்டதற்கும் 24 கரிசைமட்டுக்கும் கொடுத்தார்கள். அப்பால் தாங்கள் குடியிருக்கிற வீட்டிலே அவன் (பறயன்) வந்து குடியிருக்க வந்தால் சகித்துக்கொண்டு அவனுக்கு (வீடு) விட்டுப்போட்டுத்தான் வெளியே வீடுவீடாய் ஒதுங்கி திரிகிறதில்லாமல் தென்ன மரங்கள் மற்றுமுண்டான மரங்களை வெட்டினதெல்லாம் தமிழன் வீட்டுது (உடையது) சட்டைக்காரர்கள், சோல்ஜர்கள் கூட ஒரு மரம் வெட்டுபட்டுதா பாரும். இப்போ வீடுகள்கூட எடுத்துக் கொள்ளுகிறதற்கும் சகித்துக்கொண்டு வீடும் கொடுத்து விடுகிறதாயிருக்கிறார்கள். அப்படி வெள்ளைக்காரர், துலுக்கர் சகிப்பார்களா தமிழர் எதுக்கும் சாய்ந்துக் கொடுக்கிறதுபோலேயும் அவனுடைய உதவியைப்போலே மற்றபேர் உதவி இல்லை என்று சகஜமாய் சொன்னதற்கு துரையவர்கள் நகைத்துக்கொண்டிருந்தார். முசியே கொர்னே (Cornet) யை துரையவர்கள் வெள்ளைக்காரர் கேட்டால் அப்படி நேரிடுகிறதில்லை என்றார். (அதற்கு நான்) கேட்ட பிற்பாடு கொடுக்கிறதற்கு துரையவர்கள் சொல்லவில்லையே கேளாததற்கு முன்னே கொடுக்கவேணுமென்றதற்கு அல்லோ சொன்னேனென்று சொல்லிக்கேட்ட பிறகு கொடுக்கிறதினால் தமிழர்தான் கொடுத்தார்கள். அவர்கள்பேரிலே யென்ன குற்றமிருக்கிறதென்று சொன்னதும் துரையவர்களுக்கு ஒரு விதத்திலே உறைத்தது. அதன்பேரிலே வர்த்தகர்கள் யெப்போ வருவார்கள் கணக்கு தீர்த்துப் போடுகிறதற்கென்று கேட்டார் இன்னும் 10 நாள் செல்லுமென்றுச் சொன்னேன். வந்ததும் கணக்கு தீர்த்துப்போடு யென்று முசியே கொர்னேத்துக்கு (Cornet) உத்தாரம் கொடுத்தார், அப்பால் முசியே கொர்னேத் இருந்துக்கொண்டு இந்த காலத்

திற்கு சிறிது நீலப்புடவைக் குண்டன் முதலானது கொண்டுவந்து வைத் தானென்று சொன்னதற்கு நானிருந்துக்கொண்டு முருக்கு குண்டன் 80 கெஜம் மட்டுக்கும் போட்டிருக்கிறது. புதுச்சேரி குண்டன் 120 கோடி மட்டுக்கும் கும்பினீர் வர்த்தகருடையது, காங்குப்புடவை மாத்திரம் என் னுடையது யென்று சொல்லி இன்னம் உடையார்பாளையத்துக்காரிகன் நெடுமுழம் (அகலம்) முதலானதுகளெல்லாம் கட்டுகிறார்கள். இதுகளெல் லாம் பூராவும் சேர்ந்த பிறகு வர்த்தகர்'பருக்கு வரவு வைத்துக்கொண்டு ரசீது கொடுமென்று சொல்லிவிட்டு இப்புராம் நிற்கும்போது 20 எருது வண்டியிழுக்க முஸ்தீது பண்ணிவையென்று சொன்னார் நல்லதென்று சொன்னதற்கு நல்லதென்று சொல்லுகிறதேயல்லாமல் சீக்கிறமத்துக்கு வந்து சேருகிறது ஒருமாதம் செல்லும் வாத்தக்கதாக வென்று சொல்லி ஊரிலே துலுக்கர்வீட்டிலே வண்டியிழுக்கிறதை பலவந்தமாய் பிடித்துவரச் சொல்லென்றார். மீராகுலோமுசேன் (Mir Ghulan Hussan) வீட்டிலே யிருந்த எருதுகளை ஓட்டிவந்தோம் பின்னை ஒருத்தர் வீட்டிலேயு மில்லையென்று சொன்னதற்குத் தமிழர் ஆகாத நினைப்பு என்கிறதே மெய் யல்லே காணுதென்று முசியே கொர்னேத் சொன்னார். அதெப்படியென்றால்; இங்கிலீஷ்காரன் வருகிறது மெய்யென்றெண்ணிக்கொண்டு (பட்டணத்தை) பிடித்துப்போடுகிறதே மெய்யா என்றெண்ணிக்கொண்டாலே மாடுகளை வெளியே ஓட்டி விட்டார்கள், ஆனால் தமிழர் பயந்த ஜாதியென்று சொன் னான். அய்யா நீர் சொல்லுகிறபடியினாலே நானுத்தாரம் சொல்லுகிறேன். தமிழர் இன்னம் தைரியம் ரொம்ப, புதுச்சேரியை வாங்கமாட்டானென்று வெகுபேர் அவனவன் தட்டுமுட்டை அவனவன் வீட்டிலே வைத்துக் கொண்டிருந்தார்கள். வெளியே போனவர்களே வெளியே கொண்டுபோய் பாகொடுத்ததுமல்லாமல் அடி உதைப்பட்டு அலக்கழிந்தார்கள். வெள்ளைக் காரர்கள் சுத்துக்கோட்டை இங்கிலீஷ்காரனதாயெண்ணிக்கொண்டு சமஸ்த மான தட்டுமுட்டும் உன் கோட்டையை சேர்த்துப் போட்டதுமல்லாமல் ரூபாய் நூறு விராகனுக்கு 360 ரூபா மட்டுக்குமாகிலும் தருகிறோம் வராகனை பார்த்து மாற்றிக்கொடுக்கச் சொல்ல மாற்றினதும் அப்பால் உன் கோட்டைக்கூடபோய்கிறதா வெண்ணிக்கொண்டு உண்டிகைகள் கூட விசாரித்தார்கள். பொஞ்சங்களிக்கர் (பொன்வாணிகர்) உண்டாயென்றுகூட விசாரித்தார்கள். இதல்லாமல் குண்டுயென்றால் வெள்ளைக்காரர் பயப்படு கிறது. மாத்திரமல்ல அப்பால் ஊரிலே உண்டான தென்னமரங்களெல்லாம் வெட்டி வீடுகளின் பேரிலே சாத்தி தழைப்போட்டு மண்போட்டு பஞ்சுப் போட்டு எத்தனை பலம் செய்யவேணுமோ அத்தனை பலம் செய்ததுமல்லா மல் குண்டுக்கு எந்த வெள்ளைக்காரன் தைரியமாய் திரிஞ்சவன் ஒரு துரை தவிர யென்று சொல்லி தமிழரிந்த குண்டிலே திரியாதவனொருத்தனில்லை.

தட்டோடு வீட்டில்தானே ஸ்வாமியினுடைய சித்தத்தின்படியே ஆகு தென்று வெகுபேரிருந்தார்கள். கொஞ்சம் பேர் மீரா வெளியே போயிருந் தவர்களென்று வெள்ளைக்காரர் பயந்திருந்த ஜாடையும் தமிழர் தைரிய மாயிருந்தார்களென்கிறதற்கும் நியாய வயணமாய் சொன்ன உடனே துரை யிருந்து கோம்மணன் (Kammanap) முசியே துலோராமுடைய (Dulaurent) ஆஸ்திகூட எடுப்பித்துக்கொண்டு வெளியே போனான். எந்த வூரிலேயிருக்கி றானென்று கேட்டார். நானறியேனென்றுச்சொன்னதற்கு நீயேன் ஒளிக்கிறாய் சும்மாச்சொல்லென்று சொன்னார். அதிலே முசியே கொர்னேத் (Cornet) யிருந்துக்கொண்டு நீயறியேனென்று சொன்னாலெப்படி நன்றாயிருக்கு மென்று கேட்டான் (நான்) இந்த வூரிலே யிருந்து புறப்பட்ட ஜனங்களை இங்கிலீஷ்காரர் மனுஷர்கள் எங்கெங்கே தெரிந்தினார்கள். எங்கேயிருக்க வேணுமென்று போனவர்கள், எங்கெங்கே பரிகொடுந்து எங்கெங்கே போய் விட்டார்கள் அவர்களிருக்கிறயிடம் எப்படித்தெரியும் அவன் ஊர் விட்டு போனது மாத்திரம் எல்லோருமறிவார்கள் என்று சொன்னதற்கு துரை யவர்களுக்கு நான் அறியாதகாரியம் லோகத்துக்குள்ளே யில்லையென்று நினைத்துக்கொண்டிருக்கிற சாடையினாலே (துரை) அவனிருக்கிறயிடம் மாத்திரமல்ல சமஸ்தமான பேரிருக்கிற இடங்களும் பின்னையுமிந்தப் பட்ட ணத்திற்கும் வெளியே சேதியும் நீ யறியாததுண்டாவென்று முசியே கொர்னேத் (Cornet) தைப்பார்த்துச்சொல்லி முசியே துலாராம் (Dulorine பிரான்சுக்காரர் கையிலிருந்து இவன்தானே இங்கிலீஷ்காரர் வந்து கோட் டையை வாங்கிக்கொள்ளுவார்களென்று தன் ஆஸ்தியை தன் கணக்கப் பிள்ளைகையிலே கொடுத்துப்போட்டு எப்படி அனுப்புவான் அதுதான் திறமைபார்க்கிறேமென்று சொல்லி இனிமேல் என்ன நடப்பிக்கிறானோ அறிவீர்களென்று எங்களிரண்டுபேரையும் பார்த்துச் சொல்லிப்போட்டு உள்ளேபோனார், நானும் முசியே கொர்னேத்தும் (Cornet) இந்த கொம்மண முதலிபேச்சுதானே நானெப்படி அறிவேன். இந்த கலகத்திலே வெளியே புறப்பட்டவர்கள் எங்கெங்கேயிருக்கிறார்களோ என்று அதுகளுக்கு நியாயம் சொல்லிக்கொண்டு வெளியே வந்து நான் பாக்கு கிடங்கிலே வந்தேன் அவன் வீட்டுக்குப்போனான்.

அப்பால் காரைக்கால் தபால் காகிதம் கொண்டுபோன சேவுகன் உள்ளே வந்ததும் பிடித்துக்கொண்டு சிப்பாய்கள் வாசற்படியிலே வெள்ளைக் காரன் துரை அண்டைக்கு அனுப்ப துரை அப்படி கொண்டுபோகாமல் இப்படி ஏன் கொண்டுவந்தாயென்று கோபித்துக்கொண்டு மறுபடி சீக்கிற மத்துக்கு அனுப்பிவிடச்சொல்லிக் கொடுத்துவிட அப்போ அதை நான் வாங்கிக்கொண்டு வெளியே வரும்போது தானப்ப முதலியார் உள்ளே

போனர். துரை அழைத்தனுப்பினபோதும் இவனை சின்ன துரை ஏதாவது வேலை சொல்லி போனதும் தெரியவில்லை; மறுபடி அரை நாழிகைக்கெல்லாம் வெளியே வந்துவிட்டான். மற்றப்படி வேறே விசேஷித்த சமாச்சாரம் கேழ்க்கப்படவில்லை.

**விபவ ஞு ஐப்பசி மீ 11 உ க்கு 1748 ஒக்தோபர் மீ 23 உ புதவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே அசளுத்து நாசர் சங்கு இமாம் சாயபு அவர்கள் (**Nazîr Jany Imâm Sahid**) பத்தேசிங்கு (**Fatteh Seng**) ராகோஜி பூசிலான (**Raghoji Bhônsla**) சந்தா சாயபு (**Chandâ Sâ' ib** இவர்களுக்கு இங்கிலீஷ்காரன் புதுச்சேரியின்பேரிலே 40 கப்பல்களுடனேயும், பதினாயிரம் ஷந்தோர்மத்துடனேயும் வந்து இரண்டு மூன்று மாத காலம் புதுச்சேரி சுற்றி முற்றிக்கைப் போட்டுக்கொண்டு நெடும் பீரங்கி 36 ருத்தல், 24 ருத்தல் குண்டுகளிலேயும் தீக் குடுக்கைகளினாலேயும் வருஷம் வருஷச்சார்போல் சண்டைபண்ணி அப்பால் நாங்கள் போடுகிற நெடும் பீரங்கி குண்டுகளினாலே, தீக் குடுக்கைகளினாலேயும் போடுகிறதினாலேயும் அப்பால் சோல்ஜர்மார்கள், சிப்பாய்கள் மோர்சாவின்பேரிலே போய் விழுந்து சண்டைபண்ணி அவர்களை அப்போதைக்கப்போது மோர்சாவை எடுக்க பண்ணுகிறதினாலேயும், வெள்ளைக்காரரிலே 2000 பேர் சாவு காயமல்லாமல் கற்னடகத்தாரும், துலுக்கச் சிப்பாய்களும் மிதமில்லாத சாவினாலே இனிமேல் நிருவாகமில்லையென்று அறிந்து ஒருநாள் சூரிய உதயத்திற்கு துவக்கி சாயங்காலம் சூரிய அஸ்தமான்ம் வரைக்கும் நாலு ஜாமத்துக்கு ஒரு விகடி (வினடி) யாகிலும் சும்மாயிராமல் 40 கப்பல்களும் மேலண்டைபாரிசம் மோர்சாவிலே யிருந்தும் விபரீதபாய் நெடும் பீரங்கிக் குண்டுகளும் தீக்குடுக்கைகளும் பெருங்காத்து மழை அடித்தாப்போல் சொரிந்து ஆனபிறகு இதற்குமேல் செய்யவேண்டிய வேலை வேறேயில்லை. இனிமேல் வெகுபேர் சாவுக்கொடுத்து நிர்வாகத்தைக் காணோம். இனிமேல் எப்படி சம்பவிக்குமோ தெரியாது என்று போட்ட சாமான்கள் போட்டவாக்கிலே இராத்திரிக்கே ஓடிப்போய்விட்டான். மேஸ்தாபுஸ்காவேன் (**Boscawen**) என்கிற இங்கிலீஷ் சர்தார்ரெண்டும் எங்கள் ஸ்ரேயசுக்கு எப்போதும் சுவாமியைப்போலேயிருந்து கோருகிறவன் ஆனபடியினாலே உங்களுக்கு எழுதினோம். இந்த சந்தோஷ கபுரு என்று நாசர் சங்கு (**Nasir Jang**) பத்தேசிங்கு (**Fatch Seng**) கோசேபூசலா (**Kaghôji Bhônsla**) சந்தா சாயபு Chandâh ப,க்கு எழுதினதற்கு இது அல்லாமல் இமாம் சாயபுக்கு (**Imâm Sahib**) எழுதின காகிதத்தின் மேலே யெழுதியிருக்கிற வயணம், எழுதினதே அல்லாமல் முன் ஒரு விடுதிலே முசியே தும்மாவுக்கு (**Dumes**) சிறிது கலக்கி சிர்ப்பமோஷாத்திரா ரத்திங்களிழைச்

சது ஈட்டி, கத்தி, கட்டாரி கொண்டயம், அம்பு வில்லு, ஆன்கை யிது முதலானது அபிஷேகப்பாக்கம் முதலாகிய கிராமங்கள் சப்தல்லிகான் (Sabdad Ali Khan) கைக்கு கொடுத்தான் அந்தப்படிக்கு நாசற்சங்கு வாங்கி கையில் வாங்கி யனுப்பச்சொல்லி 3 மாசமானது. எழுதி அனுப்பி அந்தபடிக்கு இப்போ அனுப்புகிறதற்கு சமயமென்று இந்த காகிதத்திலே கண்டு யெழுதி ஆர்க்காட்டுக்கனுப்பினோம், ஆர்க்காட்டிலிருந்து காகிதம் கையில்கொடுத்து நாசர்சங்கு (Nasir Jang) லச்சுக்கருக்கும் சந்தா சாயபு (Chanda Sahib) பத்தேசிங்கு (Fatteh Seng) முதலானவர்கள் இருக்கிற யிடத்திற்கும் இரண்டு பிரிவாயனுப்பச்சொல்லி யெழுதியனுப்பிவைத்தோம் இந்த காகிதங்கள் கொண்டுபோனது வரதப்பன், சிதம்பரம்.

இதுவுமல்லாமல் சந்தா சாயபு பெண்சாதி (Chanda Sahib) அல்லி தோஸ்துகான் (Ali Dast Khan) பெண்சாதிக்கு கூட கலகம் தீர்ந்து விட்டது வூர்வந்து சேரச் சொல்லியும் எழுதி அனுப்பி வைத்தோம்

மற்றபடிக்கு முசியே ஷான்ழேக் (Changeac) மாயேயிலே இருந்து ஓடிவந்தும் திண்டிவனம் வந்தும் சேதி அவ்விடத்திலிருந்து காகிதமெழுதி வைத்துக்கொண்டதற்கு அவனை வரச்சொல்லி காகிதமும் கூட யெழுதி கொடுத்து ஒரு டோலியும் அவன் சிலவுக்கு 50 ரூபாயும் கொடுத்து அனுப்பச்சொன்னபடிக்கு அனுப்பிவைத்தேன்.

மற்றபடி அப்துலாயிமான் சமேதார் சிப்பாய்கள் 1·0 பேரும் இருபது முப்பது குதிரை சுவர்களுடனே வில்லியனூருக்கு பத்து மணிக்குப் போய் வில்லியனல்லூரெல்லாம் கொளுத்தி சிங்கிரிக்கோவில், திருக்காஞ்சி முதலான இடங்களெல்லாம் கொளுத்தி, சிங்கிரிக்கோவில் பாப்பான் ஒருத்தன், திருக்காஞ்சி பாப்பான் ஒருத்தன் பேர் விளங்கள் ரெட்டி ஒருத்தன் பிடித்துக்கொண்டுவந்து அப்துலயிமான் சமேதார் முதலான பேரெல்லாரும் 7 மணி இராத்திரிக்கு வந்து சேர்ந்து துரைக்கு கபுரு சொல்லி வீட்டுக்குப் போனான். பிடித்துக்கொண்டுவந்தவர்களை கோட்டை கிடங்கிலே கொண்டுபோய் காவல் வைத்தார்கள்; இதற்கு முன் அல்லாரும் வலசை போனபடியினாலே ஜனங்களில்லாததினாலே இந்த மூன்றுபேர்கள் மட்டும் அகப்பட்டார்கள்; இல்லாவிட்டால் இனிமேல் வெகு பேர்கள் அகப்படுவார்கள். திண்டிவனம் சீர்மை மனுஷர்களெல்லாரும் கூட இந்த பிராந்தியங்களிலே ஒருத்தர் இருக்கத்தக்கதில்லை. மற்றபடி கலகத்திற்கு வூரை விட்டுப் போனவர்கள் வீடு எழுதினார்களே அந்த கணக்கு காகிதம் இன்றைய தினம் காலையில் முசியே திலார்ஷ் (Delarche) துரை யவர்களுக்கு கொண்டுவந்துக் கொடுத்தார். குடிசைகள் தள்ளப்பட்டது

போக வீடு 20 வராகனுக்கு சொந்தமான வீடு கூட வீடு நூற்றிஅருபத்தாறு கிறயம் 10041 விராகனுச்சு அந்தபடிக்கு துரை கணக்குப்பார்த்து வைத்துக்கொண்டார். இனிமேல் என்ன நடக்குமோ தெரியாது அறிய வேண்டியது.

ஆலம்புரைவரைக்கும் சதுரங்கப்பட்டணத்துக்கும் இருக்கிற பலகைகளை கவுருகள் எடுத்துவர வெள்ளக்காரர் சுருக்கென போவார்கள்.

சீர்மைக்கனுப்புகிற காகிதங்களெழுதுகிற சுருக்கு மெற்றவானபடியினாலே துரையவர்களுக்கு அலுவல் ரொம்ப. மற்றப்படி விசேஷித்த சமாசாரமில்லை. பிராமணாள் வரப்போகாதென்கிற பிராதே பெரிய பிராதேயல்லாமல் மற்றபடிக்கு பின்னை ஒன்றையும் காணோம். வெளியேயிருந்து உள்ளே வருகிறவர்களுக்கும் உள்ளேயிருந்து வெளியே போகிறவர்களுக்கும் இருக்கிற சங்கடம் காகிதத்திலே எழுதிமுடியாது. சகல ஜனங்களும் ரொம்ப தாபந்தபடுகிறார்கள்.

அன்வர்திகான் (Arnavud-din Khân) மகன் மதுரை கில்லேதார் அப்துலாரகிமான் கான் (Abdul rahman Khan) சாயபு மூணு நாலுமாதத்திற்குமுன் ஒரு ஓர்லேசும் கொடுத்து 15 ரூபாயுமனுப்பி முஸ்தீப்பு பண்ணி (பழுதுபார்த்து) அனுப்பச்சொல்லி என்பேருக்கு காகிதமெழுதி இருந்தான் அந்த 15 ரூபாயும் ஓர்லேசும் முத்து என்கிறவன் கையில் கொடுத்து ஓர்லேசு முஸ்தீப்புபண்ணி அனுப்புகிறதுக்குள்ளாக கலகம் வந்தபடியினாலே இந்த மட்டுக்கும் அட்டியாயிருந்து இன்றையனாள் ஓர்லேசுங்கொடுத்து காகிதமும் வெழுதிக்கொடுத்து இந்தமட்டுக்கும் படிக்கொடுத்ததுமல்லாமல் இப்பேர்வழிக்குக்கூட படிக்கொடுத்து துளசிராம என்கிற சேவுகனை பயணம் பண்ணி அனுப்பிவைத்தேன்.

இதல்லாமல் லாலாப்பேட்டைக்கு அருணாசலசெட்டி முதலான பேர்களை வரும்படியாய் காகிதங்களெழுதியனுப்பினேன்.

இன்றையதினம் இராத்திரி 8 மணிக்கு துரையவர்கள் வுத்தாரப்படி தில்லை மேஸ்திரி தாண்டவமேஸ்திரிகள் வந்து ஒட்டர்களுக்கு கவிலெழுதி கொடுக்கச்சொல்லி கேழ்க்க முன் கொடுக்கவேண்டிய கூலிகூட இனிமேல் செய்கிற கூலிக்கு கூலி அன்றாடம் கையில் கொடுத்து விடுகிறோமென்று ஒட்டஜாதிபயன், ராமன் பேருக்கு கவிலெழுதி கொல்லத்து நாச்சியப்பன் கையில் கொடுத்து ஒரு சேவுகனை கூடகூட்டி அனுப்பினோம்.

**விபவ ஞு ஐப்பசி மீ 12 உக்கு 1748 ஆ ஒக்தோபர் மீ 24 உ குருவாரம்.**

இற்றைநாள் சேத்துப்பட்டு மீராசத்து சாயபு (Mirasad Sahib) அவர்களுக்கு காகிதம் இங்கிலீஷ்காரன் ஜெயித்ததற்கு அவரெழுதின மூபார்க்கு மாதிகாகிதத்திற்கு பதில் மூபார்க்குப் மாதி காகிதமெழுதின யின்றைய தினம் அனுப்பிவைத்தோம். இதல்லாமல் மகம்மதாக்கல்லுக்கு (Muhammad Cavukka) துரையவர்கள் காகிதமெழுதச் சொன்னவயனம் என்னவென்றால்: புரட்டாசி மீ 22 தேதி நீர் யெழுதியக்கடுதாசியிலே யெழுதியிருந்த வயணம் எனக்கு இன்னதென்று அறியக்கூடவில்லை, ஆனாலொன்று மாத்திரம் எனக்கு அறியவந்ததென்னவென்றால், அப்துல்சலில்கானும் (Abdul Jalil Khan) 400—500 குதிரைகளும் 2000 மனுஷருடனே இங்கிலீஷ்காரருக்கு மைத்தத்து வந்து எங்கள் பேரிலே சண்டைக்கு வந்திருந்த சாடைமாத்திரம் அறிந்தோம். ஆனால் இது முன்னுக்கு எப்படி நடக்கயிருக்குதோ அது அறியவேணுமென்று எழுதச் சொன்னார். அந்தபடிக்கு காகிதமெழுதி அனுப்பிவைத்தோம். மற்றபடி துரையவர்கள் சீர்மைக்கு காகிதங்களெழுதுகிறபடியினாலே அந்த காகித மெழுதுகிறதின்பேரிலே கவனமாய் அந்த அலுவலிலே யிருந்தபடியினாலே ஒருத்தருடனேயும் விசேஷித்து பேசுகிறதற்கு நேரமில்லை. இதுமுன் 8-ம் நாள் இங்கிலீஷ்காரன் போய்விட்டதினம் இவ்விடத்திலே பண்டிகைக் கொண்டாடினார்களே அன்றையதினம் விருந்து மைத்ததுகள் சொர்ப்பமாய் நடக்கவில்லையென்று இன்றையதினம் பட்டணத்திலுண்டான பிராஞ்சுக்காரர்கள் கொன்சேலியோ ஒப்பிசியேமார்கள் மற்றுமுள்ள பெரிய மனுஷர்கள் பிராஞ்சுக்காரபெண்டுகள் சமஸ்தமானபேருக்கும் விருந்துக்குச்சொல்லி இங்கிலீஷ்காரன் மேஸ்தர்புஸ்கவேனை (Boscawen) முசியே துப்ளேக்சு அவர்கள் ஜெயித்ததும் அவர்களுடைய ப்ரதாபமும் பிராஞ்சுவார்த்தையிலே பட்டா இப்படி இன்றைய ராத்திரிக்கு கூத்தும் ஆடி அந்த கூத்திலே அந்த பாவாடையும் அரங்கேத்தபடி பண்ணி பாடிக்கொண்டு கூத்தாடினார்கள். சாப்பிடுகிறதற்கு முன்னேயும், பின்னேயும், சாப்பிட்ட பிறகும் சாயங்காலமான ஏழு மணி மட்டுக்கும் பெரிய மேஜை போட்டு ஸ்டேக்சு (stuk-s) என்கிற சூதுவிளையாட்டு வெள்ளைக்காரர் பெரிய மனுஷரும் பெண்டுகளுமாய் 4000—6000 ரூபா மட்டுக்கும் வைத்துக்கொண்டு சந்தோஷத்தினாலே சூது ஆடினார்கள். அப்பால் சாப்பிடும்போது ஐந்து தரம் இராஜாவினுடைய ஆரோக்கியத்தைக் கோரி ஐந்து தரம் 21, 21 பீரங்கிப் போட்டார்கள். இதல்லாமல் சண்டைக்கு காவலாய் வந்திருந்த இங்கிலீஷ்கார பெரிய மனுஷர்களாய் கூட யிருந்து சாப்பிடுகிறதற்கு யோக்கியமுண்டா? இங்கிலீஷ்காரரையெல்லாம் ஒரு மேஜையிலே கூட வைத்துக் கொண்டு சாப்பிட்டார்கள். இராத்திரிக்கு விருந்தும் அப்படித்தான் பகல்

சாப்பிட்டபடிக்குத்தான் இராத்திரியும் சாப்பிட்டார்கள். ஆனால் இராத் திரிகாலமானபடியினாலேயும் பகல் ஐந்து தரம் பீரங்கி சுட்டபடியினாலே இராத்திரிக்கு பீரங்கி மாத்திரம் சுடவில்லை. ஆனால் இராத்திரிக்கு சாப் பிட்ட உடனே 10 மணிக்கு கூத்து துவக்கி 4 மணி வரைக்கும் ஆடி னார்கள். அதன் பிற்பாடு அவரவர்கள் வீட்டிற்கு போய்விட்டார்கள்.

இற்றைநாள் மத்தியானம் 12 மணிக்கு ஷேக்கு அப்துலயிமான் சமேதாரும், அல்லிகானும் துரையவர்களண்டைக்கு வந்து நாங்கள் வந்து நாலரை வருஷ காலமானது எங்கள் பெண்டுகள், பிள்ளைகள், பந்துக்கள் சமஸ்தமான பேரும் அந்த இராச்சியத்திலேயிருக்கிறபடியினாலே நாங்கள் வந்ததற்கும் இங்கிலீஷ்காரருக்கும் உங்களுக்கும் சண்டை வந்தபடியினாலே உங்கள் சொத்து சாப்பிட்டதற்கு எங்களாலே வஞ்சனையில்லாமல் பிர யாசைபட்டோம். சத்துருவும் அபஜெயப்பட்டு ஓடிப்போய்விட்டான், இனிமேல் எங்கள் இராச்சியத்திற்குப் போவதற்கு உத்தாரம் கொடுத்தால் அப்படியே போனாலும் மாசம் ஆறு மாசம் அங்கே ஸ்வஸ்தமாயிருந்து நீங்களெப்போ அழைப்பிக்கிறீர்களோ அப்போ வருகிறோமென்று சொல்லி பின்னையும் சொல்லவேண்டியதெல்லாம் சொல்லி தங்களுக்கு இவ்விடத் திலே இருக்கக்கூடாதென்று சொல்லுகிறதற்கு என்ன சாடைவுண்டோ அந்தபடிக்கெல்லாம் சொல்லி கேட்டதற்கு அதற்கு துரையவர்கள் சொன் னது நானும் சீர்மையிலே யிருந்துவந்து 25 வருஷமாகிறது நானும் சீர்மைக்குப் போகவேண்டியிருக்கிறது. அப்போகூடத்தானே போவோ மென்கிறதாய் எப்படிப் பரிகரித்து சொல்லவேணுமோ அந்த சாடையாய் சொன்னார்; அதன்பிறகு (அவர்கள்) சென்னபட்டணத்திலே இருக் கிற மசினைதெய்ய முசியே பெடுத்தல்மி (Barthélemy) இடித்துப் போடதக்கதாக பிரயத்தினம் பண்ணுகிறதற்கு எங்கள் மனுஷர் அவ் விடத்திலே யிருக்கிறவர்களை உங்கள் கையிலே உத்தாரமழைப்பித்து தருகிறோமென்று 8 நாளைக்கு தவணையிட்டுக்கொண்டார்கள். அது கூடாத தானபடியினாலே முசியே பெடுத்தல்மிக்கு (Barthélemy) நீங்கள்கடுதாசி தரவேணுமென்று கேட்டார்களென்றுச் சொல்லிவிட்டார்கள். அதன்பிறகு மதாமுடனே சொல்ல உத்தாரம் வாங்குவோமென்று இருக்கிறார்களென்று சொன்னார்கள். அவணன்டையிலே இருக்கிற பறங்கிப்பேச்சு துபாசிதனம் பண்ணுகிற மோகன் பட்டான் (Môhan Pattan) நொண்டிவந்து இதெல் லாம் வயணமாய் சொன்னான்.

இதல்லாமல் சாயங்காலம் துரையவர்களென்னை அழைப்பித்து கும்பி னீருக்கு நெல் விஸ்தாரமாய் தானே தேவையிருக்கிறது விஸ்தாரமாய்

வாஙகுகிறதறகு எந்த எத்தனமுண்டோ அந்த எத்தனம்பண்ணி வாங்கச் சொல்லியும் இதல்லாமல் முன்னே விழுப்புரத்திலே வாங்கியிருக்கிற நெல்லை மாடுகளை அனுப்பி சீக்கிரமாய் அழைப்பிக்கச்சொல்லியும் நபாபு அன்வர்தி தான் (Nawab Annvar-ud-din Khan) எங்கே போயிருக்கிறார் என் கிறதாகவும் கேட்டார், நான் அன்வர்த்திகான் திருச்சிறாப்பள்ளிக்குப்போய் சேர்ந்த வயணமும் சொல்லி நெல் விஸ்தாரமாய் அழைப்பிக்கிற யெத்தனம் பண்ணுகிறேன் விழுப்புரத்து நெல்லுக்கு மாடுகளை அனுப்பிவைத்து அழைப்பிக்கிறெனென்று சொன்னேன்.

அப்துல் சலில் (Abdul Jilil) எங்கே போயிருக்கிறான் என்று கேட்டார் அவன் திருவண்ணாமலைக்குப் போய் செர்ந்த சேதி அப்புறம் போனசேதி தெரியாது என்று சொன்னேன். முத்துமல்லா ரெட்டி எங்கேபோயிருக்கிறா னென்று கேட்டார், அவன் தண்டு சேர்ந்தானென்று சொன்னேன்.

முத்துமல்லா ரெட்டி பேரே வெளிக்குவாரா தேவையில்லை. அவனு டைய பிரசங்கமே எடுக்க தேவையில்லை. அவன் வருகிறதை வேகுவைத்துக் கொண்டேயிருந்து அவன் வந்தவுடனே என்னுடனே (கூட) சொல்ல தேவையில்லை உன்னுடைய மனதின்படிக்கு சிப்பாய்களை அனுப்பிவைத்து அவனைக் கைப்பிடியாய் பிடித்துக்கொண்டுவருகிறது. கைப்பிடியாய் அகப் படாவிட்டால் சுட்டுதள்ளிப்போடுகிறது. அதற்கு இனிமேல் உனக்கு உத் திரவுகவையில்லை. இப்போதானே விருதாவாய் கொடுத்துவிட்டோம். அவன் பெரேயெடுத்ததுண்டானல் அவன் வராமல் போவான். அதன்பிறகு உன் பேரிலே நேரம் சொல்வேன் அதற்கு எப்படி வெளிக்கு வராமலே வேகு வைத்துக் கொண்டிருந்து அவனைபிடித்துக்கொண்டு வரவும் (என்று துரை சொன்னார்.)

அப்பால் முசியே பொசே (Bausseh) துரையவர்கள் கிட்டனின்ற வன் என்னைப்பார்த்து முசியே லயே (Lahoye) காலாப்பேட்டிலிருந்து காகிதமெழுதி அனுப்பினதில் காலாப்பட்டு பாளையக்காரன் நேற்று இங்கி லீஷ்காரர்கள் வனுந்தரத்திலே செஞ்சிகிலே தார மனுஷர்வந்து பிடித்துக் கொண்டுபோய் விலங்குதரித்துக்கொண்டு இருக்கிறானும் அது நீ அறிவாயா அது மெய்தானு செஞ்சி கில்லேதாரனுக்கு காகிதமெழுதி அனுப்பவேணு மென்று துரையுடனே சொன்னதற்கு உன்னுடனே சொல்லசொன்னார் என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது திண்டிவனம் முத்துமல்லா ரெட்டி காலாப்பேட்டு பாளையக்காரன் சித்தப்பன் பெரியப்பன் மகன் மாத்தூர் லக்ஷ் மன தந்திரி என்கிறவனை பிடித்துப்போய் புதுச்சேரியாா சவுகையினலே இருந்தாயேயென்று பின்னையும் சொல்லத்தக்கதாக விசேஷத்தைச் சொச்

அடித்து விலங்கிலே போட்டாரென்று கபுரு அல்லாமல் காலாப்பேட்டு பாளையக்காரனென்கிற கபுரு அறியேன் விசாரித்துச் சொல்கிறேன். என்று சொன்னதற்கு முனுகரி சூளை கொள்ளைகூடபோனதென்று எழுதினான். துரை ஆனால் இவ்விடம்வந்து சேர்ந்துப்போச்சென்று சொல்கிறார்; அதுவும் விசாரித்து சொல்லவேணுமென்று சொன்னான் (நயின) நல்லது விசாரித்துச் சொல்லுகிறேனென்றுச் சொல்லிவிட்டுப் பாக்குக்கிடங்குக்கு வந்து அப்பால் வீட்டுக்கு வந்தேன்.

**விபவ ஞூ ஐப்பசி மீ 13 உ க்கு 1748 ஆ ஒக்தோபர் மீ 25 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே நடந்த சேதியென்னவென்றால் அப்புமுதலியார் முன் தட்டுமுட்டு கலகத்துக்கு வெளியே கொண்டுபோனதை மதாம்பிடித்து துரையவர்களன்டையிலே கொண்டுபோய்வைத்து நீதானே ஊரைகாபிறுபண்ணுகிறுயென்று ஐந்தாறு நாள் காவல்வைத்துவிட்டார்களே அந்த உடமை முடிப்புடனே துரையவர்கள் வீட்டிலே வைத்திருந்ததை இன்றையதினம் காலையில் ஒன்பது மணிக்கு அம்மை அழைப்பித்து அந்த உடமை முடிப்புடனே கொடுத்துவிட்டார் அவனதை அவர்முன்னே அழைத்துக்காண்பித்தான் நூற்றி நாற்பத்தொரு விராகனும் வெள்ளிசரிபாடகம் கட்டுவட முதலான உடமை 100 விராகனுக்குக் காணும் அதைக் காண்பித்துப்போட்டு எடுத்துக்கொண்டுவிட்டே கொண்டுபோனான்.

அப்பால் அப்துலயிமான் வந்தவர்களை துரையவர்கள் போரோம் வாரோமென்று சொல்லுகிறானென்று இவனை ஒருவருஷகாலம் நிருத்தி வைத்து போடுவிக்க வேணுமென்று நினைத்து அவனுடனே இராஜாவுக்கு யெழுதின காகிதத்தில் உளதரிபு ரொம்ப யெழுதினோம் நீயும் ஒரு காகிதம் மெழுது என்றுசொல்லி அபுசாணி காகிதமழைப்பித்து பிரான்சு வார்த்தையிலே ஒன்று யெழுதிவைத்து பார்சியிலே அதன்கீழே இவன் கையெழுத்து போடவைத்து அந்த காகிதத்தை வாங்கிக்கொண்டு சீர்மைக்கு அனுப்புகிறோமென்றுச் சொல்லி போகச் சொன்னார். அந்த உச்சாகத்தின்பேரிலே அவன் வெளியே புறப்பட்டு பிரான்சு ராஜாவுக்கு நான் காகிதமெழுதி அனுப்பினேனென்று அவன ஊரெல்லாம் சொல்லி இனிமேல் புதுச்சேரி கும்பினீர் காகிதமெல்லாம் என்னைதவிர நடக்கிறதில்லை என்று உச்சாகமாய் அவரிவருடனே சொல்லுகிறதுமிருக்கிறதுங் காகிதத்திலே யெழுதி முடியாது தங்களுக்கு விசேஷமான வெகுமானம் பண்ணவில்லை நிற்வாகமெல்லாம் என்னை தொட்டென்று சொல்லிக்கொண்டு எங்கள் மரியாதை (கூட)

அரியாமல்போனுர்கள் என்றும் பிரயாசையுமறியாமல் போனுர்களென்றும் நாங்களினிமேலிருக்கிறதில்லை அனுப்பிவித்துக்கொண்டு வூருக்கு போரோமென்று சொல்லிக்கொண்டு திரிஞ்சதுமல்லாமல் நேற்றியதினம் அல்லிகானும், அப்துலயிமானும் வூருக்கு போரோமென்று கேட்டதற்கு இன்றைக்கு துரையவர்கள் தருவெடுத்து சீர்மைக்கு பிரான்சு இராஜாவிடத்திலே உன் பேருண்டாகவும் அங்கேயிருந்து சகலமேன்பாடும் வெகுமானமுமழைப்பிக்கத்தக்கதாக யெழுதினேம். நீருமொரு காகிதமெழுதிக் கொடுமென்று யெழுதிவைத்த சாடையைப்பார்த்தால் அப்படி என் புத்திக்கேற்க தோணுது. பின்பு சகல பிரயாசமும் சகலமானத்தும் தன்தாயெழுதுவாரே அல்லாமல் ஒருத்தர் மெனத்து எழுதிவைத்து அவர்கள் காகிதம் கூட அனுப்புகிறதுண்டா? இதுவரையில் ஆர். ரார். எத்தனை காரியம் செய்தவர்களுக்கு நடந்து இருந்தாலவ்லவோ இதை மெய்யென்று நம்பவேணுமென்று எனக்கு தோன்றியபடிக்கு எழுதினேன். நானெழுதினபடிக்கே பிரபுவினுடைய சித்தமும்படியே யிருக்குமென்று தோணுகிறது. அப்பால் ஸ்வாமிக்குத்தெரியும்.

மற்றப்படி என்னை அழைப்பித்து சின்னதருவாடி இன்னம் வந்துசேரவில்லையாவென்று கேட்டார். இன்னம் வந்ததில்லையென்று சொன்னேன்.

வெளிசேதி என்னவென்று கேட்டார் நான் செஞ்சிமட்டுக்கும் பிரான்சுக்காரர் சீர்மை கட்டிகொள்ளுவாரென்று அவரவர் இங்கிலீஷ் காரர் வந்து இறங்கினவிடத்திலே புதுச்சேரி பிரஜைகளை காட்டிக்கொடுத்ததும் தப்பித்தவர்களும் இங்கிலீஷ் காரர்களுக்குத் தத்தாய் கூலிக்காரர்களுக்கு மற்றபேர் வந்த பேர்களுக்கும் இந்தப்படி அவரவருக்கு ஒவ்வொரு அச்சமிருக்கவே இருக்கும் அல்லாமலும் கிறுமங்களுக்கு எஜமான்கள் இங்கிலீஷ் காரர்களுக்கு அனுகூலமாய் போக்குவருத்தாய் இருந்தவர்களைத்தொட்டும் அந்தந்த கிறுமங்களெல்லாம் வலசைவாங்கி வெகுதூரம்போய்விட்டார்களென்று சொன்னதற்கு இதுவா அனுபவம் வேரே வேரே அனுபவம் அவரவருக்கு நடந்ததற்கு தக்கதாயனுபவிக்காமல் போக தக்கதில்லையென்று சொன்னுர்.

பெருமுகால் மியா சாயபுக்கும் (Miyan) 100 விறுகனிலே ஒரு வெகுமானம் தினுசுவா யெழுதி முசியே கொர்னேத் (Cornet) கையிலே வாங்கி உபசாரமாய் மாயேயிலே இருந்துவந்தவர்களை வைத்துக் காப்பாற்றி சென்னப்பட்டணத்திற்கு அனுப்பிய சகாயம் மறக்கத்தக்கதில்லை என்று காகிதமெழுதி வெகுமானமும் (சேர்த்து) அனுப்புச்சொல்லி சொன்னுர் நல்லதென்று வந்தேன்.

இற்றனேனுள் சாயங்காலம் (என்னே) அழைப்பிற்று வேலூர் முருதா சல்லிகானுக்கு (Mursazaali khan) உபசாரமாய் ஒரு காகிதமெழுதி அப் துலயிமானுடைய கையில் கொடுக்கச்சொல்லி அப்பால் திருவாங்கோட்டு (Travancore) வால் மார்தாண்டராஜாவினுடைய காகிதம் துரையவர்கள் பேருக்கு பிரான்சுயெழுத்திலே யெழுதி கிருஸ்துவர் ரெண்டுபேர் கொண்டு வந்த காகிதம் படித்துக்கொண்டு அப்போதானே பதிலுத்தாரம் தமிழிலே என்னே யெழுதிக்கொடுக்கச்சொன்ன வயணம் என்னவென்றால்: இங்கிலீஷ் காரர் நம்முடைய பேரிலே படைவந்திறங்கி சண்டை பண்ணுகிறார்க ளென்று கபுரு கேட்டவுடனே வெகு மனஸ்தாபமானது. நல்லமனதுடனே கப்பல் எங்கள் வசத்திலே உண்டா இருந்தால் வேண்டிய படைகளே அனுப்பி வைப்போம் இப்பவும எக்கி எவ்வளவுபடை அனுப்பச்சொன்னால் அவ்வளவுபடை அனுப்புகிறோமென்று இங்கிலீஷ்காரர்களேத் துரத்தி சகல ப்ரதிஷ்டையும் உம்மை அடைய ஸ்வாமி பண்ணுவாரென்று யெழுதி பின்னேயும் உபசாரமாய் யெழுதியிருந்த வயணங்களுண்டு அதுகளெல்லாம் பார்த்துக்கொண்டு தாங்கள் மதத்து அனுப்பினதைப்பார்க்க ஆயிரம்பங்கு அதனமாய் எண்ணினேம். நீர் நினேந்து நினேத்து யெழுதினதென்று அதற்கு உபசாரம் எந்த விதத்திலே யெழுதவேணுமோ அந்த விதத் திலே உபசாரமாயெழுதி அப்பால் இங்கிலீஷ்காரன் வந்ததும் சண்டை பண்ணினதும், வெகு ஜனங்கள் சாவுகொடுத்ததும் அப்பால் நிர்வாகமில்லா மல் ஓடிப்போய்விட்ட ஜாடையெழுதுகிற வாடிக்கை உனக்கு நன்றாய் தெரியுமே அந்தபடிக்கு எழுதி அனுப்பிவையென்று சொன்னர். அந்த படிக்கு தமிழிலேயெழுதி முத்திரைப்போட்டு அதற்கு சவ்வாது எழுதிக் கொண்டோம் நாளேயதினமவர்கள் மனுஷர்கள் கையிலே கொடுத்து அனுப்பத்தக்கதாக முஸ்திப்பு பண்ணிவைத்தேன்.

அப்பால் துரையவர்கள் சொன்னது சந்தா சாயபு (Chanda Sahib) மகன் தன்னூருக்குப்போகிறேமென்று என்னேக்கேட்டனுப்பி வைத்தான். சந்தா சாயபு வருகிறசேதி என்னவென்று கேட்டார். அதற்கு முன்னே சொன்ன சேதிதான் வருகிறார் வருகிறார் என்று சேதி அப்பால் அவ்விடத் தில் மழை காலமானதே இனிமேல் தெரியுமென்று (நான்) சொன்னேன். அப்புறம் கேட்டுவிட்டு உள்ளே போனர். நான் புறப்பட்டு பாக்கு கிடங்கே வந்தேன்.

மிருயாதுக்குறினும் மகமுது சாயிப் (Miryâgdâr et Muhammad Saiyed) இரண்டுபேரும் தப்புகாகிதமொன்று முருதுசல்லுகானு (Murtaza Ali Khân) தென்பித்து இராணுவு அனுப்புகிறேமென்றுப் போலேயும் துரைவாணுமென்றுப்போலேயும் அப்துலயிமான் ஒரு டப்பு

துணமுண்டாக்கி கோவிந்தராவைபிடித்து காவல்பண்ணி அவன் கையிலே 1000 விராகனுக்கு சீட்டும்தவணை வைத்து யெழுதிவாங்கிக்கொண்டு அவனையும் விடாமல் இப்போவூருக்குப் போகிறோமென்று உத்தாரம் வாங்கிக் கொண்டு கோவிந்தராவையும் கூட அழைத்துக்கொண்டு போக உத்தரவு வாங்கிக்கொண்டு முருதுசல்லிகான் (Murtoza Ate Khan) பேருக்கு ஒரு காகிதமெழுதி அப்துலயிமான் அண்டைக்கு அனுப்பிவித்தோமென்று எழுதி னேன். அந்த காகிதமும் வாங்கிக்கொண்டு நாளையதினம் போகிறதாய் பயனப்பட்டு துரையவர்களண்டையிலே வந்து இன்றையனாள் அனுப்பி வைத்துக்கொண்டு போனான். இவர்கள் ரசாலிகான் (Raza ate Khan) மனுஷர் முருதுசல்லிகானுக்கு (Muataza ali Khane பயந்து வூருக்கு வூர் ஓடிக்கொண்டு திரியுவார்களென்று இந்த பட்டணத்திலுண்டான துலுக்கர்களுக்கெல்லாம் தெரியும், எனக்கும் தெரியும்; கோவிந்தராவு நிமித்தியம் இத்தனை பொய் காகிதமுண்டாக்கி நடத்தினதென்று தெரிஞ்சா லும் பிரபுவுடையக் கூட ஒளவாயிருந்து அப்துலயிமான் கூட நடத்துகிற படியினாலேயும் பிறபுவினுடைய சித்தம்பாரியை பேச்சிலே நிற்கிறபடினாலே ஒருத்தரும் வாய்திரக்கத்தக்கதாயில்லை. இதுகாரியமாத்திரமா? இப்போது நடக்கிற சகல காரியங்களும் அப்படியேதான் காலத்துக்குத்தக்கதாய் அவரவர் தன்னை தப்பித்துக்கொள்வதே பெரிய காரியமாயிருக்கும்போது ஒருத்தர் காரியம் விசாரிக்கத்தக்கதென்ன யிருக்குது? ஸ்வாமி ரக்ஷிக்கவே ணும்.

விபவ ஹு ஐப்பசி ௴ 14 வ க்கு 1748 ஒக்தோபர் 26 உ சனிவாரம்

இற்றைனாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்குப் போன விடத் திலே துரையவர்கள் நேற்று திருவாங்கோட்டு (Travancore) வஞ்சிவால மார்த்தாண்டவரம் இராஜாவுடைய காகிதத்திற்கு பதிலெழுதின காகிதத் தைக் கொடுத்து அவர்கள் மனுஷர் இரண்டுபேர் கிருஸ்துவர்கள் வந்தவர் களை முன்னே விட்டவுடனே துரையவர்கள் அந்த காகிதத்தை அந்த இரண்டுபேர் வந்தவர்கள் கையில் கொடுத்து அவர்களைப் போகச் சொல்லி என்னைப்பார்த்து இருபது ரூபாய் வாங்கிக் கொடுக்கச் சொன்னார். அந்த படிக்கு பரசுராமபிள்ளையிடத்தில் வாங்கிக்கொடுத்துஅவர்கள் பயணம் போகச் சொல்லி அனுப்பிவிட்டார்.

அப்பால் பெருமுக்கல் மியா சாயபுக்கு (Miyân Sahib) நேற்று துரையவர்கள் சொன்ன உத்தாரம்படிக்கு வெகுமான விஸ்துக்கு எழுதி வைத்து துரையவர்கள் கையில் ஒப்பம் வாங்கி முசியே கொர்னேத்து அண்

ஷடக்கு அனுப்பி வைத்து அந்த தினுசுகள் முஸ்தீபுபண்ணிக் காகித மெழுதி தயாராயிருக்குது நாளையதினம் அனுப்பிவைக்கின்றேன். மியா சாயபுக்கு வெகுமான மனுப்பிய தினுசுகள் வயணம்.

| | |
|---|---|
| சிகப்பு சகலாத்து சிப்பம் | 2 |
| ,, முகமல் கிசம் | 5 |
| பச்சை ,, ,, கெஜம் | 5 |
| ரெண்டு வர்ண சகலாத்து கெஜம் | 3 |
| ,, சட்டம் கண்ணடி | 2 |
| ஆருதே உஸ்கிரிபியோல் | 6 |
| ,, மெலிகிபியோல் | 6 |

இற்றைநாள் கேழ்விபட்ட சேதியென்னவென்றால் வில்லியனூர் ரூமி ரெட்டியை மதாம் அழைப்பித்து கண்டுபேசினதாய் சேதி கேழ்விபட்டேன். அந்த சமாசாரமின்னதென்று வெளிபாகவில்லை வெளியாகாதேபோகாது இரண்டு நாள் ஏறக்குறைய தெரியும் என்ன பெரிய காரியமிருக்கப்போகி றது. தேவனம்பட்டணம் வேகு சமாசாரமும் தண்டு வந்து இறங்கி யிருந்ததே இந்த சமாசாரமென்று தோணுது அதுவும் இனிமேல் விசிதப் பட்டுபோகிறது.

பகலைக்குமேலாக துரையவர்கள் அழைத்தனுப்பினார்கள் நான் போவ தற்குள்ளே வண்டிமேலேரிக்கொண்டு எதிரே வந்தார். வந்தவர் பார்க்க வில்லை. அப்பால் இராசோபண்டிதன் புறப்பட்டான். புறப்பட்டவ னென்னைப் பார்த்து ஒரு பல்லக்கும் பத்துசேவுகரும் ஒரு யெரு தும் வெளியே போகிறதற்கு சீட்டு வாங்கிக்கொண்டோம். துரை யவர்கள் ஆருக்கு போகிறதற்கு எங்கள் ருசா சாயபு (Raza sahib உத்தாரம் கேட்டார். அதற்கு தங்கள் கடனை கொடுத்துவிட்டு போகச் சொன்னார். அது நிமித்தியம் மிருதியானதுல்லாவையும் (Mer Diganat u· lab) ராகவ பண்டிதரையும் அனுப்பி அஞ்சாறு நாளையிலே அவர்கள் பணத்தை அழைப்பித்து கொடுத்துப்போட்டு போகிறோமென்று சொன்னார். இப்போ நாலுநாளாய் அப்துலாயிம்மான் சமேதார் முகாந்திரமாய் அம்மான் மார்பத்தில் பேசினதெல்லாம் இதுதானவென்று மனதிலே வைத்துக் கொண்டு நல்லது போரீர்களேவென்று தெண்டம்போட்டு போகச்சொன் னேன் மறுபடி அவரிருந்துக்கொண்டு உடமைக்கு குதவை வைத்துப் போட்டுப்போய் பணமனுப்பி அழைப்பித்துக்கொள்ளுகிறோமென்று சொன் னதற்கு நாங்கள் சீர்மைக்கு பயணம் போகிறோம். எங்களுக்கு உடமை

ஸ்வத்து கார்த்துக்கொண்டிருக்கக்கூடாதென்று சொன்னார். இத்தனை நாள் வைத்திருந்து இப்போ சந்தா சாயபு பட்டணம் வந்து சேர்ந்தானென்று காகிதம் வந்தது. அப்படியிருக்க போகிற வேலையிலே நிஷ்டூரம் பண்ணினார்களென்று வேசாடையாய் பேசினார். அதற்கு உத்தாரம் சொல்லாமல் நல்லது போய்வாரீர்களாவென்று அனுப்பிவைத்தேன்.

அப்பால் துரையவர்கள் சாயங்காலம் ஆறு மணிக்கு வந்த உடனே நான் போனேன். என்னை பார்த்த உடனே எழுந்திருந்து வந்து காகித துணுக்கயிலே 2-3 வரி எழுதியிருந்தது. அந்த துணுக்கையை அரசி பேரிலேயிருந்து யெடுத்துப்பார்த்து, திருவாண்டார் கோவிலென்றிருக்கிறதாம். அந்தவூரிலே இங்கிலீஷ்காரர்களுக்கு நெல் பொதிகள் விஸ்தாரமாய் போகுதாம் அதை சேவுகர்களை அனுப்பி இவ்விடத்திற்குத் திருப்பவும் சும்மா எடுத்துக்கொள்ளுகிறதற்கல்ல. உள்ள கிறயம் கொடுத்துவிடுவோமென்று சொல்லி அப்பால் அழிசபாக்கம் முதலான குண்டு கிராமங்களையெல்லாம் சந்தபாத்தும் பண்ணப்போகிறோம். அந்தந்த குத்தகைகாரர்களை அழைத்து உயர்வுத் தாழ்த்தியில்லாமல் உழச்சொல்லு. அப்பால் மணியக்காரரை வைத்து நடப்பித்துக்கொள்ளுவோம். மணியக்காரர் கெட்டிக்காரராய் விசாரித்துவையென்று சொன்னார் நல்லதென்று வந்தேன். அப்பால் ஒழுகரை குத்தகைக்கார முத்து குமரப்ப முதலியையும், வைத்தினாத முதலியையும் அழைத்து துரையவர்கள் சொன்ன சேதியை சொன்னதற்கு மெத்த உத்தமமானது. கிராமங்களெல்லாம் கலகத்தினாலே பயிர் தாஷியாய் போயிருக்கிறதற்கு அப்படித்தான் செய்ய வேண்டியதென்று சொன்னார்கள். அறியாங்குப்பத்திற்கும், அபிஷபாக்கத்து பேச்சுக்கும் தானப்பமுதலியாருடனே துரையவர்கள் சொன்ன சேதிப்படியே சொல்லிப்போட்டு வாருங்கோளென்று சொன்னதற்கு, நாங்கள் போய் சொன்னோம், காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்கு வருகிறேன்; அங்கே கண்டு பேசிக்கொள்ளுகிறோம் என்று சொன்னதாய் சொன்னார்கள். அப்பால் குண்டு கிறுமத்துப் பேச்சுக்கும், வீருனையக்கன் இராத்திரி பத்து மணிக்கு அழைப்பித்து சொன்னதற்கு நாளை வந்து குமரப்பிள்ளையும் நானும் பேசிக்கொள்ளுகிறோமென்று சொல்லிப்போட்டு போனார்கள்.

நேற்று இராத்திரி பத்து பதினொரு மணி வேலைக்கு துரையவர்கள் சீர்மைக்கு இங்கிலீஷ் தேராவிலிருந்து (Angleterre) இருபத்திரெண்டு கப்பல்களுடனே மேஸ்தர் புஸ்காவேன் (Bascawen) என்கிற கோந்திரமிரால் வந்து அப்பாலிங்கேயிருந்த மேஸ்தர் கெரேபேன் (Griffin) கமெண்டோர் கப்பல்கள் கூட கூட்டிக்கொண்டதுமல்லாமல் பொம்பாய்

தில்ச்சேரியிலிருந்து வந்த சிப்பாய்கள் இவ்விடத்து கற்னாடகத்தார் மொதலாய் ஆற்காடு சுமாமத்தத்து அப்துல் சலீல் உள்பட வந்து புதுச்சேரியை வளைத்துக்கொண்டு 2 மாதம் சண்டைபண்ணி கடைசி ஒக்தோபர் மீ 8 தேதி செவ்வாய் கிழமைக்கு புரட்டாசி மீ 26 உ பகல் முப்பது நாழிகை ஓய்வு விடாமல் கப்பல்களினாலேயும் மேற்கே மோர்சா பீறங்கிகளினாலேயும் தீக்குடுக்கைகள் முதலானதுகளினாலேயும் விடாமல் பெருங்காற்று பெருமழைஅடித்துப் பெஞ்சாப்போலே முப்பது நாழிகை வருஷமாரியாய்ப் பேஞ்சு கடைசியிலே நம்முடையவர்கள் போடுகிற பீறங்கி குண்டுகளாலேயும் மனுஷா அப்போதைக்கப்போ புறப்பட்டு அடிக்கிறதினாலேயும் அவர்களிலேயும் அவர்களுக்கு மத்தத்துவந்த ஒரு ஒலாந்தக்கார் எஜமானனும் அறநூறுபேர் சொல்ஜர்களிலேயும் சாவுக்காயமும் வெள்ளைக்காரரிலே 960 பேரை சேதப்படுத்திக்கொண்டு நிர்வாகமில்லாமல் ஒக்தோபர் மீ 17 தேதி ஐப்பசி மீ 5 தேதி வியாழக்கிழமை நாள் மோர்சாவை கொளுத்திபோட்டாரென்றும் பிராஞ்சுக்கார இராஜாவுக்கும் மினிஸ்தர்களுக்கும் கும்பினியார்களுக்கும் காகிதமெழுதி இந்த வயணமெல்லாம் ரூப ரூபாய சொல்லுகிறதற்கு தன் உடன் பிறந்தான் குமாரன் முசியை கொற்ழானையும் (Kerjean) சீர்மையிலிருந்து வந்து இந்த இராச்சியத்து வேடிக்கைப்பார்த்து எழுதிப்போகவந்த பாதிரி ஒருத்தன் முசியே லபேதமா (Abbéde Fagee) என்கிறவன் இந்த சண்டைக்குக்கூடயிருந்து அனுபவம் பார்த்தவனைபடியினாலே அவனையும் பயணம் பண்ணி இராஜாவினிடத்திலே இவர்கள் இரண்டுபேரும் போய் ரூப ரூபாய சொல்லதக்கதாக திட்டம் பண்ணி இவர்கள் சண்டை சமாசாரங்களெழுதின காகிதங்களும் கூடக் கொடுத்து சென்னப்பட்டணத்திலே ஒரு கப்பலும் ஒரு பொத்து மிருக்கிறது அந்த பொத்து மேலே ஏறிப்போய் மசுக்கரை சேர்ந்து (Mascareigne) மசுக்கரையிலிருந்து அப்பால் சீர்மைக்குப்போக தக்கதாக பயணம் பண்ணி அனுப்பினார்கள். அவர்களும் சீர்மைக்கு எழுதின காகிதங்கள் வாங்கிக்கொண்டு சென்னப்பட்டணத்திற்கு பயணம் சாகிப் போனார்கள். அந்த பொத்து நடக்கிறதற்குமுன் மசுக்கரையிலே (Mascareigne) இருந்து முசியே லபுட்தொனே (La Bourdonnai) லகாதருகளுடனே கூடவந்திருந்த முசியே சேலே (Selle) என்கிறவனைக்கூட பயணம் பண்ணி அனுப்பினார்கள். இவர்கள் ஸ்வாமிதயவினாலே சீர்மை போய் சேர்ந்தால் சீர்மையிலே முசியே துப்ளேக்சு குவர்னதோர் ஜெனராலுடையபேர் சூரியபிரகாசத்தைப்போலே விளங்கும் அதற்கு சந்தேகமில்லை.

**விபவ ஞு ஐப்பசி மீ 17 உ க்கு 1748 ஒக்தோபர் மீ 27 உ ஆதிவாரம்.**

இற்றைனுள் காலத்தாலே துரைபவர்கள் வீட்டிற்குபோன விடத்திலே நபாபு அன்வர்த்திகான் (Annoor-ad-dinkhâ ) வைப்பாட்டிமகன் நசிபுல்லாகான் (Najibul'ah khan) என்கிறவன் துரையவர்களுக்கு தாங்கள் வேட்டவலம் பத்தேபண்ணதும் அப்பால் இங்கிலீஷ் காரரை துரையவர்கள் ஜெயித்ததற்கும் மோபார்க்கு பாதி பெழுதினுன் அதற்கு உங்கள் துரை அப்துல் ஜாலிகான் (Abdul-jalil) மத்தத்துவந்து சாக்ஷியாயபார்திருந்து வந்தப்படியினாலே அவர்களுக்கு நடந்த ஆகமாம்படியே சொல்லுவரென்று எழுதியனுப்பச் சொன்னபடிக்கு பதில் காகிதமெழுதி அனுப்பிவைத்தேன்.

மற்றபடி ஷேக்தாவுலத் மதார் (Saikh Daulat Madar). என்கிற அனுதம்பிரேத காகிதமொன்று இன்னாருதென்று தெரியாத சென்னபட்டணத்து தபால் காகிதங்களுடனேகூட வந்தது. அதுவும் இங்கிலீஷ்காரனை ஜெயித்ததற்கும் மோபார்க்கு பாதிபெழுதிவந்தது துரை அவனுரென்று கேட்டார். இன்னாரென்றறியோ மென்று (நான்) சொன்னேன். மற்றப்படி இதைவிட வேரே சேதி கேட்கப்படவில்லை

ஆனால் மிரியாதுகிரி மகம்மது செயட் (Miryagdarand Mauhammad Sayed) அபத்தக்காரர் இன்றையதினம் துரையை ஏச்சிப்போட்டு கோவிந்தராவையும் கூட்டிக்கொண்டு அப்பாலே விட்டடித்தார்கள் ஏனென்றால் தாங்கள் ருசாலிகான் மனுஷர்கள் (Raza Alikhan) முருதுசல்லிகானுக்கு (Martaza Alikhan) பயந்துவந்தவர்கள் கோவிந்தராவைக் கொண்டுபோகிற நிமித்தியம் மிருதுசல்லிகான் (Martaza Alikhan) மனுஷர்களென்பித்து காகிதங்கள்கூட உண்டாக்கி நடத்தினபடியினாலே ஒரு வேளை வெளியானால் நல்லதல்ல என்கிற சாடையை தொட்டு சீக்கிரமத்துக்கு கழண்டு போனதென்று அவன்கிட்டயிருந்த துலுக்கர்வந்து சொன்னார்கள். ஆனால் துரையிதுவரையிலே துலுக்கர் வசத்திலே யிப்படி மனுஷர்களை ஒப்பித்ததில்லை இப்போ இதுகூட நடந்து தீர்ந்தது மற்றபடி எப்போதும் லோகாபிராமமாய் உள்ள சேதிகளே அல்லாமல் வேரேயில்லை.

மஹாசாலை காவல் பண்ணி விளங்குப் போட்டார்களென்றும் ரங்கப்ப நாய்க்கன், வெங்கடாசல நாய்க்கன் பேரிலேயும் கோபம்பண்ணி ஜனங்களை யிப்படி கொள்ளையிடச்சொல்லி ஆர் உத்தாரம் கொடுத்தார்களென்று தேவனும்பட்டணம் துரையவர்கள் கோபித்துக்கொண்டதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

**விபவ ஞு ஐப்பசி ஸ்ரீ 16 உக்கு 1748 ஆ ஒக்தோபர் ஸ்ரீ 28 உ சோமவாரம்.**

இற்றைறனள் காலத்தாலே நான் துரையவர்கள் வீட்டுக்குப் போன விடத்திலே துரை என்னை அழைத்து சந்தா சாயபுக்கொரு காகிதமெழுதச் சொன்ன வயணமென்னவென்றால், சந்தா சாயபு பெண்ஜாதி **(Chanda Sahib)** அலிதோஸ்துகான் பெண்ஜாதி **(Ali Dost Khan)** முதலான பேர்கள் சண்டைக்கு வெளியே போகிறவர்கள் என் மனது இராசி யில்லாமல் வெளியே போனார்களென்றும் அவர்களை மறுபடி அழைப்பிக்கிற னிமித்தியம் பிள்ளையாண்டானை நிருத்தியதற்கு ஒரு பகலுக் கடன் கேழ்கிறபாவனையாய் கேட்டோமென்று அதற்கு எப்படி அவர் மனதிலே அய்யுறவு தோத்தாமல் அனுப்பென்று சொல்லி சந்தா சாயபு காகிதம் நம்முடைய பேரிலே சந்தோஷமாய் வரவும். அவர்கள் பேரிலே குறை தோன்றவும் எந்த சாடையிலே யெழுதவ்வணுமோ, அந்த சாடையாய் போகனுப்பி எழுத உனக்கு புத்தி உண்டாயிருக்கிறபடியினாலே விஸ்த ரித்துச்சொல்ல கவையில்லையே எழுவேண்டிய சாடைபடிக்கு திட்டமா யெழுதி அனுப்பிவிடென்று இரண்டுமூன்றுதரம் சொன்னார். ஆனபடியி னாலே அதற்குத்தக்கதாய் சவாலெழுதிவைத்து அப்பால் காகிதமும் முஸ்தீப்பு பண்ணிவைத்தேன். நாளையதினம் றவாணுபண்ணி அனுப்பிவிடு கிறேன்.

அப்பால் சந்தா சாயபு மகனையும், படேசாயபு வீட்டு பெண்டுகள் பிள்ளைகளையும் அனுப்பதக்கதில்லையென்று சொல்லி அப்பால் மிறுகுலாமு சேனவர்கான் மோபர்ர்க்கு பாதிகொடுக்க வருகிறோமென்று சொல்லுகிறார் களே இந்த சாடையிலே இத்தனை பிரயாசைபட்டது உங்களுக்கு நன்றாய் தெரிந்திருக்கும்போது எதாகிலும் கொண்டு வருவோமென்கிற சாடை யில்லாமல் சந்தாசாயபு மகனும், படேசாயபு மகனும் வெறுங்கையுடனே வந்தார்கள். இவர்களப்படி வாராதபடிக்கு பாரென்று சொன்னார். நல்லது பார்கிறோமென்று சொன்னேன்.

உடனே என் கையிலே இரண்டு காகிதத்திலே வைத்தது நாலு பட்டை முத்துசரம் சரம் ஒன்றுக்கு 52 முத்து இருக்கிறதைக்கொடுத்து அப்பால் 19 முத்து விடிமுத்தும் ஒரு சுகந்தி கல்லுபோலே கென்பிலே ஒரு ஜாதி கல்லென்றும் கொடுத்து விலை வைத்து வரச்சொல்லி சொன்னார். இது அரமனைக்காரர் சுவர்க்குயம் 4 விலை சொல்லி கொடுத்தாப்போலே யிருக்கிறது. இனிமேல் விலைபாராத வயணம் இதன் பிறகாலே ஆவது நாளைய தினம் சரியிலே ஆவது எழுதுகிறேன்.

அப்பால் பங்காளத்திலேயிருந்து கூடி வந்தவன் மரிதாசுதம்பி தமயன் மாரெண்டுபேர் அதிலே மூத்தவன் மரிதாசு என்கிறவன் ஒலாந்தக்காரன் மனோத்தாம் பெஷ என்கிறவன் கப்பலிலே துரையவர்களது சியாம்காரன் கையில் (Siamese) வாங்கின அகலகட்டையிதல்லாமல் பிடவை கட்டுகள் முதலான சரக்குகள் கும்பினீருடையதும், சிறிது சரக்குகளிதல்லாமல் படுத்தி குலாரி வெள்ளைக்காரர் வர கொஞ்சநஞ்சம் சரக்கேத்தினார்கள். அப்பால் அந்த கப்பல் ஒலாந்தக்காரன் கப்பலானபடியினாலே இதுக்கு சண்டைகளைத்தொட்டு ருசிகங்கள் கவையில்லை என்று யோசனை பண்ணிக் கொண்டு மோகாவுக்கு (Mocha) மோரதிலே கூடி வருமென்று யோசனை பண்ணி அவனவன் வட்டத்திற்கும் கொடுந்தான் சரக்கும் வத்தினார்கள். அப்பால் அந்த கப்பல் பாயெடுத்து மோஷரீவுக்கு ஓடிப்போகமாட்டாமல் கொச்சியிலே தவாய் நின்று அப்பால் மோஷாவுக்கு ஓடி அவ் விடத்திலே முசியே துப்போகாசும் மனோதாம் பேஷதும் (du Bacage & Mijnheed Tempezel) ஒன்றாயிந்த உத்தவதா சுக்கு கணக்கு அரியபண்ணாமல் தாங்கள்தானே வித்தார்களென்றும் இவன் கேழ்க்கப்போனால் நீ எங்கள் பேரிலே காவலா வந்தாயாவென்று காண் பித்துக்கொண்டும் அப்பால் இவனை தன் கப்பலின் பேரிலே எத்திக்கொள் கிறதில்லையென்று சொன்னதின்பேரிலே இவன் ஒரு அரண்மனைக்காரன் கோசா அந்தோணி என்கிறவன் கப்பலின்பேரிலே ஏரிப் பரங்கிப்பேட்டை துறை ஆவணிமாதம் வந்து பிடித்து இறங்கினவுடனே புதுச்சேரியின் பேரிலே இங்கிலீஷ்காரன் வந்து சண்டைபண்ணுகிறானென்கிற சேதியை கேட்டு யோசனைப் பண்ணிக்கொண்டிருக்கும்போது இங்கிலீஷ்காரன்வந்து அந்த கப்பலை பிடித்துக்கொண்டானென்று இரண்டுநாழிகைக் கெல்லாம் சேதிக்கேட்டு அங்கேயிருந்து சிதம்பரத்திலே ஓடிப்போய் இருபது நாளி ருந்தேன் அங்கேயிருக்கும்போது மனோதாம்போடி (Mifrheed Tempeze') என்கிறவன் மோகாவிலே இருந்துகொண்டுவந்த கிசுமுசுபத முதலானது கள் விற்கிறானென்று அவரவர் போக்குவருத்து மனுஷர்கள் கபுரு சொன்னார் கள் யென்று சொல்லி அப்பால் அங்கேயிருக்க கூடாமல் புறப்பட்டு ஆற் காடு போய் சேர்ந்து அங்கேயிருந்து சென்னப்பட்டணம் சேர்ந்து அங்கே யிருந்து இங்கிலீஷ்காரன் வாங்கிபோன கபுருகேட்டு இவ்விடத்திற்கு இன்றையதினம் வந்து சேர்ந்தேன். நானிறங்கின நாள்முதல் இன்றயவரைக் கும் ரெண்டரை மாதமாகுதென்றும் சரக்குவிலை மற்றது நாளைவந்து சொல் லுகிறேனென்று அவ்விடத்துக் கணக்கு காகிதங்கள் பறங்கிப்பேட்டையிலே நீல்க்கற வெங்கடாசலம் வீட்டிலேதானே வைத்துப்போட்டுவந்தேன். இனி மேலதை அழைப்பிக்க வேணுமென்றும் மற்ற சேதியெல்லாம் நாளைவந்து சாவகாசமாய் பேசிக்கொள்ளுகிறேனென்று துரையண்டையிலே பேசியி

ருந்து பேர்கிறவன் என்னுடனே இந்த சேதியை சொல்லிவிட்டு அவர்கள் தகப்பனாரிருக்கிற விடத்திற்கு வீட்டுக்குப்போனான்.

ஒலாந்துக் காரருக்கும் (France) பிறுன்சுக்காரருக்கும் சண்டை திக்ளாடர் விட்டாலும், (Declarer) சண்டை சண்டையாய் இப்போதான் நடக்கிறபடியினாலேயும் ஒலாந்தெக்காரர் குண்டுமருந்து ஏத்திவந்த சின்ன கப்பலொன்றை ஆணிமாதத்திலே நம்முடையவர்கள் கப்பல் மசுக்கரையிலே (Mascarayne) யிருந்து எட்டுக் கப்பல்கள் பணம் கொண்டுவந்து சென்னப்பட்டணத்திலே இறக்கிப்போட்டு போகிறபோது கப்பலைபிடித்தபடியினாலேயும் ஒலாந்துக் காரனுக்கு மிவர்களுக்கும் சண்டைதான் ஏற்பட்டதென்று இதல்லாமல் இங்கிலீஷ்காரன் வந்து இறங்கினபோது ஒலாந்தக் காரரும் ஆயிரம்பேரும் ஒரு எஜமானனும் கூடவந்து இருந்து சண்டை பண்ணினபடியினாலே ஒலாந்தக்காரர்களுக்கு மிவர்களுக்கும் சண்டையென்கிறது நன்றாய் ஏற்பட்டபடியினாலே மனோத்தாமபோஷ (Mifnheed Ten pezel) மோக்காவிலே (Mocha) இருந்து பணம் கொண்டுவந்தவன் கொடான் என்று தோணுகிறது. அப்பால் நடக்கிறசேதி அறியவேண்டியது.

விபவ ஞு ஐப்பசி மீ 17 உக்கு 1748 ஆ ஒக்தோபர் மீ 29 உ மங்களவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்குபோன விடத்திலே முசியே திலார்ஷ் (Delarche) வந்து துரையவர்களுடனே நெல்லை ரங்கப்பன் கும்பினீருக்கு வாங்குகிறபடியினாலே விலை உசரவில்லையென்று சொன்னதின் பேரிலே யென்னைப்பார்த்து உனக்கு வுத்தாரம் கொடுத்தது வருகிற அரிசி மாத்திரம் வாங்கச் சொன்னதே அல்லாமல் நெல்வாங்கச்சொன்னது யில்லையே என்று கேட்டார். மெய்நான் அரிசிமாத்திரம் வாங்கிக்கொண்டு வந்தோம் நேற்று சாயங்காலவேளையிலே அவர்களாக வந்து நாங்களுருக்கு போகவேணும் கொஞ்சம் நானூரு மறக்கால் நெல் காணும் வாங்கிக்கொண்டால் போகிறதுகளையுடனே போய்விடுவோமென்று தாமந்தபட்டவர்களுக்கு சகாயமானால் வருகிறவர்களுக்கு உற்சாகம் கொடுக்குமே என்று யோசனைபண்ணி வாங்கச்சொல்லி சொன்னது ஒரு விசேஷமாய் உங்கள் காதிலே சொன்னேனென்று சொன்னதற்கு இனிமேலப்படி நெல் வாங்கவேண்டாம்; அரிசி மாத்திரம் வாங்கிக்கொள் என்று சொன்னார்; நல்லதய்யாவென்று சொல்லிவிட்டு அப்பாலே வந்தேன். முசியே திலாசு (Delache) இதொரு பாஸ்தாபமாய் போய் துரையுடனே சொன்னதென்னவென்றால் முத்துமல்லாரெட்டி யிவருக்கு 8, 9, நாள் பிடிச்சு நித்தம் நெய்யும் கோழியும் பண்ணியும் ஆடுகளும் வாழப்பழங்களும் அனுப்பிகொண்டேயிருக்கிற சேதி சேவுகர் மதாமுக்குச் சொல்லி, அவா

கள் துரைக்குச் சொல்லி துரை இவரை அழைத்து இங்கிலீஷ்காரர் வந்திறங்கினபோது, நமக்கு இவன் சத்துருவாயிருந்துவந்த வெள்ளைக்காரர் முதலான பேரைப்பிடித்து கொடுத்தும், பிள்ளையும் நம்முடைய பட்டணத்து ஜனங்களையெல்லாம் வெகுவுபத்திரவம் படுத்தி செய்த நிஷ்டூரங்களனேகமிருக்க அவனும் சினேகம்பண்ணிக்கொண்டு இவ்விடத்திற்கு செய்தடுத்ததை மாற்கமாய் தள்ளிவைத்துக்கொள்ள நினைத்து உமக்கு அது இது அனுப்பினால் நீரெப்படி வாங்கிக்கொள்ளுவீரென்று கண்டித்தார். அது நான் சொன்னதாய் முசியே தெலார்ஷ் (Delarche) க்குத் தோன்றி அந்த கோபமிப்படி துரையுடனே நெல்லு பேச்சுலே சொல்லி ஆறிப்போட்டுப்போனால் நமக்கு இப்போ குரகச்சார சாமானியமாயிருக்கிறபடியினாலே நித்தியமேதாகிலும் ஒரு விசனம் கண்டு தெளிய வேணும். இன்றைய விசனமிவர் முன்னிலையாய் வந்ததென்று எண்ணிக் கொண்டேன் மற்றபடி பட்டணத்திலே கொடுங்கோள் நடக்கிறது எத்தனை விதமென்று எழுதப்போகிறேன்; ஒருக்கால் எழுதினாலும் சரி இரண்டு தரமெழுதினாலும் ஒரு சாடைத்தான். ஆனபடியினாலே யெழுதவில்லை. சங்கோல பிறந்தபோது அப்போ அன்றை' தினம் கண்டெழுதுகிறேன். மற்றபடி எதாக்கிறமம்தான்.

### விபவ ஞு ஐப்பசி மீ 18 உக்கு 1748 ஆ ஒக்தோபர் மீ 30 உ புதவாரம்

உத்தவதாசு மோக்காவுக்கு (Macha) ஓலாந்தெக்காரர் தாம்பேஷல் (Tempezel) கப்பித்தானுடனே கூடப்போய் மொக்காவிலே அவனுடனே கூடயிருந்து சரக்குவிற்று அப்பால் துரையவர்கள் சரக்கும், அவன் சரக்கும் இவனையல்லாமல் விற்று இவனை தன் கப்பலின் பேரிலேத்திக்கொள்ளமாட்டோமென்ற இவன் அறமனைக்காரன் (armenian) கோசா அந்தோணி கப்பலின் பேரிலேயோ பறங்கிப்பேட்டை துரைவந்து பிடித்து இறங்கின உடனே அந்த கப்பல் இங்கிலீஷ்காரன் பிடித்துக்கொண்ட மாத்திரத்திலே இவனங்கேயிருந்து ஓடிப்போய் ஆற்காடு மற்ற இடமெல்லாம் திரிஞ்சி இதிலே புதுச்சேரியை இங்கிலீஷ்காரன் சுத்திக்கொண்டபடியினாலே உள்ளே பரக்கூடாமல் வெளியே ஆற்காடு அந்த வட்டங்களிலேயிருந்து இங்கிலீஷ் காரன் வாங்கிப்போன சேதிதெரிந்துக்கொண்டு அப்பால் முன் 16 உ சோமவாரம் வந்துசேர்ந்தான் பறங்கிப்பேட்டையிலே இறங்கின நாள்முதல் இவன் வந்துசேர்ந்த நாள்வரைக்கும் கணக்குப்பார்க்க ரெண்டரை மாதமானது என்று சோமனே தாம் மேஷது (MynhurTempeze) கப்பல் ான் ஏரிவந்த அரமனைககாரன் (armenien) கப்பல் வந்து சேர்ந்த 156 நாள் நாகப்பட்டணம் வந்து சேர்ந்ததாய் தான் சிதம்பரத்திலே தானே கேழ்விப்பட்டதாய் சொன்னான்.

| | | | | |
|---|---|---|---|---|
| க்கங்கு ஒலாந்தக் கிழிவு கோடி | 1க்கு | மொக்கா பத்தாக்கு | | 92 ஆக |
| காரிக்கம் நெடுமுழம் | ,, 1க்கு | ,, | ,, | 120 ஆக |
| சலவை நெடுமுழம் | ,, 1க்கு | ,, | ,, | 130 ஆக |
| பச்செ காப்பி விதை விலை முக்கா மணங்கு | 1க்கு | ,, | | 12 ஆக |

முக்கா மணங்குக்கும் நம்முடைய மணங்குக்கும் பாரத்துக்கு பார்க்க (விட) இரண்டு மணங்கு குறைச்சலாய் பாரமென்று சொன்னதுமல்லாமல் அவ்விடத்துபாரம் 15 மணங்கு கூட்டுகிறது என்று சொன்னான்.

| | | | |
|---|---|---|---|
| அகிறு மணங்கு 1க்கு | | மொக்கா பத்தாக்கு | 162½ ஆக |
| கச்சா சொரசம் ரூபா விலை | | | |
| இங்கிலீஷ் மணங்கு | 15 | நாட்டு பத்தாக்கு | 56 ஆக |
| சக்கரை மணங்கு | | பத்தாக்கு | 3½ ஆக |
| வெள்ளீயம் மணங்கு | 15 | பத்தாக்கு | 5½ ஆக |
| துத்திநாகம் ,, | 15 | ,, | 4½ ஆக |
| அரிசி ஒரு தமன் ,, | | மொக்கா பத்தாக்கு | 12 ஆக |

மங்கான் ரெண்டேகால் பச்சா மணங்கு ஒரு தமன் கணக்கு கூட்டிக் கொள்ளுகிறது.

| | | | |
|---|---|---|---|
| மஞ்சள் மொக்கா பாரம் | 15 | மொக்கா பத்தாக்கு | 60 ஆக |
| முண்டு மொக்கா பாரம் | 15 | ,, | 60 ஆக |
| மொளகா மோரூரு மணங்கு | 15 | ,, | 14 ஆக |
| சந்தனக்கட்டை மொக்கா பாரம் | 15 | | 62 ஆக |

இந்த படிக்கு மெசாக்காவிலே பிப்ரவரி பங்குனி மாதத்திலே வித்தது 1748 ஆ மார்சு மீ மொக்காவிலே வித்த விலை எழுதினது.

இப்போ மனோதாம் மேஷதர் (Mynher Teupezel) துரையவர்களுடைமை முதலானதெல்லாம் கொண்டுவந்து நாகப்பட்டணத்திலே வைத்துக்கொண்டு கொடுக்கிற சாடையாய் காணவில்லை. ஒலாந்தக்காரருக்கும், நம்முடையவர்களுக்கும் சண்டையாயிருக்கிற சாடையானபடியினாலே ஈரெட்டு சாடையாய் சொல்லுகிறான். அவன் வசத்திலே நம்முடைய பச்சை கட்டு விலைகொடுத்துயிருக்கிறது; வித்த விலை பார்த்தால் ஒன்று நாலைந்து காணுது சுவாமியினுடைய சித்தம். எப்படியோ பணம் வருமோ வருதோ தெரியாது. அவர் சித்தமிருந்தால் நமக்கும் வரும்.

இன்னைய் காலையில் துரையவர்கள் முசியே பாரதி செத்துப்போன தற்கு ஒப்பூசைபடியாமலிருந்தார்கள்; எதினலே சேதி வெளியாகபோகு தென்று இனிமேல் நிறுத்தக் கவையில்லையென்று சொல்லுகிறபடியினலே இன்றையதினப்படித்து சுதந்தரத்தார்களுக்கு அது சமஸ்தான பேரும் கோவிலுக்குப் போய்வந்தார்கள்.

மற்றப்படி முறுதுசல்லிகாணு (Murtazalikhan) க்கு முன் 3 மாதத் திற்கு முன்னே 500 குதிரை 2000 ருணுவு 200 சாலத்துமமாக்கு முஸ் தீப்பு பண்ணி அனுப்புகிறேமென்று ஷேக்கு அப்துலயிமான் மிருது பாது கமே (Miryadgot) முத்துசாமி (Muhkamad Syed) வந்து கோவிந்த ராவை கொண்டுபோன நிமித்தியம் முருதுசல்லிகான் (Murtozeali khan) காகிதமென்று தப்பு காகிதமெழுதி கொடுத்ததற்கு யதில் துரையவர்கள் நம்முடைய நல்ல மனதிற்கு மெத்த சந்தோஷப்பட்டோமென்று ஆனல் இன்னேரத்துக்குக் கவையில்லையென்று எழுதினதற்குபதில் காகிதம் இப்போ வந்ததாய் ஒன்று சிரிஷ்டித்து மிருமாதுகுமே மகம்மது சாயபும் (Miryadad & Muhamad saiyed) வழுதாவூரிலிருந்து முன்காகிதத்தை அனுப்பிவைத்தாற்போல் 500 குதிரைகளும் 2000 ருணுவ சாலதுமாக்கி 200 முஸ்திபு பண்ணிதான் உடனே நீங்கள் அனுப்பவேண்டாமென்று யெழுதினபடியினலே நிறுத்திப்போட்டோமென்றும் இனி மேலும் தேவை யிருந்து யெழுதியனுப்பினல் அப்படியே அனுப்பிவைக்கிறேமென்று உப சாரமாயெழுதியிருந்த காகிதத்தைப் படித்து காண்பித்து சொன்னதற்கு உபசாரமாய் பதில் காகிதமொன்று நம்மை தொட்டும் யாதொருக் கவை தேவை எழுதினல் அப்படிசெய்து தருகிறேமென்று உபசாரியாய் எழுதி யனுப்பச் சொன்னர் அந்தபடிக்கு நல்லதென்று வந்து எழுதி அப்துலகி மான் சமேதார் வசம் காகிதம் கொடுத்து அனுப்பிவைத்தேன்.

அப்பால் மறுபடி துரையவர்கள் அழைப்பித்து வண்டியிழுக்கிற மாடு கள் வூரிலே யெத்தனையிருக்கிதோ அத்தனைகளை இப்போதானே அழைப் பித்து இவ்வூர் பிரஞ்சுக்காரன் சாடையாய் பீறங்கி மேஸ்திரிவுத்தியோகம் இந்த மாட்டுக்குகூட விசாரிக்கிற மீசைக்கார வெள்ளைக்காரன் வசம் ஒப்பு வைத்து போடென்று சொன்னர். அவன் அதற்கு 40 மாடு வேணுமென்னறு சொன்னன் வூரிலே எங்குமில்லையென்று மீசைக்கார வெள்ளைக்காரன் கேட் டதற்கு முசியே கொர்னே துரை வீட்டிலே இரண்டு, கருவாகி வீட்டிலே ரெண்டு, அப்துலயிமான் சமேதார் வீட்டிலே நாலு படேசாயபு வீட்டிலே இரண்டு ஆக பத்து எருதுமாடுகள் இருக்கிறதென்று யெழுதிக்கொடுத்தான் அந்தபடிக்கு அவரவர் வீட்டிலேபோய் ஓட்டிவாரச்சொல்லி பெரியண்ண நயனுருடனே சொல்லி அனுப்பி வைத்தேன்.

மறுபடி துரை பதினொன்னரை மணிக்கு அழைத்தனுப்பி ஆலங்குப்பத்து சேவுகரிலே இரண்டுபேர் கலகத்துக்கு ஓடிபோயிருந்தவர்களை வாங்கிப்போட்டு மறுபடி இரண்டுபேர் சேவுகர்களை வேறே அனுப்பச்சொல்லியும், ஆலங்குப்பத்து சுண்ணாம்பு சூளைக்கு விறகும் மைத்ததும் தாஷியில்லாமல் அழைத்துக்கொடுத்து விசாரித்துக்கொள்ள சொல்லி முசியே நோகாய் (லனோவ) (Lenoe) வந்து சொன்னதின்பேரிலே சொன்னார். அப்படி 2 பேர் சேவுகரை வேறே அனுப்பி ரங்கனுதமுதலியாருக்கு விறகு சீக்கிறத்துக்கு அழைப்பித்து சூளைக்கு தாஷியில்லாமல் நடப்பிக்கச் சொல்லி ஓலையும் யெழுதி அனுப்பிவைத்தேன்.

அப்பால் சாயங்காலம் கேழ்க்கப்பட்ட சேதியென்ன வென்றால் நேற்று 17 தேதி சாயங்காலம் மேஸ்தர் புஸ்காவேன் கோந்திரமிரால் வந்தவன், நேவனும் பட்டணத்திலே யிருந்து மஞ்சகுப்பத்தில் இருக்கிற தோட்டத்துக்கு குதிரையின் பேரிலே ஏரிவரும்போது விழுந்து கன்னத்தில் நல்ல காயப்பட்டு பல்லக்கிலே போட்டுக்கொண்டு காயம் கட்டத்தக்க தாய் கோட்டையை எடுத்துக்கொண்டு போனதாய் முசியே ஷன்ஷாக்கு (Changeac) பிறகே வந்த மனயான்பாப்பானை கூடவூரிலே பிடித்து போய் சேர்த்து சாயங்காலம் விட்டனுப்புகிறபோது நடந்ததாய தன் கண்ணிலே பார்த்ததாய் இன்று சாயங்காலம் துரையவர்களுக்கு கபுரு சொன்னதாயும், அப்பால் சாயங்காலம் அந்த பிராமணன் காலையில் என் அண்டைக்கு வந்து கண்டு பேசுகிறேனென்று சொன்னதாயும் சுப்பய்யன் வந்து சொன்னான். சுப்பய்யன் இதல்லாமல் சுப்பய்யன் சொன்ன சேதி துரையவர்கள் அதற்கு பதில் எப்போ சாவானென்று சொல்லி கொண்டார்களென்று கேட்டதாயும், அதற்கு இப்போ குதிரையின்பேரிலே (இருந்து) விழுந்ததாயும் அந்தமட்டுக்கும் சொல்ல சொல்லலாமென்று மனயான் பிராமணன் சொன்னதாய் சொல்லி கோபால ஸ்வாமி புதுச்சேரியின் பேரிலே இங்கிலீஷ்காரர்கள் வந்து சண்டைபண்ணுகிற சேதிக்கேட்டதே ஒரே வார்த்தை துரையூருக்குப் போனவிடத்தில் காரியமில்லை என்று கண்டானே அதன் பேரிலே திருநெல்வேலிக்குப் போய் விட்டானென்றும், ஏகாம்பர ஐயரும், வெங்கட நாராயண ஐய்யரும், துரை யூரிலேதானே காரியமில்லாமல் உட்கார்ந்துக்கொண்டிருக்கிற சேதிவந்ததாய் சொன்னான்.

முதாமியா (Mudamiah) மோபாக்கு காகிதமனுப்பினான் அந்த சேதி துரைக்குச் [illegible]ால்ல அதற்கு பதிலெழுதிவிடச் சொன்னார்.

அப்பால் நெல் சீக்கிறத்திற்கு அழைப்பிக்கச் சொல்லி சொல்ல அப்பால் அபிஷேகபாக்கம், அரியாங்குப்பம், முருங்கப்பாக்கம் குடிகள் வரவில்லை

யென்று சொன்னதற்கு என் வரவில்லையென்று கேட்டதற்கு (நான்) சொன்னது அழிசப்பாக்கம், அரியாங்குப்பம் லாசரு குத்தகைக்காரன் ஆனபடியினாலே அவனுக்கு எச்சரித்ததற்கு அவன் சொன்னது மேலே எழுதப்பட்ட மூன்றார் குடிகளும் இங்கிலீஷ்காரன் வந்தபோது தீர்வை வைத்துக் கொண்டார்களென்றும் சொல்லிக்கொள்ளுகிறார்களே அந்த பயத்தினாலே அவர்கள் வரவில்லையென்று சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொன்னதற்கு லாசருக்கு (Lazar) சொல்ல கவையில்லை. நீ மணியக்காரரை வைத்து பார்த்து எவன் வுழுகிறானோ அவன்வசத்திலே நிலத்தை விட்டுவிடென்று சொல்லி அந்தந்த கிராமத்துக்கு தலைவறல்லோ கண்டதும் நீர் வைத்ததும், பயந்து வாரமலிருக்கிறதும், இப்பவும் அவர்கள் அழைக்கவும் கவையில்லை, வரவும் கவையில்லை, சில பேரைக்கொண்டு சுகவாசியாய் பயிரிடுகிறவர்களை கொண்டும் நடத்தச் சொல்லிச் சொன்னார் நல்லதென்று சொல்லிப் போட்டு வந்தேன்.

மதனானந்த பண்டிதர் நேற்றையப்போலே மதாபமழைக்கிறான் என்று காலமை மணிக்குப் போனவன் ஏழுமணி வேளைமட்டுக்கும் போனவன் என்னமோ அந்தரங்கம் பேசிக்கொண்டிருந்து போட்டு வந்தான். நேற்று இப்படி நான் பேசிவந்து உச்சாகத்துடனே இன்று சாயங்காலமட்டுக்கிருந்தான். இன்று சாயங்காலம் போய்வந்த பிறகு நேற்றியப்போல உச்சாகத்தைக் கண்டும். அந்தசாடைகளின்மேல் விசிதமாக வேண்டியது.

விபவ ஷு ஐப்பசி ௴ 19 உ க்கு 1748 ஒக்தோபர் 31 உ குருவாரம்

இற்றைநாள் காலையில் துரையவர்களிடத்தில் போனவிடத்திலே துரையவர்களழைத்து ஆம்பிள்ளை போடுகிற பொன்காப்பு 3, 4 ஜோடு அகப்பட்டால் விசாரித்து வாங்கிவாயென்று சொன்னார் அகப்படுகிறது பிரயாசம் ஆகிலும் விசாரித்து சொல்லுகிறேனென்று சொல்லிப்போட்டு வந்தேன்.

இன்றையதினம் கேழ்விபட்ட சேதியென்னவென்றால் அல்லிகான் வூருக்குப் போகவேணுமென்று போய் கேட்டதற்கு அவருக்கு சம்பளம் ரூபாய் 50 க்கு பல்லக்கு சிலவுகூட நடத்தவும் சொல்லி தைமாதம் பிறந்ததும் நாகப்பட்டணம் கூடக்கூட்டப்போகிறோம். அப்போ அதுக்கெல்லாம்கூட இருந்து சண்டைபண்ணி ஆனபிறகு வேணுமானால் நீர் வூருக்கு போகிறேனென்று சொன்ன சேதி கேழ்விபட்டு, இன்று இரண்டு மணிவேளைக்கு மதாம் துப்ளெக்சு காகித மோகரும்பண்ண கேழ்கிறார்களென்று துரையவர்கள் பெரிய மோகரு சேவுகன் வாங்கிப்போனானப்போ எனக்கு தோன்றிய

தென்னவென்றால் இது துரை குமாரர் சமேசே நீங்கள் வைத்திருக்கலாவ தென்னஎன்று யேதாகிலும் வெளிமெறட்டு மெறட்டுவான். பாப்பான் மதனாந்த பண்டிதன் சொல்லிக்கொண்டு திரிகிறதும் நான் பிறப்பே ஒருத்தர் முகாந்திரமாக காகிதமெழுதி எனம் பண்ணி கொள்ள தக்கதாக திருப்புகிறேமென்று இவனும் கண்ணு பின்னையென்று சொல்லியிருப்பானென்று தோதின்படிக்கே அந்தமுத்திரையைத்தான் வைத்துக்கொண்டு மதனாந்தபண்டிதனை அழைப்பித்து இனிமேல் துரையவர்கள் கணக்கன் வெள்ளைக்காரன் கையிலிருக்கிறது. அங்கே முத்திரை போடுகிறபோது, அங்கே போய் முத்திரைபோட்டுக்கொள்ளுங்களென்று சொன்னேனென்று பாப்பான மதனாந்த பண்டிதன் வந்துச்சொன்னான். எப்போதுமப்படித்தானே அவசரமாய் 10, 15 காகிதம் இராத்திரி பகல் கூட எழுதினால் கொண்டுவந்து வைத்துக்கொண்டு முத்திரைப் போட்டு திரும்பியும் கொடுத்துவிடுகிறதும் அப்படியிருக்க இதென்ன ஒரு பேச்சு போலே மதாம் சொன்னால் நீரும் சொல்ல வந்தீரென்று சொல்லிப்போகச்சொன்னேன்.

மற்றபடிக்கு கொஞ்சம் தூக்கலும் தூளியுமாகவே யிருந்து வேறே சேதி கேழ்விபடவில்லை.

**விபவ ஞூ ஐப்பசி மீ 20 உ க்கு 1748 ஆ நொவம்பர் மீ 1 உ சுக்கிரவாரம்**

இற்றைனாள் காலந்தாலே ஐந்து மணி நேரத்துக்கெல்லாம் மழை துவக்கி இராத்திரி 15 நாழிகை மட்டுக்கும் நல்ல மழையாய் பேய்ந்தது. ஆனபடியினாலே வெளியே நான் புறப்படவில்லை; பின்னை ஒரு அதிசயங்களுமில்லை.

**விபவ ஞூ ஐப்பசி மீ 21 உ 1748 நவம்பர் மீ 2 உ சனிவாரம்**

இற்றைனாள் காலையில் துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே முசியே தெலார்ஷ் (Delarche) வந்து என்னுடனே சொன்ன சேதி என்னவென்றால் வெளியிலேயிருந்து நெல் கொண்டுவருகிறவர்களுடைய மாடுவண்டியை விசாரிக்கிற மீசைக்கார வெள்ளைக்காரன் எட்டு மாட்டை பொருக்காய் பிடித்து வண்டியிலே கட்டுகிறதற்கு பழக்குகிறானாம். இப்படி பிடித்தால் வெளியிலே மாடுகளையெல்லாம் பிடிக்கிறார்கள் என்று கபுறு சொன்னால் அரிசி நெல் ஊருக்குள்ளே கொண்டுவரமாட்டார்களே. இது நிமித்தியம் துரையை கண்டு பேசவந்தேனென்று சொன்னேன். அப்பால் சமயமில்லாமல் போனதால் அழகப்பமுதலியாருடனே சொல்லி, என்னுடனே சொல்லி துரைக்கு எச்சரித்து எருதுகளை வாங்கிக்

கொடுக்கத்க்கதாக சொல்லச்சொல்லி போனுரென்று அழகப்பமுதலியார் என்னுடனே வந்துச் சொன்னுர். நானும் இது கொஞ்சகாரியம் அங்கே யிருக்கிற அவசரம் தெரிந்திருக்கிறபடியினுலே விலேயாகத்தானே தீர்த்து வாங்கிக்கொடுப்போமென்று மனதிலே வைத்துக்கொண்டு அப்படியே எச்சரிப்போமென்று போகச்சொல்லி அப்பால் உட்கார்ந்திருக்கச்சே துரையவர்கள் வந்து மழை நன்ருய் பேய்ந்ததே தானியம் வரவில்லேயா யென்று கேட்டார் வருமென்று (நான்) சொன்னேன். இப்போ 400 கரிசைமாத்திரம் வாங்கச் சொன்னேனே அதற்கென்ன பண்ணினு யென்றுகேட்டார். (நான்) நேற்று இராத்திரிதான் காகிதம் வந்தது அவர்களெழுதியிருக்கிற விலேயைப்பார்த்தால் சின்னபடி 5 படி விழு கிறது அப்பால் நீங்களெப்படி எழுதச் சொல்லுகிறீர்களோ அப்படி எழுதுகிறேன் என்று சொன்னதற்கு (துரை) பெரியபடியாலே மூணுபடி விழுக்காடு கொடுக்கிறதானுல் பணம்காசு கொடுத்தனுப்புகிருேமென்று எழுதிப்போடு மென்று சொன்னுர். நல்லதென்று (நான்) சொன்னேன்.

அப்பால் (துரை) கிருமங்களுக்கு மணியக்காரர்களே நேமித்தனுப்பி ஞயாவென்று கேட்டார். நேற்றியதினமே அனுப்பிவைக்கலாமென்று யிருந்தேன் மழையாயிருந்ததே அதைபற்றி நாளேயதினம் போகச் சொல்லி, சொல்லிவிடுகிறேனென்று (நான்) சொன்னேன். அபிஷேக பாக்கத்திலே இப்போ சிறிது பயிராயிருக்கிறது, சிறிது அறு ப்பாயிருக்கிறது. அந்த குடியானவர்களில் இரண்டொருத்தர் வந்து இருக்கிருர்கள் மற்றபடிக்கு பெரிய செட்டிகள் யாரும் வரவில்லே என்று சொல்லி அப்பால் அரியாங்குப்பமும் அப்படிதானென்று சொன்னதற்கு முசியே லஜாரை (**Lazar**) அழைப்பிக்கச்சொல் என்று சென்னுர். லஜாரும் (**Lazar**) சின்னதுரை வீட்டிலேயிருந்து வந்தவுடனே போய் நின்றதற்கு அபிஷேகபாக்கத்துக் குடிகள் ஏன் வரவில்லேயென்று, அரியாங்குப்பத்துக் குடிகள் ஏன் வரவில்லேயென்று கேட்டதற்கு அவர் சொன்னது. அவர்கள் இங்கிலீஷ்காரனுக்கு 250 ரூபாய் நதிர் வைத்து சந்தித்து மாடுகளேயும் பயிர் மற்றதுகளேயும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அரியாங்குப்பத்திலே அரிசிக் கவுண்டன் என்று கிருஸ்தவனொருத்தனிருந்தான். அவன் தமிழ் மார்க்கமாய் நெத்தியிலே கொம்புபோட்டுக் கொண்டு பதிதனுய் போனுன் அவன்தான் இவர்களேயெல்லாம் கலேத்துக்கொண்டுபோய் சந்திக்க பண்ணி வைத்ததும் கிருஸ்தவர்களெங்கே போயிருக்கிரார்களோ அங்கேயெல்லாம் கிருஸ்தவர்கள், இங்கிலீஷ்காரர் சேவுகர்களே கூட்டிக்கொண்டுபோய் காட்டிக் கொடுத்தும் அலங்கோலம் பண்ணிவைத்தானென்றும் முருங்கப்பாக் கத்துக்குடிகளேகூட அழைத்துக் கொண்டுபோய் சந்திக்கபண்ணினது

இப்போ தேவனும் பட்டணமே போயிருக்கிறார்களென்று சொல்லி இது நிமித்தியம் அபிஷேகபாக்கத்துக்கு குடிகள் பயந்துக்கொண்டிருக்கிறார்களென்றும் நீங்களழைப்பிக்கச் சொன்னால் அழைப்பிக்கிறோமென்று சொன்னார் அதற்கு துரை அவர்கள் சொன்னதும் அபிஷேகபாக்கத்து சம்மதி முசே தூலோராவுக்கு (Du!eureçs) பணமெல்லாம் சேர்ந்ததாவென்று கேட்டதற்கு லாசாரு சொன்னது (Lazar) போன வருஷத்திய பணமெல்லாம் சேர்ந்தது மல்லாமல் பின்னையும் இரணூறு முன்னூறு வராகன் அதிகமாய் முசியே தூலாராவுக்கு (Dulaurers) செலுத்தி வைத்தேனென்று சொன்னதற்கு மூன்று வருஷத்திய சம்மதியினனம். அந்த வியாச்சியம் தீர்ந்ததாய் அது பின்னால் சொல்லுகிறேன். இப்பவும் அந்த ரெட்டிகளை நீ அழைப்பித்து கணக்கு தீர்த்து உண்டான பணங்களை வாங்கிக்கொள். நாங்கள் அவர்களை அறியோம், நியாயங்காட்டும் உத்தரிகிறவனென்று அறிவோம். அப்பால் அவர்களை இங்கிலீஷ்காரர்கள் சென்னப்பட்டணம் முசியே லபுருதோனே (La Bourdonnais) போய் வாங்கினபோது எந்த வர்த்தகன் எந்த குடியானவன் எந்த சேவுகன் போய்க்கண்டான் ஒருத்தர் எட்டிப் பாராதே போனார்கள். சென்னப்பட்டணம் வாங்கி ஆரேழுமாதத்திற்குப் பிறகு ஒவ்வொருத்தனாய் கொஞ்சம் பேர் வந்து சேர்ந்தார்கள். அப்படியிருக்க இவர்களந்தமட்டுக்கும் பொருக்காமல் போனாலும் சண்டை பண்ணுகிறவன் சாடை அறிகிறதய்க்கூட இல்லாமலும் யெப்படி செய்தார்கள் என்று கேட்டதற்கு மேஷமீனம் எண்ணிக்கொண்டிருந்ததற்கு அப்படிபட்டவர்கள் நம்முடைய கிட்ட குடுத்தனம் பண்ணவேண்டிய கவையில்லை. இப்பவும் அவர்களை அழைப்பித்து கணக்கு தீர்த்துக்கொண்டுபோகச் சொல் என்று சொல்லி என்னைப்பார்த்து கிராமங்களை நீ மணியக்காரரைப்போட்டு விசாரித்து பயிர் எத்திவையென்று சொல்லி உடனே அந்த மணியக்காரரை எனக்கு காண்பித்து அனுப்பிவையென்று சொன்னார். (நான்) நல்லதென்று சொல்லி இப்போ வெளிசீமையிலே இருக்கிறதற்கு நம்முடைய சீர்மையிலே நிலங்கள் போதாதேயிருக்கும். ஆனால் ஒரு மாதம் இரண்டுமாதம் செல்லும் குதிரதக்கதாகவென்றும், தாணியப்ப முதலியாரும் இப்புறத்திலே சாலையிலே தண்டிலே வந்தபேர்கள் வயணமெல்லாம் யெழுதியிருக்கிறது துரையவர்களை தொட்டு என்னவிருக்கிறது. அங்கே கண்டு பேசினால் அதன் பேரிலே ஆராரை அழைப்பிக்கலாமோ அவரவர்களை அழைப்பிக்கலாமே அல்லாமல் மற்றப்படி அம்மாள் பேச்சேயல்லாமல் அழைப்பித்தால் துரையிப்போ என்ன சொன்னாலும் நம்பபோகாது. அவன் பேர் ஒரு பொடி வைத்தால் இப்போ சொன்ன பேச்சு என்ன கவையிருக்குமென்று சொன்னார். உங்களுக்கு எப்படி யுக்தமோ அப்படி செய்கிறதானல்லவோ

என்று சொன்னதற்கு அப்படித்தான் செய்கிறேனென்று சொல்லிவிட்டு அனுப்பிவைத்துக்கொண்டு போனார்கள். அப்பால் துரை கப்பலைப்பார்க்க கடற்கரை கொத்தளத்தே போனார். நான் பாக்குக் கிடங்குக்கு வந்தேன்.

சாயங்காலமான ஏழு மணிக்கு முன், மூன்று மாதம் முசியே துய்மா வுக்கு (Dumas) அபுதல்லிகான் (Saf dar ali Khan) அனுப்பினாற் போல் நாசர்சங்கு (Nazer Jang) அண்டையிலேயிருந்து ரத்தின மிழைத்த கட்டாரி, கத்தி, ஈட்டி திரக்க சுகமான முதலான சிறேமமாய் கூட வாங்கி அனுப்பி நாலத்துக்கு சிலவு உள்ளதற்கு கொடுக்கிறோமென்று யெழுதி சூரத்து (Surat) க்காசிதுகள் கையிலே காகிதம் கொண்டுபோகிற வர்கள் கொடுத்து இமாம் சாயபு அண்டைக்கு அனுப்பியிருந்ததற்கு பதி லுத்தரவு வந்தது. அந்த காகிதங்களை கூட்டி வாங்கி வைத்துக்கொண்டு பாப்பானை அழைப்பிக்கச்சொல்லி சொன்னானும். காட்டும் அவன் வந்தவன் என்னைக்கூட அழைத்தான். நானும் கூடபோனேன். அப்போ துரையவர்கள் காகிதம் ஆடிக்கொண்டிருந்தார்கள். நாட்டிக் கூடயிருந்தாள் என்னை பார்க்கவில்லை. பாப்பானை மாத்திரம் பார்த்தாபோலே பிராமணன் வந்தா னென்று சொன்னான்; தலையெடுத்துப் பார்த்து ரங்கப்பிள்ளை கையில் அந்த காகிதமையைக் கொடுத்துவிடென்று சொன்ன மாத்திரத்திலே அவனந்த மையை சந்தாபச் சேருவைக்காரன் கையிலே கொடுத்துபோட்டு மெத்த கோபத்துடனே உள்ளே போய்விட்டான். அவன் என் கையிலே கொடுத்தாபோலே துரை என்னைப் பார்த்து நாமிவ்விடத்திலேயிருந்து அனுப்பின காகிதக்காரர்களாவென்று கேட்டார். நான் அரிந்திருந்தாலும் அரியாததுப்போலே வந்தவர்களை நான் பார்த்தல்லவோ பேசலாமென்று சொன்னதற்கு அவர்களை அழைப்பித்துக்கொண்டு பேசி அவ்விடத்து சேதிகளைக் கேட்டு தெரிந்துக்கொண்டு அப்பால் கணக்கு ரங்கப்பிள்ளை இருக்கிற கிடங்கிலே போய் மொழுகுதிரி கொளுத்தச்சொல்லியும், மத னுந்த பண்டிதனை காகிதங்களை படிக்கச்சொல்லி கேட்டுக்கொண்டிருக்கும் போது சாந்தப்பன் வந்து மதனுந்த பண்டிதனை அப்பால் போய் அழைத் துச்சொன்னது. துரைக்கு எத்தனைக்கு எத்தனை காகிதங்கள் வந்தது? ரங்கப்பிள்ளைக்கு எத்தனை வந்தது? என்று கேழ்க்கச்சொன்னதுமல்லாமல் நீங்கள் திருடர்கள். மெத்த பொய் சொல்லுகிறீர்கள். அப்படிச்சொன்னால் அப்படி செய்வேன் இப்படி செய்வேனென்று சொல்ல சொன்னதாகச் சொன்னான். மதனுந்த பண்டிதன் சொன்னது துரைக்கு இரண்டு காகிதங் களும், இரங்கப்பிள்ளைக்கு இரண்டு காகிதங்களும் நாங்கள் பொய் சொன் னால் பிள்ளை யாரைக்கொண்டாவது பத்திரமாய். தெரிந்துக்கொள்ளச் சொல் என்று சொல்லி அனுப்பினான், அப்போ என்னைப் பார்த்து இந்த

பெண் துரைதனத்திலே ஒருத்தரும் நிர்வாகம் பண்ணுகிறதாய் காணயில்லை. தனக்கு இந்தனை அக்கசு (அக்கரை) இருக்கும்போது புருஷனுடனே சொல்லி உம்மை தள்ளிப்போட்டு பிள்ளையாரையாகிலும் வைத்துக்கொண்டு காரியத்தை பார்கிறதுதானே, இதென்ன பொழுது விடிந்தால் அந்திபட்டால் நன்முப்பதும் துக்கமென்று சொன்னார். அதற்கு (நான்) ஒருத்தரையும் வெருக்க கவையில்லை. கிறகசாரத்தை வெறுக்க வேணுமென்று சொல்லிப்போட்டு அப்பால் காகிதம் தலப்பைச் சொல்லும் துரைக்கு சொல்லிபோடுவோமென்று சொன்னேன். இவன் பெற்ற தாயை ஒழ்த்தவனென்று நான் நன்றாயறியாவிட்டாலன்றோ சொன்ன உத்திரவுக்கு அப்படி இப்படியென்று சொல்லுவேன். இவன் தகப்பனுக்கு பிறந்தவனல்லவென்று நன்றாயறிந்திருக்கிறபடியினாலே, ஒன்றுமுத்தாரம் சொல்லாமல் கிரகக்கார மாணியத்தை வெருக்கவேணுமென்று சொன்னேன் எப்படி பாப்பானிருந்துக்கொண்டு இந்தபடி மதாமனால் சொல்லுகிறான் மன்னாலேயாகாதென்று சொல்லிப்போடுகிறதுதானே? என்ன பொழுது விடிந்தால் அந்திப்பட்டால் இந்த போராட்டம் என்று அவன் பண்ணுகிற காரியத்தை உள்ளடக்கி அனேகம் சொல்லிவந்தான் நான் யோசனை பண்ணி பிள்ளை சாவகாசமாய் நீங்களும் நானும் பேசவேணும் இப்போதுரையவர்கள் இன்னம் வரவில்லையாயென்று கேழ்ப்பாரே ஆனபடியினாலே சீக்கிறத்திற்கு படித்து சொலிலென்று சொன்னேன். அப்பால் காகிதந்திலே யெழுதியிருக்கிறதாய் சொன்னதுயென்ன வென்றால் [ ]

விபவ ஞு ஐப்பசி மீ 22 உ க்கு 1748 நவம்பர் மீ 3 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டிற்கு போன விடத்திலே சந்தாசாயபு (Chanda Sahib) பெண்சாதி தன் மகளை சாத்துகடை (Satjhar) இர்ராஜத்து காரனுக்கு கொடுத்திருந்த பெண், பெண்பெற்றாளென்று மூபாக்கு பாதி காகிதமெழுதி அந்த சடங்கு நிமித்தியம் சாத்துகடைக்கு போய் அங்கே பிள்ளை பிறந்ததற்கு சிறிது சடங்கு செய்யவேண்டியதுண்டு அந்தபடிக்கு அங்கே நடத்திவைத்து அவ்விடத்திலிருந்து புதுச்சேரிக்கு வருகிறோம் அது நிமித்தியம் ராஜாசாயபுவும் (Raja Sahib) இராஜாசாயப்பு மகனையும் அனுப்பிவைக்க வேணுமென்று பின்னையும் உபசாரமெழுத தக்க சாடையாய் யெழுதி அனுப்பின. காகிதத்தை படித்துப் பார்த்து அந்த மத்தலப்பை துரை அவர்களுக்குச் சொல்லி இராஜோ பண்டிதர் கூடவந்து நின்ற ராஜாசாயபு ஊருக்குப் போய் மறுபடி வருகிறோமென்று உத்தாரம் கேழ்க்கிறாரென்று சொல்ல அதற்கு துரை அவர்கள் சொல்லுகிறது. இவ்விடத்தைபார்க்கிலும் வந்தவர்களுடைய. சீர்மை என்ன

இவர்களுக்கு சுதந்தரீகமாய் நடக்கிற சர்க்கார் ஆனபடியினாலே இந்த யிடம் அவர்கள் சொந்த யிடமான படியினாலே இவ்விடத்திற்கு வருகிறதே அழகென்று சொல்ல அதற்கு இராசோ பண்டிதன் சொன்னது. வந்தவாசியிலே இவர்களுக்கு மத்தானது அசமாதானமாய் நடக்கிறது. அதெப்படியென்றால் இவர்களுக்கு காகிதங்கள் வந்தாலும் மனுஷர்கள் வந்தாலும் சோதனை சாப்பாடு கொண்டுபோகிறதுகூட சோதித்து விடுகிறதினால் அப்பால் எந்த எந்த காரியமும் மந்தாயிருக்குமோ அத்தனை சங்கடமாயிருக்கவேணும். இதின் பேரிலே யோசனைபண்ணிக் கொள்ளுங்கள். ஆனபடியினாலே வந்தவாசியிலே சற்வாத்மனுக இருக்கிறதில்லையென்று சொல்லி அந்த-சேதி துரையவர்கள் கேட்டு என்னைப்பார்த்து, 7 8 நாளைக்கு முன்பாக நீ சொன்னாயே அது சரிப்பட்டு போகிறது. ஆனால் நீ சொல்லு வந்தவாசியிலே இருக்கிறதற்கு மனது சம்மதிபடாமல் சாத்துகடைக்கு (Satzhar) போரோமென்று ஒரு பகளுப்போட்டு அங்கேயிருந்து பிள்ளை எங்கேயாகிலும் போக நினைக்கிறதாக தோணுகிறது என்று சொல்லி அல்லவென்றால் சாற்றுக்கடையிலே யிருப்பார்கள் மேலே காணுமென்று சொன்னார். அதற்கு உத்தாரம் துலுக்கர் ஜாதியிலேயும், ஜாதிதமிழ ஜாதியிலேயும் சரி மருமகன் வீட்டிலே பெரிய மனுஷர்களுயிருக்கிறார்களென்று சொல்லி பிள்ளையும் ராஜா சாயபு (Raja) பெண்சாதி வழுதாவூரிலே இருந்தவளாப்பாலே போகவேணுமென்கிற நினைப்பில்லை அவ்விடத்திற்கு அல்லிநக்கும் சாயபு (Ali Naqui) வந்து பெண்டுகளானபடியினாலே இங்கே யிருந்தால் நபாபு மனுஷர்கள் குதிரை சவாரிகளென்று வருகிறதாயும் ஒரு பிறமமை உண்டாக்கி அங்கே யிருந்தவர்களை அப்பாலே வந்த பாருதை கொண்டுபோனான். வழுதாவூரிலே இருக்கிறதற்கு சம்மதமில்லாமல் பெருமுக்கலிலே போயிருக்கிற தாய் யோசனைபண்ணி இருந்தவர்களை தக்கா சாயபும் (Taga) அல்லி நக்கிம் சாயபும் (Ali Nagi) இப்படி கொண்டுபோய் சேர்ந்து அப்பால் மமுதலிகான் (Muhamad Ali Khân) மகன் கல்யாணத்திற்குள்ளே கூடவந்த பந்துக்களை கோட்டைக்குள்ளே விடாமல் பாதஜனங்களாய விட்டும் அதுகள் கூட ரொம்ப அலங்கோலமாய் இப்படி யெல்லாம் தக்கா (Taga) சாயபு நடப்பித்து போட்டபடியினாலே மமுதலிகான் (Muhammad Ali Khân) கூட வந்தவாசியிலே இருக்கிறதில்லை கெட்டியாய் பாருங்கள் என்றும் நான் சொல்லுகிற விசேஷம் அபத்தமென்கிறது நிஜமென்கிறது. இனி மேலே தெரிய வருமென்று சொல்ல அந்தபடிக்கு துரையவர்கள் இந்த பேச்செல்லாம் கேட்டு நான் ராஜாசாயபை (Raza) நான் சந்தா சாயபு கையிலே ஒப்புவிக்கிறதேயல்லாமல் மற்றபடி அவரவரு றெதற்குமுன்னமே அனுப்பதக்கதில்லை என்று சொல்லிப்போட்டு தாம் போய் நேற்று இராத்திரி அபரங்காபாதியிலிருந்து (Aurangabad)

அனுப்பின காகிதத்திற்கு பதில் தாம்தானே பிரஞ்சு யெழுத்திலே எழுதி அந்தபடிக்கு மார்சிலே எழுதிவைப்பதற்கு முசியே திலார்சை (Dilarche) அழைத்தனுப்பி அவன் கையில் காகிதத்தைக் கொடுத்து மதனுந்த பண்டிதன்கையிலே யெழுதிவைக்க சொன்னபடிக்கு முசியே திலார்சை (Dilarche) எழுதிவைத்த வயணம். [ ]

விபவ ஸு ஐப்பசி மீ 23 உக்கு 1748 ஆ நவம்பர் மீ 4 உ சோமவாரம்

இற்றைனாள் காலத்தாலே வல்லூர் அந்தணனை, யானத்து கும்பினீர் வைக்கல், பிரபுதரிசனத்துக்கழைத்துப்போய் அவருக்கு பேட்டி பண்ணி வைக்கும்போது கொண்டுபோன நதிர்: யானத்து ஐம்பது குஞ்சனன் நெடு முழம் 2. லேங்கு சம்பு 5, ரொக்கம் நக்ஷத்திரவராகன் ஐம்பது, மேலே எழுதப்பட்ட 2. நெடுமுழத்துக்கு கிறயம் வராகன் நாற்பத்தஞ்சி; புசம் ஐந்து கடுவிராகன் 10 ஆக விராகன் ரொக்கம் உள்பட 105 விராகனுக்குக் கொண்டுபோய் வைத்து யானத்து பெத்திரியிலே, பிரான்சு கும்பினீரின் கிழே 25, 26, வருஷமாய் விசேஷிக்கிற சேவுகன் முன் இருந்த குவர்னதோர்களுக்குள்ளேயும் இனிமேல் இருக்கிற குவர்னதோர்களுக்குள்ளேயும் உம்மைபோலே இராச்சியமெல்லாம் கீர்த்தி நிருத்தி ரெண்டாம் இராஜர் இந்த இராச்சியத்துக்கென்று பேர் பெற்றீர். உம்மைப்போலே பிராஞ்சு வமுசத்திலே ஒருத்தர் உண்டாகமாட்டார்கள். உம்முடைய கீர்த்தியினாலே நாங்கள் வந்த அருபது காதவழியும் எங்களுக்கு பயந்து சகல மரியாதைகளும் பண்ணிய வேடிக்கையை நான் என்ன சொல்லப்போகிறேன். இப்படிப் பட்ட கீர்த்தி உம்மை பார்க்க என் மனது யிருந்து பார்த்தேன். இனிமேல் என்னைப்போலே அதிஷ்டசாலி ஒருத்தருமில்லை என்று சொன்ன மாத்திரத்திலே பிரபுவுக்கு பெரும் சந்தோஷம் வந்து நகைத்து நீர் புறப்பட்டு எத்தனை நாளானதென்று கேட்டார். இன்றைக்கு முப்பது நாளாச்சுதென்றும், புறப்படும்போது இங்கிலீஷ்காரர்கள் வந்து சண்டைபண்ணுகிறார்களே போகவேண்டாமென்று சமஸ்தமான பேரும் சொன்னார்கள். உம்முடைய தைரியத்தை தைரியபராக்ரமும் அதிர்ஷ்டயோக கீர்த்தியினுடைய காரியங்களெல்லாம் நன்றாய் நான் அறிந்து யிருக்கிறபடியினாலே நான் போகிறதற்குள் இங்கிலீஷ்காரர்கள் நிர்வாகமில்லாமல் ஓடிப்போவார்கள். அந்த சந்தோஷத்தையும் அதினாலே உமக்கு பெரு ப்ரதிஷ்டை வரப்போகிறது. அந்த சந்தோஷமும் நான் பார்க்கபோகிறேனென்று எல்லாருக்கும் சொல்லி வந்தேனென்று சொன்னமாத்திரத்திலே துரையவர்கள் பின்னையும் சந்தோஷபட்டு நகைத்து பாக்கு வெற்றிலை பன்னீர் கொண்டுவரச்சொல்லு என்று சொல்லி நீ முன்னே முசியே கொடுத்தோருடனே கூட ஒருதரம் இவ்விடத்

திற்கு வந்தாயா வென்று கேட்டார். யானந்து முசியே பெத்திர கொடுத்தோம் வந்து உண்டாக்கு என்னையும் உத்தியோகத்திலே வைத்து அப்போ இவ்விடத்திற்கு வந்தபோது நானும் கூடவந்தேனென்று சொல்லி இப்போ யானத்திலே இருக்கிற முசியே சாம்பிரேன் (Sainpray) என்கிறவன் யெழுதிக் கொடுத்த காகிதத்தை கையிலே கொடுத்தான். அந்த காகிதத்தை துரையவர்கள் படிக்கும்போது நகைத்துக் கொண்டபடி சாடையிலே முசியே சாம்பிரேன் (Sainfary) தன்னையல்லாமல் துரையவர்களுக்கு காகிதம் எழுதிக் கொண்டு அவருடைய உத்திரவு அழைப்பித்துக் கொண்டு போகலாமென்கிற காரியமகாரத்தினாலே இவன் முசியே ஷாவசிக்கு (chaisy) துலுக்கர் கபுரும் மாராட்டியர் கபுரும் விசாரித்து வரச்சொல்லி அந்த விசாரத்தின் பேரிலே செத்துப்போய் விட்டானென்று இவன் வர்த்தகர்களுக்கு கடன் கொடுக்க வேணுமென்றுப்போலேயும் இன்னம் என்னபென்னமோ பிராது துரையவர்களுக்கு யெழுதினதாய் முசியே பெடுதலமிக்கு (Barthélemy) சென்னபட்டணத்திலேதானே கொண்டுவந்து கொடுத்த காகிதத்திலே தானே முசியே சான்பிரே தன் (Sainfray) பேரிலே சாடையெல்லாம் சென்னபட்டணத்திலே' முசியே பெடுதலமி (Barthilemy) சொல்லக் கேட்டேன். துரையவர்கள் காகிதத்திலேயும், அப்படியேதான் யெழுதியிருக்குமென்று முசியே பெடுதலமி (Barthilemy) சொன்னதாக வல்லூர் அந்தணன் என்னுடனே சொன்ன சாடை சரிபட்டுதென்று எண்ணிக் கொண்டு அப்பால் துரை காகிதம் படிக்கும்போது பாக்கு வெற்றிலே, பன்னீர் வந்த உடனே துரை தம்முடைய கையினாலே கொடுத்து முபார்க்கு மேற்செபுபித்து ஒபரிகாரமென்று உபசாரம் சொல்லி ஆசுவதமாய் போயிரு சாவகாசமாய் பேசிக்கொள்ளுவோமென்று சொல்லிப்போகச் சொன்னார். அங்கேயிருந்து மதாம் துப்ளேக்சு அண்டைக்குப்போய் ஒரு நெடு முழம், பத்து விராகன், ஆறு சீட்டி பன்னிரெண்டு வராகன், நாலு அஞ்சம்பு 8 விராகன் வகத்துக்கு 30 விராகனுக்கு அதனமாயுண்டு அதைக்கொண்டு போய் வைத்து பேட்டி பண்ணிக்கொண்டு பாக்கு வெற்றிலே, பன்னீர் முதலானது வாங்கிக்கொண்டு நம்முடைய வீட்டுக்கு கூடவந்து பகலுக்கு மேலாக முசியே கில்லியர் (Guilliard) முசியே போலோ (Boyelleau) முசியே லொருவாய் (Lauvray) முதலானபேரை சந்திப்பு பண்ணிக் கொண்டு வாரேனென்று அனுப்பிவைத்துக்கொண்டு விடுதிக்கு லக்ஷிமி நாயகர் வீட்டே போனார்.

அப்பால் நேற்று கூனிமோடு, வழுதாவூர் அத்து, அழிச்சபாக்கமட்டுமிருக்கிற கிராமங்களெல்லாம் சேர்த்து எழுதிவரசொன்னபடிக்கு பிராஞ்சு வார்த்தையிலே எழுதிக்கொண்டுபோய் கொடுத்து பாகூர் சாகீர் முதலான கிராமங்களுக்கு பேர்சு கேட்டார், அது விசாரித்து சொல்லவேணுமென்று

3, 4 (நாள்) செல்லுமென்று சொன்னதற்கு நல்லது விசாரித்து வந்து சொல்லென்று சொன்னார் நல்லதென்று சொல்லிப்போட்டு வந்தேன். அப்பால் பகலில் சாப்பிடும்போது 21 பீரங்கிப்போட்டார்கள். இன்று இராத்திரிக்கு முசியே பிரியேல் (Friell) விருந்தும், அப்பால் கூத்தும் துருசு பண்ணுகிறார்களென்று சொன்னார்கள். அப்பால் இராத்திரி துரை விருந்துக்குப் போய் கூத்திலே ஆடி பனிரெண்டு மணி அடித்து ஒரு மணிக்கு வீட்டுக்கு வந்ததாய் சொன்னார்கள்.

இற்றைநாள் முசியே துக்கேனும், முசியே புசியும் (Duguesne & Bursy) கத்தி வுருவி பகலைக்கு மேலாய் சண்டைபோட்டதின் பேரிலே அவரவரை அவரவர் வீட்டிலே துரையவர்கள் திரகோமை யனுப்பி காவல் வைத்தாரென்று சொன்னார்கள்.

**விபவ ஆண்டு ஐப்பசி மீ 24 உ க்கு 1748 ஆ நவம்பர் மீ 5 உ அங்காரகவாரம்**

இற்றைநாள் காலத்தாலே துரைவர்கள் வளவுக்கு போனவிடத்தில் நடந்த சேதி துரையவர்கள் தானியம் எத்தனை நாளையிலே 100 கரிசையும் வந்து சேருமென்று கேட்டார். பத்து நாளையிலே வந்து சேருமென்று சொன்னேன். இதில்லாமல் இன்னம் 400 கரிசைமாத்திரம் அழைப்பிக்க வேணுமே அதுக்கென்ன பண்ணினுமென்று கேட்டார். வெளி விலையுஞ் சந்தமும் பார்த்தால் நாலரைபடி சின்னபடியாலே விழுகுது. அதுக்கேதாகிலும் ஆறுபடி விழத்தக்கதாகபாத்து எழுதினேன். அதுக்கு உத்தாரம் ஆறுபடிக்கு சம்மதியார்கள் போலே காணுது. ஏனென்றால் அவர்களிந்த ஊரிலே சின்ன படியாலே நாலுபடி நாலரைபடி வித்துக்கொண்டுபோகச்சே அவர்கள் ஆறுபடி விலைக்கு எப்படி நமக்கு கொடுப்பார்கள் என்று சொன்னதுக்கு கோபித்து கொண்டுபோய்விட்டார். அப்பாலும் வெளியெல்லாம் விக்கிற விலைக்கு வெளியிலே விஸ்தாரம் சிலவழிப்பு இல்லாதபடியினாலே இவ்விடத்துக்கு கொண்டுவாரார்களே யல்லாமல் மத்தபடி கொண்டு வரதக்கதில்லை. இதல்லாமலிப்போ காரருப்பு என்கிற ஞாயம் ஒன்று. இனி ரெண்டுமாசம் போனால் பொருப்பு என்கிறபடியினாலேயு மிவ்விடத்துக்கு வருகிறார்கள். இல்லாவிட்டால் இந்தபட்டணத்திலே உள்ளே நுழைகிறபோது பதுமயுகம அபிமன்னன் பேதிச்சு உள்ளே பூந்தாப்போலே இருக்கிறது. அப்பால் மறுபடி யுகத்தை பேதிச்சுக்கொண்டு புறப்பட அறியாமலெப்படியோ அப்படித்தான் அவஸ்தை மறுபடி வெளிப்படுகிறதற்கு ஆனபடியினாலே அப்படி பட்டணத்துக்கு ஜனங்கள். அப்படி வெளி ஜனங்களுக்கு கூட யிந்தப்படி அவஸ்தை யாய் சுவாமிகட்டளையிட்டாரே. ஆனாலிந்த பட்டணத்து ஜனங்கள் வெகு பாபிஷ்டர் அதிலேயும், என் பேச்சிலேயும் சொல்லத்தக்கதில்லை.

அப்படி இந்தபட்டணத்துக்கு ஜனங்கள்தான் பாபம் பண்ணினவர் களென்றால் வெளியிலேயிருந்து வாராதவர்களும் பாபம் பண்ணினவர்களா யென்றால் சகவாச தோஷமென்று யெண்ணிக்கொண்டது மல்லாமல் மாறணமாய் போகாமலும் சங்கரமாய் போகாமலும் தப்பின சாடை என்னவென்றால், நல்லாறொருவ ருளரே அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை என்கிற ஞாயத்தினலே யாரோ ஒருத்தர் நல்லவர்களு மிந்த பட்டணத்திலே இருக்கச்சே யிவ்வளவாகிலும் யெல்லாரும் தப்பி இனிமேலாகிலும் பிழைக்கலாமென்று யோசனை பண்ணி கொண்டிருக்கிறோமென்று சமஸ்தமான ஜனங்களும் சொல்லிக்கொண்டு யிருக்கிறது மப்படிதான். நடக்கிற கெதியும் அப்படிதான். அப்பால் தேவனாம்பட்டணத்திலேயிருந்த மெஸ்தர் தார்புஷ்கே (Boscawen)வென்கிற கோந்தரமினல் என்கிறவன் ஷை துரை அவர்களுக்கு காயிதம் அனுப்பிய தாகவும் அதிலே நாம் வந்து சண்டைபண்ணமாட்டாமல் ஓடிப்போய் விட்டோமென்றாப்போலேயும், பின்னையும் வெருசாய் நிந்தித்து பேசி நீரும் நீர் தேவனாம்பட்டணத்திலே வந்து குண்டுசாலை கூட எட்டி பார்க்கிறதற்கு கூட இல்லாமல் ஓடிப்போகவில்லையா என்றதுமல்லாமல் மஞ்சாகுப்பத்து தோட்டத்து மட்டுக்கும் உம்முடைய சேனையும், படைத்தலைவரும் வந்து சகலமான சாமானும் போட்டது போட்டவாக்கிலே ஆரேழு மாதம் ஓடிப் போகவில்லையாவென்றும் நீங்கள் கும்பினியாரை சேவித்த பேர்கள் நீங்கள் தான் என்ன பெரிய மனுஷர்கள் சீர்மையிலே உங்கள் பேரென்ன? நீங்கள் ராசாவினிடத்திலே என்ன மேன்பாடு பெத்தவர்களென்றாப்போலேயும் இப்படி தூஷித்து யெழுதினதாகவும் அதுக்கு ஒபிசியால்மார் மத்தப் பேர்கள் எல்லாரும் கூடி இங்கே காவல் இருக்கிற இங்கிலீஷ்காரர் களை அழைப்பித்து தங்கள் தங்கள் ராசாவினுடைய மன்னிப்பு பெற்றதையும் தங்கள்மேல் படையும் தங்களுக்கு ராசா கொடுத்திருக்கிற மன்னவர்கள் பட்டமும் அதுகளுக்கு கொடுத்திருக்கிற முத்திரையும் அதுகளுக்கெழுதி யிருக்கிற பத்தேந்தையும் காண்பிச்சு அவர்களைக் கொண்டும் காகிதமெழுதச் சொல்லி துரையவர்கள் தாங்களும் காகிதமெழுதுகிறபோது மதாமும் துரையும் தன்னை ஆலோசனை கேட்டதாகவும் தான்சிறுதுக்கு ஆலோசனை சொன்னதாகவும் காகிதங்களெழுதி அந்த சோபுதாரன் கையில் கொடுத்து தேவனாம்பட்டணத்துக்கு அனுப்பினதாக சேனு அப்துலாயிமான் சுபேதா ரன் சந்தா சாயபு குமாரன் ராசா சாயபுடனே (**Raza sahib Sil's de chanda Sahib**) மிர்தியானதுல்லாவுடனே ( **Mir Diganathullah** ) மிராகுலாமுசேனுடைய தகப்பனார் புத்திரஷத்திரசார் பிள்ளை முதலானவர் களுடனேயும் அல்லாமல் போகிறபேர் வருகிறபேர்களுடனேகூட இப்படி சொல்லிக் கொண்டு திரிகிறதினலே பிரபுவுக்கு எத்தனைகள் தாஷத்தியும் அல்லாமல் விசேஷங்கள் வெளியே ஓங்குகிறதெத்தனை இதல்லாமல் பிரபுவி

னிடத்திலே தூரத்து யோசனையெல்லாம் புத்தியை ஸ்திரி மூலியமாய் நிறுத்தி எல்லா கபுருமவர்களுக்கு சொல்லுகிறதும் அவர்கள் சொற்படி நடக்கிறதாய் நீத்தபடியினலே யெப்படி யெல்லாம் விசேஷங்கள் வெளியே ஓங்குகிறது மல்லாமல் எத்தனை நோய்க்கிடமாகுது. இது ஒரு வருஷத்துக்கு முன்னேயிருந்த காறுபாரிலே உள் விசேஷம். காத்தினலேகூட அறிய கூடாமலும் எந்தனை பந்துபஸ்து எத்தனை கீர்த்தி யெத்தனை டகாரர் எத்தனை காபிரியம் சத்துருகாள் இராச்சியமாளுகிற சுபாகான்கூட கிடு கிடென நடக்கத்தக்கதாகயிருந்தது. இப்போ இதுக்கெல்லாம் விரோதமாய் நடக்கிறதென்ன; இதிலே விவேகிகள் யிருக்கிற போர்கள்தான் அறிஞ்சேயிருப்பார்களே விவேகமில்லா மிருகங்கள்கூட அறிகிறதானல் அப்பால் யாரறிவார்கள். நான் எழுதவேண்டியதென்ன ஆனல் நடக்கிறதிலே பத்து லக்ஷத்திலே ஒரு பங்கு கூட் காணெழுதவில்லை. ஏனென்றால் மிருகங்கள் கூட அறிஞ்சிருக்கிறதென்றால் மனுஷருக்குள்ளே அறியாதவர்களில்லையே பார்த்துக்கொள்ள வேண்டியது.

நேற்று ராத்திரி பிரியேல் (Friells) வீட்டு கூத்து ஆனதினலே ராத்திரி வெகுநேரம் மட்டுக்கும் துரை முழிச்சுகொண்டிருந்தபடியினலே அன்றைக்கு பதினெரு மணிக்கு துரையவர்கள் தெரிசனம், சமஸ்தமான பேருக்கும் மற்றபடி ஊர்சேதிதான். மதாம் துப்பிளேக்சுனுடைய சேவுகர் ஊரிலே கொள்ளையிடுகிறதும் சிப்பாய்கள், குடியிருக்கிறவர்கள் நல்ல வீடுகளாயிருந்தால் அந்த வீடுகளிலே இருக்கிற வீட்டுக் காபந்துகளை கழுத்தை பிடிச்சு வெளியே தள்ளிப்போட்டு தாங்கள் குடியிருக்கிறுப் போலே ஆச்சாபறையர்கள், செட்டிகள், கோமுட்டிகள் வீடுகளிலே குடிவந்திருந்துகொண்டு தெருத்திண்ணையின்பேரிலே கிரைச்சல் கட்டிக்கொண்டும் அவர்களேதாகிலுமிங்கேய்ய எங்கள் வீட்டு நடையிலேயும் திண்ணையிலேயுமென்று கேட்டால் உனக்கேதுடா வீடு, அம்மாள் உத்தாரம் எங்களை யிருக்கச்சொல்லி இனிமேல் ஏதாகிலும் பேசினல் முழுதும் வீட்டைப் பிடிங்கிக்கொள்ளுகிறேமென்று சொல்லுகிறதா அப்பால் பின்னையும் எளியவனுயிருக்கிற வீட்டிலே புகுந்துகொண்டு பெண்டுகளை சொப்பனிடு குத்திலேயா யிப்படி கொடுங்கோல் ஞாயமென்ன உண்டோ அதுக்கு யிருப்பிடம் புதுச்சேரி என்று சொல்லத்தக்க நடக்குது. ஆனல் சுவாமி இந்த பட்டணத்துக்கு என்ன ஆக்கினை குடுத்தாரோ பாபம் செய்கிறதிற்கு தக்கதாய் இந்தப்படிக்கு பட்டணத்து ஜனங்கள் ஒரு முகாந்திரமாயல்லோ அனுபவிக்கவேணும் இந்த மூலமாய் அனுபவிக்க கட்டளையிட்டபடிக்கு நடக்குது அவருக்கு சித்தமெப்போ திரும்புதோ அப்போ ஜனங்கள் சுகப்படுகிறதற்கு தக்கதாய் பிரபுகளுக்கும் புத்தி திரும்பி செங்கோலிலே வந்து நிற்குமென்று விவேகிகளாயிருக்கிறவர்கள் சொல்லிக்

சொல்லுகிறார்கள். மற்றப்படி பட்டணத்து சமாசாரம் ஒன்றுக்கொன்று நடக்கிற ஆமுதுகளெல்லாம் அதிசயந்தான். யெத்தனை என எழுதுகிறதென்று எழுதுகிறதையே நிறுத்திப்போட்டேன்.

விபவ ஸ்ரீ ஐப்பசி மீ 25 உக்கு 1748 ஆ நவம்பர் மீ 6 வ. புதவாரம்.

இற்றைநாள் காலத்தாலே கோட்டைக்கு முசியே கொர்னேத்து (Cornet) அண்டைக்குப்போய் கலாபத்துக்கு முன்னே வெழெட்டு நாளென்றதே நாலாயிரம் விராகனுக்கு முன்னூத்தி இருபது கோடி ரூபா, நெல் கொள்ளச்சொல்லி கொடுத்திருந்த சம்மதி அப்போ கொஞ்சம் நெல் வந்தது போக அதின் பிற்பாடு வந்ததும் கடையிலே வாங்கி கும்பினீருக்கு நெல் கொடுத்ததும் அரிசி கொடுத்ததும் ஆர் வசர நெல் பேகத்துக்கு வசவு சிலவும் ஒத்து தீர்த்துக்கொண்டு கணக்கெழுதி கொண்டு முன்சீட்டு நாலாயிரம் விராகனுக்கு எழுதி கொடுத்ததை வாங்கிக்கொண்டு ஆளாயிரத்து முப்பத்தி ரெண்டு விராகன் சில்லரைப்பணம் நிலுவையிட்டதற்கு சீட்டெழுதி கொடுத்துப் போட்டு நாம்போட்ட குண்ணத்தூர் குண்டன் முருக்கு குண்டன் உள்ளூர் குண்டனை கும்பினீர் வர்த்தகர் பேருக்கு எழுதிவித்துப்போட்டு நாளையதினம் இன்னம் கொஞ்ச நஞ்சம் சேருகிறதையும் சேர்த்து எழுதிவித்துப்போட்டு ரசீது வாங்கிக்கொள்ளுகிறோமென்று சொல்லிப்போட்டு துரையவர்கள் சேவுகன் வந்து அழைக்க பத்தரை மணிக்கு துரையவர்கள் வீட்டுக்குவந்து அவரைக் கண்டுபேச அவர் சென்னபட்டணத்துக்கு எத்தனை சிப்பாய்களை அனுப்பினாய் நெல் மறிக்க எத்தனை சேவுகர்களை அனுப்பினாயென்று கேட்டார். சென்னபட்டணத்துக்கு நானூறு சிப்பாய்களும் நெல் மறித்து திருப்ப, இருபது சேவுகரும் அனுப்பினேனென்று சொல்ல அந்தபடிக்கு முசியே லாசரு (Lazar) சொல்லி மலையப்பன் சேவுகர் ஒருத்தருமில்லை. எல்லாரும் சென்னைப்பட்டணத்து வழிகளிலே இருக்கிறதாகச் சொல்ல அந்தப்படிக்கு லாசருக்குச் சொல்லி (Lazar) மற்ற சிப்பாய்களை எண்ணிக்கை வாங்கிக்கொள்ளச் சொல்லச் சொல்லி அனுப்ப மற்றப்படி என்னை எழுதப்பட்ட கிராமங்கள் பேரீசு வெளியிலேயிருந்து எழுதி வந்ததாவென்று கேட்டார். நாளையதினம் வருமென்று சொன்னேன். அப்பால் சந்தா சாயபு மகன் ராஜா சாயபு பிராமணன் ராசோபண்டிதன் வந்து என்னுடனே சொன்னது நாங்களும் மூடமார்பத்திலே பேசாமல் மதாமுடனே சொல்லிக்கொள்ளுகிறதற்கு அப்துலாயிமான் நம்மோடநுடனே சொல்லச் சொல்லி தான்போய்சந்தித்தும். அப்பால் மதாம்தான் உடமைகளைக் கொண்டு வரச் சொல்லியும் பார்த்தும் கடன் துரையவர்கள் கேட்டதில்லை. ரங்கப்பனுக தானே உங்களைக்கேட்டு இப்படியெல்லாம் நடப்பித்துப்போட்டு துரைக்கு வெட்கம் வரத்தக்கதாக பண்ணிவித்தான். இந்த க்ஷணமே உத்திரவு வாங்

கித்தாரேனென்று சொல்லி பத்து பதினைஞ்சு நாளாய் திரிஞ்சி கடைசியிலே துரை உத்தாரம் கொடுக்கிறதில்லை என்று சொன்னாரென்று சமேதரான அப்துல் ரயிமான் சொல்லுகிறானென்று வந்து சொல்லி ஆகிலும் எங்களுக்கு நாளது வரைக்கும் நீங்கள் சகல சகாயமும் மேன்பாடும் செய்தவர் இப்போதும் நீங்களே தயவு பண்ணி உத்திரவு வாங்கி கொடுக்கவேணுமென்று வந்து சொல்லி பின்னையும் மதாம் சொன்னதும் அப்துலாயிமான் சொன்னதும் உம்முடையபேரிலே சேனேயுண்டென்று சொன்னதுக்கு நான் சொன்னது என் மனதிலேயும் உங்களுக்கு எப்படியும் காரியமாகிறதே பெரிய பெரிய காரியம் மதாம் அவர்கள் என் பேரில் ஒருவேளை கோபம் பண்ணினால் ஒருவேளை தயவுபண்ணுவார்கள் என்று சொல்லி என்னாலே ஆன சகாயம் செய்கிறேனென்று சொல்லி அனுப்பிவித்தேன். மற்றப்படி அருமாத்தப்பிள்ளை முத்தியப்பிள்ளையும் அரியப்ப முதலியாரும் கடா குமரப்பிள்ளையவர்கள் நம்முடையசாவடிக்குப் போராப்போலே போய் அங்கே இருந்து உழைந்தைப் பேட்டைக்குப்போய் அங்கே தங்கள் தங்கள் தட்டுமுட்டு பணம் காசுகளெல்லாம் நம்முடைய அக்கிரகாரம் வெங்கிடராயர் மாரிபத்திலே தியாகப்பன் கூட கொண்டுபோய் வைத்த சம்மதியெல்லாம் பார்த்து அதை எல்லாம் அரும்பாத்தப்பிள்ளைசாவடியே போய்விட்டதாகவும் ஆரியப்பமுதலியார் புதுச்சேரிக்கு வருகிறதாகவுஞ் சொன்னார்.

**விபவ ஞு ஐப்பசி மீ 28 உ க்கு 1748 ஆ நவம்பர் மீ 9 உ சனிவாரம்**

இற்றைநாள் மழை மிகுதியானபடியினாலே வெளியே புறப்படவில்லை திண்டிவனம் சீர்மை நாட்டு முத்துமல்லாரெட்டி தம்பி முத்து ரெட்டியை மதாம் துப்ளேக்சு பள்ளிநொண்டி சவரிமுத்து சிபாரிசின் பேரிலே முத்து போலம்ரெட்டி போய் மதாமைக்கண்டு பேசி மதாம் உத்தரப்படிக்கு அவ தமயன் முத்துமல்லாரெட்டிபேரிலே ராசக்காரியம் நடத்தத்க்கதாகபேச அவரதை நடப்பித்து கவில் காகிதம்கூட அனுப்பி அந்த பரவசத்தின் பேரிலே அழைப்பிச்சார்கள் அந்த முத்து ரெட்டியும் மதராசுந்தகத்திலே இருந்து இற்றைநாள் சாயங்காலம் வந்து சேர்ந்தான். வந்த கபுருதுரையவர்கள் நிஞ்சபடி தாணாவிலே போயிருக்கச்சொல்லியும் நாளையதினம் கணக்குப் பேசிக்கொள்ள வரச்சொல்லி சொல்லி அனுப்பினதாய் சேதி கேழ்கப்பட்டது.

**விபவ ஞு ஐப்பசி மீ 29 உ க்கு 1748 நவம்பர் மீ 10 உ ஆதிவாரம்.**

இற்றைநாள் காலந்தாலே பிரபுவினிடத்துக்கு போன விடத்திலே அழைத்து முசியே திலார்சு (Delarche) சகலாத்துக்கு சம்மதிதான் குடுக்க வேண்டியதில்லையென்று எழுதினானென்று சொன்னதுக்கு நான் சொன்னது

முசியே துலோராமுக்கு (**Dulaurens**) அவனெழுதின காகிதத்தில் அந்த சகலாத்துக்கு வித்ததுக்கு நார் பஞ்சு நஷ்டம் வருமென்று யெழுதி அங்கே யிருக்கிற பணம் அரசி அரம்சாமுத்துக்கு கொடுத்துவிடவேணுமென்று எழுதின சம்மதிக்கணக்கு முசியே துலோராம் (**Dulaurens**) சொன்னது அப்பால் செகாரிட்டது நான் கோன்சேலுக்கு பிடிஷன் எழுதிபோட்டதும் முசியே தெலார்ஷ் (**Desnoeux**) பணத்தைத் தடைபண்ணினதும் எழுதி முதலானதுக்கு மறுபடி கோன்சேலுக்கு பிடிஷன் எழுதிப்போடச்சொன்னார். நல்லதய்யாவென்று சொன்னேன். அப்பால் இமாம் சாயபுக்கு எழுதி அனுப்பின காகிதமெங்கே கிராமங்கள் சாப்பிதா எங்கே யென்று கேட்டார். அதைக்கொண்டுபோய் கொடுத்தோம் அப்பால் முசியே தெலார்சுவை (**Delarche**) அழைப்பித்து மறுபடி சிறிது வயணம்சொல்லி எழுதி வைத்து காகிதத்தையும் கிராமங்கள் ஜாப்பிதாவையும் யேகத்துக்கு போகப் பண்ணி சூரத்து காகிதங்கள் முன் இமாம் சாயபு அண்டைக்குப்போய் இருந்து வந்ததே அவர்கள் இரண்டுபேரும் இமாம் சாயபு மனுஷர்தான் ஒருத்தனையுங்கூட அழைப்பித்து அவர்கள் கையில் கொடுத்து சீக்கிறம் தூக்கிக்கொண்டுபோய் அவுரங்காப்பாத்திலே இருக்கிற இமாம் சாயபு கையிலே கொடுத்து மறுகாயிதம் வாங்கி வரச்சொல்லிச் சொன்னார். அந்தப் படிக்கு அவர்கள் முன்போய்வந்த சம்மதி நாற்பது ரூபாயும் இப்போ அவுரங்காப்பாத்துக்கு போவதற்கு எண்பது ரூபாயும் இமாம்சாயபு மனுஷனுக்கு இருபது ரூபாயும் கொடுத்து அனுப்பிவைத்தேன். அந்த காகிதத்திலே துரையவர்கள் எழுதினவயணம்: நீர் எழுதின காகிதத்திலே நமக்கனுப்ப வேண்டிய ரத்தின கல், கசிச்சிரப்பேசு அம்பிராத்தோனி, வில்லு, ரத்தின மிழைத்த கட்டாரி, கத்திகள், கேடையம், ஈட்டிகள் முதலானதுகள் ராசாங்க பெருமானம் அனுப்புகிறதற்கு ஆயிரம் அராபி அனுப்பச்சொல்லி எழுதினது கோமுட்டி வியாபாரம்போலே இருந்ததே அல்லாமல் பெரிய மனுஷர் சாடையாய் காணாமல் போச்சுதென்றும், இப்படி முன்னாலே வழுதாவூர் சாகிர், வில்லியநல்லூர் சாகிர் கிராமங்களுடைய கமாம்சு பேரிசும், வசூல் பேரிசும் யெழுதி அனுப்பச்சொல்லி அந்த ரெண்டு பாகத்துக்குச் சேர்ந்த கிருமங்களும் பேரிசு வாங்கச்சொல்லி எழுதின தருப்பாறு கருசுகளிவ்வளவுக் கொடுக்கிறோமென்று எழுதினீரே அதற்கு உங்களுக்கு நாங்கள் ஒரு ஈடு கொடுக்கிறோம். அதென்னவென்றால்: சென்னப்பட்டணமும் அத்துடன் சேர்ந்திருக்கிற கிராமங்களையும் கொடுக்கிறோம். அதற்கு இன்னமொரு உடம்படிக்கை அதை மறுபடி இங்கிலீஷ் காரருக்குக் கொடுக்க கவையில்லை, என்று நீங்கள் கொடுத்தீர்களானால் கூனிமேட்டு சீர்மை முதலானது பாத்திரச்சாக்கிறத்துடனே எழுபத்தஞ்சு

கிராமங்களை எழுதி அந்த கிராமங்கள கொடுத்துவிடுகிறது. நீங்கள் கொடாவிட்டால் நாங்கள் சோராவரியாய் கட்டிக்கொள்ளுவோமென்று நாங்களும் இங்கிலீஷ்காரரும் சண்டைபோட்டால் அன்வர்த்திக்கான், அப்துல் சல்லமைத்தது. இங்கிலீஷ்காரருக்கு அனுப்பினதிற்கு நாங்கள் ஆர்க்காடு மட்டுக்கும் கட்டிக்கொள்ளுவோம். அல்லவென்றால் நிர்ப்பந்தம் பண்ணிப்போடுவோம். பாதுசா அத்புக்கும் நாசர்சங்கு அத்புக்கும் மனம் பொருத்துவிட்டோமென்று யிப்போது மார்க்கமாய் மேலே எழுதினபடிக்கு நடவாவிட்டால் நாங்கள் சோராவாரியாய் கட்டிக்கொள்ளுவோமென்றும், ஆயிரம் அசாப்பியும் அப்படியே அனுப்பிவிக்கிறோமே அல்லாமல் முன் எழுதினபடிக்கு சிறேப்பா, கட்டாரி, கத்தி முதலான ஆயுதங்களும், கல்லுக்குமுதலான ரத்தின நகைகளும் வாங்கி அனுப்பிவிக்கச்சொல்லியும் அப்படிவாங்கி அனுப்பிவித்தால் சென்னப்பட்டணத்திலே உங்கள் தினுசு இருந்ததைக் கொடுத்துவிடுகிறோம். மணில் கப்பல் சம்மதி என்று எழுதினீரே அதுவும் கொடுத்து விடுகிறோமென்றும் காகிதமெழுதி இமாம் சாயபுக்கு அனுப்பினது. ஆனால் அந்த மத்தலப்பு சூட்சமாத்திரம் யெழுதினது மற்ற படிக்கு காரியங்கள் விஸ்தரித்து எழுதியிருக்கும் அந்த பயனை மாத்திரமெழுதிவைத்தேன்.

ஆனால் துரைமனதிலே இப்போ எழுதப்பட்ட காரியம் அனுகூலமாப் போலேயேயென்றிருக்கிறீர் என் புத்தியிலே ஆகாதென்று தோன்றியிருக்கிறது. சுவாமியினுடைய சித்தம் என்னமாய் நடக்கப்போகிறதோ நான் றியேன் அந்தப்படிக்கு நடக்கும்.

**விபவ ஸு ஐப்பசி மீ 30 உ க்கு 1748 ஆ நவம்பர் மீ 11 உ சோமவாரம்**

முசியே கொலாமையும் கப்பலாத்திரி முசே பெத்தபார் என்கிற பாதிரியும் (de Karjean and abbé de Fager the Padre) சீர்மைக்கு பயணம் பண்ணி கடுதாசி எழுதி செயப்பிரதமான சேதிக்கு இவ்விடத்திலே யிருந்து கரைவழியாய் சென்னப்பட்டணத்திற்குப் போய் அவரிடத்திலே யிருந்து ஒரு போத்தை பயணம் பண்ணி அந்த போத்தின் பேரிலே சீர்மைக்குப் போகத்தக்கதாக யேறு பாய்விரிக்கையில் அது போகுமாயில் கம்பதைக்கொண்டு திருப்பிக்கொண்டு மறுபடி யித்தனை நாள் ராத்திரி ஒன்பது மணிக்குவந்து துரை பிடிக்க முசியே கோஷாமும் (Karjeay) அந்த பாதிரியும், இரண்டு பேரும் இறங்கினார்கள். அவர்களிறங்கியபோது இவ்விடத்திலேயிருந்து செயப்பிரதம் சீர்மைக்கு எழுதின காகிதக் கட்டுகளையும் கூட எறக்கிப்போட்டார்கள் போத்து காம்பத்துத் தண்ணியை

ரொம்பவுங்கண்டபடியினாலே இனிமேல் சீர்மைக்குப் போகப்படாது என்று
சொல்லுகிறார்கள்.

இற்றைநாள் காலத்தாலே மசக்கரைக்குப்போக மாட்டாமலே வந்த
சுலுப்புக்கு கடல் கொந்தளிப்பினாலே படகுவிட்டால் போகப்படமாட்டா
யில்லை என்றும் பிரபுவானவர்போய் சமுத்திரகரைமட்டுக்கும் போய்
விசாரித்துக்கொண்டு வந்தார்கள். மற்றப்படி சந்தாசாயபுக்கும் நாளை
சேக்கு அப்துலாயிமான் தன் பின்னை சாவடிலே பதினைந்து காரியத்துக்கு
வந்தவாசிக்குப் போய் தாய் மற்றப்பேரை அழைத்து வருதாய் இன்றைய
தினம் சந்தா சாயபுமகன் ராஜா சாயபு வந்தவாசிக்கு போவதாய் பயணச்
சேதி கேழ்க்கப்பட்டது. புடே சாயபு பெண்சாதியும் வளர்த்துகொண்ட
பிள்ளை காதல்விகாளும் அவர்களும் சகுமேதார்மாரி பத்திலே பிரபு
வினுடனே பேசிக்கொண்டு கூட பயணம் சாகிபோகிறதாய் சொல்லிக்
கொண்டார்கள். மற்றப்படி மூசியே தெபிரோனுக்கு (Desm'erêts)
சரீரம் ஸ்வஸ்தமில்லை என்று குடுக்கல் வாங்கல் கணக்குக்கொண்டு வரச்
சொல்லச் சொன்னதாய் துபாசி தாண்டவராயன் வந்து சொன்னான் அப்
புலவன் கணக்கு தீர்த்து எழுதி வைத்து நாளைக்குபோய் கண்டு பேசவே
மென்று போசனை பண்ணச்சொல்ல அனுப்பிவைத்தேன்.

இற்றைநாள் துரும்பேத்காரன் மகன் மூசியே பொசெம்மச்சான்
மூசியே கோசாரமென்கிறவன் (**Cancheranthe trumpetisan and Bratheren lawas M. Perichan**) ஒரு வெள்ளைக்காரசார்சந்து மகள்
மதாம் பொசேல் வந்திருந்தாள் (**Perichan**) அந்த பெண்ணை இன்றைய
தினம் கலியாணம் பண்ணிக்கொண்டான்.

இற்றைநாள் சாயங்காலம் தெய்வநாயக ஐயங்கார் குமாரன் கலாபத்தும்
போதுயிருந்த வீடுகள் எழுத தெய்வநாயக ஐய்யங்கார் நான்தானென்று
எழுதிவைத்து மருபடி காகிதம் வாங்கி வெளியே போகிறபோது அப்ப
டியே சொல்லியெழுதிவித்து வெளியே போய்வர தகப்பனார் தெய்வநாயக
ஐயங்கார் அந்த காகிதத்தை வாங்கிக்கொண்டு நம்முடைய அக்கிரஹாரம்
வெங்கிடராயர் வசத்திலே நூத்தி அன்பது விராகன் தட்டுமுட்டுகலாபத்து
நிமித்தியம் ஒளித்து வைத்து பிவர் திருமங்கலத்திலே கொண்டுபோய்
ஒளிக்க வைத்தவிடத்திலே இங்கிலீஷ்கார மனுஷர் வந்து பிடித்து அடித்த
போது தெய்வநாயக ஐயங்கார் உடமையை எடுத்துக்கொடுத்து விட்டதாக
வும் அதின்பேரிலே நீர் அரும்பாத்தம் பிள்ளை முத்துப்பிள்ளை ஆரியப்ப
முதலியார் பிள்ளையும் சாணார் முதலான பேர்களுடைய உடமையை வைத்
திருந்தவர் அவர்களுடைய உடமையைகொடுப்பீர். உம்முடைய உடமை
யையும் கொடுப்பீர் என்றுடமையைக் கொடுக்க காரியமென்னவென்று

அவரு மிவருக்கும் பேச்சு நடந்து அரும்பாத்தப் பிள்ளை முத்தப் பிள்ளை அரியப்பமுதலியார் தங்கள் உடமைகளை வாங்கிக்கொள்ளுகிறதற்கு வெளியே போரார்களே அப்ப உங்களுடைமையுங்கூடத் தானே யிருந்தது. நீங்கள் சம்மதித்தாலாச்சுது இல்லாவிட்டால் நீங்கள் உங்களுடைமையை வெளியே பதினுயிரமும் ஐபாயிரமும் கொண்டுவந்து வைத்துக்கொண்டசாடை துரையுடனே சொல்லுகிறேன். அம்முடனுஞ் சொல்லுகிறேன். உங்கள் குடிகளை கெடுத்து விடுகிறேனென்று சொன்னது மல்லாமல் அப்பால் முதலியார் நூறு விராகன் தட்டுமுட்டு கொண்டுபோனதிற்கு காவல் வைத்து நடப்பித்த காரியம் அறிய மாட்டீர்களா நீங்கள் கும்பினீர் உடமையை யெல்லாமிவ்விடத்திலே திருடினபடியினுலேயும் சென்னப்பட்டணத்து உடமைகளை திருடினது கூடதானே அங்கே இருந்துக்கொண்டு வந்து வைத்து அதுகளெல்லாம் வெளிப்படுத்துகிறேன் என்று மிது முதலான வார்த்தைகளைக் கண்டிப்பிலே எதிரிகளுக்கு பயமும் தோற்றி அதின் மேரிலே தன்னுடைமைக்கு கிரையம் கொடுத்துவிடுவார்களென்று, எந்தெந்த அடுக்கிலே உருட்டவேண்டுமோ அந்தந்த அடுக்கிலே உருட்டி அப்பால் அவர்கள் அதுக்கு ஒன்றும் உத்தாரஞ் சொல்லாம விருந்தபடியினுலே தம்முடைய குமாரன் தெய்வநாயக அய்யங்காரென்று வாங்கிவைத்த காகிதத்தை தாம் வாங்கிக்கொண்டு உள்ளே வந்து அவ்விடத்திலே சொன்ன சாண்டயாய்த்தானே இவ்விடத்திலேயும் அங்கங்கே சொன்னதின்பேரிலே முத்தப்பிள்ளையும் ஆரியப்ப முதலியாரும் பயந்து இவன் போய் சொன்னதின்பேரிலே என்ன நடக்குமோ தெரியாது என்றும் தாம் வழியிலே சொல்லி பின்னை காகிதமொன்று சொல்லி பேர் மாராட்டமாய்க் கொண்டு வந்தவனை வெளியே தெருத்துகிற சாடைபண்ணி முசியே தெலார்ஷ் (Delarche) உடனே சொல்லிவிட்டு அவனைக்கொண்டு நேத்து ராத்திரி அழைப்பித்து எசமானில்லாத வீடு கும்பினீரை சேரவேண்டியது. உம்முடைய பிள்ளையிருந்து மோசம் பண்ணினுனென்று வீட்டையும் கும்பினியிலே எழுதிப்போடச்சொல்லி சாவடி கணக்குப்பிள்ளைகளுக்குச் சொல்லி அனுப்பி தெய்வநாயக ஐயங்காரையும் வெளியே துரத்திவிட யோசனை பண்ணி, நயினுர் வீட்டிலே கொண்டுபோய் காவல் வைக்கச்சொன்னதாய் சேதி கேழ்விப்பட்டேன் என மனதிலே தோற்றியிருந்தது. முத்தயப் பிள்ளைக்கும், அரியப்பமுதலியாருக்கும் சொல்லி எதாவது வாங்கிக்கொடுப்போம். தாம் ரூபமாயென்று யோசனை பண்ணிக்கொண்டிருந்தேன். இவர் முருக்கிலே வூரெல்லாம் சொன்னபடியினுலே அவர்கள் பயந்து இப்படியெல்லாம் நடத்தினுர்களென்று கேழ்விப்பட்டது. 592846

**விபவ ௵ கார்த்திகை ௴ முதல் உக்கு 1748 ஆ நவம்பர் ௴ 12 உ அங்காரகவாரம்**

இற்றைநாள் காலத்தாலே நேத்து காவல் வைத்த தெய்வநாயக ஐயங்

கிராமை துரைமுன்னே கொண்டுவந்து முசியே தெலார்ஷ் (Delarche) துரை சொன்னதும் கனபேருக்கு எழுதியிருந்த காகிதத்தைத்தான் வாங்கிக் கொண்டு மறுட்டமாய் உள்ளே வந்தான். இதெல்லாம் நாலாயிரம் விராகன் தட்டுமுட்டு கொண்டு கலத்துக்கு முன்னே வெளியிலேபோய் ஒருத்தன் பிராமணன் வசத்திலே வைத்தானும், அது போய்விட்டதென்று வியாச்சியம்கூட சொல்லுகிறானென்று சொன்னான், அதென்ன சொல்லுகிறானென்று என்னை கேழ்கச்சொன்னார். அதின் பேரிலே தெய்வநாயக ஐயங்காரை என்னவென்று கேட்டதற்கு என் தட்டு முட்டு கொண்டு போய் வைத்தயிடத்திலே அவன் போச்சென்று சொல்லுகிறானென்று இங்கே அவரவருடனே கண்டு பேசி ஏதாவது மார்க்கம் பண்ணி கொள்ளலாம் என்று வந்தாரென்று மார்க்கமாய் சொன்னேன். அதின் பேரிலே இவன் நெத்தியைப்பார்த்தால் சறுவ அச்சயம் வருகிறது. என்று சொல்லிப்போட்டு நாலாயிரம் விராகனென்று சொன்ன பேச்சை பிடித்துக்கொண்டு துணி எத்தனை விராகன் என்று கேட்டார். இவர் சொல்லுகிறது நூற்றி அன்பது விராகன் நகையென்று சொல்லிப்போட்டார் என்றுசொல்லி அவர்கள் சொல்லுகிறது எண்பது விராகன் நகை என்று சொல்லுகிறார்களென்று சொல்லி அந்த பிராமணன் எங்கள் சாவடியிலிருகிறவனென்று சொல்லி சொன்னதுக்கு எங்கே போக்கடித்துக் கொண்டானே அங்கேபோகச்சொல்லென்ன சொல்றாப்போலே முசியே தொலார்ஷ (Delarche) ஒரு சேவுகனை கூட கூட்டிக் கொண்டு வெளியே கொண்டுபோய் விட்டுவிட்டு வரச்சொன்னான் அந்தபடிக்கு தெய்வநாயக ஐயங்காரை வெளியே கொண்டுபோய் விட்டுவிட்டு வந்தார்கள் அவர் மார்க்கமாய்ச் சகாபண்ணாமலிருந்தால் போக்கடித்து கொண்ட பணத்துக்கு பாதிக்கு பக்குவம் ஏற்படும். ஊரிலேயும் சுகமாயிருக்கலாமிப்போ ஊரிலேயுமிருக்ககூடாமல் வீட்டுக்கு வீடு கூடப்போச்சுது அவருக்கு ஏழரை நாட்டு சனி துவக்கத்தினாலே இப்படி நடப்பிச்சுதென்று சொல்லிக்கொண்டார்கள். அப்பால் முத்துமல்லரெட்டி தம்பி முத்து ரெட்டி வந்தவனுக்கும் தாம் சொன்னது உங்கள் ரெண்டு கும்பினீருக்கு பண்ண துரோகத்துக்கு நீங்களறியோமென்று கையெழுத்து போட்டீர்களல்லவா நல்லது அவன் குஞ்சு குழந்தைகளை பிடித்து வருவதற்கும் அவன் கிராமங்களிலே தானியம் எடுத்து வருவதற்கும் ஆடு, மாடு ஓட்டி வருவதற்கும் இப்போ சமயமல்லதையா, பிரபு உடனே கப்பல்கள் வரும்; வந்தவுடனே அப்படியே நடப்பிப்போம் இன்னேரத்துக்கு மவனுமில்லை என்று சொல்லி அப்பால் பதினாயிரம் விராகனுக்கு நெல்லு வேண்டியிருக்கிறது இதல்லாமல், ஆடு மாடு, கோழிகள், நெய் முதலானதுகளை அழைப்பித்து அனுப்பவேணும், அதற்கு பணம் காசு அனுப்புகிறோமென்று சொல்லிப் போகச் சொன்னதாய் சேதி கேழ்விபட்டது. அவர்களும் வந்து சொன்னார்கள். இனி நாளை முன் னவம்பர் மீ 4 உ கோன்சேலிலே தீர்த்து

எழுதின ஓர் தனிபிரான்சு வர்த்தையிலே தமிழிலே பார்த்தியிலே கோட்டை பிடவை பார்க்கிற சாலையிலே சம்மனசு கோயிலிலே கப்பிசு கோயிலிலே மகாராஜனை ஸ்ரீ துரைவிட்டு வாசற்படியிலே முத்திரை சாவடியிலே கடற்கரையிலே இந்த ஆறு ஸ்தானங்களிலே ஒட்டினார்களிதில் எழுதியிருக்கிறபடிக்கு இதின் கீழே யெழுதியிருந்து பார்த்துக்கொள்ள வேண்டியது.

புதுச்சேரியைச் சேர்ந்த வெளி நிலங்களில் தோட்டம் வைத்திருக்கிற வெள்ளைக்காரர், தமிழர், முதலான யாவருக்கும் மேல்லான கோஞ்சேல் அறிவித்து கட்டளையிடுகிற விபரமாவது :—

முதலாவது :

பட்டணத்தை சுத்தி மதில் துவக்கி குண்டுத்தாழை மட்டுக்கு மித்தை வரைக்கும் தோட்டமாயிருக்கிற நிலங்களெல்லாம் கும்பினீர் வசமாகும்.

இரண்டாவது :

இனிமேல் எப்படிப்பட்டவர்களும் வீடுகள் சாவடிகள் முதலானதுகளை பெரியதானாலும் சின்னதானாலும் சுத்தி மதில் துவக்கி கும்பினியினாலே குறிக்கப்பட்ட தூரமட்டுங் கட்டக்கூடாது.

மூன்றாவது :

எப்படிப்பட்டவர்களும் மதில் துவக்கி குண்டுதாழை மட்டுக்கும் தென்னை, வாழை முதலான கனிவகை மரங்களுள்ள தோட்டம் வைக்கக் கூடாது. பின்னையுங்கீழ் பயிர்தோட்டம் வைக்கவேணுமானாலும், வேலி மரமில்லாமல் வைக்கவேணும்.

நான்காவது :

பின்னை யாதொருத்தாரமுன் நாங்கள் கட்டளையின்படியே மதில் துவக்கிக் குண்டுத்தாழைக்குள்ளாக கீழ்ப்பயிர்த்தோட்டம் வைக்க மனமுண்டானால் நொத்தேர் முன்பாக முன் சொன்ன உடன்படிக்கையின் பிரகாரம் சீட்டெழுதிக்கொடுத்து குறிக்கப்பட்ட மந்திஸ்தான் தீர கபலோ பிரகாரம் அவனவனுக்குள்ள பகுதியை வருஷாந்திரங் கொடுத்துவிடுகிறது.

ஐந்தாவது :

யாதொருத்தர் கனிவகையுள்ள தோட்டம் வைக்கவேணுமானால் குண்டுத்தாழைக்கப்புரம் நூத்தி அன்பது துவாசுக்கப்பாலே வைக்கலாம்; வைத்த அவாளவாளுக்கு விடப்பட்ட நிலத்துக்கு முன் சொன்னபடி மதித்த பகுதியை வருஷாந்திரம் கும்பினீருக்கு செலுத்துகிறது.

ஆறாவது:

பின்னை யாதொருத்தருக்கு குண்டுக்கு அப்பால் சொந்த நிலமான தோட்டமுண்டானால் அப்படிப்பட்ட சொந்தம் தங்களுக்கு மெய்யான சாக்ஷி அத்தாக்ஷி ரூபிக்கவேணும். அப்படியே ரூபித்து கோன்சேல்றிய நொத்தோரால் சீட்டெழுதி கட்டி தங்கள் தங்கள் நிலத்துக்கு கும்பெனியிலே செலுத்தும்படிக்கு கட்டளையிட்ட பகுதியை வருஷாந்திரம் கொடுத்துவிடவும் இந்த பிரகாரமாய் மெய்யான சாக்ஷி அத்தாக்ஷி ரூபிக்காதபோனால் அப்படிப்பட்ட நிலம் கும்பினியை சேர்ந்துப்போம்.

ஏழாவது:

இனிமேல் அந்த அந்த சொந்த சொந்த தோட்டங்களுக்கு கும்பினி விட போகிற தோட்டங்களுக்கு முண்டான அகளமும் நிகளமும் அதற்குத் தக்க பகுதியையுமிதுகளை எல்லா மூனு குறிப்பிலே எழுதி முதல் குறிப்பு சாவடி நியாயக்காரன் கையிலேயும் அவருடனே கூடயிருக்கிற மற்ற இரண்டு கணக்கப்பிள்ளைகள் கையிலுமிருக்கும். இரண்டாங் குறிப்பு பின்னுக்கு அது சரியான சீட்டெழுதும்படிக்கும் நொத்தோர் கையிலிருக்கும் மூணாங்குறிப்பு பகுதிப்பணம் வாங்க விசாரிக்க வைத்திருக்கிற கச்சேரி கையிலிருக்கும்.

எட்டாவது:

கும்பினி நிலங்களை குத்தகை வாங்கினபேர்கள் நெல்லு பயிரிட வாங்கின நிலத்தை முன் செய்தபடிக்கு தோட்டம் வைக்கவும் அப்படிப்பட்ட நிலங்களை துரை உத்தாரமும், நொத்தோர் கைசீட்டுமில்லாமல் பிரத்தியாருக்கு கொடுக்கவும் உத்தாரமில்லை. பின்னையுமிப்படிப்பட்ட நிலங்களை பிரத்தியாருக்கு கொடுக்குமிடத்திலே எழுதவேண்டிய சீட்டுகளையும் மற்றவர்கள் யாராகிலும் நிலங்களை விற்கவும் ஒருவனுக்குக் கொடுக்கவும் எழுத வேண்டிய சீட்டுகளையும் சாவடியிலே எழுதக்கவையில்லை.

ஒன்பதாவது:

இனி அவர்களுக்கு விடப்பட்ட சகலமான நிலங்களுக்கு முண்டான தீர்வையானது குத்தகைக் காரனுடைய குத்தகைப் பணத்தில் தள்ளப்படும்.

பத்தாவது:

இப்படியே தனித்தனி தோட்டம் வளைத்தபேர்கள் தங்கள் தங்கள் பகுதியை கச்சேரி கையில் மாத்திரம் செலுத்தவேணும் செலுத்தி சீட்டு வாங்கி இருந்தால் அது பகுதிக்கடனெல்லாம் தீர்ந்துப்போனதுக்கு அத்தாக்ஷியாயிருக்கும்.

பதினொன்றாவது :

சொந்த தோட்டம் வைத்து அநுபவிக்கிறவர்கள் பண்ணின உடன் படிக்கையின் பிரகாரமுண்டான பணத்தை கச்சேரி கையில் ஒரு வருஷத்தில் செலுத்தவும் செலுத்தாமல்போய் கச்சேரி வந்து பிராது பண்ணிக்கொண்டால் அந்த நிலத்தை கும்பினியார்வசம் பண்ணிக்கொண்டுவித்து கும்பினீருக்கு வரவேண்டிய பணத்தை எடுத்துக்கொள்ளுவார்கள்.

பனிரெண்டாவது :

பின்னையும் கோன்சேரிலே சிறிது ஊர் குடிகளுடைய நடத்தையை விசாரித்து எதிராதிகள் வந்தபோது தங்கள் வீடுகளை விட்டு ஓடிப்போனார்களென்று மிவர்களிலே அநேகம்பேர் எதிராளி அண்டையிலேபோய் சேர்ந்தார்களென்றும் அறிந்துமதை பெருக்கக்கூடாமல் இனிமேல் அப்படிப்பட்ட நடத்தை வராதபடிக்கும் அந்த காரியத்தின்பேரிலே கோன்சேலிலே ஏக வசனமாய் கட்டளையிட்டது சொல்லப்பட்டவர்களுடைய வீடுகளை யெல்லாம் முழுதும் தமாங்கமாய் யெடுத்துக்கொண்டு வாடிக்கை பிரகாரம் பிரசித்தமாய் ஏலம்போட்டுவித்து கும்பினீருக்கு ஆதாரமாய் எடுத்துக் கொள்ளுகிறது.

பதிமூன்றாவது:

வீட்டுக்குடையவர்கள் தங்களுக்கு வீடு தேவையானால் தாங்களும் ஏலத்திலே கேட்டு வாங்கிக்கொள்ளலாம். ஆனால் தாங்கள் வீடுகளை விட்டுப் போய்விட பிராமணருக்கு இந்த உத்தாரமில்லை. பின்னையுமவர்கள் இந்த ஊரிலே வந்து குடியிருக்கவும் உத்திரவுமில்லை. இந்த முற்றிகையிலே யிருந்த பிராமணர்கள் மாத்திரம் தங்களுடைய சம்சாரங்களுடனேயிருக் கலாம்.

பதினான்காவது :

சாவடி ஞாயக்காரனும் கும்பினி கணக்குப்பிள்ளை ரெண்டுபேருமிந்த கட்டளையின்படியே நடப்பிக்க மகா ஜாக்கிறதையாயிருந்து விசாரிக்கவும் மேலான கோன்சேல் வீட்டு அரையில் எழுதி கட்டளையிட்ட நிரூபம் புதுச்சேரியில் 1748 ஆ நொவம்பர் மீ 4 தேதி கையெழுத்துப்போட்ட முசியே துப்ளேக்சு முசேவிக்கு முசியே கில்லிட்டா, முசிசே லெ மேர், முசியே பிரிய்யெல், முசியே போலா, ( **Dupleix, Lazar, Guillard Le Maire Friell, Bovelleau** ).

இற்றைனாள் இங்கிலீஷ் கப்பல் அஞ்சாறுபாயெடுத்து நம்முடைய துரைக்கு நேரே ஓடிவந்து ஓசந்துப்போக விட்டான். அதிலொரு கப்பல்

மாத்திரம் ஒரு வெள்ளை கொடிபோட்டுக்கொண்டு துரைக்கு நேராய் வந்து மறுபடி ஓசந்துப்போய்விட்டான். அதென்ன ஜாடையென்றால் மேஸ்தர் புகாவேனும் ( Bascawens ) துரையவர்களுக்கும் கலாபத்துக்கும் பிற்பாடு காகிதங்கள் போக்குவரத்து உண்டாயிருக்கிறபடியினாலே அவ்விடத்து பிரிசொனேர்களுமிவ்விடத்து பிரிசொனேர்களும் மாத்திக்கொள்ள தக்கதாக பேச்சுவார்த்தைகள் நடந்து அதன்பேரிலே உடன்படிகைகளுக்கு பிரிசொனேல் சொல்தாது முதலானபேரை ஏத்திக்கொண்டு வந்து எறக்கிப்போட்டு பதிலுக்கு இங்கேயிருக்கிற இங்கிலீஷ் பிரிசொனேர்கள் சொல்தாதுகள் முதலான பேர்களை ஏத்திக்கொண்டுபோக வந்ததாயும் கடலோரத்தினாலே கரை பிடிக்கமாட்டாமல் ஓசந்துப்போனதாகவும் சொன்னார்கள்.

**விபவ ஹு கார்த்திகை மீ 2 உ க்கு 1748 ஆ நொவம்பர் மீ 13 உ புதவாரம்.**

இற்றைநாள் துரையவர்களிடத்துக்கு போனதினாலே திருச்சினாப்பள்ளி வைக்கல் காகிதங்கள் வந்துதே அதிலே என்ன எழுதி இருந்ததென்று கேட்டார். நபாபு அன்வர்த்திகான் முதலானபேர் திருச்சினாப்பள்ளியிலிருந்து தஞ்சாவூரின்பேரிலே மேஷகாஷ் நிமித்தியம் அவர்கள் பணமங்குக் கொடுக்க வேண்டியதில்லை யென்று மோகும் போரதாயிருக்குமென்றும் பயணம் புறப்பட்டு அப்பாலே இரண்டும் சிவிபமாய் இறங்கினார்களென்றும், அவர்களும் சந்தலகை திருகாட்டுப்பள்ளி அண்டையிலே இரண்டாயிரம் குதிரையும், ஐயாயிரம் ஆறாயிரம் ஸ்தோம்மும் எதிர்ப்பாளையம் வந்து யிறங்கினார்களென்று தொண்டமான் மோகலாய் பவுனுக்கு அனுகூலமாயிருக்கிறானென்றும், பின்னையும் திருவிடராச்சிய பாளையம் பாளையகாரர் பேரிலே போய் பணம் காசு போகவும் வாங்கவேணுமென்றும் முதல்லிகான் போகவேணுமென்று யிருக்கிறானென்று ஆசாத்து மாபுசுகானும் முதலானபேர் புதுச்சேரி கொவர்னதோர் இங்கிலீஷ்காரரை பத்தே பண்ணுகிறதுக்கு மோபார்க்குமாதி எழுதி அனுப்பாமல்போனதென்னவென்று கேட்டாப்போலேயும் தான் வருகிறேனென்று சொன்னதாயும் முன்னே இங்கிலீஷ்காரர் பேச்சு பெரியதாயும் பிராஞ்சுக்காரர் பேச்சு சற்றே எளிதாய் சொன்னவர்களெல்லாமிப்போ முகத்திலே கரியை பூசிக்கொண்டு தலையை குனிந்துக்கொண்டு திரியுரார்களென்று தர்பாரெல்லாம் பிரஸ்தாபம் வந்த போதெல்லாம் பிராஞ்சுக்காரர் பவாத்திரயிலிருக்கிறார்கள். அவர்களுக்கு சமமாய் இங்கிலிஷ்காரராகிய கைம்பெண்டாட்டியை சொல்லப்பிரியமாவென்றும் முன்னே யிப்படி தாட்டி சென்னப்பட்டணம் போக கடித்துக்கொண்டார்களிப்போ போய் சண்டை பண்ணி நிருவாகமில்லாமல் வந்த மட்டுக்கும் இனிமே தேவனும்பட்டணம் போக கடித்துக்

கொள்வார்களென்றும் சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும் முன் அப்படி சொன்னவர்களே இப்போ இப்படி சொல்லுகிறார்களென்றும் தான் காற்பாரு கறுசு அன்பது, அறுபது ரூபாய் மட்டுக்கும் கறுசு பண்ணினேனென்றும் இதெல்லாமல் தான் சிலவுக்கு கூட ரூபாய் சலுது வெங்கடாசல செட்டி கையில் செலுத்தினால் இங்கே திருவீதி சேஷாசல செட்டி கையிலே வாங்கிக்கொள்ளத்தக்கதாக காகிதம் வாங்கி அனுப்பவும் சேவுகர் விஸ்தாரமாயில்லை அடிக்கடி சமாச்சாரம் அனுப்புகிறதிற்கு சேவுகர்களை அனுப்பச் சொல்லியும் அதற்கு அன்வர்த்திகான் பணம் அனுப்புகிறதற்கு சமித்திருக்கில்லெதார்களும் கட்டிக்கொண்டு இப்படி தொந்தரவுகள் பண்ணுகிறதினாலே சிப்பந்திவைத்து அவர்கள் பேரில் மோகும் போய் சண்டை பண்ணுகிறதினால் தஸ்தாகுர்ண மகாராசா இப்போது உங்களுக்கு நான் எங்கே பணம் கட்டப்போரேனென்று வேட்டவலம் பண்டாரி முதலான பேர்கள் பேரிலே சண்டை போட்டதைத்தானே ஒரு பிருசம் வைத்துக்கொண்டு பணம் அனுப்பாமல் பவொக்கு மெழுதிகொண்டிருக்கிறார்களென்று மிது முதலான சேதி எழுதி வந்ததை சொன்னேன். அதின்பேரிலே அப்துல் சலீல்வந்து மத்தத்து யிருந்து கடசியிலே ஓடிப்போனதினாலே நபாபு முதலான பேருக்கும் நமக்கும் மோபார்க்கு பாதி யேழுதுகிறதற்கு வெக்கப்பட்டு இருகிறார்களென்றும் இந்த சமயத்திலே முருது சல்லிகான் கட்டிக்கொள்ளலாமென்றும் பயித்தியக்காரன் சும்மா இருக்கிறானென்றும் சொன்னார் அதற்கு முருதுசல்லிகான் சும்மாயிருக்கவில்லை பாற்சாவிலே தானே ஆற்காட்டு சுபாவுக்கு பிரேத்தினம் பண்ணினான் கொஞ்சம் நாளையிலே ஆமென்றாப்போலேயும் சொல்கிறார்கள். குதிரைகளும் வைக்கிறானென்றும் சொல்லுகிறார்களென்று சொன்னேன் அப்பால் உன் தோட்டமென்னமாயிருக்கிறதென்று கேட்டார். இந்த தோட்டந்தான் வெட்டி தீந்துபோட்டதுமல்லாமல் நிலம் கும்பினீருடனே சேருகிறதென்றாப்போலே யாச்சுதே அப்பால் குண்டுசாலைக்கு அப்புறமிருக்கிற தோட்டம் கூட வெட்டுகிறதாய் சொல்லுகிறாப்போலே ஆச்சுதே தோட்டத்து பேச்சு நிராசை பண்ணிக்கொண்டேனென்றும் சொன்னேன்; அதற்கு துரையவர்கள் சொன்னது அப்படிக் கவையில்லை. உன் தோட்டம் குண்டுசாலைக்கப்பாலே இருக்கிற தோட்டம் வெட்டுகிறதில்லை. வழுதாவூர் வாசர்படிக்கு எதிரேயிருக்கிற தோட்டமும் வேலி போடாமல் இன்னேரத்திற்கு உன் மனதுக்கு சம்மதியான பயிர் செய்துக்கொண்டால் அப்பால் பார்த்துக்கொள்ளலாமென்று சொன்னதற்கு நல்லது அப்படியே செய்கிறேனென்று சொன்னேனென்று நன்றியறிந்த உபசாரனை சொன்னேன். அப்பாலுமிது வெள்ளைக்காரர்களுக்கு ஆக யிந்த யேர்ப்பாடு எடுத்து நடத்தினாரே அல்லாமல் மற்றபடி தமிழர்கள்

நிமித்தியம் செய்ததல்லதினுலேயும் பட்டணத்தைப் பிடித்த - கிரகச்சாரம் ஏழரை நாட்டான் சனி கழிவு அவருக்கு அப்படி தோத்திவிச்சு பட்டணத்தை சுருபஞ்சம் பண்ணுகிறதேயல்லாமல் இல்லாவிட்டால் இவரைத் தொட்டு நடக்குமாவென்று எண்ணிக்கொண்டேன். அப்பால் என்னைப் பார்த்து உன் புத்திக்கேற்க இங்கிலீஷ்காரர்கள் வருவார்களென்றுதோணுது. ஒருக்காலும் வரப்போவதில்லை என்று சொன்னுரது மெய்தான் வந்து போரதென்ன? விளையாட்டிலிருக்கிறதா? அங்கேயிருந்து மறுபடி போனதற்கு எத்தனை ஜனங்கள் சேதம், எத்தனை திரவியங்காசு மறுபடி ஒவ்வொன்ருய் வாங்கியல்லோ பழய பாடத்துக்கு வந்து மோர்சா போடவேண்டும்; ஆனபடியினுலே இப்போ இவன் வரச்சே வந்த யோசைப்போலே கோபார்சு சீர்மையிலிருந்து வந்தாலப்போ வருவானென்று யேர்சனை பண்ண வேணுமே யல்லாமல் சீர்மையிலிருந்து பவுன் வராமல் வரப் போவதில்லை என்று என் புத்திக்குக் தோற்றுகிறது. அப்படித்தான் நடக்கப்போரது மிப்படித்தானென்று சொன்னதற்கு மெய்யென்று சொன்ஞர். அப்பால் இந்தப் பட்டணத்து தமிழர்கள் எல்லாம் பட்டணம் பேரய் விடுவோமென்று. தீத்துக்கொண்டு வெளியே போனவர்களை யிப்போ வர வெட்கமில்லையா வென்று கேட்டார் அதுமெய்தான், ஆனுலிந்த ராஜியத்து சட்டம் கலகத்துக்கு ஓடுகிற வாடிக்கையினுலேதான் ஓடினுர்கள். வெள்ளைக்காரர் பயந்த பயத்தை நானென்ன சொல்லப் போகிறேன். வெள்ளைக்காரருக்கு வெளியே வாடிக்கையில்லாததினுலே உள்ளேயிருந்தாலும் தாங்களெல்லாம் பிரிசோனேர் ஆவோமென்று பெகுபேர் எண்ணிக்கொண்டிருந்தது மல்லாமல் வெருவிசை கும்பலாய் பேசியிருக்கச்சே நான் கேட்டதுமுண்டு. வெள்ளைக்காரர் பேச்சு பார்க்கப்போனுல் தமிழரை தைரியவான்களென்று நூறுதரம்சொல்லலாமென்று சொன்னதுக்கு அது மெய்தானென்று ஒத்துக்கொண்டார். இப்படி பின்னையும் லோகாபிரமமாய் பேசியிருக்கச்சே வல்லூர் அந்தணன் வந்த காரியத்தை விசாரிக்கிறதை தொட்டு உங்களுக்கு ஆதாயமே யல்லாமல் மற்றப்படியல்ல வென்று சொன்னதுக்கு முசியே தெபிரோமென் (**d'Espréménil**) யானதுக்குப் போனவிடத்திலே திவாணத்தார் தடை பண்ணினுர்களே அது அந்தணன் பண்ணிவித்ததாகவும் பின்னையும் அனேக பிராதுகள் அவன் பேரிலே எழுதிவந்திருக்குதென்று சொன்னதுக்கு நீங்கள் தயவுபண்ணி மனம் பொருத்துக்கொள்ளுங்கள். தேவரீர்வரை அனுப்பச் சொல்லி, முசியே சாம்பிரேக்கு (**SainFray**) எழுதின பிற்பாடு அந்தணன் பேரிலே பிராது எழுதி வந்ததா அதற்கு முந்தி எழுதிவந்ததாவென்று கேட்டதுக்கு முன்னே எழுதிவந்ததில்லை அதன் பிற்பாடு தானெழுதி வந்ததென்று சொல்லி முசியே தெபிரோமென் (**d'Esprémenil**) காகிதமின்று நான் யெழுசி

வந்ததென்று சொன்னரிதிலே நீங்கள் பார்த்துக்கொள்ள வேண்டியது முசியே தெபிரோமென் (d'Esprémenil) சென்னப்பட்டணம் விட்டு பயணம்புறப்பட்டு ஏனம் போய் சேர்ந்தது தானனுப்பினதிலே டறுகர்குளம் (Chicacale) நபாபுக்குமான சிரம் ஆல்பட்டு (Alberts) துபாசி சென்னப்பட்டணம் எல்லாம் கொட்டி தாட்டியாய் கொள்ளையிட்டுக்கொண்டு போரானென்று அரசி குடுத்ததின்பேரிலே தினுசு அரசி முசியே ஷவசி (Chaisy) அண்டைக்கு வந்து அதின்பேரிலே அந்தண்ணை அனுப்பின விடத்தில் அப்பால் சேனைகளை எல்லாம் பட்டு ஏழாயிரம் ரூபாய் தீந்துப் போய் முசியே தெபிரோமேனையும் (d Esprimenel) பங்காளம் போய்ச் சேர்ந்து இருபது மாசமாய்போயதின் பிற்பாடு உங்களுக்கு அன்பது காகிதங்களெழுதி அதற்கு நீங்களும் உத்தாரமனுப்பியிருக்க இன்றைய தினம் வந்த காகிதத்திலே யெழுதியிருந்தாலதை என்னமாய் என்ன வேணுமோ அது நீர்சர்வக்கினர் உங்களுக்கு தெரியாத பிரயோஜனமென்ன யிருக்கிறது அப்பாலும் முசியே ஷவசி (Chaisy) நடத்தின மாமுலாவே யெல்லாமல் மற்றப்படி ஒருத்தன் மாரிபத்திலே நடந்ததில்லை. அவர் காலம் பண்ணிப்போய் ஒருவருஷத்தின் பேரிலே அதன் மெய்யானது அதற்கு முன் 7, 8 மாசத்திற்கு முன்னே நடந்த பிரயோஜனம் அப்போ முசியே (Chaisy) ஏதாகிலும் அந்தண்ணைத்தொட்டு யாதொருமித்துவர எழுதிவந்ததா அதின் பிற்பாடு முசியே சம்பிரே (Sainpray) ஒரு வருஷமே பிடித்து அமல் பண்ணுகிறானே இப்போ யிவர் கையிலே எழுதி அனுப்பின காகிதத்திலே யிவர்பேரிலே தானேயிந்த பிராதுகளெழுதினவன் இதுக்குமுன் எப்போவாகிலும் ஆச்சனையாயினும் யெழுதியிருந்தால் சரி இவன் நொஷத்தனே சரியென்றும் சொன்னதுக்கு முன் எப்போதும் யெழுதிவந்ததில்லை யிப்போதான் யெழுதிவந்தது யென்று ஒத்துக்கொண்டு, நல்லது முசியே கில்லியார் (Guillard) பதினேழு வருஷ மட்டுக்கும் யானம் அமல் பண்ணியவன் அவனுக்கு நன்றாய் தெரியும்; அவனைக்கொண்டு தெரிஞ்சி கொள்ளுகிறேனென்று முசியே (Guillard) அப்போதானே அழைக்கச் சொன்னார். சேவகனு மழைக்கப்போனான். அப்பால் நானிருநதுக்கொண்டு அவனுங்களுக்கு ஆதாயம் பண்ண வந்தவனேயல்லாமல் நஷ்டம்பண்ண வந்தவனல்லவென்று, சொல்லி தேவரீர் சருங்கினருக்கு தெரிஞ்சதுமே நான் சொல்ல வேண்டியதென்னவென்று சொல்லி யிதல்லாமல் நீங்கள் விளங்க வேண்டியதென்று அதென்னவென்றால், முசியே சாம்பிரே (Sainfray) அந்தணை புதுச்சேரிக்கு வரச்சொல்லி யெழுதி வந்தாப்போலே யிவனுக்கு எத்தனை விசனம் வந்து முசியே பெருத்தமிக்கு (Barthélemy) சென்னப் பட்டணத்துக்கு எழுதினான் பங்காளத்துக்கு அந்த சமயம் முசியே தெபிரோமேனிக்கு (Deprémenil) எழுதி அனுப்பினான்.

அந்தனன் சென்னப்பட்டணத்துக்கு வந்து முசியே பெருத்தலேமிக்கு (Barthilemy) கொண்டுவந்த காகிதத்தைக் கொடுத்தவுடனே காகிதத்தைப் பிரித்துப் பார்த்து நீ காகிதமென்னத்துக்கு கொண்டுவந்தாயென்று கேட்டார் என்று யாதொரு உதவி ஒத்தாசை வேண்டியிருந்தால் நீர் செய்து கொடுக்கவேணுமென்று எழுதிக்கொண்டு வந்தேனென்றும் யிதல்லாமல் நான் புறப்படச்சே இங்கிலீஷ்காரர் புதுச்சேரியின்பேரிலே வந்து யிறங்கி சுத்திக்கொண்டு சண்டை பண்ணுகிறார்களென்று கபுறு நான் போகிறதுக்குள்ளே இங்கிலீஷ்காரர் நிருவாகமில்லாமல் வாங்கிப் போய்விடுவார்களென்றே நான் அன்பது காதவழி தைரியத்துடனே புறப்பட்டு வந்தேன். ஒருவேலை வாங்கப்போக நாலு நாள் அட்டிபட்டால் அவர்கள் வாங்கிப் போகிறமட்டுக்கும் நான் சென்னப்பட்டணத்திலே அல்லோ யிருக்கவேணும் அதற்கு சிலவு சித்தாய் முதலானதுக்கும் அப்பாதுரை அவர்களண்டைக்கு நான் புதுசாய் போகிறபடியினாலே உம்முடைய சிபார்சி காகிதம் துரையவர்களுக்கெழுதி கொடுப்பீர் என்று மிதுகளுக்கு யெல்லாம் உம்முடைய ஒத்தாசை யிருக்கச் செய்யவேணுமென்று காகிதம் வாங்கி வந்தேனென்று சொன்னனும் அதற்கு முசியே பெருத்தலமி (Barthélemy) சொன்னது நீ யிப்போது சொன்னதுக்கெல்லாம் கோந்திராயிரு எழுதிவந்திருக்கிறது கொவர்னதோர் அவர்களுக்கும் நீ கொண்டுபோகிற காகிதத்தில் தானே கோந்திராயிரு யெழுதியிருக்கிறனென்று சொன்னதற்கு நான் கும்பினீரை இருபத்தைந்து வருஷகாலமாய் சேவிக்கிறேன் ஒருத்தருமென்பேரிலே ஒரு குற்றம் நாளது வரையில் சொன்னதில்லை நானிப்போ புதுச்சேரி துரையவர்களண்டைக்கப்போகிறேமென்று முசியே சம்பினேலை (Sainfray) ஒரு பயம் தோற்றாமல் அவனெழுதப்போறதில்லை, ஆனால் ஜனங்கள் யேவல் பண்ணுயிருப்போர் மாரிடுவார்குற்றமாயிருக்கிற விடத்திலே தெண்டிக்கிறாரென்று அந்தணன் ரெஸ்ப்போந்தரி யிடத்துக்கு அப்படி உன்மனதிருப்பானால் போகலாமென்று சொன்னர் அதற்கு என் மனதிருப்பு ஆயிருக்கச்சே தான் அன்பதிங்காதவழி வந்தேன் சுவாமிக்கு அல்லோ என்மனது பரிசுத்தமென்கிறது தெரியும், என் மனது சுத்தமாயிருந்தால் சுவாமி தானே துரையவர்கள் மனதில் யிருந்து சகல சிரேயசும் கொடுப்பாரென்று சொல்லிப்போட்டு வந்தானப்பால் தேவரீருக்கு யெழுதினதுதான் உங்கள் மனதுக்குத் தெரியுமே அவனுக்கு அச்சமில்லாமல் போனால் இப்படி யெல்லாம் நடப்பிக்க காரியமென்ன யிதிலே நீங்கள் பார்த்துக்கொள்ளலாமிதல்லாமல் யானம் கும்பினீர்களுக்கோசத்துக்கு முசியே ஷவசி (Chaisy) கொடுக்கவேண்டிய நாலாயிரத்து அறுநூறு ரூபாய் சீட்டு முசியே ஷவசி (Chaisy) வாங்கிக் கொண்டு பணம் தாரோமென்று சொல்லிக்கொண்டே வந்து அப்பால் காலம்

பண்ணிப்போய்விட்டான். அந்த சம்மதி இரண்டாவதாய் போயிருந்த முசியே லெனுவார் (Lenar) யிப்போ மச்சிலி பந்தத்திலே யிருக்கிறானே அவனுக்கு தெரியுமென்று அந்தப்பத்திரத்தை மதாம் ஷவசி (Chaisy) கையில் வாங்கி கொடுக்கவேணுமென்று நாகய்யன் குமாரன் மிருது நஞ்சய னென்கிறவன் தான் நல்லம்மாள் வீரம ராசாகையிலே தேவரீருக்கு அவுரீல் மாதம் முதல்தேதி இங்கே கொண்டுவந்து கொடுத்த காகிதத்தில் எழுதி யிருக்கிறது அதை நீர் பிராஞ்சு எழுத்திலே எழுதிவரச் சொன்னீர். அந்தப் படிக்கு நான் எழுதி வந்து கொடுத்தேன். அந்த தெலுங்கு காகிதமுமந்த பிராஞ்சுகாகிதமும் நீங்கள் வாங்கிக்கொண்டு பிராஞ்சுகாகிதத்தை படித்துப் பார்த்து அப்பால் யிதுவே மதாம் ஷவசி (Chaisy) சேந்தகாரியமவ ளுடனே கண்டு பேசி அவள் கையில் கொடுத்து அதற்கு உத்தாரம் சொல்லுகிறேனென்று சொல்லித் திரும்பவும் பத்திரம் வாங்கிக்கொண்ட மட்டுக்கும் பணம் கொடுபடாமலிருக்குமாவென்று சொல்லிப்போட்டு எல்லாம் விசாரித்து சொல்லுகிறேனென்று நீங்கள் சொன்ன துண்டு அந்த நாலாயிரத்தி ஆறுநூறு ரூபாய் சீட்டு முசியே ஷவசி (Chaisy) பெட்டியிலேயல்லோயிருக்கவேண்டியது. அந்த சீட்டு முசியே சாம்பிறேன் கையிலே (Sainfray) யிருந்து முசியே லெனுவாரு அன்றைக்குவந்து அந்த சீட்டுக்கு பணம் மதாம் ஷவசியை (Chaisy) முசியே லெனுவார் (Lenar) கேட்டிருந்தால் பெரிய திருட்டுத்தனமாகுமே என்றதுக்குமே கேட்டதுக்குமந்த சீட்டு நீ யிப்போ சொன்னபடிக்கு வந்திருந்தால் பெரிய திருட்டுதானென்று சொன்னார். அது திருட்டு ஆகிறபோது முசியே சாம்பரே (Sainfray) அந்தணன்பேரிலே எத்தனை பிராதெழுதி நீங்களிவனை கோபம் பண்ணிப் போகச் சொன்னதாய்ச்சொல்ல என்ன உபாயமுண்டோ அதுகளெல்லாமவன் பார்க்க வேண்டியது தாமே இவனபேரில் அப்போ அவன் பல சவுத்தாய் யெழுதினானென்று சொல்லுவீர்களே என்று கேட் டதுக்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டு நல்லது அந்தணனை நாளை காத் தாலே அழைத்துவா வென்று சொல்லி உத்தாரம் கொடுத்தார். நல்லதென்று சொன்னேன். குண்டுசாலைக்குள்ளே தோட்டம் போக்கடித்துக் கொண்ட பேர்களுக்கெல்லாம் ஒழுகரை நிலங்களிலே தோட்டங்கள் விடுகிற நிலங்கள் மதிக்கிறதுக்கு மூன்றுபேர் மத்திஸ்தரை நேமித்து யிருக்கிறோம். அதற்கு நிலங்கள் குறிப்பரிஞ்சபேரை தீருவை திட்டமாய் செலுத்துகிறதற்கும் பக்ஷம் பாரபக்ஷமாய் பாராமல் சத்தியமாயிருக்கிறவர்களைப் பார்த்து அழைத்துவா வென்று சொன்னார். நல்லது நாளை காத்தாலே அழைத்துவா ரேனென்று சொன்னேன்.

அப்பால் கலகத்துக்கு வெளியே போனவர்களுடைய வீடுகளெல்லாம் மதிச்சபடிக்கு திங்கள்கிழமைக்குள்ளாக கொண்டுவந்துகொடுத்தால் அந்தந்த

வீட்டுக்காரனுக்கோ அந்தந்த வீட்டை கொடுக்கிறோம். இல்லாவிட்டால் திங்கள்கிழமை முதல் கொண்டு பிராமணர் வீடு துவக்கி ஏலம் போடுகிறோமென்று தமுக்குப்போடச் சொன்னார். அந்தப்படி தமுக்குக்காரனை அழைத்து தமுக்குப் போடச்சொல்லி உத்திரவு கொடுத்துவிட்டேன். அந்தப் படிக்கு அவனும் போட்டான். மதாம் துப்ளேக்சு தாயார் வீட்டுக்குப்போய் அங்கேயிருந்து வெளியிலே யிருந்து பட்டணத்துக்கு நெல்லு கொண்டு வந்து விக்கிற வந்தவாசி முதலான இவ்விடத்து வர்த்தகர்களையும் உள்ளூரிலே யிருக்கிற பேர்களையும் அழைத்துவரச் சொல்லி வந்தபிறகு சொன்னது உங்கள் நெல்லு விக்கவில்லை மெய்தானும் வெளியே நெல்லு வித்த பணம் காசு கொண்டுபோக ஒட்டாமல் தடையாக இருக்குதென்று யிப்படியாக பின்னையும் ஆராவது சோராவாரியாய் நெல் எடுக்கிறார்களாவென்றும் கும்பினீருக்கும் அளந்து கொள்ளுகிறார்களோவென்றும் கேட்டான். அவர்களாதுக்கு எங்களை சோராவாரியாய் அளந்துகொள்ளுபவர்களுமில்லை. கும்பினீருக்கு அளந்துகொடுக்கிறதுமில்லை எங்கள் நெல்லு கொள்ளுவாரில்லாமல் போட்டுவைத்துக்கொண்டு இருக்கிறோமென்றும் [ ]

**விபவ ஞு கார்த்திகை மீ 5 உ க்கு 1748 ஆ நவம்பர் மீ 16 உ சனிவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய் நேற்று கான்பகுதூர் உனக்கு கொடுக்கவேண்டிய ரூபாயை முதல் வட்டிகூட எழுதவந்தது சொல்லென்று சொன்னீர்களே சீட்டு 1 க்கு 5400 ரூபாய் இதற்கு வட்டி ரூ. 3780 சீட்டு எழுதவேண்டியது. ஆனை சிலவுக்கு கொடுத்தது ரூபாய் 1035 இதுக்குவட்டி 724–8–0 நக்ஷத்திர (நக்ஷத்திர்) வி. 400 ரூபாய் 350 ஆக 140 , ஆக வட்டியுள்பட ரூ: 12340 வரவேணுமென்று சொன்னேன். அதின்பேரிலே ராசா சாயபு வந்தவாசிக்குப்போய் பதினைந்துநாளைக்குள்ளே வருகிறதுக்கு அப்துலாயிமான் பின்னை பதினைந்து நாளைக்குள் வருகிறதுக்கு அவன் வாராமல் போனால் கான்பகுதூர் உனக்குக் கொடுக்கவேணடிய பணமும், நமக்கு வாவேண்டிய பணமும், இவன் ரொக்கத்திலே கொடுக்கிறோமென்றும் பேசுகிறானிவன் சிப்பாயிவனுக்கு ஏனிந்த ஜோலி சும்மா பயித்தியக்காரனென்று சொல்லிப்போட்டு உள்ளே நுழைந்துப்போனார் முசியே திலார்ஷும் (Delarche) முசியே பொசேத்தும் (Bausset) வந்து தோட்டங்களை அவரவர் வந்து ஒருத்தரும் யெழுதி வைக்கவில்லை யென்றும் சொன்னார்கள் அதின்பேரிலே துரை அவர்கள் என்னை அழைப்பித்து நீ அந்த தோட்டக்காரரை யெல்லாம் அழைப்பித்து சொல்லச்சொல்ல சொன்னார். நல்லதய்யாவென்று சொல்லிப் போட்டு வந்தேன்.

மத்தியானத்துக்குமேல் இரண்டு மணிக்கு இமாம் சாயபு அவர்கள்
கடுதாசிவந்தது அந்த கடுதாசியிலே பின்னை ஒன்றும் விசேஷசேதி ஒன்று
மில்லையே, பத்து பதினைந்து நாளைக்குமுன்னமே எழுதிவந்த கடுதாசியும்
மத்தலப்பும் அதற்கெழுதின உத்திரவும் தானெழுதியிருக்கிறது. ஆனாலதிலே
பின்னை யெழுதியிருந்த அதிசயமென்னவென்றால்: தமக்கு மச்சிலியந்தர்
குத்தகையாச்சுதென்றும் அன்பதுனாயிரம் ரூபாயிக்கும் ஜாக்கிறதை
ஆச்சுதென்றும் தாம் கர்னாடகத்துக்கு வருகிறதுக்கு பயணமாயிருக்கிறோ
மென்றும் ஆயிரம் அசாம்பி (தங்க மோகர்) அனுப்பிவைக்கச் சொல்லி எழுதி
அனுப்பியிருக்கிறேன். அது வந்த உடனே தங்கள் காரியமெல்லாம் சேகரப்
படுத்திக்கொண்டு வருகிறோம். அந்த உத்திரவு வருகிற மட்டுக்கும் காத்துக்
கொண்டிருக்கிறோம் என்றும் இப்படியாக எழுதியிருந்த வயணமெல்லாம்
துரை அவர்களுடனே சொல்லி அப்பால் இமாம் சாயபு குமாரன் உங்க
ளுக்கு இங்கிலீஷ்காரரை பத்தே பண்ணபார்க்குபாதி எழுதி தங்கள் தகப்ப
னருக்கு மச்சலிபந்தர் ஆச்சுதென்றும் அன்பதினாயிரம் ரூபாயிக்கு ஜாக்
கிறதை ஆச்சுதென்றும் ஆர்காட்டுக்கு வருகிறோமென்றும் எழுதியிருக்கு
தென்றும் சொன்னதற்கு மோபார்க்கு பாதி வெகு நாளைக்கி பிற்பாடு
அனுப்பினேனென்று ஒதட்டை பிதுக்கி இமாம் சாயபு என்னதுக்கு மச்சிலி
பந்தரை குத்தகை வாங்கிக்கொண்டு இவ்விடத்துக்கு வருகிறதாய் யோசனை
பண்ணினது என் மனதுக்கு சந்தோஷமில்லை யென்று சொன்னார்.

நாஜர்சங்கு காகிதத்திலே பின்னையொன்றும் யெழுதவில்லை. சூரிய
னுக்கு காட்டினால் நெருப்பு விழுகிற கண்ணாடியாலே பெரிய பெரிய கண்
ணாடியாய் அஞ்சாறு கண்ணாடி அனுப்பச்சொல்லி யெழுதியிருந்ததென்று
சொன்னதற்கு இவ்விடத்திலே கண்ணாடியில்லையென்று உத்தாரம் சொல்லி
இமாம் சாயபுக்கு நீர் எழுதின காரியத்துக்கெல்லாம் பதிலுத்தாரம்
எழெட்டு நாளைக்குள்ளே எழுதி அனுப்பினோமேயென்று பதிலுத்தார
மெழுதச்சொன்னார். இமாம் சாயபு மகனுக்கு பதிலுத்தாரம் உம்முடைய
மோபார்க்குபாதி மெத்த நான் பட்டுவந்தாலும் நாம் அங்கீகரித்துக்கொண்டோ
மென்று எழுதச்சொன்னார்; நல்லதென்று சொல்லிப்போட்டு வந்தேன்.
ஆனால் இமாம் சாயபுக்கு எழுதின காயிதத்திலே நாசர்சங்குக்கு மோ
பார்க்கு பாதி அவர்கள் தகப்பனார் நிசாம்காலம் பண்ணிப்போய் அந்த
தவுலத்துக்கு இவர் எஜமானனானென்றும் மோபார்க்குபாதி யெழுதினது
அந்த மோபார்க்கு பாதி காகிதமும் அன்பது அசாம்பியும் கோவாதனதாசு
கடையிலே முதலிட்டு உண்டிகை காகிதம் வாங்கி அனுப்பச்சொல்லி எழு
திய சேதி மாத்திரம் துரையவர்களுக்கு சொல்லவில்லையேனென்றால்
அதற்கு நாசர்சங்கு பதில் காகிதம் பிறகே அனுப்புகிறோமென்றும் யெழு

தினபடியினாலே அது வந்தபோது சொல்லுவோமென்று சொல்லவில்லை. இந்த சேதி கேழ்க்கச்சே ரொம்ப உச்சாகங் கேழ்க்கவில்லை. அதனாலவசிய மாய் கேட்டும் கேளாதபடி யிருந்தபடியினாலேயும் சொல்லவில்லை.

**விபவ ஸ்ரீ கார்த்திகை மீ 6 உக்கு 1748 ஆ நவம்பர் மீ 17 உ ஆதிவாரம்**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே என்னை அழைத்து முகம்மது கமாலு தல்லவா பொன்னேரி சீர்மை தாலுக்கு (குவர்னர் என்று கேட்டார்.) அதற்கு உள்படப் பழவேர்க்காடு கூட சொன்னதக்கு முகம்மதுக் கமாலுக்கு யென்காகிதமாய் ஒரு காகித மெழுதி அந்த காகிதத்திலே யெழுதவேண்டியது முசியே பெடுதலமி (Barthélemy) சென்னப்பட்டணம் கொமாந்தாம் சிறுது காரியநிமித்திய மாய் யெழுதினத்துக்கு நீருமந்தபடிக்கு செய்கிறதாயிருக்கிறீராம். அதற்கு ஒலாந்தகாரன் பழவகாட்டிலிருக்கிறவர்களை விகாதம் பண்ணுகிறார்களாம். சீர்மைக்கு நேரே சமானுயிருக்கச்சே அவர்களுக்கு விகாதம் என்ன கவைக்கு வரப்போகுது இப்பவும் நம்முடைய பேரிலிருக்கிற பூராவச்ச சிநேகிதத்தை எண்ணி முசியே பெடுதலமி (Barthélemy) யெழுதின காரியம் அனுகூலம் பண்ணிக்கொடுக்கவும் என்று உபசாரமாய் யெழுதிக்கொண்டு வாயென்று சொன்னார். அந்தபடிக்கு காகிதம் யெழுதிவித்து முத்திரைப்போட்டு கொடுத்தேன். அந்த காகிதத்துடனே தாம் முசியே பெடுதலமிக்கு (Barthélemy) யெழுதின காகிதத்துடனே சென்னப்பட்டணத்துக்கு அனுப்பிவைத்தார் அப்பாலே நெல் யெப்போ வருமென்றுகேட்டார். எட்டு பத்து நாளைக்குள்ளே வந்துசேரும் புகளூடு யேரிக்கு அஞ்சுமாசத்தைக்குத் தண்ணீர்வந்தது இனிமேல் மழைப்பெய்தால் போக்குவிட வேணுமென்று சொல்லி இந்த வருஷமராறியமெல்லாம் வரகு, கேழ்வரகு, அறுப்பு விபரீதமா அறுத்து முடியாது அப்படி விளைந்திருக்குது இந்த வருஷம் தானியஞ் சவுத்துப்போவுமென்று உழுந்தையேரி யெடுத்துப் போச்சு; கட்டவேணுமென்று இதுமுதலான வயணமெல்லாம் சொன்னதுக்கு சுவாமி அப்படித்தானே தயவுபண்ணுவரா என்று சொன்னார். அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்து நேற்று மாலை துரையவர்கள் சொன்னபடிக்கு காண்பாதூர் பேரிலே வரவேண்டியது. நாளது கார்த்திகை மீ நாலாம் தேதி வரைக்கும் வட்டியுள்பட பன்னீராயிரத்து முன்னூத்தி நாற்பது ரூபாயென்று அப்துலாயிமான் சமேதார் சந்தா சாயபு வீட்டு முத்திராசோபண்டிதன் முகவிலேயும் மதனுந்த பண்டிதரைகூட வைத்துக் கொண்டு யெழுதிவித்துக்காண மாத்தூர் எழுதி கொடுத்த கடன் சீட்டு முதலானதுகளெல்லாம் காண்பிச்சு அப்பால் நடக்கவேண்டியது, துரை

யவர்கள் உத்தாரம் எப்படியோ அப்படியே நடப்பித்துக்கொள்ள என்று சொல்லி முசியே பொசேத்துக்கு (Bausset) காண்பித்து கான்பகனூர் கடன்கொடுக்கவேண்டியது முதல் ரூபாய் அறநூத்தி எழுபத்தி ஏழும் வட்டி முன்னூத்தி எழுபத்தி ரெண்டும் ஆக ஆயிரத்தி நாற்பத்தி ஒன்பது ரூபாயும் கூட அப்துலாயிமான் ராசோபண்டிதன் கையிலே எழுதிவித்து போட்டு அப்பாலவர்கள் கூட நானும் வீட்டுக்குப்போகிறோம் அப்போ அப்துலாயிமான் சொன்னது. சந்தா சாயபு மகன் ருசாசாயபு வந்தவாசிக்குப் போய் பதினைந்துநாளைக்குள்ளே வருகிறதுக்கு நான் பின்னையிருக்கிறேனென்று சொன்னதுக்கு வராதேபோனால் உங்கள் சம்மதி முசியே பொசேத்துரை (Bausset) சம்மதிகளிதுகளெல்லாம் அந்த துகைபாக்கி இவ்வளவென்று சொல்லி அந்தபடிக்கு நான் ரூபா சம்மதிபண்ணுகிறதாய் பேசினேன். நாளைக்கு உத்திரவுவாங்கி அனுப்புவிக்கிறேனென்று சொன்னதுக்கு பெரிய மனுஷருக்கு செய்த உபகாரம் விருதாவில் போகாதென்று லோகாப் பிரமமாயும் பேசியிருந்ததே அப்பாலுங்காட்டும் வீட்டுக்குப்போனது.

இற்றைநாள் தமுக்குப்போட்டது நாளை 7 உ திங்கட்கிழமை காலமே பிராமண தெருவிலே நாலு வீடுகள் ஏலம் போடப்போகிறோமென்றும் அந்த வீட்டுக்காரர் நாராயண சாஸ்திரியார், பஞ்சாங்கம் ராசப்பய்யன், பிறும்மாண்ட சுப்பய்யன் நாலு பேர் வீடு யேலம் போடப்போகிறோமென்று வயணஞ்சொல்லி தமுக்குப்போட்டார்கள்.

என் ஜாதகபடிக்கு கோபால்சுவாமி எழுதிகொடுத்துப் பிரகாரம் சுக்கிற திசையிலே ஐந்து மாதம் நாளிருப்பதற்கு நேத்து அஞ்சு தேதி வரைக்கும் நாள் சரி. ஆனால் முன் போகப்பட்ட சுக்கிர சித்திரத்திலே பூருவாரா தன் திரவியம்வந்தாலும் சத்துருக்கு விருத்தியாயிருந்து அப்பால் வுத்திரார்த்தம் வந்தாப்போலே சத்துருக்கள் எனக்கு யெப்படி விருத்தியாய் காரிய பாகங்களும் அவ்விடத்துக்கும் அவ்விடம் நின்று தோட்டங்கள் முதலானதுகளெல்லாம் நஷ்டம் வந்தது; நஷ்டம் வந்ததானால் அப்பால் குடியாயிருந்ததுமல்லாமல் சத்துருக்கள் அபாண்டமாய் சொன்னதுகள் மிதமில்லாமல் இருந்தபடியினாலே பட்டணத்துக்கும் கலக முதலானதுகளெல்லாம் நடந்தது. இன்றையதினம் ஆதிவாரம் நாள்முதல் சுக்கிர திசையிலே புதபுக்தியிலே சூரிய சந்திரன் அன்பத்தொரு நாளிலே என்ன நடக்குதோ அறியவேண்டும்.

இற்றைனாள் சாயங்காலம் சென்னபட்டணத்திலிருந்து ஒரு சுலுப்பு இக்குடுக்கை முதலான சாமான்கள் ஏத்தி வந்ததை (கரை) பிடித்தான் அப்

பாலே கோட்டைக்கு அஞ்சு பீரங்கிப் போட்டான். கோட்டையிலேயும் பதில் போட்டான் அப்பாலந்த சுலுப்பு கப்பித்தான் எறங்கிவந்து சொன்னான் நேற்று ஒன்பது மணிக்கு பாயெடுத்து வாச்சே சென்னபட்டணத்துறையிலே பெரிய கப்பலானது கொண்டுவந்து வைத்து பிடித்து பதிமூன்று பீரங்கி போட்டான். கோட்டையிலேயும் பதிமூணுபீரங்கிப் போட்டார்கள். அப்பால் வெகு படகுகள் கப்பல்களுக்கும் கரைக்குப் போக்கு வரத்தாயிருக்கிறதெல்லாம் பார்த்தேனிந்த வேடிக்கை. பாயெடுத்து ஓடுகிறதை நிருத்தி மூணுசாமம் மட்டுக்குமிருந்துப்பார்த்தேன். அப்பால் நான் பாயெடுத்து மூணுசாம மட்டுக்குமிருந்துப் பார்த்தேனப்பால் நான் பாயெடுத்து ஓடிவந்தேன். வாச்சே சென்னப்பட்டணத்துக்கும் புதுச்சேரிக்கும் நடுவே ஆலம்பரையிலே ஒரு கப்பல் சதுரங்கப்பட்டணத்தண்டையிலே ஒரு கப்பல் கோவலத்தண்டையிலே ஒரு கப்பல் இப்படி மூன்று கப்பல்களிருக்கிறது இந்த கப்பல்களை எல்லாம் பார்த்துக்கொண்டு வந்தேன் அவர்கள் கண்ணுக்கு எட்டினாப்போலே யிருந்தார்களென்று சொன்னான் பின்னையும் ஆருசாமமிருந்தவன் கப்பல் சமாசாரத்துக்கு முசியே பெடுதலமிகையிலே (Barthélemy) ஒரு காகிதம் வாங்கிவராமல் போனாயென்று துரையவர்கள் கேட்டதற்கு சுலுப்பு கப்பித்தான் சொன்னது நான் உத்திரவு வாங்கிக்கொண்டு புறப்பட்டவன் யேன் யிருந்தாயென்றும் வந்தாயென்றும் சொல்லப்போனார்களென்றும் வந்து விட்டேனென்றும் சொன்னான். அப்பால் துரையவர்கள் முதலான வெள்ளைக்காரர்கள் தமிழர்கள் கேட்டபேர்களுக்கெல்லாம் மெத்த சந்தோஷத்தை அடைந்து கப்பல் காகிதத்துக்கு துரையவர்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார் மற்றையபேருமப்படிதான் இன்று சூரியசித்திரம் துவக்கினத்திலே யிப்படி சுப்பிரதமாய் கண்டமட்டுக்கும் இந்த அன்பத்தொரு நாளைக்கும் சுபத்தின்பேரிலே சுபமாயிப்பெர்னுவை வரத்தும் நன்மையும் உண்டாயிருக்குமென்று தோணுது நடக்கிற காரியத்தின்பேரிலே அறியவேண்டியது. இதெல்லாம் சென்னப்பட்டணத்திலிருந்து ஒன்பது சலங்கு பொம்பு இருநூருமட்டுக்கும் பின்னையும் சாமான்களைக்கூட ஏத்திவந்தது நல்லகாலத்துக்கு யோஷியமாகச்சே இங்கிலீஷ்காரன் கப்பல் வழிமுடியயிருந்தும் அகப்படாமல் வந்துசேர்ந்தது.

**விபவ ஞு கார்த்திகை மீ 7 உக்கு 1748 ஆ நவம்பர் மீ 18உ சோமவாரம்**

இற்றைநாள் காலத்தாலே முசியே திலார்ஷ் (Delarche) வீட்டுக்குப் போய் முசியே திலார்ஷ்யுடனேயும் (Delarche) ராமகிருஷ்ணசெட்டி வீடு மல்லெட்டி செட்டி வீடு என்று எழுதிக்கொண்டுபோனார்களென்று சொன்னதற்கு நல்லதென்று தள்ளி எரிந்துப்போட்டான். அப்பால் அம்மையப்ப முதலியார் வீடு வெள்ளாழ தெருவிலே இருக்கிற வீட்டுக்கு அவர்தானே

அவன் ரோகஸ்தனென்று சொல்லி ஒரு வேளை துரை அவர்கள் பிரஸ்தாபம் பண்ணினால் கும்பினீர் வர்த்தகர்கள் பிரஸ்தாபம் பண்ணவேணுமென்றும் அவன் வியாதியினாலே எப்போதும் போக்கு வருத்தாயிருக்கிறவனென்று சொல்லவேணுமென்று சொன்னார். அவசியம் கும்பினீர் வர்த்தகரை சேவித்தவன் அப்படியே சொல்லுவார்கள். உள்ள பசுமையுமதுதானென்றும் சொன்னேனப்பால் தியாகப்பசெட்டி முத்து செட்டி பேச்சு வீட்டு நிமித்தியஞ் சொன்னதுக்கு நல்லது பார்ப்போமென்று சொன்னாரப்பால் கொடுங்கோலாய் நடக்கிற சமாசாரம் பேசியிருந்து இப்படி நடக்கிறது சரிடாது என்று சொல்லி பின்னையும் லோகோபிராமமாய் பேசியிருந்து அப்பால் அருணாசலசெட்டி கூத்தியாள் தெய்வானை வீடு எழுதிக்கொண்டு போனார்கள். அந்த வீடு நாங்கள் கட்டி வைத்த வீடு எங்கள் கையிலே கணக்கிருக்குமென்று அருணாசலசெட்டி அண்ணன் மகன் கனகசபை செட்டி வந்து சொல்லிக்கொண்டான். அது எப்படி ஒத்துக்கொள்ளுகிறது அந்த மனையாகிலும் கொண்ட சீட்டுகள பேருக்குயிருந்தாலதைப் பேசலாம் என்று சொல்லி அப்பால் முசியே திலார்ஷ் (Delarche) உடனே சொன்னதுக்கு அவருமப்படியே சொல்லி பார்ப்போமென்று சொன்னார். அந்த மட்டிலே நேத்து கப்பல் வந்தசேதிக்கு இன்றைக்கு காகிதங்கள் வருமே அது வந்த பிற்பாடு விகிதமாய் தெரியுமென்று பேசியிருந்து நான் பிராமணத்தெருவு வீடு ஏலம் போடப்போகிறார்கள் குவர்னதோரை கண்டு பேசிப் போட்டு ஏலம் போடப்போக வேணுமென்று சொன்னார். நல்லது என்று அனுப்பிவித்துக்கொண்டு துரை வீட்டுக்கு வந்தேன். அவரும் வந்து பிராமணத்தெருவிலே ஏலம் போட்டார். ஏலம் போட்ட வயணம் முசியே திலார்ஷ் (Delarche) அண்டையிலிருந்துக் கொண்டிருக்கிற பள்ளிப்பயல் குழந்தை என்கிறவன் வாசப்பய்யன் வீட்டை ஏலத்திலே நாற்பத்திரெண்டு விராகனுக வாங்கினான். நாராயண சாஸ்திரியார் வீட்டை முசியே துருவேத்து (Drauet) முப்பத்தி மூணு விராகனுக வாங்கினான். பிரும்மாண்ட சுப்பய்யர் வீட்டை மலை கொழுந்தை முதலியார் மகன் வாலாமுதலியார் இருபத்தி மூன்று வராகனுக வாங்கினான். விசுபதி சாஸ்திரி வீட்டை சம்பா கோயிலுயிசுப்பிரகாசனிருபது வராகனுக வாங்கினான். இந்தபடிக்குப் ஏலமான பிற்பாடு முசியே தெலார்ஷ் (Delarche) வீட்டுக்குப் போச்சுதே நாளைக்கு அஞ்சு வீடு ஏலம் போடுகிறதாய் தமுக்குப்போடச் சொல்லி போனானென்று கூறு வந்து சொன்னார்கள்.

இற்றைநாள் காலத்தாலே அரும்மாத்தப்பிள்ளை குமாரன் முத்தய்யன் அரும்மாத்தப்பிள்ளை சாவடியிலே சமுசாரத்துடனே போயிருக்கிறானென்று தட்டுமுட்டு சகல சாமானும் அங்கே வைத்துக்கொண்டு கலகமானலப்படித்

தானே பயணம் சாகிப்போயிருக்கிறனென்றும் பிள்ளையும் என்ன ஆரார் மதாம் துப்ளேக்சுடனே கப்பும் தாருஞ் சொன்னார்களே நொண்டி சவரி முத்து தானுக்கு சேவுகர் அன்பது பேர் அரும்மாத்தப்பிள்ளை சாவடியிலே போயிருக்கிறார்களே அவர்கள் என்ன என்ன சொல்லுவார்களோ அதின் பேரிலே நேற்று ராத்திரி அவனை தட்டுமுட்டு, புடவை, மூட்டைகள், தலக்காணி, மெத்தை உள்பட சாவடி தவலை, சொம்புகளுள்பட நொண்டி சவுரி முதது எடுப்பித்துக்கொண்டு முத்தையப்பிள்ளையும் அழைப்பித்துக் கொண்டு இன்று காத்தாலே ஏழு மணிக்குக் கொண்டுவந்து மதாம் துப்ளேக்சு ஆண்டையிலே கொண்டுவிட அவன் புடவை மூட்டை தட்டு முட்டுகளெல்லாம் வைத்துக்கொண்டு முத்தய்யனை வீட்டுக்குப் போக சொன்னதாக வந்து கபுருசொன்னார்கள். தட்டுமுட்டு யிவ்வள வென்றும் புடவை மூட்டைகள் இன்ன இன்னதென்றும் வயணம் தெரியாது. தட்டுமுட்டுகளில் குதிரை வெள்ளி முஸ்தீப்பும் பல்லக்கு வெள்ளி மூஸ்தீப்பும் ஐனூரு ரூபாய்க்கு குதவை வைக்கிறேனென்றும் வழுதாவூருக்கு ராமபத்திர ரெட்டியாருக்கு யெழுதி யனுப்பி ஐனூரு ரூபாய் அழைப்பித்ததுக்கு ஈடு அனுப்ப வைத்துக்கொண்டிருந்தானென்றும் புடவை மூட்டை விட்டு புடவையே அல்லாமல் வேறே யில்லையென்றும், அரியப்பமுதலியார் எளச்சியப்பனுடனே எனக்குச் சொல்லச்சொல்லி அனுப்புகிறது பொய்யே மெய்யே நான் அறியேன் இனிமேல் தெரியும்.

அப்பால் ஏழு மணி வேளைக்கு முந்தாநாள் சென்னப்பட்டணத்துக்கு கப்பல் வந்ததுக்கு அதின்பேரிலே வந்த காகிதங்களும் சென்னப்பட்டணம் முசியே பெடுத்தலமி (Berthelemy) எழுதின காகிதங்களும் வந்து துரையவர்கள் படித்துக்கொண்டிருந்தார் அந்த வயணமின்னதென்று வெளிப்படவில்லையென்று சாயங்காலம் நாளை காலமே இதற்குள்ளே தெரியும் இரண்டு மூணுபேர் வெள்ளைக்காரர் சொல்தாதுகள் சண்டையும் போது வியாதியென்றும் இஸ்பத்தாலே போட்டுக்கொண்டிருந்தவர்களை இத்தனை நாள் இரண்டு மாதத்திலே குருக்கே ஒரு மரம் போட்டு கட்டி நாலுபேர் கூலிக்காரரை எடுத்துக்கொள்ளச்சொல்லி பத்து பேர் வெள்ளைக் காரரைக் கூட்டிக்கொண்டு பிறகே தம்பிரு அடித்துக்கொண்டு அவன் கழுத்திலே ஆட்டுத்தோலைப்போட்டு முகத்திலே கரியும் சாணியும் தடவி தெருத்தெருவாய் எடுத்துக்கொண்டு திரிஞ்சி அப்பால் துரை வீட்டுக்கு வந்த விடத்திலே துரையவர்களை மதாம் கிருக்கேழ்காவிட்டு விடச் சொல்லி அந்த சொல்தாதுகளுக்கு அஞ்சு ரூபாய் நாம் கொடுத்துப் போகச் சொன்னார். அந்தப்படிக்கு அந்த சொல்தாதுகள் பசீது பண்றது இனிமேல் இருக்கிறவர்கள் நடவாதபடிக்கு வெட்கம்வர வேணு மென்று நடப்பித்தது என்று சொன்னார்கள்.

பிரபு காகிதம் அலுவலின் பேரிலேயிருந்தபடியினாலே மத்தியானம் தெரிசனம்மாத்திரமேயல்லாமல் சம்பாஷணையில்லை. சாயங்காலம் ஆறரை மணிக்கு அழைப்பித்தார் அப்போதானெழுதிகிரக்க பினத்திலே பெரிய லீவுரு காகிதங்கள் முன் சீர்மைக்கு யெழுதினதுக்கு சவ்வாதுகளெழுதி யிருக்கிற லீவுருபோலே காணுது. அந்த லீவர் படித்துக்கொண்டு புகை பிடித்துக்கொண்டிருந்தார். அப்போ நான் போய் ஆசாரம் பண்ணின உடனே கடைக்கு எம்மாத்திரம் நெல் பொதிவந்ததென்று கேட்டார் நானூரு பொதிமட்டுக்கும் வந்ததென்று சொன்னேன். அதற்கு அஞ்சுபடி விழுக்காடு விற்கிறார்களே கடையிலே பொதி விஸ்தாரமா வருகிறாப்போலே ஆச்சுதே ஆறுபடியாக்கிப்போடப் போகாதாவென்று கேட்டார். அவர்களஞ்சுபடிக்கு ஒசந்து விக்கப்பட்டோமென்கிறார்களென்று சொன்னதுக்கு நீ அவர்களுக்கு தெரியபடச்சொல்லி ஆறுபடிவாங்கினால் நல்லது இல்லாவிட்டால் பின்னை ஒருத்தனை வாங்கசொல்லுகிறேனென்று சொன்னதற்கு நயம்வர பார்க்கிறது தான் ஆறுபடிக்கு கொடுக்கிறோமென்றால் அப்படிவாங்குவோமென்றாப் போலே சொன்னேனிதிலே ஒரு வெள்ளைக்காரன் வந்து பேசவந்தான் நான் செவ்வையாய் பாக்குகிடங்கிலே வந்ததிற்கு அங்கேயிருந்து மலையப்பசெட்டி ரெண்டாந்தார குமாரன் சிதம்பரசெட்டி மகனை கலியாணம் பண்ணியிருந் தவன் நாகூரிலே போய் செத்துப்போனானென்று சேதி வந்தது அதின் பேரிலேயும் கிஷ்ணன்செட்டியை விசாரித்துப்போட்டு எட்டரை மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

விபவ ஸூ கார்த்திகை மீ 8 உக்கு 1748 ஆ நவம்பர் மீ 19 உ அங்காரகவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களென்ன செய்கிறாரென்று போய் விசாரித்தால் கதவை சாத்திக்கொண்டு நேற்று சென்னபட்டணத்திலே யிருந்து சீர்மை காகிதங்கள் வந்ததே அவ்விடத்துக்கு வந்த சீர்மை கப்ப லிலே மறுபடியும பயணம் பண்ணி அனுப்புகிறதற்கு ஆக காகிதங்களையெழு துகிறபடியினாலே கதவை மூடிக்கொண்டு விசேஷித்த சந்நடிபண்ணாமல் யெழுதுகிறாரென்று சொன்னார்கள் ஆனபடியினாலே பாக்கு கிடங்குயாகிய நம்முடைய பட்டிக்காணவிலே நானே யிருந்தேன். அப்பால் பதினொருமணி வேளை அழைப்பித்தனுப்பி வைத்தார். போனாப்போலே கடைக்கு நெல்வந்த தாவென்று கேட்டார் இந்தமட்டுக்கும் பொழுது விடிந்த பிற்பாடு யிருநூறு பொதிமட்டுக்கும் வந்தது இன்னம் வந்துகொண்டேயிருக்கு தென்றும் சொன்னதுக்கு நேத்தைக்கு எவ்வளவு பொதிவந்ததென்று கேட்டார். நேற்றைக்கு நெல் பொதி நானூற்றி அன்பத்தெட்டும், அரிசி பொதி இரு பத்தினாலும் கொள்ளு பொதி இருபத்திமூன்றும், கம்பு பொதி யெட்டும், கேழ்வரகு பொதி ஐந்தும், முத்துக்கொட்டை பொதி பதினேழும் நெய் சித்

தகை 23 பாக்கு முடிச்சு ¼, இப்படி நித்தியம் பட்டணத்துக்கு தானியம் முதலான தினுசுகள் தாவிலில்லாமல் வருகிறது. விலையுடனே சேர்ந்து மாத்திரம் நீங்கள் சொன்னபடிக்கு ஆருபடிக்கி வரவில்லை சம்பா நெல்லா னலே முக்கால்படி, கார் நெல், ஐந்துபடியென்று நிற்கிறார்கள் அந்தவிலைக்கு வாங்காவிட்டால் சனங்கள் சும்மா வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆன படியினலே அந்த விலையிலேதானே யிருந்து இப்போ விஸ்தாரமாய் மழைப் பேஞ்சபடியின லே இனிமேல் கார் அறப்பும் வரும் விஸ்தாரமாய் அனுப் பினபடியினலே கேழ்வியாகும் நன்னிச்சையாய் ஒசந்துப்போம் தானியங்கள் கட்டுக்காடை வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் வையார்கள் விட்டுவிடு வார்களானபடியினலே ஒசந்துப்போம். தானியங்களும் விஸ்தாரமாய் வரத்து உண்டாயிருக்குமானல் விலை மாத்திரம் அவர்கள் மனதுபடிக்கே இதுவரைக்கும் நடப்பித்த சாடைபடிக்கே வருகிறபடியினலே வருகிறார்கள் சந்தோஷமாய்த்தானே கொண்டுவருகிறார்களென்று சொன்னேன்

சயிந்தல்லிகான் மோபார்க்குப் பாதி காகிதமெழுதினனென்று சொன் னதற்கு உசேன் சாயபு தப்பியாவென்று கேட்டார். ஆமென்று சொன் னேன். அதின்பேரிலே அந்த மோபார்க்கு பாதியிலே ஒரு பரிகாரமாய் உபசாரமா யெழுதியிருந்தாலும் நானவருக்குமிவருக்கும் வெந்திறேந்தரு சினேகம் விருத்தியாய் நடக்கவேணுமென்று பின்னையு முபசாரமாயிஷத்த வாத்தியமாய் சொன்னதுக்கு இங்கிலீஷ்காரருக்கு உசேன் சாயபு மாரிபத் திலே நடக்குதென்று சற்று மனசிலே அசுவாசியமுண்டு. அதினலே நன்றாய் கேழ்க்கவில்லை; அதை விட்டுப்போட்டு போளூர் மும்தலிகான் மோபார்க்கு பாதி எழுதாமல் போனனென்று சொல்லி தக்காசாயபும் யெழுதாதே போனனென்றும் சொன்னர். மெய்தான் அதுதானென் மனதிலே ரொம்ப வருந்துதென்று சொன்னதுக்கு அவர்களைப்போலே சின்ன மனுஷரில்லை யென்று சொன்னர். மெய்தானென்று சொன்ன பிற்பாடு நாசறசங்கு என்ன யெழுதினனென்று கேட்டார். அவர் காயிதத்திலே பின்னையொன் றும் யெழுதவில்லை. அவன் கெஜம் நிலத்திலே அரைகெஜமகலத்திலே விருத்தரமாயிருக்கிறது. நெருப்பு விழுகிற விதுளு அஞ்சாறு வேணு மென்று யெழுதியிருக்குது அதுவேயல்லாமல் வேறே யெழுதியிருக்க வில்லை என்று சொன்னதுக்கு நல்லது அந்த காகிதத்துக்கு பதில் காகிதமெழுதவேணும் என்னவென்றால்: நாமெழுதின வீதுளு யிப்போ சரியாயில்லை இப்போ சீர்மைக்கு காகிதங்கள் போகுது அதிலே தாங்கள் பொற்மாசியம் எழுதியிதல்லாமல் விந்தை விந்தையாய் தொப்பி தினுசு களுண்டு அது பார்க்கிறதுக்கும் பெகு அதிசயமாயிருக்கும் திருஷ்டிப் பிரியமாகவுமிருக்கும் அப்படிப்பட்ட தினுசுகளுண்டு; அப்படிபட்ட தினுசு களை அனுப்பச்சொல்லி யெழுதினேம் அதுகள் தங்களுக்கு அனுப்பு

கிறேமென்று யெழுதச்சொல்லி அப்பால் அன்வர்த்திகான் இந்த ராச்சியமாளுகிறவன் விவேகத்திறுணிகள் போதாதபடியினாலே இந்த ராச்சியத்திலே எங்களுக்கு இங்கிலீஷ்காரருக்கும் கலகமுண்டால் இத்தனை தூரத்துக்கிடமாச்சுது, விவேகத்துடனே நிருவாக முண்டாயிருந்தால் இப்படி நடக்க அறியாது. இதல்லாமல் இங்கிலீஷ்காரன் எங்கள் பேரிலே வந்து சண்டை பண்ணினபோது அப்துல் சலிலேயும் சிறிது தனமும் குமுக்குங்கூட அனுப்புவித்தார்கள் உங்கள் அதப்பு நிமித்தியம் அதை மாப்பு பண்ணி மனம் பொருந்தோம். இனிமேல் அவர்களுக்கு வராமல் படிக்கு தாக்கீது யெழுதியனுப்புங்கோள் அப்படி நீங்கள் யெழுதியனுப்பியுமவர்கள் வந்தால் நாங்களினி மனுசு பொருக்கத்தக்கதில்லே அன்வர்த்திகான் சீர்மை என்ன செய்வோமோ தெரியாதென்று எழுதி சீக்கிரமத்துக்கு பயணம் பண்ணி யனுப்பென்று சொன்ன சாடைப்பார்த்தால் பிற்பட்டயில்காதுருலே இரண்டு ஸகாதுரு பிடிபட்டதாய் சொல்லிக்கொண்டசேதி மெய்போலேயும் காணுது தத்துகாலி நம் கப்பல் வரத்துக்கு இடமில்லேயென்றும் பசுக்கரையிலிருந்து சென்னப்பட்டணத்துக்கு வந்த கப்பலிலே சேதி வந்ததாய் தோற்றுகிறதெப்படியென்றால்: இந்த இமாம் சாயபுக்கு காகிதம் சனிக்கிழமை தினம் வந்தது அன்றையதினம் படித்து சொன்னதற்கு அங்கீகரித்து கேளாமல் அசுவாசியமாய் கேட்டாலும் நானெழுதின மோபாக்கு பாதிகாகிதத்துக்கு பதில் காகிதம் பின்னாலே வருதென்றெழுதிருக்கிறபடியினாலே அது வந்த பிற்பாடு பார்த்துக் கொள்ளுவோம். இமாம் சாயபு காகிதத்துக்கு பதிலுத்தரம் நாமெழுதி அனுப்பியிருக்கிறோமே அது வந்த பிற்பாடு ஆகிறது. இமாம் சாய்பு மகனுக்கு மாத்திரம் உம்முடைய மூப்பார்க்கு பாதி காகிதம் மெத்த பிரீதி வந்ததென்றெழுதி அனுப்பச்சொன்னார். இப்போ சென்னப்பட்டணத்துக்கு ஒரு கப்பல் வந்து அந்த கப்பலிலே வந்த காகிதம் பிடிச்சிகொண்ட பிற்பாடு நாசறுசங்கு யிமாம் சாயபு காகிதமெழுதச் சொன்னதும் அதிலே இங்கிலீஷ்காரர் இனிமேலும் வருகிறதாகவும் அவர்களுக்கு குமுக்கு சுபர்வராமல் யெழுதச் சொன்ன சாடையிலேயும் பேச்சுகள் பேசின ஜாடையாலேயுமப்படி தோணுது கப்பல் சித்திரை, வைகாசி மாசத்தையிலே அல்லாமல் தை மாதம் பிறந்தாப்போலே வருவதாய் தோத்தவில்லே. அப்பால் சுவாமி சித்தமென்னமே அப்படி நடக்கும் அது யாருக்கும் தெரியாது. அப்பால் பிறபு திருச்சினாப்பள்ளியில் வைக்கில் சுப்பய்ய இருக்கிறனவனுக்கு எழுதச் சொன்ன சாடை என்னவென்றால்: அப்துல் சலில் இங்கிலீஷ்காரருக்கு மத்தத்து வந்ததுக்கு இவர்களுக்குமவர்களுக்கும் உடன்படிக்கை என்ன அந்த வயணமும் அவன் வந்தவனுக்கும் பவுன்சுக்கும் தினசரி என்ன கொடுத்தார்களென்று மெழுதச் சொன்னார். இதல்லாமல் இப்போ அவர்கள் வக்கீலங்கே யிருக்கிறவன் நபாப்

அன்வர்த்திகான் முதலான பேருடனே என்னென்ன பேச்சுகள் நடத்தி ருன், இதுகளை தக்கிக்காரர் விசாரித்து அப்போதைக்கப்போ எழுதி அனுப்பச்சொல்லி வக்கீலுக்கு யிப்போதானே யெழுதி அனுப்பென்று சொன்னால் இத்தனை நாளுமிந்த பிரஸ்தாபமே பண்ணுமலிருந் தவர் சொன்னாலுங் காது கொடுத்து கேளாதவர் இப்படிக்கு இப்போ தானே யெழுதியனுப்பென்று சொன்னபடியினாலேயும் என் புத்திக்கு யிப்போ சென்னப்பட்டணத்துக்கு சிபெலென்கிற பிற்காது (Cibeléne) மோற்சிஸிருந்து (Mauritus) சேதி கொண்டுவந்ததிலே கப்பல் தை மாதம் அவ்விடம் விட்டு புறப்படுகிறதா யெழுதிவந்தால் இவ்விடம் வந்து சேர பங்குனி மீ" சித்திரை மீ" மட்டும் செல்லுமென்று யோசனைபண்ணி அதின்பேரிலே இப்படியெல்லாம் எழுதச்சொன்னதாய் தெரிந்து இதல்லா மல் நேற்று சாயங்காலமும் அழைப்பித்து தானியம் பெகு சுருக்கிலே அழைப்பிக்கவேணுமென்ற சாடையுமப்படியே தோத்துது. இதுவுமினிமே வெளியாகும்.

மற்றபடி அரும்பாத்தபிள்ளை முத்தப்பிள்ளை அரும்பாத்தபிள்ளை சாவடியிலிருந்து பிடித்துவந்து அவன் புடவை மூட்டையும் குதிரை வெள்ளி முஸ்தீப்பும், பல்லக்கு வெள்ளி முஸ்தீப்பும் ஐனூரு ரூபாயு மெடுத்துவந்ததை மதாம் துய்ப்ளேக்ஸ் குசினிஅண்டையிலேதானே வைத்து ஆயிரம் ரூபாய் கொடுத்தால் விட்டுவிடுகிறோமென்று நொண்டி சவுரிமுத் தும், சட்டைக்கார இன்னாசியும் (Ignace) இரண்டுபேரும் பேசினதற்கு இவர்களும் சம்மதித்ததாகவும் அப்பாலவர்கள் தங்களுக்கு ஏதாகிலும் கேட்டதாகவுமிந்தப்படி குமாரப்பிள்ளை என்னுடனே வந்து சொன்னான். அப்பால் ஆயிரம் ரூபாய்க்கு அங்கேயிருந்த ஐனூரு ரூபாய் போக மற்ற ஐனூரு ரூபாய்கொண்டுபோன விடத்திலே நான் துரையுடனே யெச்சரித்து இருக்கிறேன் அவருடனே ஒருப் பேச்சு சொல்லிப்போட்டு அப்பால் இந்த ஆயிரம் ரூபாயும் வாங்கிக்கொள்ளுகிறேனென்று சொன்னும். அதற்கு இவனப்படி அட்டி பண்ணுவானென்று கேட்டதற்கு உன் மனதிலே சந்தேகமா எண்ணவேண்டாம். அப்பு என்கிற ரெள்சா கண்ணன் ஆயிரக் கணக்காய் திருடிக்கொண்டு போனதற்கு என்னசெய்துப் போட்டான் உன்னை செய்கிறதற்கு அப்படி நீயேதாகிலும் யெடுத்துப் போகச்சே பிடித்தார்களா. நான் சாரிபோகிறபோது பல்லக்குவந்தது, குதிரை வந்தது அதினுடைய முஸ்தீபு கூடவந்தது என் வூட்டு புடவைகூட வந்ததென்று ஒருவேளை துரைகேழ்க்கவே போகிறதில்லை அல்லவென்று கேட்டால் இப்படி சொல்லென்று சொன்னும். அந்தப்பேச்சை கேட் டுக்கொண்டு முத்தய்யன் வந்து விட்டதாய் குமாரப்பிள்ளை வந்து

சொன்னதாய் வீராநாயக்கன் வந்து சொன்னான். அப்பால் வைக்கில் அப்பய்யனுக்கு காகிதமெழுதி துரையவர்கள் சொற்படிக்கு எழுதி திருச்சிறுப்பள்ளிக்கு பயணம் பண்ணி சிதம்பரம் முதலியார் சேவுகரை யனுப்பிவைத்தேன்.

**விபவ ஞு கார்த்திகை மீ 9 உ க்கு 1748 ஆ நவம்பர் மீ 20 உ புதவாரம்.**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களுக்கு ஒழுகரையிலே முசியே தோத்தேல் (Tauteul) விருந்து பண்ணுகிறோனென்று மதாம் துப்ளேக்சு போனாள் அப்பால் அவரை எங்களை அழைப்பித்து நாசருசங்குக்கு யெழுதுகிற காகிதம் யெழுதி முஸ்திப்பு பண்ணச்சொல்லி போட்டு அப்பாலவர் ஒழுகரைக்குப் போனார். நானும் மதனானந்த பண்டிதருக்கு நாசர் சங்கு காகிதத்துக்கும் சூதா யெழுதிவித்து அப்பால் சுத்திகரித்து எழுதிப்போடச் சொல்லி வீட்டுக்குவந்தேன்.

ஆறுமணிக்கு துரையவர்கள் வீட்டுக்கு வந்தவிறபாடு யரோப்பு தபால் வந்தது. அதிலே சீர்மையிலே இங்கிலீஷ்காரருக்கும் பிராஞ்சுக்காரருக்கும் சமாதான மாச்சுதென்று சீர்மையிலேயிருந்து காகிதம் தெல்லிச்சேரிக்கு இங்கிலீஷ்காரருக்குமெழுதி வந்தது. அந்தச்சேதி அந்த கப்பித்தான் யரோப்பிலே யிருக்கிற முசியே துப்ளேக்சுக்கு எழுதி அனுப்ப தெல்லிச்சேரி துரைக்கு யெழுதினதாய் அந்த காகிதம்வந்து இவ்வளவு சந்தோஷமாயிருக்கிறதென்று சேதிவந்து சொன்னார்கள் தெல்லிச்சேரியிலேயும் இங்கிலீஷ்காரர் தொப்பாசுகளை சிப்பாய்களை வைத்திருந்தவர்களை தூரப்பண்ணிப்போட்டதாகவும் சொன்னார்கள். வந்த தபால் பிராயணம் விசேஷம் [ ]

**விபவ ஞு கார்த்திகை மீ 10 உ க்கு 1748 ஆ நவம்பர் மீ 21 உ குருவாரம்**

இற்றைநாள் காலத்தாலே முசியே தெலார்ஷ் (Delarche) வீட்டிலிருந்து போய் பிரம்மை ஆசாரியார் வீடு அவனை வாங்கச்சொன்னதற்கு அவர் இராமச்சந்திர அய்யர் போட்டியாண்டானும் நாம்தானே அவ்வளவுதிருக்க நான் வாங்கினேனென்று சொல்லி அனுப்பினதற்கு நாம் போய் அவருக்கு இட்டவேலைக்கு அவருக்குபசாரம் சொல்லிப்போட்டு துரையவர்கள் வீடு வந்தேன். வந்தவுடனே துரையவர்களென்னைப் பார்த்துச்சொன்னது சீர்மையிலே இங்கிலீஷ்காரருக்கும் நம்முடையவர்களுக்கும் சமாதானம் ஸ்தானாபதிகளிலிருந்து (Ambassadar) பேசுகிறார்கள் சமாதானமாய்ப் பத்திலேசன்னை பண்ணி சேர்ந்தப்படுகிறார்களென்று பேச்சாய் பண்ணி இந்த சேதி வந்த பேரிலே கண்டார்கள் அந்தப்பேரிலே அந்த சேதி முதல் ஆறுமாசம்வரைக்

கும் யுத்தங்கள் எடுத்து சண்டைபண்ண கவையில்லை என்றும் ஸ்தானபதிகள் (Ambassadars' கையெழுத்துப்போட்டு கொடுத்தார்கள் அந்த சேதியைக்கொண்டு ஆங்கிலிய தெருவிலிருந்து (English) ஒரு சுலுப்பு தலைச்சேரவந்து காகிதத்தைக்கொடுத்தது அந்த காகிதம் பார்த்த உடனே அந்த தலைச்சேரி கப்பித்தான் நம்முடைய மாயையிலிருக்கிற திரெக்தோர் முசியே லுயேதுக்கு (Lauet) சொல்லியனுப்பியும் காகித மெழுதினார்கள். அந்த சேதி அங்கேயிருந்து இவ்விடத்துக்கு எழுதிவந்தது இந்த சேதி இங்கிலீஷ்காரர்கள் வுண்டாக்குகிறார்களினிமேல் சமுத்திரத்தின்பேரிலே கரையின்பேரிலேயும் சண்டைக்கவையில்லாதபடியினாலே பாரு படகுகள் வரலாமே ஆனபடியினாலே சயந்திராமய்யன் முதலான பேர்களுக்கு யெழுதி விஸ்தாரமாய் பட்டு வர்த்தகத்தை செய்கிறேனென்று எழுதி சொன்னார். நல்லதய்யா அப்படியே யெழுதி அனுப்புகிறேனென்று சொன்னேன் ஆனால் வர மனது இந்த சேதி கேட்டதற்கு ரொம்ப சந்தோஷமாயிருக்குமே அந்தபடி அவர் சொல்லுகிற பேச்சிலே எனக்குப் பார்க்க சந்தோஷமாய் சொன்னதாய் காணவில்லை. அது எந்த சாடையிலே தெரியவில்லை. அதுவும் கிறமாண வெளியாகும்.

அப்பால் என்னை அழைத்து ஒரு கணக்கு நம்முடைய கையெழுத்தாய் யெழுதிவைத்திருந்து என் கையிலே கொடுத்து சந்தாசாயபு பேரிலேயும், கான்படுதூர் பேரிலேயும் வரவேண்டிய துகைகளுக்கு யெழுதியிருக்குது அதை அப்துலாய்மான் சமேதாருக்கு படித்துக்காண்பி என்று சொன்னார். அந்தபடிக்கு பாக்கு கிடங்குக்கு வந்து அப்துலாயிமானுக்கும் ராசோபண்டிதருக்கும் யெழுதிவைத்த வயணம்,

சந்தாசாயபு பைத்து

1742 ஆ மார்ச்சு மீ 3 உ சீட்டு ஒண்ணுக்கு ரூபாய் 10,000 இதுக்கு வட்டி நூத்துக்கு பத்தாக 1748 ஆ நொவம்பர் மீ 3உ வருஷம் ஆறு மாசம், ஆறுக்கு கூட்டின ரூபாய் 6500 ஆறுயிரத்தி ஐனூறு ஆக வட்டி முதல் உள்பட பதினாயிரத்தி ஐனூறு 16.500 ரூபாய் மாத்திரம் கான்படுதூர் பைத்து.

1742 ஆ நொவம்பர் மீ 13 உ பைத்து சீட்டெழுதிக்கொடுத்து போன வராகன் 1000. 1748 ஆ நொவம்பர் மீ 13 தேதி வரைக்கும் ஆறு வருஷவட்டி நூற்றுக்கு பத்தாக வருஷம் ஆறுக்கு 600. 1743 ஆண்டு பிப்ரவரி மீ முதல் உ பைத்து சீட்டு ஒண்ணுக்கு போன வருஷம் 2000. இதுக்கு வட்டி நூற்றுக்கு 10 ஆக 1748 ஆ நொவம்பர் மீ வரைக்கும் வருஷம் அஞ்சுமாதத்திற்கு 1150 வராகனை வட்டி முதல் உள்பட கூட்டின பொன் ரூ. 4750 மாத்திரம்.

இதல்லாமல் 1745 ஆ மார்சு மீ க்கு 5000 ரூபாய் ஆக கணக்குப் பார்த்து சம்மதிகூட கட்டின ரூ. பதினேழாயிரத்தி ஐநூறும் (17500) பொன் விராகன் நாலாயிரத்தி எழுநூற்றி அன்பது 4750 அப்துலாயி மான் ராசோ பண்டிதன் கையிலெழுதி வைத்தேன். அப்பலவர்களிந்தக் கணக்கை யெடுத்துக்கொண்டு துரையவர்கள் சம்மதிகூட உம்முடைய கடன் முசியே பொசேத்து (Bausset) எழுதிவச்சதுகூட ஏறக்குறைய அன்பதுநாயிரம் ரூபாய் கணக்காகுதென்று சொல்ல இதுகளெல்லாம் ரசா சாயபுக்கு சொல்லுகிறோம். அவர் சொல்லுகிற பேச்சின்பேரிலே துரை யவர்கள் உடனே பேசுகிறோமென்று சொல்லிப்போட்டு போனார்கள். அப் பால் துரையவர்களண்டைக்குப்போய் நாசர்சங்கு இமாம்சாயபு முதலான பேருக்கு காகிதமெழுதியாச்சுது. அனுப்பிவிடுகிறேனென்றும் அப்துலாயி மான் கையில் கணக்குமெழுதிவித்தேனென்று சொல்லிப்போட்டு வருவே மென்று துரைவீட்டுக்குப்போய் சொன்னதுக்கு அருணாசலசெட்டி லாலா பேட்டையிலிருந்து இன்னம் வரவில்லையாயென்று கேட்டார். மழைபேஞ்சா தே அதினாலே அட்டிப்பட்டது இனிமேல் வருவாரென்று சொன்னேன் இங்கிலீஷ்காரர்கள் முடுக்கானால் அப்படித்தானே ஓட்டம் போகலாமென்று நினைத்தல்லவா அவனுக்கு சீக்கிரமத்துக்கு வருகிறதிற்கு மனது சம்மதி பட்டதென்று சொன்னார். அப்படியே உங்களுடனே கூட ஆரோ அபத்தம் சொன்னார்கள், ஒருகாலம் அவன் அப்படிக்கு நினைக்கிறவனல்ல குர்மேனு தெரியுமென்று சொல்லிப்போட்டு வீட்டுக்குப்போனேன் அப்பால் கேழ்க்கப் பட்ட சேதியென்னவென்றால் மகாநாட்டார்கூடி கலகந்துக்கு வெளியே போறோமென்று வீட்டை யெடுத்துக்கொண்டால் நாங்கள் கெட்டுப்போவோ மென்று சொல்லிக்கொள்ளப்போனதுக்கு முசியே தொத்லே விட்டிலே (Dauteuil) யிருந்த கும்பலைக்கண்டாபோலே எங்கே வந்தார்களென்று கேட்டார். அதற்கு தாங்கள் வந்த வீட்டு அங்கலாப்பை சொல்லி கோப மாய் போகச்சொல்லிப்போட்டு உள்ளே போய்விட்டார்களாம் அதன் பேரிலே சேவுகர்கள் வந்து போகச்சொல்லி தள்ளிவிட்டார்கள் கூடப்போன வர்களிலே இரண்டொருத்தர் வந்து சொன்னார்கள். அப்பால் கூடலூர் தேவனாம்பட்டணத்திலிருந்து சோபுதாரன் காகிதங்கள் துரையவர்களுக்கு கொண்டு வந்தானென்று கபுறு வந்து சொன்னார்கள் அதினுடைய சமாசார மென்னவென்று தெரியாது.

இதல்லாமல் முசியே லபுர்தொனே (de La Bourdonnais) சம்மதி யெழுதுகிறதுக்கு உன் தம்பியை கேழ்க்கவேணும் அவனிவ்விடத்துக்கு வரக்கூடுமானால் தானேகுதே (நல்லது) இல்லாவிட்டால் நாங்களிவன் இருக்கிற வீட்டுக்கு வருகிறோமென்றும் சொன்னார்கள். 'எங்கள் தம்பியை கேட்டாலவனுக்கு யிந்த வியாதியிலே அடிபட்டபடியினாலே அப்பால்

முசியே லபுர்தொனே ( La Bourdonnais ) நடத்துகிற காரியங்களெல்லாம் எங்களுக்கு தெரியுமாவென்று சொன்னான் என்று சொனனதுக்கு அவன் ம்கேழ்விப்பட்ட சேதிமாத்திரம் சொல்லச்சொல்லு நாங்களெழுதி கொள்ளுகிறோமென்று சொல்லி மலைக்குழுந்தன், அனுமந்தய்யா இதுக்கெல்லாம்கூடயிருந்தாரென்று அவனை நேமித்துயிருந்தது. அவனும் நாளைக்கு யெழுதிவிடுகிறோமென்றுச் சொன்னேன் என்று முசியே கில்லியார் (Quilliar) வந்து சொன்னார்கள். அவன் ஆதிதுவக்கு அந்திய பரியந்தம் இருந்தவன் என். தம்பி அவர்களெல்லாம் முசியே லபுர்தொனே ( Labourdonnai) முசியே தெப்ரேமனே, தெலோரம் (Daulaurens) முதலான பேர்வரச்சே கூட வந்துவிட்டான். அப்பால் முசியே தெபொரெமேன் (d'Exprémème) சதுரங்கபட்டணத்திலிருந்து போனனிவர்கள் செவ்வையாய் புதுச்சேரியை போய் சேர்ந்தார்கள் மறுபடிபோகவில்லை யென்று சொன்னதற்கு அரிஞ்சமாத்திரம் சொல்ல சொல்லென்று சொன்னார் நல்லது சொல்லுகிறேனென்று சொன்னேன்.

விபவ ஞு கார்த்திகை மீ 11 ௳ க்கு 1748 ஆ நவம்பர் மீ 22 ௳ சுக்கிரவாரம்.

இற்றைனாள் காலந்தாலே முசியே திலார்ஷ் (Delarche) வீட்டுக்குப் போய் அவனுக்கு செட்டிகள் நிமித்தியம் வீடுகளை தப்பித்துவிடச்சொல்லி உபசாரமாய் சொல்லிப்போட்டு அப்பாலங்கேயிருந்து துரையவர்கள் வீட்டுக்கு வந்தவிடத்தில் துரையவர்கள் கையெழுத்துப்போட்டு விடுகிறதுக்கு முசியே பெடுத்தலண்டைக்கு (Bertrand) போய் வழுதாவூர் வாசற்படிக்கு எதிரேயிருக்கிற நம்முடைய் பெரிய தோட்டம் வெட்டிப்போட்டதையும் குண்டுசாலைக்கு அப்புரமிருக்கிற புதுசு தோட்டத்தையும் யெழுதி வைத்து அந்த காகிதத்திலே துரையவர்கள் கை எழுந்து) போடுவித்து இந்த காகிதத்தைக்கொண்டுபோய் முசியே திலார்ஷ் துரை முசியே பொசேத் (Delarche & du Bausset) கையிலே கொடுத்தால் அவர்கள் தோட்டத்தை நேமித்து இருக்கப்பட்ட மூணுபேர் மத்தியஸ்தரைக்கொண்டு தோட்டத்தை மதிப்பித்து அந்த தோட்டமித்தினி காணியென்று அதற்கு இன்னது பகுதியென்றும் அதிலே கண்டெழுதிவித்து அதிலே மூணுபேர் கையெழுத்தும் முசியே திலார்ஷ் பொசேத் (Delarche & du Bausset) இவர்கள் இரண்டுபேர் கையெழுத்துப் போட்டுக்கொடுக்கிற வாடிக்கையாம் அந்தபடிக்கு முசியே பெடுத்தராம் (Bertrand) கையிலே இரண்டு தோட்டமும் எழுதிவைத்து அந்த காகிதத்திலே துரை ஒப்பமும் வாங்கினேன். நாளை காத்தாலே முசியே பொசேத் (Bausset) முசியே திலார்ஷ் கையிலே (Delarche) கொடுக்கத்தக்கதாக வைத்துக்கொண்டேன். அப்பால் துரையவர்களுக்கு நேத்துதானே மூன் வில்லியநல்லூர் அமுலுபண்ண நசப்பு

கொல்லி (Najeb Quoli) மகன் இப்போ திருவண்ணுமலை அண்டையிலே சலுப்புக்கடை யொன்றும், ஒரு சின்ன தாகமும், ஒரு கடையும் அதற்கு கொஞ்சம் சாகீருமுண்டு அவனங்கேயிருந்து துரையவர்கள் பேருக்கு இங்கிலீஷ்காரரை செயம் பண்ணதுக்கு மோபார்க்கு பாதியும் யெழுதி தனக்கு அக்னிமாந்தியம் அதற்கு அவிஷதம் அனுப்பவேணுமென்று நாலு போட்லு சாராயமும் அனுப்பச்சொல்லி எழுதினுன். அந்த காகிதத்தை படித்துப்பார்த்து துரையவர்களுக்கு சொன்னதின்பேரிலே அவர்கள் நகைத்து இந்த சாராயத்துக்குத்தான் மோபார்க்கு பாதி எழுதினுனென்று சொல்லி அந்த நாலு போட்லு பிராந்தியும் அனுப்பினேமென்று மவர் மோபார்க்கு பாதி யெழுதினதுக்கு பதில் காகிதம் உபசாரமுமெழுதி அனுப்பென்று சொல்லிப்போட்டு நாலு போட்லு பிராந்தி சாராயமும் கொடுக்கச்சொல்லி முசியே கொர்னேத் (Cornet) மேருக்கு ஒரு ஓடுதிஞசு எழுதி கையெழுத்து போட்டுக்கொடுந்து வாங்கி அனுப்பிவிட சொன்னுர். நல்லதென்று ஒடுதிநாகப்படிக்கு வாங்கி நாலு போட்லும் நசப்புகொல்லி (Nazib Kuli) மகன் சாயபு மகன் வந்தவன் வசம் பொடுதிலுத்தரமும் எழுதிவைந்துப் போட்லும் கூட ஒப்பித்து போகச் சொன்னேன். மற்றப்படி உத்தாரமல்லூர் மியான் சாயபுக்கு சாலாம் பாக்கத்திலே நம்முடையமியிலே இருந்துவந்த வெள்ளைக்கார சிப்பாய்கள் இங்கிலீஷ்காரர்கள் புதுச்சேரியை வளைத்துக்கொண்டிருக்கிறபடியினுலே வருகிறவர்கள் புதுச்சேரியைப் போகக்கூடாதென்றும் யோசனை பண்ணிக்கொண்டு அப்படி சென்னப்பட்டணத்துக்கு போகுவோமென்று போகச்சே சாலம்பாக்கத்திலே இங்கிலீஷ்க்கார மனுஷர்களும் முத்துமல்லா ரெட்டி மனுஷரும் போய் பிடித்தபோது சிறிதுபேர் அப்புறம் ஓடிப் போய்விட்டார்கள். சிறிதுபேர் அகப்பட்டவர்களை பிடித்துப்போனுர்கள். சிறிதுபேர் தப்பி ஓடிப்போனவர்களை ஓடச்சே இரண்டு குதிரை தட்டு முட்டு, கத்தி, வுடுப்புடவை முதலானதுகளை போட்டுப் போட்டு போய்விட்டார்களென்று அவர்கள் யெழுதின காகிதத்திலே யெழுதியிருந்தது. ஓடிப்போகச்சே மியான் சாயபு காருமார்கள் குடியானவர்கள் கூட எங்களை பலவந்தமாய் பிடித்து பிடுங்கிக்கொண்டார்கள். நாங்களும் அந்த அவஸ்தையிலே ஒன்றும் சொல்லுகிறதற்கு மிடமில்லாமல் கொடுத்துப்போட்டு தப்பித்துக்கொண்டு ஓடிப்போய்சென்னப்பட்டணம் போய் சேர்ந்தோமென்றும் துரையவர்களுக்கு பதினைந்து நாளைக்கு முன்னே சொன்னதின்பேரிலே செங்கல்பட்டு கில்லேயான் கிமேச்சாலம்பாக்கமென்று சொல்லி செங்கல்பட்டு கில்லேதாரனுக்கு காகிதமெழுதி அனுப்பினதற்கு அவன் சாலம்பாக்கம் எங்களைச் சேர்ந்ததல்ல; இதல்லாமல் இங்கிலீஷ்காரர் கலகத்துப்போது தாக்தி வாச்சே ஒரு பாதிரி

பின்னையும் ஒரு நாலைந்து வெள்ளைக்காரர் எங்கள் செங்கல்பட்டு ஜில்லாவிலே ஓடி வந்தார்கள். அவர்களை வைத்து இங்கிலீஷ்கார மனுஷருக்கு இல்லை யென்று சொல்லி அனுப்பிவித்துப்போட்டு அப்பால் சென்னபட்டணத்துக்கு நாங்களெழுதி அனுப்பிவைத்து அவர்களை அனுப்பச் சொல்லி காகிதமெழுதின பிற்பாடு அவர்கள் பிறகே சேவுகர்களையும் கூட்டி சென்னப் பட்டணத்திலே கொண்டுபோய் ஒப்பித்து மறுகாகிதம் கொண்டுவரச் சொல்லி அனுப்பிவைத்தோம். அந்தபடிக்கு ஒப்பித்தும் சென்னபட்டணம் கப்பித்தான் கிட்ட மறுகாகிதமெத்த உபசாரமாய் எழுதினான். அந்தகாகிதங் களெல்லாம் எங்கள் கையிலேயிருக்குது அப்படி உங்களை கோட்டையை சுத்திக்கொண்டு வெளிமனுஷர் உள்ளே போகக் கூடாமல் யிருக்கிறவேளை யிலே உங்கள் மனுஷர் மாயேயிலிருந்து வந்தவர்களை இங்கிலீஷ்காரர் விஸ் தாரம் பயஞ்சுடனே தொரத்தி வந்தபோது நாங்கள் மேல் வாங்கிக்கொண்டு உங்களுக்கு வேலைசெய்துயிருக்க இப்போ நீங்களிப்படி யெழுதினது மெத்த ஆச்சரியமாயிருக்குது இதல்லாமல் நான் பின்னை ஒரு ஜோலிக்குபோராது மல்லவென்று உபசாரமாய் வுங்களவனுக இருக்கிறோமென்றும் யெழுதி வந்த காகிதச்சேதி சொன்னபிற்பாடு ஆனல் சாலம்பாக்கம் யாருதென்று கேழ்க்க உத்திரமல்லூர்மியான்சாயபு குத்தகையென்று சொன்னபிறகு அவ ருக்கு காகிதமெழுதி அனுப்பச்சொன்னபடிக்கு செங்கல்பட்டுக்கு போய் வந்தகும்பினீர் சேவுகன் எல்லப்பனையும் அப்துலாயிமான் சிப்பாய்கள் சாலம் பாக்கத்திலே பரிகொடுத்தவனிலே ஒருத்தனைங் கூட்டி மியான் சாயபு காகி தமும் கொடுத்து வுத்திரமல்லூருக்கு அனுப்பினதுக்கு இத்தினி நாள் வரப்போய் யெழுதத்தெரியாத ஜாடையாய் இங்கிலீஷ்காரர் துபாசி ரங்கப்ப ஞய்க்கனெழுதினபடியினலே, அந்தரெண்டு குதிரையும் புடவையுங்கத்தி சீலை முதலானதுகளெல்லாம் அவர் கையிலே ஒப்பித்து ரசீது வாங்கி கட்டிக் கொண்டோம். அந்த ரசீதுக்கு நகலும் அவனெழுதின காகிதத்துக்கு நக லும் அனுப்பி காகிதமிப்படி யெழுதினது போய் துரையுடனே சொன்ன தற்கு துரையிருந்துகொண்டு ஒருத்தன் நிராயுதனைகயிருக்கிறவனை சத்துரு தெரித்திவந்தால் அதான் காரக்கவேணும். நியாயம் அது இல்லாமல் போனு லும் அதன் எல்லையிலே இவனையும் அவனையும் இருக்க கவையில்லை என்று போகச்சொல்ல வேணும் அப்படி மனுஷரையும் ஒப்பித்துப்போட்டு தப்பி ஓடிப்போனவர்களுடைய தட்டுமுட்டு தங்கள் மனுஷர்கள் பிடுங்கிவைத்த தைக் கூட சத்துரு மனுஷர்கள் கேட்டார்கள்; ரசீது வாங்கிக்கொண்டு ஒப்பித்துப் போடென்று வெட்கமில்லாமல் காகிதமெழுதினனே அவன் பெரிய மனுஷன் ஜாடைபண்ணியில்லை சின்ன மனுஷன் நடக்கை நடந் தாலும் யெழுதினது கூட சின்னதனமாய்த்தானே காணுதுயென்று சொல் லிப்போகச்சொன்னர் அப்பால் 12 மணி அடித்தபடியினலே வீட்டுக்கு வந்தேன்,

மற்றபடி பகலுக்கு மேலே எழுதத்தக்க சேதி ஒன்றுமில்லை ஒன்றும் கேழ்விபடவில்லை.

இத்தினிநாள் கேழ்விப்பட்ட சேதி நேற்று தேவனும்பட்டணத்தி லிருந்து மேஸ்தர் புசுக்காவேன் (Boscawen) என்கிற கோந்திரமினால் எழுதின காகிதம் வந்து சேர்ந்ததே அதிலே சமாதானத்துக்கு ஸ்தானுபதி பேசச்சே, மாசம் ஆறு ஆயுதமெடுத்து சண்டைபண்ண கலையில்லை என்று மிந்த கபுறு எந்த ரேவிலே என்று கேழ்கிறுர்களோ அன்று முதல் ஆறுமாதம் யெழுதிவந்தசேதி மெய்தானே என்று எழுதவில்லையென்று நான் அப்படி ஆகவேணுமென்று கோருகிறேன். சுவாமி சமாதானத்தே தயவு பண்ண வேணுமென்று யெழுதினதாக ஸ்ரீ குவர்னதோர் சொன்னுனென்று முசியே புசி (Bussy) என்னுடனே சொல்லி யிதிலே அவருக்கும் சேதி வரும் நமக்கு கப்பல் வராவிட்டால் அவர்களந்த சாடையிலேதானே மறைத்தாலும் மறைப்பார்கள் கப்பல் வந்தால் புய்ப்ளீக்காராக்குவார்கள் யென்று சொன்னேன்.

விபவ ஞு கார்த்திகை மீ 12 உ க்கு 1748 ஆ நவம்பர் மீ 23 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே பிரபு அண்டையிலே போன விடத்திலே மாயேயிலேயிருந்து ரெண்டு முசியேமார்கள் வருகிறுர்கள் ஆத்தூர்கோடி வருகிறதற்குள்ளோ அல்லது அவர்கள் வருகிறமட்டுக்குமாகிலும் ஆத்தூரண்டையிலே காத்துக்கொண்டிருந்து எடுத்துக்கொண்டு வா இரண்டு டோலியும் அப்துலாயிமான் சிப்பாய்களிலே அன்பது சிப்பாய்களும் ரெண்டும் மாயேக்கு போக்குவரத்து பிராமணரில் இரண்டு பிராமணரையும் முஸ்திப்பு பண்ணி இந்த காகிதத்தைக் கொடுத்து அனுப்பிவிடென்று சொன்னுர். நல்லதென்று அந்தபடிக்கு முஸ்தீப்பு பண்ணிப்போகச்சொன்னுல் பிராமணரிருந்து மயிசூர்கவில் காகிதங்கூட கொடுக்கவேணுமென்று கேட்டார்கள். அந்தப்படிக்கு கொடுத்து அவர்களாசி கட்டிகொண்டு கொடுத்து அனுப்பினேன். மற்றபடிக்கு உன் தம்பியை சென்னப்பட்டணத்து சம்மதி கேட்டால் முசியே கில்லியார் (Guillard) ருடனே நடந்த காரியம் ஒன்று மரியேனென்று சொன்னுனும். இப்படிப்பட்டவர்களை நான் நன்முய் நம்பி யிருந்தேனென்று சொன்னுப்படி ஒருக்காலும் தேவர்காரியத்திலே சரேணதயுஞ் சீவனை கொடுக்கச்சொன்னுலும் கொடுக்கிறதே அல்லாமல் அதற்கு மாருபேச்சு ஒருக்காலும் பேசத்தக்கதில்லையென்று கெட்டியாய் உங்கள் மனதிலே தெரிந்திருக்கும் அல்லாமலும் என்னுடைய பொல்லாதவேளை யினுடைய குணம். ஒரு வேளை உங்களுக்கு தோற்றிலும் தோற்றுமென்று சொல்லி நேற்று நொவம்பர் மீ 22 தேதி வெள்ளிக்கிழமை ஒன்பது மணிக்கு முசியே பொனேவும் (Panan) முசியே கில்லியாரும் (Guillard)

அங்கு உட்கார்ந்து ஒரு காகிதத்திலே சிறிது யெழுதியிருந்ததை நீ அறிவா யென்று முசியே லபுர்தொனேக்கும் (Labourdonnais) உங்களுக்கும் நடந்த சங்கதிகளையும் முசியே தெப்ரோமென் (d'Espreménil) முதலான பேருக்கும் முசியே லபருதொனேக்கும் (Labaurdonnair) நடந்த சங்கதிகளும் நீ அறிவாயென்றும் சிறிது பேச்சுவார்த்தைகள் நடந்ததெல்லாம் அறிவா யென்றும் சிறிது அடுக்குகளாயக் கேட்டார்களாம் அதுகளிலே தானே கேழ்வி பட்டிருந்த சம்மதி மாத்திரம் மூன்று நாலு அர்தீகான் வுண்டு யென்று சொன்னேனும். மற்றது தானறியேனென்று சொன்னார். அப்பால் தான் கேழ்விபட்டது. முசியே லபுர்தொனே (Labaurdonnair) நூத்தி முப்பதாயிரம் விராகனும் சிறிது வச்சிரியக்கென்பு முதலானதுகள் மோதிரங்களாய் நகைகளாய் கொடுத்ததாய் அதின் பேரிலே தானே பதினொரு லக்ஷம் விராகனுகவும் கோட்டையிலிருக்கிற கும்பினீர் சரக்குகளையெல்லாம் யெடுத்துக்கொண்டு அப்பால் பீரங்கி துப்பாக்கிகள், மருந்து, குண்டுகள் முதலானதிலே பவ்வாதி எடுத்துக்கொள்ளவும் சென்னபட்டணம் அவர்களுக்கு வித்துப்போட்டுஅப்பால் இருபத்தொருபீரங்கிப்போட்டு மேஸ்த்தா தாமாத்து (Morse) சென்னபட்டணம் அவருடைய ஒடுதிபடிக்கு சமஸ்த கவுனிவாசல் பட்டண முதலான யிடங்களிலே யெப்போலதயும் போலே நடக்கிறதென்று ஒடுதிகொடுத்தான் என்று சொல்லி அப்பால் சிறிது காரியங்கள் மேஸ்தாபானசனும் முசிலீல் பார்க்கு ராமார் கிடங்குகளை திறந்து பாரப்பார்களென்று சொல்லி கொள்ளுவார்கள். இதியெடுத்து எப்படிசெய்தார்களோ அது ஆருக்கு தெரியாதென்று காப்பிரிகள் முதலான பேர்களை விட்டுசிறிது சரக்குகளை எடுத்துவந்தது ஆந்திரே (André) என்கிற சட்டைக்காரன் அதுகளை யெல்லாம் வாங்கி கட்டுகள் போட்டு கப்பலிலே யேத்தினதுண்டு. இதல்லாமல் பட்டணத்திலேயிருந்தது நூத்திநாகமிருநூறு ரூபாய் மட்டுக்கும் கோட்டையிலே கொண்டுபோனது இதிலே சிறிது சரக்குகளை மயிலாப்பூர் துரைமார்க்கமாய் ஒரு சுலுப்பிலே யேத்தி இங்கிலீஷ்காரர் பாஸ் போகிறது வாங்கி சுலுப்பை மசுக்கரைக்கு முன்னதாய் பயணம் பண்ணி அனுப்பிவைத்தானென்று இது முதலான சேதி கேழ்விபட்ட மட்டுக்கும் அவனெழுதிவைத்ததற்கு முசியே கில்லியார் கேட்டது (Guillard) முசியே லபூர்தொனே லக்ஷத்து முப்பதுநாயிரம் விராகன் வயிரம் முதலான தினுசுகளை லஞ்சம் கொடுத்தும் கொடுக்கச்சே நீகூட இருந்தாய். அல்லது கண்ணினலே பார்த்தாயாவென்று கேட்டார். நான் முசியே தெபிரோமேன் (Deperemenul) அண்டைக்கியிருக்கிறவன் என்றும் புதுச்சேரி கொவர்னதோர அனுப்ப வந்தவனென்றும் எப்போதும் என் பேரில் அவனுக்கு அசூசை பெத்ததுமல்லாமல் எனக்கு அரை நாழிகை ஆகிலும் பொரசத்து இல்லாமலிருக்கப்பட்ட வேலையென்றுசமஸ்த ஜனங்களை ப்பல்

காரருக்குக்கூட தீனி தட்டுமுட்டு, தண்ணீர்கூட என்மார்பெத்து பண்ணிப் போட்டதினாலே அந்த வேலையிலே பொழுது எனக்கு சரியாயிருக்கும் அப்பாலுமேதாகிலும் தூதுகாகிதங்கள் முதலானதுகள் வந்தால் நபாசமாசாரமேதாகிலும் உண்டானாலதினுடைய உத்திர பிரதி உத்திரம் சொல்லுகிறதல்லாமல் மற்றப்படி அவனென்னுடனே ஒருக்காலும் என்னுடனே கலந்துபேசினவனல்லவென்று இதுமுதலான வயணங்களை யெல்லாம் சொல்லியிருக்க முசியே கில்லியார் (Guillard) உங்களுடனே வந்து அவனொன்றும் அறியேனென்று சொன்னான் என்று சொன்னான் பிறகு சொல்லுகிறதென்னவென்று சொன்னதற்கு அப்படியானால் சரியே பார்க்கிறதுக்கு யெங்கே கூடும் கேழ்விபட்டோமென்று சொன்னால் போதுமென்று சொல்லி முசியே கில்லியாரை (Guillard) அழைத்துக்கேட்டாலவர் சொன்னது கேழ்விபட்டேனென்று சொன்னால் சாதகம் போருது பார்க்கவேணுமென்று கேட்டேன். பார்த்ததில்லையென்று சொன்னானென்று சொன்னதற்கு அவர் ரொம்ப முசியே குய்யார் (Guillard) கோபித்துக்கொண்டு அந்த காகிதத்தை எடுத்துவரச்சொன்னார். எடுத்துக்கொண்டுபோய் கொடுத்த பிற்பாடு துரையும் பார்த்து அதற்கு சம்மதி சொல்லி போகச்சொல்லி அப்பால் என்னுடனே குளுந்தப்பேச்சாய் பேசினார். அதின் பிறகு அழைப்பித்து அன்பது விராகனிடை பொன் கொளுசுவேணுமென்றுசொன்னார். நல்லது விசாரித்து வாங்கி கொடுக்கிறேனென்று சொன்னேன். அப்பால் அவர்கள் கணக்கு கூட்டத்து காரியம் தாண்டவராயப்பிள்ளை சம்மதி ஒன்று சவரிமுத்து முதலியார் மகன் ஆசாரப்பன் செத்துப்போனதுக்கு பதில் சம்மதி ஒன்று கண்டால் குருவப்பசெட்டி சம்மதி ஒன்று இதுகளெல்லாம் தீர்த்துப்போடென்று சொல்லி நான் தமிழருக்கு செய்த சகாயத்துக்கு தமிழரிடத்திலே ரொம்ப மெர்சிமாம் நடந்ததென்றும் சொன்னாரிந்த சண்டை முதலாகிய யிந்த பட்டணத்தார்களுக்கு வந்த இக்கட்டுகளுக்கு நீங்கள் காப்பாற்றினீரே கொஞெஞெசிமேந்து அவர்கள் ஒருக்காலும் மறக்கத்தக்கதில்லையென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். ஆனாலுங்களுடனே ஆரார் ஆரார் என்ன என்ன சொல்லுகிறார்களோ அதைத் தொட்டு பட்டணத்திலிருக்கப்பட்ட மோர்சுதோர்கள் பேரிலே உங்களுக்குக் கோபமுண்டாகவே சொல்லிக் கொண்டு வருவார்களென்று சொன்னதற்கு இல்லை இல்லை அவர்களுக்கு என் பேரில் குறை சொல்லுகிறார்களென்றும் அது யெனக்கு நன்றாய்த் தெரியுமென்று சொல்லிக்கொண்டே (இருக்கச்சே நான் வெளியே) வரச்சே தானப்பமுதலியார் ஒழுகரைக்குப் போரேனென்று பல்போட்டு கேழ்க்கிறானென்று தியாகு சொன்னார். (Tyagu) தானப்பமுதலியார் சும்மா நின்றான். அதற்கு துரை வாங்கிக்கொடுக்கச் சொல்லி கையை

வாட்டினார். அந்த சாடையிலே அவர் மதாமிருக்கிற காம்பிராவுக்குப் போனார். தானப்பமுதலியார் உடனே நீங்களும் சாம்பு வாங்க வாடிக்கை பண்ணினீர்கள் இப்படி செய்வார்களாவென்று கேட்டதற்கு உங்கள் முலாய் இப்போ அம்மான் முலாவரச்சே சேவகன் மரித்தான். அதற்கு எப்படியென்று கேட்டு வாங்கினேனென்று பேசிக்கொண்டு யிப்புரம் வர சின்னதுரை வீட்டே போனார். நான் பாக்கு கிடங்குக்கு வரச்சே முசியே கில்லியார் (Guillard) எதிர்பட்டான். நீ சிரஞ்சீவி கோவர்ன தோருடனே என்ன சொன்னாயென்று கேட்டார். எங்கள் தம்பி ஒன்றும் சொல்லவில்லையாம். முசியே கில்லியார் நேத்து பேர்யிருந்தபோது என்று கோபித்துக்கொண்டார். கேழ்விப்பட்ட சேதியை எழுதிவைத்ததற்கு நீ கண்ணாலே பார்த்தாயாவென்று கேட்டார். நான் பார்த்ததில்லை கேட்ட சேதியென்று சொன்னதற்கு, இப்படி பதினாயிரங் கேட்டாபோலே அது சாதகமாய் பார்த்ததாயிருக்கவேணுமென்று சொல்லிப்போட்டு போனா ரென்று சொன்னதற்கு உங்களை அழைக்கச்சொன்னாரென்று சொன்ன துக்கு நீ சொன்ன பேச்சு நடந்தது மெய் நான் அப்பால் என்னை அழைத் துக் கோபித்துக்கொண்டார். உன் தம்பியுடனே சொன்னபடிக்கு துரை யுடனே சொன்னேன். ஆனாலிவரிப்படி அனியாயமா யெழுதச்சொல்லுகிற காகிதத்திற்கு நான் சம்மதிக்கிறதில்லை. அவர் கூப்பிட்டால் கூப்பிட்டுக் கொண்டு போரார்; என் பல்லக்குக்கு கொம்பு கேட்டேனே என்று சொன் னதுக்கு கலாபத்தைத் தொட்டுவராதே போச்சுது பொங்கலுக்கு முன்னே வருமென்று சொல்லிப்போட்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன். அவர் துரை வீட்டுக்குப் போனார்

அப்பால் சாயங்காலம் ஆறு மணிக்கு அழைத்தனுப்பிவித்துப் பொன் கொலுசு கேட்டேனே என்றார்; நாளை வருமென்று சொன்னேன். இப்போ வந்தால் கவை நாளை வந்தால் கவையில்லை என்று சொன்னார். அப்பால் பாக்கு கிடங்கிலே வந்தேன். எட்டரை மணிக்கு வீட்டுக்குப் போனேன். நேத்து இரண்டு தோட்டத்துக்கும் முசியே பெடுத்தராம் (Bertrand) கையிலே யெழுதிவைத்த துரை கையெழுத்து வாங்கினது காகிதத்தை இற்றைனாள் காத்தாலே முசியே திலார்ஷ் (Delarch) முசியே பொச்சேத் (Bausse) ஒப்பீசுக்கு சம்பாகோயிலுக்கு பல்லக்குமேலே போகச்சே கோட் டைக்கு மேலண்டை வாசற்படிக்கு நேரே பாலத்துக்கு சமீபத்தில் கொடுத் துப்போட்டு நான் துரை வீட்டுக்குப்போனேன்.

**விபவ ஞு கார்த்திகை மீ 13 உக்கு 1748 ஆ நவம்பர் மீ 24உ ஆதிவாரம்**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்கு பூசைக்குப்போய் வந்தபிற்பாடு என்னை அழைத்து நெல் இன்னம் ஆறுபடிவிக்கலையாவென்று

கேட்டார். அஞ்சரைபடி விற்கிறார்கள் அன்னமுழியென்கிறது இன்னமிரண்டு மூணு நாளையிலே ஆறுபடியாகுமென்று சொன்னேன். முசியே திலார்ஷ் (Delorche) மணக்கத்தை என்கிற பெருநெல்லு ஆறுபடி விற்கிறதென்று சொன்னானென்று சொன்னார். மெய்நான் நேத்து ஒருத்தன் அந்தப் படிவிற்றான் இந்த பிரகாரமும் அன்னமுழியென்கிறதும் அந்த விலைக்கு வர இரண்டு மூன்று நாள் செல்லுமென்றும் சொன்னதுக்கு இன்னம் ஆரு படியாக வில்லையாயென்று கோபித்துகொண்டு உள்ளேபோய்விட்டார் அப்பாலிரண்டு நாழிகைப் பொருத்து மயிலாப்பூர் அமுல்தாரன்பேர் என்னசேக்கு மகம்மது முக்காராம் இது கேட்டு சொல்லு. இதல்லாமல் மணிமங்களம் ஆறுக்குசெல்லுது அந்தவயணஞ் சொல்லென்றார். அது விசாரித்தால் மயிலாப்பூர் அமுல்தாரன் சேக்கு முகம்மது முக்காராம் யென்று பேரென்றும் மணிமங்களம் சீர்மை காஞ்சிபுரத்திலே வைஷ்ணவ பிராமணன் ஜீயரென்றிருக்கிறவன். குத்தகையென்று மீது முதலாகிய சேதி போய் சொன்னதுக்கு அருணாசலம் ஏன் வரவில்லையென்று கேட்டார் அவனுக்கு அண்ணன் மகன் காலப்பண்ணி போனதினாலே வரக்கூடாமல் நின்றான் இனிமேல் ஏழு எட்டுநாளையிலே வருவார்களென்று சொன்னேன் அவனேது வரது நீ கும்பினீர் கணக்கு தீர்க்க வொட்டுகிறதில்லையா வரவு சிலவு ஒத்துக்கொள்ளாமலிருக்கிறதென்னவென்று கேட்டார். இதின் பிற்பாடு சிறிது செப்பும் சகலாந்துமனுப்பியிருக்கிறதே அது விந்தவிலைகூட போட்டு கொண்டல்லோ கணக்கு தீர்க்கவேணும் அது நிமித்தியம் வட்டியேயல்லாமல் மத்தப்படிக்கு கும்பினீருக்கு கொடுத்த எண்பதினாயிரம் வராகன்மட்டுக்கும் கூடியிருக்குது மின்ன மிருபதினாயிரம் வராகன்மட்டுக்கும் கொடுக்கவேண்டியது பதினாயிரம் வராகன் இங்கிலீசும் (Nermilian) முதலான சரக்கு இருக்குது பஞ்சு பதினாயிரம் வராகனுக்கு அதிகமாகவேயிருக்குது இதிலே கலகம்வந்தது ஆனபடியினாலே நின்றுபோச்சுது. இனிமேல் வித்தார்லப்படிய செலுத்திப்போகிறார்களென்று சொன்னதுக்கு நீ பதினாயிரம் வராகன் எடுத்துக்கொண்டிருக்கிறாயா வென்றுசொன்னார். நான் பதினாயிரம் வராகனவர்களுக்கு கொடுக்கவேண்டியிருக்கும் எனக்கு அவர்களும் கொடுக்க வேண்டியிருக்கும் வூரிலே அவரவர்களுக்கும் மத்தபேர்களுக்கும் கொடுக்கல் வாங்கல் உண்டாயிருக்கப்போகுது அதுக்கும் கும்பினீருக்கும் கவையுண்டா அப்படி போலே நானவர்களுக்கு கொடுக்கவேண்டியிருக்கும் அது கும்பினீருக்கு கவையுண்டா அது கும்பினீரியே எடுத்தசரக்கு கிறயத்துக்கு வர்த்தகா சீட்டெழுதி கொடுத்திருக்கிறார்கள். வர்த்தகர்கும்பினீருக்கு ரசீதுவாங்கியிருக்கிறார்கள் கும்பினீரிலே வரதேவியும் மத்தப்பேரிலே வரதேவியும் ஆறுக்கு தெரியாததோவென்று சொன்னாப்போலே அது மெய்தானென்று வொத்துக்கொண்டு அப்பால் சம்மதித்து கொடாத போனியேயென்றார். இது

கலகம் காலப்போக்கு வந்துதே இனிமேல் இரண்டு மூனுமாசத்திலே அப்படித்தானே தீத்துப்போட போகிறேன் உம்முடைய சிரேய சுக்கல்லாது தானிசமானுயிருக்கப்போகிறேன் உம்முடைய தயவு ரொம்ப உண்டாகப் போகுதென்று சொன்னுப்போலே பதினொன்னரைமணிவேளையானபடியி னாலே துரைவீட்டிலே யிருக்கிற மணி படங்கு ஒருமணியடிச்சுது என்மன துக்கு ரொம்ப சந்தோஷமாச்சுது அவருங்கேட்டார் சொன்னபடிக்கு கெட்டியாய் நடக்கப்போகுதென்று சொல்லச்சே எழுந்திருந்து காம்பிரா வைப்போனார் நான் பாக்குக்கிடங்கிலே வந்தேன்.

காளகத்தி சுப்பையன் மகனும் வெங்கிடேசய்யரும் மதாம் துப்ளேக் சுக்கும் மலைக்கொழுந்தன் வழியிலே பதினஞ்சுநாளாய் சொல்லிக்கொண் டிருந்த சம்மதி மதாம் துப்ளேக்சு சொன்னதுக்கு இன்றைக்கும் கேட்டு தீத்துப்போட்டார், நானும் சவை வந்து என்னவென்று கும்பினீருக்கு கொடுக்கவேண்டியது வர்த்தகர்கள் பாக்கியம் வர்த்தகர்களுக்கும் எனக்கும் பதினாயிரம் கொடுக்கல் வாங்கலின்று நடக்குநா வெகுநாளாய் நடக்குத அவர்களுக்கு நான் கொடுக்கவேண்டியது யிருந்தால் யென் கையிலேயவர்கள் வாங்கிக்கொள்ளுகிறார்கள். கும்பினீருக்கு கவையென்ன எனக்கு அவர்கள் பேரிலே வரவேண்டியிருந்தால் நான் வாங்கிக்கொள்ளுகிறேன் கும்பி னீருக்கு கவையுண்டாவென்று சந்தேகமற சொல்லிப்போட்டேன். இந்த பிரஸ்தாபமும் சுவாமி நல்லதுக்கோ நடப்பித்தாரென்றும் எண்ணிக்கொண் டேன் சுவாமியினுடைய கடாக்ஷம் இருக்கிறவேளையிலே ஆரென்ன விபரீத மாய் சொன்னாலும் அதுவும் ஒரு நல்ல காரியததுக்குதானே யேஷியமாய் இருக்கும் ஆண்டவனுடைய சித்தம் கோபமாயிருக்கிற வேளைவந்தால் ஒருத் தன் நன்மை செய்யப்போனாலும் பொல்லாப்பாய்தானே முடியும் ஆனபடியி னாலே ஆண்டவனுடைய கடாக்ஷம் நன்றாயிருக்கச்சே ஒருத்தராலேயும் ஒன் றும் செய்யமுடியாது. என்கிறதுக்கு அனுமானம் என்ன இருக்கிறது. அப் பால் பனிரெண்டுமணி அடித்தப்பிறகு அழைத்து மச்சிலிபந்தருக்கு அனுப் புகிறதுக்கு பதினாயிரம் ரூபாய்க்கு உண்டி வேணுமென்று சொன்னார் நல்லது விசாரித்து வாங்கித்தாரேனென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்தேன்.

சுக்கில ஞு ஆனி மீ 16 உக்கு 1749 ஆ ஜுன் மீ 26உ குருவாரம்

இற்றைநாள் சூரிய உதையத்துக்கு ஒரு பாய்மர சுலுப்பும் அக்கரையி லிருந்து ராவுத்கால் போட்டு ஓடிவரச்சே எல்லோரும் ராவுத்கால் போட்டு வருகிற மட்டும் சமாதான காகிதமிதிலே வருவதாங்காட்டும் இல்லாவிட் டால் சிர்மை கப்பல் துரையில் இருக்கச்சே அவனை வாங்கிப்போட்டுவேணும்

வாங்கிப்போடாமல் வரச்சேயும் கப்பல்காரனை வாங்கச்சொல்லி பீரங்கிப் போட்டாலும் வாங்காமல் வருகிறபடியினாலே இதில் அதிசய முண்டா யிருக்கும் என்று பார்த்துக்கொண்டு இருந்த வெள்ளைக்காரரெல்லாம் காகிதம் கட்டுமரக்காரன் கொண்டுவந்தாற்போல் இங்கிருந்து பிப்ரவரி மாதத்தில் மசுக்கரைக்குபோனதென்றும், போத்தும்பேரும் போத்து கப்பித் தான்பேரும் சொல்லி, அப்பால் கப்பித்தான் இறங்கின உடனே பின்னை யொரு அதிசயமில்லை. போத்துக்கு ராவுத்தகால் போட்டுக்கொண்டு இருக்க லாமென்றும் முன் மசுக்கரையிலிருந்து வந்த கப்பல் சுலுப்புகளிலே வந்த செய்தியேயல்லாமல் வேறு இல்லையென்று சொல்லிக்கொண்டார்கள்.

இதல்லாமல் மதனாந்த பண்டிதரை மதாம் துய்ப்ளேக்சு அழைப்பித்து இத்தனை நாளும் சவரிமுத்து சேருவைக்காரனைக் கொண்டு தமிழிலே தஞ்சாவூர் ராஜா பேருக்கும், மானாசி அப்பாவுக்கும் அவனண்டையிலே இருக்கிற பாலாஜி பண்டிதன் சூத்தின் மேலே போட்டுக்கொண்டு மானாசி அப்பாவுக்கும் ராஜாவுக்கும் சொல்லாமற் போனான். அவர்களுக்கு எப்போ தும் அவர்கள்பேர்சில் எழுதுகிறபடிக்கு எழுதியனுப்பவேண்டுமென்று சொன்னாம். நல்லது அவர்களுக்கு முன்பின் எழுதுகிற வாடிக்கை மராட்டியிலே எழுதுகிறதென்று சொன்னதற்கு. அதன்படிக்கு முன்னும் பின்னும் ரங்கப்பிள்ளை எழுதிவைக்கிறபடிக்கு துரைசொன்னாலவன் எழுதிவைப்பது உன் கையிலேதானே எப்படி. அவன் எழுதிவைப்பானோ அப்படியெழுது என்று சொன்னாராம். மதனாந்த பண்டிதனப்படியே எழுதுகிறேனென்று சொல்லி வயணமெழுதவேண்டியதற்கு கேட்ட தற்கு பாலாஜி பண்டிதனுக்கு நாங்கள் தமிழிலே உமக்கும் ராஜாவுக் கும் சொல்லி தேவி கோட்டையை எங்களுக்கு கொடுத்தால் இங்கிலீஷ் காரரைபற்றி ஒன்றும் செய்யக்கூடாதென்று சொல்லி எழுதினதற்கு அதை உங்களுக்குச்சொல்லி எங்களுக்கு கொடுப்படாமல் பண்ணினபடியால் இப்போது இங்கிலீஷ்காரர் கொடிப்போட்டு கொண்டார்கள் என்று அவர் கள் கொடிப்போட்டுகொண்டது எங்களுக்குமிகுந்த மனஸ்தாபமாயிருக்கிற தென்றும் பாலாஜி பண்டிதனை நீங்கள் நம்பவேண்டாமென்றும் அவன் இங்கிலீஷ்காரருக்கும் காட்டிகைக்கும் அனுகூலமாயிருக்கிறானென்றும் உங்களுக்கு சுவாமி துரோகம் பண்ணுகிறான் அது உங்களுக்குதெரியவில்லை என்றும் காட்டிகைக்கும் அவனுக்கும் உனவாய் காகித பத்திரங்கள் அந்த ரங்கமாய் நடக்கிறதென்றும் அது தேவனாம்பட்டணம் கூடலூர் எல்லாம் பிரசித்தமாயிருக்கிறதென்றும், நாங்கள் பவுன்சு அனுப்புகிறதற்கு சீமையில் எங்கள் ராஜாவுக்கும் அவர்கள் ராஜாவுக்கும் சமாதானமாய் போனபடியால் நாங்களவர்கள் பேரில் சண்டைக்கு உங்களுக்கு மற்றது பண்ண போகா

றென்றும் நான் உன் தமயன் பெண்சாதியானபடியால் உனக்கு தங்கச்சி யானபடியால் உங்கள் சமுஸ்தானத்திற்கு யாதொரு பொல்லாப்பு வராமல் பார்த்து உங்களுக்கு எழுதியனுப்புகிறோமென்றும் நாங்கள் நாலு பொம் பார்திக்கு பெரியவரொருத்தன் (4 Bombar dier nithanaffi͏̄er) ஆக அஞ்சுபேரையனுப்பினோம். அவர்களை காரைக்காலுக்கு அனுப்பிவிடச் சொல்லியும் காரைக்கால் துரைபேருக்கு பர்வாடை நாயக்கன் ஒரு காகித மெழுதியனுப்பினான். அது மெத்த மனஸ்தாபம் உண்டுபண்ணுதென்றும் இப்படி மேம்பிடுங்களாய் எழுதச்சொல்லி அந்தப்படி ராஜாபேருக்கும் மானுசி அப்பா பேருக்கும் காகிதத்தில் துரைபேரும் வையாமல் தன் பேரும் வையாமல் யாரோ எழுதினப்போல பின்னையுமனேகவிதமாய் எழுதி வித்து அக்கொட்டாவின் பேரிலே துரையவர்கள் பெரிய மோகரு பண்ணி வைத்து அனுப்பிவைத்தாய் மதனாந்தபண்டிதன் வந்து என்னிடம் சொன்னான். நல்லது உங்கள் காகிதம் பார்த்தால்கான் யாரோ எழுதி னார்கள் என்று எண்ணிக்கொள்ளுகிறார்கள் மேல முத்திரையை பார்த் தாலோவென்று கேட்டதற்கு அது தோற்றினால் ஏன் மோகறுப் பண்ணு கிறார்கள் தோற்றவில்லையென்று சொல்ல அவர்கள் எழுதுகிற காகிதத் திலெல்லாம் நீங்கள் எங்கள்பேரிலே இத்தனி பக்ஷமிருக்கிறவர்கள் ஆயிரம் சிப்பாய்களை அதற்குத்தக்க முஸ்திப்புடன் மருந்து குண்டு முதலியவை கூடிடன் ஏற்பாடு பண்ணி போட்டோமென்றெண்பிக்க அனுப்பலாகாதா காரைக்கால் அவர்கள் ராஜரீகத்தின் கீழே யிருக்கிறபடியால் அல்லாது அவாளுக்கு பண்ண உடன்படிக்கை என்றாகிலும் சொல்லப்போகதா? விருதாவாய் நீங்களெழுதுகிறதில் எங்களுக்கு என்ன பிரயோஜனம் என்று அவர்கள் எழுதினார்கள் அதற்கு மதனாம் துப்பே . க்சு சொன்னது ராஜாவும் மானுசி அப்பாவும் கலந்து யெழுதினதல்ல பாலாஜி எழுதினதென்று சொன்னான் நமக்கு அவர்களெழுதுகிறதும, சொல்லி அனுப்புகிறதும் பத்தாயிரம் வெள்ளைக்கார சோல்ஜர்களும் சிப்பாய்களு . . னை அனுப்பச் சொல்லி யெழுதுகிறார்கள். இவர்கள் வாய்ப்பேச்சிலே சகல உபகாரமும் பண்ணி போட்டதா எண்பித்து அவர்கள் கையில் இனும் கிருமங்கள் வாங்க சித்திரிக்கிறார்களென்றும் மதனாந்த பண்டிதன் சொன்னான். நமக்கென்ன உடையவன் சொற்படி செய்துவிடுவதே மேல் என்று அவரை அனுப்பி விட்டு ராத்திரி 8 மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

**சுக்கில ஹு ஆனி ீ 18 உ க்கு 1749 ஆ தூன் ீ 28 உ சனிவாரம்.**

இற்றைநாள் ஆறுமணி வேளைக்கு துரையவர்களழைத்தனுப்பித்து சந் தாசாயபு இதயித்து மொ . தீன் கானும் கடப்பைநத்தம் கண்மைக்கு

வந்ததாய் கபுறு சொன்னார்கள். அது மெய்தானாவென்று கேட்டான் கடைபைநத்தம் கண்மைக்கு வந்து கபுறு வருகிறமட்டுக்கும் ஆற்காடுவந்து சேர்ந்து இருக்கவேணுமே கடப்பை நத்தம் கண்மைக்கு வந்து சேர்ந்தால் ஆற்காட்டில் ஒருவரிரார்கள். ஆனால் சந்தாசாயபும் இதாயித்து மொகதீன் கானும் உங்களுக்கு எழுதின காகிதம் இந்த ரசபு மாதத்துக்கு நம்முடைய ஆனி மீ பாறசா வெகுமானம் வரத்து வாங்கிகொண்டு மூன்று நாள் பண்டிகை கொண்டாடி. அப்பால் புறப்பட்டு வருகிறோமென்றெழுதினார்கள். அதற்கு அவர்கள் ரசபு மீ 11–12 ஆயிற்றே இந்த மட்டுக்கும் அவர்கள் புறப்பட்டு ஐந்தாறு நாளாயிருக்குமே அந்த சமாசாரம் வந்ததின்பேரிலே சமீபத்திலே வந்ததாய் அவர்கள் சொல்லுகிறதேயல்லாமல் கண்மைக்கு இன்னம் வந்ததில்லை என்று தோற்றுகிறது என்று சொன்னதற்கு ஆர்க்காட்டிலேயிருந்து ஒரு ஒட்டகக்காரன் அவன் கவையாய் சம்பாகோவில் பாதிரிமார்களுக்கு மருந்துக்கு காகிதமெழுதினவன் சந்தா சாகிப் கண்மைவந்து சேர்ந்தான் என்று எழுதினான். அந்த சேதியை பாதிரிவந்து சொன்னானென்று சொன்னான். அப்பால் அப்துலாயிமானையும் அழைத்து இந்த ஜாடையாய்த்தானவனுடனேயுஞ் சொல்லி போகச்சொல்லி மறுபடி அழைப்பித்து ஒரு தம்பூரு ஒன்று கொடுத்தான் அதை வாங்கிக் கொண்டு போகச்சே எனக்கு துரை வெகுமானம் பண்ணினாரென்று சொல்லி அனுப்பிவித்துப்போட்டு சந்தாசாயபு மகனண்டைக்குப்போனான் மறுபடி துரை என்னை அழைப்பித்து பனிரெண்டு பீக்கல் சந்தனக்கட்டை வேண்டும் பார்த்து வாங்கிக்கொடுமென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டு வந்தேன்.

இந்தனாள் ராத்திரி ஆறுமணிக்கு நம்முடைய வைக்கில் சுப்பய்யன் எழுதின காகிதத்திலே நபாப் அன்வர்த்திகானழைப்பித்து சந்தாசாயபு மகனங்கேயிருக்கிறவன் சிப்பந்தி முதலிய மூஸ்தீப்பு பண்ணி தகப்பனார் அண்டைக்குப் போகவேணுமென்று இருக்கிறானாம். மகராஜனைத் தளங் கூட்டிக்கொண்டு தகப்பனண்டைக்குப் போகச்சொல்லும். இங்கே யாரும் தடைபண்ணுவாரில்லையென்றும் அவனை அங்கே வைக்கவேண்டாமென்று தங்களுக்கு யெழுதியனுப்பி துரைகளும் எச்சரிக்கை சொன்னதாகவும் இது நிமித்தியம் நபாபும் துரைக்குக் காகிதமெழுதி அனுப்பினாரென்றும் அந்த காகிதம் வருமென்று இதுமுதலான சேதியெழுதி சந்தாசாயபும் இதாயித்து மொகதீன்கானும் வருகிறது சுறுக்காயடிபடுகிறதென்றும் இங்கே ஆர்க்காட்டிலேயிருக்கிற வர்த்தகரெல்லாரும் வேலூர், ஆரணி முதலான கோட்டையிடங்களை தேடிக்கொண்டு இரண்டுநாளைக்கு முன்னதாக வெகுபேர் அப்பால் போனார்களென்று, இதுமுதலான சேதியெழுதி வந்தது

இதல்லாமல் நபாபு அன்வர்திகான் காகிதமும், சந்தாசாயபு மகனை அங்கே வைக்கத் தேவையில்லையென்று எழுதி வந்தது இந்தசேதி நாளைக்காத்தாலே துரையுடனே சொல்லச்சே என்ன சொல்லுகிறாரோ அந்த வயணம் நாளை தினசரியிலே எழுதுகிறேன். மற்றப்படி சுவாமி சந்தாசாயபு பேச்சு இது மட்டுக்கும் கொண்டுவந்துவிட்டது. இனிமேல் என்ன நடக்கிறதோ அறிய வேண்டும்.

**சுக்கில ஞு ஆனி மீ 19-உக்கு 1749-ம் ஆ ஜூன் மீ 29 உ ஆதிவாரம்**

இற்றைநாள் காலை கோட்டைக்குப்போய் முசியே கொர்னேத்தைக் கண்டு பேசி (**Cornet**) எழுத்துகூலிக்கு முன் அதனம் நான் கொடுத்தது கணக்கு குடுத்துக்கொண்டு மிகுதி இரண்டாயிரத்து எண்ணூத்தி எண்பத்திநாலே (**2884**) சில்லரை ரூபாய்க்கு முசியே கில்லியார்கையிலே வாங்கி கொள்ளச் சொல்லி கணக்கு குறித்து எழுதி கையெழுத்துப்போட்டு கொடுக்கிறோ மென்று கணக்கு குறித்து முசியே மீராவை சுத்திகரித்து எழுதி கொடுக்கச் சொன்னது இன்னம்கொடுக்கவில்லை. நீரிப்போசத்தியாய் கொடுத்து அப்பால் வாங்கிக் கொள்ளலாமென்று சொன்னதற்கு அப்போ முசே துருவேத்தை (**Drouet**) அழைத்து எம்மாத்திரியும் ரூபாய் இருக்கிறதென்று கேட்டான் சற்று ஏறத்தாழ இந்த தொகைக்கு இருக்குதென்று சொன்னான். அதை ரங்கப் பிள்ளைக்கு கொடு என்று சொன்னார். அந்தபடிக்கு முசே துருவேத்து (**Drouet**) இரண்டாயிரத்து எண்ணூத்தி அன்பத்தி நாலு ரூபாய் கொடுத்தான், அதை வாங்கிக்கொண்டு பாக்கு கிடங்கண்டே வந்தேன். அப்போ துரையவர்கள் கோட்டைக்குப் போய் பூசை கேட்டுவந்தேன். அவர் கபே குடித்து ஆனஉடன் அன்வர்த்திகான் நேற்று இராத்திரி அனுப்பின காகிதம் தலைப்பை சொன்ன வயணம் இப்போ நடக்கிற சேதி என்னவென்றால், இந்த பிராந்தியங்களிலே சிறிது பேர் தலையெடுத்து சரீரஸ்மரணை தெரியாமல் திரிகிறார்களென்றும் அவர்களுக்குத்தக்க தண்டனை தண்டிக்கத்தக்கதாக நாசர்சங்கு அவர்கள் சயித் லஷ்கார்கானவரவர்களையும் பதினாயிரம் குதிரை சவாரிகளையும், பீரங்கி முஸ்தீப்புகளுடனே மகா பயங்கரமாயிருக்கிற பவுன்சுடனே கூட வருகிறானென்றும், இதல்லாமல் நிம்மாஜி சுல்தான், ராஜா சந்திரசன் குமாரன் இவர்கள் ஒவ்வொருத்தர் ஐயாயிரம் ஐயாயிரம் சுவார்களுடனே ஏகத்துக்கு இருபத்தய்யாயிரம் குதிரை சுவார்களுடனே கல்பக்கு வந்து சேர்ந்தார்கள். இதல்லாமல் சந்தாவென்கிறவர் மகனுடனே சாதாராவிட்டுவந்து சித்திகால்பாமனண்டையிலே வந்து சேர்ந்து மகனை போக்கடித்துக்கொண்டு அவனுமிடுப்பொடிந்து விழுந்துக்கிடக்கிறது உங்களுக்குத் தெரிந்து இருக்கிறதே அவன் மகன் இரண்டாம் பிள்ளையாண்டான் இவனுடனே புதுச்சேரி யிருக்கிறவன்

சிரிது தளம் சேர்க்கிருனென்றும் தளம் சேர்த்துக்கொண்டு அவர்கள் தகப்பனூரண்டைக்கு போகவேண்டுமென்று யிருப்பதாய் சேதி கேட்டோம்; அவன் தகப்பனண்டைக்கு போவதை யாரும் தடைபண்ணவில்லை. மகாராஜனுகப் போகச்சொல்லு ஆனாலவனை தாங்களங்கே வைக்கிறதைத் தொட்டு தங்களுக்குப் பதிலாமையுண்டு ஆனபடியினாலிந்த காகிதம் கண்ட உடனே அவனை அங்கே வையாமல் வெளியே அனுப்பிவிடவும் அது தங்களுக்கும் நமக்குமுள்ள சினேகத்தைக் குறித்துயெழுதினேம் எத்தனை விதத்திலேனும் அவனை அங்கே வைக்க தேவையில்லை என்று எழுதி வந்ததென்று துரையுடனே சொன்னதற்கு அவர் சொன்ன உத்திரம் செஞ்சியை ஓடி வந்து சேர்ந்தானும் என்று சொன்னார். நபாப் அன்வர்த்திகான் ஆர்க்காடு விட்டு இவ்விடம் வந்த சேதி கேழ்க்கப்படவில்லையென்று சொன்னதற்கு அப்துலாயிமான் வந்து சொன்னாரென்று சொல்லிப்போட்டு அப்பால் நடக் கச்சேரி வக்கீலையும் அன்வர்திகானழைத்து சந்தாசாயபு மகனை அங்கே வைக்க வேண்டாமென்று சொன்னது முதலான சேதி சொன்னதற்கு ஒன்றும் உத்தாரம் சொல்லாமல் புறப்பட்டு வுள்ளே போனார் நானும் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இந்தனாள் பகலுக்கு மேலாக காஞ்சீபுரம் சின்னைய செட்டியாரும் சுபுதல்லிகான், நாரன்ன பண்டிதன் குமாரன் ராமராயனும் வில்லிய நல்லூருக்கு வந்து அங்கேயிருந்து அரும்மாத்தப்பிள்ளை சாவடிக்கு வருகிறோம் தாங்களும் வரவேண்டுமென்று எழுதியனுப்பினபடியினாலே அவர்களைக் கண்டு பேசுகிறதற்கு அரும்மாத்தபிள்ளை சாவடிக்குப்போய் அவர்களை அங்கே கண்டு பேசினவிடத்திலே சின்னைய்ய செட்டியார் சொன்னது சென்னபட்டணத்திலே சுகமே யிருந்ததின்பேரில் சென்னபட்டணத்திலிருந்து புறப்பட்டு காஞ்சீபுரம் போனேன். அப்பால் சென்னைப்பட்டணம் பிரஞ்சுகாரர வசமானபடியினாலே அபபால் ஒன்றுக்கொன்று அப்படியிருந்துப்போச்சுது.

அப்பாலுமெங்களுக்கு காஞ்சீபுரம் எப்பொழுதும் பழமையாயிருக்கிறபடியினாலே அங்கே யிருந்தேன் அப்பால் காஞ்சீபுரம் சீர்மை குத்தகை ஏறக்குறைய வாங்கிப்போட்டு பணம் காணமல் இருபத்திநாலாயிரம், முப்பதுனாயிரம் லுக்கு சான் வந்தால் அதை வூரிலேயிருக்கிற வர்த்தகர்கள் கையிலே கடன்போலே கேட்டு வாங்குகிறது அப்பால் கொடுத்தபிற்பாடு பணம் வருகிறப்பேச்சி இல்லை. கொடாவிட்டாலவனை சும்மாவாகிலும் ஒரு அபாண்டத்தைப் போட்டு அடிதடி மனஷபங்கங்கள் செய்கிறது ஆனபடியினால் இதை சுபாவிலே போய் பிராது பண்ணினால் அவர்களது காசு போகிற

தல்லாமல் பின்னையுமந்த கிராமத்திலே குடியிருக்கிறதுமில்லை எந்த விதத் திலேயும் பணத்தையும் வாங்கிப்போட்டு மனுஷரும் போகிறது. ஆனபடி யினால் அங்கே யிருக்க பொசுங்காமல் புறப்பட்டோம். நரசன்ன பண்டிதன் குமாரன் ராமராயனும் உத்தியோகம் சரியாக பண்ணுகிறதில்லையென்று வைதீக விருத்தியாயிருக்கிறோமென்று பிரம்மஞானம் வருத்துக்கொண்டு கொஞ்சநஞ்சமிருக்கிறது போனவசத்திலேதான் வைத்து நடத்திக்கொண்டு வருகிறார். ஆனபடியினால் அவரும் நாமும் இரண்டுபேரும் யோசனைபண்ணிக் கொண்டு புதுச்சேரி போய் உங்கள் பிராப்பிலே இருக்கலாமென்று நினைத் தோம் துரையினுடைய பெண்சாதி வெகு சுருக்காயிருக்கிறதாய் வெளி யெல்லாம் துவனிக்கிறது முன்னமே புதுச்சேரிப் போகச்சொன்னால் மத்நத்தினுடைய ஞாயத்திலேயும் மனுஷ தாரதம்பியமறிந்து நடக்கிற ஊரில்லை ஆனபடியினால் அவ்வூருக்கு போகப்போகாதென்று எல்லோருக்கும் பயம் உண்டாகி புதுச்சேரிக்குப் போகிறாயாவென்றால் லக்ஷத்துக்கு லக்ஷம் ஆதாயம் வந்தாலும் புதுச்சேரிக்குப் போகப்போகாதென்று எல்லோருக்கும் பயத்தை செவ்வண்ணையுடனேகூட வார்த்து இருக்கிறது. அத்துடனே யிப்போ அம்மாள் அமுலை தொட்டு புழுத்த பியின்மேல் நாயுமடிச்சாப் போலே புதுச்சேரி பேர்சொன்னால் பதின்காதவழிக்கு பதின்காதவழிப் பறக்குறாப்போலே. இருக்கும்போது புதுச்சேரிக்கு வருகிற ஆசை நிறுத்தி தங்களைக் கண்ணாலே பார்த்துப்போட்டு தேவனாம்பட்டணம் போவோமென்று யோசனை பண்ணிக்கொண்டு வந்தேன். உங்கள் தரிசனமாச்சுதே தேவனாம் பட்டணத்துக்கு நாளை காலமே போவோமென்று சொன் னார். ஊருக்குள்ளே வாருங்களேன் ஒரு பொழுது சாப்பிட்டுவிட்டு அப்பால் போகலாமென்று எத்தனை விதமாயழைத்தாலும் என்மனதில் பயம் உள்ளபடிக்குத்தானே சொன்னேன். நீங்களதைக்குறித்து ரொம் பவும் ஏன் அழைக்கிறீர்களென்று பயந்த பதிலாய் சொன்னார்கள் சும்மாயிருந்து இந்த பதிலை இப்படி உண்டாக்கினார்களேயொழிய இவ் விடத்தில் நடக்கிற ஏற்பாடுகளும் மரியாதைகளும் விஸ்தரித்து எப் படி சொல்லவேண்டுமோ அப்படி விஸ்தரித்துப் பயவேசமில்லாமல் சொன்னாலும் சரிப்படவில்லை அதன்பேரிலே நாளையதினம் அரிசி பருப்பு சாமக்கிரியைகள் அனுப்பிவைக்கிறோம் சாப்பிட்டு ஆன உடனே நானும் சாயங்காலம் வந்து அனுப்பிவிட்டு ஊருக்குப்போகிறேன் என்று சொன்னதற்கு நல்லதென்று நாளையதினம் விருந்து சாப்பிட்டுவிட்டு போகி றோமென்று ஒப்புக்கொண்டு உங்களுக்கும் எங்களுக்கும் இரண்டு தலைமுறை தொட்டுவருகிற சிநேகமானபடியினாலே உங்களை ஒருதரம் பார்க்கவேணு மென்றும் இன்றுமுதல் வியாபார மூலமாய் ஏதாகிலும் சிநேகம் நடப்பிக்க வேணுமென்று சொன்னார். சுவாமியினுடைய கடாக்ஷமிருந்தால்ருணானு

பந்தம் விடாது என்று உபசாரமாய் சொல்லிப்போட்டு அனுப்பிவைத்து செக்ரசன் பண்டிதர் குமாரர் ராமாராயர் ஒருவெள்ளை சாலுவையும் சின்னிய செட்டியார் இருபது விராகன் பொருமான ஒரு வச்சிரமோதிரம் முப்பது விராகன் பெருமான பெண்டுகள் கழுத்தில் கட்டிக்கொள்ளுகிற ஒரு முத்து ஆரம் ஒன்று ஆக இரண்டும் கொடுத்தார். ராமாராயன் கொடுத்தது புதிய சால்வையானால் இருபது விராகன் பொரும் பழயதானதால் பத்துவிராகன் தான் பொரும் இது அவர்கள் கையில் வெகுமானம் வாங்கிக்கொண்டு அவர்கள் கையிலனுப்பிவித்துக்கொண்டு அரும்பாத்தப்பிள்ளை சாவடியில் வியாதி ஆரோக்கிய நிமித்தம் வந்திருக்கிற முசியே ஒகேவையும் **(Auger)** அவர் பாரயனுடனேயும் ஒரு நாழிகை நேரம் லோகாபிராமமாய் பேசியிருந்து அங்கே அவர்கள் கையிலனுப்பிவித்துக்கொண்டுபோனார்.

**சுக்கில ஸூ ஆனி மீ 21 உ க்கு 1749 ஆ ஜூலை மீ முதல் தேதி அங்காரக வாரம்.**

இற்றைநாள் காலையில் பிரபுவினிடத்துக்கு போனவிடத்திலே நேற்று இராத்திரி கேழ்காவிட்டானுட்டகம் போய் கோட்டையிலே போய் வாசாபு பார்ந்துவிட்டு வந்தபடியினாலே பொழுது விடிந்து பத்து பனி இரண்டு நாழிகை மட்டும் நித்திரை போய் அப்பாலெழுந்திருந்தும் விசனமும் கோபமுமாக இருந்தார். இந்த கோபமும் விசனமும் சூரத்து காசிதுகள் இருபது நாளைக்கு முன்னே காகிதம் கொண்டுவந்தார்கள்; அந்த காகிதம் பார்த்த நாள் முதல் இன்றையவரைக்கும் நானும் பார்ந்து வருகிறேன்; முகத்தில் உற்சாகமில்லை. ஒரு காரியம் சொல்லாமற்போனால் கேழ்க்கிறதுமில்லை. ஒரு வியாபார கபுறுகள் சமஸ்தமும் முன்னே எதாகினும் அவருக்கு உற்சாகமிருக்கிற காரியமாய் சொன்னால் நாலு நாழிகை இரண்டு நாழிகை நகைத்துக்கொண்டு உற்சாகமாய் கேட்பார். இப்போது அதுகளையெல்லாம் மறந்துப்போய் விட்டாற்போற் காண்கிறதேயல்லாமல் அது நினைவுடனே இருப்பவர்போல் காணவில்லை. இந்த இருபது இருபைத்தைந்துநாளும் ஒருநாளையப்போலே தினமும் பார்க்கிறேன். வெகு விசனத்துடன் இருக்கிறார் அந்த விசனமுமில்லாமல் மசுக்கரையிலிருந்து கப்பல் வரவும் அன்றையதினம் இவர் பின்னும் கோபமு தாபமுமாக இருக்கிறார். இது உள்ளபடியே சீர்மையிலிருந்து என்ன எழுதி வந்திருக்கிறதோ நானறியேன். இல்லாவிட்டால் முகத்தில் இத்தனை வேசாடைவரக் காரணமில்லையென்று தோற்றுகிறது. ஊரெல்லாம் வெள்ளைக்காரர் தமிழர் சமஸ்தமான ம்பரும் வேறே துரைத்தனம் வருகிறதென்று உலக்கை பாடமாய் சொல்லிக்கொள்ளுகிறார்கள். எவர்கள் புதிதாய் வந்தாலும் இவர்தானேயிருந்தாலும் என்னுடைய அதிர்ஷ்டம் எப்படி நடக்கவிருக்கிறதோ அந்தப்படி நடக்கப்போகுமென்றும் எப்போதும் ஆண்டவன் கொடுத்த தைரியப்

படிக்கு திருச்சித்தமாய் எண்ணிக்கொண்டிருக்கிறதேயல்லாமல் மற்றபடி வேறு எண்ணமில்லை. ஆனால் பிரபு இத்தனை வேசாடையாயிருபயதற்குக் காரணம் இன்னதென்று தெரியவில்லை. முசியே லபுர்தொனே (Labourdonnais) சம்மதி சீர்மையிலே என்னமாயிருக்கிறதோ? அது முன்னறிலையா யிவரை அவ்விடத்துக்கு வரச்சொல்லி யெழுதிவருகிற ஜாடையோ என்னவோ அவரிருக்கிற விசனம் காகிதத்தில் எழுதமுடியாது. " அடுத்து காட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்து காட்டும் முகம்" என்ற பெரியார் மொழிப்படி இருக்கிறது. இனி எப்படி நடக்கப்போகிறதோ அறிய வேண்டியது.

காலையிலே கோட்டையிலே யானத்து புடவை கட்டுப்போட்ட படியினாலே கோட்டையிலே போயிருந்து கட்டுப்போட்டான் உடன் சென்னப் பட்டணத்து எழுத்துப் புடலவ கணக்குக்கு கூலி தீர்த்து எழுதின கணக்கிலே துரையவர்கள் கையெழுத்துப் போட்டார். முசியே கொர்னேத்து (Cornet) கையெழுத்துப் போட்டான். அதன் கீழே முசியே கில்லியார் (Guillard) கையிலே யெழுத்து கூலிக்காக இரண்டாயிரத்து முன்னூற்று தொண்ணூத்தொறு விராகனும் இருபத்து மூன்று பணமும் ஐம்பத்து மூன்று காசும் மதித்து எழுத்துப் புடவை கூலிக்கு உள்ளது பத்திக் கொண்டதாய் எழுதி கையெழுத்துப் போட்டு கொடுத்தேன். அதற்கு முசியே (Guillaro) மேலே யெழுதினது கையை சென்னப்பட்டணத்து யெழுத்து சீட்டி கூலி சிலவுக்கு செலவெழுதிப்போட்டு முன் பிரவரி மீ ஆனி மாதத்திலே முசியே லெகு (Legou) கையிலே ஆயிரத்தி ஐநூறு விராகனுக்கு நாலாயிரத்தி தொண்ணூறு ரூபாய் எழுத்து கூலிக்கு வாங்கிக்கொண்டிருந்தோமே பாதிக்கு என்பேருக்கு மறுபடி வரவு வைத்துப் போட்டு மற்ற மூவாயிரம் ரூபாய்க்கு இரண்டாயிரத்தி எண்ணூற்றி ஐம்பத்திநாலுரூபாய் முசியே கொர்னேத்து (Cornet) கொடுத்ததைக் கூட கூட்டிக்கொண்டு குறை நூற்றி நாற்பத்தி ஆறு ரூபாய் ரொக்கமாக மூவாயிரம் ரூபாய் முசியே கொற்னேத்து வரவு வைத்துக்கொண்டு வரவும் செலவும் மேலே எழுத்தின்படிக்கு கணக்கு எழுதிக்கொண்டு முசியே கில்லியார் (Guillard) என்னையே போகச்சொன்னார். அதிற்கு நான் சொன்னது எழுத்துப்புடவை கூலிக்கு முன் பிரபவ ஹூ ஆனிமாதத்தில் நான் பத்திபிருந்த நாலாயிரத்தி தொண்ணூறு ரூபாயும் என் வரவுவைத்துக்கொண்டு தீர்த்துஎழுதிப்போட்டார். தொக்கு தோடு இல்லையென்று சொல்லிப்போட்டு அனுப்பிவைந்துக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன் இந்த கணக்கு முசியே (Guillard) வீவுருமேலே (புத்தகம்) எழுதியிருக்கப்பட்ட வயணப்படியே முசியே கொற்னேத்து (Cornet) கிட்டயிருந்து எழுதிவைத்தது. இந்த நாலாயிரத்தி தொண்

ஞூறு ரூபாயும் முன் 1747 ஆ ஜூலை மீ 2-உ முசியே லெகு (Legou) கையிலே வாங்கினது அது லீவுருலே (புத்தகம்) அந்த வருஷம் எழுதப்படாமல் (இருந்தது.)

**சுக்கில ஸு ஆனி மீ 22 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 2 உ புதவாரம்**

இற்றைநாள் காலத்தாலே பிரபுவினிடத்துக்குப் போனேன் அவர் பத்துமணி மட்டுக்கும் நித்திரைப் போயெழுந்திருந்து ஆனவுடன் கபே குடித்து இரண்டொரு வெள்ளைக்காருடனே பேசியிருந்து அப்பாலென்னை அழைத்து கும்பினீருக்கு புடவை வரவில்லையாயென்று கேட்டார் நாள்தோறும் வந்துகொண்டேயிருக்கிறதென்று சொன்னேன். ஆர்க்காட்டு சமாசாரம் என்ன என்றும் கேட்டார். இப்போ நாசர் சங்கு அன்வர்திகானுக்கு சகார்மத்து சங்கு (Sakarmat jang) என்கிற பேர்கொடுத்து அனுப்பிவைத்தார். அது நிமித்தியம் உசேன் சாயப்பு ஒருநாள் விருந்து பண்ணிவைத்து ஒடுசாவா பல்லக்கு ஒன்று முஸ்திப்பு பண்ணிவைத்து அதுவும் கொடுத்து பதினையாயிரம் ரூபாய்க்கு புடவை சில உடமை கொடுத்ததாகவும் சம்பதிராயனும் விருந்து பண்ணிவைத்து பதினெழாயிரம் ரூபாய் மட்டுக்கும் விருந்துபண்ணிவைத்து, மாபுசுகான் ஒருநாள் விருந்து பண்ணிவைத்து பன்னிராயிரம் ரூபாய்க்கு வெகுமதி பண்ணிவைத்து தகப்பனை அனுப்பினதாயும் நானையதினம் முனைவர்திகானும் பின்னையும் இரண்டொருத்தரும் விருந்து பண்ணி வைத்து வெகுமதி கொடுக்கத்தக்கதாக இருக்கிறார்களென்று எழுதி வந்தது. இதாயித்து மொகதீன்கான் சந்தாசாயபு மாரிபத்தில் பிந்தனூர் ராஜா இரண்டு லக்ஷத்து அன்பது நாயிரம் ரூபாய் பத்தியிருந்தது. ஆனபடியினால் இதாயத்து மொகதீன்கான் ஆர்க்காட்டுக்கு வருகிறதாப் சண்டை இந்த பாரிசம் போட்டதாய் சமாசாரம் வந்ததென்றும் அதன் பேரிலே இவர்களும் எச்சரிக்கையுடனே இருக்கிறார்களென்று எழுதிவந்ததாய் சொன்னேன். முந்தாநாள் நபாப் அன்வர்திகான் செஞ்சிக்கு வந்ததாய் உன்னுடனே சொன்னேனே தப்பு கபுறு நீ ஆர்க்காட்டிலேதானே இருக்கிறானென்று சொன்ன கபுறு மெய்யென்றும் சொல்லி நம் அன்வர்திகான் நாலாநாள் சந்தாசாயபு மகன் இவ்விடத்திலே பவுன்சு கூட்டி தகப்பனண்டைக்குப்போக வேண்டுமென்று இருக்கிறான் என்றும் நாங்கள் போகச்சே வழியிலே ஒன்றும் செய்கிறதில்லை. மகாராஜனை போகச்சொல்லென்றும் அவனை புதுச்சேரியிலே வைக்க தேவையில்லை என்றும் வைத்தால் பதிலாமை வருமென்றும் இது முதலான சேதி எழுதிவந்ததே அதற்கு பதிலுத்தரவு என்ன எழுத வேணுமென்று சந்தா சாயபு மகனை கேட்கச்சொன்னேனே கேட்டாயா என்றும் அதற்கு உத்தாரம் என்ன எழுதலாமென்று சொன்னாரென்று கேட்டார், அதற்கு அவர்கள் சொன்னது எனக்கு சரிப்படவில்லை.

அதெப்படியென்றால்: அவர்கள் பதிலுத்தாரமெழுதச் சொன்னது வெகு நாளாய் இந்தவூரிலே இருந்தவர்களை நாங்களெப்படி அனுப்புவோமென்று எழுதச்சொல்ல சொன்னார்களென்று சொல்லச்சொன்னேன். அது உனக் கென்னமா எழுதலாமென்று தோற்றுகிறது என்று கேட்டார். எனக்கு தோற்றுகிறது ஒரு உத்திரமும் எழுதக் கவையில்லை எழெட்டு நாட்களுக் குள்ளே நடக்கிற காரியமெல்லாம் தெரிந்துப் போகிறது அவர்கள் வந்தால் தான் நாம் உத்திரம் பெழுத கவையில்லை. அல்லவென்று வரந்து மட்டாகி அவர்கள் காரியமே மார்க்கமாயிருந்ததே ஆனாலப்போ அதற்கு தகுந்த யோசனை பண்ணிக்கொண்டு எழுதிப்போடுகிறது யுக்தமாக தோற்றுகிறது. ஆனபடியினாலே வந்த காகிதத்துக்கு நீங்கள் கொண்டுவந்த நபாபு காகிதத் துக்கு பதிலுத்திரம் பிர்காலே யெழுதிவைத்து எங்கள் மனுஷர் கையில் கொடுத்து அனுப்புகிறோமென்று சொல்லியனுப்புவது நன்றாககாண்கிற தென நினைக்கிறேன். அப்பால் உங்கள் சித்தத்திற்கு எப்படி தோற்று கிறதோ அந்தபடிக்கு நடப்பிக்கிறது என்று சொன்னேன் நீ சொன்னபடி நான் செய்யவேண்டியது. அந்தபடிக்கு வந்த காகிதத்துக்கு துரையவர்கள் கப்பலனுவலினாலே பிரதி உத்திரமெழுதி கொடுக்க ஞாபக சக்தியில்லை. பிறகாலேயெழுதி எங்கள் மனுஷால் கையில் கொடுத்தனுப்புகிறோம் மென்று சொல்லி அனுப்பிவிட்டேன் என்று சொன்னார். அந்தப்படி அவர்களையும் அழைத்துச் சொல்லிப்போகச் சொன்னால் போகிறதில்லை யென்று சொன் னார்கள். கண்டிப்பு மேலே சொன்னபிற்பாடு போனார்களென்று சொன்னார் கள்.

**சுக்கில ஞு ஆனி மீ 23 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 3 உ குருவாரம்.**

இற்றைநாள் காலையில் பிரபுவினிடத்துக்குப்போன விடத்திலே நேற்று ராத்திரி எட்டு ஒன்பது மணிக்கு வீராம்பட்டணத்து துரை முதல் இன்று காலையில் எட்டுமணி வேளைக்கு புதுச்சேரி துரை வரையில் பீரங்கிப் போட்ட மசுக்கரை மோரிசிலிருந்து வந்த வெருங்கப்பல் இரண்டு இந்த இரண்டு கப்பல் பெயர் பிரிவியாம் ( **the Brillant** ) என்கிற கப்பல் ஒன்று மாற்சென்கிற கப்பல் ஒன்று ( **the Maurce** கப்பல் கப்பித்தான் மார்போர் முசியே புஸ்க்கானே **Bousquanay)** என்றும் முசியே தெலிகாத்தேன் ( de **Lagarde** ) ஒருத்தன் இந்த கப்பல் முன் கலாபத்தின்போது புறப்பட்டும் மசுக்கரையில் வந்து சேர்ந்து இருந்ததுமல்லாமல் போன ஞு ஆனி மாதத் திலே மசுக்கரையிலிருந்து சென்னைப்பட்டணத்துக்கு பணம் கொண்டுவந்து இறக்கிவிட்டுப்போன ஆறு கப்பலை சேர்ந்தது. இந்த இரண்டு கப்பல் என்று சொன்னார்கள். இந்த கப்பலிலே வெள்ளிமற்ற சரக்கொன்றும் வரவில்லை இவ்விடத்தில் சரக்கை ஏற்றிக்கொண்டு சீர்மைக்குப் போகத்தக்கதாக வந்த கப்பல் இந்த கப்பல் சேதி என்னவென்றால் ; சீர்மையிலே முன் சுஸ்பான்

சியம் தெ ஆர்மு சேதிக்கு (Suspension de armes') கபுறுகொண்டு வந்ததேயல்லாமல் மாசு சென்றுவிலே (ஜெனரலாலே) கையெழுத்துப் போட்டு சேதிக்கு ஒலாந்துக்காரருக்கும், இங்கிலீஷ்காரருக்கும் கரைவழியி லே எழுதிவந்ததேயல்லாமல் கப்பல் வந்து அதிலே சேதி வந்ததில்லை இந்த கப்பல் வரச்சே அங்கேயிருக்கிறவர்களும் சீர்மைக்கப்பலுக்கு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறதாய் சொன்னார்கள்.

மற்றப்படி சந்தாசாயபு அண்டையிலிருந்து அறக்காருகான் (Harkaras) வந்தவர்கள் சொன்னதும் அவர்களுக்கு யெழுதி வந்த காகித சேதி வயணம் சோர்தைபித்தனார் மொகத்துனை இரண்டுலக்ஷத்து ஐம்பதினாயிரம் ரூபாய் இதாயத்து மொகதீன்கான் அறிந்துகொண்டு பிறகு ஆர்க்காட்டுக்கும் தீவிரமாய் புறப்பட்டு வருகிறோமென்று இன்றையதினம் இதாயத்து மொக தீன்கான் பேட்டியிருந்தாயிருக்கிறது பேட்டி ஆனஉடன் எழுதியனுப்பிவிக் கிறோம் என்று இப்போ நாங்களனுப்பிய காகிதம் உங்களுக்கு சேருகிறபோது நாங்கள் கோலாளமுளவாய் (Govala Mulava) அந்த பிராந்தியங்களிலே வந்து சேருவோமென்று எழுதினதாய் காகிதங்கள் சந்தா சாயபு மகன் காகிதங்கள் அனுப்பிவைத்து படித்துப்பார்க்கச் சொன்னேன். மதனந்த பண்டிதன் அந்த காகிதத்தை படித்துப்பார்த்துச் சொன்னதிலே சுவாரசி யம் மாத்திரம் பார்த்து யெழுதினேன். மற்றப்படி இந்த நாள் சாயங்காலம் ஆற்காட்டிலே இருந்து வைக்கீல் சுப்பையன் அனுப்பிய காகிதத்திலே எழுதியிருந்த வயணம் இதாயத்து மொகதீன்கான் சிற்பி (Sirpi) மைதா னத்திலே வந்து இறங்கினானென்று அன்வர்த்திகானுக்கு பார்த்தும் அறக்கிறுங்கால் வந்து கபுறு சொன்னதாகவும் அதன்பேரில் உசேன் சாயபு சம்சாரம், சயந்தல்லிகான் சம்சாரம், சம்பத்திராயன் சம்சாரம் முதலாக சயிந்தலிகானையும், உக்குமந்துராயனையும் கூட கூட்டி செங்கல்பட்டு ஜில்லாவிலே இருக்கச்சொல்லி அனுப்ப அவர்கள் செங்கல்பட்டு ஜில்லா வுக்குப் போனதாயும் அன்வர்த்திகான் பெண்ஜாதி பிள்ளைகள் ராவுத்த நல்லூர் துறகம் சிறிது பேர்க்கும் திருச்சினாப்பள்ளி கோட்டைக்கு சிறிது பேருமாக அனுப்பி சிப்பாய்களுக்கும் குதிரை சுவர்களுக்கும் பதினொரு மாத சம்பளம் கொடுக்கவேண்டியவைகளெல்லாம் தீர்த்து பின்னையும் ஒரு மாத சம்பளமும் முன்னதாகக் கொடுத்து சிப்பாய்களைப் பார்த்து இந்த வேலை பொனை செய்து நிர்வாகம் பண்ணினால் சுகமாக உட்கார்ந்து கொண்டு சாப்பிடலாம். அல்லவென்று பின்வாங்கினால் ரொட்டித்துணுக் கைப் போடுகிறது மல்லாமல் கைம்பெண்டாட்டிகளென்று அபகீர்த்தி பட்டுப்போகவேண்டுமென்று பின்னையும் ரோஷம் வர எப்படி சொல்ல வேண்டுமோ அப்படியெல்லாம் சொல்லி சிப்பாய்கள் குதிரை சுவர்கள் சமஸ்த மான பேரும் நபாப் அன்வர்த்திகான், மாபுசுகான், சம்பந்திராயன்

உசேன் சாயபு முதலான பெரிய மனுஷருடனே ராணிப்பேட்டையிலே போயிறங்கி அப்பால் எதாயத்து மெக்கதீன்கானுக்கு காயிதமெழுதியனுப்பிய வயணமென்னவெனில்: நிசாம் ராசருசிங்கு எப்படியோ அப்படித்தானிரும் அவர்கள் எஜமானனாக இருக்கச்சே அவர் கீழே கைகட்டிக்கொண்டு அவர்களுத்தாரப்படிக்கு நடந்து கொண்டு பணமும் அவர்களுக்கு செலுத்திக் கொண்டுவந்தாம். அந்த இடத்துக்கு இப்போ நீர் வந்தால் நீரும் அவரே ஆச்சுதே அவருக்கு ஒப்படித்த கணக்கும் பணமும் உமக்கே செலுத்தி உத்திரவாதம் பண்ணிக்கொண்டு உம்முடைய ஆனை ஆக்கினைப்படிக்கு நடந்து கொள்ளுகிறோமென்றும் நற்காவிகம் ஐந்து லக்ஷம் ரூபாய் கூட கூட்டி அனுப்புகிறதாய் நிற்காஷை செய்து எத்தனம் பண்ணியனுப்பினதாய் சுப்பன் அனுப்பினதில்லாமல் அப்பால் ஊரிலே இருக்கிற வர்த்தகர் கடைக்காரர் உட்பட அங்கங்கே யிடம்பார்த்துக்கொண்டு போய் விட்டதாகவும் ஆர்க்காட்டு கில்லா (குல்லே,நார்) ஹிராசாத்து கான் ஆனபடியினால் அம்மான் மருமகள் என்ற நியாயத்தின் பேரிலே உடைமைக்கு பயமில்லை என்று ஆற்காட்டு ஜில்லாவிலே அவரவர் கொண்டுபோய் சேர்த்தார் ளாரம் அதற்கு மூட்டைகொரு ரூபாய் விழுக்காடு வாங்கிப்போட்டாராம் இருபதினாயிரம் முப்பதினாயிரம் ரூபாய்க்கு உண்டு ஜில்லா காரனுக்கு ஆதாயமென்றுப்போலேயும் கூலிக்காரர் எருதுகள் 22க்கு ரூபாய் கொடுக்கிறோமென்றும் அகப்படாமல் போச்சுதென்றும் விழுந்தபிள்ளை எழுந்திருக்க நேரமில்லை. அப்படி மூன்று நாள் ஆற்காட்டு பட்டணம் ஆதியந்தமும் அதலகுதலபட்டது. காகிதத்திலே எழுதி முடியாதென்றும் இனி என்ன நடக்குமோ தெரியாதென்றும் எழுதிவந்த காகிதச்சேதி துரைக்குச் சொன்னதின் பேரில் துரை அந்த க்ஷணமே அப்துலாகிமானை அழைப்பித்து நான் சொன்ன சேதியும் சொல்லி இவர்களை தயாராயிருக்கச் சொல்லி சொன்ன விடத்திலே தங்கள் வசமாயிருக்கிற நானூறு ஐனூறு துப்பாக்கியெல்லாம் மாற்றி கொடுக்கச்சொல்லியும் ஒரு துப்பாக்கிக்கு நூறு நூறு வேட்டுக்கு கடுதாசும், நாலு பீரங்கியும், அதுகளுக்கு குண்டுகள் தீக்குடுக்கைகள், மருந்துகள் முதலிய முஸ்திப்யெல்லாம் துரை கொடுக்கச் சொல்லி அவரவாகள் பேருக்கு ஒடுதனுல் பண்ணி கையெழுத்துப்போட்டுக் கொடுக்க அந்த அப்துலாகிமான் கொண்டுபோய் கொடுத்து துப்பாக்கி பீரங்கி முதலான சண்டை சாமான்கள் என்னவேண்டுமோ அதையெல்லாம் வாங்கிக்கொண்டு போய் தானிருக்கிறதாவிலே சேர்த்துக்கொண்டான். இனிமேல் என்ன நடக்கிறதோ அறியவேண்டியது.

இந்த நாள் பத்துமணிக்கு முத்துமல்லாசெட்டி பெண்சாதிபின்ளை களிந்த மட்டுக்கும் நயினார்வீட்டுக்கு அடுத்தாப்போலே ஒரு வீட்டிலே வைத்து சேவுகர் காவலிலிருந்தார்கள். இப்படி எத்தனை நாளிருந்தாலும்

அங்கே வர தில்லையென்று எவர்கள் சொன்னார்களோ அதன்பேரிலே மதாம் துப்ளேக்சு சாவடி கிடங்கிலே கொண்டும்போய் வைக்கச் சொன்னதின் பேரிலே முத்துமல்லாரெட்டி பெண்சாதி நாக்கைப்பிடுங்கிக்கொண்டு செத்துப்போகிறதே யல்லாமல் நானந்த பறையர்களுடனே போயிருப்பேனா யென்று பறிச்சேதமாய் போகிறதில்லை என்று சொன்னார்களென்று பெரியண்ண நயினார்போய் மதாம் துப்ளேக்சுடனே சொன்னதற்கு கழுத்தைப் பிடித்து நெட்டிக்கொண்டு கிடங்கிலே கொண்டுபோய் வை அதற்கு வர மாட்டேனென்றால் கையை காலை கட்டி நாலுபேர் தூக்கிக்கொண்டுபோய் கிடங்கிலே போடச்சொல்லி அனுப்பினான். அந்தபடிபோய்ச்சொன்னதின் பேரிலே சாவடி கிடங்கில் கொண்டுபோய் வைத்துப்போட்டு முத்துமல்லா ரெட்டி உடன் பிறந்தாள் பாகிரதி என்ற விதவையிருக்கிறாள் அவளையும் கொண்டுப்போய் சாவடியிலே வைத்தார்களாம். அவளை ஏன் வைத்தார்களென்றால் அவளண்டையில் பதினாயிரம் விராகனுக்கு ஆஸ்தியுண்டு அந்த சம்மதியை தக்ஷணாமூர்த்தியையும் யெக்கியப் பட்டரையும் சொல்லி இவளைக் கொண்டுபோய் காவலில்வைத்தால்குறைந்ததுபதினாயிரம் ரூபாய் அகப்படுமென்று சொன்னதின்பேரில் இந்த முத்துமல்லாரெட்டி பெண்சாதியுடனே கூட சாவடியிலே கொண்டுபோய் வைக்கச் சொன்னா ளிப்போ சாவடியிலே கொண்டுபோய் முத்துமல்லாரெட்டி பெண்சாதி பிள்ளைகள் பார்க்கிறதை இதற்கு ஐந்தாறு நாட்களுக்கு முன்பாக பாப்பு ரெட்டியைக் கொண்டுபோய்வைத்துகூட தக்ஷணாமூர்த்தியும் யொக்கியப் பட்டரும் முத்துமல்லாரெட்டி தம்பி முத்துபோலம்ரெட்டியும் அனுகூலமாயிருந்து மதாம் துப்ளேக்சுக்கு இப்படி நடத்தினாளேயல்லாமல் பணத்துக்கு ஏற்படாதென்று சொல்லிவைத்தார்களானால் லோகத்துக்குள்ளே (நானும்) இருக்கிற ஜனங்களுங்கூட இதுகாரியம் நடப்பிப்பதற்கு சம்மதித்து நடக்கிறதாய் ஜனங்களெண்ணுவார்கள். அப்படியொருகாலும் என் புத்தி சம்மதியாதென்கிறது என்ன நியாயத்தினாலே என்றால் முத்துமல்லாரெட்டயவர்கள் தகப்பனார், பாட்டனார், வம்சந்தான் சமஸ்தானபேர்களும் பல்லாக்குபிரதிஷ்டையாயிருந்தபடியால் அப்படி பெரியமனுஷார் வீட்டுப்பெண்டுகளாயிருக்கிறவர்களுக்கு இப்படிப்பட்ட இக்கட்டு வர நினைக்கிறவன் சண்டாளனே யல்லாமல் மனுஷத்தன சத்தியத்துடனே முன்னுக்கு சுகப்படவேண்டுமென்றிருக்கிற பொய் மனுஷனுக்கு ஒருக்காலும் மந்தபுத்தி வராது ஆனபடியினாலே என் சத்தியப்படிக்கு இவர்களை (சாவடியில்) காவலில் வைக்கவும் பின்னையும் இக்கட்டு பண்ணவும் என் மனோவாக்காய் அக்கிரமங்களினாலே நினைக்கவில்லை. ஜனங்கள் பார்க்கிறபேருக்கும் கேட்கிறபேருக்கும் ஒருகாலும்

மெய்ப்படாது ஆனால் பரமேஸ்வரனுக்கு தெரியாததொன்றில்லையே அவருக்கு தெரிந்திருந்தால் போதுமென்று எண்ணிக்கொண்டேன்.

பாகிரதி பாப்புரெட்டியை விடுதலை பண்ணினால் இரண்டாயிரம் மூவாயிரம் கொடுக்கிறோமென்று பரஸ்பரம் பேசுகிறான். இதென்னமாய்ப் போய் என்னமாய் வருமே தெரியாதென்று ஒருநாள் வந்து சொன்னார்கள்.

இந்த நாள் காலையில் சவரிமுத்து சேருவைக்காரன் சொன்னானென்று இந்த பெண்டுகளையெல்லாம் சாவடியிலே வைத்தாலேயல்லாமல் பணத்துக்கு சீக்கிரமத்துக்கு உடன்படிக்கையாக மாட்டாதென்றும் மதாம் துப்ளேக்சு சொன்னாளென்று என்னுடனே வந்து சொன்னதற்கு ஆண் பிள்ளைகளை என்ன செய்யவேணுமோ அது செய்யலாம், செய்விக்கலாம் பெண்பிள்ளைகள் ஜோலிக்கு சண்டாளன் வேலையல்லாமல் கிரகஸ்தன் செய்யும் வேலையல்ல. இப்படி அப்படி வரவொட்டாது உங்களுக்கும் முத்துமல்லாரெட்டிக்கும் தருமமே அல்ல; சுவாமி நன்மை பண்ணமாட்டார். ஒரு காலித்தனை குரோதத்திற்கு உடன்படலாகாதென்று சொன்னதற்கு தாங்கள் பரச்சேதமாய் அறியாததுபோலேயும் அறிந்தால் நடக்கந்நக்கதில்லை இப்போ நாங்களந்த ஜோலிக்கு போகிறதில்லை என்றாப்போலேயும் இப்படி சேனைவிதமாய் எனக்கு சொன்னதற்கு நானவர்கள் வாயினாலேதானே அவர்களை தொட்டுவந்ததென்று எண்பித்தபிற்பாடு இந்த வேலை தப்பிதம் செய்தோம்; எங்களாலேயுமினிமேல் திருப்பக்கூடாதென்று சொல்லிப் போட்டு அப்பால் ஜாடையாய் கசுக்கிறார்கள். அப்போ நான் சொன்னது சுவாமி இந்த காரியங்களுடனே சேர்ந்ததுக்கு என் மாரிபத்திலே நடத்தாமல் பரஸ்பரமாய் பண்ணி நடப்பிக்கச்செய்தது எனது தகப்பனார் செய்த புண்ணியபலன் யென்று சொல்லி ஜனங்களிவனையல்லாமல் அவர்கள் காரியத்துக்கு நடக்குமாவென்று எண்ணுவார்கள். என் வாயினால் பிரபுவினுடனேயாவது மதாம் துப்ளேக்சுனுடனேயாவது முத்துமல்லாரெட்டி காரியத்துக்கும் இந்த முத்துமோலோம் செட்டி உட்பட இவர்கள் காரியத்துக்கு நான் சொன்னதுமில்லை அவர்கள் பேசினதுமில்லை அது பரமேஸ்வரனுக்கு தெரியும் அப்பால் நான் விஸ்தரித்து எழுத வேண்டியது இன்னதென்று தெக்ஷணாமூர்த்திக்கும் எக்கியப்பட்டருக்கும் நீங்களறிவீர்களென்று சொல்லிப்போட்டு நானும் காலையில் துரை வீட்டுக்கு வந்தேன் இங்கிருந்து துரைவீட்டுக்குப் போகிறதற்குள்ளே இதிலே இவர்களைக் கொண்டுபோய் சாவடியிலே வைத்தார்களென்று வந்து கபுறு சொன்னார்கள்.

இந்தனாள் பன்னிரெண்டு மணிக்கு துரையவர்களழைப்பித்து முத்துமல்லாரெட்டி வசத்திலே ஒரு பெண் குதிரை ஒன்று இருக்குதாம் அவன்

செத்துப்போய் அவன் தம்பி வசமாயிருக்குதாம் அதை இப்பொழுதே சேவர்களே அழைப்பித்து அந்த குதிரையை ஓட்டிவரச்சொல்லி முசியே தொத்தேல் (d'auteul) வசம் பண்ணிப்போடென்று சொன்னார். அதிலே முசியே தொத்தேலும் (danteuil) வந்து கொசிசீம் சீனத்துக்கு (Cachin-Chi'na) ஒரு பெண் குதிரையும் ஒரு ஆண் குதிரையும் அந்த ராஜாவுக்கு வெகுமானமாய் அனுப்பவேணும் அதற்கு ஆண் குதிரையிருந்து கப்பலின் பேரிலே ஏற்றுவித்தோம் அதற்கு தக்க பெண்குதிரை உயரமும் பறுமணம் அந்தமும் அந்த ரெட்டிக் குதிரையைத்தவிர வேறு குதிரையில்லை. ஆனபடியினால் அந்த குதிரையை அனுப்புவித்தால் இப்போ கொச்சி மசினத்து Cachin Chin) பயணம் போகிற மனுஷோ (the Màchaul) என்கிற கப்பலின் பேரிலே ஏற்றிவிடவேண்டுமென்று சொன்னான். அந்த க்ஷணமே வெளியே வந்து வீராநாய்க்கனை முத்துமல்லா ரெட்டி தம்பி முத்து போலோம் ரெட்டியை கேட்டு அந்த குதிரையை ஓட்டிவந்து முசே தொதேல் (d'auteul) வசம் ஒப்பித்துப் போடென்று சொன்னேன். அவனு மந்தபடியே கொண்டுபோய் முசியே தொதேல் வசத்தில் ஒப்பித்துப்போட்டேனென்று கபுறு சொன்னான். அதன் பேரிலே தக்ஷணை மூர்த்திவந்து முத்துபோலோம் ரெட்டி குதிரை இப்படி சோருவாரியாய்க் கொண்டு போகிறதுண்டா? இப்படிப்பட்ட அனியாயம் பண்ணினால் எப்படி நம்பியிருப்போமென்று மெத்தவிசேஷங்கள் நடத்தி தாபத்தப்பட்டு சொல்ல வந்தார். நல்லது துரைபெண்சாதி உங்கள் வசிலாவா இருக்கச்சே அப்படி ஏன் வருகிறது போய் சொல்லிக்கொண்டால் துரையுடனே சொல்லி விடுவித்து விடுவார்களென்று சொல்லிப்போகச்சொன்னேன். இப்படி கண்டு பேசினோம் சுவராஸ்யமாயிருக்கவில்லை என்று சொல்லிப்போட்டுப் போனார்கள் குதிரையும் சாயங்காலம் கப்பல்மேலே யேறிப்போயிற்று.

இற்றைநாள் இராத்திரிவந்த சேதி: சாத்துக்கடைக்கு சேந்தாப்போலே ஹிராசத்துகான் (Heràsal Khan) அவர்கள் கையில் ஐந்து லக்ஷ ரூபாய் வாங்கி கொடுக்க வேலூரண்டே வந்தாப்போலே முருத்துசல்லிகான் கையிலே பத்து லக்ஷம் வாங்கிக் கொடுக்க ஆற்காடு சேந்தாப்போலே மிரசத்துகான் சாயபு முதலான கில்லேதார்கையிலே இருபத்தைந்து லக்ஷ ரூபாய் வாங்கிக்கொடுக்க உடன்படிக்கைப் பண்ணி சந்தா சாயபு இதாய்த்து முகதீன்கானை அழைத்து வருகிறதாய் மமுதல்லிகான் தம்பி மகனுகிய சந்தா சாயபு மகன் ராசாசாயபுக்கு யெழுதியனுப்பிய காகிதத்திலே எழுதியிருந்ததாய் மதனந்த பண்டிதன் படித்துச் சொன்னான்.

**சுக்கில ௵ ஆனி ௴ 25 உ க்கு 1749 ௵ ஆ. ஜூலை ௴ 5 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலையில் பிரபுவீட்டிற்கு போனவிடத்திலே கொச்சிம சீனத்துக்கு (Cochin China) போகிற முசியேபுவாவறு (Roivre என்கிற வெள்ளைக்காரன் கொச்சிம் சீனத்துக்கு (Cochin China) தன்னுடனே கூடவரத்தக்க ஒரு வண்ணானை பேசினனும் அவனும் சம்மதித்து இப்போ பயணம் போகிற வேளையிலே போகமாட்டேன் என்கிறானும் அவனைக் கண்டித்து அவன் பிறகே போகத்தக்கதாக தாக்கீது பண்ணவும் என்று சொன்னார் நல்லதென்று அவனை அழைப்பித்து மாதம் நவ்வாளு வீராகன் சம்பளம் திட்டம்பண்ணி இப்போ நான்கு மாசத்திற்கு பதினாறு வீராகன் வாங்கிக்கொடுத்து உழமண் சுண்ணாம்பு சபு ஏதாகிலும் வாங்கிக்கொண்டு பயணமாய் போகச்சொல்லி திட்டம்பண்ணி அனுப்பிப் போட்டு வரச்சே மறுபடி அழைத்து இரண்டாயிரம் ரூபாய் கவை யிருக்கிறது வாங்கிக்கொடு என்று சொன்னார். நல்லதென்று (வியாபாரிகளிடமிருந்து) வந்த துகையிலே வாங்கிக் (கொடுத்தேன்) அவர் கணக்கு ரங்கப்பிள்ளை தம்பி வந்து இந்த இரண்டாயிரம் ரூபாயும் ஆர் கொடுத்ததாய் துரைக்கு கபுறு சொல்லுகிறதென்று பாக்குக் கிடங்கிலே இருக்கத்தக்கதாக அங்கே வந்து என்னைக் கேட்டதற்கு நான் கொடுத்தேனென்று துரைக்கு கபுறு சொல்லிக் கணக்கிலே என் வரவு வைத்துக்கொள்ளச் சொல்லி அனுப்பிவைத்தேன்.

இந்தநாள் கேள்விப்பட்டசேதி என்னவென்றால்: கடபம் வெங்கிடாசல நாயக்கன் கூடலூரிலே இங்கிலீஷ்காரரிடத்திலே முன் துபாஷித்தனம் பண்ணி அப்பால் வலக்கை இடக்கை தொந்தரைகளைத் தொட்டு கலகம் வந்தனாள் முதல் எட்டுவருஷமாய் பாளையக்காரர் சாடையாயிருந்து இதிலே இங்கிலீஷ்காரர் பிரான்சுகாரர் கலகம் வந்து மூன்று நாலு வருஷம் பிடித்தது சிரிது சேவகரை பிடித்துக்கொண்டு சேவகமெழுதி வைத்துக்கொண்டு திரிந்தானப்படிபட்டவன். இப்போ இங்கிலீஷ்காரருக்கும் தஞ்சாவூராருக்கும் சண்டையாயிருக்கிறதே இந்த வேளையிலே தஞ்சாவூருக்கு உளவாயிருந்து இவ்விடத்திலே நடக்கிற சமாசாரமெல்லாம் எழுதிக்கொண்டு உளவாயிருந்தானும்.

அதை இங்கிலீஷ்க்காரன் அறிந்து கடபம் வெங்கடாசல நாயக்கனை பிடித்து காவலில் வைத்து காலுக்கும் கைக்கும் விலங்குப்போட்டு அடித்து கிடங்கிலே காவலில் வைத்ததாய் சேதி சொல்லி அது நிமித்தம் கூடலூருக்கு போக்கு வருத்துக்காரரை இரண்டு மூன்று நாள் போக ஒட்டாமல் தடைபண்ணினது மேலே எழுதிய காரிய நிமித்தமென்று சொன்னார்கள். மரக்காணம் முதலிமார்கள். அரண்மனை விட்டு நம் நிமித்தியம் குடி விலக்கி

நமமுடைய கிறுமமாகிய புத்துபட்டிலே யிருந்தவர்களை காதுரு உம்சன்கான் சாயபு என்கிற நபாயித்து மாக்காணம் ஜாகிர்தாரன் அவர்களுடைய நஷ்டங்களையெல்லாம் கேட்டு அவர் தகப்பனுர் காதரு சேன் கானுக்கும் மாக்காணம் ஜாகிரன் நாள் முதலாக கொண்டு வருஷா வருஷம் துடார்ந்து வந்த நிலுவை இரண்டாயிரத்து இருனூறுபொன் மாப்பு பண்ணிப்போட்டது மல்லாமல் பெரியவர்களை விட்டு சில்லரை குடிகள் போய் எட்டி பண்ணி கொண்டு பிரபவ ஹு விபவ ஹு த்துக்கு முன்னூறு ஒசந்திப்போட்டு வந்தது மாப்பு பண்ணி பின்னையும் வாரம் வரிசை உப்பள மிதுகளெல்லாம் ஞாயமானபடிக்கு மதிந்து அந்தபடி நடப்பிக்கிறுமென்று கவிலும் யெழுதிக்கொடுத்து சுல்தான்கான் யென்றொருபட்டாணிக் குதிரைகாரனண்டைக்கு இந்த சன்னதெல்லாம் கொடுந்து அனுப்பி அவனையும் புத்துபட்டுக்கும் போய் சன்னதுகளை குடிகளுக்கு வாசிந்து காண்பிக்கும்படி சொல்லி அவர்களை ராசிப்பண்ணி மரக்காணத்திலே கொண்டுபோய் சுகமாயிருந்து பயிர் செய்ய சொல்லென்று, சுல்தான் கானுக்கு கதருசேன் கான் பெழுதியனுப்பினதாகவும் அந்தப்படி சன்னதுகள் கவில் காகிதம்கூட நேற்று 24 உ சுக்கிரவாரம் புத்துபட்டுக்கு சுல்தான்கான் வந்து பூமியப்ப முதலியார் முதலான முதலிமார்களுக்கு படித்துக் காண்பிக்க அவர்களும் ராசிபட்டு நம்முடைய கூளிமேட்டு முல்லாசாயபு முன்னிருந்திக்கொண்டு அவர் மாரிபத்திலே ராசியாகி அந்தக் குதிரைக்காரன் பிறகே மரக்காணத்துக்குப்போய் சேர்ந்தோமென்று, நாம் சோப்பிடிச்சி நம்முடைய கிராமத்திலே இடம் கொடுந்து வைந்திருந்ததின் பேரிலே அந்த பாத்தியத்திலே எந்தனைப்பேர் எத்தனம் பண்ணிஞலும் ஆகாத காரியங்கள் சுறுயாசமாச்சுதென்று நன்றியறிந்த உபசாரனை பூமியப்ப முதலியார் முதலிமார்கள் உபகாரமாயெழுதிக் கொண்டார்கள். அதற்கு பதிலுத்தாரம் உபசாரமாயெழுதி இந்தனை னுப்பிவிட்டேன். துரையவர்கள் கடைசியிலே இரண்டுநாள் முன்பாக மசுக்கரையிலிருந்து வந்த இரண்டு கப்பல் வந்து சேர்ந்த நாள் பிடிந்து துரையவர்கள் முகம் தெளிந்து உற்சாகமாயிருக்கிறுர். உன் வர்த்தமானம் சுவாமிக்கு தெரியும் அதுவும் ஐந்தாறு நாளையிலே வெளியாம்.

சுக்கில ஹு ஆனி மீ 26 உ க்கு 1749 ஆ ஜுலை மீ 6 உ ஆதிவாரம்.

இற்றைனுள் காலையிலே துரையவர்கள் கோவிலுக்குப்போய் பூசை கேட்டுவந்த உடனே நான்போய் சலாம்பண்ணிக்கொண்டேன் என்ன சமாசாரமென்று கேட்டார். ஆற்காட்டிலே நபாபு அந்வர்தீன்கான் பேரிலே இதாயத்தி மொகதீன்கான் வருகிற சண்டையின்பேரிலே ஏதோ போகிறதும், ஆற்காட்டிலிருந்தவர்களெல்லோரும் அவ்விடம் விட்டு அங்

கங்கே போய்விட்டார்களென்று சொன்னதற்கு இங்கே யாரும் வரவில்லையா வென்று கேட்டார். பரிச்சேதமாய் ஒருத்தரும் வரவில்லையென்று சொன்னேன். அப்பால் மறுபடி கொச்சிம் சீனத்துக்கு புதிதாய் பெக்தரி (factory) வைக்கத்தக்கதாக போர் முசியே புவாவரு (Poivre) முசியே தெலோராம் (Dulaurens) ஒரு கப்பல்மாதிரி அவ்விடத்திலே பெக்ரி கட்டவும் ஒரு திரெக்தோரும் மூன்று நான்குபேர் கோன்சேலியேருமிருந்து அவ்விடத்திலே நூதனமாய் பெக்தரி கட்டவும் மற்ற உதாரணம் பண்ணவும் அவ்விடத்து சரக்கு சீர்மைக்கு அனுப்பவும் இவ்விடத்துக்கு வேண்டிய சரக்கு சீர்மையிலிருந்து அழைப்பித்துக்கொள்ளுகிறதும் இந்தியிலிருந்து அழைப்பித்துக்கொள்ளுகிறதும் இந்தபடிக்கு கொம்பாஞ்ஞர் அங்கேயிருந்து தாம்ன யோஜனைபண்ணி அறுபதினாயிரம் பத்தாக்கு கொடுத்து இங்கேயிருந்து வேண்டுமென்ற தினுசுகள் ஏற்றிக்கொடுத்துக் கப்பல் ஒன்று கொடுத்தனுப்பச்சொல்லி கும்பினியாரெழுதின கொச்சும் சீனத்து ராஜாவுக்குவெகுமதிகளும் ஒரு ஆண்குதிரை பெண்குதிரை கூடஏற்றி இன்றைய தினம் ராத்திரியாவது நாளையதினமாவது கப்பலை பயணம் போக சொல்லுகிறதாயிருக்கிற சம்மதியானபடியினாலே அதுடனேகூடிய காரியம் பேசிக்கொண்டிருந்தார்கள் நான் பாக்குக் கிடங்கிலே வந்தேன். மற்ற சங்கதி எழுதத் தக்கதில்லை.

**சுக்கில ௵ ஆனி ௴ 27 உக்கு 1749 ஆ ஜூலை ௴ 7 உ சோமவாரம்**

இற்றைநாள் காலையில் நான் பிரபுவினிடத்துக்குப் போனவிடத்திலே கொச்சிம் சீனத்துக்கு மஷோ (Machault) என்கிற கப்பல் பாயெடுத்தபடியினாலே துரையவர்களந்த கப்பல் காற்றில்லாமல் ஓடாமல் நின்று இருக்கிற சாடை பார்த்துக்கொண்டு மேலே இருக்கிறதும் தாழ இருக்கிறதுமாக இருந்தார். அப்பால் முசியே கில்லியார் (Guillard) ஆனி ௴ அறத்திக்கு வருஷ அறத்தி கணக்கு ஆனபடியினாலே தம்முடைய திரேசோரியேர் கணக்கு கொண்டுவந்து ஒப்பித்து துரை கையெழுத்து வாங்கிப்போனார். தஞ்சாவூர் மானோஜியப்பா துரைபேருக்கு ஒரு காகிதமும் என்பேருக்கு ஒரு காகிதமும் தமிழிலே ஊர்பேரில்லாமல் எழுதி வந்தது அந்தக்காகிதத்தை மதாம் துப்ளேக்சு தானழைப்பித்து அவிழ்த்து மதனாந்த பண்டிதனைக் கொண்டு படிக்கச் சொல்லிக்கேட்டு என் காகிதத்தைப் படித்துப் பார்த்துக் கொண்டு மறுபடி மதனாந்த பண்டிதன் கையிலே கொடுத்து தானவிழ்த்துப் பார்த்ததாக இராமல் கோந்து தடவி கொடுத்துவிடச்சொல்லி சொன்னாளென்று மதனாந்த பண்டிதர் வந்து சொல்லி காகிதத்தைக் கொடுத்தான்.

துரைக்கு எழுதின காகிதத்திலே காரைக்கால் தாயி பணம் இந்த வருஷத்து பணமுங்கூட கொடுக்கச்சொல்லியும் இங்கிலீஷ்காரர் மேல்

விழுந்து வாரார்களானாலும் உங்கள் தயவிருந்தால் அப்படி இப்படி நன்றா யடிக்கிறோமென்றும் முன் தீவு கோட்டை உங்களுக்கு கொடுக்காதே போனோமென்று எழுதினீர்கள் நீங்களெங்களுக்கெழுதினதில்லை; நீங்க ளெழுதின காகிதத்திலே தமிழிலே மதாமெழுதின காகிதத்திலே எழுதினோ மென்று யெழுதினீர்கள். மதாமெழுதின தமிழ்காகிதத்திலே பரிச்சேதமில்லை. இங்கிலீஷ்காரர் பிரான்சு கொடிபோட்டுக்கொண்டு வந்தால் அதை பிராஞ்சு கொடியென்று நம்பியிருக்கப்போகிறீர்கள். இங்கிலீஷ்காரர் மோசம்பண்ணு கிற ஜாடையென்று அறிந்துகொண்டு நன்றாயடியுங்கோள்யென்று யெழுதி யிருந்ததேயல்லாமல் இங்கிலீஷ்காரர் வந்துப்போன பிற்பாடு நீங்கள் காகித மெழுதின துவக்க முதல் கொண்டு நாளது வரைக்கும் தீவுகோட்டை உங் கள் வசம் பண்ணச் சொல்லி நீங்கள் யெழுதினதுவேயில்லை என்றும் அப் பால் பிந்தி கூந்தல் போட்டுக்கொண்டு நீங்கள் தயவு பண்ணவேண்டும். இந்த சமஸ்தானம் உங்களது. இது தரும சமஸ்தானம் நீங்களபிமானம் வைத்தால் சுலுயாசமாய் எங்களுக்கு ஜயம்வந்து சத்துருக்களை ஜயிப்போம் என்றும் இப்படி பஞ்சப்பாட்டாய்யவர்களெழுதுகிறதற்கு அடாத சம்மதி யாய் விபரம் விட்டு எழுதினதாயும் சிவோறிப்பண்டிதரை அனுப்பிவைத் தோமே அவர் சொல்லச்சே தெரியவருமே அந்தப்படி பணம் காசுகளை சேகரித்துக்கொடுத்து அவரை சுருக்காய் அனுப்பிவைக்க வேண்றுமென்று யெழுதியிருந்ததாய் சொன்னார். அதற்கு மதாம் துப்ளெக்சு என்னசொன்னா ரென்று கேட்டேன். நல்லது இதெல்லாம் துரையுடனே சொல்லுகிறே னென்று சொன்னேன். அங்கேயிருந்து வைக்கில் வந்திருக்கிறானே அவனு டைய பேட்டியும் துரையினுடைய பேட்டியும் பண்ணிக்கொண்டு வந்தகாரியம் சொல்லிக்கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறாளென்றும் வந்து இரண்டு நாளாயிற்று அவருக்கு படிகூட கொடுக்க வில்லை யென்று சொன்னதற்கு அம்மாளுக்கு வேலை ரொம்ப. கப்பல்களிலே வெள்ளைக்காரர் பெரிய மனுஷர்கள் வந்தபடியினாலே நேரமில்லை யென்று சொல்லி இன்னொருவேளை ஆகுமென்று சொல்லச் சொன்னாரும் மதனுந்த பண்டிதன் என்னுடனே வாது சொன்னான் மற்றப்படி ஆற்காட்டு காபிராவும்—காசிதாசுபுக்காரஞ்சி அவர் பணம் காசு தட்டுமுட்டு சமஸ்த மும் நாகபட்டணம், உடையார்பாளையம் அனுப்பிவித்து அவர் தேவனும் பட்டணம் வந்து சேர்ந்தாரென்கிற கபுறு கேள்விபட்டுத் திருவீதி சேஷா சல செட்டி திமிர்கோட்டை சேர்ந்தாரென்று எழுதிவந்தது.

சுக்கில ஸ்ரீ ஆனி மீ 21 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 8 உ அங்காரகவாரம்

இற்றைநாள் ஒன்பது மணிக்கு நான் கோட்டையிலிருந்து துரை யவர்கள் வீட்டுக்கு வந்து முன் சாலையிலே உட்காரச்சே அப்துலாபிமானும்,

சந்தாசாயபுமகனும் வந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அப்பால் பேசியிருந்து வெளியே சந்தா சாயபுமகன் போனான் அப்துலாயிமானவனை வாசற்படி மட்டும் கொண்டுபோய்விட்டுபோட்டு வந்து அப்பால் ஒரு மெனுச் துப்பாக்கிக்கு துரை கையில் சீட்டுவாங்கிக்கொண்டு புறப்பட்டு கோட்டைக்குப் போனான். சீட்டிலே கிறயம் வாங்கிக்கொண்டு துப்பாக்கி கொடுக்கச்சொல்லி யெழுதியிருந்தது. இப்போ பேசிப்போட்டு போகிற ஜாடை என்னவென்று யோஜனை பண்ணிப்பார்த்தால் ஆர்க்காட்டிலே தாமதமாய் கலாபித்து சமஸ்தமானபேரும் வலசை வாங்கிப்போகிறார்களே கோவர்தனதாசு குமஸ்தா காசிதாசுபுக்காரஞ்சி இவர்களிரண்டு பேரிலே ஒருத்தரகப்பட்டாலும் பிடிக்கவும் அன்வர்திகான் கூட்டங்கள் பணம் காசு கொண்டு போவதை வழிகட்டி பிடுங்கவும் பணம் கொடுக்கிற நபர்களகப்பட்டால் பிடித்து வரவும் சிறிதுபேர் சிப்பாய்களை முன்னதாக அனுப்பி யோசனை பண்ணினாப்போலே கண்டது அதெப்படியென்றால் நேற்றையதினம் ஆற்காட்டார் வலசை வாங்குகிறார்களென்று கபுறு சொல்லச்சே துரை சொன்னதென்னவென்றால்: இப்போ மனுஷர்களை வைந்து காசிதாசுபுக்காரஞ்சி முதலான வர்த்தகரை அன்வர்திகான் கூட்டங்கள் பணம் சம்பாதித்துக் கொண்டிருக்கிறவர்கள் புறப்படுகிறபோது மனுஷர்களை விட்டுப்பிடியாமல் விட்டு விடுகிறார்களாம் மமுதலிகான் முதலானபேர்களுக்கு துக்கினியாகிலும் புத்தியில்லையென்று சொல்லி அந்தக்ஷணமே அப்துலாயிமானை அழைப்பிக்கச்சொல்லி பெண்சாதி பண்டைக்குப்போனார். அந்த ஜாடையைப் பிடித்து அதற்கு ஒரு யோசனை பண்ணி சிறிது சிப்பாய்களை முன்னதாக அனுப்புவார்களென்று தோற்றுகிறது. ஆனால் நடக்கிற சமாசாரம் நாளையதினம் வெளியாகிப் போகிறது அப்போது விசிதப்படுகிறது.

இந்தநாள் பதினொருமணிக்கு பழவேர்க்காட்டிலே போய் சௌவரியாய் முள்ளங்கிபாலி செட்டி என்கிறவனை உபாயமாய் மைலாப்பூரிலேயிருக்கிற பாதிரி மநாம் துப்ளேக்சு உத்தாரப்படிக்கு சிப்பாய்களை அனுப்பி பிடித்து வரச்சொல்லி சென்னைப்பட்டணத்திலே வைத்திருந்து தாம் அப்பால் துரைக்கு நாகப்பட்டணம் பழவேர்க்காடு உலாந்துகாரருடையதானபடியினாலே அவர்களென்ன யெழுதினார்களோ முசியே பெர்தலமி (Barthalamy) சென்னப்பட்டணம் கொம்மாந்தாமுக்கு என்ன யெழுதினார்களோ அவர் முசியே துய்ப்ளேக்சுக்கு என்ன எழுதினாரோ அதுக்கு இவரென்ன யெழுதினாரோ அதன்பேரிலே அந்த முள்ளங்கிபாலி செட்டியை அனுப்பினான். இத்தனைநாள் பதினொருமணிக்கு வந்து சேர்ந்து துரைக்கு கபுறு சொன்னதிலே துரை சாவடிகிடங்கிலே வைக்கச் சொன்னாரென்று

கொண்டுபோய் காவல்வைத்தார்கள். இவனை பழவேர்க்காட்டிலிருந்து ஏன்பிடித்து வந்ததென்றால் முள்ளங்கி குடினப்பசெட்டி கையிலே சென்ன பட்டணத்தில் ஒரு வடுகன் பேர்லிங்கன் பரும் பெரும்பூதூர் கோவிலுக்கு ஐயாயிரம் விராகன் வைத்து அதற்கு வருகிற வட்டியை கோவிலில் சிலவுக்கு நடத்த சொல்லியும் அந்த முதல் பணம் கோவிலுக்கு அல்லாமல் மற்றபேர் யாருக்கும் கவையில்லையென்று பத்து பன்னிரெண்டு வருஷத்துக்கு முன்னே பணமும் வைத்து சீட்டு யெழுதிவைத்து அந்த சீட்டை பெரும்பூதூர் கோவிலிலே வைத்திருக்கிறது சென்னபட்டணம் இவர்கள் வசமாச்சுதே அந்த தருணத்தில் வாரகன் வைத்தவன் செத்துப்போய் விட்டான். அவனுக்கு பிள்ளைகளுமில்லை. அப்படியிருக்க அவர்கள் வீட்டு வெள்ளாட்டி சிருக்கி ஒருத்தி சிப்பாயைத் தொடர்ந்துகொண்டு அவனுடனே இந்த சேதியைச்சொல்லி அந்த பணத்தை வாங்க இந்த எத்தனம் பண்ணினார்கள். துரையவர்களும் முதல் பாதமானபடியினாலே தலைகளை விசிரிகொண்டு இந்த அக்கிருத்தியமெல்லாம் நடக்கிறது. சுவாமி என்னமாய் ரக்ஷிக்கிறாரோ நானறியேன்.

சுக்கில ஞு ஆனி மீ 29 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 9 உ புதவாரம்.

இற்றைநாள் கோட்டைக்கு போனவிடத்திலே புது சின்ன துரையும், முசியே கில்லியாரும் (Guillard) இருந்தார்கள். அப்போனன்போயாசாரம் பண்ணின உடனே எனக்கொரு நாற்காலியும் கொண்டுவந்துப் போடச்சொல்லி உட்காரச்சொன்னார். நான் உட்கார்ந்த உடனே திலார்ஷ் (Delaroche) வந்தான். சாவடிக் கணக்கன் திரு செல்வராய முதலி சின்னதுரைக்கு கபுறு சொல்லவந்தான். கபுறு சொல்லி ஆன உடனே ஊருக்கு நெய் பருப்பு முதலான சர்க்கு வெளியேயிருந்து கொண்டு வருகிறவர்களை கோதுமை அரைக்க சேவகர்கள் பிடித்துக் கொண்டுபோய் அரைக்கச்சொல்லுகிற படியினாலே அவர்களினிமேல் இந்த ஊருக்கு சரக்கு நாங்கள் கொண்டு வருகிறதில்லை யென்று அங்கலாய்க்கிறார்களென்றும், விரகுகள், காய்கரிகள் வருகிறது குண்டுசாலை அண்டையிலிருந்து பட்டணத்துக்குள்ளே வருவதற்குள் பாதி சிப்பாய்கள் முதல் தெத்துவாசல் சொல்தாதுகள் வரைக்கும் பாதி சரியாய்போகிறது மற்றப்பாதியும் கடைக்குவந்தால் சிப்பாய்கள் சொல்தாதுகள் ஒரு பணத்து உடமைக்கு இரண்டு துக்காணியைப்போட்டு எடுத்துக்கொண்டு போகிறார்கள். அவர்கள் கொடுக்கமாட்டோமென்று கூப்பிட்டால் அடியடி என்று அடித்துப்போட்டு காய்கறி முதலானதுகளை எடுத்துப்போட்டும்போகிறதுமல்லாமல் காசும் கொடாமல் போகிறார்கள் இப்படி பட்டணத்திலே நடந்தால் பட்டணத்தில் எந்த சரக்கு கொண்டு

வந்து விற்பார்கள். ஒரு பணமுடைமைக்கு நாலு பணமாக விற்றாலும் சரக்கு கொண்டு வருபவர்களுக்கு முதல் பணம் அகப்படுவது ரொம்ப பிரயாசை அப்படியானால் பட்டணத்துக்கு கொண்டு வருவானேனென்றால் இந்த சம்மதிகளுக்கு வயணமாமப்படியே விசிதப்பட எப்படி சொல்ல வேணுமோ அப்படியெல்லாம் நான் முன்பாட்டும் முசியே திலார்ஷ் (**Delarche**) மெய்மெய்யென்று பின்பாட்டு பாடிக்கொண்டு வந்ததின்பேரிலே முசியே சேம்போல் (**St. Pau'**) அதுவெல்லாம் விசிதமாய் கேட்டுக்கொண்டு நான் ஸ்ரீ குவர்னதோருடனே சொல்லுகிறேனென்று சொன்னார்.

இப்படியிருக்கச்சே ஒரு தச்சன் வந்து கோதுமை அறைக்கச்சொல்லி ஒரு கருமானைப்பிடித்துக்கொண்டு போராரென்று சொன்னான். முசியே திலார்ஷ் (**Delarche**) இருந்து கம்பினிக்கு வேலை செய்யும் கருமானை பிடித்துக்கொண்டு போனால் மற்றப்பேரை பிடித்துக் கொண்டுபோகிறதற்கு உமக்குவேறு திருஷ்டாந்தம் சொல்ல கவையில்லையென்று சின்னதுரைக்கு சொன்ன உடனே மெய்தான் எனக்கு விசிதமாச்சுது நான்தான் கூலிக்காரரை பிடிக்கச் சொன்னால் இப்படிபட்ட வேலைக்காரரையெல்லாம் எப்படிப் பிடிப்பார்கள். நல்லது அந்த கோதுமை அறைப்பதற்கு கூலிக்காரரைப் பிடிக்கிற சேவகனை அழைத்துவரச் சொல்லி உத்தாரம் கொடுத்தார்கள் அப்போ வெளியிலே பயிர்செய்கிற குடியானவனை பிடித்துவந்தால் அவன் எப்படி பைரிட்டு கம்பெனிக்கு முதலிடுவானென்று சொல்லவேண்டிய வயணமெல்லாம் சொன்னவிடத்திலே அந்த வழிவந்தால் அடிக்கச்சொல்லென்று உத்தாரம் கொடுத்தார் அப்பால்தான் வேதபுரி ஈஸ்பரன்கோவில் தோட்டத்தை வளைத்து கொண்டதிலே கோவில் தட்டுமுட்டு பித்தளை நகைகள் செம்பு தவலைகள் நூறுவராகனுக்கு உண்டு. அதை சம்பாகோவிலார் தங்களுக்கு வேண்டுமென்று கேட்கிறார்கள். நான் பார்த்தேன் தமிழருடைய கோவிலது கொவர்னதோருடனே சொல்லுவோம் அவரெப்படி சொன்னாலும் அப்படிசெய்வோமென்று தமிழ்கோவில் வெண்கல செம்பு பித்தளை தட்டுமுட்டு நூறுவராகனுக்கு காணுமாமது கலகத்தும்போது புதையல் போட்டார்களாம். அதிலே கோவில் இடிபட்டு போனபடியினாலே அப்படித்தானேயிருந்து இப்போ அகப்பட்டது; அதை சம்பா கோவிலார் கேட்கிறார்கள் அதை அவர்களுக்குக்கொடுக்கிறதா தமிழர் கோவில் மனுஷர்களை அழைப்பித்து கொடுக்கிறதா? என்று கேட்டேன். அவர் தம்முடைய வீட்டை அனுப்பச்சொன்னார். அந்தப்படி கொவர்னதோர் வீட்டை அனுப்பிவிட்டேனென்று சொல்லி லிங்கம் அதில் இல்லை என்று சொன்னார். அதற்கு முசியே கில்லியார் இருந்து கொண்டு தமிழருக்கு வெகு துக்கமாயிருக்குமென்று சொன்னார். அந்தப்படியே அனுப்பிவித்துக் கொண்டு துரைவீட்டுக்கு நான் வந்தேன்.

**சுக்கில ஹு ஆனி மீ 30 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 10 உ குருவாரம்.**

இற்றைநாள காலையில் சந்தா சாயபு குமாரன் ராசா சாயபு அழைப்பித்தபடியினாலே அவர் வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் நேற்று இராத்திரி தங்கள் தகப்பனார் சந்தாசாயபு அண்டையிலிருக்கிற முனிஹிதுபத்தி நல்லிகானும் பத்துபேர் சேவர்களும் வந்துசேர்ந்தார்களென்று ஹிதாயத்து மொஹதீன்கானுக்கு அஹமது பாதுசா நற்பதைக்கு இப்புறமிருக்கிற தக்கன் சுபா ஆறுக்கும் பர்மினாவும் சிரோப்பாவும் அனுப்பிவித்ததாகவும் அந்த பர்மினாவும் சிரோப்பாவும் நாளது ஹு இந்த ரசுபு மீ 3-ம் தேதிக்கு நம்முடைய சுக்கில ஹு ஆனி மீ 4 உ அமாவாசை போன மூன்றாம் பிறையன்று ராசாவுடைய பர்மினாவும் சிரோப்பாவும் அந்த பர்மினாவிலே சாதுல்லா கான் பகதூர் முஜாபர் ஜங்கு என்கிற பேரும் கொடுத்து அனுப்பின சிரோப்பாவும் பர்மினாவும் அன்றையத்தினமே வாங்கிக் கொண்டாரென்றும் இந்த ரசுபு முதல்தேதியன்று சந்தா சாயபுக்கும் அவருக்கும் போட்டியாகிறதுக்கு வரச்சே எதிரே ஆறாயிரம் ஏழாயிரம் குதிரையும் அவர் குமாரனையும் இஸ்தகபால் அனுப்பி வைத்ததாகவும் அதன் பேரிலே சந்தா சாயபு அவர்கள் வந்து சாதாதுல்லகான் பகதூர் முசாப்பர் ஜங்கு அவர்களைப் போட்டி பண்ணிக்கொண்டு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டவுடனே ஆர்க்காடு, செஞ்சி, தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி, மதுரை, வகையரா முதலான கோட்டை தளங்களுக்கு இதற்கு உட்பட்ட ராஜ்யங்களுக்கு நபாபு பட்டத்துக்கு சன்னது யெழுதிகொடுத்து முன்னே மன்சுபா ஜாகீர் வந்தபோது நான் கித்தாப்பு உசேன் தொஸ்துகான் என்கிறபேர் முன்னசாயப்பவர்கள் கொடுத்திருந்தார்கள் இப்போ ஆர்க்காட்டு பட்டம் கொடுத்தவுடனே பேர் கொடுத்த வயணமென்னவென்றால்: நந்தார மெதிபாது தவுலாசனம் லுஜ்ஜங்கு [ ] என்றபேரும் கொடுந்து சாலாதாரப் பல்லக்கும் கத்தியும் சிரோபாவும் கொடுத்து இதற்கு ஜாஹீர் கொடுத்து [ ] குது ரானுமாத அஹம்மது சகுரு சங்களெனும்பேர் என்கிற மூனுதாலுக்கு சீர்மையும் சாகீர் எழுதி கொடுத்து பின்னையும் சகல தயவுப்பண்ணி கூட பயணம் புறப்பட்டு பதினாலாயிரம் குதிரை சுவாரும், எருது சுவார் முன்னூறும் ராணுவம் பதினாலாயிரம் பதினைய்யாயிரம் பேருடனே பயணம் புறப்பட்டு ஆர்க்காட்டுக்கு வந்து சந்தா சாயபுக்கு ஆர்க்காட்டை அவர்வசம் பண்ணி அப்பால் சீர்மையும் பலத்து பண்ணிவித்துப் போட்டு முசபர்சங்கு அவர்கள் அப்பால் பயணம் புறப்பட்டுப் போகிறதாகவும் தாங்கள் கன்மைக்கு வந்து சேருகிறதற்கு முன்னமேதானே இவ்விடத்திலிருந் சந்தா சாயபு குமாரன் ராசா சாயபும் சேக்கு அப்துல்லா இமாம் சேக்கு அசேன் முதலான சமேதாரர்களுடனே இரண்டாயிரம் சிப்பாய்களையும் சொல்தாது

கிணையும் பீரங்கிகள், மொடுத்திய தீக்குடுக்கைகள், பீரங்கி குண்டுகள், துப்பாக்கிகள், இத்தற்கு வேண்டிய மருந்தும் குண்டு முதலிய சண்டை சாமான்களுடனே சேர்ந்தது. விஸ்தாரமாய் படிப்பித்துக்கொண்டு இதுவு மல்லாமல் சிறிது பணம் காசுகள் ஒத்திகை பண்ணிக்கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொண்டு இதுகளெல்லாம் அவர்கள் சரளசாமா பண்ணி கொடுக்கிற படியினாலே ஒன்பது வருஷமே பிடித்து ஆதரித்து வைத்துக்கொண்டிருந்த படியாலும் அவருக்கு மனது எந்த விதத்திலே சந்தோஷம் வர தக்கதாக சொல்லவேணுமோ அந்த விதத்திலே அவருக்கு மனது திருப்திபண்ணி சந்தோஷம் வர பண்ணிக்கொண்டு அவர் கையில் அனுப்பிவித்துக் கொண்டு கன்னம் வந்து சேரச்சொல்லியும் சாதுல்லுகான் பகுதூரவர்கள் துரையவர்களை பார்க்கவேண்டுமென்று இருக்கிற சேதியும் பின்னையும் உபச்சாரமான வார்த்தைகளை சொல்லி அப்பால் இதாயத்து மொகதீன்கான் அவர்கள் துரையவர்கள் பேருக்கு ஒரு கடுதாசியும் கிரோப்பாவும் சந்தா சாயபு அவர்கள் ஒரு கடுதாசியும் கிலிக்கித்துராயும் கொடுத்து அனுப்பிவித்தபடியினாலே நிஜாமுடைய ஸ்தானத்துக்கு சாதுல்லாகான் பகுதூர் அவர்களிருக்கிறபடியினாலே நிஜாமுடைய சிரோப்பா வந்தால் துரையவர்கள் எதிரே கோட்டை வாசற்படி மட்டுக்கும் போய் சகல சம்பத்துடனே வாங்கிவருவார்களே அந்தபடிக்கு துரையவர்கள் எதிரே போய் வாங்கிவரவேணுமென்றும் இது வல்லாமல் கில்லேதார் பேருக்கு ப்ரமாணுக்கன் வந்ததற்கு வயணம். மமுதல்லிகான் பேருக்கும், மிரா சத்துல்லகான் பேருக்கும். இராசத்துகான் பேருக்கும் வேலூர் முருதி சல்லிகான் பேருக்கும், மமுதக்கிகான் பேருக்கும், இந்த ஐந்து கில்லேதார் பேருக்கு வந்த காகிதத்தையும் இங்கேயிருந்து அவர்கள் பெயருக்கு காசி துரை கையிலே கொடுத்து அனுப்பிவைக்கவேண்டுமென்றும் இப்போ இந்த சேதிகளெல்லாம் துரையவர்களுடனே சொல்லுகிறதற்கு நீ போய் துரை யவர்களுடனே எச்சரித்து நம்மையும் குதப்பத்தி நல்லிகானையும் (Qutd-up-din Ali Khan) அழைப்பிக்கவே வேணுமென்று இதுமுதலான சேதிக ளெல்லாம் சொல்லி என்னை துரையவர்களண்டைக்குப் போகச்சொல்லி சொன்னார்கள். அதன் பேரிலே நான் போய் துரையவர்கள் இன்றையதினம் பத்து மணிமட்டுக்கும் நித்திரைபோய் எழுந்திருந்தபடியினாலே பத்து மணிக்கு பிற்பாடுபோய் சந்தாசாயபு அவர்கள் அவர்களண்டையிலிருந்து அவர்களுடைய முனிசி குதப்பத்தி நல்லிகான் (Qutb-ud-din-alikhan) என்கிறவன் வந்ததும் இவன் வரச்சே சந்தாசாயபு தேவன் அல்லி அண் டையிலே முசாபர்சங்கு (Muzaffar Jang) அவர்களும் சந்தாசாயபும் இறங்கி கூச்சிதற் கூச்சியாய் பயணம் காசி வருகிறார்களென்றும் தேவன் அல்லி அண்டையிலிருந்து தன்னை முன்னேபோயி மேலே யெழுதப்

பட்ட சறன சாமுகளெல்லாம் முஸ்தித்து பண்ணிவித்துக் கொண்டு சந்தா சாயபு மகன் ரசாசாயபுவையும் கூட்டிக்கொண்டு தங்கள் மனதையும் திருப்தி பண்ணிக்கொண்டு தங்கள் கையிலேயுமனுப்பிவித்து கொண்டு பயணம் சாகிவரச் சொன்னதாயிந்த சேதிகளெல்லாம் தங்களுடனே கபுறு போய் சொல்லுகிறதற்கு ரஜாசாயபும் குதப்பத்தி நல்லிகானும் என்னை அழைப்பித்து சொல்லி உங்களுடனே சொல்ல சொன்னார்களென்று துரையவர்களுடனே சொன்னதற்கு துரையவர்கள் நல்லது ருசா சாயபுவையும் அங்கேயிருந்துவந்த குதப்பத்திரல்லிகானையும் இப்போதானே அழைப்பியென்று சொல்லி உத்தாரம் கொடுக்க அதன்பேரில் சேவகனை அனுப்பி அவர்களை வரச்சொன்ன விடத்திலே அவர்களும் துரையவர்களண்டைக்கு வந்து மிலாக்கத்து பண்ணிக்கொண்டு முன் எழுதப்பட்ட சேதிகளெல்லாம் சொல்லி சந்தாசாயபு ருசா சாயபு பேருக்கு எழுதியனுப்பின காகிதத்தின் தலைப்பிலே இந்த சரன்சாமுகளெல்லாம் பண்ணிக்கொண்டு சீக்கிரமத்துக்கு வரச்சொல்லி எழுதினதுமல்லாமல் துரையவர்கள் மனது எந்தவிதத்திலே திருப்திபண்ண வேண்டுமோ அந்த விதத்தில் திருப்தி பண்ணச் சொல்லி யெழுதின சுகஸ்த காகிதத்தையும் படித்து காண்பித்து நாளையதினம் சாதுல்லுகான் பகுதர் முசாசங்கு அவர்களுடைய கடுதாசியும் சிரோப்பாவும் சந்தாசாயபுவினுடைய வெகுமதியும் காகிதமும் சகல சம்பிரமுத்துடனே நீங்கள் வழுதாவூர் வாசற்படி மட்டுக்கும் போய் நிசாமுடைய வெகுமானம் வாங்கிக்கொள்ளுகிற மரியாதைபடிக்கு வாங்கிக்கொள்ள வேண்டுமென்று சொன்ன விடத்திலே துரையவர்கள் மிகுதியும் சந்தோஷத்துடனே அந்தபடிக்கே வாங்கிக்கொள்ளுகிறோமென்று சகல சரன்சாமியும் முஸ்தீப்பும் பண்ணச்சொல்ல எனக்கு உத்தாரங்கொடுத்ததுமல்லாமல் முசியே துகோனை (Duguesne) அழைப்பித்து சிப்பாய்களையும் சொல்தாதுகளையும் தம்முடைய வீட்டுவாசற்படி முதற்கொண்டு கெவுனிக்கு அப்பாலே பவழக்காரன்சாவடி உப்புக்காழிமட்டுக்கும் இருபுரமும் துப்பாக்கிளை பிடித்துக்கொண்டு வரிசையிருக்கச்சொல்லி திட்டம் பண்ணச்சொல்லி சொன்னதுமல்லாமல் முசியே தொத்தேலே (d'auteuil) அழைப்பித்து திறகோம் (Dragoons) குதிரைக்காரரையும் முஸ்திப்பா வரச்சொல்லி உத்தாரம்கொடுத்து அப்பால் பீரங்கி மேஸ்திரியை அழைப்பித்து வழுதாவூர் வாசற்படியிலே எப்போதும் போடுகிற சட்டப்படிக்கு கூடாரம்போட்டு கனப்பை நாற்காலி முதலானதுகளெல்லாம் முஸ்தீதுபண்ணச்சொல்லி சொன்னது மல்லாமல் வெகுமானம் வாங்கிக்கொண்டு வாசற்படியிலே நுழையச்சே இருபத்தோரு பீரங்கியும் வீட்டுக்கு வந்து சேர்ந்தவுடனே கோட்டையின் பேரிலே இருபத்தொரு பீரங்கியும் போடச்சொல்லி உத்தாரம் கொடுத்து அவர்களை போசச்சொல்லி அப்பால் சந்தா

சாய்பு மகன் அங்கேயிருந்து வந்த முனிசியுடனேயும் முஜாபர் ஜங்கு அவர்களுடைய க்ஷேமமும், சந்தா சாயபு அவர்களுடைய க்ஷேமமும் எந்தெந்த படிக்குக் கேட்கவேண்டுமோ அந்தபடிக்கு பின்னையும் விஸ்தாரமாய் உபசாரமாய் கேட்டதுமல்லால் நீங்கள் புறப்பட்டு எத்தனை நாளாச்சு என்றும் நாஜர் சங்கு எங்கேயிருக்கிறாரென்றும் அவர் சேதியும் கேட்க அதற்கு அங்கே யிருந்துவந்த முனிசி சொன்னது நாஜர் சங்கு அவர்கள் நற்மதை அக்கரையிலிருக்கிறார்களென்றும் அவர் அப்புறம் டில்லிக்கு சாகப்போவதாயிருக்கிறாரென்றும் அந்தசேதி அவ்விடத்திலேயிருந்து அறுக்காருகான் முசாபர் சங்கு அவர்களண்டைக்கு காகிதம் கொண்டுவந்து முப்பத்திரண்டு நாளாச்சுதென்றும் அப்பால் இதாயித்து மொகதீன்கானும் சந்தா சாயபும் சகல ஆகாரக்கியத்துடனே இருக்கிறார்களென்றும் என்னேரமும் உங்களுடைய சௌரிய பராக்கிரமங்களும் தைரியஸ்தத்தையங்களும் நீங்களிங்கிலீஷ்காரரை ஜெயம் பண்ணதும், மாபுசுகான் மமுதலிகானையும் ஜெயம் பண்ணதும் உங்களைப் பார்க்கவேணுமென்கிறதும் ஒரு விகடி சைத்து இருபத்தோரு பீரங்கி சுடுகிற திராணியும் இது முதலான யந்திர சமாசாரங்கள் பார்க்கவேண்டுமென்கிற அபிலாஷையுடனே இருக்கிறார்களென்று சொல்லியும் இதுவுமல்லாமல் பார்சாவுக்கும் உங்களுக்கும் என்னேரமும் காகித பத்திரங்கள் நடக்கத்தக்கதாக பண்ணுவிக்கிறோமென்று சொல்லியிருக்கிறார்களென்றும் சொல்லி ஐந்துபேர் கில்லேதாரர்களுக்கு வந்த காகிதபைகளை காண்பித்தார்கள் அதற்கு துரையவர்கள் நிஜாமுடைய ஸ்தானமாயிருக்கிறபேர்கள் கில்லெதாரர்களுக்கு எழுதின காகிதங்களை பையிலேபோட்டு அனுப்பிவிக்க வேணுமாயென்று கேட்டார். அதற்கு நானிருந்து கொண்டு எழுதுகிற வாடிக்கை ரொக்கமென்று ஒரு சின்ன துண்டு கடுதாசியிலே யெழுதி ஒரு அறக்கார் லகோடாகூட பண்ணமல் அனுப்புவிக்கிற வாடிக்கை இவரும் அந்த ஸ்தானத்துக்கு வந்தபடியினாலே அப்படியே நடத்துகிறதே சரி. ஆனால் சந்தாசாயபு தன்னுடைய சொந்த மைத்துனன், தமயன், மருமகன், சகலபாடிகளாயிருக்கிற கில்லேதாரர்களானபடியினாலே தாமுங்கூட வருகிறதானபடியினாலே தாமிந்த வெகுமதி அவர்களுக்குப் பண்ணிவைத்ததாயிருக்க வேணுமென்றும் அவர்களுடைய பிரதாபத்தை விஸ்தரித்துச் சொன்னதினாலேயும் அதற்குத்தக்க மேம்பாடாக இருக்கத் தக்கதாக கடுதாசி பையிலே போட்டு அனுப்பிவைக்கவேண்டுமென்று சந்தா சாயபு அவர்கள் சொன்னதினாலே பையிலே போட்டு வந்ததேயல்லாமல் இல்லாவிட்டால் பையிலே போட்டு அனுப்பிவைக்க தக்கதல்லவென்று சொன்னதற்கு மெய்யென்று ஒப்புக்கொண்டு அப்பால் சொல்தாதுகளை அனுப்பிவைக்கிற பேச்சிலே முன்னே அனுப்பிவிக்கக் கூடாதென்று சொல்ல அதற்கு எந்தவிதமாய் தெரிய சொல்லவேணுமோ அந்த விதமாய்

தெரிய சொன்னதின் பேரிலே ஒலந்தியோ என்கிற சொல்தாதுகளிலே மூன்னூறுபேர் சொல்தாதுகளும் அதற்கு கப்பித்தான் முதலான ஒப்பிசியே மார்களும் முசியே தொத்தேல் (d'outeul) திராகோம் குதிரைக் காரரும் முசியே லாசும் (Lan) பீரங்கி மேஸ்திரிகளும் அப்பால் பீரங்கிகள். குந் தானி பீரங்கிகள், கற்னுத்துகள், தீக்குடுக்கைகள், பீரங்கி குண்டு மருந்து முதலான சாமான்கள் எதேஷ்டமாய் தருவிக்கிறேமென்று சொல்லி பயணம் எப்போ போகிறீர்களென்று சொல்லிக்கேட்க சனிக்கிழமை நாள் பார்த்து இருக்கிறது அன்றையதினம் இங்கே சமஸ்தமான ஜனங்களும் அறிய ஆற்காட்டுக்கு நபாபு பட்டம் எங்களுக்கு வந்ததற்கு எங்களுக்குள்ளே கொண்டாடுகிற பண்டிக்கை கொண்டாடி நசானிபாசுகள் வாங்கிக் கொண்டு நம்மை கச்சேரியிலே மசலத்தின்பேரிலே உட்காரவைத்து சமஸ்த மானபேருக்கும் நசாரிபாக்கள் வைத்து ஆனபிற்பாடு அந்த சம்பிரமத்திலே துப்பாக்கிகள், பீறங்கிகள் சுட்டு வேடிக்கைப்பண்ணி எல்லாருக்கும் பாக்கு, வெத்திலே கொடுத்தானபிற்பாடு சண்டாகொண்டுபோய் மொரட்டாண்டி சாவடியிலே கொண்டுபோய்போட்டு பவுன்சுமங்கே கொண்டுபோவதற்கு அவ்விடத்திலே ஐந்தாறு நாளிருந்து சாமான்களெல்லாம் முஸ்தீதுபண்ணிக் கொண்டு அப்பால் பயணம் சாகிப்போகிறேமென்று சொல்ல அதற்கு துரையவர்களிருந்துக்கொண்டு அந்த மசலதுக்கு வரவேணுமோ வென்று என்னை கேட்க நீங்கள் போய் சிரோபாகூட கொடுத்து பாக்கு வெற்றிலே வாங்கிக்கொண்டுவந்தால் அந்த நபாபுபட்டம் நீங்கள் கொடுத்ததாய் உங்களுக்கு அந்த கீர்த்திவருகிறதென்று சொல்ல, அவசியமப்படித்தானே கோட்டையிலே பீரங்கி சுடவும் வரிசை வைத்து துப்பாக்கிகள் சுடவும் உத்தாரம் கொடுத்து நாமும் வந்து சிரோப்பவும் கொடுத்து பாக்கு வெத்திலே வாங்கிக் கொண்டு வருகிறேமென்று சொன்னதின்பேரிலே ராசாசாயபு இருந்துக் கொண்டு எங்களுக்குள்ளே வாடிக்கை வெளியிலே ஒரு இடத்திலே கூடாரம் போட்டு அந்த கூடாரத்திலே சகல சம்பிரமத்துடனே போயிருந்து அங்கே அந்தபரமாணுவும் வெகுமதிப்பும் வாங்கிக்கொண்டு அங்கேயிருந்து வீட்டுக்கு சகல சம்பிரமத்துடனே வந்து மசலத்திலே உட்கார்ந்து நசானி பாசுகள் வாங்கிக்கொள்ளுகிறது என்று சொன்னதின்பேரிலே துரையவர்கள் வீட்டுக்கு யெதிரே தென்னண்டை பாரிசத்திலே கூடாரம்போட்டு அந்த கூடாரத்திலே வந்துயிருந்து கொவர்னமாமிலே வந்து அங்கே உங்கள் முன்னிலேபா இசாதுல்லாகான் பாதர் முசாபர்சங்கு அவர்களனுப்பிய பிறமாணுவும் வெகுமதி வஸ்திரங்களும் வாங்கிக்கொண்டு உங்களேயும்கூட அழைத்துக்கொண்டு உங்களுடனேகூட வீட்டுக்குவந்து வீட்டிலே மசலத்திலே உட்கார்ந்து நசானிபாசுகள் மற்றுமுள்ள சம்பிரமங்கள் என்ன உண்டோ அதுகளெல்லாம் செய்வித்து ஆனபிறகு உங்களுடனே கூடவந்த

சியோர்களும் நீங்களும் பாக்கி வெற்றிலை வாங்கிக்கொண்டு வீட்டுக்கு போனால் லோகங்களெல்லாம் நீங்கள் நபாபுபட்டம் கொடுத்ததாக சகல ஜனங்களும் சொல்லிக்கொள்ளுவார்கள். உங்கள் கீர்த்தியும் எங்கும் பிரகாசிக்கும் என்று சொன்னதின்பேரிலே நல்லதென்று அப்படியே செய்யுங்கள் காழுப்படியே நடப்பித்துக் கொள்ளுகிறோமென்று வெகு சந்தோஷத்துடனே அவர் சொன்ன வார்த்தைகள் காகிதத்திலே எழுதிமுடியாது; அப்படியெல்லாம் சந்தாசாயபு மகனுடனேசொல்லி பாக்குவெத்திலை பள்ளிக்கு ராசாசாயபுக்கும் குதபத்தி நல்லிகானுக்கும்கொடுத்து நாலாறுதரம் கட்டிக் கொண்டு வெகு சந்தோஷத்துடனே அனுப்பிவித்தார் அவர்கள் அனுப்பி வித்துக்கொண்டுவீட்டுக்குப் போனார்கள்.

அப்பாலென்னுடனேயும் அபதுலாயிமானுடனேயும் சொன்னதென்ன வென்றால்: மார்சு மீ முதற்கொண்டு சிப்பாய்கள் சிப்பந்திகள் வந்து ருசா சாயபு கொடுக்கிறோமென்றும் சிப்பாய்களை வாங்கவேண்டாம்; நாம் சிப்பந்தி ஒத்துக்கொடுக்கிறோம் என்று சீட்டு எழுதி கொடுத்தபடிக்கு மார்சு மீ முதல் தேதி முதல் ஜூலை மீ 31 தேதிவரைக்கும் அஞ்சு மாத மாதமாகிறது; இந்த ஐந்து மாதம் வரைக்கும் உங்கள் தாலுக்கு சிப்பாய்களுக்கும் குதிரை தீனிக்கும் கொடுத்த ரொக்க ரூபாயும் நெல்லும் சேக்கு இப்ராம் தாலுக்கு அன்னூத்தி ஒரு சிப்பாய்க்கு கொடுத்த ரொக்க ரூபாயும் ஏகத்துக்கு இப்போ கணக்கெழுதிவரச்சொல்லி முசியே கொர்னேத்துக்கும் (Cornet). முசியே பிரியேலுக்கும் (Fri l ) உத்தாரம் கொடுத்தேன் அந்த கணக்கு இரண்டு நாழிகைக்குள்ளே வரும் வந்த உடனே அந்த கணக்கு அனுப்பிவைக்கிரேன் அந்த கணக்கு படிக்கு சந்தா சாயபு மகன் கையிலே கடன் சீட்டு வாங்கிக்கொண்டு வரச்சொல்லியும் வில்லியனல்லூர் பற்கனுவுக்கும் பரமனு சந்தாசாயபு மகன் கையிலே எழுதிக்கொண்டு வாங்கிகொண்டு வரச்சொல்லி போகச் சொன்னார். அந்த படிக்கு நல்லதென்று. அனுப்பிவைத்துக்கொண்டு நானும் அப்துலாயிமானும் பாக்குக்கிடங்கு வந்து கணக்கு வந்தபிற்பாடு ராத்திரிக்கு அப்படியே எழுதி வாங்கிக் கொள்ளுவோமென்று பேசிக்கொண்டிருந்து பன்னிரண்டுமணி அடித்தபடியினாலே அவரும் அவர் வீட்டுக்குப் போனார் நானும் நம்முடைய வீட்டுக்கு வந்தேன்.

சுக்கில ஞு ஆனி மீ 3 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 12 உ சனிவாரம்.

இற்றைநாள் நடந்த சமாசாரமென்னவென்றால்: காலையிலெட்டு மணிக்கு சந்தா சாயபு குமாரன் ரசா சாயபு துரையவர்கள் பேட்டிக்கு வருகிறதற்கு சொல்லி அனுப்பித்தவுடனே துரையவர்கள் சொல்தாதுகளையும் சிப்பாய்களையும் அழைப்பித்து துரையவர்கள் வீட்டுத் தென்

அண்டை வாசலைத் திறந்துவிட்டு அறைகள் வாசற்படி துவக்கி சந்தா சாயபு குமாரன் குடியிருக்கிற கெட்டலை கூட பரியந்தம் சொல்தாதுகளையும் சிப்பாய்களையும் இருக்கச்சொல்லி உத்தாரம் கட்டளையிட்டார்கள். அந்தப் படிக்கு சந்தா சாயபு விட்டண்டையிலிருந்து சின்னதுரை வீட்டண்டையி லிருக்கிற பாளத்துமட்டுக்கும் வெள்ளைக்காரருடையதும் அதுமுதல் துரையவர்கள் வீட்டுமட்டுக்கும் சிப்பாய்களுமாயிருபுறமும் ஆறுவரிசை நின்றார்கள். அதன்பேரிலே ராசல்லிகானவர்கள் தங்கள் வீட்டிலேயிருந்து புறப்பட்டு பல்லக்கின்பேரிலே ஏறிக்கொண்டு மற்றப்பேர் அவர் பிறகே வரப்பட்டபேர் துலுக்கர், செனைசென், அப்துலாயிமான், முதலான பேரும் குதிரையின்பேரிலே ஏறிக்கொண்டு பின்னையும் ஐம்பது அறுப்து பேர் குதிரை சுவார்கள் கூட புறப்பட்டு மேளதாளத்துடனே சகல சமர்மத் துடனே ஒன்பதரைமணிக்கு வந்தார்கள். வாசற்படி அண்டையில் வந்த உடனே பல்லக்கு விட்டிறங்கினர். இறங்கின உடனே பதினைந்து பீரங்கிசுட்டார்கள். முசியே பிரியேலும் (Frille) சின்னதுரையும் எதிர்கொண்டு வந்து ஒருந்தருக்கொருந்தர் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு கையை பிடித்து அழைத்துக்கொண்டு உள்ளே போன உடனே துரையவர் கள் சாலையிலே ஒசர நின்றார்கள். ருசா சாயபுபோய் படியின்பேரில் ஏறின உடனே ஒருபடி யிறங்கி கைய்யைப்பிடித்துக்கொண்டுபோய் நடுச்சாலையிலே உட்கார்ந்தார்கள் பர்வாணுபடிக்கச்சே 15 பீரங்கி சுட்டார்கள். அங்கே யிருந்து அனுப்பிவித்துக்கொண்டு வெளியே புறப்பட்டு ராசா சாயபு ஆனையின்பேரிலே ஏறினர் மற்றபேர் பல்லகின்பேரிலேயும் குதிரையின் பேரிலேயும் ஏறிக்கொண்டு புறப்பட்டு நவபத்து மேளதாளத்துடனே வீட் டுக்குப் போனார்கள்.

அப்பால் பதினொருமணிவேளைக்கு துரையவர்களும் சின்ன துரை முதலாகிய குமிசேல்காறி சில்லரை உத்தியோகஸ்தர்கள் கப்பல்காரர் சகல மானபேர்களும் துரையவர்கள் வீட்டிலே இருந்து புறப்பட்டு கால்நடை யாய் ருசாசாயபு வீட்டுக்குப்போனார்கள் போன உடனே துரையவர்கள் சிரோப்பாவும் 11 மோகராவுங்கொண்டுபோய் வெகுமானம் கொடுத்தார்கள் அதன்பேரிலே குமுசேல்காரர் மற்றபேர் வெள்ளைக்காரரெல்லாரும் அவரவர் மொகரிகொண்டுபோய் நசாவைத்து பேட்டிபண்ணிக்கொண்டார்கள். அதன் பேரில் அவ்விடத்திலே நடந்த சம்மதி [ ]

**சுக்கில ஞு ஆடி மீ 3 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 15 உ அங்காரகவாரம்**

இற்றைநாள் காலையில் துரையவர்களழைத்தனுப்பிவித்து சாமான் களெல்லாம் ஒழுகரையைப்போய்ச் சேர்ந்ததா என்று கேட்டார். இன்றைய

தினம் ஜாடாவாய்ப்போய்ச்சேருமென்று சொன்னேன். நல்லது அவர்களை யழைப்பித்து தாக்கீதுபண்ணி சாயங்காலத்துக்கு சாடாவாய் சேரபண்ணி செய்விக்கச்சொல்லச் சொன்னார். நல்லதென்று இப்புரம் வந்தேன் மறுபடி யழைத்து முசியே திலார்ஷ் (Delarche) வருகிறான் அவனை மரியாதையாய் நடப்பிக்கச் சொல்லி ஒரு காகிதம் ஒன்றிருக்க வேண்டுமாம் எழுதிக்கொடு என்று சொன்னார். அந்தபடிக்கு எழுதி முசியே திலார்ஷ் (Delarche) அண்டைக்கு மதனாந்த பண்டிதன் கையிலே கொடுத்து கொண்டுபோய் கொடுக்கச்சொன்னேன். அப்பால் அன்வர்த்திகான் மூலைக்கு மூலை ஒடுங்கி முனே என்னவென்று கேட்டார். சந்தாசாயபு மகன் இங்கேயிருந்துகொண்டு இரண்டாயிரம் சொல்தாதுகளும் நாலாயிரம் சிப்பாய்களுடனேயும் ஆயிரம் சுவார்களுடனேயும் புறப்பட்டு தோப்புக்கானு சமேதம் புறப்பட்டு வருகிறான் என்று அவ்விடமெல்லாம் வலசைவாங்குகிறதுதான் சகஜமாச்சுதே. அன்வர்த்திகான், மாபுசுகான் பிரான்சுக்காரர் தளத்துடமகிமை அவர்களுக்கு அனுகூலமாயிருக்கிற படியினாலே அந்த அதிர் மூலைக்கு மூலை அவர்களை யிழுக்குதென்று சொன்னேன் முசியே திலார்ஷ் (Delarche) இருந்துக்கொண்டு கிழவனுக்கு ஒரு தரம் சண்டை கொடுத்து செந்நால் கீர்த்தியுண்டு தொண்ணூத்திரண்டு வயது ஆச்சுது எந்த வேளையிலே பிராணன் போகிறதோ தெரியாது பின்னே ஒரு விதமாய் போனால் அப கீர்த்தி சண்டையிலே போனால் தொண்ணூத்தி இரண்டு வயதிருந்து அவருக்கு சண்டையிலே செத்தானென்றால் இதைவிட கீர்த்தி வேறே இல்லை என்ற நினைப்புடனேயிருக்கிறான். மாபுசுகான் சிவனை தப்புவித்துக்கொண்டு சுவாமி தயவினாலே திரவியமிருக்கிறது சுகமாய் ஒரு இடத்திலேபோய் சாப்பிட்டுக்கொண்டு இருக்கலாம் அப்பாலும் வாறவன் பாற்சா சன்னதின் பேரிலே வருகிறானேயல்லாமல் மற்றப்படியல்ல.

**சுக்கில ஞூ ஆடி மீ 6 உக்கு 1749 ஆ ஜூலை மீ 18 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலையில் முசியே துப்ளேக்சு கொவர்னதோர் ஜனரால் அவர்களுடைய மாமியார் மதாம் அல்பேர் (Albert) நேற்று பதினொரு மணிக்கு செத்தவளை இந்நாள் காலையில் எழரை மணிக்கு புதைக்கிறதற்கு திட்டம் பண்ணியிருந்தபடியினாலே நானும் போகவேண்டியதானபடியினாலே ஆறரை மணிக்குச் சாப்பிட்டுப்போனேன் அப்போதுரையும் மதாம் அல்பேர் வீட்டுக்கு வந்தார் அங்கே நடந்த வயணம்.

ஆறுமணியடிச்சாப்போலே அரைக்கொடி போட்டு மினுதுக்கு ஒரு பீரங்கி கோட்டையிலேயும், ஒரு பீரங்கி துரையிலே இருந்த கப்பலிலேயும் மினுதுக்கு இரண்டு பீரங்கி விழுக்காடு கோயிலிலே கொண்டுபோய் புந்தத்து தீர்எட்டேமுக்கால் மணிபிடித்தது அந்தமட்டுக்கும் பீரங்கிப்

போட்டார்கள் ஏகத்துக்கும் இரண்டேமுக்கால் மணிக்கும் கப்பலிலேயும் கரையிலேயும் சற்றேறக்குறைய முன்னூற்று முப்பது பீரங்கி சுட்டார்கள் அப்புறம் புதைத்துத் தீர்த்து வெளிப்புறபடச்சே இரண்டு வரிசை சொல்தாதுகள் ஏந்தின துப்பாக்கிகள் சுட்டு ஒரு வரிசை கோவிலைப்பார்த்து ஒவ்வொருத்தனுக சுட்டபிற்பாடு கோட்டையிலே இருபத்தொரு பீரங்கி விழுகாடும் கப்பலிலே இருப்பத்தொரு பீரங்கி விழுக்காடும் சுட்டார்கள் அப்பால் மதாம் அல்பேரை **(Albert)** எடுத்துக்கொண்டு வரச்சே நடந்த வயணம் மதாம் அல்பேர் **(Albert)** வீடு துவக்கி மேலண்டையிலே முசியே போய்லோ **(Boyelleau)** வீட்டுமட்டுக்கும் இரண்டு பார்சமும் சொல்தாதுகள் வரிசையாயிருந்து அதிலேயிருக்கிற ஒபிசியேமார்கள் கப்பித்தான்மார்கள் மயோராகளுக்கெல்லாம் **(Majore)** பணிரெண்டு முழத்திலே கிழித்து யங்கோபவீதம் போட்டாற்போலே சட்டையின் பேரிலே முடிந்துப்போட்டுகொண்டு ஒபிசியேல்மார் கப்பித்தான்மார்கள்சார்சாந்துமார் **(Sergeant)** இட்டிகாருக்கு கூட ஒவ்வொரு முழமும் கறுப்பு முடிந்துப்போட்டு அப்பாலந்த தம்பூரு பேரிலே நவ்வாலு முழ கருப்பு காங்கு கிழவுபோட்டு அதன் பேரிலே பொத்துபொத்தென்று அடித்துவர சொல்தாதுகள் துப்பாக்கிகள் சாவுக்கு பிடிக்கிற சட்டமாய் அவர்கள் ஜாதி வழக்கப்படி பின் பாரிசமாய் முகவனத்தை சாய்த்து பிடித்து அப்பாலிந்தபிரேதம் போட்டிருக்கிற பெட்டியை எட்டுபேர் சார்சாந்துமார் **( Sergeant )** எடுக்கிறது அதன்பேரிலே போட்டிருக்கிற கருப்பு தாப்பித்தா நாலு மூந்தாணியும் நாலுபேர் கொசெல்லியேரிடத்துக்கு பாத்திரவான்களாயிருக்கிற முசியே தெப்போரேன் **( Desfresnes )** முசியே கொர்னேத் **( Cornet )** முசியே சேன்சவோர் **( Saint Sauneur )** முசியே மினுசு **(Menor)** இதுக்கு முகனே முசியே லெகு **( Legau )** இந்தபடிக்குயெல்லாம் கறுப்பு உடுத்திக்கொண்டு வந்தார்கள் அவர்களுக்கெல்லாம் யக்ரோபவீத சாடையாய் கருப்புபிக்கோன் சுருட்டியிலே கிழித்ததுண்டு மார்பட்டை போலே போட்டுக்கொண்டதுமல்லாமல் பிரேதத்தை சுத்திக்கொண்டு வருகிறார்கள் கொமிசிலேர்களும் சுமர்ஷாம்களும் **( Concillors & sans marchands )** கருப்புடுத்திக்கொண்டு மார்பட்டை கருப்பு சுருட்டி துண்டுப்போட்டுகொண்டு வருகிறதுமல்லாமல் இவர்களெல்லாம் கையிலே ஒரு வெள்ளை மெழுகுதிரி கொளுத்தி பிடித்து கொண்டுவருகிறதும் மற்றபடி கம்பெனி உத்தியோகஸ்தர் வெள்ளைக்காரரெல்லாரும் அப்பால் வூரிலே வரத்தக்க வெள்ளைகாரர் வீட்டு பெண்டுகள் சமஸ்தமானபேரும் கருப்பு உடுத்தி கொண்டுவந்தார்கள். துரையவர்கள் சின்னதுரை ஷெயார் குமாரன் முசியே அல்பேர் **(Albert)** இவர்கள் கருப்பு உடுத்திக்கொண்டு வந்ததுமல்லாமல் தொப்பியிலே மெலிசு சீமையிலேயிருந்து வருகிறது அது இரண்டு தொங்கல்

கிழதக்கதாக கட்டின் தொப்பி போட்டுக்கொண்டதல்லாமல் கையினுட்சட்டை புறமாயிலே ஒரு வெள்ளை துண்டு போட்டுவைத்து போட்டுகொள்ளுகிற வாடிக்கை படிக்கு அது சடைரெண்டு பற்மாயிலேயும் வெள்ளைப்போட்டிருக்க முழு கருப்பு பல்லக்கு நாற்காலி சமஸ்தமும் கருப்பு போட்டுகொண்டு புறப்பட்டார்கள் அப்பால் மதாம் துப்ளேக்சு (Dupleix) மதாம் தொத்தேல் [ ] இவர்கள் ரெண்டு பேர்கள் பெண்கள் பிள்ளைகள் பெண்களுடைய புருஷன்மார்கள் இவர்களெல்லாம் கருப்புடித்திக்கொள்ளுகிறது ஏழுதக்கவையில்லை. இதையல்லாமல் துரையவர்கள் பல்லக்குகாரர், சேவகர் துபாசிக் கணக்கப்பிள்ளைகள் உட்பட தலைப்பாகையும் நடுகட்டும் கருப்பு ஆக்கி கட்டிக்கொண்டார்கள். இந்தபடி பேரிழவு கொண்டாடி சன்னியாசிமார்கள் அவர்கள் ஜாதிவழக்கப்படிக்கு சிலுவை பாடுபட்ட சொரூப முதலானது கொண்டு எல்லாரும் மெழுகுவத்தி கையிலே பிடித்துக்கொண்டு பாருக்கு பிறகே பிரேதத்துக்கு முன்னே ஆவர்கள் ஜாதிவழக்கபடிக்கு அவர்கள் மதத்தின் கட்டுபடிக்கும் அவர்கள் படித்துகொண்டுபோக பிரேதத்தின் பிறகே முசியே அல்பேர் துரை (Abert) சின்னதுரை முதலான கோன்சில்லியேர்கள் அப்பால் துரை பெண்சாதி முதலான அதற்கு தக்கலாய்க்கான வெள்ளைக்காரர் பெண்டுகள் அப்பால் சுமாஷா முகன் [ ] பெண்டுகள் தந்தாப்போலே புறப்பட்டு முசியே கில்லியார் (Guillard) வீட்டு தெரு வாசற்படியின் பேரிலே புறப்பட்டு முசியே தெலாரம் (Dulaurens) மதாம் கொடுத்துவிட வீட்டண்டையிலே புறப்பட்டு கப்புச்சு கோவிலிலே (Cahuchni churoq) கொண்டுபோய் புதைத்து ஆனபிற்பாடு எல்லோரும் மதாம் அல்பேர் வீட்டுக்குப்போய் இழவுக்கு வந்தவர்கள் எல்லாரும் ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகள் சமஸ்தமான பேர்களும் அனுப்பிவித்துக்கொண்டு போனபிற்பாடு துரையும் முசியே அல்பேரையும் தன் பெண்சாதியையும் தன் மச்சினிச்சியையும் அனுப்பிவித்துக்கொண்டு இரண்டடி நடந்த உடனே மதாம் துப்ளேக்சு தன் தம்பி அல்பேரை அனுப்பிவித்துக்கொண்டு நடந்த உடனே அல்பேரும் (Albert) இவர்களுடனே கூடி தானே பல்லக்கு ஏறிக்கொண்டு துரைவீட்டுக்குவந்து துரை சின்னதுரை முதலானபேர் கூட எப்போதும் காலையில் எட்டு மணிக்கு ரொட்டி வெண்ணை கபே குடிக்கிற வாடிக்கைபடிக்கு குடித்து அவரவர்கள் உத்தியோகத்துக்குப் போனார்கள். புதைக்கும் தனையுமதானதுக்கும் அப்பால் துக்கத்தை விட்டுப்போட்டு அந்த க்ஷணமே அவரவர்கள் உத்தியோகத்தே அவரவர்கள் போனார்கள். முசியே அல்பேர் தான் (Albert) குமாரனனபடியினாலே அந்தபடிக்கு துக்க கருப்பிலே உடுத்திக்கொண்டான். மருமகமாராயிருக்கிற துரை சின்னதுரை முதலான பந்துக்களும் அவனோடு சரி கருப்பும்போட்ட காரியம் என்னவென்று கேட்டால்,

அவர்களுக்குள்ளே வாடிக்கை தாய் தகப்பன் அண்ணன் எப்படியோ அப்படி மாமனார், மாமியார், தாய் தகப்பனுக்கு அநைத்துக்கம் சரியாக கொண்டாடுகிற வாடிக்கையானபடியினாலே பிள்ளைகளும் மருமக்களுக்கும் சரி என்னத்தினாலே என்றால் பெண்களும் பிள்ளைகளும் சரி பங்கானபடியினாலே அந்த பெண்கள் பங்கு மருமக்களை சேருகிறபடியினாலே மருமகள் கூட துக்கம் கொண்டாடுகிறது. சரியாய் கொண்டாடுகிற வாடிக்கை படிக்கு நடந்தது. இதிலே முசியே செம்போல் ( **St. Paul** ) பெண்ஜாதி மாத்திரம் பயித்தியமானபடியினால் தாய் செத்த சேதிகள் சொல்லவில்லை அவளும் வரவில்லை. மற்றபடி நானும் இதுகளுக்கெல்லாம் கூட இருந்து அவர்கள் கையிலனுப்பிவித்துக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணி வேலைக்கு துரையவர்கள் அழைப்பித்து முசியே பிளாம் ( **Pelleng** ) யென்கிற இங்கிலீஷ்காரன் பர்ஸிலிருந்து கப்பல் கொண்டுவந்தானே அதிலே பேரீச்சம்பழம் சரக்கு மாத்திரம் விலை போகவில்லையாம்; அதை வர்த்தகரை அழைப்பித்து தீத்துபோடச்சொல்லி அப்பால் சந்தா சாயபு மகன் ரூசா சாயபுக்கும் சேக்கு அப்துல் ரயிமானுக்கும் எழுதியனுப்பச்சொன்ன தென்னவென்றால்: சம்புத்தாஸ் என்கிறவன் உங்கள் காரியத்திலே இதுவரையிலும் பின்வாங்கியிருந்த சம்மதி உங்கள் மனதுக்கு நன்றாய் தெரிந்திருக்கிறதே உங்கள் தகப்பனார் சந்தா சாயபு இப்போ வாராரென்று எதிர்கொண்டு போராரென்று கபுறு கேட்டோம் நீர் சந்தா சாயபுக்கு எழுதுகிற அவனை ரெஸ்பேரிட தேவையில்லையென்றும் சம்புதாஸ் பேட்டிக்கு வந்தால் உன்னிடத்திலே நம்பிக்கை தேவையில்லை. நீ புதுச்சேரியிலே ஒரு வீடு கட்டினாலேயல்லாமல் எங்களுக்கு நம்பிக்கை தோற்றுகிறதில்லை அந்த படிக்குக்கட்டி அவ்விடத்திலே குடியிருக்கிறாரென்று புதுச்சேரி கொவர்னதோர் சிபார்சு வந்தாலேயல்லாமல் நீ நம்மண்டைக்கு வர தேவையில்லை என்று கெட்டியாய் சொல்லச்சொல்லி எழுதியனுப்பச்சொல்லி ரூசாசாயபு பேருக்கு அப்துலாயின்பேருக்கும் எழுதியனுப்பென்று சொல்லி இரண்டு மூன்றுதரம் உறுத்தி உறுத்திச் சொன்னார் எனக்கானால் எழுதுகிறது உத்தமமல்லவென்று தோற்றியிருந்தாலும் உடனே சொன்னால் கோபம் வருகிற பிறகுருதி ஆனபடியினாலே நல்லதென்று சொன்னேன் அப்பால் இங்கிலீஷ்காரருக்கு எட்டு நாளைக்குள்ளாக இரண்டு கப்பல் சீர்மையிலிருந்து வந்ததே அதிலே சென்னைப்பட்டணம் ஒப்பித்துக்கொள்ளச்சொல்லி சேதிவந்தது. ஆனால் சென்னப்பட்டணம் மறுபடி முன்னேயைப்போலே பஸ்தி ஆமாவென்று கேட்டார் அவர்கள் நீசான் விழுந்து நூற்று இருபதே சில்லரை வருஷமாச்சுது அப்படியிருக்க அதற்கு பொல்லாதகாலம் வந்தபடியினாலேயல்லவா அவர்கள் கைவிட்டு உங்கள் கைவசமானதும் வீடுகளெல்லாம் இடிபட்டது.

**சுக்கில ௵ ஆடி ௴ 7 ௳ க்கு 1749 ௵ ஜூலை ௴ 19 ௳ சனிவாரம்**

இற்றைநாள் காலையில் துரையவர்களிடத்திற்குப் போனவிடத்திலே அவர்கள் மேஸ்தர் புசுகாவேன் ( **Bascawen** ) அனுப்பின காகிதத்துக்கு பதில் எழுதுகிறதற்கு கோன்சேல் பண்ணி பதில் காகிதமெழுதிகொடுத்து அங்கேயிருந்துவந்த சோபுதார் மூன்று நாளாய் காத்திருந்தவன் கையில் கொடுத்துப் போகச்சொன்னார்கள் இந்த காகித சேதி பார்த்தால் அவர்கள் சென்னைப்பட்டணம் ஒப்பிச்சு கொள்ளச்சொல்லி தங்களுக்கு சீர்மையி லிருந்து எழெட்டுநாள்களுக்கு முன்பாக வந்த சீர்மைக் கப்பலிலே வந்த சேதி யெழுதினதாகவேணும் அதற்கு இவர்களப்படியே ஒப்புச்சுப்போடு கிறோம். எங்களுக்கு கப்பல் வருகிறதற்கு நாழிகை கெடுவின் பேரிலே யிருக்கிறது. அப்படியே வந்த உடனே அதன் பேரிலே எங்களுக்கு வருகிற காகிதம் பார்த்துக்கொண்டு ஒப்பித்து போகுகிறோ மென்று எழுதினார்களல்லவென்று அதிலே யாதொரு தவணை எழுதி ருந்து அந்த தவணைபடிக்கு ஒப்பிந்து போகுகிரோமென்று எழுதினார் களோ இதிலே இரண்டிலே ஒன்று யெழுதியிருக்க வேண்டுமென்று தோற்றுவது எதினாலே யென்றால் துரையவர்கள் நேற்று சாயங்காலம் என்னுடனே சொன்ன சாடையின் பேரிலே நான் யோசனை பண்ணி எழுதி னேன் அப்பால் கோன்சேகலைந்த உடனே என்னையழைத்து சென்னைபட்ட ணத்திலேயிருந்து உங்கள் சாவடியிலேயிருந்து அப்படித்தானே போன சிப்பாய்கள் கணக்கு முசியே துக்கேன் கையெழுத்துப்போட கொடுத்தான் இந்த கணக்குபடிக்கு சந்தா சாயபு மகன் ராஜா சாயபுக்கும் அப்துலாயிமா னுக்கும் எழுதியனுப்பிவித்து ரசா சாயபு மோகறபட ரசீது அழைப்பிக்கச் சொல்லி உத்தாரம்கொடுத்தார் அந்தபடிக்கு யெழுதி அனுப்புகிறே னென்று அந்த கணக்கு வாங்கிகொண்டேன். அப்பால் மறுபடி அழைத்து காரைக்காலிலிருந்து முசியே ரிஷ் (**Riche**) யெழுதியனுப்பின காகிதத் திலே மேஸ்தர் புசுகாவேன் (**Bascawen**) தீவுகோட்டைக்குப் போயிருந் தானே அங்கே மானேசி அப்பாமேஸ்தர்புசுகாவேன் (**Bascawen**) சொன்ன உடன்படிக்கை தீவு கோட்டையும் அத்துடனே சேர்ந்த கிறமம் பதினே ழும் கொடுக்கவும் அவர்களுக்கு சென்ற சிலவும் கொடுக்கவும் நாட்டிக் கையை ஒப்பிக்கவும் இந்தபடிக்கு உடன்படிக்கை பண்ணினதாகவும் அந்த படிக்கு மேஸ்தர் புசுகாவேன்(**Bascawen**) சம்மதித்து கொண்டுவந்து தேவ னும்பட்டணம் வந்துசேர்ந்து ஐந்தாறு நாளாச்சுது என்று சொல்லி அதன் பேரிலே மானேசி அப்பாவின் பேரிலே பிரதாபசிங் ராஜா வெகுகோபித்துக் கொண்டு மானேசி அப்பாவை தலைவெட்டி போடுவதாயிருக்கிறானென்று இனிமேல் சந்தா சாய்பு வந்தாப்போலே மராட்டியரும் துலுக்கரும் கூடிக் கொண்டு தேவனும்பட்டணம் வாங்கிப்போடுவார்களென்று இங்கிலீஷ்

காரர் பலம் (Power) இனிமேல் இந்த ராஜ்யத்திலே எடுபட்டுப் போச்சு தென்றும் இப்படி தன்னை அடைந்தவனை ஒப்பித்துப் போடுவது எங்காகிலும் உண்டா? காட்டிகை நிமித்தம் இத்தனை பிரயாசைப்பட்டு கடைசியிலே அவனை ஒப்பித்துப்போடுகிறதற்கு சம்மதித்து கொண்டுவந்தமட்டுக்கும் இனிமேல் இங்கிலிஷ்காரரை ஒருத்தரும் நம்பமாட்டார்களென்றும் பின்னையுமிங்கிலீஷ்காரர்கள் பேச்சு இந்த ராச்சியத்து தமிழர் மெத்த விசுவாசமாய் எண்ணுகிறார்களே இனிமேலெப்படி நம்புவார்கள்? இப்படித்தானவர்கள் நடத்தவேணுமென்றும் அதற்குத்தக்க ஜாடையாய் என்ன சொல்லவேணுமோ அந்த சாடையாய் ரொம்ப நிந்தித்துச் சொன்னார். அதற்கு நானப்படி காட்டிகையை ஒப்படித்தது மெய்யானால் இந்த ராச்சியத்திலே அவர்களை மெத்த கொஞ்ச மனுஷராயெண்ணி நம்பாமல் போகிறதுமல்லாமல் சுவாமியும் பெரிய ஆக்கினை கொடுப்பார் என்று எப்படி சொல்லவேண்டுமோ அப்படி சொல்லிப்போட்டு பாக்கு கிடங்குக்கு வந்து ராஜா சாயபு பேருக்கும், அப்துலாயிமான் பேருக்கும், சிப்பாய்கள், கணக்கும் துப்பாக்கிகள் கணக்கும் கடுதாசி கணக்கும் எழுதி ரசீது அனுப்பச்சொல்லி எழுதி காகிதங்கள் சேவகர் கையில் கொடுத்து அனுப்பிப்போட்டு நானும் வீட்டுக்கு பனிரெண்டு மணிக்குப்போனேன்

**சுக்கில ஞு ஆடி மீ 9 உக்கு 1749 ஆ ஜூலை மீ 21 உ சோமவாரம்**

இற்றைநாள் காலையில் பிரபுவினிடத்திற்குப் போனவிடத்திலே அவர் சந்தாசாயபு சேதி வந்ததாயென்று கேட்டார் காகிதங்களினால் வரவில்லை சொல்லிகொள்ளுகிறதானால் செங்கமாகானமே கடந்து, அதன்கீழ் பல்லப்பாடி துர்க்கம் பாக்கு நல்லிகான் அவர்களுடைய திருக்கிறதாம். அங்கே வந்து கண்மையின் கீழே இருக்கிற துறக்கத்திலே இறங்கியிருக்கிறதாய் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அதற்கப்புரம் இருகாத வழியிலே அன்வர்திகான் 3000 சுவர்களுடனே இறங்கி யிருக்கிறதாய் பஜார் கபுறு சொல்லிக்கொள்ளுகிறார்களென்று சொன்னதுக்கு காகிதம் வரவில்லையென்று கேட்டார் செங்கமர், திருவண்ணாமலையிலிருந்து நேற்று இராத்திரி வந்த இரண்டு பிராமணர் சொன்ன சேதியிது. மெய்யாயிருக்குமே அல்லது பொய்யாயிராது. காகிதங்களும் இன்று வந்து சேருமென்று சொன்னேன். அப்பால் வக்கில் சுப்பய்யன் முத்துமல்லாரெட்டி பெண்டுகள் பிள்ளைகளை விடுவிக்கிறதற்கு பேசவந்தானே அவன் இருபது வெள்ளையல்லோ பேசினான். அதற்கு அப்படி பண்ணதினாலே பின்னை ஒரு பிராமணன் வந்து தன் மார்பத்திலே 40 வெள்ளைப்பேச்சு நடக்கிறபடியினாலே இவர் இருக்க காரியம் என்ன?

ஹிதாயித்து மொகதீன்கானும் சந்தா சாயபு [ ]
இக்கனாள் பகலுக்கு மேலாக சாவடிக்குப்போய் மண்டபம் வேலை செய்கிற

வனைப் பார்த்துவர எட்டு மணி வேலையானபடியினாலே இதிலே துரை யவர்களழைக்கிறார்களென்று சேவகன் வந்து அழைத்தான். போனவிடத் திலே என்னைப் பார்த்து சாயங்காலம் ஆறு மணிக்கு சந்தா சாயபு லஸ்கரி லிருந்துவந்த காகிதம் சந்தா சாயபு மகன் ராஜா சாயபு அண்டைக்கு வந்ததை அவன் அசலை வைத்துக்கொண்டு அதற்கு கொப்பியெழுதி யனுப்பினான். அதில் எழுதியிருக்கிறது பிராமணன் படித்துப் பார்த்து உன்னுடனே சொன்னானே இல்லையோ என்று கேட்டார். சொன்னான் அந்தபடிக்கு நம்முடைய வக்கீல் சுப்பையன் தம்பி எழுதினதிலேயும் அப்படித்தான் எழுதிவந்தது சந்தா சாயபு 6000 குதிரையுடனே செங்க மாகானம் இறங்கி இப்பாலே பல்லப்பாடி துற்கம் என்று பாகரல்லிகான் அவர்களது இருக்கிறதாம். அந்த துற்காம் அடிவாரத்திலே இறங்கினார் களாம். இதாயத்து மொகதீன்கானும் பிறகாலே வந்து கண்மை இறங் கினானும். அவன் அன்வர்திகானுக்கு இப்பாலே இருகாத வழியிலே மூவாயிரம் சுவர்களுடனே இருக்கிறவனை சந்தா சாயபு குதிரைக்காரர் அவர்கள் தண்டுக்கு ரஸ்து போகாமல் முந்திகைப்போட்டதாகவும் அதன் பேரிலே நசிபுகானை அனுப்பிவித்ததாகவும் நசிபுகானை சந்தா சாயபு தன் அண்டைக்கு வரவேண்டாமென்று சொன்னதாகவும் அதன் பேரிலே உசேன் சாயபு தாயாரை அனுப்பவேண்டுமென்று இருக்கிறதாக எழுதி வந்தது என்று சொன்னதற்கு எனக்கு முசியே ஒந்தெலும் (d'outeul) அப்படித்தான் எழுதினானென்று சொல்லி வில்லியநல்லூர் மறக்காரனு தோறணம் வைக்க நாளையதினம் மனுஷர்களை அனுப்பிவிட்டோமே யல்லா மல் நாற்பது கோடி முஸ்திந்து பண்ணிவை யென்று சொல்லி நெளுவறிந்த மனுஷாளாய் சம்பாதித்து வையென்று சொன்னார். நல்லதென்று சொல்லி பாக்கு கிடங்குக்கு வந்து அன்னேரமே முச்சியனை அழைப்பித்து பரசுராமபிள்ளை யண்டைக்குப் போய் நாற்பது மூங்கிலும் கொடிக்கு மூன்று நெடுமுழம் கும்பினீர் வர்த்தகர்களைக் கேட்டு வாங்கிக்கொள்ளச் சொல்லி சொல்லியனுப்பிப்போட்டு அப்பால் ரங்கபிள்ளையையும் அழைப் பித்து வில்லியநல்லூர்பறகானு சப்பித்தி பண்ணபோகவேணும் நாளைய தினம் தயாராயிரும். ஆனால் இப்போ அப்துல் சல்லி மனுஷனை யிருக் கிற லல்ல என்கிற காயத்தன் மதாம் துப்ளேக்சுக்குமுன்னே இரண்டு மூன்று நாளைக்கு முன்னே இன்னும் பத்து நாள் பொருத்து சப்பித்தி பண்ணத் தக்கதாக செய்யவேணுமென்று இருனூறு ரூபாய்கொடுத்து அனுப்பித்த படியினாலே இந்தமட்டுக்கு அட்டியாயிருந்தது. நேற்றியதினம் வந்து முன்னூறு ரூபாயதிகம் கொடுக்கிறோமென்று பேசிப் போனதற்கு இன்னும் பத்து பதினைந்து நாள் தோறணம் வராமல்படியும் பண்ணுகிறேன். அப் பால் தோறணம் வந்தபிற்பாடு உன் வசமாய் பண்ணுகிறேனென்று மதாம்

துப்ளேக்சு வார்த்தைப்பாடு வாங்கிக்கொண்டு இன்றையதினம் தான் ஊருக்குப்போனுனே துரையானுலிப்படி சொன்னுர். நடக்கிற காரியமறிவோமென்றுசொல்லி ரங்கப்பிள்ளை நான் சொன்ன கபுறு முன்னே பொய் என்றீர்களே இப்போ உங்களுக்கு சரிப்படுகிறதாயென்று கேட்டார் லாலா தானே என்னுடைய்ன சொன்னபடியினுலே நீர் சொன்னதும் இதுவும் சரிபட்டதென்று எண்ணிக்கொண்டேன் உங்களவன் லாலா அண்டையிலே இருக்கச்சே உங்களுக்குத் திட்டமாய் கபுறு வந்தது என்று சொல்லி நல்லது எல்லாம் நாளைக்குத் தெரிகிறதென்று சொல்லி காலையில் வாரும் என்று சொல்லி அனுப்பினேன். மறுபடி சேதி ஒன்றும் கேட்கவில்லை.

### சுக்கில ஸ்ரீ ஆடி மீ 11 உக்கு 1749 ஆ ஜூலை மீ 23 உ புதவாரம்

இற்றைநாள் காலையிலே பிரபுவினிடத்திலே போனவிடத்திலே பிரபு அலுவலாயிருந்தபடியினுலே பாக்குக்கிடங்குக்கே வந்தேன். ஆனல் மூன்று நான்கு நாளாய் வெகு யோசனையின்பேரிலே யிருக்கிறதாய் தோற்றியிருக்கிறது. அது எதனுலென்றுல்: சென்னப்பட்டணம் முசியே லபுர்தொனே ஒப்பித்து வந்தபடிக்கு சென்னப்பட்டணத்தை இங்கிலீஷ்காரருக்கு ஒப்பித்துப் போடச்சொல்லி சீர்மையிலிருந்து மாஸிஸ்தருகான் எழுதிகொடுத்த காகிதத்தை மேஸ்தர் புசுகாவேன் (Boscawen) அனுப்புவித்து ஒப்பிக்கச்சொல்லி எழுதியனுப்பினபடியினுலே அதற்கு பதிலுத்தாரம் எங்களுக்கு கப்பல் ஏழெட்டு நாளையிலே வரும் வந்தவுடனே அதன்பேரிலே வருகிற காகிதங்களைப் பார்த்துக்கொண்டு உங்கள் பட்டணம் உங்களுக்கு ஒப்பித்துப் போடுகிறோம் என்று எழுதியனுப்பினபடியினுலே முசியே லபுர்தொனே (Labourdonnais) ஒப்பித்தும் போனபடிக்கு ஒப்பித்துப் போடச்சொல்லி எழுதிவந்தபடியினுலே பிற்பாடு வீடுகளெல்லாம் பிடித்துப் போட்டபடியினுலே வீட்டுக்கிரயங்கள் கொடுக்கவேண்டி வரப்போகுதென்று அந்தப்பிக்காரமிலே மனதுக்கு விசாரமாயிருக்கிறதாய் சொல்லிக் கொள்ளுகிறுர்கள்.

அப்பால் மதாம் அல்பேர் (Albert) எனக்குக்கொடுக்க வேண்டிய ஐந்நூறு ரூபாயும் அதற்குள்ள வட்டியும் கொடுத்துவிடுகிறோமென்று முசியே சேன்போல் (Sant Paul) சொன்னபடியினுலே துரைவீட்டிலிருந்தாப்போலே மதாம் அல்பேர் (Albert) வீட்டுக்கு அவள் யெழுதிக் கொடுத்த ஐநூறு ரூபாய் சீட்டையும் எடுத்துக்கொண்டு போனேன் அங்கே முசியே சேம்போல் (Sant Paul) முசியே கில்லியார் (Geuillard) முசியே தெலார்ஷ் (Delache) லாபலே (Lamballais) என்கிற முசியே

பின்னையும் ஒரு பேர் விளங்கான கணகசன் கூட்டிருக்க! போனவிடத்திலே அலமாரியிலே ஒரு சின்ன சாக்கிலே சிறு ரூபாய் பணமும் போட்டு சிவப்பு அரக்கிலே முத்திரைப்போட்டு இருந்த பையை முசியே சேன்போல் **(Saint Paul)** எடுத்துக் காசுக்காரர் இரண்டு பேர் வந்திருந்தவர்கள் முன்பாக போட்டு முத்திரை அவித்து என்ன சொன்னவிடத்திலே ஐந்நூற்று நாற்பத்தெட்டு ரூபாயும் முப்பத்தொரு சில்லரை விராகன் பணமும் பொன் விராகன் ஐந்து இருந்தது அதிலே எனக்கு கொடுக்கவேண்டிய ரூபாய் ஐனூறு ரூபாய் முதலும் 1746 ஆ ஆகஸ்டு மீ 28 உக்கு அக்ஷய வருஷம் ஆவணி மீ 16 உ முதல் 1749 ஆ ஜூலை மீ 22 உக்கு சுக்கிலவருஷம் ஆடி மீ 11 உ வரைக்கும் வட்டி நூற்றுக்கு பெட்டாக நூத்தி பதினொரு ரூபாய் கூடிற்று அது ஏகத்துக்கு வட்டி முதல் உள்பட அறுனூற்றி பதினொரு ரூபாய்க்கு ஐனூற்று நாற்பத்தெட்டு ரூபாயும் பணவிலை இருபத்தொருவிராகன் 6 பணத்துக்கு ரூபாய்க்கு ஏழரையாக ரூபாய் அறுபத்தெட்டாக அந்த அறுனூற்று பதினொரு ரூபாய் சரியாக கொடுத்தார்களல்லாமல் பேர் எழுதி கொடுத்த ஐனூறு ரூபாய் பத்திரத்தை வாக்கிக் கொண்டு அதன் பிறகே வட்டியும் முதலும் பற்றிக்கொண்டேனென்று ரசீது பெழுதிக் கொடுக்கச் சொல்லி கேட்டார்கள். அதற்கு நான் சொன்னது நீங்கள் வட்டியும் முதலும் எனக்குக் கொடுத்தீர்கள் நான் மதாம் அல்பேர் **(Albert)** எழுதி கொடுத்த சீட்டை கொடுத்துவிட்டேன் ரசீது எழுதிகொடுக்கக் கவையில்லை என்று சொன்னதற்கு மதாம் அல்பேர் **( Albert )** செத்துப்போய் எங்கள் கையில் நீர் வட்டியும் முதலும் வாங்கிக்கொள்ளுகிறபடியினாலே ரசீது எழுதிக் கொடுக்கவேண்டுமென்று முசியே சேன்போல் **( Saint Poul )** முசியே **( Delarche )** சொன்னபடியினாலே அந்தச் சீட்டிலே பின்பக்கத்திலே வட்டியும் முதலும் முசியெ கில்லியார் **( Geuillard )** முசியே மோர், எனக்கு வரவேண்டியது மேலே எழுதப்பட்ட மூன்றுபேர் முன்பாக முசியே சேம்போல் **( Saint Poul )** கையில் பத்திகொண்டேனென்று ரசீது எழுதிக்கொடுத்து பணவிலை உட்பட அறநூற்றி பதினொரு ரூபாயும் வாங்கிக்கொண்டு வீட்டுக்குப்போய் கணக்கிலேயும் இந்த வயணமாய் எழுதிவித்து ரூபாயை சிதம்பர முதலி கையில் ஒப்பித்தேன்.

**சுக்கில ஸ்ரீ ஆடி மீ 12 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 24 உ குருவாரம்.**

இறைஞள் அப்துலாயிமான் பறங்கி எழுத்திலே ஒரு காகிதமும் பார்சி காகிதமொன்றும் ஆக இரண்டு காகிதமும் திருவிதி பண்ணுருட்டி அமுல்தாரன் சோஜீ பண்டிதன் கையிலே கொடுத்து முப்பது சிப்பாய் களையும் கூட்டி துரையை போய் சந்தித்துக்கொண்டு முப்பது சிப்பாய்களு

டைய துப்பாக்கி மாற்றிக்கொள்ளச் சொல்லியும் அஞ்சு சொல்தாருதனும் இரண்டு பீரங்கியும் திருவீதி கோட்டைக்கு வாங்கிப் போகச்சொல்லி யும், அந்தப்படிக்கு சரன்சாமி பண்ணிக் கொடுத்தனுப்பச்சொல்லி துரை பேருக்கு காகிதமும் எழுதிக்கொடுத்தனுப்ப அவர் வந்து அருமாத்தப்பிள்ளை சாவடியிலேயிருந்து முன்னதாக என்னண்டைக்கு அனுப்ப மேலே எழுதப் பட்ட சேதியும் துரைக்குச் சொல்லி காகிதமும் கொடுத்தவுடனே பறங்கி காகிதத்தைப் படித்துப் பார்த்தவுடனே நல்லது எழுதினபடிக்கு சரன்சாமி பண்ணி அனுப்புவிப்போம் அவ்விடத்துக்குப் போகத்தக்கதாக வந்த சிப்பாய் களை வரச்சொல்லு என்று சொன்னூர். நல்லதென்று அருமாத்தப்பிள்ளை சாவடிக்குச் சொல்லியனுப்பி வைத்தேன் மற்றபடி விசேஷ சேதியில்லை.

இற்றைனாள் சாயங்காலம் துரையவர்களழைக்கிறூரென்று சேவுகன் வந்து அழைத்தான் இதிலே வேலூர் முறுத்துசல்லிகான் காகிதம் வந்தது; அந்தக் காகிதத்திலே பாதிரி கோவில் கட்டுகிறதற்கு நிலம் விடச்சொல்லி எழுதினீர்கள். அந்தப்படி நிலம் விடுகிறோமென்று சொன் னேம். அவர்கள் அகழியண்டே நிலம் கேட்கிறூர்கள்; அங்கே விடப் போகாதென்று தங்களுக்குத் தெரியுமே, அதற்கு அடுத்தாப்போலே நிலம் விட்டுவிடுகிறோமென்றாலும் அதற்கவர்கள் சம்மதிக்கவில்லை. அந்தப் படி சம்மதித்து வாங்கிக்கொள்ளச்சொல்லி பாதிரிக்கு எழுதி அனுப்பச் சொல்லி யெழுதியிருந்தது. அந்தபடிக்கு சொன்னதற்கு அவர்கள் காண்பித்த நிலத்திலே கட்டிக்கொள்ளதக்கதாக பாதிரிகள் சம்மதித்துக் கொண்டார்கள் அந்த நிலம் சம்மதி தீர்ந்துப் போயிற்று, சரி சந்தா சாயபு முதலானபேர் வருகிற சேதிகளென்றும் எழுத வில்லையா யென்று கேட் டார். எழுதவில்லை யென்று சொன்னதின்பேரிலே இந்த மட்டுக்கும் இதா யத்து மொகதீன் கான் சந்தா சாயபு பவுன்சுடனே கண்மை வந்திறங்கின சேதி வந்ததே அவர்களிந்த மட்டுக்கும் ஆற்காடு சேரவில்லையா? என்று கேட்டார் சோந்த சேதி நாளை நாளன்றைக்கு வந்து சேருமென்று வந்து சொன்னதற்கு ஆனல் வக்கீல் சுப்பய்யன் கையிலே இதாயத்து மொகதீன் கான் சந்தாசாயபுக்கு எழுதிய காகிதங்களும் நஜர் முப்பத்திதீன்கான் சந்தாசாயபுக்கு எழுதிய காகிதங்களும் நஜர் முப்பத்திரெண்டு அசற பியும் பர்வானகி நகல்களும் முசியே திலார்ஷ் **(Delarche)** கையிலிருக்கி றதை அழைப்பித்து கொடுத்து முசியே தொத்தேல் **(d'Outeuel)** இந்த நகர்களும் வைத்து காகிதங்களும் கொடுக்கச்சொல்லி நான் காகிதமெழுதி கொடுக்கிறேன் அந்த காகிதம்கூட கொடுத்து சீக்கிறமத்துக்கு அனுப்பிவை யென்று சொன்னூர் அவர் முன்பாகத்தானே முசியே திலார்ஷ் **(Delorche)** வசம் கொடுத்திருக்கிற காகிதங்களும் பர்வானகி நகல்களும் அசாபிகளும் அன்வர்திகான் துரைபேருக்கு அனுப்பின காகிதமும் என்பேருக்தனுப்பின

மகம்மதாக்குடைய காகிதமும் வாங்கி வரச்சொல்லி மதனந்த பண்டிதனை அனுப்பிவைத்தேன். இதிலே முசியே பெடுதாரம் (Bertrand) முசியே தொத்தேலுக் (d'auteul) கெழுதின காகிதத்தை என்னண்டைக்கு அனுப்பி வைத்தான் அதை வாங்கி கொண்டு சோஜிபண்டிதர் அரும்பாத்த பிள்ளை சாவடியிலிருந்து வந்து சேர்ந்து வாசற்படியிலிருக்கிறான் என்று சொன்ன தற்கு நாளைய காலையில் வரச்சொல் என்று சொன்னார், அப்பால் பாக்கு கிடங்கிலே வந்தேன். இதிலே மதனந்த பண்டிதரும் முசியே திலார்ஷ் (Delarche) கையிலிருந்த காகிதங்கள் அசாபி முதலானது வாங்கிவந்தார் அப்பால் சுப்பய்யனை ஆற்காட்டிற்கு போகிறதற்கு காலையில் வரச்சொல்லி அவர் தன் திரேக சவுகரியமாய் எல்லைபிள்ளை சாவடியிலே போயிருக்கிற வரை வரச்சொல்லி சொல்லியனுப்பிவித்துப் போட்டு நானும் வீட்டுக்குப் போனேன்

சுக்கில ஞு ஆடி மீ 13 உ க்கு 1749 ஆ ஜூலை மீ 25 உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலையில் பண்டிகையானபடியாலே துரை கோவிலுக்குப் போய் பூசை கேட்டுவந்த உடனே கபே குடித்து தலை நோகிறதென்றுப் போய் படுத்துக்கொண்டார். அப்பால் பதினொரு மணிக்கு அழைத்தனுப் பித்து நேற்று இராத்திரி வக்கீல் சுப்பய்யன் வசத்தில் கொடுத்தனுப்ப சொன்னபடிக்கு இதாயித்து முகதீன் கான் காகிதம் முதலானது கொடுத்து அனுப்பிவைத்தாயா என்று கேட்டார் இப்போ கொடுத்து அனுப்பிவைக் கிறேன் என்று சொன்னதற்கு நல்லது கொடுத்தனுப்பு என்று சொல்லிப் போட்டு திருவீதி பண்ணுருட்டிக்குப் போகிற பாப்பான் வந்திருக்கிறானா என்று கேட்டார். வந்திருக்கிறானென்று சொன்னதற்கு என்னையிப்போ இந்த ராஜ்யத்துக்கு எல்லாம் துரை என்றும் எஜமான் என்றும் அறிந்தார் களோ இல்லையோ என்று கேட்டார். அதற்கு சந்தேகமென்னயிருக்கிறது? இவனறிகிறதென்ன? இராஜ்யத்திலுள்ள ஜனங்களெல்லாம் அறிந்திருக் கச்சே இவனறிகிறதுதானா ஆச்சரியமென்று சொன்னதற்கு அது மெய்தா னிவனை நசர்விசேஷக்காக கொண்டுவரச்சொல்லென்று சொன்னார். நல்ல தென்று சொல்லிப்போட்டு வந்து சோஜிப்பண்டிதனை சாயங்காலம் ஆறு மணிக்கு வரச்சொல்லி நசர் என்ன கொண்டுவாரீரென்று கேட்டதற்கு பதி னொரு ரூபாய்கொண்டுவருகிறேனென்று சொன்னதற்கு நான் திருவீதிசீர்மை லக்ஷம் வராகன் எடுக்கிற பாகனா அமுல்தாரன் வந்து இப்படி காணலாம் அதற்குத்தக்கதாகவல்லவோ இருக்கவேண்டும். நூறு வராகன் தீர வைக்க வேண்டும். அப்படி கொண்டுவாருமென்று சொல்லி அனுப்பிப்போட்டு அப்பால் வக்கீல் சுப்பய்யனை அழைப்பித்து ஆற்காட்டுக்குப் போகச்சொல்லி அவர்-வசம் ஒப்பித்த உருவு வயணம்.

| | |
|---|---|
| இதாயத்து மொகிதீன் கான் முஜாபர் நஜருக்கு மோகரு | 21 |
| சந்தா சாயபுக்கு நஜருக்கு மொகரு | 11 |
| ஆக பொன் மொகரு | 32 |

இதாயத்து மொகிதீனுக்கு காகிதம் சந்தா சாயபுக்கு காகிதம் அக்காகிதம் இரண்டு- புதுச்சேரி கொவர்னதோருக்கு பாதுஷா நாலாயிரத்தைனூறு குதிரைக்கு மனசுபாவும் நவபோத்தும் கொடுத்ததற்கு வசீர் மர்திகான் மொகரு தஸ்துப்பட எழுதப்பட்ட பர்வானுவிக்கு நகல் 1 இந்த பர்வானு செகுர்திபிக் பாரிட்டதுக்கு பக்குசி பர்வானு அசல் 1. முசியே தொத்தேல் (**Dauteul**) காகிதம் 1. அன்வர்திகான் . இதாயத்து மொகதீன்கானை நசிபு பொஞ்சாயிக்கவேணும் குமுக்கு அனுப்பச்சொல்லி துரை பேருக்கு அனுப்பிய காகிதம் 1. மமுகதாக்சல் என் பேருக்கு துரையவர்கள் குமுக்கு அனுப்புகிறதற்கு அவருக்கு திரவியமூலமாய் அபேஷியமிருந்தால் அப்படியே செய்கிறோம்; இல்லையென்று கிருமங்களின்பேரிலே அபேஷக்கியிருந்தால் அப்படியே கொடுக்கிறோம். இதற்கு உத்திரமெழுதியனுப்பி என்னையும் வரச்சொன்னால் ரூவு ரூவாய் பேசிக்கொள்ளுகிறோமென்று எழுதின காகிதம் 1. வில்லியநல்லூர் பர்கானு சந்தாசாயபு குமாரன் ரஜாசாயபு கும்பினீருக்கு இனுமா யெழுதிக்கொடுத்த பர்வானுவுக்கு நகல் 1. ஆற்காடு தங்கள் தகப்பன் சேர்ந்த உடனே இந்த வில்லியநல்லூர் பர்கானுவுக்கு சந்தாசாயபு மோகர்பட இனுமிசன்னது வாங்கி அனுப்பிவிக்கிறோமென்று எழுதி கொடுத்த அந்தாக்ஷி சீட்டு 1 இதுகளெல்லாம் சுப்பய்யன் கையிலே கொடுத்து ஆற்காட்டுக்கு முசபர்சங்கு சந்தாசாயபு சேர்ந்த உடனே அவரவர் நதிரும் வைத்து காகிதமும் முசியே தொத்தோலேக்கெண்டு கொடுக்கச்சொல்லியும் அப்பால் சந்தா சாயபு தொத்தேல் சொற்படி கேட்டு நடப்பிக்கச்சொல்லியும் சமாசாரம் அப்போதைக்கப்போது எழுதி அனுப்பச்சொல்லியும் துரை சொன்னபடிக்கு சொல்லி அனுப்பிவித்தேன் சுவாமி என்ன நடத்துகிறரோ அறியவேண்டியது

**சுக்கில ஸு ஆடி மீ 14 உக்கு 1749 ஆ ஜுலை மீ 26 உ சனிவாரம்**

இற்றைனாள் காலையில் பிரபு அண்டைக்குப்போய் திருவீதி அமுல்தாரன் சோஜிபண்டிதன் வந்து காந்துக்கொண்டிருக்கிறனென்று சொன்னதின்பேரில் அழைப்பிக்கச் சொல்லிச்சொன்னதின்பேரிலே சேவகனை அனுப்பி அழைத்து வந்து முன்னே விட்டவிடத்திலே இவர் நூறு வராகன் நசர்வைத்தார் அப்போது நாற்காலியை போட்டு உட்காரச்சொல்லி அப்பால் முன்சாதுல்கலின் சோருகானிடத்திலே இருந்ததும் இப்போ

கொஞ்சநாளாய் கபிருந்திகானண்டையிலிருக்கிறது. முதலான சேதி துரையவர்கள் கேட்க இவர்சொல்ல அப்பாலவர்கள் சந்ததிதானே ராஜ்யத்திற்கு நபாவாக வந்தபடியினாலே உங்களுக்கு சந்தோஷமல்லவோ என்று துரையவர்கள் கேட்க அதற்கு துரையவர்களுக்கு நாங்கள் கோரிக்கொண்டிருந்தபடிக்கு சுவாமி தயவுபண்ணினாரென்று சொல்ல அதன்பேரிலே நல்லது இப்பவும் திருவீதி சீர்மையை பந்தோபஸ்து பண்ணி சாகுபடி விஸ்தாரமாய் செய்வித்து குடிகளுக்கு திலாசா பண்ணி நிர்ப்பயமாயிருக்கச் சொல்லி துரையவர்கள் சொல்ல அப்படியே என்றால் ஆனமட்டுக்கும் பிரயாசைப்பட்டு பயிரேத்திவைக்கிறேன் என்று சொல்ல அதன் பேரிலே அந்தபடிக்கி நடப்பிக்கச் சொல்லிச் சொல்ல, திருவீதி கோட்டைக்கும் பட்டணம் காற்கிறதற்கும் சிப்பாய்கள் வருகிறார்களே அவர்களுக்கு மருந்து குண்டும் கோட்டைக்கு பீரங்கிகளும் கேட்டார்கள். நல்லது பீரங்கி அங்கேயில்லையா வென்று கேட்டார் நாலு பீரங்கி இருக்கிறதென்று சொன்னார்கள். நல்லது அந்த வாயளவு பிடித்துச் சொல்லி அனுப்பினால் அதற்கு குண்டு மருந்தும் கொடுத்து அனுப்புகிறேன் இப்போது பாக்கிக்கு மூவாயிரம் கடுதாசி கொடுக்கிறோமென்று சொல்லி அந்தபடிக்கு துப்பாக்கி கிடங்குக்காரனுக்கு மூவாயிரம் கடுதாசு கொடுக்கச்சொல்லி ஒடுதினசு பண்ணி கையெழுத்துப்போட்டு கொடுந்நார். இவர்களுக்கு வெகுமானம் பண்ணுகிறதற்கு எட்டு கெஜம் சகலாத்து அனுப்பச் சொல்லி முசியே கொற்னேயிக்கு ஒரு ஓடுதனசும் அவர்கள் போவதற்கு ஒரு ஒடுதனசு வாசற்படிகாரனுக்கும் எழுதி கையெழுத்துப்போட்டு கொடுத்து நவாயித்தரிக்கச்சே இராஜ்யம் சுபிக்ஷமாய் பொன்னும் வெள்ளியும் கொடுத்து அன்வர்திகான் வந்த பிற்பாடு ராஜ்யமெல்லாம் நிர்ப்பந்தம் பண்ணிப்போட்டார்களென்று இது முதலான பேச்சு பேசியிருந்து அப்பால் பர்காணுவுக்கும் போகச்சொல்லி சோஜி பண்டிதருக்கு பாக்கு, வெற்றிலை பன்னிரெண்டு கெஜம் சகலாத்தும் கொடுத்தார்.

அவர் பிறகே வந்த ரங்கோபண்டிதருக்கு இரண்டு கெஜம் சகலாத்தும் பரசுராமபிள்ளை, வடமலை அய்யன் முதலான நாலுபேருக்கும் பாக்கு வெத்திலை பன்னீர் கொடுத்து பேருக்கு இரண்டிரண்டு, கஜம் சகலாத்து கொடுத்துப்போகச் சொன்னார். அவர்களும் அனுப்பிவித்துக்கொண்டு வந்தார்கள் சாயங்காலம் ஊருக்குப்போகிறோமென்று சொல்லிப்போட்டு விடுதியே போனார்கள் நானும் பாக்கு கிடங்கு வந்தேன்.

ஆற்காடு சேர்ந்தோமென்று முசியே தொத்தேல் **(d'autteuil)** காகிதமெழுதினதாய் துரை சொன்னார்.

இந்தனுள் சாயங்காலம் துரையவர்களழைப்பித்து ஆற்காட்டிலே யிருந்து முசியே தொத்தேல் காகிதமெழுதினதிலே தாங்களார்க்காடு சேர்ந் தோமென்றும் அன்வர்திகான் தெற்கே பதினெட்டு மணி நேரம் தூரத் திலே இருக்கிறார்களென்றும் வடக்கே சந்தா சாயபும் இதாயத்து மொக தீன் கானும் பதினெட்டு மணி நேரம் தூரத்திலே இருக்கிறார்களென்றும் யெழுதினானேயல்லாமல் இன்னவூர் இன்னவிடமென்று ஒரு வயணமும் கண்டெழுதவில்லை இவர்கள் என்ன மனுஷாள் என்று சொன்னார். அதற்கு நான் தெற்கே செங்கமாவந்து ஆறுகாத வழியிலே யிருக்கிறது அங்கே அன்வர்திகானிருக்கிறான் சகதேவு வாணம்பாடியண்டையிலே யிருக்கிறான் அது ஆற்காட்டுக்கு ஆறுகாதவழி அந்தக் கணக்குப்படி பார்க்க பதினெட்டு மணி தூரம் சரிதான் இவர்களும் அங்கே புறப்பட்டுவர என்ன யோசனையை குறித்து தாமதமாயிருக்கிறார்களோ தெரியாது. வரவேண்டுமானால் நித்தமும் காதவழி வந்தாலும் இந்த மட்டுக்கும் வந்து சேர்ந்து போகவேண்டும். அது வும் இரண்டு மூன்று நாளையிலே சவிஸ்தாரமாய் சேதி வரப்போகிறதென்று சொன்னதற்கு உன்மனதிற்கேற்க எப்படியிருக்கிறது ஜாடையென்று கேட் டார் வருகிற ஜாடை ஆற்காட்டுக்கு சமீபத்திலே வந்தவர்கள் இனி நிற் கிறார்களாவென்று சொன்னதின்பேரிலே நல்லது வீட்டுக்குப் போவென்று சொன்னார்.

அப்பால் தோஸ்து மகம்மது வந்து அம்மாள் சோஜிபண்டிதனிருந்தால் அவர் பிறகே தயினாத்து இருக்கிற சிப்பாய்கள் முப்பது பேரிலே பத்து பேர் மாத்திரம் உம்மை கேட்டு அழைத்துவர சொன்னாரென்று சொன் னான். அந்தபடிக்கு அவர் தயினாக்கு சிப்பாய்களிலே பத்து பேரை அழைப்பித்து கூட்டிவிடச்சே என்ன காரிய நிமித்தமென்று கேட்டதற்கு தெரியாது, இருபது முப்பது சேவுகர்களையும் துப்பாக்கி எடுத்துக் கொண்டு வரச்சொன்னான். காரியமெனக்கு தெரியாதென்று சொன்னான். நல்லது இந்த சிப்பாய்கள் மறுபடி சோஜி பண்டிதர் பிறகே போகவேண்டும் என்றும் கேட்டதற்கு அவர்கள்: ஆறரை ஏழு மணியல்லவோ செல்லும் போகிறதற்கு இதற்குள்ளே வந்துவிடுவோம் என்று சொன்னதின்பேரில் நல்லது போவென்று அவனை அனுப்பிவிட்டு எட்டு மணி வேலையாச்சுது. இனிமேல் போய் பொழுது விடிகிறதற்கு முன்னே வருவது சமீபவூர் வில்லியனூர் ஆகவேணுமென்றி சிவனாக ரெட்டியைப் பிடித்து வரப்போக வேணும். இல்லாவிட்டால் அமுல் பண்ணுகிற லாலாவைப் பிடித்துவர போகவேணுமென்று யோசனை பண்ணினேன் அதென்னத்தினால் சிவனாக ரெட்டியாகிலும் லாலாவாகிலும் என்று தோற்றினதென்றால் ஒதியம்பட்டு ராமு ரெட்டி என்கிறவன் சாயங்காலம் வில்லியநல்லூரிலிருந்து வந்து மதார் துப்ளேக்சுடனே பேசியிருந்து பெரியண்ண முதலி வீட்டிலே

போயிருக்கிறான் என்று கபுறு கேட்டிருந்தபடியினாலே இப்படி யோசனை பண்ணினேன். எல்லாம் பொழுதுவிடிஞ்சு எட்டுமணிக்குள்ளே தெரியு தென்று யோசனை பண்ணிக்கொண்டு வீட்டுக்கு வந்தேன். துரை பெண் ஜாதி வழியிலே நடத்துகிற காரியம் நாளது வரைக்கும் ஒரு காரியம் சபலமில்லாமலும் அந்த காரியம் கெட்டுப்போகிறதல்லாமல் அபகீர்த்தி முதலென்ன வந்தாலும் தோத்தாமல் மறுபடி நடத்துகிறது பட்டணம் பண்ணப் பாவமோ? அல்லது ஜனங்கள் பண்ண பாவமோ? யார் பண்ணப் பாவமோ நானறியேன்.

**சுக்கில ஞூ ஆடி மீ 15 உக்கு 1749 ஆ ஜூலை மீ 27 உ ஆதிவாரம்**

இற்றைனாள் காலையிலே துரையண்டைக்கு போனவிடத்திலே துரை யவர்கள் இதாயித்து மொகதீன்கான் முதலானவர்கள் எங்கே இருக்கிறார்க ளென்று கேட்டதற்கு பள்ளிக்கொண்டான் சாத்துக்கடை இந்த பிராந் தியங்களிலே வந்திருக்கவேணுமென்று சொன்னதின் பேரிலே கிருஷ்ண நதிமுதற்கொண்டு கன்னியகுமரி மட்டுக்கும் எழுதியிருக்கிற பூகோள காகிதத்தை யெடுத்து அந்தந்த கோட்டை தளங்களிடமெல்லாம் பார்த் துக்கொண்டுவந்து சேத்துப்பட்டு செங்கற்பட்டு சாத்துக்கடை முத லான கோட்டை தாளங்கள் எழுத மறந்துப்போனார்கள். கிட்ட இருக் கிறதை தூர எழுதி தூர இருக்கிறதை கிட்டயெழுதி இப்படி செவ் வையா யெழுதாமல் போனார்களென்று சொன்னார் இது சம்பவுனுகோவில் பாதிரிகள் போடுவித்தது அவர்கள் திட்டமாய் சோதித்து எழுதுகிறவானே, அவர்கள்தானே வெகு கெட்டித்தனம் விட்டுவிட்டார்கள் நாமறிந்து இவ் வளவு விட்டால் நாமறியாது யெத்தனை இருக்கிறதோ தெரியாதென்று சொன்னதற்கு மெய்தான் வந்தவாசி கோட்டை மலை அதுகூட எழுதவில்லை என்று சொன்னார். காண்டிகோட்டைக்கு அடுத்தாப்போலே வடப்பெண்ணை யோரம் சித்தவட்டமென்று இருக்கிறது அதுவுமெழுதப்படவில்லை என்று சொல்லியிப்போ நீங்கள் இப்படி உண்டாக்கவேணுமானால் இந்த காகிதத் தைக்கூட வைத்துக்கொண்டு பின்னையுமதுகளிலேயில்லாததும் பின்னையு மெந்தந்த சாடையாய் பார்த்தாப்போலே இத்தனை காகிதமென்கிற ஜாடை கூடத்தெரிய போடலாமென்று சொன்னதற்கு மெய்தானப்படி ஒன்று உண் டாக்கும்வாமென்று பின்னையும் அன்வர்திகான் சிங்கரி கன்னமையிலே இருக் கிறது முதலான சேதிகள் பேசியிருந்து அப்பால் பாக்குகிடங்குக்கு வந்தேன்.

அப்பால் இரண்டுமணிக்கு நேற்று இராத்திரி சிப்பாய்களும் சேவகர் களும் வில்லியநல்லூர் அமுல் பண்ணிகொண்டிருந்த லாலா என்கிற வன் சிவனுகை ரெட்டி முதலானபேர் எல்லாரும் இருக்கிறார்கள் என்று முன்னனென்கிறவன் மதாம் துப்ளேக்சுக்கு வேவுகாரனுயிருந்து தப்பும்

தாரும் சொல்லிக்கொண்டு திரியும் திருட்டுப்பயல் வந்து மதாம் துப்ளேக்சுடனே சொன்னதின் பேரில் லாலா சிவனுகரெட்டி முத லானபேரைப் பிடித்து வரச்சொல்லி அனுப்பின மதாம் துப்ளேக்சு னுடைய உத்தாரபடிக்கு இராத்திரி பனிரெண்டு மணிக்கு கெவுனிவாசல் திறந்துகொண்டு ஒளிகளவாய் ஒருத்தருக்கும் தெரியாமல் இவர்கள் போனவிடத்திலே ரெட்டிகளென்கிறபேர் ஒருத்தருமில்லை. லாலாமாத்திரம் ஓடிப்போய்விட்டானென்று. ஏழெட்டு கணக்குச் சுருளையும் மகாரஷாம் பார்ஸீ கணக்கு தஸ்திரங்களும் எடுத்துக்கொண்டு நாட்டு கணக்கு புவனுத பிள்ளை தம்பி முத்தய்யப்பிள்ளை என்கிறவனையும் சிவனுகரெட்டி குமஸ்தா அய்யாப்பிள்ளையையும் பிடித்துக்கொண்டு நாட்டு கணக்குப்பிள்ளை பேர் விளங்கள் ஒருத்தன் இவர்கள் குதிரைகள் இரண்டு பிடித்துக்கொண்டு வந் தார்கள் அந்த சேதி மதாம் துப்பிளேக்சுடனே சொன்னதற்கு மதாம் துப்ளேக்சு தன் புருஷனுக்கு என்ன மாருபாடாய் சொன்னுளோ அதன் பேரிலே என்னை அழைப்பித்து அந்த லாலா மோசம் பண்ணி ஓடிப்போய் விட்டான். அந்தக் கணக்குகளெல்லாம் எடுத்துக்கொண்டு வந்தார்கள். ஆனிவரைக்கும் கணக்குக்கு ஒரு வருஷம் சரியே. இப்போ இந்த வருஷம் இந்த ஜூலை மாதம் முதல் கொண்டல்லவா இதன் பிற்பாடு என்ன தஸ்து பண்ணியிருக்கிறுர்களோ அந்தப் பணம் நம்மைச்சேரவேண்டியதாமே அந்த பணமும் இப்போ அறுப்பதற்கு முஸ்தீதாயிருக்கிற மாசூல் பலனிலே ஆகப்போகிற பணமும் நம்மைச்சேரவேணுமே இதுகளெல்லாம் மனுஷர் களை வைத்து பத்திரம் பண்ணிக்கொண்டு எப்படி தஸ்து பண்ணவேணுமோ அப்படி பார்க்கச்சொல்லியும் வில்லியனல்லூர் முதலான கிராமங்களெல் லாம் தோறணங்கட்ட சொல்லியும் கிராமந்துக்கு ஒரு சின்ன கொடி வீழ்க் காடு நாற்பது கிராமத்துக்கும் நாற்பது கொடிகட்டச்சொல்லியும் உத்தாரம் கொடுத்து அவரவர் சுகமாய் பயிரிட்டு உண்டான வாரமாவது அடமான மாய் வேணுமானுலும் அடமானமாவது புஞ்சைக்குத்தீர்வை இந்தபடி கவில் கொடுக்கிறோம் கவிலே கூட்டி கட்டிக்கொண்டு நிச்சிந்தையாய் சுகமாய் பயிரிடச்சொல்லியும் இந்தப் பிரகாரம் கிராமம் கிராமத்துக்கு தமுக்குப் போடச்சொன்னுர். அந்தபடிக்கு செய்கிறேனென்று பாக்கு கிடங்கு வந்து மங்காப்பிள்ளையை யழைப்பித்து மேலே துரையவர்கள் உத்தாரமெழுதியிருக் கிறபடிக்கு அவருக்குச்சொல்லி பாக்கு வெற்றிலையும் சகலாத்து வெகுமானம் கொடுத்து, முன்னுலே முஸ்தீது பண்ணச் சொன்ன 40 கொடியும் கொடுத்து சேவுகரையும் கூட்டி அனுப்பிவித்துப்போட்டு நானும் சாப்பாட்டு வேளையான படியினுலே வீட்டுக்குப் போனேன்.

அப்பால் மூன்றுமணிக்கு துரையவர்களழைக்கிறுர்களென்று சேவகன் வந்து அழைத்தான் நான் துரைவீட்டுகுப் போகச்சே மதனுந்த பண்டித

த்தண்டைக்கு ஒரு சேவகன் போய் அவரையும் அழைத்துவந்தான் நாங்க ளிரண்டு பேரும் துரைபண்டைக்குப் போனவிடத்திலே துரை பெண்சாதி அண்டையிலே மடுக்கரை ராமு செட்டி என்கிறவன் வந்து பேசயிருந்து அவன் மதாம் காம்பிராவிலேயிருந்து புறப்பட்டான். அய்யாபிள்ளையும் நாட்டுக் கணக்கு முத்தபிள்ளை என்கிறவனும் கூடவந்தார்கள். தெலுங்கிலே ஒரு கவிலெழுதி பாரிசி மோகரு பண்ணிக்கொண்டுவாவென்று சொன்ன ரந்தபடிக்கே அங்கேதானே யெழுதி மோகருபண்ணிக் கொடுத்தோம். கொடுத்த உடனே தாமதிலே கையெழுத்துப் போட்டு அந்த கவிலும் இரண்டு கஜம் சகலாத்தும் ராமு செட்டிக்கு கொடுத்தார் அய்யாபிள்ளைக் கும் முத்தப்பிள்ளைக்கும் இரண்டுபேருக்கும் இரண்டுபாகை பதினெட்டு பணம் பெறும். அது கொடுத்து உடனே வில்லியநல்லூர் கோயில் நடப்பிக்க வேணும் அதற்கு திருக்காஞ்சி என்று ஒரு கிருமம் நடக்கிறது. அதுவும் நடப்பிக்க வேணுமென்றும் துலுக்கர்கள் கவிலாசாரம் நடப்பியாமல் இறகு த்டிச்சி கிற்துளிப் பண்ணிப்போட்டார்கள். உங்களுக்கு ஆனபடியினாலே சுகமாய் கவில்படிக்கு நடந்துக்கொண்டு சுகமாயிருப்போமென்று வாடிக்கை உபசார பேச்சு சொன்னார். அது துரை அவர்களும் அதற்கெல்லாம் யோசனைப் பண்ணதேவையில்லை என்று சொன்னதின் பேரிலே கவிலும் பாக்கு வெற்றிலையும் வெகுமானமும் வாங்கிக்கொண்டு புறப்படச்சே பிறகு தம்பிற்று அப்பால் என்னண்டைக்கு பாக்குகிடங்குக்கு வந்து உட்கார்ந்து கிராமங்களை பேச்சு பேசச்சே புது கெவுளி சொல்லிற்று; என்ன துரை பெண்சாதி அண்டையிலே போய் பேச போகச்சேயும் இரண்டு மூன்று தரம் புது கெவுளி சொல்லிற்று. இங்கே வந்து உட்கார்ந்து கிராமங்கள் பேச்சு சொல்லச்சேயும் இரண்டு மூன்று தரம் புது கவுளி சொல்லிற்று. இன்றைக்கு இந்த பேச்சு பேச துவக்கப்போகிற போதெல்லாம் புது கெவு ளியே சொல்லுகிறது. என்னமாய் நடக்க இருக்கிறதோ என்று சொல்லச்சே மறுபடியும் புது கெவுளி சொல்லிற்று. அதன் பேரிலே நல்லது இராத்திரி வீட்டுக்கு வந்து உங்கள் கையிலனுப்பிவித்துக் கொண்டு போரோமென்று போட்டுப்போனான். இதிலே மதாம் துப்ளேக்சுனுடைய பத்துப்பதினைந்து சேவுகரையும், மதுரை நாகமென்கிறவனையும் வில்லியநல்லூரிலேயே கொடி மரத்தண்டைபோயிருந்து சமாசாரம் நடக்கிறதெல்லாம் எழுதியனுப்பி விக்கச்சொல்லி சொல்லியனுப்பினானென்று கபுறு வந்து சொன்னார்கள். மெத்த நல்லதாயிற்று. இந்த மட்டுக்கும் நடந்ததிலே இதுவும் ஒன்றிறன்று எண்ணிக்கொண்டு கிரக்கெதியை தூரவேண்டியதே யொழிய ஒருவரையும் நோவ கவையில்லை என்று யோசனை பண்ணிக்கொண்டு சும்மாயிருந்தேன். இனிமேல் என்ன நடக்கிறதோ அறிய வேண்டியது.

வில்லியநல்லூர் கோவில் பேச்சும், திருக்காஞ்சிபேச்சும் நடக்கச்சே நான் சேதராபுட்டென்று ஒரு கிராமம் இருநூற்று எழுபது பொன் ஆக

முப்பது வருஷமாய் எங்கள் அக்கிராமத்துக்கு நடக்குது என்று சொன்ன தற்கு நல்லது உன் காரியத்திற்கு என்ன என்று சொன்னார். அது அங்கே யெழுத மறந்துப்போனபடியினால் இங்கே எழுதினேன்.

**சுக்கில ஸு ஆடி மீ 16 உக்கு 1749 ஆ ஜூலை மீ 28 உ சோமவாரம்**

இற்றைநாள் காலையில் கம்பினிவர்த்தகர்கள் புடவை பார்வையானபடி யினாலே கோட்டைக்கு பார்வைக்குப் போயங்கே இருந்து காரிக்கமும், லேங்கிசு, கம்பாய் முதலானதுகள் பார்த்து காரிக்கம் சலவைக்குவிட்டு லேங்கிசு கம்பாய் முதலானது கட்டுப்போட்டான் பிற்பாடு முசியே கில்லியா ரண்டைக்குப்போய் (**Guilliard**) கண்டுபேசி அப்பால் துரையண்டைக்குப் போய் கோட்டையிலே காரிக்கன் பார்வையிட்டு சலவைக்கு விட்டதும் கிண்டனும் லேங்கிசு முதலானது கட்டுப்போட்ட கபுறு சொல்லிப்போட்டு அப்பால் சந்தா சாயபு இன்று ஆற்காடு வந்து சேரவில்லை என்கிற பிறஸ் தாபமும் சந்தா சாயபு குமாரன் அப்துலாயிமான், முசியே தொத்தேல் (**Dautaul**) முதலான பேர் ஆர்க்காட்டிலே றமணுவென்று ஆற்காட்டிலே மானசிகானி பாக்கிறயிடம் பங்களாகட்டி ஏரியும் அதை சுத்தி தோட்ட மும் வசதியாயிருக்குமாம்; அங்கே போயிறங்கி இருக்கிற சேதி முதலா னது பேசியிருந்து அப்பால் நேற்று வில்லியனூர் முதலான கிராமங்கள் தோரணங்கள் வைக்கப்போனவர்கள் தோரணம் வைத்து கொடிகட்டின சேதி முதலான கபுறு சொல்லி அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இந்தநாள் சிறிது ரெட்டிகள் வந்து மநாம் துப்ளேக்சைக் கண்டு பேசிப்பேசினார்கள். அவர்களாரென்றால் சறுவாரெட்டி, புவனுதப்பிள்ளை என்னண்டைக்கு வந்து கண்டுபேசி விடுதிக்கு திரும்பினார்கள்.

**சுக்கில ஸு ஆடி மீ 17 உக்கு 1749 ஆ ஜூலை மீ 29 உ அங்காரகவாரம்**

இற்றைநாள் காலையிலே துரையவர்கள் வீட்டுக்கு வந்தவிடத்திலே கேள்விப்பட்ட சேதி என்னவென்றால்: மயிலாப்பூரிலிருந்த அமுல்தாரனை பாதிரி அந்தோனி புரிபிக்சாமென்கிறவன் (**Antoine de la Aurification**) ருசா சாயபு கையில் சபித்தி பரமாணுவாங்கிகொண்டு போனவன் பழைய அமுல்தாரனை பிடிக்கிறதற்கு சென்னபட்டணத்து துரையவர்கள் ஓடுதியைக் கொடுத்தனுப்பிவித்து நூறு சொல்தாதுகளையும் சேவுகர்களையு மழைப்பித்து பழைய அமுல்தாரனை போய் பிடித்து அவர் வீடுவாசல் தட்டுமுட்டு மஸ்தம கொள்ளையிட்டுக்கொண்டு அரமனை பணங்காசுக ளிருந்ததையும் எடுத்துக்கொண்டு அவனையும் பின் கட்டாக்கட்டி சிப்பாய்

ஜன் காலத்திரண்டு பேர்களையும் சேவகர்களையும் கூடகூட்டி அனுப்பிவிக்க அவர்கள் வந்து திருவேங்கடம் பிள்ளைச்சாவடி சேருகிறார்களென்று துரைக்கு தபால் சேவகர்கள் வந்து சொன்னபடியினாலே துரையவர்கள் தோஸ்து மகம்மது என்கிற சோனக பையலை அழைத்து அந்த மயிலாப்பூர் முலதாரன் வருகிறானும்; அவனை திருவேங்கடப்பிள்ளை சாவடியிலேயிருந்தாப் போலே அப்படித்தானே இன்னம் பத்து சேவகரைக் கூட்டி அனுப்பச் சொல்லி உத்தாரம் கொடுத்ததாய் தோஸ்து மகம்மது சொன்னான்.

மற்றப்படி சந்தா சாயபு பள்ளி கொண்டையிலே வந்து சேர்ந்ததாய் ஊர்ஜித கபுறாய் நான் கேள்விப்பட்டு துரையவர்களுக்குச் சொன்னேன் அதற்கு துரையவர்கள் முசியே தொத்தேல் காகிதம் நித்தம் வருகிறது இந்த சேதி எழுதிவரவில்லை. படிகாறு சின்னவிடமென்று ஏற்பட எழுதுகிறதில்லை. தங்கள் ஆற்காடு சந்தா சாயபுக்கு எதிர்க்கப்பாரேனென்று எழுதினனே யல்லாமல் மற்றபடி பின்னை ஒரு சாடையுமெழுத வில்லை என்று சொல்லி அன்வர்திகான் சிங்கரிபேட்டு கண்ணமயிலை தானேயிருக்கிறானா? என்று கேட்டார்.

சுக்கில ஸ்ரீ ஆவணி மீ 23 உக்கு 1749 ஆ செப்டம்பர் மீ 4 ௳ குருவாரம்

இற்றைநாள் காலையில் துரையவர்கள் அழைத்தனுப்பிவைத்து சந்தா சாயபு காகிதமொன்றும் சேக் அப்துலாயிமான் காகிதமொன்றும் கொடுத்து இது தபாலில் வந்தது இந்த காகிதத்திலென்ன எழுதியிருக்கிறதென்று பார்த்துச்சொல்லென்று சொன்னார். சந்தாசாயபு காகிதத்திலெழுதியிருந்த வயணம் தாங்கள் சேத்துபட்டுக்கு முன்னூறு பேர் வெள்ளைக்காரரையும் முசியே துக்கேன் (Duquene) முசியே லத்தூர் (Latour) இரண்டு பேர் சர்தார்களையும் கூட்டி இரண்டு மொடுத்திபே எட்டு புல்காது இருக்கிறது. ஆறு ராத்தல் குண்டோடு பீரங்கி இரண்டும், பன்னிரண்டு ராத்தல் குண்டோடுகிற பீரங்கி இரண்டும் அத்துடனே கூட அதற்கடுத்த மருந்து குண்டுகள் சகல சாமானும் அனுப்பிவித்தோமென்று எழுதினீர்கள். மிகுதியும் சந்தோஷமாச்சுது. இதல்லாமல் சேத்துபட்டின் பேரிலே சேக்கு அசேன் ஆயிரம் சிப்பாய்களுடனேயும் ஆயிரம் சுவர்கள் போயிருக்கிறவர்களும் எனக்கெழுதியனுப்பினார்களானால் சேக்கு முகமது சரீபு என்கிறவன் மாரிபத்தில் பேச்சுவார்த்தை பேசி சமாதான வார்த்தை நடக்கிறதே ஆனபடியினாலே அந்தபடிக்கு சமாதானமாய் போம்போலே இருக்கிறது. போனாலுத்தமமாச்சுது. சமாதானத்துக்கு வராமல் போனால் தங்கள் மத்தத்து இருக்கச்சே ஒரு நாழிகையிலே கோட்டை வாங்கி தீர்த்துபோகிறதென்றும் தங்கள் மத்தத்து இருக்கச்சே சாத்தியத்திற்கு

வராததொன்றில்லை. அந்த பயம் கிளேதார்சுபேதார் முதலான பேர் மனத்திலே எழுதியிருக்கிறபடியினாலே சாத்தியத்துக்கு வராததொன்றுண்டா? நபாபு இதாயத்து மொகதீன்கான் நம்முடைய வளவுக்கு வந்தார். அவருக்கு சந்தோஷமாக வெகுமதி பண்ணியனுப்பிவைத்தேன் என்றும் நாமும் நபாபு இதாயத்து மொகதீன்கான் சாயபு அவர்களும் இன்று நாளையதினம் இவ்விடம் விட்டு அவ்விடம் வரப் பயணம் புறப்படுகிறோமென்றும் அங்கே வந்து தங்களை கண்டு பேசி அதனாலே அடையவேண்டிய சந்தோஷம் மாத்திரம் தவிர மற்ற சந்தோஷமெல்லாம் அடைந்தேன். அந்த சந்தோஷமும் இன்றையதினம் நாளையதினம் புறப்பட்டு அங்கேவந்து தங்களை தரிசனம் பண்ணி அந்த சந்தோஷமடைகிறேனென்று யெழுதியிருந்த சேதியை துரையவர்களுக்குச் சொன்னேன் அப்பால் முசர்கன் எழுதின காகிதசேதி என்னவென்றால்: முன் இவரிடத்திலிருந்து முன்வர்திகான் முதலானபேரை முசியே தொத்தேல் (d'auteuil) வசம் ஒப்பிக்கச் சொல்லியும் சொல்ாதுகள், ஒபிசியேல் மார்களுக்கு விசேஷித்து கொடுத்து அவர்கள் மனது சந்தோஷம் பண்ணச்சொல்லியும் முசியே தொத்தேலுக்கு (Dauteuil) கிராமம் கொடுத்தால் அவர் என்னசெய்யப் போறார்? அதற்கு பதிலாய் ஒரு துகை வீரர்களுக்கு கொடுக்கச்சொல்லியும் மீதி முதலாகிய முன் எழுதிப்போன சேதிக்கு பதிலுந்தரவு எழுதிவந்ததல்லாமல் அதிலே அதினமாய் யெழுதியிருந்ததென்னவென்றால்: சந்தா சாயபு வீட்டுக்கு இதாயத்து மொகதின்கானும் அவர் குமாரனும் வந்தநற்கு சந்தா சாயபு அவருக்கும் அவர் குமாரனுக்கும் வெகுமானம் பண்ணதென்னவென்றால்: நாலு ரத்தின நகை ஏழாயிரம் விராகனும் புடவை சீலை இரண்டாயிரம் மூவாயிரம் பெற்றதும் கொடுத்தனுப்பினார்களென்றும் அப்பால் சந்தா சாயபு இதாயத்து மொகதீன்கானண்டைக்கு போனபோது சந்தா சாயபுக்கும், மாபூசுகானுக்கும் ஒருத்தருக்கொருத்தர் கட்டிக்கொள்ள செய்வித்து இவர் கை பாக்குவெற்றிலை அவருக்கும் அவர் கை பாக்கு வெற்றிலை கொடுப்பித்து ஒருத்தருக்கொருத்தர் சமாதானமாயிருக்கச் சொல்லி இதாயத்து மொகதீன்கான் நடப்பித்து அவரவரை அனுப்புவித்ததாயும் முசியே தொத்தேலுக்கு (Dauteul) இதாயத்து மொகதீன்கான் விருந்து பண்ணுவித்து, ஒரு சீரோப்பும் ஒரு குதிரையும் கொடுத்து மற்ற ஒபிசியார்மாருக்கெல்லாம் ஒவ்வொரு சிரோப்பாவும் கொடுத்ததாயும் அந்த சீரோப்பா முப்பது நாற்பது ரூபாய் பொருமென்றும் குதிரை நூறு ரூபாய் பொருமென்றும் அந்த சீரோப்பாவுக்கும் குதிரையும் முசியே தொத்தேல் (Dauteul) மறுபடி அனுப்பிவிடுகிறோமென்றதாயும் அதன் பேரிலே சந்தா சாயபு முசியே லாசை (Law) அழைப்பித்து பெரிய மனுஷர் கொடுக்கிற வெகுமானமெல்லாம் விலை உயர்ந்திருக்குமோ?

அது பிரதிஷ்டார்த்தமேயல்லாமல் ஆதாயமிருக்கிறதா? எனக்கு கொடுத்த வெகுமானத்தைப் பாருங்கோளென்று தமக்கு கொடுத்த சிரோப்பாவைக் கொண்டுவந்துக் காண்பித்து சமாதானம் பண்ணிப் போகச்சொல்லி அனுப்பினதின் பேரிலே முசியே லாசு வந்து (Law) முசியே தொத் தேலுக்கு (d'auteuil) தெரியப்பட சொன்னதின் பேரிலே முசியே தோத்தேல் (d'auteuil) சம்மதித்து சும்மாயிருந்தானென்று இது முதலான சேதி எழுதிவந்ததையும் துரையவர்களுக்குச் சொல்லி சந்தா சாயபு இந்த துலுக்கர் மீ 22 உ ஆற்காடு விட்டு புறப்பட்டு புதுச்சேரிக்கு வருவதா யிருக்கிறனென்று யெழுதியிருந்த சேதியும் சொன்னவிடத்திலே மெத்தவும் நல்லதாச்சுது என்று சொல்லி சேத்துப்பட்டின் பேரிலே போயிறங்கியிருக்கிற வெள்ளைக்கார பவுன்சும் துலுக்கர் பவுன்சும் இறங்கியிருக்கிறதாயென்றும் சேக்கு முகம்மது சரிப் என்பவன் சந்தானு பேசுகிறுன் உடன்படிக்கையினுலாச்சுது இல்லாவிட்டால் கோட்டை ஒரு நாழிகையிலே வாங்கிப்போடுகிறேமென்று முன் எழுதிவந்த சாடையைப் பிடித்து சேக்கு முகம்மது சரீபுக்கு துரையவர்கள் ஒரு காயிதமெழுதச்சொன்ன வயணமென்னவென்றுல் நீர் மீர்சாயபுக்கும் சந்தா சாயபுக்கும் சந்தி பேசுகிறீரே சந்தி பொசுங்கினுப்போலே வருகிற பணத்தில் முன்னே சிப்பாய்க்கு உண்டான சம்பளத்தைக் கொடுத்து தீர்த்துப்போடச்சொல்லவும் சந்திபேசிவாங்கினதுடனே இங்கேயிருந்து முசியே துகோன் (Duquesne) முசியே லத்தூர் De Latour) என்னுமிரண்டு சார்தார்களும் முன்னூறு சொல்தாதுகளும் சேத்துபட்டு பேரிலே சண்டைக்குப்போய் இறங்கியிருக்கிறவர்கள் செலவு பதினுயிரம் ரூபாய் கூடவாங்கச்சொல்லியும் எழுதச்சொல்ல அந்தபடிக்கே செக்கு அசனுக்கு ஒரு காகிதமெழுதச்சொன்னுர் அந்தபடிகசு காகிதங்களெழுதி துரையவர்கள் கையிலே கொடுத்தேனவர் முசியே துகோனுக்கும் (Duquesne) முசியே லத்தூருக்கும் (De Latour) எழுதின காகிதத்துடனே சேத்துப்பட்டுக்கு தபாலிலே அனுப்பிவிக்கச் சொல்லி முசியே பெருதிராகையிலே ( Bertrand ) கொடுத்தார்.

அப்பால் கும்பினி வர்த்தகர் வந்து பணங்கேட்டார்கள். சீக்கிறமத்துக்கு புடவை ஆழைப்பிக்கச்சொல்லி அப்பாலிருக்கிற பணத்தைப்பார்த்துக் கொண்டு இவ்வளவுகொடுக்கச்சொல்லி ஒருதினுஸ் பண்ணி நாளை பணம் கொடுக்கச் சொல்லுகிறேனென்று சொல்லி கைக்களவர், சேடர், சேணியர் முதலான நெசவு வர்த்தகரை அழைப்பியுங்கள் வில்லியநல்லூர் ஆறுதோப்பு வசதியுண்டான இடமானபடியினுலே அவ்விடத்திலே வந்து வீடு கட்டுகிற நெசவுக்காரருக்கு தலைக்கு பவ்வத்து விராகன் கொடுக்கிறேம். அந்த பவ்வத்து விராகனுக்கும் அவர்கள் வீடு வாசல் கட்டிக்கொண்டு தரிகள் போட்டு நெய்கிறது அவர்களுக்கு வரங்காமல் வியாபாரம் கொடுத்து அனுப்

புகிறது. அவர்கள் வியாபாரம் தாக்ஷியில்லாமல் நெய்து கொடுத்துக்கொண்டு வாங்கின தரி ஒன்றுக்கு பவ்வத்து விராகனிலே வருஷம் ஒன்றுக்கு ஒவ்வொரு விராகன்படி கொடுக்கிறது இல்லாமல் இரண்டு வருஷகாலம் அங்கே குடியிருக்கிறவர்களுக்கு வருகிற நூல், பஞ்சு முதலான சரக்குகளுக்கு தீர்வையில்லாமல் மாப்பு பண்ணி கவில்கொடுக்கிறதாகவும் திட்டம் பண்ணி ரங்கப்பனுடனே நேற்றியதினம்சொன்னேன். இன்றைக்கு உங்களுடனேயும் சொல்லுகிறேன் இந்தபடிக்கு அவரவர்க்கு சொல்லி நெசவுகாரரை அழைப்பிக்கவேணுமென்று சொன்னதற்கு வர்த்தகர் சொன்னது, ரங்கனும் நீங்களும் இந்தபடிக்கு தயவுபண்ணி உத்தாரம் கொடுத்தீர்களென்று நேத்து ராத்திரி எங்களுடனே சொல்லி உடையார்பாளையம் சென்னப்பனுய்க்கர் பாளையம் காஞ்சிபுரம் முதலான நெசவுக்காரருக்கு எழுதியனுப்பிவித்து அழைப்பிக்கிறோம். இந்த சேதி கேட்டால் வெகுபேர் வருவார்கள் சென்னப்பட்டணத்திலே சிந்தாதிரிபேட்டையிலே எப்படி நாலு திணுசும் நெய்கிறவர்களும் வந்து சேர்ந்தார்களோ அப்படி பத்து பங்கு வந்து சேர்ந்தார்களென்று சொன்னார்கள் வர்த்தகரெல்லோரும் விடுகட்டுகிறோமென்று சொன்னதற்கு அப்படியே கட்டுங்கள் நாளொருநாளைக்கு பார்க்கப் போகிறேன் அப்போ நீங்களும் கூட வாருங்கள் நீங்களும் நாங்களும் கூட சாப்பிட்டு வேடிக்கையாய் வருவோம். அன்றைக்கு மனைகள் பார்த்து உத்தாரமே கொடுக்கிறோமென்று சொல்ல அதுக்கு சாப்பிடுகிறதும் சரீரத்திலிருக்கிற ரத்தம்கூட உங்கள் சாப்பாடு சாப்பிட்டு ஊரினதாச்சுதே என்று உபசாரமெப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாஞ் சொல்லி உங்களுடைய நாளையிலே நீங்கள் நிஜாமிடமாயிருந்து ஆற்காடு முதலான சுபாவைக்க உண்டானமட்டுக்கும் நாங்களு முங்கள் வர்த்தகரானபடியினால் அப்படி ஒசரவே ஒசந்தபாக்கியத்தை அனுபவிக்கப் போகிறோமென்று சொன்னபிற்பாடு காளத்தீஸ்வரன் கோயில் பெருமாள் கோயில் பூசை புனஸ்காரமல்லாதிருக்கிறது. சண்டையினாலே குண்டுகள் விழுந்ததை தொட்டு என்று சொன்னதுக்கு நீங்கள் என்ன என்ன செய்துக்கொள்ள வேணுமே அப்படி செய்துக்கொள்ளச் சொல்லி உத்தாரம் கொடுத்து வில்லியநல்லூர் கோவிலேயும் விழுந்துபோயிருக்கிற சுத்துமதில்களையும் கட்டுவிக்கிறோம். வெள்ளைக்காரர் முதலான கிருஸ்தவர்கள் போகாதபடிக்கு அங்கேயிருக்கிற அமுல்தாருக்குத் தாக்கீதுபண்ணினோமென்று பின்னையும் இதுகளுடனே சேர்ந்தப்பேச்சுகள் கோவில் குண்டுகள் விழுந்தவிடமெல்லாம் கட்டிக்கொள்ளச்சொல்லி மெத்த உற்சாகத்துடனே துரையவர்கள் சொன்ன உத்திரமெல்லாம் எழுதவேணுமானால் நாலு காகிதங்கள் செல்லும் கோயில்கள் பேச்சுக்கு வர்த்தகர்கள் கேட்டதற்கு இத்தனை திலாசாக சொன்னது காலானு குணமாய் உத்தரம் சொன்னதாக எண்ணிக்கொண்டேன். வர்த்

தகர் வண்ணாரதுறையிலே ஒரு குடிசை போடவேண்டுமென்று கேட்டார்கள். அப்பால் அவர் ராமகிருஷ்ண செட்டி பணமாம் பேச்சுக்கு உத்திரவு கேட்டார்கள் அதற்கு இல்லையென்ற சொல்லும் நகைத்துக்கொண்டவர்க்கில்லேதானே சொல்லிப் போகச்சொன்னார். அப்பால் வர்த்தகர்கள் அனுப்பிவித்துக்கொண்டு வீட்டுக்குப் போனார்கள். துரையும் அரியாங்குப்பத்துக்கு சாப்பாட்டிற்குப் போகவேண்டுமென்று இருந்தவர் முசியே பெடுத்தலமி (**Barthélemy** நம்முடைய சாவடிக்கு வந்தார்களென்று சேதி வந்ததை தொட்டு போகவில்லை இந்த நாள் பகலுக்கு மேலாக முசியே பெடுதலமி (**Barthélemy**) முசியே மோரோ (**Moreau**) முதலான சென்னைப்பட்டணம் கொம்மாந்தாம் இரண்டாவது சொல்தாது கப்பித்தான் மாரி சேருவைக்காரன் முதல் கூலிக்காரர் முதலாய் இவ்விடத்திலிருந்து சென்னப்பட்டணம் பிரான்சுகாரதானப் பிற்பாடு போயிருந்தவர்கள் சமஸ்த தானபேருக்கும் அவரவர் தட்டுமுட்டுகள் சட்டிப்பானை உட்பட முன் அனுப்பிவிட்டது போக மற்றதுகளிருக்கிறதை எடுத்துக் கொண்டுவந்து சேர்ந்தார்கள். அப்பால் நாலரை மணிக்கு கோட்டைக்கு துரையவர்களண்டைக்குப்போய் சந்தித்துகொண்டு முசியே பெடுத்லெமி, முசியே மொரோ, முசியே குப்பி (**Barthelemy, Moreau, Gaupel**) சொல்தாது கப்பித்தான் முசியே லொத்திசு (**De la Tauche**) இவர்கள் நாலுபேரும் துரையவர்களுடனே சொன்ன தென்னவென்றால்: நாளது செப்தம்பர்மாத முதல்தேதி திங்கட்கிழமையன்று சென்னப்பட்டணம் கோட்டையும் பட்டணமும் இங்கிலீஷ்காரர் முசியே லேரென்சு (**Lawrence**) தேவனும்பட்டணம் மேஜர் அரியாங்குப்பத்து சண்டையிலே அகப்பட்டு பிரிசோனாயிருந்து அப்பால் சண்டை தீர்ந்த பிற்பாடும்பாய் மறுபடிப்போன ஆகஸ்டு மாதத்திலே சென்னப்பட்டணம் ஒப்பிச்சுகொள்ளுகிற நிமித்தியம் இவ்விடத்திற்கு வந்து சென்னைபட்டணம் செப்டம்பர் மீ முதல் தேதி ஒப்பித்துக்கொள்ளுகிறதற்கு உடன்படிக்கைபண்ணிகொண்டுபோன மேஸ்தர் லேரென்சு (**Lawrence**) நாளாகிய செப்தம்பர் மீ முதல் தேதி திங்கட்கிழமை எட்டு மணிக்கு வந்து கோட்டையும் பட்டணமும் ஒப்பித்துக்கொண்டு 8 மணி வேளைக்கு அவர்களிங்கே ரெசுபோடச்சே பிராமணர்கள் வந்து பூசைபண்ணி தேங்காயுடைத்து ஆடுவெட்டி பலியிட்டு என்ன என்னமோ தமிழ்ச்சடங்குகள் செய்து கொடிபோட்டார்களென்று அப்பால் கோட்டையிலே இருக்கிற பீறங்கிகளும் கப்பல்களிலே இருக்கிற பீரங்கிகளும் ஏக வேளையிலே விபரீதமாய் சுட்டார்களென்றும் முன் சென்னப்பட்டணத்திலிருந்து வெளியே போயிருந்த தமிழர்கள் நம்முடைய நாளையிலே ஒருத்தராவது வராதிருந்தவர்களெல்லாம் எங்கேயிருந்தார்களோ அந்த கொடி போடுகிற வேளைக்கு அனேகம் தமிழர்களும், துலுக்காகளும்; சோணகர்களும் பட்டணவர்

-கள் கூலிக்காரர் முதலாய் பத்து லக்ஷம் பிரஜைகள் வந்து நிறம்பிப் போய் அவரவர்களுக்குத்தான் கோட்டையும் பட்டணமும் வந்தாப் போலே அந்த ஜனங்களுடைய சந்தோஷத்தையும் அவர்களங்கே நடப்பித்து தமிழ் சடங்குகளேயும் சொல்லி அப்பால் மேஸ்தர் புசுக்காவேன் (Boscawen) அமிரால் மலாட்டு என்கிற ராஜாவி னுடைய இஸ்காதுக்கு தலைவன் முதலான பேர்களும் கும்பினீரை சேவித்த மேஸ்தர் மார்சு (Morse) முதலான இங்கிலீஷ்காரர்களும் இறங்கி மத்தியானத்துக்கு சாப்பிடுகிறதற்கு என்னை கூட இருக்கச்சொன்னார்கள். அதற்கு முன்பாக நான் தவிர மற்ற சமஸ்தமான பேரும் மயிலாப்பூரிலே போயிருந்து நான் வருகிறமட்டுக்கும் காத்துக்கொண்டிருந்தார்களென்றும் அப்பால் நான் பகலுக்கு சாப்பிட்டு இங்கிலீஷ்காரருடனே மூன்று மணிக்கு புறப்பட்டு மைலாப்பூருக்கு வந்து அங்கேயிருந்த நம்முடையவர்களை கூட்டிக்கொண்டு புறப்பட்டு வந்தேனென்றும் இங்கிலீஷ்காரர் பட்டணத்துக் குள்ளே வந்து கோட்டையிலே கொடி போட்ட உடனே சகல ஜனங்களுக்கும் சொன்னதென்னவென்றால்: ஐந்து வருஷத்துக்கு தீர்வை, வரி, முதலானது கள் சகல சரக்கு வீட்டுவரி, குப்பை வரி முதலானதுகளென்ன என்ன உண்டோ அதுகளெல்லாம் கவையில்லையென்று தமுக்கு போட்டுவிச்சார்க ளென்று மிதுமுதலான செதிகளெல்லாம் துரையவர்களுடனே சொல்லிக் கொண்டிருந்து கோட்டையிலிருந்து துரையவர்களுடனே கூட வீட்டுக்கு வந்தார்கள். ஆனால் இங்கிலீஷ்காரர் முன் இந்தியாவுக்கு வந்து சென்ன பட்டணத்திலே வந்து கொடிபோட்ட நூற்று இருபத்தொரு வருஷமும் ஐந்து மாதத்துக்கு பிற்பாடு புறப்பட்டு பட்டணத்துக்கு இசை கேடு வந்து முன் அக்ஷய ௵ புரட்டாசி ௴ 9 ௳ புதவாரம் நாள் 1746 ஆ செப்டம்பர் ௴ 29 ௳ பிரான்ஸ் கொடி பறக்க பிரான்சுகாரர் வசமாய் முசியே லபூர்தொனே (Labourdonnai) சண்டைபோட்டு மேஸ்தர் மார்சு (Morse கொவர்னதோர் வசத்திலே ஒப்புக்கொண்டு மறுபடி இங்கிலீஷ்காரருக்கும் பிரான்ஸ்காரருக்கும் முன் 1748 ஆ (ஒக்தோபர் ௴ 17 ௳) விபவ வருஷம் ஐப்பசி ௴ 5 ௳ சீர்மையிலே ராஜாக்கள் சமாதானமாய் கையெழுந்துப் போட்டுக்கொண்டு சென்னபட்டணம் ஒப்புவித்துப்போடச் சொல்லி எழுதிவந்து இங்கிலீஷ்காரர் மேஸ்தர் புஸ்காவேன் (Bascawen) முதலானபேர் போய் ஒப்பித்துகொண்டது 1749 ஆ செப்டம்பர் ௴ முதலுக்கு சுக்ல ௵ ஆவணி ௴ 20 ௳ சோமவாரம் நாள் ஒப்பித்துக் கொண்டமட்டுக்கும் வருஷம் மூன்றுக்கு குறைச்சல் நாள் இருப்ப தொன்று இந்த இரண்டு வருஷம் பதினொருமாதம் பத்துநாளும் சென் னைப்பட்டணம் பிரான்சுக்காரர் துரைத்தனம் சொல்லவும் வெள்ளைக்

கொடி பறக்கவும் சங்கல்பமிருந்தபடிக்கு நடந்தது. அப்பால் எப்போதை யும்போலே இங்கிலீஷ் கொடிபறக்க பிராப்தியானபடியினாலே இங்கிலீஷ் கொடி போட்டுக்கொண்டு இங்கிலீஷ்காரரும் சென்னைப்பட்டணம் போய் சேர்ந்தார்கள். ஆனபடியினாலே மனுஷ வல்லமைபடிக்கு ஒன்றும் நடக்கத் தக்கதல்ல சுவாமி ஆதியிலே சங்கல்பித்தபடிக்கு நடக்கப்போகிறது என்பது விவேகியாயிருக்கிற பேர்கள் கெட்டியா யெண்ணுவார்கள் ஆனால் பட்டணம் கஷ்டகாலம் வந்து ஒரு கொடிபோய் மறுகொடியானதினால் வீடுகள் முத லானவைகளெல்லாம் இடிபட்டுபோனதுமல்லாமல் கனமான வர்த்தகர்கள் வெளியே புறப்பட்டு திரவியங்களை போக்கடித்துக்கொண்டு போனதுமல்லா மல் அனேகம் பெரிய மனுஷர்களெல்லாம் செத்துப்போனார்கள். ஆனபடி யினாலே பட்டணத்துக்குள்ளே குடியிருக்கிற ஜனங்கள் வந்து நிறம்பினா லும் பழய சென்னைப்பட்டணமாக இன்னம் இருபது முப்பது வருஷம் செல்லாமல்படி சுவர்னபட்டணமாகமாட்டாது. அது எதனாலென்றால் நூற்று இருபத்தொருவருஷம் பட்டணமானது எடுபட்டுப்போய் சின்னபின் னமாய் தெரித்துப்போய் மருபடி பழையப்படியாகிறது விளையாட்டிலே யிருக்கிறதா; கோலகொண்டா, விசாபுரம், ஆற்காடு முதலானபட்டணங் களழிந்து ஒரு சென்னைப்பட்டணமாச்சுது. இதல்லாமல் இப்போ தீவு தீவாந்தரங்களெல்லாம் நூறுக்கு இரனூறு ஆதாயம் வந்து அவன வன் வெகு பணம் நானாது வரையிலே சம்பாதித்து இப்போ தீவாந் தரங்கள் மணிலா மொச்சா முதலான இடங்களெல்லாம் முதல் பணம் வரு கிறது ரொம்பவும் பிரயாசையாயிருக்கிற காலமானபடியினாலே இப்போ சென்னப்பட்டணமே யல்லாமல் பழய சுவர்னபட்டணம் இபோதுக்கெல் லால் ஆகமாட்டது போலே என்புத்திக்குத் தோற்றினபடிக்கு எழுதினேன் ஆனால் சுவாமி என்ன பண்ணுகிறாரோ நானறியேன். சென்னைப்பட்டணத் திலிருந்துவந்த அந்தப்ப சேருவைக்காரனையும் நூறுபேர் சேவுகரையும், துப் பாக்கிகளையும் முத்திரைகளையும் ஒப்பித்துப்போட்டு அவரவர் வீட்டைப் பேரகச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். அப்பால் நாய் பிடிக்கிற சவரியை யும், யானைக்கார சேவகரையும் துப்பாக்கிகளையும் பாளையக்கார சேவுகர் முத்திரைகளையும் ஒப்பித்துப்போட்டு அவரவர்களையும் வீட்டை போகச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். ஆனால் நாய் பிடிச்ச சவரிமாத்திரம் பாதிரி காட்டு கோவில் பாதிரியினுடைய சிபார்சு ஒன்று இந்த ஊர் யானையக்காரத் தனம் தனக்கு கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொண்டு வந்து கொடுத்த தற்கு துரை கோபித்துக்கொண்டுபோகச் சொன்னார், அவனது தன் உத்தி யோகத்துக்கு மதாம் துப்ளேக்சினுடைய மாரிபத்திலே பிரயத்தினம் பண்ண வேண்டுமென்று சொல்லிக்கொண்டு போனதாய் சொன்னார்கள். சென்னைப்பட்டணம் இங்கிலீஷ்கார் வசமான சேதி நேத்துதான் தேவனும்

பட்டணத்துக்கு வந்தது. அவர்களும் கோட்டையிலே பரங்கிகள் விஸ்தாரமாய் சுட்டது இங்கே கேட்டது.

சுக்கில ஞு ஆவணி மீ 28 உ க்கு 1749 ஆ செப்தம்பர் மீ 9 உ அங்காரகவாரம்.

இற்றைனாள் கும்பீனி காரிக்கைப் புடவை வர்த்தகர் பார்வையானபடி யினாலே கோட்டைக்குப்போய் அங்கேயிருந்து துரையவர்கள் வீட்டுக்கு வந்த விடத்திலே முசியே தொத்தேல் (D'auteuil) துரையவர்களுக்கு எழுதின காகிதத்தில் நாளது செப்தம்பர் மீ 7 உ நாளது ஆவணி மீ 26 உ ஆதிவாரம் நான் முசிய்ய தொத்தேல் (Dauteuil) முசியே லாசு (Law) இரண்டுபேரையும் அசாத்து சந்தாசாயபு அவர்களழைப்பித்து ஒபிசியால்மாருக்கு என்று இருபதினாயிரம் ரூபாய் ரொக்கம் கொடுத்து சொல்தாதுகளுக்கு முப்பதினாயிரம் ரூபாய் ரொக்கம் கொடுக்கிறதற்கு தவணைவைத்து துரையவர்கள் பேருக்கு கடன் சீட்டுங்கொடுத்து அப்பால் முசியே தொத்தேலுக்கும் (Dauteuil) சத்திபன் சுபாவும் அதுக்கு ஒரு கிராமம் இரண்டாயிரம் ரூபாய் இது இனாமும் வெகுமதி கொடுத்து முன்னே நீங்கள் புதுச்சேரிக்குப் போங்கள் நாங்களும் பிறகே வாரோ மென்று உபசாரம் சொல்லி அம்பகம் பண்ணினதாகவும் அவர்களுமனுப்பி வித்துக்கொண்டு தாங்களிறங்குகிற பாளையத்துக்கு வந்து சாப்பிட்டு பக லுக்குமேலாக பயணம் புறப்படுகிறதாய் இருக்கிறார்களென்று யெழுதிவந்த சேதியை துரையவர்களென்னுடனே சொன்னார் எனக்கு வக்கீல் சுப்பய் யன் எழுதின காகித சேதியிலேயுமிந்தபடித்தான் எழுதி நவாப்பு சந்தா சாயபுவினிடத்திலே இருந்து புறப்பட்டு வந்தவாசிக்குப்போய் வந்தவாசியி லிருந்து சந்திரனை பார்த்து குத்பா பண்டிகைபண்ணி அங்கேயிருந்து புதுச்சேரிக்கு வருகிறதாயும் செங்கல்பட்டு நபாபு சயந்தல்லிகான் மோகத்துமா இரண்டு லக்ஷ ரூபாய் தீர்த்து சேத்துப்பட்டு மோகத்துமா தீராமல் அப்படி யாயிருந்து அதுவும் தீர்ந்தது.

ஆனால் துகை வெளிப்படவில்லை அதை நன்றாய் விசாரித்து பிறகாலே எழுதியனுப்புகிறோமென்றும் சேத்துபட்டின் பேரிலே போய் இங்கியிருந்த முசியே லத்தூர் (de Latour) முசியே துகோன் (Duquéne) முதலானபேர் சர்தார்களும், முன்னூறு சொல்தாதுகளையும் புறப்பட்டு புதுச்சேரிக்குப் போகச்சொல்லி எழுதினதாகவும் அவர்களும் புறப்பட்டு வந்து சேருவார் களென்றும் எழுதியிருந்த சேதியை துரையுடனே சொன்னதற்கு ஆனால் நபாபு இதாயத்து மொகதீன்கான் வருகிற பேச்சு மெதுபோலே காணுமென்று கேட்டான். மெதுவென்றுஞ் சொல்லலாமா? சந்தாசாயபு வந்த பிற்பாடு இவரும் செஞ்சிபார்க்க வருவாரே அவ்விடத்துக்கு எதிரே மனுஷர்கள் மற்றபேர்களையுமழைக்கிற நிமித்தியமுமல்லாமல்

மரியாதைமற்றது நடக்கவேண்டியது முன்னே வந்து பேசி அப்பாலழைப் பிப்போமென்கிற ஜாடையினாலே சந்தா சாயபு முன்னே வாராரோ தெரியா தென்று ஒரு லாடபாஷையாய் வருவாரென்றுப் போலேயும் சொன்ன தின் பேரிலே ஒரு பரிகாரமாய் ஒத்துக்கொண்டு சேத்துப்பட்டு மோகத்து பரவசம் மூன்று லக்ஷமாய் தீர்த்துதா மென்று சொல்லிக் கொண்டிருக்கச்சே சேக்கு அப்துலாகிமான் காகிதம் வந்தது அதிலேயும் மூன்று லக்ஷ ரூபாய் சேக்முகம்மது சரீப் என்பவன் நபாபு இதாயத்து மொகதின் கானுடனே நீத்துப்போட்டு அப்பாலங்கே யிரங்கியிருந்த பவுன்சை வாங்கிவந்து விடச் சொல்லி எழுதிப்போச்சுதென்றும் எழுதியிருந்தது. அப்பால் நபாபு இதா யத்து மொகதீன்கான் வந்தால் அதற்கு வேண்டிய சாம்கிரிகைகள் எல்லாம் முஸ்தீது பண்ணச் சொல்லி தாம் உக்ளி (Hugli) சுபேதாரனுக்கு விருந்து பண்ணுவதற்கு பன்னீராயிரம் ரூபாய் சென்றதென்றும் தமக்கு அவ இரண்டுதரம் விருந்து பண்ணினதற்கு அறுபதாயிரம் ரூபாய் சென்ற தென்றும் இதுமுதலான சேதி பேசியிருந்து பிற்பாடு நான் பாக்கு கிடங் குக்குப் போனேன்.

## சுக்கில ஹு புரட்டாசி மீ 1 உக்கு 1749 ஆ செப்தம்பர் மீ 13 உ சனிவாரம்

இற்றைனாள் காலேயில் கோட்டைக்குப்போய் மதாம் கும்பினி வர்த்தகர் காரிக்கன் புடவைப்பார்த்து சலவைக்கு விட்டதும், காரைக்கால் சலவை புடவை ஏழு கட்டு எட்டு கட்டு புடவை பார்வையிட்டு ஐந்து கட்டும் போட்டு ஆனபிறகு முசியெ சேம்போல் (St. Paul) முசியே கில்லியாரும் (Geillard) அழைத்து காரைக்கால் புடவை பார்வையிட்ட சேதி துரை யவருக்குச் சொல்லி அங்கேயிருந்து வந்திருக்கிற முத்துசெட்டி முத்திய பின்னேயும் இரண்டு பேர்களும் சரீரமலகு வில்லாமலிருக்கிற பேர்களுக்கு காரைக்காலுக்கு போகிறதற்கு உத்தாரம் வாங்கிக்கொடுக்கச் சொல்லி சொன்னார்கள் அப்படியே ஒன்பதுமணி வேளைக்கு துரையவர்களண்டைக்கு வந்து அவர்கள் புட்வை பார்த்த சேதியும் சொல்லி அவர்கள் காரைக் காலுக்கு போகிறதற்கு உத்தாரம் கொடுத்துப்போட்டு அப்பால் செஞ்சியி லிருந்துவந்த பழய கில்லேதாரன் சேக்கு கலிலுல்லா சாயபு என்கிறவன் அன்வர்திகான்முதலிலே கில்லேதாரனாகயிருந்தவன் அன்வர்திகான் சண்டை யிலே விழுந்துப்போய் மாபுசுகான் முதலானபேர்களை காவலிம்ல வைத்து பிற்பாடு கோட்டை சந்தா சாயபு மனுஷர்கள் வந்தவர்கள் மாரிபத்திலே ஒப்பிக்கிறதில்லே. என்று சொல்லி புதுச்சேரி குவர்னதோர் மாரிபத்திலே ஒப்பிக்கிறதேயல்லாமல் அவர்கள் மாரிபத்தில் ஒப்பிக்கிறதில்லே இவ்விடத் திற்கு ராசாவட்டமிட்டு இவ்விடத்திற்கு கலிலழைப்பிச்சுக்கொண்டு முசியே திலார்ஷ் (Delarche) பிறகே வந்து இத்தனை நாளும் பேட்டியில்லாம

லிருந்து இந்தனுள் பதினேரு மணிக்குப் பேட்டிக்கு அவர் குமாரர்கள் மருமக்கள், பேரர்மார்களுடனே துரையவர்கள் பேட்டிக்கு வந்த உடனே ஒன்பது பீரங்கிப்போட்டு அவர்கள் பிள்ளைகள் ஆறுபேரும் மருமக்கள் பேரர்மார்களைப் பார்த்து வெகு சந்தோஷப்பட்டு ஆனந்தமாயவர்களுக்கு வெகு உபசாரம் சொல்லி உங்கள் காரியம் என் சுயகாரியமாய் செய்து கொடுப்பேன். ஆனுலும்முடைய பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும், மருமக்க மார்களும் பெண்கள், பேத்தி பெண்கள் முதலான பேர்கள் இப்படி வெகு ஜனமுள்ள சம்சாரிலோகத்துக்குள்ளே அபுரூபம் சீர்மையிலேயுமபுரூபம் இதனலே என் மனது மெத்த சந்தோஷமாயிருக்கிற தென்று முசியே பிரியேல் (Friell) முதலான பேர்களுடனே அடிக்கடி இதைத்தானே பார்த்தாயா? இவருடைய சம்சாரம் எத்தனையென்று சொல்லி அந்த பிள்ளைகளுக்கெல்லாம் பாக்கு வெற்றிலை பன்னீர் தம்முடைய கையினலே கொடுத்து மற்றப்பேருக்கு அப்பு கொடுக்காப்போனல் வேண்டாமென்று முசியே பிரியேலை (Friell) கண்ணைக்காட்டி அவரைக்கொண்டு கொடுக்கச் சொல்லி திரும்பவும் கொள்ளவேணுமே அதைச்சொல்லென்று கேட்க அதற்கந்த கிழவன் நானினிமேல் உத்தியோகம் பண்ணுகிறதில்லை உம்முடைய இடத்திலே தானே யிருக்கிறேன். இந்தப்பிள்ளைகள் உம்முடைய அடைக்கலமாகவந்து சேர்ந்தார்களவர்களை எப்படி சவாக்ஷணை பண்ணவேணுமோ அந்தபடிக்கு சவாக்ஷணை பண்ணவேண்டுமென்று சொல்ல பதினயிரம்தரமாய் சொல்வோமென்று சொல்லி அவர் முழு மனதுடனே சொன்ன உத்தாரம் யாருக்குமிப்படி சொன்னதில்லை அந்த படிக்குச் சொல்லி தம்முடைய பெண்சாதியண்டைக்குப்போய் காண்பித்துக் கொள்ளச் சொல்லி அங்கேபோய் பாக்கு, வெத்திலை, பன்னீர் வாங்கிக் கொண்டு அங்கேயிருந்து அனுப்புவித்துக்கொண்டு அவர்களிறங்கியிருக்கிற சுங்குவார் கும்பினி கிடங்கே போனர்கள் இவர்கள் வந்துகாண்பித்துக் கொண்ட உடனே ஒன்பது பீரங்கிப்போட்டார்கள். எதிராக முசியே பிரியேலை (Friell) ஒரு ஒபிசியாலையும் வரச்சேயும் போகச்சேயும் எதிராக வும் அனுப்பி மறுபடி போகச்சேயும் வாசற்படி மட்டுக்கும் போய்விட்டு வரச்சொன்னர். இவர் சம்சாரத்தைப் பார்ந்துதானே அடிக்கடி சந்தோஷ மாய் வார்த்தை சொன்னது காகித முகாந்திரத்திலே யெழுத முடியாது— நேற்றையதினம் சேத்துப்பட்டுக்கு போயிருந்த முசியே துகோனும் **Duguene**) முசியே லத்தூரும் (**de Latour**) முன்னூறுபேர் சொல் தாதுகளும் பீரங்கிகள் முதலான சாமான்களோடு வந்து சேர்ந்தார்கள். இந்த நாள் காலை ஒன்பதரை பத்துமணி வேளைக்கு அன்வர்திகானை ஜெயித்த முசியே தொத்தேல் (**d'auteuil**) முசியே புசி (**Bussy**) முசியே லாசு (**Law**) முதலான ஒபிசியேமார்களும் வெள்ளைக்காரருடைய பவுன்சு முறட்டாண்டி

சாவடி வந்து சேர்ந்து அங்கே வந்து சேர்ந்த அடையாளத்துக்கு இருபத் தொரு பீரங்கியும் போட்டார்கள்.

**சுக்கில ஹு புரட்டாசி மீ 2 உ க்கு 1749 ஆ செப்தம்பர் மீ 14 உ ஆதிவாரம்.**

இற்றைநாள் காலையில் துரையவர்களழைத்துச் சொன்னதென்ன வென்றால்: சந்தாசாயபு வந்ததுமுதல் கொண்டு சாராயம் கோட்டையிலே விற்கிறது ஒரு காந்தீன்மாத்திரம் வைத்து வேணுமென்ற பேர்களுக்கு விற்கிறது. மற்றப்படி வூரில் எங்கேயும் பரிச்சேதமாய் விற்க கவையில்லை. இதல்லாமல் உன் சாராயக்கடையாய் இப்போதான் வந்து இறங்கப்போகிற உங்கள் சாவடி முதல் நயினப்பிள்ளை சாவடிமட்டுக்கும் இரண்டுகடை மூன்று கடை எப்படி உனக்கு சம்மதமோ அப்படி விற்றுக்கொள்ளலா மென்று உத்தாரம் கொடுத்தார். அப்பால் நயினர் மனுஷர்களை பத்திரமாய் வைத்துப் பட்டணத்துக்குள்ளே திருட்டு முதலானதுகள் நடவாதபடி எப்படி பத்திரமாய் விசாரிக்க வேண்டுமோ அப்படி விசாரித்துக்கொள் என்று பின்னையும் சில மாமூல் காரியங்கள் சொல்லிக்கொள்ளுவார். நாட்டார் பாளையக்காரர் முதலானவர்கள் காரியம் எப்படி பார்த்துக்கொள்ள வேண்டுமோ அது காரியா காரியங்களிலே உனக்கு எப்படி யுக்தமாயிருக் கிறதோ அப்படி யார் யார் சிபார்சு பண்ணி காரியமாக பண்ணிக்கொடுக்க சொல்லுகிறீரோ அப்படி செய்துக்கொடுக்கிறேனென்று. சொன்னார் நல்லதய்யாவென்று சொல்லிப்போட்டு பாக்கு கிடங்குக்கு சாராய கிடங்கு காரரை அழைப்பித்து துரையவர்களுத்தாரபடிக்கு சொல்லியனுப்பி அப்பால் பட்டணங்கள் தெருவுகள் விடுவாசல்கள் சமஸ்தமும் மேடுபள்ளம் நிறவி முஸ்தீப்பு பண்ணி தண்ணீர் தெளிக்கச்சொல்லி தமுக்கு போடச் சொல்லி உத்தாரம் கொடுத்தேன். அப்பால் மறுபடி அழைப்பித்து திருவிதி புவனகிரி தீர்த்தகிரி வெங்கிடம்மாள்பேட்டை, பரங்கிப்பேட்டை, தேவனாம் பட்டணம் இதுகளிலே ஐயாயிரம் வராகன் மட்டுக்கும் சமையாயிருக்கிற தென்று ஜோதி பண்டிதனென்கிற அமுல் பண்ணுகிற பிராப்பண்ணி சொல்லியனுப்பினான். அந்த சீர்மை பணம் எத்தனை வராகன் வந்த தென்று கேட்டார். அவர் ஐயாயிரம் வராகன் சமையாயிருக்குதென்று எப்படி சொல்லியனுப்பிவைத்தாரோ தெரியாது. ஆனால், ஐனூறு விரா கன் நானூறு விராகன் மட்டுக்கும் என் கையில் கொண்டுவந்து செலுத்தி இன்னம் தனக்கு கிராமம் ஒத்திகையாகிற பணமெல்லாம் அனுப்புகிறே மென்று எழுதினார்களேயல்லாமல் பணம் தண்டி ஐயாயிரம் விராகன் முஸ்திப்பா யிருக்கிறதென்று எழுதினதுமில்லை அவர்களிங்கே வந்த போதும் சொன்னதுமில்லை ஆனாலுங்களுக்கு பிறம்பாய் பொஸ்தி என்கிற சோனக பையனுடனே சொல்லியனுப்பின மட்டுக்கும் முஸ்தீப்

பாயிராமல் சேர்ஜி பண்டிதனுக்கு ஐயாயிரம் வராகனும் கொண்டு வரச்சொல்லி எழுதி அனுப்பிவிக்கிறேனென்று சொல்லி பாக்கு கிடங்குக்கு வந்து அந்த க்ஷணமே யெழுதி அனுப்பிவித்தேன். மற்றபடி இதாயத்து மொகதீன்கான் சந்தாசாயபு முதலான போகள் சந்திரனைப்பார்த்து பண்டிகைக்கொண்டாடி வருகிறோமென்று சந்தாசாயபு வந்தவாசி வந்து சேர்ந்து ஆவணி மாதம் 3ம் தேதி எழுதின காகிதத்துக்கு பதில் காகிதம் இந்த நாள் காலையிலே உம்முடைய வரவுக்கு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோமென்று உபசாரமாய் பதிலுத்தாரம் எழுதியனுப்பிவித்தோம் என்று துரையவர்களுக்கு கபுறு சொன்னேன்.

சுக்கில ஞ புரட்டாசி மீ 4 உ க்கு 1749 ஆ செப்தம்பர் மீ 16 உ சோமவாரம்

இற்றைனாள் காலையில் கோட்டையில் நம்முடைய சாய சிலம்புரி (சாலாம்பூர்) பத்து காட்டு போட்டபடியினாலே கோட்டைக்கு போயிருந்து பாக்கு கிடங்குக்கு வந்து துரையவர்கள் என்னசெய்கிறாரென்று விசாரித்ததில் நேத்து இராத்திரி அதிர்ச்சிகண்டு இராத்திரி நித்திரையில்லாமல் யிருந்தபடியினாலே இன்னேரமட்டுக்கும் நித்திரைப்போனார். ஆதலால் தெருவாசற் கதவு சாத்தினபடியே இருக்கிறது திறக்கவில்லையென்று சொன்னார்கள். அப்பால் 12 மணிக்கு அழைத்தனுப்பினார் அப்போ குசினிவழியாய் போனவிடத்திலே புடவை சுருக்காய் முஸ்தீது பண்ணச்சொல்லியும் சந்தாசாயபு எப்போ வருவானென்று ஏதாவது சேதிவந்ததாவென்று கேட்டார். சேதி வந்ததில்லை சந்துயித்ந அஞ்சந்தாரிக்கு இதாயத்து மொகதீன்கான் ஆற்காடு விட்டுப் புறப்பட்டுவருகிறாரென்ற சேதி இப்போ சொல்லிக் கொள்ளுகிறார்கள். சந்தா சாய்பு ஆனால் முந்தானாள் சாயங்காலம் எழுதிய காயிதத்திலே வந்தவாசிக்கு வந்தோம் பண்டிகை பண்ணிக்கொண்டு பிற்பாடு புறப்படுகிறோமென்று எழுதினபடியினாலே இந்தனாள் புறப்படவேண்டு மென்று சொன்னேன். நல்லது வீட்டுக்குப் போவென்று சொல்ல நான் பாக்கு கிடங்குக்கு வந்து அங்கிருந்து வீட்டுக்குப்போய் அங்கிருந்து சாயங்காலம் வண்ணான்துரைக்குப்போய் விசாரித்து அங்கேயிருந்து கெட்டலீன கூடத்துக்கு வந்து அங்கே விசாரித்து பாக்கு கிடங்குக்கு வந்தேன். ஆனால் முன் துரையவர்களிடத்துக்கு பனிரெண்டு மணிக்கு அழைத்தனுப்பினபோது போனவிடத்திலே வரச்சொன்ன உத்திர மேலே எழுத மறந்துபோன படியினாலே இங்கே எழுதுகிறதென்ன வென்றால்: காரைக்கால் தபால் காகிதங்கள் போகிறதே தேவனாம்பட்டணம் கூண்டுகுள்ளே போகிறதா வெளியே திருவகிந்திரபுரத்தின் பேரிலே போகிறதா யென்று கேட்டார். முன் திருவகிந்திரபுரத்தின் பேரிலே போச்சுது இதன்பிற்பாடு ஒன்றரை மாதமாய் முன் சண்டைக்கு முன் எப்படி கூண்டுக்குள்ளே போச்சுதோ

யுக்தபடிக்கு சுத்திப்போகாமல் படிக்கு தேவனும்பட்டணம் கூண்டுக் குள்ளே போகிறதென்று சொன்னதற்கு அப்படிப்போக கவையில்லை. தேவ னும்பட்டணம் கூண்டுக்கு வெளியே போகச்சொல்லி உத்தாரம் கொடு என்று சொன்னார் நல்லதென்று சொல்லி அந்த க்ஷணம் பாக்குகிடங்குக்கு வந்து சாந்தப்ப சேருவைக்காரனை அழைப்பித்து துரையவர்களுத்தாரம் கட்டளையிட்டபடிக்கு அவனுடனே சொல்லி இனிமேல் போகிற காகிதங் கள் தேவனும்பட்டணம் கூண்டுக்கு வெளியே திருவகீந்திரபுரத்தின் பேரிலே போகச்சொல்லிச் சொன்னேன். அந்தபடிக்குத்தானே இந்த க்ஷணம் தபால்காரருக்குச் சொல்லி அனுப்புகிறேனென்று சொல்லிப் போனான். இந்த ஜாடை ஏன் வந்ததென்றால் நேற்று சாயங்காலம் தேவனும் பட்டணம் குவர்னதோர் காகிதம் முள்ளங்கி பாலு செட்டியை முன் பழ வேர்க்காட்டிலே இருந்து மாயே சிப்பாய்கள் ஸ்ரீ பெரும்பூதூர் கோவில் தருமத்துக்கு சென்னப்பட்டணம் துபாசி வைத்த பணத்துக்கு அவர்கள் வீட்டு சம்மந்தம் ஒரு பெண், பெண்சாதியும் மாயே சிப்பாயை சேர்த்து கொண்டு அந்தப்பணம் வாங்குகிற நிமித்தம் பிடித்து வந்த பாலு செட்டி தங்கள் கும்பினீர் வர்த்தகன் என்று முன் இரண்டு மூன்று காகிதங்கள் மேஸ்தர் புசுகாவேன் (Bascawen) எழுதினதற்கு விடாமலிருந்ததின் பேரிலே நேத்திய தினம் என்ன ஜாடையிலே எழுதி வந்ததோ அதற்கு பதி லுத்தரவு இவர்களின்றை எழுதினதிலே என்ன ஜாடையாய் எழுதினார் களோ அதன் பேரிலே இந்த உத்தாரம் நடந்தது.

**சுக்கில ௵ புரட்டாசி ௴ 15 உக்கு 1749 ஆ செப்தம்பர் ௴ 17 உ புதவாரம்**

இற்றைநாள் காலையில் துரையவர்களிடத்துக்கு போனயிடத்திலே சந்தா சாயபு காகிதம் வந்தது. அந்த காகிதத்திலே நபாப இதாயத்து முகதீன்கான் சந்துபாத்த 2-ம் தூருக்கு ஆற்காடு விட்டு புறப்பட்டு செஞ்சி மார்க்கமாய் புதுச்சேரிக்கு வருகிறார். நானுமவருடனே வருகிறேன் என் றும் சேத்துப்பட்டு மோகத்து பாதங்கள் காகிதமனுப்பினது வந்து சேராத தற்கு முன்னேதானே பைசலாய் வெள்ளைக்காரர்களும் புறப்பட்டு வந்து விட்டார்களென்றும் திருவீதி முதலான பர்காணுகான் சம்மதி தாம் ரூபு ரூபாய் வந்து பேசி தீர்த்துப்போடுகிறோமென்றும் எழுதியிருந்தது அந்த சேதி துரையவர்களுக்குச் சொன்னேன். அப்பால் சேம்பிரிம் கும்பினீருக்கு எப்போ வருமென்று கேட்டார். பத்து நாளையில் வருமென்று சொன்னேன் மற்றபடி எழுததக்கசேதி ஒன்றும் விந்தையாக கேள்விபடவில்லை. ஆனால் சந்தா சாயபு இவ்விடத்துக்கு வருகிறாரென்று வெகுபேர் அமுல்தார் நாட்டார் முதலானபேர்கள் ஊருக்குள்ளே வெகு ஜனங்கள் வந்து சேர்ந் தார்கள் ஆனலவரவர் காரியங்கள் வரவர பிராப்தி எப்படியோ அப்படி

தீரப்போகிறது. ஆனாலவரவர் ஆசை மித்திலேயில்லை என் மனதுக்கு தோத்தியிருக்கிறது பிராப்தி எப்படியோ அப்படி கட்சி நடக்குமென்று ஆசையின் மீதிலே மனதை விடாமல் யெதாஸ்தியாய் வருகிறதற்கு பிராப்தி இருந்தால் அவர் வராமலிருக்கதக்கதில்லை.

இந்தனாள் புவனகிரி நாட்டாண்மை விக்கிரவாண்டி ராமப்பசெட்டி மகனும் வந்துக்கண்டு தீர்வை வைத்தார்கள் நானும் பாக்குவெத்திலக்கொடுத்து போகச்சொல்லி. அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்த உடனே துரையவர்களழைக்கிறாரென்று வந்து அழைத்தார்கள். போனவிடத்திலே சந்தா சாயபு எப்போ வருவாரென்றுக் கேட்டார். நேற்று திண்டிவனத்துக் கிப்புரம் வரச்சே நாலைந்து பீரங்கி கேட்டது. அது சாயங்காலமாக நாலு நாழிகை உண்டென்று ஆற்காட்டிலிருந்து வந்த சேவுகன் சொன்னானென்று சொல்லிக்கொண்டிருக்கச்சே மயிலாப்பூர் பாதிரி அந்தோனி ( **Antoin** ) வுடைய காகிதம் துரைக்கு வந்து துரை கையில் சேருவைக்காரன் கொண்டுவந்து கொடுத்தான். அதில் யெழுதியிருந்தது சென்னைப்பட்டணத்திலேயிருந்து இப்போது புதுச்சேரியிலே வந்து குடியேருகிற தோன் செரோமினோ ( **Don Jeromion**) என்கிறவன் சென்னப்பட்டணத்துக்கு வந்து மேஸ்தர் புசுகாவேன் ( **Boscawen** ) அண்டைக்குப்போனான். அங்கே வரதென்னவென்று ஒரு சார்சண்டைக் கூட்டி அந்தக்ஷணமே ஊருக்கு வெளியே கொண்டுபோய்விட சொன்னானென்று எழுதியிருந்தது. அதைப் படித்துப்பார்த்து என்னுடனே கடுதாசியிலெழுதியிருந்த வயணமும் சொல்லி தன் மாமியாரை மலைக்குப்போய் பார்க்கப் போகிறேனென்று சொல்லி-சென்னைப்பட்டணத்துக்கு அந்த கச்சேரிக்கு அப்படித்தானே வரவேண்டியதென்று அந்த க்ஷணம் முசியே துக்கேன் ( **Duquene** ) வந்தான். அவருடனேயும் சொல்லி நானுமப்படித்தான் நடப்பிக்கவேணுமென்று சொல்லி அப்பால் பேசிக்கொண்டிருந்தார். நான் பாக்கு கிடங்குக்குவந்தேன்.

**சுக்கில ஞு புரட்டாசி மீ 6 உக்கு 1749 ஆ செப்தம்பர் மீ 18 உ குருவாரம்**

இற்றைனாள் காலையிலே கோட்டையிலே நம்முடைய காங்கு கட்டு போட்டபடியினாலே போயிருந்து கட்டுபோடுவித்து அப்பால் சின்னதுரையவர்கள் முதலான கோன்சேலியருடனே சீர்மை கப்பல் வரவேண்டியது வராமல்போச்சுது; அதை தொட்டு வர்த்தகர்களுக்கு பணம் கொடுக்க வேண்டியது அவசியமாச்சுதென்றும் அதைத் தொட்டு சரக்கு வருகிறது மெதுவிலேயிருக்கிறதென்றும் அப்பால் சந்தா சாயபு வரதில்லை என்றும் பேசிக்கொண்டபேருக்கும் வருவாரென்று பேசிக்கொண்டவர்களுமாயிப்படி

அல்லாமவர்கள் பேசிக்கொண்டிருக்கச்சே நான் சும்மா இருந்ததைப் பார்த்து நீ சும்மாயிருக்கிறதென்ன உனக்கு நன்றாய் தெரியுமே என்று கேட்க நீங்கள் துரைகளுக்களுக்கு தெரியாததா எனக்கு தெரியுமென்று எப்படி சொல்லவேணுமோ அப்படி தெலிக்கையாய் சொன்னதற்கு ரங்கப்பனுடைய காணும் குவர்னதோருத்தாரமில்லாமல் காரியமின்னதென்று அவன் வாயி னாலே சொன்னானென்று முசியே தெபிரேமென் ( Desfresmen ) முசியே மேரும் ( Le Maire ) சொன்னதற்கு முசியே பிரியேல் Friel ) இருந்துக் கொண்டு அப்படித்தானிருக்கவேண்டியதென்று சொல்லி தான் வாங்கப் போகிற மனைகளை சீக்கிரமத்துக்கு அந்தச்செட்டிகள் கனகராய முதலி கிடங்கண்டையிலே இருக்கிறதையெல்லாம் ருசியாய்த்தானே பார்த்து வாங்கச்சொன்னார். நல்லதென்று சொல்லி அங்கேயிருந்து சின்னதுரை முதலானபேர் கையிலனுப்பிவைத்துக்கொண்டு அப்பால் துரையவர்கள்வீட் டுக்கு வந்து கோட்டையிலே கட்டுப்போட்டச் சமாசாரமும் நாளையதினம் ஒதிதால் காங்கு கட்டுப்போடுகிற சேதியும் சொல்லி அப்பாலிதாயத்து மொகதீன்கான் சோமவாரம் இரண்டு ஜாம வேளையிலே புதுச்சேரிக்கு பயணம் போகத்தக்கதாக புறப்பட்டு திமிரி அண்டையிலே வந்து இறங்கினு னென்று நம்முடைய வக்கீல் வெங்கடாராயனெழுதின காகிதச் சேதியை சொன்னேன். இதல்லாமல் ராஜா சாயபு இதாயத்து மொகதீன் கானுடனே கூட புறப்படாமல் நின்ற ஜாடை என்னவென்றால்: அப்துலாயிமான் இரண்டுமாத சம்பளம் வரவில்லையென்று சிப்பாய்கள் தங்கா பண்ணுகிறார்களென்று வரக்கூடாதென்று சொன்னதின்பேரிலே சந்தா சாயபு மகன் ராஜாசாயபு நின்று சமாதானம் பண்ணி அழை துப் போகிறானென்றும் நாஜர் சங்கு அன்வர்திகானை வெட்டிப் போட்ட சேதிகேட்டு தலையிலிருந்த தலைப்பாகையை வாங்கி தரையிலே போட்டு கையிலே கடித்துக்கொண்டு தன் தம்பியையும் சிறிது பவுன்சையும் நவணு பண்ணினானென்றுமக்கு முன் வந்திருந்த சைதுல் சுகான் பேரிலே கோபம் பண்ணி அக்குருக்கு எழுதியனுப்பினானென்றும் அவனும் தன் பவுன்சுடன்கூட கிஷ்ணைக்கு அப்புறம் இருந்தாப்போலே பயணம் சாகிபோ ரானென்று எழுதின சேதிகூடச் சொல்லி அப்பால் பாக்குகிடங்குக்கு வந் தேன் இந்தனாள் இராத்திரி பெத்து நாய்க்கன் எனக்கெழுதின காகிதத்திலே சேக்பத்தே மகமுதை பிடிக்கிறதற்கு ராஜா சாயபு அப்துலாயிமானுடனே சொல்லி இருபத்தைந்து சிப்பாய்களை கூட்டிக்கொண்டுபோய் பிடித்துக் கொண்டவரும் நானுமிருபத்தைந்து சிப்பாய்களுடனே புறப்பட்டு சாகி வருகிறோமென்று எழுதினான். முசியே துப்பிளான் (Duplan) சகலாத்தெல் லாம் வித்துப்போட்டோமென்றுகூட எழுதினான்.

**சுக்கில ஞு புரட்டாசி மீ 7 உ க்கு 1749 ஆ செப்தம்பர் மீ 19 உ சுக்கிரவாரம்**

இற்றைனாள் காலையிலே முறிதாசுக்கு நாம் காங்குபுடவை கூட்டசொல்லி கொடுத்திருக்கிற சம்மதி எட்டுகட்டு காங்குபுடவை கோட்டைக்கு கொண்டு வந்து கட்டுபோட்டபடியினாலே நான் கோட்டைக்கு போய் கட்டுப்போட்ட சேதி சொன்ன உடனே நானங்கே சின்னதுரையைக் கண்டு பேசவேண்டு மென்று சின்னதுரைகளண்டைக்கு போன விடத்திலே அவரிந்த முறிதாசு கொண்டுவந்த புடவை வளமாயிருக்கவில்லை என்றும் அகலக்கட்டை முழக் கட்டையாயிருக்கிற தென்றும் சொன்னதற்கு உத்தாரம் சவுத்தரவாய் சொல்லி அங்கே இருந்து துரைவீட்டுக்கு வந்த உடனே சந்தா சாயபு காகிதமொன்று மதாமுக்கு ஒன்றும் துரைக்கொன்று மெழுதி யிருந்தது. அந்த காகிதத்திலே எழுதியிருந்தது, நபாபு இதாயத்து மொகதீன்கான் சோமவாரம். இரண்டாம் ஜாமத்துக்கு புதுச்சேரிக்குவர பயணமாய் புறப்பட்டு திமிரியிலே வந்து இறங்கினாரென்றும் அவ்விடத்திலே ஒரு நாளிருந்து குதிரை சுவர்களிருந்ததுகளெல்லாம் சேர்த்துக்கொண்டு புத் வாரம் நான் புறப்பட்டு சேத்துப்பட்டு வழியாய் செஞ்சிக்கு வருவார் அங்கே நாமும்போய் கூட்டிக்கொண்டு புதுச்சேரிக்கு வருகிறோமென்று எழுதி ராஜாசாயபு ஆற்காட்டுக்குப் போன விடத்திலே அங்கேயிருந்து யெழுதியனுப்பின காகிதம்பார்த்துக்கொண்டு அது தங்களுக்கு அனுப்பி வித்தோம் அது பார்த்து கொள்ளச்சே தெரியவருமென்று எழுதியிருந்தது அப்பால் அந்த காகிதத்திலே எழுதிவந்த மசதி நபாபு இதாயத்து மொகதீன் கான் ஆனைவாங்க வேண்டுமென்று விலை என்னமாய் வாங்கலாமென்று கேட்டதாயும் அதற்கு ராஜா சாயபு விலை சொன்னதாயும் அதன் பேரிலே இதாயத்து மொகதீன்கான் வெகு சந்தோஷப்பட்டு ராஜா சாயபை தாரிபு பண்ணதாயும் நாசர் சங்கு அண்டையிலே இருந்து கபுறு வந்ததாக்வும் அவ்விடத்து சேதி ஆற்காட்டு சுபா அன்வர்திகானை வெட்டிப்போட்ட சேதி கேட்டு தலைப்பாகையை வாங்கி கீழே போட்டு கையைக்கடித்துக் கொண்டதாகவும் எழுதியிருந்தது இந்த சேதி யெல்லாம் எழுதியிருந்தபடி துரையவர்களுக்கு சொன்னதின் பேரிலே பதிலுத்தாரம் தங்கள் வரவுக்கு எதிர்பார்த்திருக்கிறோமென்றும் மற்ற சமாசாரமெல்லாம் சமஸ்தமாய் பேசிக் கொள்ளச்சே தெரியவருமென்றும் உபசாரமாய் எழுதியனுப்பச் சொன்னார். அந்தபடி யெழுதி தபாலிலே அனுப்பிவைத்தேன் துரையவர்கள் கோட் டைக்குப் போய் முசியே தொத்தேல் (**d'auteuil**) பிறகே சண்டைக்குப் போன காப்பிரிகள் ஏழுபது பேர்களை அன்வர்திகான் சண்டையின் போது பீரங்கிகளை விட்டுப்போட்டு கொள்ளையின் பேரிலே போய் விழுந்த சேதி துரையவர்களுடனே சொன்னபடியினாலே அந்த காப்பிரிகளையெல்லாம்

கோட்டையிலே சேர்த்து துரையவர்கள் போய் பேருக்கு எழுபது அடி விழுக்காடு அடிப்பித்துப்போட்டு அப்பால் வீட்டுக்கு வந்தார். பகலுக்குமேலாக மதாம் துப்ளேக்சு யிடம் என்னை ஐந்து மணிக்கு அழைப்பித்துச்சொன்ன சேதி என்னவென்றால்: [ ]

**சுக்கில ஸ்ரீ புரட்டாசி மீ 8 உக்கு 1749 ஆ செப்தம்பர் மீ 20 உ சனிவாரம்**

இற்றைநாள் காலையில் பிரபுவினிடத்திற்கு போனவிடத்திலே கோவளம் அங்கப்பிள்ளை எழுதிக் கொடுத்ததென்று ஒரு காகிதம் கொண்டுவந்து காண்பித்து அப்பாலந்த பிரசங்கமே யெடாமல் மூன்று நான்கு நாளாய் அட்டிப்பண்ணிப்போட்டார்கள். இப்போ அந்த காரியத்துடனே சேர்ந்ததற்கு முசியே புருனே (Bruno) இவன் ஜோலிக்கும் போகாமல் நெல் உப்பு முதலிய சாமான் என்ன உண்டோ இதுகளெல்லாம் ஒப்பித்துப் போடச்சொல்லி காகிதமெழுதிக் கொடுக்கிறதுமல்லாமல் இவன் வந்து சொல்லிக்கொண்ட காரியத்துக்கு மத்ததுப்பண்ணச்சொல்லியும் எழுதிக்கொடுக்கிறேன் அப்பால் சந்தாசாயபு மனுஷன் என் காகிதம் யார் கொண்டுவருகிறானோ அவன் வசத்திலே ஒப்பித்துப்போட்டு இந்த காகிதம் கொண்டுவந்து உன் கையில் கொடுக்கிறதுக்குள்ளாக என்னவிற்று முதலாய் உன் கையில் பணம் சேர்ந்திருக்கிறதோ அதைக்கொண்டு வரச்சொல்லி காகிதமெழுதி கொடுக்கிறேனென்று காகிதத்தை யெழுதி எனக்கு படித்து காண்பித்து முத்திரைப் போட்டுக்கொடுத்து அவன் கையிலே நமக்கு சொன்ன பணத்துக்கு நல்ல ரொக்கபில்லை கொடுக்கிறேனென்று சொன்னபடிக்கு பில்லை வாங்கிக் கொண்டு அங்கப்பிள்ளையை அனுப்பிவிடு இவன் நம்முடைய மனுஷனென்று பேரிட்டுகொண்டு குத்தகை கிராமங்களும் கைவசம்பண்ணிக்கொண்டு நெல் உப்பு முதலானது வித்து முதல் பண்ணி அமுலுமவனுக்கு சரிபோன படிக்கு பண்ணிக்கொள்ளச் சொல்லி அப்பாலும் சந்தாசாயபு வந்த உடனே அவருடன் கிராமங்களைப்பேசி குத்தகைப் பண்ணிக்கொண்டு அந்த சன்னதை ரங்கப்பிள்ளையண்டைக்கு கொடுத்தனுப்புகிறேனென்றும் அந்த சம்மதிக்கு ஒப்பின பணமப்பால் குத்தகை பணம் வாயிதாபடிக்கு செலுத்துகிறபோது இதுவும் நம்பகமாம்படியே செலுத்தச் சொல்லென்று சொல்லி அங்கே பத்து சேவகர் இவன் குத்தகையிராததுகூட இருக்கச் சொல்லி திட்டம்பண்ணி எழுதியனுப்புகிறேனென்று சொன்னார். நல்லதென்று சொல்லி முசியே புருனேபேருக்கு (Bruno) கொடுத்த காகிதமும் அங்கப்பிள்ளை எழுதி கொடுத்த பித்திசமும் கணக்கு கூட எடுத்துகொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன். அப்பால் சந்தா சாயபு அண்டையிலிருந்து காகிதமொன்று வந்தது. அதிலே நபாபு இதாயத்து மொகதின்கானவர்கள் சேத்துப்பட்டு ஆரணிவந்தார்கள் நாங்களும் கூட புறப்பட்டு புதுச்சேரி வந்து சேரு

கிரூமென்று எழுதி வந்தது. அந்த சேதியைச் சொல்லி நம்முடைய வக்கீல் சுப்பய்யன் வந்தவாசியிலிருந்து எழுதின காகிதத்தில் தக்காசாயபு ஆற்காட்டுக்கு நயபு (Naib) சுபா கொடுத்து நவமொத்து சிரோப்பாவும் கொடுத்தார்களென்றும் அதின்பேரிலே அவரவர் நசர்குசனுயித்து நவ போது படிச்சார்களென்றும் வரும் ஞாயிற்றுக்கிழமை யிராத்திரி ஆற்காட்டுக்கு சாகிப்போனுரென்றும் எழுதியதுமல்லாமல் சந்தா சாயபு அவர்கள் புதுச்சேரிக்கு வருகிறோமென்றும் எழுதினதுமல்லாமல் சந்தா சாயபு புதுச்சேரிக்கு வந்து அங்கே பேசவேண்டிய பேச்சுகளெல்லாம் பேசிக்கொண்டுஅங்கிருந்து நபாபு இதாயத்து மொகதீன்கான் கூடதிருச்சினுபள்ளிக்குப்போய் அதைவாங்கிகொண்டு அப்பால் தஞ்சாவூரும் வாங்கிக்கொண்டு மைசூரும் வாங்குகிற பிரியத்தினத்தின் பேரிலே இருக்கிருர்களென்றும் இதற்கு பன்னீராயிரம் குதிரைகளும் இருபதாயிரம் ஸ்தோமும் (சிப்பாய்கள்) கூட வைக்கவும் எத்தனம்பண்ணி இருக்கிருர்களென்றும் இது முதலான சேதியெழுதின காகித சேதியெல்லாம் துரையவர்களுக்கு சொன்னவிடத்திலே தக்காசாயபுக்கு திவான் தனம் கொடுக்கிறதிலே இவருக்கு புத்திவாராதென்ன? அவர்களிருவருக்கும் முன் யாதொருமந்தந்து பண்ணுமல் இருந்த சங்கதி என்ன? மறந்துப்போய் தக்கா சாயபுக்கு திவான்கிரி உத்தியோகமும் ஆற்காட்டுக்கு நாயுபு சுபாவும் கொடுத்ததென்னவென்று கேட்டார். என்ன ஆனுலும் சகலபாடி திரவஸ்தன் முன் அல்லி தொஸ்துகான் நாளையிலே இவன் சிறிது நாள் திவான்கிரி உத்தியோகமும் பண்ணுர். அசனல்லிகான் நாயபாயும் இருந்து சிறிது சீர்மையும் வந்தவாசி கில்லாவும் கூட எஜமானத்துவமாயிருந்து அப்பால் அன்வர்த்திகான் அமுல் கொண்டு வந்தவாசி கில்லாவும் அதனுடைய சாகிருமாயிருக்கிற சேதி தாங்கள் கேள்விபட்டிருக்கிறீர்களென்று பயவாராய் சொன்னதின்பேரிலே நல்லவன் மகா குர்யேல் (C: ue) என்று சொல்லி பேசிக்கொண்டிருந்து அப்பால் நாம் திருவதிகை வகையாற பற்காருகளுக்கு எத்தனம் பண்ணியிருக்கிறோமே இதுகளுக்கு அவன் ரொம்ப விகாதம் பண்ணுவானென்று சொன்னுர் இதிலே பிச்சில்லை; ஆனுல் நமக்கு இரண்டு லக்ஷ ரூபாய் மட்டுக்கும் கொடுத்திருக்கிறோம்; அதற்கு ஈடாய் வைத்துக்கொள்ளுகிறோமென்று ஒருத்தருக்கு கொடுக்கிற குத்தகைபடிக்கு நமக்கு கொடுக்கச்சொல்லி கேட்கிறோமேயல்லாமல் பதினுயிரம் இருபதுநாயிரம தள்ளிப்போடச் சொல்லி கேட்கவில்லையே அந்தபடிக்கு/கொடுத்தால் நல்லது இல்லாமல் போனுல் நடக்கிற காரியத்திற்கு தக்கதாய்ப் பார்த்துக்கொள்ளுவோம் என்று சொன்னுர். அது பசுமைதானென்று சொன்னேன். அப்பால் சேக்கு மத்தெமுது பேரிலே எனக்கு முப்பதுநாயிரம் ரூபாய் மட்டுக்கும் வரவேணுமானுல் ஐந்து வருஷமாயிற்று. எனக்கு முன் பொல்லாதகாலம்

வந்து நஷ்டம் வந்து இப்போ நல்லகாலம் வந்து உம்முடைய தயவு பரிபூரணமாய் இருப்பதாலே எனக்கு வரவேண்டிய கடனும் நான் கொடுக்க வேண்டிய கடனும் தீர்த்துபோடுகிற காலம் வந்தபடியினாலே அதற்கடுத்தாற்போல் கொடுக்கவேண்டியவர்களும் மாற்கமாய் வந்து சேருகிறார்களென்றும் சேக்கு மந்தெமுதை முசர்பர்கான் முப்பது சிப்பாய்களை கூட்டி அனுப்பிவித்ததும் அவன் புளிச்சபாளையத்துக்கு வந்து சேர்ந்தான் நாளை காலையிலே வருவாரென்றும், இவனுக்கு பணமுண்டு இவன் கொடுக்கமாட்டோமென்று பொல்லாத மனதுடனே இருக்கிற சேதியும் இதுபெத்து நாய்க்கன் கூட அழைத்து வாரானென்று சொன்னவிடத்திலே நல்லது சுவாமி இனி உனக்கு தினதினமிவிருத்தியாய் தயவு பண்ணப்போகிறார் உனக்கு இனிமேல் நல்லகாலம் உனக்கார் பேரிலே வரவேணுமோ அவர்களை துலுக்கர் ஊரிலேயிருந்தாலும் நம்முடைய வூரிலே இருந்தாலும் தாக்ஷண்யமில்லாமல் பிடித்துவந்து பணத்தை வாங்கிப்போட்டு சுகப்படுமென்று சொல்லி பேசிக்கொண்டிருக்கச்சே சுங்கு சேஷாசல செட்டி கப்பல் பாதிரி முசியே பிரியேல் ( Friell ) முதலான இரண்டு மூன்று பெரிய மனுஷர்கள் அப்போ சென்னபட்டணத்துக்கு வர்த்தகர்கள் வரவர வருகிறார்கள் சென்னபட்டணம் பாளையக்கார உத்தியோகம் பெத்துநாயக்கருக்கு கொடாமல் மல்ராசாவுக்கு கொடுத்ததாகவும் அதன்பேரிலே பெத்து நாய்க்கன் கும்படிபூண்டி போய் சேர்ந்து வர்த்தகர்களை தன் பாளையக்கார உத்தியோக நிமித்தியம் பேசியிருக்கிறதாகவும் பேசிக்கொண்டிருக்கச்சே வெள்ளைக்கார ரங்கப்ப நாயகருக்கு மேஸ்தர் புஸ்காவென் ( Bascawen ) தேவனும் பட்டணத்திலே துபாசிதனம் கொடுத்தபோது இவ்விடத்திலே அதற்கு முன்னதாக ரங்கப்பிள்ளைக்கு உத்தியோகம் கொடுத்தபோது பழகாந்துரிய சாமணியும், பெறம்பு சிரோப்பாவும் கொடுத்து பீரங்கிபோட்வித்து இரண்டும் அவருக்கு தானமாய் தானே கொடுத்ததுமல்லாமல் முன்னே கொடிபிடிக்கப் போகிறதும் வெள்ளைப்பாவாடை முதலானதுகள் கொடுத்தார்கள் அவன் புறப்படுகிறபோதெல்லாம் அவர்கள் வெகுமான நகைகள் போட்டுக்கொண்டு பரிவட்டம் பிடித்துக்கொண்டு வெகும்போராய் புறப்படுகிறானென்று துரையவர்களுடனே லோகோபிராமமாய் பேசியிருக்கிறபோது சொன்னதற்கு அதற்கு துரையவர்கள் அவர்களுக்கு சொன்ன உத்திரம் அந்த ரங்கப்பனாய்க்கன் மத்தலோத்தண்டையிலே சேவித்து குடிக்க கஞ்சியில்லாமலிருந்து இப்போ இரண்டு வருஷமாய் தேவனும்பட்டணத்திலே சேர்ந்து மேஸ்தர் புஸ்காவேனை ( Bouscawen ) போய்ச் சேர்ந்த உடனே அவன் கொடுத்தான், ஆனபடியினாலே அவனுக்கு இந்த வெகுமானமும் அந்த மேன்பாடும் அவனுக்கு மெத்த பெரியதாய் கண்டு அவனந்தபடிக்கு

பேடாய் பண்ணிக்கொண்டு திரியாவிட்டால் அவனை ஒரு கூலிக்காரனாய் எண்ணுவார்கள். அப்படியல்ல இந்த ரங்கப்பிள்ளை இவனை பரம்பரையாக ஐஸ்வரியவந்தர் இதல்லாமல் இப்போ நாம் கொடுத்த வெகுமானத்தைப் போலேயும், அந்த மேஸ்தர் புஸ்க்காவென் (Banskawen) ரங்கப்பனையக் கனுக்கு கொடுத்த வெகுமானத்தை போலேயும், அந்த பிருதுக்கும், இந்த ரங்கப்பிள்ளை இந்த மட்டுக்கும் இவன் வெகுபேர்களுக்கு கொடுக்கிறபடி யினாலே அதுகளிவனுக்கு ஒரு பொருட்டாய் காணாதபடியினாலே மரியாதைக்கு கொடுத்தபோது வாங்கிக்கொண்டானே அல்லாமல் இல்லாவிட்டால் இப்படிபட்டதை அவன் ஒரு பொருட்டா எண்ணுகிறவனல்லவென்று பின்னையும் நெரிம்தாரியாய் சொன்னார். அதையெல்லாம் நான்தானே விஸ்தரித்து எழுதுகிறது நல்லதல்லவென்று நடந்த சேதியை மாத்திரம் சூட்சமா யெழுதினேன். அப்பால் பெரிய மனுஷர்களும், துரையவர்களும் பேசியிருந்தார்கள் நான் சலாம் பண்ணிக்கொண்டு சுங்குசேஷாசல செட்டியாருடனே பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

சுக்கில ஹு புரட்டாசி மீ 10 உ க்கு 1749 ஆ செப்தம்பர் மீ 22 உ சோமவாரம்

இற்றைநாள் காலையில் கோட்டையிலே வர்த்தகர் புடவை பார்வை யானபடியினாலே கோட்டைக்குப்போய் புடவை பார்த்து முப்பத்தைந்து கட்டு போர்ட்டான் பிற்பாடு எனக்கு சூணாம்பட்டு ராமசாமிசெட்டி வீட்டின் பேரிலே சாவடி சீட்டெழுதியிருக்கிறது. அப்படியிருக்கச்சே சம்பாகோவில் பாதிரிமார்களுக்கு சூணாம்பட்டு இராமசெட்டி வாணிய லஜாரு (Lazar) மகன் கொடுக்கவேண்டிய சம்மதி நிமித்தம் அந்த வீட்டைத் தழைய காரியமில்லை என்று நான் சின்னதுரையுடனே சொல்லிக்கொண்டதற்கு உனக்கு வீட்டின் பேரிலே சீட்டிருக்க மற்றபேர் தழைய காரியமென்ன. இப்பவும் அந்த வீட்டை ஏலத்தில் போட்டுவித்து எடுத்துக் கொள்ளச்சொல்லி உத்தாரம் கொடுத்தார்.

அப்பால் திருக்காமி ஆண்டியப்பன் தம்பி நல்லதம்பி அய்யாதம்பி வீட்டின் பேரிலே முன்னூற்று இருபத்து நான்கு விருகனுக்கு எழுதியிருக்கிற கிரேப்பு சீட்டு சம்மதியுங் காண்பித்து படித்துச் சொன்னதற்கு படித்து பார்த்து அதுவும் ஏலத்திலே போட்டுக்கொள்ளச் சொல்லி உத்தரவும் கொடுத்தார் அப்பால் தானியப்ப முதலியார் வந்தார். அவர் சாவடி துபாஷியான படியினாலே அவருக்கு சூணாம்பட்டு ராமசெட்டி வீட்டின் பேரிலே சாவடி சீட்டு எழுதினதும், அப்பால் சூணாம்பட்டு ராமசெட்டிக்கும் எனக்கும் இருந்த கணக்கு மத்தியஸ்தர் தீர்த்து எனக்கு எழுதிக் கொடுத்தசீட்டில் மத்தியஸ்தர்கள் கையெழுத்துமதிலே சாவடி துபாஷி தானி

யப்பமுதலியார் கையெழுத்தும் போட்டிருக்கிறதை உம்முடைகையெழுத்து கூட போட்டிருக்கிறதென்று அவருக்கு காண்பித்து அப்பால் அப்பாதம்பி நல்லதம்பி வீட்டுச்சீட்டு சம்மதியும் சொல்லி அப்பால் சின்னதுரை உத்தாரங் கொடுத்தும் சொல்லி நீ பகலுக்கு மேலாக போயிருந்து இரண்டு வீடு ஏலத்திலே போடவேண்டுமென்று சொன்னதற்கு பகலுக்கு மேலாக போயிருந்து ஏலம் போடுகிறேன் என்று சொன்னார். நல்லதென்று சின்னதுரையுடனே கூடச்சொல்லி இவருக்கு உத்தாரம்கூட கொடுப்பித்து நாலுமனுப்பிவித்துக் கொண்டுவரச்சே துரையவர்கள் சேவகன் வந்தழைத்தான். அப்பால் துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே சந்தா சாயபுக்கு நபாபு இதாயத்து மொகதீன் கானுக்கு உங்கள் வருத்து ரொம்ப மெதுவிலே போகுதென்று, உங்கள் வரவுக்கு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோமென்று உபசாரமாய் காகிதமெழுதியனுப்பச் சொன்னது. அந்தபடிக்கு காகிதங்களெழுதி வக்கீல்சுப்பய்யனுக்கு காகிதமெழுதிதபாலிலே அனுப்பிவைத்தேன் அப்பால் மைலாப்பூர் காட்டு கோயில் பாதிரி அந்தோனி (Antoui) என்கிறவன் வந்து துரையுடனே சந்தா சாயபு பர்வானகொண்டு மோயிதின் சாயபு என்கிறவன் பத்துக் குதிரைக்காரரை அழைத்துக்கொண்டுவந்து மயிலாப்பூரை ஒப்பிக்கச் சொன்னான். ஆனால் புதுச்சேரியிலிருந்து சிஞ்னோர் (Seijneud) குவர்னதோர் ஒடுதியில்லாமல் ஒப்பிக்கிறதில்லை என்று சொல்லி போட்டு வந்தேனென்று துரையவர்களுடனே சொல்ல அதன்பேரிலே அவன் வசத்தில் ஒப்பிக்க கவையில்லை என்று மயிலாப்பூரிலேயிருக்கிற அப்துலாய்மான் மைத்துனன் றயிமுகான் பேருக்கு ஒரு ஒடுதியொன்று எழுதச் சொன்னதென்னவென்றால்: சந்தா சாயபு மனுஷன் மோதீன்சாயபு என்று வந்தவனை மயிலாப்பூரிலே இருக்கவொட்டாமல் துறத்தி விடச்சொல்லியும் பாதிரி வருகிறமட்டுக்கும் அமுல் பந்தோபஸ்தாய் நடப்பித்துக்கொள்ளச் சொல்லி எழுதியனுப்பச் சொல்லி எனக்கு உத்தாரம் கொடுத்தபடிக்கு ஒரு பற்வானா ஒன்றெழுதி துரை மோகரு பண்ணி பாதிரி கையில் கொடுத்தோம். அவனும் தன் மனுஷருக்குங் காகிதம் மெழுதி மயிலாப்பூருக்கு அனுப்பிவைத்தான் அப்பால் மதாம் துப்ளேக்சு சந்தா சாயபு பேருக்கு ரஜா சாயபு பேருக்கு, பாதிரிவசமாய்தானே மயிலாப்பூர் கொடுத்து நடப்பிக்கச் சொல்லி அவர்களுக்கு விவரம் தெரியதக்கதாக பரிசு காகிதம் (Persian letters) மதனந்தபண்டிதனை அழைப்பித்து எழுதிவைத்து அனுப்பிவைத்தார்கள்.

**சுக்கில ௵ புரட்டாசி ௴ 12 உக்கு 1749 ஆ செப்டம்பர் ௴ 24 உ புதவாரம்**

இற்றைநாள் காலையிலே துரையவர்களிருந்து கொண்டு சந்தா சாயபு வருகிற சேதி யென்ன மெத்த நிகளத்திலே போகுது வந்தவாசியிலே இருக்

றவர்கள் அவர்கள் புத்தியை திருப்பிவிட்டார்கள் அதனாலே தாமதப்படு கிறது நல்லது இதாயித்து மொகதீன் கானுக்கு நான் இரண்டு வார்த்தை சொன்னால் சந்தா சாயபை வாங்கிப்போட்டு வேறே நாட்டிப்போடுவான். நல்லதாகட்டும் என்று சொன்னார். அதிலே காட்டு கோயில் பாதிரி அந்தோனி (Antony) என்கிறவன் வந்து அப்பால் நாள் பார்க்கிறதும், சகுனங்கள் பார்க்கிறதும் தமிழ் மதஸ்தர் எப்படி சொல்லுகிறார்களோ அப்படி துலுக்கர்கள் கேழ்க்கிறது மல்லாமல், இங்கிலிஷ் காரர்களும் பிராமணன் சொன்ன சாஸ்திரப்படிக்கு கேட்டு நடக்கிறது என்று சொன்னார் அது மெய்தானோயென்று கேட்டார். அது மெய்தான் இங்கிலீஷ்காரர், துலுக்கர்கள், பாதிரிமார், உலாந்துகாரரும்கூட என்று சொன்னேன், அப்படியாயென்று இது முதலான சேதி லோகாபிராமமாய் பேசியிருந்த பிற்பாடு சந்தாசாயபுக்கு ஒரு காகிதமெழுதச்சொன்னார். நாள்தோறு முங்கள் காகிதம் வந்து கொண்டிருக்கிறது. ஆறு எட்டு நாளையகாகிதம் வராதது எனக்கு மெத்த ஆச்சர்யமாயிருக்கிறதென்று எழுதி அனுப்பச் சொன்னார். அந்தபடிக்கு உபசாரமாய் காகிதமெழுதி தபாலிலே கொடுத்தனுப்பிவிட்டு பன்னிரெண்டு மணியடித்த உடனே கும்பனீர் கிடங்குக்குப்போய் செம்பு பேச்சும் சொல்லி வர்த்தகர்கள் கும்பினீருக்கு கூட்டுகிற சரக்கு சீக்கிறமத்துக்கு வரவில்லை என்று எப்படி கேட்கவேண்டுமோ. அப்படி காண்பித்து அங்கேயிருந்து வீட்டுக்குப் போனேன்.

சாயங்காலம் வக்கீல் சுப்பய்யன் காகிதம் சந்தா சாயபு நேற்று பதினோராம் தேதி காலையிலே பத்துமணிக்கு வந்தவாசிவிட்டு புதுச்சேரிக்கு வர பயணமாய் புறபட்டாரென்று இதாயத்து மொகதீன்கான் பதினோராம் தேதி சாயங்காலம் செஞ்சிவந்து சேருவானென்று எழுதிவந்த காகிதம் சேதியை ஏழுமணி வேளைக்கு துரைக்கு போய் கபுறு சொல்ல ஆனால் அவர் என்றைக்கு வந்து சேருவாரென்று கேட்க சனி, ஞாயிறு வந்து சேருவாரென்று சொன்னதற்கு கடைக்காரர் மற்றபேருக்கெல்லாம் தாக்கீது பண்ணி வடக்கே கடை கொண்டுபோய் போடச் சொல்லி உத்தாரம் கொடுயென்று சொல்ல அந்தபடிக்கு சாவடி கணக்கு முருகப்பிள்ளையை அழைப்பித்து உத்தாரம் கொடுத்து பாளையக்காரனை அழைப்பித்து பத்திரமாய் திருட்டு கலாபங்கள் இல்லாமல்படிக்கு மனுஷர்களைவிட்டு பத்திரமாய் விசாரிக்கச் சொல்லியுங் காவலிலே இருக்கிறபேர்களை சந்தடியிலே ஓடிப்போகாமல்படிக்கு பத்திரமாய் பார்க்கச்சொல்லி கண்டிப்பாயெப்படி சொல்லவேண்டுமோ அப்படி யெல்லாம் பத்திரமாய் சொல்லிப்போகச் சொல்லி அப்பால் கும்பினிகிடங்குக்குப்போய் வர்த்தகரைக் கண்டுபேசி அங்கேயிருந்து வீட்டுக்குப்போனேன்.

புவனகிரி திருவீதி வகையரா பர்காஞகான் அமில் சோஜி பண்டிதர் பரசுராமப்பிள்ளை புவனகிரி நாட்டு வில்வனாத ரெட்டி கூட அரும்பாத்தப் பிள்ளை சாவடி வந்து சேர்ந்து நாளையதினம் இங்கே வாரோமென்று முன்னதாக ரங்கோ பண்டிதன் வந்து கண்டு பேசினான்.

**சுக்கில ஞு புரட்டாசி மீ 13 உக்கு 1749 ஆ செப்தம்பர் மீ 25 உ குருவாரம்**

இற்றைநாள் இராத்திரி துரையவர்கள் என்னை நபாபு சந்தா சாயபு அவர்களும் இதாயத்து மொகதீன்கான் பாதர் முசபர் சங்கு அவர்களும் இவ்விடத்துக்கு வரத்தக்கதாக வருகிறார்களானபடியினாலே அவர்களுக்கு எதிர்கொண்டுபோய் அழைத்துவரச்சொல்லி நீயும் முசியே சேம்போலும் **(St. Paul)** முசியே தொத்தேலும் **(Dauteul)** முசியே பெடுதலமியும் **(Barthelemy)** முசியே அல்பேரும் **(Albert)** திரெகோம் **(Dragoons)** குதிரை சுவர்கள் முதலான செவகனை கூட பந்தோபஸ்துடனே போய் அழைத்துவர சொன்னபடிக்கு சின்னதுரை முசியே சேம்போல் **(St. Paul)** முதலான துரைகளை இஷ்தகபானுக்கு போகதக்கதாக இன்று காலையிலே தானே புறப்பட்டு முறட்டாண்டிசாவடிக்கு போயிருக்கிறபடியினாலே நான் இராத்திரி ஏழரை மணிக்கு வீட்டுக்கு வந்து வேட்டைவளம் முத்துகிஷ்ண பண்டாரத்தார் வந்தபடியினாலே அவருடனே பேசிப்போட்டு அப்பால் கோபால்சாமியையும் வெங்கடாசல ஐயனையும் நாளை காலையில் வரும்படி சொல்லச்சொல்லி நான் புறப்பட்டு சுங்கு சேஷாசல செட்டியாருடனே கூடப்போய் இராத்திரி பெருமாள்நாய்க்கன்சாவடியிலேயிருந்து இதிலே ஸ்ரீ துரையவர்கள் என்னை வரச்சொல்லி சேவகனை அனுப்புவித்த படியினாலே இருட்டோட போவோமென்று இன்று ராத்திரி பெருமாள் நாய்க்கன் சாவடியில்தானிருந்தோம்.

**சுக்கில ஞு புரட்டாசி மீ 14 உக்கு 1749 ஆ செப்தம்பர் மீ 26 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலையிலே நேற்று இராத்திரி துரையவர்கள் என்னை வரும்படி சொல்லியனுப்பினதினால் நானும் சுங்கு சேஷாசலம் செட்டியாரும் பெருமாளுய்க்கன் சாவடியிலிருந்து புறப்பட்டு ஊரைவந்து வீட்டுக்குப் போய் பழயது சாப்பிட்டு அப்பால் துரைவீட்டுக்கு போவோமென்று புறப் பட்டு போனவிடத்திலே துரை இன்னம் நித்திரைபோகிறார் என்று சொன்னவிடத்திலே அப்பால் பாக்குக் கிடங்கில் வந்திருந்து அப்பால் துரை நித்திரைபோய் எழுந்த உடனே நான்போய் சலாம் பண்ணின விடத்து இராத்திரி நீ இங்கேயிருந்தால் வரச்சொன்னேனேயல்லாமல் வெளியே போயிருந்தால் வரச்சொன்னேனோ வென்று சொல்லி சிறிது நேரம் பேசியிருந்து அப்பால் துரையவர்களை சந்தாசாயபு அவர்கள் வருகிறபடி

யினலே நீங்கள் முக்காதமட்டுக்கும் எதிர்கொண்டு போகச்சொல்லி உத்தாரம் கொடுத்து அனுப்பிவித்தார். அப்பால் நான் புறப்பட்டு வீட்டுக்கு வந்து அப்பால் பயணம் புறப்பட்டு நானும் சேஷாசல செட்டியாரும் பெருமானுய்க்கன் சாவடியிலே போய் நான் ஸ்னனம் பண்ணின உடனே கோபால்சாமியும் வெங்கடாசல அய்யனும் வந்தார்கள் ஆனபடியினலே அவர்களை முன்னதாக வழுதாவூருக்குப் போகச்சொல்லி அனுப்பிப்போட்டு அப்பால் சாப்பாடு வந்த உடனே சாப்பிட்டு அங்கிருந்து ராத்திரி மொறட்டாண்டி சாவடிப்போய் அங்கே சின்னதுரை முதலான பேர்களைக் கண்டுபேசி இராத்திரி அங்கிருந்து நான் திருச்சித்தம்பலத்துக்குப்போய் அங்கேதானிருந்தேன்.

சுக்கில ௵ புரட்டாசி ௴ 15 உக்கு 1749 ஆ செப்தம்பர் ௴ 27 உ சனிவாரம்

இற்றைனள் காலையில் நவாபு சந்தா சாயிபவர்கள் வருகிறதற்கு இஸ தகபாலு போகதக்கதாக சின்னதுரை, முசியே சேம்போல் (St. Poul) சென்னப்பட்டணம் கப்பித்தான் முசியே பெடுத்தலெமி (Barthelemy) தொத்தேல் (d'Auteuil) முசியே அல்பேர் (Albert) நான் சுங்கு சேஷாசலசெட்டி விருத்தாஜலம் அமில் பிழைப்பொருத்தாபிள்ளை அப்பால் முசியே திராகோவுக்கு (Dragoons) வாத்து ஐம்பதுகுதிரை சவாரிகளும் சவரிமுத்து சேருவைக்காரனும் தாலுக்கு சேவகர் பின்னையும் சங்கீத மேளதாள சம்பிரமத்துடனே மொறட்டாண்டி சாவடிவிட்டு புறப்பட்டு சாமத்துக்கெல்லாம் வழுதாவூர் போய் சேர்ந்து அவ்விடத்திலே ஆத்தோரத்திலே இருக்கிற காலிபுகான் மாந்தோப்பு பங்களாவிலே சின்னதுரை முதலானபேர் போயிறங்கினர்கள்.

அப்பால் நான் புறப்பட்டு வழுதாவூர் ஷராபாருக்குள்ளே இருக்கிற இராமபத்திர ரெட்டியார் வந்து வீட்டுக்கு வரவேணுமென்று அழைத்தபடியினலே அப்பால் நானும் சுங்கு சேஷாசல செட்டியாரும் இராமபத்திர ரெட்டியார் வீட்டிலிரங்கினேம் அவரும் வெகுமரியாதைப் பண்ணி நம்முடனே சென்ற பிராமணள் முதலான கோபால்சாமி, ஆனைக்கார சாமையன், வெங்கிடாசலய்யன், முதலான பேருக்கும் சேஷாசல செட்டியாருடனே சென்ற பேருக்கும் பிழைப்பொருத்தாப் பிள்ளையுடனே சென்ற பேருக்கும் அவர்களுக்கு உலுப்பை முதலானதுகள் அமர்த்தினர். அப்பால் சற்று நபாபு சந்தா சாயபு அவர்கள் திருவக்கரை வந்து சேர்ந்தார்களென்றும் இதாயத்து மொகிதீன் கான் பாதிராபுலியூர் வந்து சேர்ந்தாரென்றும் சேதிகேட்கப்பட்டது. அப்பால் நாம் மதாந்தபண்டிதன் பேருக்கு சந்தா சாயபுக்கு எதிராகப்போய் பேட்டியாகிற விபரமும் அவர் புதுச்சேரிக்கு வருகிற விவரமும், விடுதி, மற்றவைகளெல்லாம் அமர்த்திவைக்கச் சொல்லி

யும் இது முதலான சேதிகளெல்லாம் துரையவர்களுடனே சொல்லச் சொல்லியும், வில்லியனூர் பிற்காறு முதலான கிராமங்களெல்லாம் தைனூர்த்து அனுப்பிவைக்கச் சொல்லியும் ஒரு காகிதத்துக்கு இரண்டு காகிதமாயெழுதி அனுப்பித்து வைத்தேன். அப்பால் தண்டிலேயிருந்து என் பேருக்கு ராஜா சாயபு கொடுத்த காகிதத்தைக்கொண்டு ஆவரண்டை யிருக்கிற ராசோ பண்டிதர் வந்துக்கண்டு பேசினார். நானும் வர கொண்டு வந்த காகிதத்துக்கு பதில் காகிதமெழுதி அவரைக்கொண்டு ராஜா சாயபு பேருக்கு ஒரு காகிதமெழுதிவைத்து அந்த காகிதத்திலே நாளையதினம் ஸ்ரீ துரையவர்கள் எதிர்கொண்டு வருகிறதற்கு அம்பாரி போட்ட யானை ஒன்றும் நவபத்து போடுகிறதற்கு இரண்டு யானையும் இப்படியாக அனுப்பி வைக்கச்சொல்லி எழுதியனுப்பிவித்தேன். அப்பால் இது முதலான வயணங்களுக்கு எல்லாம் வக்கீல் சுப்பையன் பேருக்கு ஒரு காகித மெழுதியனுப்புவித்தேன். அப்பால் பன்னிரெண்டு மணிக்கு ஸ்னானம் பண்ணி இராமபத்திர ரெட்டி வீட்டிலே சாப்பிட்டு அப்பால் பயணமாகி சின்னதுரை முதலானவர்கள் இறங்கியிருக்கிற ஆற்றோர பங்களாவுக்கு புறப்பட ஆயத்தமாயிருந்தேன். இதிலே சுங்கு சேஷாசல செட்டியார் முதலானவர்களும் விருந்து சாப்பிட்டு வந்தார்கள். அப்பால் இராமபத்திர ரெட்டி முதலான, முத்து சின்னரெட்டி, தர்ம சிவரெட்டி, முத்துகிஷ்ண ரெட்டி, பச்சயப்ப முதலியார் இது முதலானவர்கள் வீட்டுக்குப் போய் பாக்கு வெத்திலை வாங்கிக்கொண்டு அப்பால் புறப்பட்டு ஆற்றோர பங்களா விற்குப்போய் சின்னதுரை முதலான துரையவர்களைக்கண்டு பேசி அப்பால் சந்தா சாயபுக்கு எதிராக போகவேண்டும் போகச்சே ஒரு நாழிகை வழி வடக்கே போன உடனே இதிலே திருவக்கரை விட்டு சந்தா சாயபு அவர் கள் புறப்பட்டாரென்கிறதாக முன்னே நம்முடைய சிப்பாய் சின்ன சுபேதார் சேக்கு அசேன் சிறிது குதிரை சுவருடனே வந்து இதாயத்து மொகதீன்கானும், சந்தா சாயபு கூட வந்து திருவக்கரையிலிரங்கி சந்தாசாயபு அவர்கள் முன்னதாக துரையவர்களைக் கண்டு பேசி மறுபடி வாரோமென்று சந்தா சாயபு வந்தாரென்று இந்த சமாசாரம் சொன்னான். அப்பால் அங்கே நடுவழியில் பல்லக்குகளிலிறங்கி அப்பால் குவாடுது குதிரை சுவர்கள் சேக்கு அசேன் சமேத்து சிப்பாய் துரை சுவர்கள் மதாம் துப்பிளேக்சு தாலுக்கு சேவுகர் முதலானவர்கள் இருபுரம் வரிசை நின்றார்கள். இப்படியிருக்கச்சே நபாபு சந்தா சாயபு அவர்கள் பல்லக் கின்பேரிலே வந்து பத்துபாகத்து தூரத்திலே நின்றார். அப்பால் அவ ருக்கும், நமக்கும் மனுஷமுகாந்திரமாய் ஒன்றுக்கொன்று மிலாகாத்து நடக்கச்சே நபாபு ராஜா சாயபு ஆனையின்பேரிலே அம்பாரியில் வந்து சீக்கிரமாயிறங்கின உடனே சந்தா சாயபும் பல்லக்கிலிருந்திரங்கினார்.

அப்பால் பத்தடி அவர்களும் பத்தடி எதிராக வந்தார்கள் நாங்களும் பத்தடி எதிராக போய்க்கண்டு ஒருவருக்கொருவர் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு அப்பால் துரையவர்கள் சொன்ன உபசாரமும் சொல்லி குசலபிரஸ்னம் பண்ணிக்கொண்டு அப்பால் அரை நாழிகை நேரம் அங்கேதானே நின்று பேசியிருந்த பிற்பாடு அவர்களவர்கள் வாகனங்கள் பேரிலேறிக்கொண்ட உடனே சந்தா சாயபு பார்த்து நாங்கள் பட்டணத்துக்கு சமீபமாக இராத்திரி வந்து இறங்கினேம். நீங்கள் முன்னதாக துரையண்டைக்குப்போகச்சொல்லி செலவு கொடுத்தார். அப்பால் முன்னதாக புறப்பட்டு முசியே தொத்தேல் (d'Auteuil) முதலான குதிரைசுவர்கள் வழுதாவூருக்கு வடபுரமாய் புறப்பட்டு முறட்டாண்டி சாவடியிலே இறங்கியிருக்கிற தண்டுக்குப்போனுர்கள். நபாபு முதலானவர்கள் வழுதாவூருக்கு சமீபமாய் வரச்சே கோட்டையிலே மூன்று பீரங்கிகள் போட்டார்கள். அப்பால் சின்னதுரை முதலான நாங்கள் இராத்திரி புறப்பட்டு ஏழரைமணிக்கு ஊரை வந்து சேர்ந்து ஸ்ரீ துரையவர்களைக்கண்டு பேசி அப்பாலிங்கேயிருந்து வந்த விருந்துகள் மற்றதுகளை சாப்பாடு பண்ணிவித்து பாக்கு, வெத்திலை முதலானதுகள் கொடுப்பித்து மிகுதியுமுபசாரஞ் சொல்லி நாளை உதித்த ஜாமத்துக்கெல்லாம் பட்டணத்தில் சந்தா சாயபு பிரவேசமானபடியினலே அன்னேரத்தில்தானே அரும்பாத்தபிள்ளை சாவடியிலிருந்து சந்தா சாயபு ரஜாசாயபு முதலானவர் கையிலனுப்பிவித்துக்கொண்டு மூன்று மணிக்கு புறப்பட்டுவந்தேன்.

அப்பால் ஸ்ரீ துரையவர்களைக் கண்டு இந்த சங்கதி எல்லாம் சொல்லி நாளைய சூரிய உதயத்துக்கெல்லாம் வில்லியனூர் வாசற்படியாய் நவாபு வருகிறபடியினலே முசியே துக்கெனை (Duquene) அழைத்து வரிசை மற்றதுகளெல்லாம் வைக்கச் சொல்லியும் வாசற்படியிலே கூடாரம் மற்றதுகள் போடச்சொல்லியும் தாக்கீதாய் உத்தாரம் கொடுத்தார் நானும் பரசுராமப் பிள்ளையை அழைப்பித்து தீனி மற்றதுகளெல்லாம் முஸ்தீது பண்ணச்சொல்லி அப்பால் பெரியண்ண நாயினரை அழைப்பித்து பாளையக்கார சேவகரையெல்லாம் முஸ்தீப்பாய் வரச்சொல்லி சங்கீத மேள முதலானபேரை தயாராய் வரச்சொல்லி தாக்கீது பண்ணி அப்பால் நான் புறப்பட்டு வீட்டுக்குப்போனேன்.

### சுக்கில ஸு புரட்டாசி மீ 16 உக்கு 1749 ஆ செபதம்பர் மீ 28 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலையில் வில்லியனூர் வாசப்படி முதல கொண்டு துரையவர்கள் வீட்டுமட்டுக்கும் ஏகமாய்ச் சொல்தாதுகளும் இருக்கிற சிப்பாய்களும் வரிசை வைத்து துரையவர்களும் ஏழரை மணிக்குப்போய் வில்லியநல்லூர் வாசற்படியிலே போட்டிருக்கிற கூடாரத்தில் சகல கோன்சேய்கள்

பின்னையும் வெள்ளைக்கார பெரிய மனுஷர்களுடனே கூட நவ பொத்து முத லான சங்கீத மேளவாத்தியங்கள் பொழிக அங்கே போயிறங்கி அங்கேயிருந் தென்னையும் சின்னதுரை முசியே கில்லியார் (Guillard) பின்னையும் இரண்டொரு ஒப்பிசியேல்மார்கள் மேளதாள சம்ரமத்துடனே குண்டுதாழை மட்டுக்கும் எதிர்கொண்டுபோய் நவாபு சந்தாசாயபு அவர்களை அழைத்துக் கொண்டு வரச்சொல்லி உத்தாரம் கொடுத்தபடிக்கு நாங்கள்போய் அழைத் துக்கொண்டுவர போனவிடத்திலே அதற்குள் மொரட்டாண்டி சாவடியிலே சந்தாசாயபு வருகிறாரென்று காத்துக்கொண்டிருந்த • முசியே தொத் தேல் முசியே புசி முதலான ஆற்காட்டுக்குப் போன பவுன்சு அப்படியே சந்தா சாயபு அவர்களைக் கண்டு தாழைக்கு நேராக வரச்சே அவர்களும் மொரட்டாண்டி சாவடி விட்டு புறப்பட்டு கூடவந்து கலந்துகொண்டு அவர்கள் சந்தாசாயபு ராஜாசாயபு அல்லிநக்சாயபு சபிர்தல்லிகான்சாயபு மச்சான் பதரதி உசன்கான் சாயபு முதலானபேர்கள் நவபொத்து முதலான ஆரவாரத்துடனே அவர்கள் வந்து கொண்டேயிருந்தார்கள் நாங்களும் நயினியபிள்ளை அவர்கள் தோட்டத் திற்கு சமீபத்திலே போய்க்கண்டு சந்தித்துக்கொண்டு அப்பாலவர்களை கூட அழைத்துக்கொண்டு ஒன்பது மணிவேளைக்கு வில்லியநல்லூர் வாசற் படியண்டையிலிருந்த ஸ்ரீ துரையவர்களுக்கு நபாபு சந்தாசாயபு அவர்க ளுக்கும் பேட்டியாகி ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உட்கார்ந்த உடனே இருபத்தொரு பீறங்கிப்போட்டார்கள். அப்பால் துரையவர்களும் நவாபு அவர்களும் ஒருவருக்கொருவர் குசலப்ரஸ்னை பண்ணிக்கொண்டு அங்கி ருந்து துரையவர்கள் வீட்டுக்குப் போகிறாய் அவர்கள் வாகனங்களில் ஏரிக்கொண்டு வாசற்படிக்குள்ளே வரச்செ இருபத்தொரு பீரங்கிப்போட் டார்கள் அப்பால் கோட்டைக்கு நேராக வரச்சே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள் அப்பால் துரையவர்கள் வீட்டுக்கு வந்த உடனே இருபத் தோரு பீரங்கிப்போட்டார்கன். இதுகளுக்கெல்லாம் துரையவர்கள் மைத் துனன் அல்பேர் (Albert) என்கிறவர் துலுக்கப்பேச்சி பேசுகிறதற்கு துவாசிதனம் அவர் மார்பத்திலே நடுக்குதறு அப்பாலும் அங்கேயும் பேச்சு வார்த்தைகள நடந்த பிற்பாடு துரையவர்கள் சந்தா சாயபையும் ராஜா சாயபையும் அல்லிநக்கிம் சாயபபையும் இவர்களை மதாமிருக்கிற காமரா விலே அழைத்துப்போய் அங்கேயும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

இப்படி லொகோபிராமமாய் துரையவர்களுடனேயும் மதாமுடனேயும் சந்தாசாயபுத்தான் மராட்டியருடனே புறப்பட்டு சாதாராவுக்குப்போனதும் அங்கே மரியல்லே இருந்ததும் தன்னை மாராட்டியர் வெகுசாய் அபினுன் பண்ணி துரகத்தின்பேரிலே கொண்டுபோய் போட்டது. இப்படியாகத்தான்

அவஸ்தைபட்டதும் அப்பால் தனக்கு நல்லகாலம் வந்து ஸ்வாமி ரக்ஷித்து தனக்கும் மராட்டியருக்கும் ஒப்பு உடன்படிக்கையாகி அவ்விடத்திலிருந்து சிறிது மராட்டியர் குதிரை சுவருடனே பவுன்சை கூட்டிக்கொண்டு புறப்பட்டு வந்ததும் அப்பால் சித்திரைகால பரமனுக்கு அவ்விடத்தில் சகாய சம்மதி பண்ணினதும் அந்த சண்டையிலே தன் பெரிய குமாரன் அபிசாயபு விழுந்துபோனதும் அப்பால் இதாயத்து மொகதீன்கான் பாதர் முஜபர்சங்கு அவர்கள் பேருக்கு பிரதஷவிலிருந்து துக்கினி இராஜ்யத்துக்கு நாசர்சங்குவை அல்லவையென்று அவர் பேருக்கும் பாலி பர்வணா வந்ததும் அப்பால் தன்னை அவர் ஆதரித்து பரவசம் ஆற்காடு சும்மா தனக்கு கொடுக்கிறோமென்று தன்னை அழைத்து வந்ததும் அப்பால் தாங்களென்பேரில் பரிபூரணமாயபிமானித்து என் குமாரன் ராசாசாயபையும் சொல்தாதுகள் சிப்பாய்கள் பீரங்கி மொகுத்தீயே துப்பாக்கி மருந்து, குண்டு, தீக்குடுக்கைகள் இது முதலான சண்டை சாமான்கள் கொடுத்து ஆற்காட்டின் பேரிலே அனுப்பிவித்து எனக்கு சத்துருவாக அன்வர்திகானை சங்கரித்து சகல ஜெயங்களும் உண்டாக்கி கொடுத்து எங்களுக்கு கீர்த்தி பிரதிஷ்டைக்கும் உண்டாக்கத்தக்கதாக நீங்கள் தயவு பண்ணிக்கொடுத்து நாங்களாற்காடு சுபா பண்ணத்தக்கதாக சகாயம் பண்ணினீர்களே யென்றும் இந்த சரீரம் உங்களாது என்றும், இது முதலானதுகளாய் துரையவர்களுக்கு நபாப் சந்தா சாயபு அவர்கள் ரொம்பவும் உபசாரங்களாய் சொன்னார்கள். அதற்கு துரையவர்களும் பிரதி உபசாரம் சொன்னார்கள். அப்பால் பகலுக்கு மேலாக துரையவர்கள் வீட்டிலேதான் துரையவர்கள் முதலான கோன்செல்கார் பெரியமனுஷருக்கு ஒரு பக்கம் பெரிய மேஜைப்போட்டு விருந்து சாப்பிடத்தக்க தீனிகள், தட்டு முட்டுகளெல்லாம் முஸ்தீப்பு பண்ணினார்கள். அப்பால் சந்தாசாயபு. ருசாசாயபு முதலான துலுக்கர் பெரிய மனுஷருக்கு துரையவர்கள் விருந்து செய்விக்கிற படியினாலே அவர்களுக்கு மெதிராதந்தானே மேஜை முஸ்தீப்பு பண்ணிவித்து அப்புரிசிகானுவிலேயிருந்து சாப்பாடு மற்றதுகளெல்லாம் வந்ததான படியினாலே துரையவர்கள் முதலான கோன்சேல்காரரும் சந்தாசாயபு முதலான துலுக்கர் பெரிய மனுஷரும் ஏக பந்தியாயிருந்து வெகு சம்பிரமாய் விருந்து சாப்பிட்டார்கள். அப்பால் விருந்து சாப்பிட்டான உடனே இருபத்தொரு பீரங்கிப்போட்டார்கள் இதுமுதலா சம்பிரமங்களெல்லாம் ஆன உடனே நாட்டிய முதலானதுகள் எல்லாம் நடந்தது அப்பால் ராத்திரியும் இந்தப்படியாகத்தானே விருந்து சாப்பிட்டார்கள் இனிமேல் விந்தையான சமாசார முண்டானால் எழுதி வைக்கிறேன்.

**சுக்கில ஸு புரட்டாசி மீ 17 உக்கு 1749 ஆ செப்தம்பர் மீ 29 உ சோமவாரம்**

இற்றைனாள் காலையிலே சேதி வந்ததென்னவென்றால்: நேற்று இதாயத்து மொகதீன்கான் சகலதன சமேதமாய் வழுதாவூரிலே ஆற்றோரத்து காலிபுகான் பங்களாவிலே வந்திறங்கினானென்று சேதி வந்தது. பட்டணத்துக்குள்ளே எந்தனைபேர் வந்தாலும் விட்டுவிடச்சொல்லி கெவுனி வாசல்கள் ஒப்பிசியல்மார்களுக்கு ஸ்ரீ துரையவர்கள் உத்தாரம் கொடுத்திருக்கிறபடியினாலே தடையில்லாமல் தண்டுக்காரர் குதிரை சுவர்களும் சிப்பாய்களும் ஆனைகளும் ஒட்டகங்களும் காலு பலங்களும் விஸ்தாரமாய் வந்து பட்டணங்களெல்லாம் நாலு பக்கமும் தெருத்தெருவுக்கும் நிறம்பினார்கள் இதல்லாமல் பெரிய மனுஷராய் வந்த சேஷராயன், ராமாயனு, அப்பாச்சி பண்டிதன் முதலான தேசத்து பிராமணாள், உத்தியோகஸ்தர்கள் பெரிய மனுஷர்களும், பிள்ளையும் துலுக்கர், மராட்டியர், ரசபுத்திரர் இப்படிப்பட்டவர்கள் ஐனூறு குதிரை, ஆயிரம் குதிரை, இரண்டாயிரம் குதிரை மூவாயிரம் நாலாயிரம் ஐயாயிரம் குதிரைக்கு சமேதாரர்களா யிருக்கப்பட்டவர்கள் பந்தா தமாஷா பார்க்க வந்தவர்களுமாய் பட்டணமெங்கும் வீடு வீடுக்கும் நிறைந்திருக்கிறார்கள். ஆனால் போன வருஷம் புரட்டாசி மாதம் இந்த நாளுக்கெல்லாம் இந்த பட்டணத்தின்பேரிலே இங்கிலீஷ்காரர் வந்திறங்கி சண்டை பண்ணி பீரங்கிகுண்டு மழையாய் பட்டணமெங்கும் வருஷித்து இனிமேல் ஏது என்று சங்கடப்பட்டதற்கு உடனே ஈஸ்வரன் எதிராளியாய் வந்த இங்கிலீஷ்காரனுக்கு சகல கீர்த்தி பிரதிஷ்டைகளும் கொடுத்து இவ்வருஷம் புரட்டாசி மாதம் எல்லாம் இந்த ராஜ்யத்திற்கெல்லாம் அதிபதியாயிருக்கப்பட்ட திஜமானவர் இவ்விடத்துக்கு வந்து போகத்தக்கதாக பண்ணினாரென்றால் அது மஹா ராஜ்யமான்ய ராஜ ஸ்ரீ ஆன்றுசன்றால் (**Honaurable General**) முசியே துப்ளேக்சு (**Dupleix**) அவர்கள் யோகமேயல்லாமல் மற்றப்படி என்னயிருக்கிறது? அப்பால் நேற்றையபோலேதானே துரை வீட்டிலே சந்தா சாயபு அவர்களுக்கு பகலைக்கு மேலாகவிருந்து மற்றதுகளெல்லாம் ஆயிற்று சாப்பாட்டு வேலையிலே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அப்பால் லோகாபிராமமாய் சந்தோஷ வார்த்தைகளாய் பேசியிருந்து அப்பால் இதாயத்து மொகதீன்கானவர்கள் நாளையதினம் பட்டணம் பரவேசமானபடியினாலே அவருக்கு வழுதாவூர் பட்டுக்கும் எதிர்கொண்டு போய் அழைத்துவரத்தக்கதாக சந்தா சாயபு அவர்கள் பயணப்பட்டார்கள். துரையவர்களும் சின்னதுரை முசியே சேம்போலையும் (**St. Paul**) சென்னைப்பட்டணம் கப்பித்தான் முசியே பெடுதலமி (**Barthelemy**) யையும் முசியே அல்பேரையும் (**Albert**) என்னையும் பின்னும் இரண்டொரு வெள்ளைக்காரர் பெரிய மனுஷரையும் கூடப் பயணப்படுத்தி

இஸத் கபாலுக்கு போகத்தக்கதாக நியமித்து சந்தா சாயபு அவர்களை வழிவிடத்தக்கதாக ஸ்ரீ துரையவர்கள் கூட பயணமாய் சகல தள சமேதமாய் ஆனைகள், குதிரை, சுவர்கள், மற்றுமுண்டான நவபோத்து முதலான வாத்தியங்கள் கொழிக்க புறப்பட்டார். பிற்பாடு உடனே கோட்டையில் இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் சென்னப்பட்டணம் வாசற்படி வழியாய் புறப்பட்டு வாசற்படிக்கப்பால் போட்டிருக்கிற கூடாரத்திலே போய் சந்தா சாயபுவை துரையவர்கள் பயணமனுப்பிவைக்கச்சே சென்னைப்பட்டணத்து வாசர்படியண்டையிலிருக்கிற கொத்தளங்களிலே யெல்லாம் ஏகநாதமாயிருக்கிற பீரங்கிகளெல்லாம் சுட்டார்கள். அப்பால் துரையவர்கள் வழியனுப்பிவிட்டு கோட்டைக்குப் போனார்கள். அப்பால் நாங்கள் சந்தா சாயபு முதலான பேரை கூட்டிக்கொண்டு போய் இராத்திரி வழுதாவூர் ஆற்றோரத்திலே இறங்கியிருக்கிற நபாபு ஆசபிசா ( ஆசப்ஜா **Asaf Jâh** ) இதாயத்து மொகதீன் கான் படுதர் முசர்ஜங்கு அவர்களை நாங்களெல்லாரும் பேட்டி பண்ணிக்கொண்டு துரையவர்கள் சொல்ல சொன்னதாய் சிறிது உபசாரவார்த்தைகளாய் சொல்லி அப்பால் உங்கள் சாகா இந்த புதுச்சேரி யிருக்கிறது ஒருதரம் நீங்கள் வந்து கண்குளிர பார்த்து அப்பால் சாகிபோகலாமென்றுச் சொல்லி இது முதலான உபசாரவார்த்தைகள் சொன்னதின் பேரில் இதாயத்து மொகதீன் கான் அவர்களும் அப்படியே புதுச்சேரி எங்கள் சாகாயாயிருக்கிறது அதற்காலோசனை என்ன? நாளைய சூரிய உதயத்துக்கு புறப்படுவோமென்று சொன்னார் இன்றையராத்திரி வழுதாவூரிலே நாணிருந்தோம்.

இந்தனாள் மத்தியானம் சீர்மை கப்பல் ஒன்று வந்து துறைபிடித்துக் கோட்டைக்கு ஒன்பது பீரங்கி வெடிப்போட்டார்கள். கோட்டையிலேயும் ஒன்பது பீரங்கி வெடிப் போட்டான் இந்த கப்பலிலே நூற்று முப்பத்தி மூன்று பொட்டி வெள்ளி வந்ததென்று சொன்னார்கள். போன வருஷம் இங்கிலீஷ்காரரை ஜெயித்ததற்கு ராஜா சந்தோஷபட்டு இதிலே துரையவர்கள் மனதுபடிக்கு நடத்தச் சொல்லி நிறு உத்திரமாய் எழுதியனுப்பிவித்தார்கள்.

**சுக்கில ஹு புரட்டாசி மீ 18 உக்கு 1749 ஆ செப்தம்பர் மீ 30 உ அங்காரகவாரம்**

இற்றைனாள் காலையில் புதுச்சேரிக்கு போகதக்கதாக நபாபு இதாயத்து மொகதீன் கான் முசபர் சங்கு அவர்கள் சகல தள சமேதமாய் சகல பிருதுகளுடனேயும் தம்மண்டையிலிருக்கிற சமேதார்கள் பெரிய மனுஷர்கள் னிசிரான் (**Niziers**) இப்படிபட்டபேர்களை பந்தாதுமாஷர் பார்க்கத்தக்கதாக கூட அழைத்துக்கொண்டு தம்முடைய சம்சாரத்துடனே கூட பயணம்

புறப்பட்டார்கள். பட்டணத்திலேயும் காலே எட்டுமணிக்கெல்லாம் இருக்கிற சிப்பாய்கள், சொல்தாதுகள், காப்பிரிகள், சகலமானபேர்களேயும் முஸ்தீப்பாய் வரச்சொல்லி சென்னப்பட்டணம் வழி குண்டுதாழை முதலாக கொண்டு இருபுரமும் வரிசையாய் துரையவர்கள் வீடுமட்டுக்கும் இருக்கிறுர்கள். துரையவர்களும் பன்னிரெண்டு மணிக்கெல்லாம் சாப்பிட்டுவிட்டு சகல கோன்செல்லியேர்களுடனே புறப்பட்டு சென்னைப்பட்டணத்து வாசற்படி அண்டையில் போட்டிருக்கிற கூடாரத்தில் வந்துஇறங்கி அவ்விடத்தில் தொம்மா வித்தைப்பார்த்துக் கொண்டிருந்தார். அப்பால் பன்னிரெண்டரைமணி வேளைக்கெல்லாம் இதாயத்து மொகதீன்கானவர்கள் சென்னைப் பட்டணத்துவழி சோதனைக்கு மேலண்டையிலே சின்ன முதலியார் தோட்டத்திலே நமாஜ் பண்ணிக் கொள்ளத்தக்கதாக இறங்கினர். அப்பால் நான் சின்னதுரை முதலானவர்கள் முன்னதாக புறப்பட்டுவந்து துரையவர்களேக்கண்டு நடந்த சமாசாரமெல்லாம் சொன்னேம். அப்பால் சந்தா சாயபு வந்து துரையவர்களைக்கண்டு பேசி மறுபடி இதாயத்து மொகுதீன்கானண்டைக்குப் போனர். அப்பால் சந்தாசாயபு அவர்கள் நிமாசுபண்ணிக்கொண்டு ஆனஉடனே சகல ஆபரணங்களும் பூஷிந்துக் கொண்டு அவரும், அவர் குமாரனும் புறப்பட்டார்கள். முன்னதாகத்தானே குதிரை சுவர்களும், யானைகளும், பிருவுகளும் சகல துப்பாக்கிக்காரரும் ஆனைகளின்பேரிலே குண்டு கோபிசவுர்சங்குகளும் இது முதலான ஆயுதபாணியாயிருக்கப்பட்ட பேர்கள். அனேகம்பேர் கும்பல் கும்பலாய் பாறுகள் பாறுகளாய் பட்டணத்துகுள்ளே போனுர்கள். அப்பால் இதாயத்து மொகதீன்கான் அவர்கள் குண்டுதாழைக்குள்ளே வரச்சே ஸ்ரீ துரையவர்களை கூடாரத்திலிருந்து எதிராகபோய் ஸ்ரீ மினுக்ஷியம்மன் சர்வடிக்கு இப்பால் இருவருக்கும் பேட்டியாய் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு குசலப்ரஸனே நடக்கச்சே சென்னைப்பட்டணத்து வாசர்படி முதல்கொண்டு கடலோரத்து மூலே கொத்தளம் வரைக்கும் இருக்கிற பீரங்கிகளெல்லாம் தேப் கும்பலாய் சுட்டார்கள்.

அப்பால் சகலமானபேர்களும் கூட வந்து கூடாரத்திலேயிருந்து நாட்டியம் பார்த்துக்கொண்டிருக்கச்சே துரையவர்களும் நவாபு சந்தா சாயபு அவர்களும் முன்னதாக புறப்பட்டு வந்தார்கள் அப்பால் சகல ஆடம்பரத்துடனே இதாயத்து மொகிதீன்கான் பாதரவர்கள் ஆனையின்பேரிலே தொட்டில் மாத்திரம் போடச்சொல்லி தாமும் தம்முடைய குமாரனும் முன்பாரிச முட்கார்ந்துகொண்டு அப்பால் கோட்டையிலே யிருக்கப்பட்ட வேடிக்கைகளெல்லாம் விபரமாய் சொல்லத்தக்கதாக சந்தா சாயபு குமாரன் ராஜா சாயபுகூட பின்பக்கத்திலே இருக்கச்சொல்லி புறப்பட்டு கெவுனி வாசக்லுகுள்ளே வரச்சே இருக்கிற பீரங்கிகளெல்லாம் திறனுய் போட்டார்கள். அப்பால் ராஜ

வீதியிலேதானே புறப்பட்டு இருபுறமும் சொல்தாதுகள் வரிசை நிர்க்க வைத்து புகையிலே கிடங்கு முத்தியபிள்ளையவர்கள் வீட்டு தெருவே திரும்பி கோன்சேல் வீட்டு வாசற்படி வழியாய் வந்து துரையவர்கள் வீட்டு தெனனண்டை வாசற்படியிலே வந்து யானையிலிருந்து இறங்கிய உடனே துரையவர்கள் வாசற்படிமட்டுக்கும் எதிராகபோயழைத்துவந்து துரை வீட்டிலே உட்கார்ந்த உடனே சமுத்திரக்கரை கொத்தளங்கள் பிறகரிபேரிலே இருக்கிற பெரிய பீரங்கிகள் அத்தியந்தம் ஒரு நாழிகைநேரம் சத்தமோயாமல் நாலு ஐந்து பீரங்கிகள் பத்தி பந்தியாய் விபரீத கோஷ்டம் எழுப்பத்தக்கதாக சுட்டார்கள் கப்பல்களிலேயும் இருபுறமும் பீரங்கிப்போட்டார்கள் அப்பால் துரையவர்கள் தம்முடைய வீட்டிலே இருக்கிற சித்திர விசித்திரங்களும் நிலைக்கண்ணாடிகளிலிருக்கிற சொகுசும் விந்தையாய் காற்றினாலே செய்த லாந்தர் கூண்டுகள் அங்கங்கே கூடியிருக்கிற அழகும் காகிதங்களெழுதுகிற கோந்துலார் வீடுகளும் இன்னுமநேக வேடிக்கைகளும் துரையவர்கள் இநாயத்து மொகதீன்கான் பாதர் முஜபர் சங்கு அவர்களுக்கும் நபாபு சந்தா சாயபு, ராஜா சாயபு அல்லிநக்கீம் சாயபு முதலான பேர்களுக்கெல்லாம் காண்பித்ததற்கு அவர்கள் மிக்க சந்தோஷப்பட்டுப் போகமென்றாலும் இப்படிபட்ட போகம் ஒருவருக்கும் வராது நல்ல அதிஷ்டசாலியென்றும் உம்முடைய மனோரதப்படி சகல காரியங்களும் அனுகூலமாய் வருமென்றும் இப்படி ஒன்றுக்கொன்று க்ஷேமலாபங்களாய் வார்த்தைகள் நடக்கச்சே வருஷம் வந்து இராத்திரி முப்பது நாழிகையும் தாரை தாரையாய் பெயர்ந்து அந்த மழையில் இரவு முசாபல் சங்கு அவர்களுக்கு துரையவர்கள் வீட்டில் யப்புரி சிக்கானவிலேயிருந்து விருந்து மற்றவைகளெல்லாம் துரையவர்கள்கூட சம்பந்தியாய் விருந்து சாப்பிட்டார்கள்.

**சுக்கில ஸு புரட்டாசி மீ 19 உ க்கு 1749 ஆ ஒக்தோபர் மீ 1 உ புதவாரம்**

அப்பால் பதினொருமணிக்கு பரசுராமபிள்ளை விநாயகம்பிள்ளையை அழைத்து துரைவீட்டிலே ஒருத்தரையும் யப்புருசிக்கானவிலே விடாமல் வெகு ஜாக்கிறதையாய் இருந்து நடந்நச்சொல்லி தாக்கீது பண்ணி அனுப்பிவித்தேன். அப்பால் முசாபர் சங்கு அவர்கள் பிறகாலேயும் சந்தா சாயபு அவர்கள் பிறகாலேயும் வந்திருக்கிற பெரிய மனுஷர் மற்றுமுண்டான பேர்களுக்கு பாராயிருக்கும்படி சந்தாசாயபு அவர்கள் வீட்டிலே இருந்து அவர்கள் பேருக்கு சீட்டெழுதி அனுப்பிவிக்கச் சொல்லி கோபால் ஸ்வாமியை அழைத்து மேலேயெழுதி யிருக்கிறபடிக்கு சந்தா சாயபு அவர்கள் வாசலிலே சீட்டெழுதியனுப்பிவிக்கச் சொல்லி நாலு சேவுகரையும் தயிளுத்துப் பண்ணி அனுப்பிவைத்தேன். அந்தபடிக்கு அவர்கள் பிறகாலே வந்திருக்கிற

பெரிய மனுஷர் சேஷய்யர், ராமராயர், அப்பாச்சிபண்டிதர் ஜகமுனிவாசாரியர் திருச்சினப்பள்ளி கோணப்பய்யர் குமாரர் அய்யண்ணய்யர் ரகுநாதராயர் பின்னையும் இப்படிப்பட்டவர் எல்லாருக்கும் கும்பினியிலே உலுப்பை மற்றதுகளெல்லாம் அனுப்புவிக்கிறார்கள் இதல்லாமல் மூன்று நாலைந்து மாசமாய் அண்ணாசாமி என்கிற பார்ப்பான் தாருமாரிய இல்லாத விசேஷங்களெல்லாம் மேல் போட்டுக்கொண்டு சேஷாசலராயன் தம்பி எண்பித்துக்கொண்டு மதாம் துப்ளேக்சு அண்டையிலேபோய் தான் யின்னான் இப்படிப்பட்டவன் என் கையில் நவரத்தினங்கள் அமுல்ய மானதுகள் இருக்கின்றன என்று பொய்யும் பொருட்டும் சொன்னதின்பேரிலே அவளும் பிரமித்துச் சென்றாள் வாயை திறந்து கொண்டிருக்கிறவனானபடியினாலே அவனை வைத்து ஆதரித்து அவனுக்கு சிறிநா சிலவுக்கும் கொடுத்து, வாசப்பய்யன் விடுதியும் விட்டு கட்டில், மெத்தை, தலைக்காணை மற்றதெல்லாம் கொடுத்தனுப்பி அவன் சொன்னபடி கேட்கச்சொல்லி நாலுபேர் சேவுகரையும் தயினாத்துப்பண்ணி சென்னைப்பட்டணத்திலிருந்து கோள்சொல்லிக்கொண்டு வந்திருந்த நம்பியானையும் கூடவைத்திருந்து அவனும் சரிபோனபடியெல்லாம் ஊரிலே தன்னைவிட வேறேயில்லை என்று சகலமானபேரையும் தூஷித்துக்கொண்டு தேவடியாள்களை அழைப்பித்து அவர்களுக்கு கனகமயமாய் ஆபரணம் கொடுக்கிறேனென்று ஆசை வார்த்தைகளைச்சொல்லி சினேகம் பண்ணிக்கொண்டு ஜவுளிக்கடைக்காரர், அரிசிக்கடைகாரர், பலசரக்குக்கடைக்காரர் அப்படிப்பட்டவர்கள் கையிலே தன்னண்டை ஒரு கோமுட்டியை வைத்துக்கொண்டு கடன்வாங்கி மனம் போனபடியெல்லாம் செலவழித்து நாம் தூம் பண்ணிக்கொண்டு திரிந்திருந்தவன் இப்போ சேஷராயன் வந்த உடனே தானிருக்கிற இடத்திலே பிச்சானு மற்றதுகளெல்லாம் முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு பொத்துராஜா கம்பிரியமாயிருந்தான். அப்பால் மதாமண்டைக்கு சேஷராயன் வந்தபோது இப்படி உன் தம்பி வந்தவிடத்திலே சகல முசத்திலேயும் காயந்தி முன்னென்று சொன்னவிடத்திலே சேஷராயன் சொன்னது, எனக்கு தம்பி ஏது? அண்ணனேது? யாரோ யெவரோ என்று பரிகரித்துக்கொண்டு அப்பால் சேஷராயன் அவனிருந்த விடுதிக்கு வாசப்பய்யன் வீட்டுக்கு வந்து இவனைப்பார்த்து அவனுக்கேத்த மற்நனம் பண்ணிவைந்து காலாலே உதைத்து ஒரு மூலையில் போட்டு காவல்பண்ணினாராம் அப்பால் வண்ணான் சொந்தி வெங்கய்யன் கூட்டம் என்றும் நாராயணப்பய்யன் கூட்டம் என்றும் இப்படி நானாவிதமாய் சொல்லுகிறானும். இப்படி இதுவரைக்கும் உபாய தந்திரமாய் ஸ்வாமி அவனுக்கு ஜீவனம் உண்டாக்கினார். இனிமேல் என்னமாய் நடத்துவாரோ அறியவேண்டியது.

அப்பால் பன்னிரெண்டு மணிக்கு மேலாக முஜபர்சங்கு அவர்களுக்கும் சந்தா சாயபு அவர்களுக்கும் துரையவர்கள் வீட்டிலே விருந்து நடந்த உடனே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அப்பால் நான்கு மணிக்கு மேலாக முஜாபர் சங்கும் சாந்தா சாயபு அவர்களுக்கும் துரையவர்கள் கோட்டையிலே அழைத்துப்போய் அங்கங்கே ஆயுத முஸ்தீபுகள் இருக்கிற இடமும் மருந்துக்கிடங்கு கோட்டை கொந்தலாரும் வெள்ளி கிடங்கும், பின்னையும் நானுவித தினுசுகள் இருக்கிற இடமும் கோட்டையின்பேரிலே இருக்கிற புருசுகள் பீரங்கிகளிருக்கிற வேடிக்கைகள் மணிக்கூண்டு இது முதலான வேடிக்கைகள் காண்பித்து ஆன உடன் அனைவரும் துரையவர்கள் வீட்டிற்கு வந்தார்கள். அப்பால் இராத்திரி எட்டு மணிக்கு நான் பாக்கு கிடங்கிலிருந்து கொண்டு திருவீதி புவனகிரி வந்தவாசி, செங்கற்பட்டு முதலான பற்காணுக்கள் விபரமும் பேரிசுகளும் முதலானதுகளெல்லாம் பிரான்சிலே எழுதிவித்து இனிம்மல் துரையவர்களுக்கும் காண்பிக்கப்போகிறேன். இதல்லாமல் இராசாப்பாளையத்தார், வேட்டவலம் பண்டாரத்தார், தொண்டமான் மறவன், சேதுபதி ஒட்டையா தேவன், தொறையூர், வாலிகொண்டாபுரம், முத்துமாசி ரெட்டியார் அந்தந்த ஸ்தலங்களிலே இருந்து அவரவர்கள் காரியத்துக்கு மனுஷர் வந்து கார்ந்துக்கொண்டிருக்கிற காரியமும் எழுதுவித்தேன். அப்பால் நானும் கோபால்சாமியும் மேலே இருக்கப்பட்டவர்கள் காரியாலோசனை பண்ணிக்கொண்டிருக்கச்சே நெல்லூர் அச்சயாமாங்காட்டு கோதண்டராமய்யர் திருவேந்திரபுரம் தேவனாதஸ்வாமி சன்னதியிலிருந்தும் மரிக்கொழுந்து வெட்டிவேரும் வந்தது அதை உங்களுக்கு கொண்டுபோய் கொடுக்கச் சொன்னார் என்று சுபகரமாய் ஆசீர்வாதம் பண்ணிக்கொண்டுவந்து கொடுத்தார்.

இதிலே சகல காரியங்களுக்கும் அனுகூலமாமென்று ஆலோசனை பண்ணிக்கொண்டேன். அப்பால் அவர்களுடைய அதிரிஷ்டானுசாரமாய் நடக்கவே நடக்கிறது.

இந்தனாள் செங்கல்பட்டிலிருந்து சேஷாத்திரி பிள்ளையவர்கள் வந்து சேர்ந்தார்கள். இந்தனாள் முஜபர்கான் திருவீதி புவனகிரி பஞ்சமால் சோஜிப் பண்டிதர், ரங்கோபண்டிதர், பரசுராமப்பிள்ளை, இவர்களுக்கு தன்மாரிபத்திலே பேசி வாங்கிக் கொடுத்ததற்கு தனக்கொரு காகிதமானாலும் எழுதியனுப்பவில்லையென்றும் கணக்குகொண்டு வந்து ஒப்பிக்கச்சொல்லியும் இப்படியாக அருவழக்குப்போட்டுக்கொண்டு அவர்களை சாப்பாட்டுக்கு விடாமல் மறியல்பண்ணியிருந்தான். இந்த சேதி நான் போய் துரையுடனே சொன்னதற்கு துரை சொன்னது உனக்கு சகல அதிகாரமும் கொடுத்

திருக்கச்சே உன் பலம் உனக்கு தெரியாதிருக்கிறுய் உன் வுத்திரவில்லாமல் ஒருத்தன் காவல் வைக்கக்கவையென்ன? என்று அவர்களை விட்டு விட்டா லாச்சுது இல்லாவிட்டால் காவல் வைத்தவர்களை நீ கொண்டு வந்து காவல் பண்ணிவை என்று சொன்னுர். அப்பால் நான் முஜபர் கானுக்கு தாக்கீதாய் சொல்லியனுப்பினதின்பேரில் அவர்களை அனுப்பிவிட்டான்.

சுக்கில ஞூ புரட்டாசி மீ 20 உ ௬ 1749 ஆ ஒக்டோபர் மீ 2 உ குருவாரம்.

இந்தனுள் காலையில் நான் முகபிரக்ஷான்னம் பண்ணிக்கொண்டு பழயது சாப்பிட்டு விட்டு துரை வீட்டிற்கு வந்து அங்கிருந்து பாக்கு கிடங்குக்கு வந்து அவரவர்களுடனே பேசிக்கொண்டிருந்து கும்பினி வர்த்தகரை அழைப்பித்து சீக்கிரமாய் கப்பல் கடச்சாரிந்துக்கு சீக்கிரமாய் புடவை இனப்பற்றிக்கொண்டு சேர்க்கச்சொல்லி வெகுசாய் தாக்கீதுபண்ணினேன் அப்பால் பன்னிரெண்டு மணிக்கு முஜபர்சங்கு அவர்களுககு துரை வீட் டிலே விருந்து சாப்பிட்டான உடனே இருப்பத்தொரு பீரங்கிப்போட் டார்கள்.

இற்றைனுள் துரையவர்கள் முசியே துகோனை (Duquene) அழைப் பித்து இருக்கிற சொல்தாதுகளை எல்லாம் முஸ்திப்பாய் வரச்சொல்லி பெரிய வரிசைவைத்து பவுன்சு பவுன்சாய் பிரித்து சண்டைபண்ண வேணும் முன்னூறு பீரங்கிகள் முதலானதுகளெல்லாம் தயார் பண்ணச் சொல்லி பீரங்கி மேஸ்திரியை அழைப்பித்து உத்திரவுகொடுத்து துப்பாக்கி வெடிக்காரருக்கு கடுதாசுகளும் உத்திரவுகொடுத்து பீரங்கி மருந்துகளுக் கும் உத்தரவுகொடுத்து அனுப்பினுர். இந்தபடிக்கு மூன்று மணிக்கு மேலாக போர்க் கப்பித்தான்மார்கள் சகலமான சொல்தாதுகள் முஸ்திப் பாய் வந்து கோட்டைக்கு கீழ் புறமாய் பெரியவரிசை நின்றுர்கள். அப்பால் துரையவர்களும் முசபர் சங்கு அவர்களும் சந்தா சாயபு அவர்களும் மற்றுமுள்ள துரைகள் சகலமானபேருக்கும் வேடிக்கைப் பார்க்க கோட்டை யின் மேல் போய் மணிக்கூண்டின் பேரிலே இருந்து வேடிக்கை பார்த்தார் கள். அப்பால் முசபர் சங்கு அவர்கள் சம்சாரம் பெண்டுகள் வேடிக்கைப் பார்ப்பதற்கு கோட்டையின் கீழ்புறம் தென் மூலை கொத்தளத்தின் பேரிலே கூடாரம் போட சாரதுகள்கட்டி அதிலேயே யிருந்து வேடிக்கைப்பார்த் தார்கள். அப்பால் சொல்தாதுகள் எல்லாம் பெரிய வரிசை நின்று அனை வரும் ஒருதரம் துப்பாக்கி வெடிகள் மள மள என்று யேக நிரபரமாய்த் தீர்த்தார்கள். அப்பால் இரண்டு கப்பல்களின் பேரிலே சண்டைப் பாவனை யாய் சிறிது பீரங்கிகள் போட்டார்களை. அப்பால் சொல்தாதுகளுக்கு சொல்

தாதுகள் சண்டைப் பண்ணுகிறதற்கு கோட்டைக்கு தென்புரம் சாகர விஸ்தாரமென்று சொல்லி துரையவர்கள் சகலமான படைத்தலைவர்மார்களையும் கோட்டைக்கு தென்புரம் வரச்சொல்லி தாமும் முசபர் சங்கு அவர்கள் முதலானவர்களும் கோட்டைக்கு தென்னண்டை மதிலின் பேரிலே போய் கொடிமரத்தின் கீழே உட்கார்ந்துக்கொண்டு வேடிக்கைப் பார்த்தார்கள். அப்பால் சொல்தாதுகள். மழோர், கப்பித்தான்மார்கள், ஓபிசியல்மார்கள் சாரசந்துமார்கள் சகலமான பேரும் இரண்டு பவுன்சாய் பிரிந்து தென்புரம் ஒரு பவுன்சும் வடபுரமொரு பவுன்சும் பிரிந்து ரெவ்வண்டு முன்னூத்து பீரங்கியையும் ரெவ்வண்டு மொடுதிரியையும் வாங்கிக்கொண்டு இருபது இருபதுபேர் குதிரை சுவர்களும் ஏற்பட்டு கத்திகளை உருவிக் கொண்டு நின்றார்கள். அப்பால் இருவருக்கும் சண்டை நடக்கிறபாவனையாய் முன்னூறு பீரங்கிகளும் மொடுதிரியும் கடுதாசித்தீக்குடுக்கைகளும் துப்பாக்கிகளும் வெரும் மருந்துமாத்திரம் போட்டு ஒருந்தர் பவுன்சின் பேரிலே ஒருத்தர் ஓயாமல் சுடவும் அந்தந்த புகைச்சலிலே குதிரைக்காரர்கத்திகளை உருவிக்கொண்டு ஒருந்தர் கும்பலின்பேரிலே ஒருத்தர் போய் விழுந்து வெட்டுகிறப்போலேயும் அப்பால் குதிரைக்காரர் பேரிலே பீரங்கி மொடுதியே துப்பாக்கிகள் சுட்டாப்போலே குதிரைக்காரர் விழுந்து கெட்டு ஓடிப்போகவும் அப்பால் ஒருத்தருடையயிடத்தை ஒருத்தர் மோசம் பண்ணவும்; அப்பால் எதிராளியாய் வந்தவன் கோட்டையின்பேரிலே பீரங்கிகளும் தீக்குடுகைகளும் சுட்டாப்போலேயும் அந்தக் கடுதாசி தீக்குடுக்கை புகை உயர ஆகாய மார்க்கத்திலே தீக்குடுக்கை குண்டு எழும்புகிறப்போலே எழும்பி அந்தப் புகை சக்கிராகாரமாய் நடுக்கோட்டையிலே குண்டு வந்து விழுகிறப்போலே காய்ந்துவர அதன்பிறகு எதிராளிபேரிலே கோட்டையில் திராளாய் பீரங்கிகள் சுட அப்பால் எதிராளி அபஜயப்பட்டு ஓடிப்போனதாய். இப்படியாகநான் குநாழிகைநேரம் துப்பாக்கிகளும், மேடு தீயேயும் முன்னூறு பீரங்கிகளும் கோட்டை பீரங்கிகளும் ஓயாமல் சுட்டு பகையாளியா யிருக்கப்பட்டவனுக்கும் கற்பம், கலங்கினுப்போலே ஏகவேளையிலே மகத்தா இருக்கப்பட்ட மேகங்கள் கர்ஜித்தாப்போலே படைத்தலைவரெல்லாம் சிங்க நாதங்கள் பண்ணிக் கொண்டு தாகெஷாய் சண்டை நடத்தினார்கள் அப்பால் இது முதலான வேடிக்கைகளெல்லாம் முசாபர்ஜங் கெயிதானவர்களும் நபாபு அவர்களும் மற்றுமுள்ள பெரிய மனுஷர்கள் சமேதார்கள் பின்னையும் தண்டிலே வந்து இருக்கிற சகல சமஸ்தமான பேர்களும் வந்து வேடிக்கை பார்த்தார்கள் வந்த ஜனங்கள் மட்டுமிதமில்லாமல் வந்தார்கள் அப்பாலிந்த வேடிக்கைகளெல்லாம் துரைகளனைவரும் பார்த்துப்போட்டு துரையவர்கள் வீட்டுக்குப்போனார்கள்.

இந்தனுள் சாயங்காலம் ஆறுமணிக்கு கோட்டைபண்டையிலே சண்டை பண்ணின வேடிக்கைப்பார்த்துப்போட்டு அப்பால் பாக்குகிடங்குக்கு வந்த விடத்திலே சேக்கு அசேன் சின்ன சம்மேதாரன் வந்து பேசிக்கொண்டிருக்கச்சே துரை அழைக்கிறுரென்று சேவுகன் வந்தழைத்தான். அப்பால் கெண்டல் குருவப்ப செட்டியையழைத்து கும்பினி கிடங்குக்குப் போய் வர்த்தகர் எல்லாரையும் கூட்டி புடவை சீக்கிரம் கோட்டைக்கு வந்து சேரத்தக்கதாக சொல்லச்சொல்லி அனுப்பிவைத்து நான் துரை வீட்டிற்குப் போய் துரையவர்களை கண்டு பேசி அப்பால் பாக்கு கிடங்கில் வந்து வேட்டைவலம் பண்டாரத்தாருடனே பேசிக்கொண்டிருக்கச்சே மறுபடி துரை அழைக்கிறுரென்று அழைத்தார்கள். போனவிடத்திலே இதாயத்து மொகதீன்கான் இப்போ இவ்விடத்துக்கு சாப்பாட்டுக்கு வரவில்லை; நீ அவர் விடுதிக்கு போயிருந்து சாப்பாடு மற்றவைகளெல்லாம் விசாரித்துவாவென்று சொன்னுர். நல்லதென்று பாக்கு கிடங்குக்கு வந்து தேத்தண்ணீர் குடித்துவிட்டு பெத்துநாய்க்கனை முஜாபர் சங்கு விடுதியாகிய கோன்சேல் வீட்டிற்குப் போய் அவர் என்ன செய்கிறுர் என்று பார்த்து வர சொன்ன விடத்திலே அவர் ருமாசு பண்ணுகிறுரென்று வந்து கபுறு சொன்னுர். மறுபடி அங்கேயேயிருந்து அவர் ருமாசு பண்ணி ஆன உடனே வரச்சொல்லியனுப்பிவைத்தேன்.

அப்படியே அவர் ருமாசு பண்ணி ஆன உடனே வந்து கபுறு சொன்னுர். அப்பால் புறப்பட்டு முஜாபர்சங்கு அவர்கள் விடுதிக்குப்போய் பப்புசிகானுவிலேயிருந்து சாப்பாடு மற்றவைகளெல்லாம் அழைப்பித்து முஜாபர்சங்கு அவர்கள் நபாபு முதலானவர்கள் சாப்பிட்டு ஆகிறமட்டுமிருந்து சந்தா சாயபு அவர்களுடனே சாவகாசமாய் பேசிக்கொண்டிருக்கச்சே துரை அழைக்கிறுரென்று வந்து அழைத்தார்கள் அப்பால் அவர்கள் கையிலனுப்பிவித்துக்கொண்டு துரையவர்களண்டைக்குப் போய் முஜாபர்சங்கு அவர்கள் விருந்து சாப்பிட்ட வயணமெல்லாம் சொல்லி சிறிது லோகாபிராமமாய் பேசியிருந்து அப்பால் பதினெரு மணிக்கு பாக்கு கிடங்கில் வந்து அப்பாலங்கேயிருந்து வீட்டுக்குப் போனேன்.

இதல்லாமலன்றையதினம் கோட்டை வேடிக்கை பார்க்கப்போன விடத்திலே கொடிமரத்தண்டையிலே சந்தடியாய் வருகிறபடியினுலே சாந்தினேல் காக்கிற வெள்ளைக்காரன் அந்த சந்தடியிலே அல்லி நக்கீம் சாயபை துப்பாக்கி பிடரியினுலே குத்தினபடியால் அப்பால் அல்லிநக்கீம் சாயபு ரசாசாயபு (சந்தா சாயபும்) இவர்கள் மூன்றுபேரும் இப்படிப்பட்ட அவமரியாதை நடந்தபடியினுலே அலக்கைப்பண்ணிக்கொண்டு புறப்பட்டு வீட்டிற்குப்போனுர்கள். இப்படி எதனுல் வந்ததென்றுல் நேற்று முன் தினம்

துரையவர்கள் வீட்டிற்கு முஜாபர்சங்கு வருகிறபோது சந்தடி திரளாய் வந்தபடியினுலே அப்பால் ரசா சாயபை சந்தடியினுல் திரளாய் வருகிருர்கள். பெரிய மனுஷரென்றும், சின்ன மனுஷரென்றும் தெரியவில்லை. ஆனபடியினுல் உங்கள் மனுஷரை கூடவைத்து விடச்சொல்லி சொன்ன விடத்திலே ராஜா சாயபு இருந்துகொண்டு பெரிய மனுஷரென்றும் சின்ன மனுஷரென்றுமிருக்கிறதாக காபந்துப்போருப்போலே மற்ற பேரையெல்லாம் துப்பாக்கியாலடித்து ஓட்டி விடுங்களென்று சொன்னவிடத்திலே அது இப்போ "தன் வினை தன்னைக்கொல்லும் ஓட்டப்பன் வீட்டைச் சுடும்"; என்கிற சமிதியாய் அவர்களுக்குள்ளேயே வந்து வாய்த்தது.

இதல்லாமல் முஜாபர்சங்கு அவர்களை சாப்பாட்டுக்கு அழைக்கிறதும், வருவதும் போகிறதும் வேடிக்கை பார்க்கப்போகிற இடத்துக்கு துரையவர்கள் சந்தா சாயபுக்கு சொல்லி அனுப்புவித்து அவர் முகாந்திரமாய் அவர் வாராதபடியினுலேயும் இதல்லாம் முஜாபர்சங்கு அவர்களை இவ்விடத்துக்கு அழைத்து வரலாகாதென்றும் நாங்களுமிவ்விடத்திற்கு வரலாகாதென்றும் மிஞ்சி வந்து விட்டோமே இனிமேல் செய்யவேண்டியதென்னவென்றும் இப்படி நாலாவிதமாய் வந்தபோது இருந்த சந்தோஷமில்லாமல் இப்படியெல்லாம் நடந்தபடியினுலே டோலாயமனப்பட்டுக்கொண்டிருக்கிருர்கள். இதல்லாமல் இராத்திரி நான் துரை வீட்டிலே போயிருக்கச்சே துரையவர்கள் என்னைப்பார்த்து கோட்டையில் வேடிக்கைப்பார்க்க போனவிடத்திலே இராயத்து மொகதின்கான் என்னண்டை வருகிற சந்தடியெல்லாம் நானு விலக்குகிறுனென்று கோன்செலியர்கள் கூட சொன்னுர்கள் ஆனபடியினுலே இவனிப்படிப்பட்ட நகவலுக்கு ஏற்ற மனுஷனல்லவென்று இப்படியாக சொன்னவிடத்திலே அதற்கு நானிருந்துக்கொண்டு நீங்கள் ஒரு பாதுஷாவும் இவர்கள் ஒருமன சுபேதாரர்களும் என்றும் நீங்கள் வாருசு இப்பவாங்கிப்போட்டு ஒரு சுபாவை வைக்கத்தக்கதாக இதேசேதுபரியந்தம் உங்கள் கீர்த்தி விளங்கச்சே அவனிப்படி செய்தானென்று சொன்னதற்கு துரையவர்கள் வெகு சந்தோஷப்பட்டு மெய்தானென்று ஒத்துக்கொண்டார். இதல்லாமல் முஜாபர்கான் துரையவர்களுக்கு வெகுமானம் கொடுத்த யானையை துரையவர்கள் என்ன பொருமென்று கேட்க அவனுடமை நமக்காகாது அவனது அவனுக்கு கொடுத்து விடுவோமென்று சொன்னுர். அப்பால் நானிருந்துகொண்டு ஆனை ஆயிரத்தைனூறு அல்லது இரண்டாயிரம் ரூபாய் மட்டுக்கும் பொருமென்று சொன்னேன். முன்னெரு மாதத்திற்கு முன்னே சோஜிபண்டிதர் அப்துல் சல்லிகான் ஆனைப்பிடித்து அனுப்பிவைத்திருந்த ஆனையும் அன்வர்திகான் தண்டிலே முசியே தொத்தேல் (d'Auteuil) சந்தா சாயபுவை அரியாமலெடுப்பித்துக் கொண்டுவந்த ஐந்து பீரங்கி துரையவர்களுக்குக்கொடுக்க அந்த பீரங்கி

நமக்கு என்னத்திற்கு என்று அந்த பீரங்கிகளும் அந்த யானையும் சந்தா சாய புக்கு துரையவர்கள் கொடுத்து விட்டார்கள். இந்தனுள் ராஜா சாயபவர்கள் மதாமண்டைக்குவந்து சொன்னதென்னவென்றால்: முசபர்கான் தனக்கு ரண்டாயிரம் குதிரைக்கு துரைத்தனமும் இருக்கிற சிப்பாய்களுக்கும் தங்களுக்கும் பல்லக்கு பிரதிஷ்டை நடத்தச்சொல்லியும் இதுகளுக்கெல்லாம் குதிரை சுவர்களுக்கு மாதம் ஒன்னுக்கு சம்பளம் 40 ரூபாய் கொடுக்கச் சொல்லியும் கால்நடை சிப்பாய்க்கு பனிரெண்டு ரூபாய் கொடுக்கச்சொல்லியும் தங்களுக்கு மாதம் 1 க்கு அறுனூறு ரூபாய் கொடுக்கச் சொல்லியும் இப்படியாக கேட்கிறான்; இப்படி கொடுத்தால் வருஷம் 1 க்கு முப்பது லக்ஷ ரூபாய் ஆயிற்றென்றும் ஒரு கர்னாடக சுவாவிலே வருகிற பணம் இவன் தவுசனுக்கு சரியாயிருக்குமென்றும் இப்படியாக சொல்லிக் கொண்டான். இந்த பிரஸ்தாபமெதினால் வந்ததென்று மதாம் ராஜா சாயபுவை அழைப்பித்து மயிலாப்பூர் பாதிரி அந்தோனிக்கு (Antony) பதவி பரிமாரு பண்ணிக்கொடுக்கச் சொல்லியும் மகமது கமாலுக்கு சபதி பண்ண வேண்டுமென்று சொன்னவிடத்து ராஜா சாயபு சொன்னது. நீங்கள் சொன்ன காரியம் முஜாபர்கான் தன் தம்பிக்கு அந்த மகம்மது கபால் பெண்ணை கல்யாணம் பண்ணி கொடுத்திருக்கிறானென்றும் முஜபர்கான்மேல் வாங்கிக்கொண்டிருக்கிறானென்றும் இதில் ஏதாகிலும் முஜாபர்கான் காரியத்திலே வித்தியாசம் நடந்தால் உங்கள் மனதிலே எப்படியிருக்குமோவென்று அதற்கு ஆலோசனை பண்ணிக்கொண்டு நடத்துகிறேனென்றும் இப்போதானு இப்படி எல்லாம் கேட்கிறான் என்று மேலே யெழுதியிருக்கிற வயணமும் இந்த வயணமும் ராசா சாயபு தன்னுடனே சொன்னான் என்னுடனேயும் நான் வழுதாவூர்மட்டுக்கு எதிர்கொண்டு போனவிடத்திலே ராசாசாயபு இந்த சங்கதி சொல்லியிருந்தார் நானும் துரையவர்களுடனே சொல்லி உங்கள் மனோரதப்படிக்கு நடக்கத்தக்கதாக துரையவர்களுக்குச் சொல்லி நடத்துகிறேன் என்று சொல்லியிருந்தேன் அதற்குப் போதனைசாரமாய் வழிக்கு வழியாய்த்தானே வந்து மதாமுக்கு ராஜா சாயபு சொன்னபடியினாலே மதாமிருந்து கொண்டு இப்போ பாதிரி அந்தோனி பேருக்கு மயிலாப்பூர் பகஷி பர்வானு எழுதிக் கொடுத்தால் முசபர்கானுக்கு நாங்கள் கொடுத்த துப்பாக்கிகளெல்லாம் வாங்கிகொண்டு அவனையும் மாயேக்கு போகிற கப்பலிலே ஏற்றி அனுப்புகிறோம். அப்பால் நீங்கள் அல்லிகானையும், சேக்கு இப்றாமையும், வைத்துக்கொண்டு நடத்துங்கோளென்று சொன்னவிடத்திலே அப்பாலந்த மதாமவர்கள் முதலாயிசாவின் பேரிலே பாதிரி பேருக்கு பகஷி பர்வானு எழுதிகொடுத்தார். இந்தபடியாக முஜாபர்கான் பேச்சு நடந்து தீர்ந்தது.

**சுக்கில ௵ புரட்டாசி ௴ 21 உக்கு 1749 ௵ ஒக்தோபர் ௴ 3 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலையிலே துரையவர்கள் வீட்டுக்குப்போன விடத்திலே துரையவர்கள் என்னைப்பார்த்து நீ போய் சந்தா சாயபைக் கண்டுபேசி முஜாபர்சங்கு அவர்கள் இருக்கிற இடத்துக்கு நாம் எப்போ வந்து வெகுமானம் வாங்கிக்கொள்ளுகிறதென்று கேட்டுவா வென்று உத்தாரம்கொடுத்தார் அந்தபடி நான் சந்தா சாய்பு இருக்கிற இடத்துக்குப்போய் அவருடனே துரைய்வர்கள் முஜாபர்சங்கு அவர்கள் அண்டைக்கு வந்து எப்போ வெகுமானம் வாங்கிகொள்ளுகிறதென்று கேட்டதற்கு அவரிருந்து கொண்டு வெகுமான முஸ்தீப்புகள் சரன்சாமி ஆகவேணும் ஆதலால் பகலைக்கு மேலாக நான்கு மணி வேளைக்கு நாம் போய் முஜாபர்சங்கு அவர்களண்டையி லிருந்து வெகுமானம் முஸ்தீபு சரன்சாமி பண்ணுவித்து அழைப்பிக்கிறோமென்று சொன்னார்.

அந்தபடிக்கு நான் வந்து துரையவர்களுடனே சொன்னேன் அப்பால் பகலைக்குமேலாக நான்குமணி வேளைக்கு நான் சந்தாசாயபு வீட்டிற்குப் போய் அவரை கண்டுபேசி அப்பாலவரும் நானும் முஜாபர்சங்கு விடுதியாகிற கோன்சேய் வீட்டுமெத்தையின் பேரிலே வந்து முஜாபர்சங்கு அவர்களை கண்டு பேசினவிடத்திலே அவர்கள் துரையவர்களை அழைத்துவர சொன்னபடியினாலே நான் துரையவர்கள் வீட்டுக்குவந்து துரையவர்களை முஜாபர்சங்கு அவர்கள் விடுதிக்கு அழைத்துவந்த விடத்திலே முஜாபர்சங்கு அவர்கள் துரையவர்களுக்கும் மதாமவர்களுக்கும் துரையவர்கள் குமாரத்திக்கும் வெகுமானம்பண்ணின விபரம் துரையவர்களுக்கு இதாயித்து மொகதீன் கான் அவர்கள் தாம் கட்டிகொண்டிருந்ததாக அனுறமகதாபி புட்டாதார் பாகையும் கொச்பேசும் அந்த பாகையின் பேரிலே சுற்றிலும் வஜ்ஜிரம் புதைத்து நடுப்புற கென்புகள், சுற்றிலும் வஜ்ஜிரம் கட்டி நடுவிலே பெரிய பச்சை நாயகம் வைத்து சரிபெஞ்சு ஒன்றும் தானம் பண்ணி நுனியிலே முத்துகட்டின கலிகிதுராய் வைத்துக் கட்டியிருந்த பாகை துரையவர்களுக்கும் முஜாபர்சங்கு அவர்கள் தன்னுடைய கையினாலே கட்டினார்கள் இதல்லாமல் சகலத்திலும் வஜ்ஜிரம் கட்டி நடுவே பச்சை பிழைத்த பதக்கம் ஒன்று, பாரிசிரோவ் ஒன்றுக்கு நகை 5, பெரிய ஆனை ஒன்று, மதாமவர்களுக்கு பாரி சிரோப்பா 1, ஷை குமாரத்திக்கு சிரோப்பா ஒன்று இப்படியாக வெகுமானம் கொடுத்து அவ்விடத்திலிருந்து முஜாபர்சங்கு அவர்களும் துரையவர்களும் ராஜாசாயபும் மற்றுமுள்ள பெரிய மனுஷரும் தீக்குடுக்கை சுடுகிற வேடிக்கை பார்க்கத்தக்கதாக புறப்படச்சே இருபத்தொரு பீறங்கிப்போட்டார்கள். அப்பால் துரையவர்கள் முஜாபர்சங்கு அவர்கள் முதலானவர்கள் புறப்பட்டு புகையிலை கிடங்கு வழியாய் வந்து

அங்கேயிருந்து சென்னைப்பட்டணத்து வாசற்படி கிழண்டே கொத்தளத் திலே போயிருந்தார்கள். அப்பால் கடற்கரை வடமூலே கொத்தளத்தின் பேரிலே மோராந்தியே காலேந்து வைத்து சிறிது வெடி குண்டுகள்போய் தரையிலேவிழுந்து வெடிக்கவும் சிலது ஆகாச மார்க்கமாக வெடிக்கவும் இப் படியாக விநோதமாக கடற்கரையோரம் வடக்கே குண்டுகள்போய் விழத்தக்க தாக சிறிது வெடிகள் சுட்டார்கள். அப்பால் முஜாபர்சங்கு அவர்களும் துரை யவர்கள் மற்றுமுள்ளபேரும் அவ்விடத்திலிருந்து அனைவரும் துரையவர் கள் வீட்டுக்குவந்து அப்பால் தாங்கள் எல்லோரும் இப்புரத்திலே வந்து இருந்துகொண்டு துரையவர்கள் முசியே பிரியேல் (Friell) வீட்டிற்குப் போனார்கள். அப்பால் மதாம் அவர்களும் மற்றுமுள்ள கோன்சேலியோர் வீட்டுபெண்டுகள் முதலான வெள்ளைக்காரிகளும், முஜாபர்சங்கு அவர்கள் பால் அவர்கள் தாயாரும் அவர் பெண்சாதியும் இப்படியாக பெண்டுகள் மய மாய் கூடிக்கொண்டு துரைவீட்டில் போய் மேஜை முஸ்தீப்பு பண்ணி எல்லோரும் விருந்து சாப்பிட்டார்கள்.

இதல்லாமல் இன்றையதினம் மந்திபானம் நபாபு சந்தாசாயபு அவர் கள் தக்கிசாயபு அவர்களுக்குமுன் வந்தவாசிக்குபோன விடத்திலே திவான் கிரி மோகார பண்ணியிருந்தபடியினாலே இன்றையதினம் அல்லிநகீம் சாயபு அவர்களுக்கு நபிபவுன்சு தாரிக்கு கொடுத்தார்கள். அல்லிராஜாகான் அவர்கள் ஐந்துவராகன் நதிர்கொடுத்தார். அப்போது சேஷாராயனும் ரகுநாதராயரும் பேருக்கு அவ்வைந்து ரூபாய் நதிர் வைத்தார்கள்.

அப்பால் திருப்பதி அமிலதாரன் சீனுவாசாச்சாரியார் திவானுக்கு திர ளாய் பணம் கொடுக்கவேண்டுமானபடியாலே இந்த வருஷம் பணம் காண வில்லை என்று ஓடிப்போனபடியினாலே அந்த திருப்பதியினுடைய அமு லுக்கு வாசுதேவாச்சாரியாருக்குக்கொடுக்கவும் அவர் முன் நிலுவை கூட இந்த வருஷ பணமும் லக்ஷ வராகன் சத்தியாய் கொடுக்கவும் இப்படியாக திருப்பதிசேர்ந்த ஐந்தாம் நாள் கொடுக்கிறேனென்று சொல்லியும் இதல்லா மல் வருகிற வருஷம் முதற்கொண்டு வருஷம் ஒண்ணுக்கு நாற்பத்தேழா யிரம் விராகன் ஆக மூன்று வருஷத்துக்கு இசாராபண்ணிக்கொண்டு சன னது யெழுதி காலையதினம் மோகரு பண்ணி வாசுதேவாச்சாரியரை காலைக்கு அனுப்பிவிடுகிறதாய் தீர்த்தார்கள்

இதல்லாமல் பொம்மராஜாபாளையத்தின்மேல் ராஜகாரியம் பினைத்துக் கொண்டு தப்பில் ராயப்பராஜா என்கிறவன் பெரிய சமேதார் முஜபர்கான் முகாந்திரமாய் நபாபு சாயபு அவர்களண்டையில் ராசவட்டம் பேசி பவுன்சு அனுப்பி ராஜனவர்கள் பாளையம் வாங்கி ராஜாவை பட்டம் கட்டினப் போலே ஆறு லக்ஷ ரூபாய் ஒரு மாத தவணையிலே கொடுக்கத்தக்கதாக

பேசி தீர்த்து இன்னம் இரண்டு மூன்று நாளையிலே முஜபர்கானையும் ராசாகவர்கள் பாளையத்தின்பேரிலே அவர் பிறகாலே மூவாயிரம் நாலாயிரம் பவுன்சு கூட்டி அனுப்பிவைக்கத்தக்கதாக யோசனை பண்ணி தீர்த்து இருக்கிறார்கள். ஆனாலிவர்கள் பாளயத்தின்பேரிலே போனதே உண்டானால் ஸ்தலத்திலே இருக்கிறவர்கள் காரியம் பத்தோமேயல்லாமல் மற்றப்படி என்ன நடக்கப்போகிறது? இதல்லாமல் இன்று சாயங்காலம் போம்பு சுடுகிறபோது ஒன்று வெட்டிக்க ஒரு வெள்ளைக்காரனை அடித்துக்கொண்டு போயிற்று.

இற்றைநாள் காலையில் எட்டு மணிக்கு கோட்டைக்குப்போய் கும்பினீர் வர்த்தகரது சலவை புடவையும் பாதாம் புடவையும் முப்பத்தொன்பது கட்டு போட்டபடியினாலே நான் சின்னதுரை முதலானவர்களைக் கண்டு பேசியிருக்கச்சே துரையழைக்கிறாரென்று சேவுகன் வந்தழைத்தபடியால் துரை வீட்டுக்குப் போனேன்.

சுக்கில ளு புரட்டாசி மீ 22 உக்கு 1749 ஆ ஒக்தோபர் மீ 4 உ சனிவாரம்

இற்றைநாள் காலையில் முகப்பிரக்ஷாளனம் பண்ணிக்கொண்டு பழயது சாப்பிட்டு பிறகு துரையவர்கள் வீட்டுக்குப் போனவிடத்திலே துரையவர்கள் அழைத்துச்சொன்னது: நேற்று இராயத்து மொகதீன்கான் வெகுமானம் கொடுத்த ஆனைக்கு நெஞ்சியில் இரணம் இருக்கிறதாம்; அந்த இரணம் எப்போதும் ஆருகிறதில்லையாம் அந்த யானையை மறுபடி சந்தா சாயபுடனே சொல்லி இந்த யானையைக்கொண்டுபோய் ஒப்பித்துப்போட்டு பதிலுக்கு யானை கொண்டுவரச்சொல்லி சொன்னபடிக்குப்போய் நபாபு சந்தா சாயபு அவர்களை கேட்டதற்கு அவர் சொன்னது. நல்லது இந்த யானையை ஒப்பித்துப் போடுங்கள் ஆனைகளெல்லாம் வெளியே போயிருக்கிறபடியினாலே நாளையதினம் யானைகளையெல்லாமழைப்பித்து நல்ல யானையாய் பொருக்கி பதிலுக்கு யானைகொடுக்கிறோமென்று சொல்லச் சொன்னார். அப்பால் வெள்ளைக்காரருக்கு தீனிகொடுத்த சிலவு சம்மதியிலே ஆற்காடு விட்டு மொறட்டாண்டி சாவடிக்கு வந்து புதுச்சேரிக்கு வருகிற நாள்மட்டுக்கும் தங்கள் படிச்சிலவுக் கணக்கெழுதிக் கொண்டு பேசுமாராய் முசியே தொத்தேல் (d'Auteuil) கேட்கிறானென்று ராசா பண்டிதர் வந்து நவாபு அவர்களுடனே சொன்னதற்கு நபா சாயபு என்னைப்பார்த்து ஆற்காட்டிலேயிருந்து வெள்ளைக்காரர் புறப்படுகிற மட்டுக்கு முண்டான செலவு பார்த்து கணக்கு தீர்த்து ரொக்கம் வழிச் சிலவுக்கு ஐயாயிரம் ரூபாயும் கொடுத்து ஏழாயிரத்து பன்னிரெண்டு ரூபாய் பாக்கிக்கட்டிக்கொண்டு அதுக்கு வாயிதா சீட்டு எழுதிக்கொடுத்து அனுப்பியிருக்க நாங்கள் மொறட்டாண்டி

சாவடியிலே இருபது இருபத்தைந்து நாளிருந்தோம் அதற்கும் கூட கொடுக்க வேண்டுமென்று சொல்லி எங்களை கேட்கிறதற்கு என்ன நியாய மிருக்கிறது. என்று சொல்ல நபாபு சந்தா சாயபு என்னைக்கேட்க அதற்கு நான் சொன்னது முசியே தொத்தேல் வெள்ளைக்காரன் பவுன்சுடனே கூட ஆற்காடு புறப்பட்டு போகிறீர்களே. ஆனால் நாங்கள் புதுச்சேரிக்கு வரு கிற மட்டுக்கும் உங்கள் பவுன்சப்படியே வழுதாவூரிலே யாகிலும் மொறட் டாண்டிசாவடியிலே யாயினும் இறங்கியிருங்கள் என்று சொல்லி நீங்கள் உத்தாரம் கொடுத்திருக்கிறீர்களென்று முசியே தொத்தேல் வந்து துரை யுடனே சொன்னார். ஆனாலவர்களப்படி உத்தாரம் கொடுத்திருந்தால் நீங்கள் வந்தபடியே மொறட்டாண்டி சாவடியிலேதானே யிறங்கியிருந்து அப் பால் அவர்கள் போகிறபோது கூட வாருங்கோளென்று சொல்லி துரையவர்கள் முசியே தொத்தேலுக்கு சொல்லி, யிருந்தார்கள். ஆனபடியால் உங்களுத்திரவு பிரகாரமவர்கள் வெளியிலேதானே இறங்கி யிருந்து இப்போ நீங்கள் வந்தபடியினாலே உங்களுடனே கூடவந்தார்கள். ஆகையினாலே நீங்கள் வெளியிலே இறங்கியிருந்த நாளுக்கு உண்டான சிலவு ஒத்துக்கொடுக்க வேண்டுமென்று நான் சொன்னதற்கு நபாபு சாயபு அவர் கள் சொன்னது அப்படியானாலும் இங்கேயிருந்து வந்த வெள்ளைக்காரர் ஐனூறுபேரும் சவுரிமுந்து சேருவைக்காரன் தாலுக்கா சேவுகர் நூற்றி ரண்டுபேரும் வந்தார்கள். இவர்கள் இவ்விடம்விட்டு புறப்பட்ட நாள் முதல் கொண்டு இதுவரைக்கும் இரண்டு இரண்டரைமாதமாயிற்று அன்றுமுதற் கொண்டு இன்றுவரைக்கும் ஜனம் ஒண்ணுக்கு நாள் ஒண்ணுக்கு ஒரு ரூபாய் விழுக்காடு, ஆனாலும் வாங்கிக்கொண்டாலும் சகஜம். அப்படியு மில்லாமல் இந்த இரண்டு இரண்டரை மாதத்துக்கும் ஏழுபதினாயிரம் எண்பது நாயிரம் மட்டுக்கும் எங்கள் கையில் வாங்கியிருக்கிறீர்கள். இதுவு மல்லாமல் இன்னும் இருபதினாயிரம் முப்பது நாலாயிரம் வரவேண்டு மென்று இல்லாதக்கணக்கெல்லாம் போட்டுக்கொண்டு எங்களைக் கேட்கிறார் கள். இவர்களுக்கு மாத்திரம் இந்த இரண்டு இரண்டரைமாதத்துக்கு லக்ஷம் ரூபாயாச்சுதே; ஆதலால் இந்த சங்கதியெல்லாம் நீர் துரையவர் களுடனே சொல்லும். அவர் பார்த்துக்கொடுக்கச் சொன்னால் கொடுக்கிறே மென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது நீங்களும் துரையவர்களும் துரையவர்கள் உங்களுக்கு எப்படி ராசியாயிருக்கிறதோ அப்படி நடக்கிற தென்று சொல்லி நான் இப்போது தந்திரமாய் தப்பித்துக்கொண்டு வந் தேன். ஆனாலிந்த ஐனூறுபேர் சொல்தாதுகளும் நூற்றிரண்டு சேவகருக் கும் இரண்டு இரண்டரை மாதத்துக்கு லக்ஷரூபாய்களுக்கானால் விசேஷித்து இவர்கள் குமுக்கு அழைத்துப்போனால் எம்மாத்திரம் கருசு பிடிக்குமே தெரியாது. இதல்லாமல் முன் திங்கட்கிழமை தமிழ்மாதம் பதினேழாம் தேதி

சந்தாசாயபு அவர்கள் துரையவர்களுக்கு மதாம் அவர்களுக்கும் மதாம் குமாரத்திக்கும் வெகுமானம் பண்ணின இரண்டானையும் சிரோப்பாவுகளும், ரத்தினநகைகளும் நேற்று இதாயத்து மொகதீன்கான் துரையவர்களுக்கு வெகுமானம் பண்ணின யானையும் சிரோப்பாவும் ரத்தின நகைகளும் இதல்லாமல் இதாயத்து மொகதீன்கான் பெண்சாதி மதாமவர்களுக்கும் மதாம் குமாரத்திக்கும் வெகுமானம் பண்ணின சிரோப்பாவுகளும் இந்த நாள் துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் சொன்னதின்பேரிலே எழுதியிருக்கப்பட்ட வெகுமான நகைகளும் ஆனைகளும் இதல்லாம் சொற்ப விலை நமக்கென்னாதுக்கு ? மறுபடி அவர்களுக்குந்தானே கொடுத்துவிடுகிறேனென்று சொல்லி நல்லது இதாயத்து மொகதீன்கான் கொடுத்தது என்னபொரும் என்று கேட்டதற்கு நான் எழுனூறு எண்ணூறு விராகன் மட்டுக்கும் பொரும் என்று சொன்னதற்கு அவரிருந்துகொண்டு அம்மாத்திரம் பொராது இருனூறு விராகன் மட்டுக்கும் பொரும் என்று சொல்லி அப்பால் சந்தாசாயபு கொடுத்த இரண்டானை எம்மாத்திரம் பொருமென்று கேட்டார். நம்முடைய பாணிப்பு நாலாயிரம் ரூபாய் மட்டும் பொரும். அவர்களால் பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் மதிப்பு பண்ணியிருப்பார்களென்று சொன்னேன்; நல்லது ஆகட்டும் பார்த்துக்கொள்ளுவோமென்று சொன்னார். அப்பால் சந்தா சாயபு அண்டைக்கு என்னைப்போகச்சொல்லி சொன்னபடியினாலே நானவ்விடத்துக்குப் போய் வருகிறதற்குள்ளே துரையவர்கள் வீட்டுக்கு சுங்கு சேஷாசல செட்டியார் வந்தாரானபடியினாலே துரையவர்கள் அவர் கையிலே சந்தா சாயபு தனக்கு வெகுமானம் பண்ணின நகைகளும் மதாமவர்களுக்கு வெகுமானம் பண்ணின நகைகளும், மதாம் குமாரத்திக்கு வெகுமானம் பண்ணின நகைகளும் கொடுத்து விலை பாணிப்பு பண்ணிக்கொண்டிருந்தார். இதிலே நானும் துரையவர்களண்டைக்குப் போனேன். அப்பால் துரையவர்கள் இதாயத்து மொகதீன்கான் வெகுமானம்பண்ண நகைகள் என் கையில் கொடுத்து முன் சேஷாசல செட்டியார் கையிலே கொடுத்த நகைகளுமிதையுமேகத்துக்கு விலை பார்த்து இம்மாத்திரமென்று நிஷ்கரிஷை பண்ணிக்கொண்டு வரச்சொல்லி சொன்னார். அப்படியே அந்த நகைகளை வாங்கிக்கொண்டு சுங்கு சேஷாசல செட்டியாரும் நானும் விலை பார்த்து தீர்த்து நிஷ்கரிஷை பண்ணின விபரம் :

இதாயத்து மொகதீன்கான் துரையவர்களுக்கு வெகுமானம் பண்ணின ரத்தின நகைகளின் மதிப்பு.

துருயி 1 க்கு

| | | |
|---|---|---|
| கென்பு 9 க்கு விருன் | வி | 50 |
| சின்ன கென்பு | | 20 |
| வஜ்ஜித்திரம் 28 க்கு மஞ்சாடி 10 க்கு | | 100 |
| முத்து 5 க்கு | | 15 |
| குந்தனம் தங்கம் | | 125 |
| ஆக துருயி 1 க்கு விராகன் .... | .... | 310 |

பதக்கம் 1 க்கு

| | | |
|---|---|---|
| வஜ்ஜித்திரம் 36 க்கு மஞ்சாடி 8 க்கு | வி | 110 |
| முருசு பச்சை 1 க்கு ரதி 12 க்கு | | 72 |
| நாயகம் நீர்வாக்குப் பச்சை 1 க்கு ரதி 20 க்கு | | 40 |
| பொன்கிறயம் | | 10 |
| ஆக பதக்கம் 1 க்கு விராகன் .... | .... | 232 |

சிருபொஞ்சு 1 க்கு

| | | |
|---|---|---|
| நாயகம் பச்சை 1 க்கு ரதி 30 க்கு | வி | 100 |
| கென்பு ரெண்டுக்கு | | 40 |
| முத்து 2 க்கு | | 30 |
| வஜ்ஜிர் 28 க்கு மஞ்சாடி 7 க்கு | | 84 |
| பொன் | | 16 |
| ஆக சிருபொஞ்சு 1 க்கு .... | .... | 270 |
| ஆக நகை மூன்றுக்கு விலை கூடின விராகன் .... | .... | 812 |

சந்தா சாயபு அவர்கள் துரையவர்களுக்கும் மதாம் அவர்களுக்கும் மதாம் குமாரத்திக்கும் அப்பால் இநாயத்து மொகதீன்கான் பெண்சாதி மதாமவர்களுக்கும் மதாம் குமாரத்திக்கும் கொடுத்த வெகுமானங்கள் விபரம்

| | | |
|---|---|---|
| சிருபொஞ்ச 1 க்கு | விராகன் | 400 |
| வஜ்ஜித்திரங்கள் 1 க்கு | | 565 |
| சின்ன சிருபொஞ்சு 1 க்கு | | 550 |
| சின்ன துருயி 1 க்கு | | 54 |
| பொஞ்சியன் 2 க்கு | | 436 |
| வளையல் 4க்கு | | 280 |
| பவிரியன் 2க்கு | | 54 |
| பெரிய பதக்கம் 1க்கு | | 400 |
| முத்துகட்டு சோடு 1க்கு | | 180 |
| தாரய் 1க்கு | | 210 |
| பதக்கம் 1க்கு | | 232 |
| சிருபுரேச்சு 1க்கு | | 270 |
| ஆகமொத்தம் விராகன் .... | .... | 3631 |

இந்தபடிக்கு விலை பார்த்து தீர்த்து துரையவர்களுக்கு சொன்னபடிக்கு அவரும் கணக்கெழுதிகொண்டார். சிரோப்பாவுகளும், யானைகளும் விலைப் பார்க்க சொல்லவில்லை ஆனபடியினாலே அதை விலை பார்க்கவில்லை.

அப்பால் ராயப்ப ராஜர் என்கிற தப்பிலி முஜபர்கான் முகாந்திரமாய் ராஜாவட்டம் பேசி வித்தவனை இந்தனாள் நபாசாயபு அவர்கள் யானையின் பேரிலே ஏற்றுவித்து உனக்கு ராஜானவர்கள் பாளயம் பத்தை பண்ணிக் கொடுக்கிறோமென்று சொல்லி பரவசமாய் சொல்லி கோட்டைக்கு வெளி யிலே கொண்டுபோய் பவுன்சு கூட்டி அனுப்பிவிக்கிறோமென்று சொல்லி வைத்துப்போட்டு வந்தார்கள். இந்தனாள் சாயங்காலம் முஜாபர்சங்கு அவர்களும் துரையவர்களும் ராஜாசாயபு இவர்கள் ஒழுகரைக்கு சவாரி போய் வந்தார்கள் அவ்விடத்தில் நடந்த சங்கதி பிறகாலே யெழுதிவைக் கிறேன்.

இந்தனாள் துரையவர்களண்டைக்குப் போய் துரையவர்களுடனே நான் சொன்னது என்னவென்றால்: முஜாபர்சங்கு அவர்கள் இவ்விடத் திலே வந்திருக்கிறப்போலே ஆயிற்றே இந்த சமயம் நம்முடைய கோட் டைக்கு சாகீர் ரூபமாய் சிறிது சீர்மை முஜாபர்சங்கு அவர்களுக்குச் சொல்லி வாங்கலாமென்று சொன்னதற்கு துரையவர்களிருந்துக்கொண்டு ஆனால் நீ தானே சந்தாசாயபு அண்டைக்குப்போய் அவருடனே சொல்லி முஜாபர்சங்கு அவர்களுக்கு சொல்லிவித்து உன் முகாந்தா மாய்தானே கோட்டைக்கு ஜாகீர் வருவாரென்று சொல்லி சந்தா சாயபு அண்டைக்குப்போய் பேசச்சொன்னார். அந்தபடிக்கு நான் சந்தா சாயபு அண்டைக்குப் போய் மேலே எழுதியிருக்கப்பட்ட வயணமாய் எல்லாம் அவருடனே சொன்னதற்கு அவரதற்கு சரி உத்தா ரம் சொல்லாமல் மூன்று நான்கு நாட்களாய் அவர் மனது அசமான தான மாயிருக்கிறபடியினாலே அவரந்த அடுக்கம் பேரிலே சொல்லவந்தார். அப்பால் நான் எப்படியும் இந்த காரியமனுகூலம் பண்ணிக்கொடுக்க வேணு மென்று சொல்லி எப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொல்லி அதன்பேரிலே சம்மதித்து நல்லதென்று சொன்னார்.

அப்பால் நான் துரையவர்களண்டைக்குவந்து சந்தா சாயபு நல்லது அப்படியே முஜாபர் சங்குக்குச் சொல்லிக்கொடு போமென்று சொன்னா ரென்று சொன்னதற்கு ஆனால் நீ தானே முஜாபர்சங்கு அவர்களண்டைக் குப் போய் அனுகூலம் பண்ணிக்கொண்டுவா வென்று சொன்னார். அப் படியே செய்தால் சந்தா சாயபு மனத்தில் விகல்பமாய் தோணுமென்று அவர்மூலமாய்த்தானே வரவேணுமென்று முஜாபர்சங்கு ஆனால் எடுப்

பார் கை குழந்தையாய் பேசுகிறார். இதல்லாமல் கைமாத்திரம் அழுத்தமா யிருக்கப்பட்டவன். ஆனபடியினாலே சந்தா சாயபு மாரிபத்தில்தானே வர வேண்டும். இல்லாவிட்டால் சந்தா சாயபுக்கு குறையாயிருக்குமென்று சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது சந்தா சாயபு மனதிலே குறை யாய்த் தோன்றினாலும் தோன்றட்டும் நீ போய் முஜபர் சங்குடனே பேசிப் பார். ஜாகீர் விட்டால் விடுகிறார்கள் விடாமல் போனால்தானே போச்சுது என்று சொல்லவந்தார் அதற்கு நான் சந்தா சாயபு சம்மதியாய் சொல்லா விட்டால் அல்லவோ இவரிடத்தில் பிரயத்தினம் பண்ண வேண்டுமென்று சொன்னதற்கு அவர்களால் அவசியத்திலே வாரார்கள் சொன்னப்போலே செய்ய தேவையில்லையா என்றுச் சொல்லி நீ அதையெல்லாம் பார்க்கதேவை யில்லை கெட்டியாய் போய் பேசென்று சொன்னார். நல்லதென்று வந்து அப் பால் முஜபர்சங்கு அவர்கள் சாப்பிட்டு தூங்குவாரென்று சொன்னார்கள். அந்த சேதியை துரையுடனே போய் சொன்னதற்கு சாயங்காலம் அவரும் நாமும் வண்டியின் பேரிலே போகிறோம் ஆனபடியினாலே நாளை காலையில் போய் பேசென்றார். நல்லதென்று புறப்பட்டுவந்தேன். இதல்லாமல் இந்த னாள் சங்கர்பாரிக் குமாரன் சம்புதாஸ் வந்து கோட்டை வெளியிலே வட புரம் மீனாக்ஷியம்மன் சாவடி அண்டையிலே கூடாரம் போட்டுக்கொண்டு இறங்கினார். என்று சொன்னார்கள். அப்பால் நவாப் சந்தா சாயபு தேவனும் பட்டணத்துக்கு இங்கிலீஷ்காரர் சாமிராயர் மாரிபத்திலே ராசாவிடம் விட்டு இவர்களாய்தானே நாங்களவ்விடத்துக்கு வருகிறோம். உங்கள் பாதர் பார்க்க வேண்டியிருக்கிறதென்று காகிதமெழுதி யனுப்பி வஸ்திரங்களும் அனுப்பியிருக்கிறார்களென்று சேதி கேட்கப்பட்டது.

**சுக்கில ஞு புரட்டாசி மீ 23 உக்கு 1749 ஆ ஒக்தோபர் மீ 5 உ ஆதிவாரம்**

இற்றைனாள் காலையில் முந்தானாள் துரையவர்களுக்கு இநாயத்து மொகதீன்கான் வெகுமானம் பண்ணின யானைக்கு பதில் யானை நல்ல பெரிய யானையாய் ஐந்தேமுக்கால் முழம், ஆறுமுழம் உயரமாயிருக்கிறயானையைப் பார்த்து துரையவர்களுக்கு கொடுத்தார்கள் அப்பால் துரையவர்கள் கோட்டை கோவிலுக்கு பூஜை கேட்கபோகச்சே முஜாபர் சங்கு அவர்களும் கூட வெள்ளைக்கார கோவில் வேடிக்கைபார்க்கத்தக்கதாக கூடப்போய்வர தக்கதாக சகல சம்ரமத்துடனே புறப்பட்டு கோட்டை கோயிலுக்குப்போன உடனே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அப்பால் அவ்விடத்திலே பூஜை வேடிக்கைப்பார்த்து சங்கீதமும் வீணை வாத்தியமும் இது முதலான வேடிக்கைப்பார்த்துப்போட்டு அப்பால் வீட்டுக்கு வந்தஉடனே இருபத் தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் முஜாபர்சங்கு அவர்கள் சாப்பிடத் தக்கதாக புறப்பட்டு பாலுக்கு வந்தார்கள். அப்பால் துரை அவர்கள் முஜா

பர்சங்கு அவர்கள் கிசுமத்துக்காரருக்கு ஆயிரம் ரூபாய் வாங்கிக்கொடுக்கச் சொல்லி தம்முடைய கணக்கு ரங்கப்பிள்ளைக்கு முகாப்பிரு பண்ணினார். ரங்கப்பிள்ளையும் பிற்பாடு ஆயிரம் ரூபாய் அனுப்பிவைக்கிறேன் என்று சொன்னார். அப்பால் துரையவர்கள் என்னை அழைத்து சின்னதுரை முதலான கோன்சேல் காரருக்கு ஐந்து பேருக்கு சிரோப்பாவும், குதிரையும், மற்ற மூன்று பேருக்கும் சிரோப்பா மாத்திரம் நீ போய் சந்தாசாயபுக்கு சொல்லி வாங்கிக்கொடு என்று சொன்னார். நல்லதென்று நான் புறப்பட்டு சந்தாசாயபு அவர்களண்டைக்கு போனவிடத்திலே நடந்த வயணம் என்னவென்றால்: சந்தாசாயபு அவர்களுடனே நான் சொன்னது நீங்கள் மகா ப்யாகசாலியர் அதேதனாலென்றால் உங்களிடத்தில் வெகு உதாரத்வமிருக்கிறபடியினாலே எந்த காரியம் நீங்கள் நினைத்தாலும், சுவாமி உங்கள் காரியமெல்லாம் அனுகூலம்பண்ணி இருக்கிறதேயல்லாமல் தாஷி வரத்தக்கினதல்ல. இப்போ தகோ சாயபு இருக்கிறார், வேலூர் முறதல்லிகான் இருக்கிறான் அவர்கள் வசத்திலே நாற்பது லக்ஷம், ஐம்பது லக்ஷம் வெகுசாய் திரவியமிருக்கிறது அவர்களுக்கு அந்த பணத்தின் பேரிலே லோபமிருக்கிறபடியினாலே ஒரு காரியமும் பெரிய காரியமாய் நடப்பதற்கு இடமில்லை அதெப்படியென்றால்: முன்னாலே கிஷ்ணராயர் இராஜ்யம் பண்ணுகிறநாளையிலே ஒருநாள் அப்யங்கணம் பண்ணிக்கொள்ளுகிறப்போது டெல்லி சமஸ்தான வக்கீல் இருந்தார். அப்போ ஒரு துளி தைலம் கீழே சிந்திற்று அந்த தைலத்தை கையினாலே தொட்டு தலையிலே தடவிகொண்டார். அதை டெல்லி சமஸ்தானம் வக்கீல்பார்த்து உடனே வெளியே வந்து கிஷ்ணராயருக்கு லோபகுணம் பிறந்து இருக்கிறது. இந்த சமயத்திலே தளத்தைக்கூட்டி அனுப்பிவித்தால் சமஸ்தானம் கைவசமாமென்று எழுதியனுப்பிவித்தார்கள். அந்தபடிக்கு தண்டை அனுப்பிவைத்தார்கள். தண்டுவருகிற சேதி கிஷ்ணராயர் கேட்டு அகாரணத்திலே தண்டுவர காரியமென்னவென்று கிஷ்ணராயர் அப்பாஜியை அழைப்பித்துக்கேட்டார். அப்போ அப்பாஜியிருந்து கொண்டு டெல்லி ஸ்தானாதிபதி பதினைந்து நாளைக்குள்ளே வந்திருக்கிறபோது அதிசியமானகாரியம் உங்களிடத்திலே நடந்ததுண்டாவென்று கேட்டார். அப்போ கிஷ்ணராயர் யோசனை பண்ணிப்பார்த்து ஒரு நாள் அப்யங்கணம் பண்ணிகொள்ளுகிறபோது ஒரு துளி தைலம் கீழே சிந்திற்று அதை நாம் கையிலேதொட்டு தலையிலே தடவிகொண்டோம். இவ்வளவே யல்லாமல் பின்னையொன்றும் நடந்ததில்லையென்று சொன்னார். அப்பால் அப்பாஜி சொன்னசேதி அப்படி நடந்ததினாலே உங்களுக்கு லோபகுணம் வந்ததென்று இந்த வேளையிலே தண்டையனுப்பினால் சமஸ்தானம் கட்டலாமென்றும் எழுதியிருக்கவேண்டும் ஆகையினாலே யிப்போது அவனை கிட்டவைத்துக்கொண்டு அப்யங்கணம்

பண்ணிகொண்டு தைலத்தினாலே தொடத்தக்கதாக நடப்பித்தால் தண்டு வாங்கிப்போமென்று சொன்னார். அந்தபடிக்கு கிஷ்ணராயர் நடப்பித்தார். உடனே டெல்லி வக்கீல் யோசனைப்பண்ணிப்பார்த்து இப்படி அப்பாஜி பண்ணியிருக்கவேணுமென்றும் இந்த அப்பாஜியிருக்கும்தனையும் சாதிக்கப் போகாதென்றும் தண்டைவாங்கி வைத்தான். அப்படிப்போல் உங்களுடைய மனது வெகு தாராளமானபடியினாலே சப்தல்லிகான் விருந்துபோன பிறகு நிஜாமைபோல் அவர் திருச்சினாபள்ளிவரைக்கும் வரவும் அப்போ இங்கே இருக்கிறபேர் நிர்வாகம் பண்ணிக்கொள்ளமாட்டாமல் லோபகுணத்தினாலே தவுலத்தும்பனசுபையும் விட்டு விடவும் இப்படி கடந்து போச்சுது உங்கள் கையிலே திரவியம் இல்லாமலிருக்க நீங்கள் சத்துருயிடமாய் போய் சேர்ந்து இருக்கவும் மனதினுடைய தாராளத்தினால் சகல தவிலத்தும் சுபையும் சகல கீர்த்தியும் உங்களை வந்து அடைந்தது வர்த்தகன் கிரகஸ்தன் இப்படி கொடுத்தபேருக்கு லோபகுணம் திரவியமே பெரியதாய் பார்க்கவேண்டியது இராஜலக்ஷணம் மிக கடாக்ஷம் உள்ள உங்களைப்போல பிரபுக்கள் என்ன செய்ய வேண்டுமென்றால் திரவியமே காரணமாய் பார்க்கப்படாது தாராளமாய் விரயங்கள் ஒரு சீர்மை கட்டின உடனே மறுபடியும் சீர்மை கட்டுகிறதினாலே எத்தனம் நடத்தி காட்டவேண்டியதென்று சொன்னேன். அதற்கு நபா சாயபு அவர்கள் வெகு சந்தோஷபட்டு சொன்ன சேதி என்னவென்றால், நாம் வெகு பேருடனே வார்த்தைகள் பேசியிருக்கிறோம். இதுவரையிலும் ஒருத்தராயினும் இப்படி நம்முடைய மனதிலே இருக்கிறபடிக்கு சொன்னபேரில்லை. முன்னாளில் நம்முடையவர்கள் யாருக்கும் மனதில்லாமல் இருக்கிறதிலே நாம் ராஜ்யம் கூட்டவேண்டுமென்று யோசனைபண்ணி ஆரவாரத்தையும் கேட்காமல் தஞ்சாவூர் திருச்சினாப்பள்ளி இதுகளெல்லாம் சதித்து ஜனார்த்தனவரைக்கும் கட்டி அப்பால் மைசூரும் கட்டவேண்டுமென்று இருக்கிறதிலே நம்முடைய காரியக்காரரை தொட்டும் சப்புதர் அல்லிகான், மீரா சாயபு இவர்களை தொட்டும் மராட்டியர் வரவும் காரியங்களெல்லாம் வித்தியாசங்களாய் நடக்கவும் நடந்துப்போச்சுது. இப்போ நாம் ஆற்காட்டுக்கு வந்தவிடத்திலே நம்முடையவர்களாயிருக்கிற பேரெல்லாம் ஆற்காடு மட்டுக்கும் போதும் திருச்சினாப்பள்ளி வேண்டாமென்று சொன்னார்கள். நாம் அதுகளெல்லாம் கேளாமல் திருச்சினாப்பள்ளி சாதித்து தீரவேண்டுமென்றுப் புறப்பட்டோம். நம்முடைய மனதிலே இருக்கிற யோசனைபடிக்கு சரியாய் நீர் சொன்னீர். உம்முடைய யோசனைக்கும், உம்முடைய புத்திக்கும் உமக்கு இவ்விடம் யோக்கியம் என்று நீர் நிஜாம்போல் கொத்தவர் நம்மைப்போல் கொத்தவர் பேரண்டையிலே திவான்கிரியாய் இருந்து கொண்டு சகல சுபைகளையும் கட்டத்தக்க மனதுள்ளவர் உம்முடைய

மனோரதமும் திராணியும் நம்முடைய மனதுக்கு நன்றாய் தெரியப்பட்டது. நீர் ஒரு லட்சத்துக்கு இருபது லக்ஷம் முப்பது லக்ஷம் சம்பாரிக்கவும்; சிலவு பண்ணவும் சாமார்த்தியம் உண்டாயிருக்கப்பட்டவர் இப்படிப்பட்ட உமக்கு இந்த பறங்கிகளண்டே இருக்க லாயக்கான ஸ்தலம் அல்ல. ஆன படியினாலே முன்னுக்கு மகத்தாயிருக்கப்பட்ட தவுலத்துடனே இருக்கப் போகிறீர். உமக்கு ஸ்வாமி அப்படி தயவு பண்ணுவார்; அதற்கு சந்தேக மில்லை. அப்படி நடக்குமென்று என் மனதுக்கு நிற்காற்ஷையாய்த் தோன்றியிருக்கிறதென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது நீங்கள் மகாபுருஷர் உம்முடைய வாக்கினாலே நான் மேன்மேலும் சுகப்படத்தக்க தாக சொன்னதினாலே தான் எனக்கு சகல தவுலத்தும் வந்தது அதற்கு சந்தேகமில்லை என்று அதற்கு பிரதி உத்திரம் எப்படி உபசாரமாய் சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னேன். அப்பால் வெள் ளைக்காரருடனே சேர்ந்த பேச்சுக்கு நீர் துரையவர்களுக்கு எப்படி தெரி யப்படச் சொல்லவேண்டுமோ அப்படிச் சொல்லி மார்க்கம் பண்ண வேண்டுமென்று சொன்னார். அதற்கு அப்படியே துரையவர்களுக்கு சொல்லுகிறேன் என்று சொன்னேன். அப்பால் மேலே எழுதியிருக் கப்பட்ட கோன்சேல்காரருக்கு வெகுமானம் கொடுக்கவேண்டியதற்கு சொன்னதற்கு அப்படியே அவர்கள் மனது சந்தோஷமாகத்தக்கதாக நடப்பிக்கிறோமென்று சொன்னார். அப்பால் இது முதலான சேதிகளாக லோகோபிராமமாய் பேசியிருந்து அப்பால் புறப்பட்டு வந்தேன்.

இந்த நாள் சாயங்காலம் நான் இதாய்த்து மொகதீன்கான் பகதூர் முஜாபர்சங்கு அவர்களண்டைக்குப் போய் அவருடனே நான் சொன்னது என்னவென்றால்: நீங்கள் பாதுஷாபோன்ற பேர்கள் நீங்கள் தயவுபண்ணி இவ்விடத்திலே வந்தமட்டுக்கும் இந்த கோட்டைக்கு உங்களடையாளமாக இருக்கத்தக்கதாக ஜாகீர் ரூபாயாய் சிறிது பூமி கோட்டை நடக்கத்தக்கதாக ஜாகீர் விட்டு நடப்பிக்கவேண்டுமென்று அதற்கு எப்படிச் சொல்ல வேண் டுமோ அப்படி எல்லாம் சொன்னதற்கு அதற்கு அவரும் அப்படி உங்கள் மனது சந்தோஷம் பண்ணி நடப்பிக்கிறோமென்று சொல்லி ஆனால் இது களெல்லாம் என்னண்டை திவான் கிரியாய் மியாம் ஜுதா என்று இருக் கிறார். அவர்களுடனே சொல்லு அப்படியே நடப்பித்து உங்கள் மனது சந்தோஷம் பண்ணி பிற்பாடு பேர்கிறோமென்று சொல்லச் சொன்னார்.

நல்லதென்று சொல்லி அப்பால் மியாம் ஜுதா என்கிறவருடனேயும் சொல்லி அவருக்கு சிறிது ஆசை வார்த்தையுஞ் சொன்னதற்கு அவரும் அப்படியே அனுகூலம் பண்ணி தருகிறோம் எல்லாவற்றிற்கும் நாளையதினம் பேசிக்கொள்ளுவோமென்று சொன்னார். அப்பால் புறப்பட்டுவந்தேன்.

அப்பால் ஆறரைமணிக்கு நான் சந்தாசாயபு அவர்கள் வீட்டிற்குபோன விடத்திலே சம்புதாசும் அங்கே வந்திருந்தார் அப்போ அவருக்கும் நமக்கும் போட்டியாய் மிலாகத்தாச்சுது அப்பால் புறப்பட்டு துரை வீட்டுக்கு வந்தேன்.

இதல்லாமல் இந்த நாள் சாயங்காலம் நடந்த அதிசயமென்னவென்றால்: முஜாபர்சங்கு அவர்கள் வருகிறதற்கு ஒரு மாதம் முன்னமே பிடித்து பாணங்கள் கட்டி முஸ்திப்புபண்ணி அப்பால் துரையவர்கள் வீட்டிற்கு தென்புறம் கோட்டைக்கு வடபுறம் நடுமத்தியில் பிறம்மாண்டமான நூரடி உயரம் தேர்போல் கட்டி சுற்றிலும் நிறைச்சல்கட்டி அதுக்கெல்லாம் பச்சை தழைகொண்டு வந்து கட்டி அபபால் மத்தாப்புகளும், ஆகாஷபாணங்களும் சந்திரசோதிகளும், புருசுகளும் பெட்டுகோவிகளும் இது முதலான பணங் களெல்லாம் கொண்டு வந்து ஜோடித்து பொழுதுசாய்ந்த உடனே கோட் டையின்பேரிலேயும், துரையவர்கள் வீட்டுமதிலின்பேரிலேயும் பட்டண மெல்லாம் பட்டம்பகலாய் இருக்கத்தக்கதாக லக்ஷ விளக்குகள் மட்டுக்கும் கொளுந்தி அப்பால் துரையவர்கள் வீட்டுமேல் மெத்தையின்பேரிலே பந்தல் போல் ஒரு கூடாரம் போட்டு அந்த கூடாரத்திலே நாற்காலி மற்றவைக ளெல்லாம் கொண்டுவந்துப்போட்டு முஸ்திப்பு பண்ணின பிற்பாடு அவ் விடத்துக்கு துரையவர்களும், முஜாபர்சங்கு அவர்களும் சந்தாசாயபு, ராஜாசாயபு முதலான பெரியமனுஷரெல்லாரும் வந்து வேடிக்கைப்பார்க்க பின்னையும் பட்டணத்திலுள்ளவர்களும் தண்டின் பிறகே வந்த ஜனங்களும் கோடானுகோடி ஜனங்கள் வந்து எங்கும் இருந்துக்கொண்டு வேடிக்கைப் பார்க்க அப்பால் பாணங்கள் கட்டியிருக்கிற கிடங்கிற்கு துரையவர்கள் வீட்டிற்கு சூஸ்திரங்கள் கட்டி, அந்த சூஸ்திரம் நாலேந்து மூலையாக கட்டி முஸ்தீப்பாயிருந்தார்கள். அப்பால் பாணவித்தை கொளுந்துகிறதற்கு அடையாளம் கோட்டையிலே நாலுபீரங்கிப்போட்டார்கள். அதன்பிறகு துரையவர்கள் வீட்டின்பேரிலே கட்டியிருக்கிற சூஸ்திரத்தை கொளுத் தின உடனே அந்த நெருப்புப்போய் கட்டியிருக்கிற பாணங்களைப் பற்றிக் கொண்டு அதிலிருந்து கோடானக்கோடி ஆகாஷபாணங்களும் அதனுடைய வேகத்தினுடைய கோச்சினைகளும், சந்திர ஜோதிகளும், மத்தாப்புகளும், பின்னையும் விந்தை விந்தையாக பாணங்களும் புறப்பட்டு ஏக காலத்திலே ஆகாச வீதியெல்லாம் போய் பட்டம்பகலாய் கோடி சூரிய பிரகாசமாயிருந் தது அப்பால் காகிதங்களினாலே கட்டியிருக்கிற காணல்கள் குந்தானி பீரங்கி யிலே போட்டு சுட்ட உடனே அது தீக்குடுக்கைப்போல் உயரம் போய் வெடித்து அதிலேயிருந்து நெருப்பு மாயமாய் புறப்பட்டது. இப்படியாக நாலு நாழிகை நேரம் தமாஷாய் நடந்தது, இந்த பாணவித்தை சுடுகிறதற்கு

ஆரம்பித்த உடனே சந்தடி (சனம்) போய் விழாமல் படிக்கு நாலுபக்கமும் சொல்தாதுகளையும் சிப்பாய்களையும் இரண்டு வரிசையாக கோட்டைக்கட்டி னாற் போலே வரிசைவைத்தார்கள். அப்பால் இந்த தமாஷ் பார்த்தானவுடன் சகலமான துரைகளும் புறப்பட்டு அவரவர்கள் விடுதிக்குப் போனார்கள்.

**சுக்கில ஸு புரட்டாசி மீ 24 உக்கு 1749 ஆ ஒக்தோபர் மீ 6 உ சோமவாரம்**

இற்றைநாள் காலையிலெழுந்திருந்து முகப்ரக்ஷணம் பண்ணிக்கொண்டு பழயது சாப்பிட்டு துரையவர்களண்டைக்கு வந்தேன். வந்த விடத்திலே நேத்து இராத்திரிதானே கப்பலை முஸ்திப்பு பண்ணிவைத்து இன்று காலை யிலே துரையவர்கள் முஜாபர்சங்கு அவர்கள் நபாபு சந்தாசாயபு, ராசாசாயபு மற்றுமுள்ள பெரிய மனுஷர் சமஸ்தமான பேரும் கப்பல் தமாஷ்பார்க்கப் போகிற சேதிகேட்ட சமாசாரமென்னவென்றால்: கேட்டதின் பேரிலே முராரிராயன் மூவாயிரம் குதிரையுடனேயும் பதினாயிரம் பண்டாரிகளுட னேயும் வந்து அவ்விடத்திலே யெல்லாம் காலு மேலு பண்ணி கொள்ளை யிட்டு அலங்கோலம் பண்ணுகிறார்களென்றும் அப்பால் ஆற்காடுமட்டுக்கும் வருகிறதாயிருக்கிறதென்றும் இதல்லாமல் நாஜர்சங்கு அவர்கள் முப்பது நாயிரம் குதிரைகளுடனே தக்ஷண முகமாய் வரத்தக்கதாக ஔரங்காபாத் விட்டு புறப்பட்டு எழுமறில் இப்பாலே வந்தாரென்றும் இது முதலான சேதி நபா முஜாபர்சங்கு அவர்களுக்கு சேதி வந்தபடியினாலேயும் அப்பால் முஜாபர்சங்கு அவர்கள் சிலவு சித்தாயங்களுக்கு வேண்டுமென்று சந்தா சாயபு அவர்களண்டைக்கு மனுஷரை அனுப்பிவித்து இரண்டு லக்ஷம் ரூபாய் கேட்டுவாங்கிக்கொண்டு வரச்சொல்லி துருசுபண்ணினதினாலேயும் அவர்களிந்த அடகாம்பேரிலேயிருந்து கப்பலின்பேரிலே போகிறதற்கு போக்குபண்ணினார்கள். அப்பால் துரையவர்கள் என்னையழைத்து சந்தா சாகிப்பு ஆனால் ஜாகீர்பேச்சுக்கு என்ன சொன்னார். நாம் ஜாகீர்பேச்சு நிஷ் கார்ஷை பண்ணிக்கொள்ளாமல் படிக்கு முஜார்பர்சங்குவை வெளியே விடக் கூடாது. அந்த காரியத்துடனே சேர்ந்தது பேசினாயாவென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது; நான் ஜாகீர்பேச்சிக்குப் பேசி வழுதாவூர்ஜில்லா ஜாகீருக்கு பாகூர் ஜாகீருக்கு நவமால் கிறுமங்களுக்கு எழுதிகொடுத்திருக் கிறேன். அவர்களும் நல்லதென்றதை அற்ஜியிலே எழுதிக்கொண்டு நாளை ராத்திரிக்கு உத்திரம் சொல்லுகிறோமென்று சொன்னார்களென்று சொன் னேன். நல்லது நீ சந்தாசாயபு அண்டைக்குப்போய் உம்முடனே கண்டு சாவகாசமாய் வார்த்தை சொல்லவேண்டியிருக்கிறது நீ ரெப்போ வருகிறீ ரென்று கேட்டுவரச்சொன்னார். அந்தபடிக்கு நான் சந்தாசாயபு அவர்களண் டைக்குப்போய் துரையவர்கள் உங்களுடனே சொல்ல சொல்லி சொன்ன தென்னவென்றால் துரையவர்களுடனே சாவகாசமாய் நாலு நாழிகை நேரம்

சிறிதுகாரியங்களுடனே சேர்ந்ததெல்லாம் உங்களுக்குச் சொல்லவேண்டியது முண்டு உங்களைக் கொண்டு இவ்விடத்திலே நடப்பிக்கவேண்டியது முண்டு ஆனபடியால் நீங்கள் வரவேண்டுமென்று சொல்லச் சொன்னார் என்று சொன்னதற்கு சந்தா சாயபு அவர்கள் சொன்னது. அவசியமப்படி யே சாயங்காலம் நிமாசு பண்ணுகிறதாகிலும், ஒரு நாழிகை நேரட் கிறுத்தி வைத்து வந்து கண்டு பேசுகிறோமென்று சொன்னார். இப்போ நமக்கானால் இப்போ இரண்டு லக்ஷம் வராகன் இப்போ சத்தியாய் வேண்டி யிருக்கிறது. இந்தமட்டுக்கு யிவர்கள் இத்தனை காரியங்களெல்லாம் செய்து கொடுத்தவர்கள் இந்த இரண்டு லக்ஷம் கொடுத்தப்த உண்டானால் அதற்கு இரண்டுமாதத்துக்குள்ளே செல்லநக்கதாக இந்த இரண்டு லக்ஷவிரா கனுக்கு பத்துலக்ஷ வராகன் சீர்மை அடமானம் பண்ணுகிறோம். அப்பால் நீங்கள் கொடுத்த இரண்டு லக்ஷ வராகனும் கொடுத்ததின் பேரிலே அப்பால் உங்கள் உத்திரபடிக்கு சீர்மையை எங்கள் வசம் பண்ணிக்கொள்ளுகிறோம் அல்லவென்று சீர்மையை உங்கள் வசமாகதானே பண்ணிக்கொண்டு பணம் தஸ்துபண்ணி அனுப்பிவைத்தாலும் சம்மதிதான் இதற்கு எந்தபடிக்கு இப்போ சொன்ன தொகைபடிக்கு தெரியப்பட சொல்லி கொடுக்கப்பண்ண வேணுமென்று சொன்னார் அதற்கு நான் சொன்னது நீங்களும் துரைக ளவர்களும் துரைகள் நீங்களவர்களும் ரூபாய் சகல ஜவாப்பும் பண்ணச்சே எப்படி உத்திரம் பிறக்குதோ அப்படி நடக்கவேண்டியதேயல்லாமல் ஒருத் தர் தெரியப்பட சொல்லுகிறதிலே நடக்கிற காரியமல்லவென்று கண்டிப்பாய் சொன்னேன். அப்பால் மிர்குலா முசேன் அவர்களுடைய ஆஸ்தியெல்லாம் எங்களை சேரவேண்டியதேயல்லாமல் மற்றபடி யல்ல அதென்ன வென்றால்: முன்னே அவன் எங்களண்டே வந்து சேரச்சே ஒரு குதிரை சுவராய் வந்து சேர்ந்தான் அப்பால் இந்த திருச்சினாப்பள்ளி கொள்ளை மற்றதுகளி லேயும் என்க்கும் சபுதல்லிகானுக்கும் ஆகாமலிருந்ததினாலேயும், இவன் நடுவாந்திரத்திலே வெகுபணத்தை சோப்பிடித்துக்கொண்டான். இதற் குள்ளாக நானும் சத்தராசுக்குப் போகவேண்டியிருந்தது இவ்விடத்திலே யும் சபுதல்லிகானை மூறுத்திசல்லிகான் வெட்டிப்போட்டான். இந்த தொட்டு அவர் கையிலே பணம் வாங்காமல் படிக்கு அவர் கையிலே அகப் பட்டது அவர் வசமாய்த்தானே சேர்ந்துப்போயிற்று ஆனபடியால் இப்ப வும் அவர் காலம் பண்ணிபோனபடியினாலேயும் அவருக்குபிள்ளை இல்லா ததினாலும் இந்தப்பணம் எங்களை சேரவேண்டியது அவர்கள் உங்கள் பட்டணத்துக்குள்ளே இருக்கிறபடியினாலே அவர்களை நீங்கள் தயித்து அந்தப் பணமெல்லாம் எங்களை சேரப்பண்ணினால் அதற்கு துரையவர் களுக்கும் பத்து பணம் விசேஷித்து பிரயோஜனப் படலாம் உம்முடைய

காரியத்துக்கு விசேஷித்துத் தானே நடப்பித்துக் கொள்ளலாம் இமாம் சாயபு அவர்கள் சம்மதியும் இப்படித்தானென்று சொல்லவந்தார் அதற்கு நான் சொன்னது: துரையவர்களுடனே சொல்லி உத்தாரம் சொல்லுகிறேனென்று சொன்னதிலே சம்புதாஸ் வந்தார். அவரை பார்த்த உடனே துரைக்கும் இவருக்கும் பேட்டி பண்ணுவிக்கவேணும். துரை மனதிலே இவர் பேரிலே இருக்கிற குறையை என் நிமித்தியமாய் மனம் பொருத்துக்கொள்ள சொல்லவேணுமென்று சொல்லச்சொன்னதற்கு அப்படியே துரையவர்களுக்கு தெரியப்படுத்தச்சொல்லி பேட்டி பண்ணு விக்கிறேனென்று சொன்னதற்கு தஞ்சாவூரார் காரியமும் திருச்சினுப்பள்ளி காரியத்துடனே சேர்ந்ததற்கு இங்கேயிருந்து குமக்கு அனுப்பிவைக்கத் தக்கதாகச் செய்தால் இப்போ உங்களுக்கு நடக்கிற கிராமங்களெல்லாமல் இன்னும் விஸ்தாரமான கிராமங்கள் இனுமாய் கொடுக்கிறோமென்று லக்ஷம் இரண்டு லக்ஷம் துரையவர்களுக்கு கொடுக்கிறோம். உமக்கும் அதற்குத் தக்கதாய் நடப்பிக்கிறோமென்று திருச்சினுப்பள்ளி காரியத்துக்கு அப்படித் தானே நடப்பிக்கிறோமென்றும் பின்னையும் லோகாபிராமமாய் அவரங்கா பாத்து மட்டுக்கும் பிராஞ்சுக்காரருடைய குமுக்கு அழைத்துக்கொண்டு போகிறதாயும், மச்சிலிபந்தர் முதலான துரைமுகமும் பிராஞ்சுக்காரருக்கு கொடுக்கிறோமென்றும் உமக்கு இவ்விடத்திலே ஜாகிர் விடுகிறோமென்றும், அப்பால் மைசூர் முதற்கொண்டு நருமதைக்கு இப்புறம் முன் நிஜாமுக்கு சீர்மை எப்படி நடந்துவந்ததோ அந்தபடிக்கு தாமுமந்த சீர்மையெல்லாம் கட்டிக்கொண்டு ராஜ்யபாரம் பண்ணத்தக்கதாகவும் இருக்கும். மராட்டிய சவாபா சிராவு பத்தேசிங்கு முதலானவர்கள் லக்ஷம் சுவார்கள் இவ்விடத் துக்கு வருகிறார்களென்று அவர்களைக்கொண்டு [ ]

சுக்கில ஸூ ஐப்பசி மீ 8 உ க்கு 1749 ஆ ஒக்தோபர் மீ 20 உ சோமவாரம்

இற்றைநாள் காலையிலே துரையவர்களழைத்து நேத்து இராத்திரி நமக்கு வரவேண்டிய கடனுக்கெல்லாம் நேற்று எழுதி கொடுத்த கடன் சீட்டு எங்கேயென்று கேட்டார். இதோ நீங்கள் எழுதிகொடுத்த கணக்குப் படிக்கு உங்கள் பேருக்கு மூன்று லக்ஷத்து ஒன்பதினாயிரம் ரூபாய்க்கும் கும்பினியார் பேருக்கு லக்ஷத்து பன்னிராயிரத்து ஐனூற்று இருபத் தொரு ரூபாய்க்கும் இரண்டு கடன் சீட்டும் இதற்கும் எட்டு லக்ஷம் ரூபாய்க்கு தனக்குவர சீர்மைகள் பேரிலேயும் எழுதி வாங்கி வந்தே னென்று சொன்னதற்கு அந்தபடிக்கு பிரான்சிலே எழுதிக்கொண்டு தனக்குவர காகிதங்கள் மாத்திரம் என் கையில்கொடுத்து கும்பினி பேருக்கு எழுதின சீட்டும் தம்முடைய பேருக்கு எழுதின கடன் சீட்டும் வைத்துக்

கொண்டார். அதன்பேரிலே முன் சந்தா சாயபு குமாரன் கடன் வாங்கியிருந்த பதினாயிரம் ரூபாய் சீட்டு ஒன்றும் கான்பகதூர் சம்மதி இரண்டாயிரம் விராகன் சீட்டு ஒன்றும், மூவாயிரத்து இருனூறு ரூபாய் சீட்டு ஒன்றும், ஆயிரம் ரூபாய் சீட்டு ஒன்றும், பின்னை ஒன்று முன் கணக்கிலே எழுதப்படாதது, ஆயிரம் ரூபாய் சீட்டொன்று கொடுத்தார். அதற்கு நான் முன் நீங்களெழுதிகொடுத்த பிரான்சு கணக்குபடிக்கு ஒரு சீட்டு ஆயிரம் ரூபாய் இது அதிகமென்று சொன்னதின் பேரிலே நான் பிரான்சில் எழுதி என் கையெழுத்தாய் யெழுதிக்கொடுத்தது உன் கையிலிருக்கவேண்டுமே அதை யெடுத்து வாவென்று சொன்னார். அப்பால் வீட்டுக்கு வந்து முன் விபவ ௵ கார்த்திகை ௴ 6 ௳ எழுதிக்கொடுத்த துரையவர்கள் கையெழுத்து காகித்தை எடுத்துப்போய் காண்பித்தவிடத்திலே அது பார்த்து இது கணக்குபடி சரிதான் ஆயிரம் ரூபாய் சீட்டுயெழுதி அனுப்பி புகான்சிதாசு பேரிலே நிஜாம் தண்டுக்கு உண்டிகை கேட்டவிடத்திலே இவர் காரியமானால் உண்டிகைப்படிக்கு இப்படி பணம் சம்மதிப்பண்ணச் சொல்லி எழுதினதற்கு அவ்விடத்திலே இவருக்கு காரியம் ஆகாமல் போனபடியால் பணம் கொடுபடாமல் போயிற்று சீட்டுமாத்திரம் அவர் வந்து மறுபடி கேளாமற் போனபடியால் நின்று போனது மாத்திரமே அல்லாமல் பணம் கொடுபட்டதில்லை என்று சொன்னார். அப்பால் கான்பகதூர் சம்மதி சீட்டுகளும் ராஜாசாயபு முன் வாங்கியிருந்த பதினாயிரம் ரூபாய் சீட்டும் அன்வர்திகானை ஜெயிக்கப் போகச்சே செலவுக்கு கொடுத்த இருப [ ]

## சுக்கில ௵ ஐப்பசி ௴ 10 ௳க்கு 1749 ஆ ஒக்தோபர் ௴ 22 ௳ புதவாரம்

இற்றைநாள் காலையில் துரையவர்கள் என்னை அழைப்பித்து புளிச்சபள்ளம் தாலுக்கு இசாரு கதுப்பாவும், கோவளம் தாலுக்கு இசாரு கதுப்பாவும், டங்கசாலை கதுப்பாவும், பழய செஞ்சி கில்லேதார் குதிரைசமேதுக்கு நிர்ணக்கடுதாசியும் வேட்டவலம் பண்டாரத்தார் மதிப்பு இதுகளெல்லாம் தீர்தது அதுகளுக்கெல்லாம் கடுதாசிவாங்கிக்கொண்டு வரவில்லையா என்று கேட்டார். அதுகளெல்லாமெழுதச்சொல்லி முசந்தியருக்கு உத்தாரம் கொடுத்து நக்கலும் எழுதியாயிற்று. அதுகளெல்லாம் தீர்த்து எழுதி போகனும் முனிசியன் தசுக்காத்தும் ஆகவில்லை. இன்றைக்கு ஆகுமென்று சொன்ன விடத்திலே சுருக்கிலே தீர்த்தெழுதுவித்து சீக்கிரமத்துக்கு அதுகளெல்லாம் சீக்கிறமாய் வாங்கிகொள் என்று முன் ராஜாசாயபுக்கும் எனக்கும் சிறிது அந்தரங்கம் நடந்திருக்கிறது. அவரெழுதிகொடுத்த நான்கு கடுதாசி என் கையிலிருக்கிறது. அது வயணமென்னவென்றால் அப்துலாயிபான் தாலுக்கு ஆயிரத்தைனூறு சிப்பாய்களும், எண்பத்தாறு குதிரைக்காரருக்கும், சம்பளம் மார்சு ௴ முதல்கொண்டு கும்பினீர் சம்பளம் கவை

யில்லாமல் சம்பளம் தானும் கொடுக்கிறதாகவும் தனக்கெப்போ தேவை யாய் கேட்கிறாரோ, அப்போ தன் பிறகே சேவகரை கூட்டவும் அந்தபடிக்கு உடன் படிக்கை எழுதிகொடுத்த கடுதாசி இதல்லாமல் துரைக்கு பதினாயி யாயிரம் ரூபாய் கொடுக்கிறோமென்று எழுதிக்கொடுத்த கடுதாசி 3 ஆக நாலு கடுதாசியும் கொண்டுபோய் அவருடைய தகப்பன் மற்றபேர் அறியாமல் ராஜா சாயபு கையிலே அந்தரங்கமாய் கொடுத்துப்போட்டு வாவென்று சொல்லி என் கையிலே கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு ராஜா சாயபு அண் டைக்குப்போய் அந்தரங்கமாய் ராஜோபண்டிதன் முன்பாக இந்த நான்கு கடு தாசியும் கொடுத்தேன். அதை அவர் வாங்கிப்பார்த்துக்கொண்டு இந்த சேதி மதனாந்த பண்டிதர் அறியப்போகாதென்று சொன்னார். அது உங்களைத் தொட்டு வெளிக்கு வந்தால் வந்ததேயல்லாமல் என்னைத் தொட்டொருக் காலும் வெளியேவர தக்கதல்ல என்று சொன்னேன்.

இதிலே தேவனாம்பட்டணம் துரைக்கு சந்தாசாயபு எழுதுகிற காகி தத்துக்கு துரையவர்கள் மசூதாபண்ணி மதனாந்த பண்டிதன் கையிலே கொடுத்து அனுப்புவித்து அந்தபடிக்கு சந்தாசாயபுவைக் கொண்டு எழுதி வித்து மொகருபண்ணிக்கொண்டு வாவென்று சொன்னாரென்று சந்தா சாயபு அண்டையிலே நானிருக்கச்சே துரை சொன்ன சேதியும் சொல்லி பர்சிலே மது சூதாப்பண்ணிக் கொண்டு வந்ததையும் என் கையிலே கொடுத் தார். அதை நான் சந்தாசாயபு கையிலே கொடுத்தேன். அப்பாலதை ராஜா சாயபுவையும், அல்லிநக்கீமையும் கூடவைத்துக்கொண்டு படித்துப்பார்த்து இது பெண்டுகள் எழுதுவித்தாப்போலே இருக்கிறதேயல்லாமல் ஆண் பிள்ளை யெழுவித்ததாயும் நாங்கள் ராஜ்யத்துக்கு எஜமான்கள் எழுதுகிற ஜாடையாகவும் எழுதியிருக்கவில்லை இந்த படிக்கு நாங்கள் எழுதப்போகா தென்று சொன்னதற்கு மதனாந்த பண்டிதர். [ ]

சுக்கில ஞு ஐப்பசி மீ 11 உக்கு 1749 ஆ ஒக்தோபர் மீ 23 உ குருவாரம் .

இற்றைநாள் காலையில் கும்பினிவர்த்தகர் புடவை இருபத்தொன்பது கட்டு பார்வையிட்டு கட்டுப்போட்டபடியினாலே கோட்டைக்குப்போய் சின்னதுரையைக் கண்டுபேசி பார்வையாய்க் கட்டுவிழுகிறபரியந்தமிருந்து அப்பால் சின்னதுரை கையில் ஆனுப்பிவித்துக்கொண்டு துரையவர்க ளண்டைக்கு நேற்று சந்தாசாயபு அவர்கள் மைலாப்பூர் அமுல்தாரனை நியமித்து வைக்கிறதற்கு பூந்தமல்லி சீர்மை பண மங்களம் சீர்மை அமில் அலியா சாயபு பேருக்கு பர்வானா ஒன்று நேற்று துரைய வர்கள் வாங்கிவர சொன்னபடிக்கு வாங்கி வந்தேனென்று கபுறு சொல்லி வாங்கிவந்த பர்வானாவையும் கையில் கொடுத்தேன். நல்லது அதற்கு

இப்போ சமயமில்லே. நீ வைத்து வைத்தால் அப்பால் காரியத்துக் குத்தக்கதாய் பார்த்துக்கொள்ளுவோமென்று சொல்லி மச்சலிபந்தர் மின்கால் ஒலந்துக்காரர் ரேன்சு (Reinach) என்கிறவன் தெலுங் கிலே ஒரு காகிதமெழுதி ஒரு சின்னப்பசுக்கிறுவும் ஒரு எழுத்து புடவையும் கூட மதாமுக்கு கொடுக்கச்சொல்லியும், தம்முடைய பாரியாள் சலாமும் தம்முடைய சலாமும் மதாம் குவர்னதோருக்குச் சொல்லச் சொல்லியும் இப்படியாக எழுதியனுப்பினதுமல்லாமல் முன் பங்களாவிலே யிருந்து ஒரு காகிதக்கட்டு வந்ததை எங்கள் மனுஷர் கையில் கொடுத்து உங்களண்டைக்கு அனுப்பினபோது நான் தங்களுக்கு காகிதமெழுதாமல் போனது எனக்கு சரீரம் ஸ்வஸ்தமில்லாததைத் தொட்டு அது மனம் பொருத்துக்கொள்ளவேண்டியதென்றும் இங்கிலீஷ்காரருக்கும் உங்களுக் கும் சமாதானமாய் போன சேதி கேட்டு மிகுதியும் சந்தோஷ மாயிற்றென்றும் இது முதலான சேதி யெழுதியிருக்கிறதென்று சொன்ன தற்கு முசியே போலோ உடனே (Boyelleau) சொல்லிப் பேசிக்கொண்டு அப்பால் என்னைப் பார்த்து நீ சந்தா சாயபு அண்டைக்குப் போய் மைலாப் பூர் பாதிரி காரியம் நடந்த சேதிக்கு கொவை. விசாரே கேட்டு மிகுதியும் கோபமாயிருக்கிறார். இப்பவும் நாமவருக்கு காகிதமெழுதுகிறேன்; அவ ருடைய பிறகாதுகள் சண்டை முஸ்திப்பாய் வருகிறதற்கு எழுதியனுப்பி வைக்கிறேன். அந்த சிலவு சந்தா சாயபு ஒத்துக்கொடுக்கிறதானால் அந்த படியிப்போ எழுதி அனுப்புகிறேனென்று சந்தா சாய்பை கேட்டுவா வென்று சொன்னார். நல்லது இப்போ சாயங்காலம் போய் கண்டு பேசி அதற்கு உத்தாரம் சொல்லுகிறேனென்று சொல்லிப்போட்டு மயிலாப்பூர் சேதியினால் முன் 8-ம் தேதி மட்டுக்கும் இங்கிலீஷ்காரர் மனுஷர் மல் ராஜாவும் முன்னூறு பேரும் மைலாப்பூரிலே இருக்கிறார்கள் என்றும், பாதிரி அந்தோனியை கப்பலின்பேரிலே ஏற்றி வைத்திருக்கிறார்களென்றும், ரங்கப்பநாய்க்கனும் முப்பது சொல்தாதுகளும் திருவல்லிக்கேணியில் இருக் கிறார்களென்றும் ஆட்டு மெலாட்டு நாளையதினம் மைலாப்பூரிலேவந்து கொடிபோட வாராரென்று தோரணங்கள் கட்டி தண்ணீர் தெளித்து மைலாப்பூரெல்லாம் அலங்காரம்பண்ணி யிருக்கிறார்களென்றும் எழுதி வந்த சேதியை சொன்னதற்கு இந்த சேதியும் சந்தா சாயபுக்கு சொல் என்று சொன்னார். அப்பால் சந்தா சாயபு பார்த்தார். இங்கிலீஷ்காரர் பேரிலே மைலாப்பூர் ஜோலி நிமித்தம் வெகு கோபமாயிருக்கிறாரென்று கேட்டார். தாம் முன்னே சுபாவுக்கு வந்தாப்போலே தாம் வைத்த பாதிரியை இங்கிலீஷ்காரர் பிடித்துக் கொண்டுபோய் இப்படி பண்ணி னார்கள் என்கிறதாய் அவர் மனதிலே தாங்களாய் வெகு கோபமாயிருக்கிறார். ஆனால் திருச்சினாப்பள்ளிக்கு போகவேண்டிய காரியம் வெகு ஜரூரான

படியினாலே அவ்விடத்துக்குப்போய் அவ்விடம் காரியங்களெல்லாம் சேகரம் பண்ணிக்கொண்டு வந்த பிற்பாடு அவர்களுக்கேற்ற தண்டனை தண்டிப் போமென்று சொன்னாரென்று சொன்னதற்கு மெய்தானென்று ஒப்புக் கொண்டார். அப்பால் முசியே புரேல் (Burel) என்கிற பீரங்கி மேஸ்திரி நேற்றயதினம் பீரங்கி சாமான்கள் இழுத்துக்கொண்டு போகிற செலவு மாடு கூலிக்காரர் உள்பட மாதாந்தர சிலவு வயணமாயப்படி யெழுதி பிரான்சு எழுத்திலே எழுதிக்கொண்டுவந்து கொடுத்தக் கணக்கு கடுதாசியை என் கையிலே கொடுத்து அதிலே கடைசி துகை மூவாயிரத்து இருநூற்று எழுபது ரூபாய் துகை கட்டியிருந்தது. இந்த மூவாயிரத்து இருநூற்று எழுபது ரூபாய்க்கு நூறு, இருநூறு ரூபாய் ஏறினாலும் குறைந்தாலும் ஒத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லி இந்தக் கணக்கை சந்தா சாயபுக்கு படித்துக் காண்பித்து அவர் சம்மதித்த சேதிக்கு வந்து சொல்ல சொன்னபடிக்கு நேற்றயதினம் அவரண்டைக்குக் கொண்டுபோய் அல்லி நகீம் சாயபு, சந்தா சாயபு ஷை குமாரன் ராசா சாயபு இவர்கள் முன்பாக இந்த கணக்கு வயணமெல்லாம் படித்துக் காண்பித்து துரையவர்கள் சொன்ன சேதிபடிக்கு சொன்னவிடத்திலே அவர் முசியே புரேல் (Burel) பீரங்கி மேஸ்திரியை யழைத்து அந்த கணக்கையும் கொடுத்து பின்னையும் சிறிது சிலவுகளும் எழுதச்சொல்லி உத்தாரம் கொடுத்துப் போகச்சொன்னார். அப்போது நான் முசியே புரேலை (Burel) அழைத்து நீ துரையவர்களுக்கு எழுதிக்கொண்டுவந்து கொடுத்த கணக்கு படிக்கு எனக்கும் ஒரு பிரதி கணக்கு எழுதிக்கொண்டுவந்து கொடு என்று சொன்னேன். நல்லது எழுதிக்கொண்டு வந்து கொடுக்கிறேன் என்று சொல்லி துரையவர்கள் முன்பாக சொல்லிப்போட்டுப்போனான். அப்பால் துரையவர்கள் என்னை அழைத்து பாகூர் ஜாகீர் முப்பத்தாறு கிராமமும் சந்தா சாயபு இவ்விடம் விட்டு யயணம் புறப்பட்டு ஜாகிப்போன அன்றைக்குதானே நம்முடைய தோரணமும் கட்டி கொடியும் கட்டி ஜபதி பண்ணவேணும் ஆனபடியினாலே முப்பத்தாறு கொடியும் முஸ்தீபுபண்ணி வையென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டு வந்து முச்சிய நம்பியை அழைத்து வெள்ளை புடவையும் கொடுத்து கொடிகள் முஸ்தீப்பு பண்ணச்சொல்லி திட்டம் பண்ணி வைத்தேன். அப்பால் பன்னிரெண்டுமணி அடித்துபோனபடியாலே வீட்டிற்குப்போனேன். அதிலே நபாபு சந்தா சாயபு அவர்கள் மனுஷர் வந்து உம்மை இன்றைக்கெல்லாம் வரக் காணோம் கண்டு பேசவேண்டியிருக்கிறதென்று நபாபு அவர்கள் அழைத்துக் கொண்டுவரச்சொன்னாரென்று வந்தழைத்ததற்கு இந்தமட்டுக்கும் துரையவர்களிடத்திலே காரியமாயிருந்தேன். இப்போ கூப்பிடுகிற வேளையாச்சுதே நபாபு அவர்களுக்கு சாப்பாடு வேளையாச்சுதே சாப்பிட்டு படுத்துக்கொண்டிருந்து எழுந்திருந்து நிமாசு பண்ணிக்கொண்டாகிறதற்கும் பொழுது

பூந்து நாலு நாழிகையாகுமே அதன் பிற்பாடு வந்து கண்டு பேசிக் கொள்ளுகிறேனென்று வந்தவனுடனே சொல்லி அனுப்பிவிட்டு அச்சரப்பாக்கம் சீர்மை, திண்டிவனம் சீர்மை இந்த இரண்டும் நமக்கு குத்தகையானபடியினாலே அதை தோரணம் வைக்கிறதற்கு கோவிந்தப்பண்டிதர் திருவமுதயாப்பிள்ளை, பத்மாசி பண்டிதன், முந்துபோலம் ரெட்டியார் பெக்கியப்பட்டரும் இவர்கள் பிறகே சேக்கிபுராம் பிராதரி நாற்பதுபேர் சேவுகரையும், நாம் வைத்த சேவகர் 50 பேரையும் கூடகூட்டி தோரணம் வைக்கச்சொல்லி அனுப்பிப்போட்டு நான் வெளியே புறப்படச்சே மூன்று மணி நேரமுண்டு அப்போ முசியே துலோராம் (Dulauren•) சேவகன் வந்து இரண்டுமணி வேளையிலே முசியே துலோராம் காலம் பண்ணிப் போய்விட்டார். அதற்கு காங்குப்புடவை அவ்விடத்திலே இருக்கிறது வெள்ளைப் புடவை பத்து புடவை வேண்டும் அவர் மருமகன் உம்மைப்போய் கேட்கச்சொன்னாரென்று வந்து கேட்டான். அந்தபடிக்கு கும்பினிகிடங்கிலே சலவை கிழிச்சல் புடவையிலே பத்து புடவை கொடுக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்தேன். மற்றபடி இந்தனாள் இராத்திரியும் அலுவலாய் இருந்ததை தொட்டு சந்தாசாயபு அண்டைக்குப் போகவில்லை. எதனாலென்றால், ஸ்ரீ துரையவர்கள் அவர்களுக்கு கொடுக்கிறோமென்று சொன்ன பணம் இன்னும் கொடாதபடியினாலே சந்தாசாயபு அண்டைக்குப் போனால் அவர் தாவந்தபடுவான் அவருடைய தாவந்தத்தை பார்க்க கூடாதபடியினாலே முந்தானாள் நபாபு இதாயித்து மொகதீன்கான் சாயபு கசான்சி மனசுகாராயன் மேலிப்படி அரசிபேருக்கு மியாம் சூதுதான் வசம் கொடுத்த ஐம்பது நாயிரம் ரூபாய் போக குறைகொடுக்க வேண்டியதற்கு நாளைய தினம் எவ்வளவாகிலும் கொடுப்பித்துக் கண்டுபேசினாலே யல்லாமல் கண்டு பேசப்போகிற காரியத்திற்கு உத்திரவு பிறக்காதென்கிறதினாலே இந்தனாள் இராத்திரி போகவில்லை.

இந்தனாள் மத்தியானம் மியாம் சூதுகானுக்கு வெகுமானம் கொடுக்கிறதற்கு நாலு சிப்பம் சிகப்பு சகலாத்தும் இரண்டு சிப்பம் பச்சை சகலாத்தும் இரண்டு சீனா காகிதத்துக்கும் முசியே கொர்னேத் (Cornet) பேருக்கு ஒடுதினாசு பண்ணினபடிக்கு வாங்கிவந்து வைத்திருக்கிறது.

இதல்லாமல் இந்தனாள் அபேலென்கிற (Abeille) கப்பலை சீர்மைக்கு பயணம்பண்ணி அந்த கப்பலின் பேரிலே நானூற்றிருபது கட்டும் ஏற்றி மாயேக்கு லக்ஷ ரூபாய் பணமும் ஏற்றி அனுப்பிவைத்தார்கள். அந்த கப்பல் மாயேக்குப்போய் அவ்விடத்திலே ரூபாயும் பணமும் இறக்கிப்போட்டு மிளகு ஏற்றிக்கொண்டு சீர்மைக்குப்பயணமாய் போகிறது.

இந்தனாள் ஒரு கப்பலின் பேரிலே பங்காளத்துக்கு ஆறு லக்ஷ ரூபாய் ஏத்தி அனுப்பிவைத்தார்கள் அந்த கப்பல் அதை எடுத்துப்போயிற்று.

இதல்லாமல் முசியே நரெலி (Nareilles) என்கிற தொப்பிகார ஒப்பி சியால் இதற்கு முன்பாகத்தானே தேவனாம்பட்டணம் இங்கிலீஷ்காரருக்கும் தானவ்விடத்திலே போய் சேவக மிருக்கத்தக்கதாக ராசாவட்டம் விட்டுக் கொண்டு இருந்தவன் இன்றையதினம் துரையவர்கள் அவனை அழைத் தனுப்பிவைத்து திருச்சினாப்பள்ளிக்கு தண்டு பிறகே போகச்சொல்லி சொன்னதற்கு அவன் எனக்குச் சம்பளம் போதாது தண்டு பண்ணுகிற தற்கு மாதம் ஒன்றுக்கு ஐம்பது விராகன் சம்பளம் கொடுத்தால் போகிறேன் இல்லாவிட்டால் போகிறதில்லே. என்று சொன்னதின்பேரிலே துரையவர் கள் அவனை கோபித்துக்கொண்டார். அப்பாலவன் அந்த ஜாடையின்பேரிலே யாருக்கும் தெரியாமல் புறப்பட்டு தேவனாம்பட்டணம் போய்ச் சேர்ந்தான். அந்த சேதி துரை கேட்டவுடனே அவன் வீட்டுத் தட்டு முட்டெல்லாம் ஏலம் போடச்சொல்லி உத்திரவு கொடுத்தார்.

சுக்கில ௵ ஐப்பசி ௴ 12 உக்கு 1749 ஆ ஒக்தோபர் ௴ 24 உ சுக்கிரவாரம்

இற்றைனாள் காலயில் முசியே துலோராமைக்கொண்டுபோய் (Dulaurens) கோவிலிலே புதைத்துப்போட்டு துரையவர்கள் முதலான சின்னோர்கள் கூட மறுபடி அவர்கள் வீட்டிற்குப்போய் அனுப்பிவித்துக் கொண்டுவர ஒன்பதுமணியடித்தது, ஆனால் முசியே துலோராம் (Dulaurens) முப்பது நாற்பது வருஷமாய் சேவித்தபடியினாலேயும் பெரிய கொமிசேலி யேரானபடியினாலேயும் ஒரு இஸ்தாங்கு சொல்தாதுகள் கொமிசேலியேர் முதலான பெரிய மனுஷர் வெள்ளைக்காரர் வெள்ளைக்கார்ச்சிகள் முதலாகிய பேர் துரைகூடே போயிருந்து அந்த பிரேதத்துக்கு செய்யும் சடங்குக ளெல்லாம் செய்து கோட்டையிலே அரை கொடிபோட்டு அவர் வீட்டிலே யிருந்து கோவிலுக்கு எடுத்துக்கொண்டு வருகிற மட்டுக்கும் மிடைக்கு ஒரு பீரங்கி விழ்க்காடு சுட்டுக்கொண்டே இருக்கத்தக்கதாக எல்லாரும் கூட வந்து இருந்து கோவிலிலே புதைத்த உடனே சொல்தாதுகள் மூன்று வரிசை துப்பாக்கி சுட்ட உடனே, கோட்டையிலே பதினைந்து பீரங்கி சுட்டார்கள். இந்த பதினைந்து பீரங்கி சுட்டது. இங்கிலீஷ் ராஜா வினுடைய மனுஷன் கோந்திரமிராலாயி வந்திருக்கிற மேஸ்தர் புசுகாவென் (Bascawen சென்னைப்பட்டணத்திலிருந்து தன்னுடைய யிஸ்காதார் பதி னேரு கப்பலுடனே கூட தானும் ஒரு கப்பலிலே ஏறிக்கொண்டு கூடலூ ருக்கு போக வேண்டுமென்று ஓடிவருகிறவன் நம்முடைய புதுச்சேரி துரைக்கு நேரா வரச்சே இவ்விடத்திலே பதினைந்து பீரங்கி முசியே துலாராம் (Dulaurens) செத்துப்போனதற்கு சுட்டதை தனக்கு ஆசா

ரம் பண்ணினதாக யோசனை பண்ணிக்கொண்டு பதிலுக்கு அவனுடைய கப்பலிலே பதினைந்து பீரங்கிச் சுட்டார்கள். அதன் பேரிலே இவர்கள் தங்கள் கோட்டைக்கு பதினைந்து பீரங்கி சுட்டார்களென்று சொல்லி பதிலுக்கு கோட்டையிலே பதினைந்து பீரங்கி சுட்டார்கள். துரை முதலான பேரெல்லாம் யோசனை பண்ணி முசியே துலோராம் (Dulaurens) வீட்டிலேயிருந்து தம்முடைய வீட்டுக்கு கடலோரமாய் போகிறவர் என்னைப்பார்த்து மேஸ்தர் புஷ்காவென் (Bascawen) மோசம் போனான் முசியே துலாராம் (Dularens) செத்ததற்கு போட்ட பீரங்கியை தனக்குப் போட்டார்களென்று சொல்லி நம்முடைய கோட்டைக்கு முன்னே ஆசாரம் பண்ணினான். அதற்கு பதிலுக்கு ரெசிப்போந்தேர் இட்டோமென்று சொன்னார். பின்னையும் கிட்ட அழைத்து மெஸ்தர் புஸ்காவென் (Bacawen) இந்த ஐப்பசி மாதத்திலே தானே சீர்மைக்குப் போகவேண்டுமென்று இருந்தவன் மைலாப்பூர் பாதிரியை பிடித்து காவல் பண்ணி மைலாப்பூரிலேயும் சோராவரிபண்ணி அமுலுக்கு தம்முடைய மனுஷரை வைத்தபடியினாலே இது நிமித்தியம் உள்ளபடியிலே யிஸ்காதருடனே நாம் பயணப்பட்டு போனோமேயானால் நபா சந்தாசாயபுக்கு இந்தமட்டுக்கும் பணம்போகாமல் அப்படியாயிருக்கிறதை தொட்டும் இதாயத்து மொகதீன்கான் அவர்கள் தண்டு வழுநாவூரிலே தானே இறங்கியிருக்கிறபடியினாலேயும் நாம் போன உடனே நபா தண்டு சமஸ்தமும் கூட்டிக்கொண்டு கூடலூர் மேலே போய் விழுந்து நிற்தூளி பண்ணிப்போட போகிறார்களென்கிற பயத்தை மனதிலே எண்ணிக்கொண்டு அவன் அதனாலே சீர்மைக்குப்போகிற பயணத்தை கூட நிறுத்திப் போட்டு தன்னுடைய இஸ்காதருடனே பயணம் புறப்பட்டு கூடலூர் தேவனும்பட்டணம்போய் சேருவோமென்கிறதாய் போகிறாரென்று சொன்னார். அது உண்டானதுதான் என் மனதிலுமப்படித்தான் தோற்றியிருக்கிறதென்று சொல்லி ஆனாலிப்படி நான் போகிறதெல்லாம் மேஸ்தர் புஸ்காவேனுக்கு (Boscawen) மெத்த நல்லதுதான்; அதென்னத்தினாலென்றால், புதுச்சேரியை பிடிக்கிறேனென்று அவ்விடத்திலே சபதம் பண்ணிக்கொண்டு வந்தவன் கடைசியில் புதுச்சேரியும் பிடியாமல் இரண்டு மாதம் மட்டுக்கும் சண்டைபண்ணி லேக்கை கூட ஏறமாட்டாமல் வெகு பணங்கள் எழுபது எண்பது லக்ஷம் வராகன் மட்டுக்கும் செலவு பண்ணிப்போட்டு முகத்திலே கரியை பூசிக்கொண்டு இங்கிலீஷ்காரரின் முகத்திலே என்னமாய் போய் விழிக்கப்போகிறோம்! அல்லவென்று அங்கே போன விடத்திலே என்னமாய் நடக்குமோ! என்கிறதாய் என்னேரமும் விசாரத்துடனே இருக்கிறவன் அவனுக்கு இதுவொரு பகனு அகப்பட்டபடியினாலே இதை சாக்கிட்டு சிறிது காலத்தை போக்கிக்கொண்டு திரியலாமென்கிறதாய் சென்று போனான் ஆதாயமென்கிறதாய் பார்த்துக் கொண்டு திரியுரானென்று சொன்னேன்; அதுவுமெய்தானென்று சொன்னார்.

அப்பால் பீரங்கிக் குண்டு ஏற்றிக்கொண்டு போகிறதற்கு வண்டி மாடு அனுப்பிவிக்கிறோமென்று சந்தா சாயபு சொல்லிப்போனார்களே இன்று மனுப்பாமல் போனாரென்று கோபமாய் சொல்லிக்கொண்டிருந்தார். இதற்குள் சந்தா சாயபு வந்தார். நம்மை பயணம் பண்ணி சீக்கிரத்துக்கு அனுப்பிவிட வேண்டுமென்று கேட்டதற்கு பின்னை வேறே ஒன்றும் அப்படியில்லை; நீங்கள் வண்டிக்கு மாடு அனுப்புகிற தாமதமேயல்லாமல் வேறு தாமதமில்லையென்று சொல்லி குதிரைக்காரரெல்லாம் நேற்றயதினம் தானே வெளியே போயிறங்கினார்கள். நாளையதினம் வெள்ளைக்காரரெல்லாம் பயணம் புறப்படுகிறார்கள். காடிக்கு எருதுகள் வந்ததானால் அதுக்கு கூடத்தானே நாளைய பயணம் பண்ணி அனுப்பிவிட்டு நாளை நன்றைக்கு நீரும் பயணம் போகலாம் மருந்து குண்டுகளில்லாமல் நீர்தானெப்படி போவீரென்று சொன்னார். அதற்கு சந்தாசாயபு இருந்துகொண்டு அதற்கல்ல நான் சொல்லுகிறது நீங்கள் கொடுக்கிறோமென்று சொன்னபணம் இன்னேரமட்டுக்கும் ஜாடாவாய் கொடுபடாதபடியினாலே இன்னேரம் முஜாபர்சங்கு மனுஷர் வந்து என்னை உபத்திரவம் பண்ணுகிறார்கள். நீங்கள் கொடுக்கிறோமென்று சொன்ன பணத்தை கொடுத்துவிட்டீர்களானால் அதன் பேரிலே புறப்பட்டு போகலாமென்று சொன்னார். ஆனால் நேற்று இராத்திரி சீர்மை கப்பல் பயணமாகி சாகிப்போச்சுது. இன்றையதினம் * ஒன்பதினாயிரம் ரூபாய் கொடுக்கிறோம் நாளையும் நாளை நன்றைக்குள்ளேயும் ஜாடாவாய்கொடுத்து விடுகிறோமென்று சொன்னார். அந்தபடிக்கு தங்கசாலையிலே ரங்கப்பிள்ளைப்போய் இன்றையதினம் முஜாபர்சங்கு சாவுகாரன் மன்சுகுராவ்வசம் ஐம்பதுனாயிரம் ரூபாய் கொடுக்கச்சொல்லி முகாவனிபண்ணிப்போட்டு வருவார். அதை வாங்கிகொள்ளுங்கள் மற்ற லக்ஷம் ரூபாய் நாளைக்கு நாளை நன்றைக்கு வெட்டு விழுகிற ரூபாயைச் சேர்த்து லக்ஷ ரூபாய் வாங்கிகொடுத்துவிடச் சொல்லி ரங்கப்பிள்ளையுடனே சொல்லியிருக்கிறது. இனிமேல் என்னை கேட்க தேவையில்லை. அவர்தானே வாங்கிகொடுத்து விடுவாரென்று சொன்னார். அந்தபடிக்கு இன்றையதினம் நான் டங்கசாலைக்குப்போய் முஜாபர்சங்கு, சாவுகாரன், மன்சுக்குராவு வசம் ஐம்பதுனாயிரம் ரூபாய் கொடுத்துவிடச் சொல்லி முகபரை பண்ணிப்போட்டுவந்தேன். இந்த பிரஸ்தாபம் நடக்கச்சே துரையவர்கள் சந்தாசாயபுடனே சொன்னதென்ன வென்றால்: நேற்றைக்கு ரங்கப்பிள்ளையுடனே சொல்லி உங்களுடனே சொல்லச்சொல்லி சொல்லியனுப்பின சேதிபடிக்கு நீங்கள் கோவை விசேரோயுக்கு உங்கள் கடுதாசியாய் பாரிசிலே ஒரு கடி

* ஒன்பதினாயிரமென்பது தவறென்று ஐம்பதினாயிரமென்று இருக்கவேண்டும்.

தாசி எழுதிகொடுக்க வேண்டிய வயணம் என்னவென்றால்: உங்கள் பிடுத்து கிசு சாதியினுடைய பிரதாபங்களிடத்தில் வெகு நாளாய் மட்டுபட்டு போயிருக்கிறபடியினாலே பிடித்துக் கிசுகாரர் பேரே இவ்விடத்தில் இல்லாமல் இருக்கிறது நல்லதல்ல, ஆனால் நாம் உங்கள் பிடுது கிசு சாதியினுடைய பிரதாபங்களில் இவ்விடத்தில் விளங்கப்பண்ண வேண்டுமென்று யோசனை பண்ணி உங்கள் சாதி பாதிரி அந்தோனிக்கு மைலாப்பூர் அமுலுக்கு கொடுத்து அதை மாமூலு பண்ணச்சொல்லி அவருக்கு பேரும் கொடுத்து அனுப்பிவித்தோம். அதற்கு இங்கிலீஷ்காரர் தங்கள் பட்டணத் தண்டையிலே பிடுத்திசுக்காரர் பிரபலமாய் இருக்கிறார்களென்கிறதை மனம் பொருக்க மாட்டாமல் ஆக்ருஷ்பட்டு மேஸ்தர் புசுகாவென் (Bouscawen) சொல்தாதுகளை சேவகரையும் அனுப்பி பாதிரியைப் பிடித்துக்கொண்டு வரச் சொல்லி பாதிரியண்டையிலே இருந்தவர்களையும் நாலைந்து பேரை காயப் படுத்தி மைலாப்பூரையும் கொள்ளையிட்டு அலைகழிவுபண்ணிப் போட்டு பாதிரியை பிடித்துக் கொண்டு போய் கப்பலின் பேரிலே ஏற்றிவிட்டார். இப்படிப் பிடித்து ககிசுக்காரருக்கு இங்கிலீஷ்காரர் தலைசிறக்க பண்ணினது எங்களுக்கு சறுவாத்துமனாய் சகிக்கக்கூடாமல் உங்களுக்கெழுதி யனுப்பி வைத்தோம். இதற்கு சண்டை பிறகாத்துகளிலே சொல்தாதுகளையும் ஏற்றி சண்டை சாமான்களையும் கொடுத்து அனுப்புவித்து சென்னைப்பட்டணம், கூடலூர், தேவனாம்பட்டணத்து மேலே போயிறங்கி சண்டைபண்ணச் சொல்லி முஸ்திபு பண்ணி அனுப்புவித்தீர்களானால், நாங்களுமேலாக வந்திறங்கி சண்டைபண்ணி இங்கிலீஷ்காரருக்கு புத்திசொல்லுகிறோமென்றும், இதுகளுக்கெல்லாம் வயணமாய் புதுச்சேரி ஜெனரால் முசியே துப்ளேக்சு அவர்கள் இதோடேசேர்ந்த காரியத்துக்கு உங்களுக்கு எழுதுகிறகாகிதத்தை நாம் எழுதினகடுதாசியாய் பாவனை பண்ணிக்கொண்டு அந்த கடுதாசிபடிக்கு நடப்பிக்கவேணுமென்று நீங்களொரு கடுதாசிளழுதிக்கொடுத்தால் அந்த மந்தல்புபடிக்கு அவர்களுக்கு தெரியும்படியாய் பிரஞ்செழுந்திலே எழுதி என்னுடைய கடுதாசியும் அதற்கெப்படி எழுதவேண்டுமோ அந்தபடிக்கு வீச்ரேக்கு ( Vicerai ) எழுதி கோவைக்கு அனுப்பிவைத்தால் ஆயிரம் சொல்தாதுகளும், அதற்கேற்ற சாமான்களும் அனுப்பிவைப்பார். கப்பலின் பேரிலே வருகிறதானால் சித்திரை வைகாசி மாதமேயல்லாமல் இதற்கு முன்னே வக்கூடாதபடியினாலே கரைவழியாய் மாயேக்கு வந்து அங்கிருந்து இவ்விடத்துக்கு வரத்தக்கதாக அதற்கு வயணமாக எழுதியனுப்புவிக்கிறேனென்று சொன்னார். இதுவுமல்லாமல் இந்த ஆயிரம் சொல்தாதுகளும், சாமான்களும் வந்தால் நாஜர்சங்கை ஜெயிக்கிறதற்கு எங்கள் பவுஞ்சும் உங்கள் பவுஞ்சுங்கூட ஏகமாய் கூட்டினால் திறணப்பிராயமாய் ஜெயிக்கலாம். அவர்களுக்கு கூட பயமிருக்குமென்று சொன்னார். அதற்கு மெய்தானென்று

சந்தாசாயபுசொல்லி இந்தபடிக்கு நீங்கள் சல்லாது காகிதமெழுதிவித்து அனுப்பினீர்களானால் அதை நானெடுத்து எழுதுவித்து மோகரூபண்ணி அனுப்புவிக்கிறோமென்று சொன்னார். நல்லது அந்தபடிக்கு சல்லாது யெழுதி உங்களண்டைக்கு அனுப்புவிக்கிறேன்.

இதல்லாமல் இராசாவிலே யிருந்து முஜாபர்சங்கு பர்வவைந்ததே அதற்கு பதிலுத்தரவு எழுததேவையில்லையா என்று கேட்டார். எழுதுகிறது தான் ஆனாலதிலே நபாபு முஜாபர்சங்கு அவர்கள் பதிலுத்தரவெழுதுகிற திலே இப்படி சகல விதத்துக்குள்ளேயும், பிரஞ்சுக்காரர் மத்துப்பண்ணி அன்வர்திகான் ஜெயித்து கர்னாடகமெல்லாம் நம்முடைய வசம் பண்ணு வித்துக்கொடுத்து இப்பவும் நாஜர்சங்கு கூட ஜெயிப்பதற்கு மற்றகாரியங் களெல்லாம் எத்தனம் பண்ணி சகல சாமான்களும் கொடுத்து உதவி ஒத்தாசை பண்ணி நடப்பிக்கிறார்கள். இங்கிலீஷ்காரரானால் உம்முடைய உத்தாரத்துக்கு மாறுபாடாய் நடந்து கொள்ளுகிற நாஜர்சங்குக்கும் அவ ருடைய மதத்தின் பேரிலேயிருக்கிற திருச்சினாப்பள்ளி கோட்டையிலே இருக்கிற அன்வர்த்திகான் மகன் மமுதல்லிகானுக்கு [ ]

சம்பளம் வாங்கிக்கொண்ட முஜாபர்கான் சிப்பாய்கள் நாலு காடுதியி னுடைய சிப்பாய்கள் குதிரைக்காரர்களுடனே கூடினபேர்கள் எல்லாரும் இன்றையதினம் சாயங்காலத்துக்குள்ளாக பைரேத்து துப்பாக்கிகள் ஒடிந்து இருக்கிறவர்கள் மாற்றிக்கொண்டு கூண்டுக்குவெளியே அரும்பாத் தப்பிள்ளை சாவடியிலே போயிறங்கியிருக்கிறதேயல்லாமல் நாளையதினம் ஊரிலேயிருந்தால் சாவடி கம்பத்திலே கட்டிவைத்து நூறு அடியும் அடித்து அபாராதம் வாங்குவார்களென்று தமுக்கு போடுவிக்கச் சொல்லி ஸ்ரீ துரையவர்கள் கட்டளையிட்டார்கள்.

சுக்கில ௵ ஐப்பசி ௴ 16 வக்கு 1749 ஆ ஒக்தோபர் ௴ 28 உ அங்காரகவாரம்

இற்றைநாள் காலையில் துரையவர்கள் வீட்டிற்குப் போனவிடத்திலே நபாபு சந்தாசாயபு அவர்கள் இராத்திரி எட்டுமணிக்கு பயணமானபடியி னாலே அப்பாலிவ்விடத்திலிருந்து நபா சந்தாசாயபு இறங்கியிருக்கிற சாலைக்குப்போய் கும்பனி காரியங்களுடனே சேர்ந்த சம்மதி கடுதாசிகளுக் கெல்லாம் நபா அவர்கள் மோகரு பண்ணுவித்துக்கொண்டு பின்னையும் காரைக்கால் மொகத்துமக்களுடனே சேர்ந்த பேச்சு வார்த்தைகளாய் பேசி அப்பால் பின்னையும் லோகாரமமாய் பேசிக்கொண்டிருந்து சாப்பாட்டிற் குப்போனேன்.

இற்றைநாள் செங்கற்பட்டு சேஷாத்திரிபிள்ளை அவர்களை சந்தாசாயபு அவர்கள் பேட்டி பண்ணிவித்தவிடத்திலே ரொம்ப மரியாதை பண்ணி எழுந்திருந்து ஆலிங்கனம்பண்ணிக்கொண்ட உடனே இருப்தொரு ரூபாய் நதிர்வைத்தார் அப்பால் சாயபு ச்ாது அவர்கள் பேட்டி பண்ணிக்கொண்டு இருபத்தொரு ரூபாய் நதிர் வைத்தார். அப்பால் நாய பவுஞ்சுதாரியான அல்லி நகிம் சாயபு அவர்களுக்கு இருபத்தொரு ரூபாய் நதிர்வைத்து பேட்டி பண்ணிக்கொண்டார். அப்பால் தலக்கணருடனே சேர்ந்தநற்கும் பர்மானு எழுதிவித்து மோகரா பண்ணி வைத்து போட்டோம். அப்பால் பாக்கு வெத்திலை கொடுத்து சேஷாத்திரி பிள்ளையவர்களை அனுப்பிவித்தார்கள்.

இதல்லாமல் இந்நாள் இராத்திரி எட்டு மணிவேளைக்கு நபா சந்தா சாயபு அவர்கள் துரையவர்கள் வீட்டுக்கு வந்து பயண மனுப்பிவித்து கொள்ளுகிறபோது. துரையவர்களும் நபா அவர்களுக்கு மிகுதியும் உபசாரங்களாய் பேசிக்கொண்டு அப்பால் பன்னீர் பாக்கு வெத்திலை கொடுத்து அனுப்பிவித்தார்கள் அப்பால் மியான் மஜுூதார்வுக்கு வெகுமானம் பண்ணின விபரம்.

| | |
|---|---|
| சிகப்பு மறுத்து தாக்கர் | 4 |
| பச்சை சகலாத்து தாக்கர் | 2 |
| பனீர் பெருவை | 2 |
| சூர்கத்தி | 2 |
| கத்திரிக்கோல் | 2 |

இப்படியாக வெகுமானம் பண்ணி அனுப்பிவைக்கிறபோது கோட்டையிலே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். அப்பால் புறப்பட்டு நபா முதலானவர்கள் அனுப்பிவித்து கொண்டு சாகாவுக்குப் போய் அப்பாலங்கேயிருந்து அனைவரும் புறப்பட்டு நபா முதலானவர்கள் வில்லியநூர் வசாற்படியிலே போட்டிருக்கிற டோராவிலே போயிறங்கிய உடனே சுற்று கோட்டை கொத்தளங்கள் பேரிலே இருபத்தொரு பீரங்கிப்போட்டார்கள்.

**சுக்கில ஞு ஐப்பசி மீ 20 உ க்கு 1749 ஆ நொவம்பர் மீ 1 உ சனிவாரம்**

இற்றைநாள் காலையிலே துரையவர்களிடத்துக்குப் போன விடத்திலே பாகூர் தாலுக்கு முப்பத்தாறு கிராமமும் கொடி போடச்சொல்லி எனக்கு உத்தாரம் கொடுத்து அப்பால் சவரிமுத்து சேருவைக்காரனுக்கு வில்லியனூர் தாலுக்கு நாற்பத்தைந்து கிராமமும் ஆக எண்பத்தொரு கிராமத்துக்

கும் காவல் கொடுக்கிறேன்; இதுக்கு கிராம கிராமத்துக்கு இரண்டு சேவகர் வைக்கிறது இதற்கு ஒருவனுக்கு கும்பினி சம்பளம் கொடுக்கிறது. ஒருத்தருக்கு சவரிமுத்து சம்பளம் கொடுக்கிறது; இந்த இரண்டு சேவகர் களும் சொல்தாதுகளைக் கண்டால் பின்னையும் அண்டை அசலிலே கிராமத் திலேயிருக்கிற சேவகரையும் கூட்டிக்கொண்டு அந்த வெள்ளைக்காரர்களை புதுச்சேரியிலே கொண்டுவந்து ஒப்பிக்கிறதென்று இதல்லாமல் தேவனும் பட்டணம், சென்னைப்பட்டணம் இங்கிலீஷ்கார மனுஷர் சொல்தாது ஆர்வது சோராவரியாய் பிடிக்கவந்தால் நம்முடைய சீர்மையிலே வந் திருக்கிற பேரை ஆனையிட்டு மரித்துப்போட்டு வந்த பேர்களையும் தள்ளி அந்த சேதி யிவ்விடத்துக்கு சீக்கிறமாய் சொல்லி அனுப்பிவிடுகிறது என்றும் இப்படியாக துரையவர்கள் உத்தாரம் கொடுத்தார்கள். பாகூர் சீர்மைக்கு நிசானுகள் போடச்சொல்லியும் அந்த சீர்மை என்னை விசா ரிக்கச்சொல்லியும் சொன்னதற்கு நான் துரையவர்களுடனே சொன்னது : எனக்கு சேனை அலுவல் காட்டினீர்கள். அந்த சீர்மைக்கு ரங்கப்பிள்ளையை தானே விசாரித்துக்கொள்ளச்சொல்லி உத்தாரம் பண்ணவேண்டுமென்று சொன்னதற்கு அதற்கு துரையவர்கள் சொன்னது : நீர் என்னத்தினாலே பின் வாங்கினீர்? நீர்தானே விசாரியுமென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது வில்லியனூர் சீர்மை நாட்டாரும் ஒருவரானபடியினாலே அந்த கணக்கு ரங்கப்பிள்ளையைத்தானே விசாரித்துக்கொள்ளச் சொல்லி உத் தாரம் கொடுக்கவேண்டுமென்று சொன்னேன். அப்படியேதானே கணக்கு ரங்கப்பிள்ளையை அழைப்பித்து இரண்டு சீர்மை நாட்டாரும் ஒன்று தானே யென்று கேட்டார். அதற்கு மெய்தானென்று சொன்னார் அதன் பிறகு அந்த பாகூர் சீர்மையை நீர்தானே விசாரித்துக்கொள்ளச் சொன் னார். அந்தபடிக்கு நல்லதென்று போனார். பாகூர் சீர்மை கிராமங்களுக் கெல்லாம் சூரிய உதயத்துக்கெல்லாம் கொடிபோடச் சொல்லி சொன்ன படியினாலே அந்த கொடிகளெல்லாம் சவுரிமுத்து கையிலே கொடுத்து சீக்கிரமாய் போடச்சொல்லி அனுப்பிவித்தோம். இதல்லாமல் அப்போ தானே துரையவர்கள் சின்ன துரையவர்களை அழைப்பித்து சனிக் கிழமை எட்டு நாளைக்கொருதரம் நீங்கள் வில்லியநல்லூருக்குப் போய் ஒரு இடத்திலேயிருந்து ஞாயங்கள் விசாரித்து எந்தெந்தபடிக்கு யாராரை தண்டனை பண்ண வேண்டுமோ எந்தபடிக்கு விசாரிக்கவேணுமோ அந் தப்படிக்கு விசாரிக்கச் சொல்லி சொன்னார். நல்லது அப்படித்தானே செய்கிறேனென்று போனார். இதல்லாமல், லக்ஷ்மண நாய்க்கன், முத்து ராமசெட்டி, சிங்கன்னசெட்டி, வெங்கடாசலசெட்டி முதலானபேர் துரையவர்களண்டைக்கு வந்திருந்தார்கள். தண்டும் பிறகே இன்னும் போகவில்லையா என்று துரையவர்கள் கேட்டார். போகிறதற்கு மூஸ்

தீப்பாயிருக்கிறார்களென்று சொன்னேன். இதல்லாமல் இவர்களுக்கு வரவேண்டிய நிலுவை வநதால் கால்வாசி சிலவுக்கு வைத்துக்கொண்டு முக்கால்வாசி கடன்காரர்களுக்கு கொடுக்கிறதாக சொன்னார்களென்று சொன்னேன். அதற்கு சிங்கன்ன செட்டி சொன்னது: எங்கேயாகிலும் இருபதினாயிரம் வராகன் வந்தால் ஐயாயிரம் வராகன் சிலவுக்கு வைத்துக்கொண்டு மற்றதை கடன் காரருக்குக் கொடுக்கிறோமென்றால் எந்தவிதத்திலே கடன் தீரப்போகிறது ஆனபடியினாலே என்ன வந்தாலும் கடன் காரருக்கு கொடுக்கிறதேயல்லாமல் ஒரு காணியாகிலும் ஒன்றும் எடுக்க கவையில்லை யென்று சொன்னார்.

அந்த சேதி துரையவர்களுடனே நான் சொன்னேன். சிங்கன்ன செட்டி சொன்னது ஞாயந்தான் அந்தபடிக்குதான் நடக்க வேண்டியது என்று சொன்னார்.

### சுக்கில ஞு ஐப்பசி மீ 21 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 2 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே வெகு மழையானபடியினாலே அப்படியிருந்தும் மழையிலே வந்து நம்முடைய பாக்கு கிடங்கிலேயிருந்து துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே மழைமெத்த, வீட்டுக்கு போவென்று சொன்னார். நல்லதென்று பாக்கு கிடங்குக்கு வந்து அங்கே பனிரெண்டு மணி மட்டுக்கும் .இருந்து அப்பால் மழையிலேதானே பேட்டிற்குப்போய் சேர்ந்தேன். அப்பால் பகலைக்குமேலாக ஒரு சாடையாய் பேய்ந்து சாயங்காலம் துவக்கி இராத்திரி பதினைந்து நாழிகைமட்டுக்கும் குடங்கொண்டு சொரிந்தாப்போலே வெகுமழை பெய்தது. அப்பால் ஒரு மணி துவக்கி சாடையாய் பெய்து வந்தது. மூன்று மணி துவக்கி மட்டாய் தூரலாய் பொழுது விடியுந்தனையும் தூரிக்கொண்டிருந்தது. ஆனால் சந்தாசாயபு அவர்கள் முஜாபர்சங்கு லஸ்தரும் நம்முடைய வெள்ளைக்காரர்கள் நாசுமானும் தூக்குணம்பாக்கத்திலேதானே இறங்கியிருந்ததே அவர்கள் அப்பால் கூச்சுபண்ண கூடாமல் மழையிலே வெகு அயிரான்படுவார்களென்று சொல்லிக்கொண்டார்கள். இவர்கள் வழுதாவூரிலே ஆற்றங்கரை ஓரத்திலே தண்டுயிறங்கி இருந்தாப்போலே சந்தாசாயபு அனுப்பிவித்துக்கொண்டு போனாப்போலே அப்படிதானே போகாமல் இப்படி வந்த சாடை தேவனும் பட்டணத்தார் எதாகிலும் சீர்மை பூமி கொடுக்கிறோமென்றால் லக்ஷ ரூபாய் மாத்திரம் கொடார்களா? அல்லது வெகுமான ரூபாயானாலும் பதினாயிரம் இருபதினாயிரம் ரூபாய் வாராதா என்னும் காசிதாஸ் புக்காஞ்சியை உடன் படிக்கை பண்ணி அழைப்பித்துக்கொண்டால் இப்போ சத்தியாய் வந்தது வருமே என்று யோசனை பண்ணிப்போனார்கள். எனக்கேற்க இதொன்றும் நடவாதென்று தோற்றுகிறது. அல்லவென்றால் மூவாயிரம் நாலாயிரம் ஐயா

யிரம் ரூபாய்க்குள்ளே ஏதாவது வெகுமானம் கொடுத்தால் சொல்லக்கூடாது. மற்றபடி இவர்கள் நினைத்துக்கொண்டுபோன காரியத்திலே ஒன்றும் ஆக தக்கதல்லவென்று தோற்றுகிறது. போனதில் போனவர்களுக்கு பவுஷயம் போனது மாத்திரமேயல்லாமல் காரியமில்லை. இந்த சாடைதுரை அரிந்தால் நம்முடைய தாசுமாலை இப்போதானே அழைப்பிப்பார் என்று தோற்றுகிறது. சொன்ன பேச்சை மெய்யென்று கேளாதபடியினாலேயும் தேவனும் பட்டணம் சமாசாரம் நீ சொல்லவேண்டாம், நீ மனுஷர்களை அனுப்பவேண்டாமென்று சொன்னபடியினாலேயும் நாம் சொல்லலாகாதென்று சும்மாயிருக்கிறேன்.

**சுக்கில ஞூ ஐப்பசி மீ 23 உ க்கு 1749 ஆ நொவம்பர் மீ 4 உ அங்காரகவாரம்**

விழுப்புரத்திற்கு எழுதின காகிதத்துக்கு நகல் சுக்கில ஞூ ஐப்பசி மீ 29 உ 1749 ஆண்டு நவமால் ஜமதி பண்ணுகிறதற்கு சுங்குவாருக்கும் மகம்மதுகான் சிலேமான்சிக்கும் முன் 26 தேதி துரையவர்களுத்தாரம் கொடுத்தபடிக்கு மகம்மதுகான் சிலேமான்சிக்கும் அவர்களுடைய வக்கீல் நரசன்ன பண்டிதரையும் அனுப்பின சேவக கந்தப்பன் பரசுராமன், கந்தப்பனுக்கு மாதம் 1 க்கு ரூபாய ஆராகவும் பரசுராமனுக்கு நாலாகவும் நிர்க்கர்ஷை பண்ணி சம்பளம் அவர்களை கொடுக்கச் சொல்லி திட்டம் பண்ணி அனுப்புவித்தேன். இந்நாள் காலையில் பிரபுவினிடத்திற்குப் போனவிடத்திலே நேற்று இராத்திரி சயிந்தலிகானுக்கு பதில் உத்திரவு எழுதச் சொன்னது. பாகூர் ஜாகிர் நங்களது என்றும் இப்போ வேறுவிதமாய் நடந்ததாகவும் சேதி கேட்டோமென்று அப்பால் சினேகவுத்தியோகத்திறமையாய் நடந்தபடிக்கு இப்போதும் நடந்த வேண்டுமென்றும் உசேன் தாஸ்துகான் சாயபு அவர்களுக்கு தயவாயிருக்க சொல்ல வேண்டுமென்றல்லவோ எழுதினீர்கள். எங்களுக்கு யார் ஜாக்கிறதை கொடுத்தார்களோ அவர்கள் தங்களுக்கு அதற்கு ஐவேஜி கொடுப்பார்களென்றும் அப்பால் சினேக விருத்தியாய் நடப்பித்துக்கொண்டு வரவேண்டுமென்று எழுதியனுப்பச் சொன்னபடிக்கு இந்நாள் காலையில் காகிதமெழுதி மோகருபண்ணினேனென்று துரையவர்களுக்கு சொன்னடத்திலே அவர்கள் வக்கீல் தண்டு போகந்தக்கதாக இந்த காகிதம் கொண்டுவந்த கப்பித்தன் கையிலே கொடுத்து அனுப்பிவிடு என்று சொன்னார். அந்தபடிக்கு அந்த காகிதம் சேவகன் கையிலே கொடுக்கிறேனென்றும் மதனந்தபண்டிதன் வாங்கிக்கொண்டான்.

அப்பால் நபாபு முகதீன்கானுக்கு உபசாரமாய் மழை பெய்து லங்கர் கூச்சுயில்லாமல் மொகபு ஆனது என் மனதிற்கு ரொம்பவும் கிலேசமாயிற்று. சுவாமி இனி தங்களுக்கு மனதுக்கு சந்தோஷமாய்தானே சீக்கிரமத்துக்கு பயணம் சாகிப்போகபண்ணுவாரென்று உபசாரமாக எழுதச்

சொன்னார். அந்தபடிக்கு யெழுதியானவுடனே சந்தா சாயபு அவர்களுக்கு முசாபர்கான் சிப்பாய்களுக்கு முன் சம்மதித்தும் போடச்சொல்லி ஒரு காகித மெழுதி அனுப்பச் சொன்னார். அந்தபடிக்கு காகிதமெழுதி முஜாபர் சங்குக்கு பதிலுத்தாரம் சந்தா சாயபு அவர்களுக்கு முன் சம்மதித்துப் போடச் சொல்லி காகிதமெழுதி யனுப்புவித்தோம். அவர்களுக்கு பணம் வர வர உங்களுக்குப் பணம் சம்மதி பண்ணிக்கொண்டு வருவார்கள். அந்த காலம் உங்களுக்கு நாங்கள் ஒரு மாத சம்பளம் கொடுத்தபடியினாலே சேவகத்திலே நீங்களும் உங்கள் சமாத்து சிப்பாய்களும் அவர்கள் ஆஜிராயிருந்து தீரவேண்டும். அப்படி இராமல் போனால் மனம் பொருக்கதக்கதில்லை. என்று உத்திரமெழுதி அனுப்பிவிடென்று சொன்னார். அந்தபடிக்கு யெழுதி சந்தா சாயபு அவர்கள் காகிதமும் முஜாபர்சங்கு காகிதமும் பின்னையும் இரண்டொரு வெள்ளைக்காரர்கள் அறமாத்துக்கு கொடுந்த காகிதங்களும் கூட முஜாபர்கான் அற்கானு கையில் கொடுத்து அனுப்பிவித்தேன் அப்பால் யெழுதத்தக்க அதிசயம் பின்னையொன்றும் கேழ்விபடவில்லை

இற்றைனாள் சந்தா சாயபு தேவனும்பட்டணத்து அண்டையிலே போயிறங்கின சாடை கொஞ்சம் பணம் கேட்கவும் அதற்கு சீர்மை அடமானம் கொடுக்கவும் இதல்லாலாமல் காசிநாசுபுக்கான் இதன் பேரிலே சபிதரல்லிகான் பணம் வரவேண்டுமென்று அதற்கு அல்லி நகீம் சாயபு திவான் ரகுநாத ராயனை இரண்டு மூன்றுதரம் அனுப்பின விடத்திலேயும் தேவனும்பட்டணம் கூண்டுக்குள்ளே கூடவர வொட்டாமல் மனுஷர் முகாந்திரத்திலே சபிதரல்லிகான் கொடுக்கல் வாங்கல் கணக்குகொண்டு வாருங்கோல் தீர்த்துப்போட்டு உண்டான பணம் சம்மதி பண்ணுகிறேனென்று அவர்சொல்ல நீ யெழுதிகொடுத்தபடியும் பதினொரு லக்ஷம் ரூபாயிது இருக்கிறது. இதல்லாமல் உடமைகள் அல்லிதோஸ்துகான் பெண்சாதி கையில் வாங்கினதும் சரிகை நினுசுகள் வாங்கினதற்கும் கணக்குவேறேயிருக்கிறது. இதல்லாமல் சீர்மை பணம் பிரசந்து மாரியத்திலே சென்றது அது வேறே இருக்கிறது இப்படியெல்லாமிருக்க இப்போ சந்தியமாய் எதாகிலும் கொடுத்தால் ரசீது யெழுதிக்கொடுக்கிறோம். அப்பால் கணக்கு பார்த்து தீர்த்துக்கொள்ளுவோமென்று இவர்கள் சொன்னதற்கு அப்போதுதானே பணம் சம்மதியாய் போயிருக்கும், அதற்கெல்லாம் கணக்கு கொண்டுவந்து தீர்த்துக்கொள்ளுங்களென்று ஒருத்தன் வாயவன் சொல்லுகிற சாடை என்னவென்றால் சபிதரல்லிகான் கீழே திவான் சறுவகுல் எத்தியராயிருந்தவன் பிராசத்து அவன் வசத்திலே கணக்கு அமுல் எல்லா மவனாக இருந்தபடியினாலேயும் அந்த நாளையில் சந்தா சாயபுக்கும் சபிதரல்லி கானுக்கும் ஆகாது. தக்காசாயபு முதலான பேர்கள் பந்துக்களிலே ஒருத்தருக்கும் ஆகாமல் பிராசத்து ஒருவனாக இருந்தபடியினாலே சமஸ்த

கணக்கும் கொடுக்கல் வாங்கல் சகல மர்மங்களும் அவனறிந்ததே யல்லாமல் மற்றப்பேருக்கு தெரியாததைத் தொட்டு சபிதல்லிகான் இருந்தாப் போலிருந்து குத்துப்பட்டு செத்துப்போன படியினாலே யும் மீராசத்துக்கும் இவர்களுக்கும் மெத்த துவேஷமாய் முன் பூர்வத்திலே இருந்ததைப்பார்க்க பின்னையும் நூறுபங்கு அதிகமானதினாலே மீர்சத்துக்கு காசிதாசு புகாரஞ்சிக்கும் உள்ளபடியே என்னமாய் நடந் திருக்கிறதோ அந்தச் சாடையின்பேரிலே வெளிப்படுத்தாமல் கணக்குகளை பத்திரம் பண்ணிப்போட்டு இருக்கிறபடியினாலே காசிதாசு புகாரஞ்சி இவர்களை கணக்கு கொண்டுவரச்சொல்லுகிறதும் இவர்கள் கணக்கில்லாமல் விழிக்கிறதும் அந்த அமுல் தெரியாதபடியினாலே கொடுக்கல் வாங்கலை இன்ன சாடையென்று இவர்களுக்கு தெரியாதபடியினாலே இவர் கணக் கொன்று சொன்னவிடத்திலே பெந்த பெந்த விழித்துக்கொண்டிருக்கிறார் கள். டீப்பு பதினோருலட்சம் ரூபாய் ரசீது சபிதல்லிகான் காசாவது அது அவர் பெண்சாதி கையில் கொடுத்திருந்தபடியினாலே அதுமாத்திரமிப்போ அல்லி நகீம் மாரிபந்தில் சந்தா சாயபுவை சேர்ந்து அதற்கு இவர்கள் பணம் காசிதாசை பதற்தின் உசேன்கான் கேட்கிறார்கள் மீர்ராதத்து இதற் குக்கூட உள்ளபடியிலே என்ன விசை வைத்திருக்கிறானோ தெரியவில்லை அதைத்தொட்டு காசிதாசுபுகாரஞ்சி கணக்கு கொண்டுவந்து கொடுக்கல் வாங்கலை தீர்த்துக்கொள்ளுங்களென்று ஸ்திரமான உத்திரமாய் சொல்லு கிறது. இவர்கள் சோராபரி பண்ணுறதபடிக்கு பந்துப்பணம் சிலவழித்து இங்கிலீஷ்காரருடை ஆசிராவிலே சேர்ந்துக்கொண்டு இருக்கிறாப்போலே ஆச்சுது. இப்படி எல்லாம் இருக்க முன் நாலுதரம் மூன்றுதரம ரகுநாதரா யன் போய் முகம் கருப்பு பண்ணிக்கொண்டு வந்து இருக்க அதற்கேற்ற படி மார்க்கமாய் வரப்பந்துகிறவிதமாய் வரபந்துவோமென்று இராமல் இந்த பவுன்சுடனே போனவிதிலே ஆங்கும் பயந்து மார்க்கமாய் வரு வார்களென்றும் அல்லவென்று சமாதாவமியாகிலும் வந்தது வரபற்றுவோ மென்று போனவிடத்திலே ஒன்றுமில்லாமல் முன் இருந்த பணத்தையும் கெடுத்துப்போட்டு இவர்களும் வெட்கி ஒரு கவலையுமில்லாமல் அங்கே யிருந்து கூச்சலபண்ணி தஞ்சாவூருக்கு சாரி போனார்கள். போனமட்டுக்கும் வாசவற்திற்கு வராமல் போனால் சக்குந்தி பண்ணுகிறமட்டுக்கும் இருக்க வேண்டும் போகவேண்டும். இப்படி அவன் வுத்திரம் தெரிந்திருந்தும் இங்கிலீஷ்காரருக்கும் தங்களுக்கும் விரோதபட்டிருக்கிறது மறிந்திருந்து போனதென்னவென்றால் : அனுக்கர் சாமிக்கு தைகற்[illegible] தனது வந்ததுக்கும் அக்கவில்லை என்றும் பிரபஞ்சத்திலே ஜனங்கள் சொல்லு

வார்கள். ஆனபடியினாலே போனதேயல்லாமல் போனால் காதமுகமே சர்வோத்தமனாக போகத்தக்கதில்லையென்று தோற்றியிருக்கிறது. அப்பா லைர்கள் யோசனை என்னமோ எனக்கு தெரியாது.

சுக்கில ஞு ஐப்பசி மீ 24 உக்கு 1749 ஆ நொவெம்பர் மீ 5 உ புதவாரம்

இற்றைநாள் காலை துரையவர்களண்டைக்குப் போய் ஜெயராம பண்டிதன் அவன் கொண்டுவந்த காகிதம் நேற்று படித்துப் பார்த்துச் சொன்னேனே இதல்லாமல் சாத்தாருவுக்கு சாவுராசர் ராகோசிபூசலா பத்தேசிங்கு, கோனேரி பண்டிதன் இவர்கள் நாலுபேருக்கும் காகித மெழுதியனுப்பவேண்டுமென்று சொல்லி காகிதங்களுமனுப்பிவித்து தாமும் லசுகாருக்குப் போகவேண்டுமென்று சொன்னதற்கு நல்லது அப்படியே அனுப்புவிப்போம். ஜெயராம் பண்டிதரை வரச்சொல்ல சொல்லென்று சொன்னார். அவரோடேகூட சந்தா சாயபு முசத்திராடுவ பண்டிதனும் கூட துரையவர்களண்டைக்கு வந்தார்கள். அப்போது துரையவர்கள் பெரிய சாலையிலேயிருந்து அங்கே நாற்காலி போடச்சொல்லி உட்காரச் சொல்லி சந்தா சாயபு நன்றாயிருக்கிறாரயென்று கேட்டார். உங்கள் தயவினால் நன்றாயிருக்கிறார் என்று சொன்னார். அப்பால் சாகுராஜா காகிதமுங்களுக்கு சிரோப்பா துராய பதக்கம் உட்பட கொண்டுவந்து கொடுத்தோமே அதற்கு பதில் காகிதமெழுதி கொடுக்கிறதிலே நபாபு சந்தா சாயபுவை உங்கள் மனதின்படிக்கு அன்வர்த்திகான் தலையை வெட்டு வித்து அந்த பவுன்சிலே உண்டானவர்களை எல்லாம் காவலில்வைத்து ஜெயம் கொண்டு நவாப் சந்தா சாயபையும் ஆற்காட்டு சுபாவுக்கு நிருத் தினோம். இப்பவும் நீங்களந்த பிராந்தியத்திலே நபா நாசர்சங்கு சோறு (சோறிவு) இல்லாமற்படிக்கு முற்றிலும் நிலைக்க பண்ணுகிறது உங்கள் பாரம் என்றும் அப்பால் உங்களுக்கு சந்தா சாயபு என்ன சொல்லி வந்தாரோ அந்தபடிக்கு அவருக்குச் சொல்லி நடக்கதக்கதாக பண்ணு கிறோமென்று பின்னையுமுபசாரமாய் எப்படி யெழுதவேண்டுமோ அப்படி எழுதிவித்து காகிதம் கொடுக்கவேண்டுமென்று சொன்னதற்கு துரை யவர்களென்னைப்பார்த்து இப்போ சொன்னபடிக்கும் பின்னையுமென்ன விதமெழுதச் சொல்லுகிறரோ ஜெயராம் பண்டிதரை கூட வைத்துக் கொண்டு அந்தப்படிக்கு யெழுதி மோகருபண்ணி ஜெயராம் பண்டிதர் கையிலே கொடு என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். உடனே ஜெயராம் பண்டிதர் இருந்துக்கொண்டு ரகோசி பூசலாவுக்கும், பத்தே சிங்குக்கும், கோனேரிபண்டிதருக்கும் கூட உபசாரமாய் சந்தா சாயபு காரியத்திலே பிரயாசைப்பட்டு அவர் தவுலத்து காரியமாய் நிற்கத் தக்கதாக நீங்கள் முன் அபிமானித்து அனுப்பினதின்பேரிலே நாங்கள்

சுபாவிலே சத்துருவை நிக்ரஹம்பண்ணி சுபாவுக்கு சந்தா சாயபுவை நிருத்தினேம். கடைசீமட்டுக்கும் அந்தபடிக்குதானே தயவுபண்ணி சத்துரு சந்தா சாயபுக்கு சேராமல் பண்ணவேண்டுமென்று உபசாரமாய் எழுதி கொடுக்கவேண்டுமென்றுகேட்டார். அந்தபடிக்கு மற்ற மூன்றுபேருக்கும் எழுதிகொடுக்கச்சொல்லி துரையவர்கள் எனக்கு உத்தாரம் கொடுத்தார்கள். அப்பால் சந்தா சாயபுக்கும் முஜாபர்சங்குக்கும் பணம் காசு கொடுக்கவில்லையென்று பேச்சுவார்த்தை நடந்து தாம் பயணம் சாகி ஆதிவெள்ளைக்கு போரோமென்று நபாபு முசாபர்சங்கு ரொம்பவும் உத்தானபட்டு நடந்தது சேனே உண்டு. அப்பாலவருக்கு சமுதாச்சு இப்போ சத்தியாய் இரண்டு லக்ஷ ரூபாய் நகத்துகையிலே கொடுக்கவும் பத்து லக்ஷம் ரூபாய்க்கு நெல்லூர் சாவபல்லெ முதலான சீர்மை அவர் வசம் பண்ணவும் இப்படி உடன்படிக்கை பண்ணி அதற்கு உண்டான பாளையம் மொத்துமா லக்ஷம் ரூபாய்க்கு தீர்த்து அந்த லக்ஷ ரூபாயும் கொடுத்து மற்ற லக்ஷம் ரூபாயும் எட்டு நாளிலே கொடுக்கிறோமென்று உடன்படிக்கையாய் ஆணை சத்தியம் பிராமணர்களுடனே தீர்த்து இனி நாலு மாசமட்டுக்கும் பணங்காசு கேட்கதேவையில்லை என்று ஒப்பு உடன்படிக்கை ஆச்சுதென்று சொன்னார். அதற்கு துரையவர்கள் நபா முஜாபர்சங்கு இன்னும் சிறுப்பிள்ளை அவர்களண்டையிலே ஆன மந்திரிமார்களுமில்லை இவரை தொட்டுதான் சேத்துப்பட்டு காரியம் பத்து லக்ஷம் பன்னிரெண்டுலக்ஷம் வருகிறது ஒன்றுமில்லாமல் போச்சுது இவரிப்படி நடத்தினல் பணம் எப்படி வருமென்று ரொம்பவும் துரை அதை விஸ்தரித்து சொன்னதற்கு ஜெயராம்பண்டிதர் சொன்னது முன் நடந்ததெல்லாம் நடந்தேறிபோச்சுது இனிமேல் ஒரு ஜோலிக்கும் வராமலிருக்கிறோமென்று சத்தியம் பண்ணி கொடுத்தாரென்று சொன்னார். அதற்கு துரையவர்களிருந்து கொண்டு துலுக்கருடைய வாடிக்கை கேற்க நடந்தது நடந்துப்போயிற்று என்று சொல்லுகிறதும் நடத்துகிறகாரியத்தை நடத்தி தீர்த்துப்போகிறதும் சுபாவம் ஆனவிந்த காரியத்தை தொட்டு வெகுசாய் பணங்கள் வருகிறதற்கு இல்லாமல் போச்சுதே. அது காரியங்களெல்லாம் அப்படி போனபடியினலே அல்லவா பணத்துக்கு தவக்கம் வந்தது. இப்போதான் தனக்குச் சொன்ன பணத்து நிலைத்ததினலோ இத்தனை கண்டிப்பு பண்ணுகிறுரென்று சொன்னதற்கு ஜெயராம் பண்டிதன் உள்ளதுதானென்று ஒத்துக் கொண்டு அப்பாலிமாம் சாயபு பேரிலே அல்லிதொஸ்துகானுக்கு வரவேண்டியதென்று ஒன்பதினுயிரத்தொண்ணூரு அசரபியும் சென்னைப் பட்டணம் இருபதினுயிரம் வராகனும் வரவேண்டுமென்று சொல்லி அவன் எழுதி கொடுத்த சீட்டும் காண்பித்தோமே அந்த சீட்டு சம்மதி பணத்தை வாங்கி கொடுத்தால் இப்போ சத்தியாய் இந்த அவசரத்துக்கு

உதவுமென்று சொல்லச் சொன்னுரென்று சொன்னதற்கு துரையவர்கள் ராகவபண்டிதனைப் பார்த்து உம்முடைய கையிலிருக்கிறதே அந்த சீட்டை பார்த்தவுடனே ஜெயராம் பண்டிதரைப் பார்த்து நீர் பாரிசு படித்து இருக்கிறவருமே அந்தச்சீட்டை படித்துப்பார்த்து இன்னதென்று சொல்லுமென்று சொன்னதற்கு அந்தச்சீட்டை வாங்கி படித்துப்பார்த்து சண்டையிலே செத்துப்போன நவாபுது அமானந்தாய் என் வசத்திலே ஒன்பதினுயிரத்தி தொண்ணூறுக்கு அசார்பியும் சென்னைப்பட்டணம் இருபதினுயிரம் வராகனும் என் வசத்தில் அமானத்தாய் வைத்திருக்கிறது இந்த இருபதினுயிரம் வராகனும் ஒன்பதுனுயிரத்தி டுதாண்ணூறுக்கு அசற்பியும் எப்போ கேட்டால் அப்போ சர்க்காருக்கு தாக்கல் பண்ணக்கடவேனென்று எழுதியிருக்கிறதென்று சொன்னதற்கு யார் எழுதிக்கொடுத்தாரென்று கேட்டார்? இன்னுரெழுதிகொடுத்தாரென்றில்லை எழுதுகிற வாடிக்கை இதுதான் மோகருயிருந்தாலும் இன்னுருடையகையெழுத்தென்றிருந்தாலும் இது சீட்டுதான். மோகருமில்லாமல் கையெழுத்துமில்லாமல் இருக்கிறபடியினுலேயொருத்தருதென்று சொல்லப்போகாது. எல்லாருதுந்தானெல்லாருது மல்லவென்றும்சொல்லலாமென்றுசொன்னதற்கு துரையவர்கள்சொன்னது இப்படி ஒன்றுக்கும் கவைக்கு உதவாமலிருக்கிற சீட்டைப் பிடித்துக்கொண்டு ஊரார் வீட்டு பணம் எங்கள் வசத்திலே இருக்கிறதென்று உங்கள் வசத்திலே கொடுத்து விடலாமா? உங்களுடைய பக்ஷமாய் எப்படி நீங்களிருந்தாலும் நியாயத்துடனே நடத்தவேண்டிய காரியத்துக்கு நியாயப்படி நடத்தவேண்டுமேயல்லாமல் அனியாயம் பண்ணப்போகாதென்று சொன்னதற்கு ஜெயராம்பண்டிதரும் நீங்கள் சொல்லுகிறது நியாயம்தான். நீங்களும் ஒரு நியாயத்தை வைத்தல்லவோ நடத்தவேண்டியது சும்மா ஒருத்தர் உங்கள் பாவத்தின்பேரிலே உங்களுடைய காலம் வைத்ததை சும்மா நியாயமில்லாமல் எடுத்து கொடுக்கிறதல்லவே என்று சொன்னுர்கள். அதற்கு துரையவர்களிருந்துகொண்டு ஆனுல் இன்னும் இமாம் சாயபு குமாரனுக்கு எழுதி அனுப்பிவிக்கிறேம் அவர்களென்ன உத்தாரம் எழுதுகிறுர்களோ அதைப் பார்த்துக்கொண்டு அப்பால் சொல்லுகிறேனென்றுசொல்லி என்னை இமாம் சாயபு மகனுக்கு ஒரு காகிதம் லக்ஷ வராகனுக்கு வட்டிகூட சந்தா சாயபு அவர்கள் தங்கள் தகப்பனுர் இமாம் சாயபு பேரிலே வரவேண்டுமென்று பித்திசமெழுதி கோன்சேலுக்கு கொடுத்தார்கள். இதற்கு நீங்களென்ன உத்தாரம் சொல்லுகிறீர்களென்று எழுதியனுப்பச்சொன்னுர். நல்லதென்று அந்தபடிக்கு எழுதியனுப்புகிறேமென்றுசொன்னேன். அப்பால் ஜெயராம் பண்டிதனுக்கு என்ன வெகுமானம் பண்ணவேணுமென்று கேட்டார் நூருவராகனுக்காகிலும் குறையாமல் கொடுக்கவேணுமென்று சொன்னேன். அந்தபடிக்கு முசியே கொர்னேத்

பேருக்கு ஒடுதனசு எழுதிவரச்சொன்னர். ஐந்து சிகப்பு சகலாத்து சிப்பமும் நாலுகெஜம் இரண்டுவர்ண சகலாத்துக்கும் ஒடுதனுஸ் பண்ணிக்கொண்டு வந்து கொடுத்தேன். அதிலே கையெழுத்துப்போட்டார். உடனே சேவகன் கையிலே கொடுத்து கோட்டைக்கனுப்பி அந்தபடிக்கு அழைப்பித்து ஜெயராம் மண்டிதார்வசம் பண்ணிப்போட்டு அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்து சாகுராஜா முதலான நாலுபேருக்கும் காகிதங்களெழுதி முஸ்தீப்பு பண்ணச் சொல்லி மதனந்தபண்டிதருடனே சொல்லிப்போட்டு நானும் ஜெயராம் பண்டிதருமாய் உட்கார்ந்துக்கொண்டு நானிருந்து காகிதமெழுதுகிற விடத்திலேபோய் உட்கார்ந்து தண்டு சமாசாரம் என்ன நாசர்சங்கு சமாசாரம் என்ன வென்று கேட்டவிடத்திலே நாசர்சங்கு அபரங்காபாத்துக்கு இப்புரம் இருபது முப்பது கோசுவந்து கோதாவரிகரையிலே வந்து இறங்கி இக்கரை பவுன்சு எல்லாவற்றையும் தாண்டிவித்து நானும் இப்பால் புறப்படுகிற சமாசாரம் ஊர்சிதமாய் வந்தது. இதல்லாமல் கடப்பை சுபேதாரனுக்கும் கந்தனூர் சுபேதாரனுக்கும் நாசர்சங்கு எழுதியனுப்பி ஆதிவெள்ளை கோட்டையையும் வாங்கிக்கொண்டு இநாயந்து மொகதீன்கானுக்குநடக்கிற சீர்மையையும் கட்டிக்கொள்ளச் சொல்லி எழுதியனுப்பினதாகவும் அதன் பேரிலே அவர்களிருதிரத்நாரும் பவுன்சு கட்டிக்கொண்டு ஆதிவெள்ளை சீர்மையைகட்டவும், கோட்டையை வாங்கவும் பவுன்சு ஏற்படுத்திக்கொண்டு பயணம் புறப்பட்டார்களென்ற சேதி இநாயநது மொகதீன்கானுக்கு ஆதிவெள்ளை கில்லாவிலே இருக்கிற நவாப்பு எழுதியனுப்பின காகிதம் பார்த்துக்கொண்ட தக்ஷணமே பயந்து காபராவாய்ந்த உந்திரக்ஷணம் தன்னுடைய பவுன்செல்லாம் ஆதிவெள்ளைக்குப்போக கூச்சுபண்ணச் சொல்லி சந்தாசாயபு அண்டைக்குவந்து ஆதிவெள்ளையிலே இருந்து வந்த காகிதத்தைக் காண்பித்து நான் எப்படியாகிலும் நாசர்சங்கு அண்டைக்குப்போய் என் காரியத்தை எப்படியாகிலும் பார்த்துக்கொள்ளுகிறேன் உனக்கு சுபையும் நிலைத்தது. வெள்ளைக்காரர் மறுதருமிருக்கிறது நீரெப்படியாவது உம்முடைய காரியத்தை நிர்வாகம் பண்ணிக்கொள்ளலாம் நான்போகிறேன் என்று சொன்னதின்பேரிலே அப்படி செய்யலாகாது நாசர்சங்கு இன்னும் நான்கு மாதத்திற்குள்ளே யல்லவோ வரவேணுமே இந்த நான்கு மாதமட்டுக்கும் நீரும் நானும் ஒருத்தரை ஒருவர் விடக்கவையில்லை இன்னும் பவுன்சும் வைக்கவேண்டியதை வைப்போம் சத்துருவை நிக்ரகபண்ணி அபரங்காபாது மட்டுக்கும் கட்டுவோம் தெய்பவசெந்தனம் உள்ளபடி நடக்கப்போகிறதேயல்லாமல் தப்பி ஒளிந்துகொண்டாப்போலே விடத்தக்கதில்லையே முன்னையே இந்த யோசனைபண்ணி இந்த காரியம் நடத்தாமலே இருக்கவேணும் அதைவிட்டு நடத்தி தீர்ந்துப்போன காரியத்துக்கு இப்போ ஒருத்தருக்கொருத்தர் பயத்தின்பேரிலே சரிபோனபடிக்கு போனவிகிலே

யாருடைய போகத்திலே நடக்கிறதோ தெரியாது. புட்டாய் புட்டாய் போனால் ஆருக்கு என்ன என்ன சம்பவிக்குமோ தெரியாதென்று எப்படி எப்படி தெரியசொல்ல வேணுமோ அப்படியெல்லாம் தெரியச்சொல்லி அதின்பேரிலே குரான் கொண்டுவந்து நலமானாலுமிளப்பமானாலும் ஒருத்தரை ஒருத்தர் கையில் விடக்கவையில்லை என சத்தியம் பிரமாணங்கள் பண்ணிக்கொண்டு அதன்பேரிலே தாம் பத்து லக்ஷ ரூபாய்க்கு நெல்லூர் சனுபள்ளி பற்வனுகான் கொடுக்கவும் இரண்டு லக்ஷ ரூபாய் நகத்து கொடுக்கவும் நான்கு மாதத்திற்கு பணம் கேட்க கவையில்லை என்று தீர்த்துக்கொண்டதென்று உடன்படிக்கையாச்சுதென்று சொல்லி கடப்பையானுக்கும், கந்தனூரானுக்கும், காயிதங்களுமெழுதி சாத்தாராவுக்கும் சாடுராஜாவுக்கும் முதலான பேருக்கும் காகிதங்களெழுதி அனுப்பினார்கள் என்று சொல்லி துரையுடனே அந்த சேதியை சொல்லப் போகாதென்று ஒரு பணப்பேச்சு நிமித்தம் நடப்பதாய் சொன்னேனென்று சொல்லிப்போட்டு இராத்திரிக்கு வருகிறேனென்று அனுப்பிவித்துக் கொண்டுபோனார். அப்பால் இமாம் சாயபு மகனுக்கும் காகிதமெழுதி பீர் மகம்மது, பேர்விராங்கான், துலுக்கன் கையிலே கொடுத்து தியா கடைக்கு நாளை காலையிலே கொண்டுபோகச்சொல்லி கொடுத்தனுப்பினேன்.

அப்பால் துரையவர்களென்னை அழைப்பித்து வெள்ளைக்காரர் சம்மாவிக்கை அறுபத்து நாலு பவழக்குண்டு விலை தீர்ந்தது என் கையில் கொடுத்து, இந்துடனே கூட ஒரு பயனுக்கினை ஒன்று விலைத்தீர்த்து கொடுத்து இது சீர்மையிலிருந்து ஒரு வெள்ளைக்காரனனுப்பினான்; இதை விற்றுப்போட்டு இந்த பணத்துக்கு புடவை சிலை வாங்கி அனுப்பச்சொன்னான். ஆனபடியினாலே இதை விற்றுப்போடென்று ஒரு சின்னப்பெட்டி அஞ்சாறு விரற்கடை அகல நீள முண்டு அதிலே வைத்துக்கொடுத்தார். நல்லதென்று வாங்கிக்கொண்ட உடனே நான் மொறட்டாண்டி சாவடிக்கு பகலைக்கு மேலாக போயிருக்கப்போகிறேன் மதனாந்த பண்டிதனை அங்கே வந்திருக்கச்சொல் என்று சொன்னார்; நல்லதென்று சொன்னேன். தனக்காமன்றி இருக்கிற கிராமங்களிலேயிருந்து பணம்வந்ததை என் கணக்கப்பிள்ளை கையிலே செலுத்திவையென்று சொன்னார். வந்தப்பணத்தை அந்த க்ஷணம் செலுத்திவைக்கிறேனென்று சொன்னேன். அப்பால் பாக்கு கிடங்குக்கு வந்தேன். சர்தாருக்கு எழுதின காகிதம் நாலு முஸ்திக்தாச்சுதென்றும், மதனாந்த பண்டிதன் பகலைக்கு மேலாக சொன்னான். நாளை காலையிலே மோகரு பண்ணிக்கொண்டு நாளைநன்றைக்கு ஜெயராம் பண்டிதனையும் அழைத்துக்கொண்டுபோவோமென்று சொன்னேன். துரையவர்களும் சம்சாரத்துடனே முறட்டாண்டிசாவடிக்குக் குடியிருக்க நாலு மணிக்குப் போனார்.

**சுக்கில ஸ்ரீ ஐப்பசி மீ 26 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 7 உ சுக்கிரவாரம்**

இற்றைனாள் காலையிலே மொறட்டாண்டிசாவடிக்குப் போகச்சே வக்கீல் சுப்பய்யன் காகிதம் வந்தது அதிலே திருவீதிக்கப்புறமிருக்கிற பெண்ணையாற்றங்கரையோரத்திலிருக்கிற வைத்திரெட்டியார் பெண்சாதி கட்டிவைத்த சாவடியண்டையிலே இறங்கியிருக்கச்சே நவாபு சந்தாசாயபு கூடாரத்துக்குள்ளே இராத்திரி பதினைந்து நாழிகை அளவிலே ஒருத்துலுக்கன் கட்டாரியை உருவிகொண்டு அங்கு தபுரிலே வைத்துக்கொண்டு கூடாரபக்கத்திலே இருந்தாப்போலேயும் இவர்கள் குளத்துக்குப் போகவேண்டுமென்று வெளிப்புறப்பட்ட உடனே இசுமுதார்கள் நீயாரென்று கேட்டார்கள் நான் இவ்விடத்தியான் என்று சொன்னவிடத்திலே நீ இன்னேரத்தில் வரக் காரியமென்னவென்று கேட்டு அவனை சோதிக்குமிடத்திலே கையில் கட்டாரி உருவினவாக்கிலே இருந்தது அதைபிடுங்கிக் கொண்டு அவனைப்பிடித்து என்ன கேட்டாலும் அந்தப்பேச்சாய் சொன்னதினாலே அவனை இராத்திரி கட்டிவைத்து பொழுது விடிந்தாப்போலே முசியே துக்கோனை ( Duquesne ) அழைப்பித்து நாங்களென்ன சொன்னாலும் என்ன கேட்டாலும் சொல்லமாட்டேனென்கிறானென்று சொல்லி இவன் வந்த பூர்வோத்திரம் தாங்கள் புறப்படச்சே இவன் கட்டாரியை உருவிகொண்டிருந்த வயணமுதலானது எல்லாம் சொல்லி நீங்களிவனை கண்டிப்பின் பேரிலாகிலும் அறியவேண்டுமென்று முசியே துக்கோன் வசத்திலே ஒப்பித்தவிடத்தில் காப்பிரிகளை அழைப்பித்து அவனை அவர்கள் வசத்தில் ஒப்பித்து இவனைக் கண்டிப்புபண்ணி கேட்கச்சொன்னவிடத்திலே என்ன கண்டிப்பு பண்ணி கேட்டாலும் சொல்லாமல் போனான். அதன் பேரிலே அந்த சாவடி அண்டையிலே தூக்கிப்போட்டார்களென்றும் அவரவர்களிவனை மாபுசுகானனுப்பிவைத்தானென்றும் சந்தாசாயபுனுடைய தலையிலே முழு ஆயிசு உண்டாயிருக்கிறபடியினாலே கொல்லவந்தவனகப்பட்டு கொண்டானென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள் என்று திருச்சினாப்பள்ளியிலே இருந்து மமூதல்லிகான் அனுப்பினானென்று மூன்று பேர்களை அனுப்பினார்கள் என்று அதிலே ரெண்டுபேர்கள் தப்பினார்களென்றும் ஒருத்தன் மாத்திரம் அகப்பட்டுக் கொண்டான் அவனை மாத்திரம் கொன்று போட்டார்கள். அவர்களாயிசு நன்றாயிருக்கிறபடியினாலே அவர்கள் இரண்டுபேர்களும் தப்பிப்போனார்கள் என்றும் எழுதியிருந்தது, அப்பால் துரையண்டைக்குப் போனவிடத்தில்வரும் நேற்று இராத்திரி முசியே துக்கேன் (Duquesne) காகிதத்திலே-மாபுசுகான் மூன்று பேரை அனுப்பி சந்தாசாயபை வெட்டிப்போட்டு வரச் சொன்னவர்களில் இரண்டுபேர் தப்பிப்போனார்கள் ஒருத்தனை மாத்திரம் உருவினகட்டாரியுடனே சந்தாசாயபு கூடாரத்து வாசற்படியிலே கிணத்துக்

குள்ளே இருந்தவனை இராத்திரி பதினைந்து நாழிகைக்கு பிடித்துக்கொண்டு முசியே துக்கோன் ( Duquesne ) வசத்தில் ஒப்புவித்தவிடத்தில் அவனை காப்பிரிகள் வசத்தில் ஒப்பித்து சப்திபண்ணி கேட்டவிடத்தில் மாபுசுகான் சந்தாசாயபை வெட்டிப்போட்டு வரச்சொல்லி அனுப்புவித்தான் நான் ஒருத்தன் உள்ளே நுழைந்தேன் மற்ற இரண்டுபேர்களும் வெளியே இருந் தார்கள் என்னை பிடித்த உடனே அவர்கள் சந்தடி கேட்டு ஓடிபோய்விட் டார்களென்று சொன்னான். அதன்பேரிலே அவனை அங்கே தூக்கிப்போட் டார்களென்று முசியே துக்கேன் ( Duquesne ) எழுதின காகிதம் நேற்று சாயங்காலம் வந்தது அதற்கு சந்தாசாயபு அர்களுக்கு, இந்தசேதி கேட்டு மனதுக்கு சந்தோஷமாச்சுதென்று இனி ஜாக்கிறதை தப்பியாமல் ஜாக்கிறதையாயிருக்கச் சொல்லியும் சுவாமியினுடைய கடாக்ஷம் பூர்னமா யிருக்கச்சே யார் தப்பிதமாய் நினைக்கிறார்களோ அவர்களுக்கே நாசம் வரும் என்றும் சத்துருவாகிய மாபுசுகானிடத்தில் எப்போதும் ஜாக்கிறதையாயி ருக்கவேண்டுமென்றும் அவர்களை கூட வைத்துக்கொண்டு திரியலாகாது. ஒரு விடத்தில் பத்திரம் பண்ணிவைக்க வேண்டுமென்று மிது நிமித்தியம் நபாபு இதாயத்து மொகதீன்காநுக்கும் காகிதமெழுதி அனுப்பிவித்தோ மென்றும் எழுதியனுப்ப சொன்னதுமல்லாமல் நபாபு முஜாபர் சங்குக்கும் இந்தபடித்தான் சத்துருவை தலையின் கீழே வைத்துக்கொண்டிருந்தால் இப்போ சந்தாசாயபுக்கு நடக்கத்தக்கதாக எத்தனம் பண்ணுப்போலே உமக்குமொருவேளை எத்தனம் பண்ணுவான் பாம்பை தலையின் கீழே வைத்துக்கொண்டு ஆபத்து உள்ளபடிக்கு ஆகுதென்று சொல்லி யிருக்கப்போமா நீர் அவனை மிகுதியும் நம்பியிருக்கிறீர் சர்வாத்து மாளுக சத்துருவை நம்ப போகாதென்றும் சத்துரு இளைத்திருக்கிறு னென்று எண்ணப்போகாதென்றும் நம்பியிருந்தால் கடைசியிலே தப்பித மாய் வந்து சம்பவிக்குமென்று அவனை ஒரு கோட்டையிலே பத்திர பண்ணிவைக்கச்சொல்லியும் இப்படியாக யெழுதி சீக்கிறமத்துக்கு அனுப் புவிக்கச்சொன்ஞர். அந்தபடிக்கு இரண்டுபேருக்கும் காகிதங்களெழுதி முத்திரைப்போட்டு சாந்தப்ப சேருவைக்காரன்கையிலே கொடுத்து தபா லின்பேரிலே நபாபு சாயபு அவர்கள் இரண்டுபேருக்கும் அனுப்பச்சொல்லி சொல்லிப்போட்டு அப்பால் நவமால் கிராமங்களில் நவாப் பராவரார்த்கான் ஜாகிரான் சிங்கிரிகோவில் கிளிஞ்சிகுப்பம், சிருவணூர், பிரம்பை முதலான கிராமங்களுக்கும் ஆயமும் இதுகள் முன் சுங்குவாருக்கும் மகம்மதுகான் சுலேமான் காநுக்குப் பைங்கிலே கடன் வாங்கியிருந்ததற்கு தனகார பண்ணியிருந்ததற்கு நடுவே தன்காவிலே வையாமல் அவர்கள் கையாண்டு போனதிலே இப்போ தாங்களந்த கடனிமித்தியம் மறுபடி அந்த கிராமங் களை ஜப்திபண்ணிக்கொள்ளுகிறோமென்று நபாபு சந்தாசாயபுடனே துரை

யவர்கள் மார்பத்திலே சொல்ல அவரதற்கு உத்தாரம் கொடுக்க அப்போ துரையவர்களுக்கு வசூலாயிருக்கிற பணத்தில் சிப்பந்தி சிலவு தள்ளிநின்ற பணத்தில் காலத்தொருபங்கு துரையவர்களுக்கு கொடுக்கிறோமென்று இங்கே வந்திருக்கிற மகம்மதுகான் சுலெமான்கானும் சுங்கு முத்துராம செட்டி லக்ஷ்மணராவுக்கும் பேர்பாதி பங்கானபடியினாலே இருவர்களும் உடன்படிக்கை சொல்லியிருந்தபடிக்கு இந்நாள் ஷெயார் கையெழுத்துப் படி உடன்படிக்கை காகிதமெழுதிவந்து சுலேமுகான் வக்கீல் நரசன்ன பண்டிதன் கையிலே இருந்ததை வாங்கிக்கொடுத்து கிராமங்கள் ஜப்தி பண்ணுகிறதற்குஉத்தாரம் கொடுக்கிறார்களென்று சொன்னதற்கு அந்த உடன்படிக்கை காகிதத்தை வாங்கிக்கொண்டு அந்தக் கிராமங்களை ஜப்தி பண்ணிக்கொள்ளச் சொல்லி நரசன்ன பண்டிதனுக்கு உத்தாரம் கொடுத்துப் போகச்சொன்னார். அப்பால் சுங்கு சேஷாசலசெட்டி, முப்துராமசெட்டி, லக்ஷ்மணராவ முதலான பங்காளிகள் வந்து நாங்கள் போகிறதற்கு உடன்படிக்கை பங்காளிகள் ஏத்தி தாக்ஷியாய் நடவாமல்படிக்கு உடன்படிக்கை எழுதிக்கொண்டு வந்தோம். அதிலே பங்காளிகளனைவரும் கையெழுத்துப் போடவேண்டுமென்று லக்ஷ்மணராவும் முத்துராமசெட்டி முதலான பங்காளிகள் சொல்ல அதில் சுங்கு சேஷாசலன் மாத்திரம் எழுதின உடன்படிக்கையில் புதுச்சேரிக்கெழுதின உடன்படிக்கையில் அவரவர் செலவு வேறேயென்று பொதுச் செலவு பொதுவிலே போகிறதென்று எழுதியிருக்கிறது. அது எனக்கு சம்மதியல்ல. அவரவர் செலவுகூட புதுச்சேரிக்கு மாத்திரம் பொதுச்செலவு என்று எழுதினால் எனக்கு சம்மதி. நானும் கையெழுத்துப் போடுவேன். இல்லாவிட்டால் நான் கையெழுத்துப் போடுகிறதில்லையென்று துரை முன்பாக அவர்களுக்குமிவர்களுக்கும் தகராறு நடக்க அந்நன்பேரிலே துரையவர்கள் சம்மதியாய் பேசி தீர்ந்துக்கொண்டு வாருங்கள் போவோமென்று சொல்லி வாரிகொண்டா ரஞ்சன்குடி துரங்கம் வாங்கத்தக்கதாக ராஜா சாயபு ஒரு குந்தாணி பீரங்கியும் எடுத்துக்கொண்டு குதிரை சுவார்கள் ஆயிரம் சுவார்களையும் கூட்டிக்கொண்டு போரானென்று முசியே துக்கோன் (Duquesne) எழுதினானென்று சொல்லி அப்பால் அதை விஸ்தரித்து பேசிக்கொண்டிருந்து நல்லது பன்னிரண்டுமணிநேரமாயிற்று ஊருக்குப் போகச்சொல்லி உத்தாரம் கொடுத்தார் நாங்களும் ஒருமணி நேரத்தில் ஊரை வந்து சேர்ந்தோம்.

**சுக்கில ஹு ஐப்பசி மீ 27 உ க்கு 1749 ஆ நொவம்பர மீ 8 உ சனிவாரம்**

இற்றைநாள் காலையில் துரையவர்களழைத்தனுப்பித்தபடியினாலே நான் போனவிடத்திலே துரையவர்கள் நேற்று மஜலி பந்தரிலே யிருந்து

முசியே கொக்கேத் (Coquet) பேருக்கு கோஜா நமதுல்லகான் அனுப்பின காகிதத்துக்கு சேவாதுட கோஜா நமதுல்லகான் முனிசிமிராசாமொகபு அல்லி என்கிறவன் தான் வந்த மந்தலபு எழுதி கொடுத்த காகிதமொன்று பாற்சா நாஜர்சங்குக்கு நிசாம் காலம் பண்ணிப்போனபிற்பாடு பாதுர்சா அவர்கள் தெகான்சோபே ஆறுக்கும் தகப்பனுருக்கும் எப்போதும் நடந்த படிக்கு பகலிபண்ணி அனுப்பின பகலி பற்வனுவுக்கு நக்கலு ஒன்றும் இந்த காகிதம் மூன்றும் பாரிசிலே எழுதி அதன் பின்பக்கத்திலே இன்னம் சம்மதி காகிதமென்று பிரான்சு எழுத்திலே எழுதி முசியே கொக்கேத் (Coquet) அப்பால் நடந்த சேதிக்கும் காகிதங்களுமெழுதிவந்தது அதில் பாரிசு காகிதங்கள் மூன்றும் துரையவர்கள் என்கையிலே கொடுத்து படித்து வயணம் சொல்லச்சொன்ஞர் அந்தபடிக்கு மதனுந்தபண்டிதன் கையிலே கொடுத்து படிக்கச்சொல்ல அவர் படித்து சொன்னபடிக்கு துரையவர்களுக்குச் சொன்னேன். அது கேட்ட பிற்பாடு நம்முடைய சினேகம் கோரி நடத்துகிறதற்கும் நம்மை தன் வசமாக்கிக் கொள்வதற்கும், புதுச்சேரி கோட்டை சின்னதென்றும் ஜனங்கள் எத்தனைபேர் இருக்கப்போகிருர்கள்? இரண்டாயிரம் பேர் இருக்கப்போகிருர்கள், மூவாயிரம் பேர் இருக்கப்போகிருர்கள்; இராஜ்யமெல்லாம் திறண்டு ஒருமித்தால் உம்முடைய கோட்டையும் உம்முடைய மனுஷர்களும் நில்லாமல் பறந்துப்போகாதாவென்றும் நாஜர்சங்கு அவர்கள் நினைத்தால் பர்வதங்களை எல்லாம் தூள் தூளாக்கி போடுவாரென்றும் அப்படிபட்டவருடனே நீங்கள் சலுகையாய் நடத்தவேணுமேயல்லாமல் திருடனுட்டமாய் ஒரு அறியாமையால் எங்கள் வீட்டிலே இருந்தவனை கையில் பிடித்துக்கொண்டு சந்தாசாயபு அவ்விடத்துக்கு திருட வந்தால் அவர்களுக்கு மந்திந்துப்பண்ணி சுபா கொஞ்சம் பவுன்சுடனே இருந்தபடியினலே முழுக்கடிந்தீர்கள் இந்த வேளைக்கு அப்படி செய்தாப்போலே முன்னுக்குவரும் காரியம் பார்க்கத்தேவையில்லையா? என்றும் நீங்கள் வர்த்தகம்பண்ண இந்த இராஜயத்திற்கு வந்திருக்கிறீர்களேயல்லாமல் கொள்ளையிட்டு சேர்ரவாரிபண்ணி இராஜயம் கட்டிக்கொள்ள வரவில்லையே உங்கள் வர்த்தகமெல்லாம் எங்கள் சீர்மையிலே எங்கள் இராஜயத்திலே தானே நடக்கவேண்டும். அங்கங்கே நடக்காமல்படிக்கு பந்து பண்ணினுல் அப்பாலுங்களுடைய காரியங்கள் எங்கே நடக்கும்? அப்பால் நீங்களிந்த இராஜ்யத்திலே எத்தனை நாள் சிலவு பண்ணிக்கொண்டு எத்தனை நாளிருக்கப்போகிறீர்கள்? என்று நபாபு கோஜா அப்துல்லாகான் எங்கள் தகப்பனுரானவர் கற்னுட்டகம் சுபாகுரி பண்ணச்சே நாமும் அவர்களும் தங்கள் கீரியத்திலே நன்மையே நடப்பித்தோம். இனிமேலும் எங்களாலே நன்மையே நடத்துகிறோம். இப்போதும் உங்கள் காரியம் சிரேய்சாய் நன்மையாய் நடக்கவேண்டுமானுல் சந்தா சாயபை விட்டு விட்டு நாஜர்சங்கு பார்ச

மாயிருந்து அவர்களுத்தாரபடிக்கு நடந்துக்கொண்டால் அவர்கள் உங்களுக்கு என்ன சீர்மை கொடுத்தார்களோ என்ன உடன்படிக்கை பண்ணினார்களோ அதுவும் நடப்பித்து பின்னையும் ருயத்துபண்ணி நடப்பிக்கிறோமென்றும் இந்தபடிக்கு அவர்களுக்குச்சொல்லி அப்பாலவர்கள் மற்சீ எழுதி அனுப்பவும் ஜெயக்காரிய அட்டவணை எழுதியதிலே இதை விஸ்தரித்து எழுதினார்களோ அப்படி யெல்லாமெழுதாமல் மார்க்கமாய் நீங்கள் எங்கள் வசிலாவாயிருக்கவேண்டுமென்று எழுதாமல் இப்படி நயமாய் எஜமானென்று எழுதவேண்டியதென்னவென்று கேட்டார். அவர்கள் சீர்மைக்கு ஒருகால் வணங்கி எழுதுகிறதல்லவே கடைசியில் காரியம் தங்கள் மாரியாயிருந்தால் உங்கள் மனதின்படிக்கு நடப்பிக்கிறோமென்று எழுதினதுமாத்திரம் பிரதானமாய் பார்த்துக்கொள்ளவேண்டியதென்று சொன்னான். நல்லது இந்த காகிதத்துக்கு பதில் யெழுதி சந்தா சாயபுக்கு அனுப்பிவைப்போம் அங்கேயிருந்து என்ன உத்தாரம் வருகிறதோ அதன்பேரிலே பார்த்துக்கொண்டு உத்திரமெழுதுவோமென்று சொல்லி அப்பால் முசியே கொக்கேத் (Coquet) பேருக்கு கோஜா நமாதுல்லாகான் எழுதினதிலே என்ன எழுதியிருக்கிறதென்று கேட்டார்? மஜலிபந்தர் பிரஞ்சு கொட்டடி எஜமானுக்கு அறிவிக்கிறது புதுச்சேரியிலே இருக்கிற உங்கள் எஜமானுக்கு எழுதியனுப்பின உத்திரம் அழைப்பிக்கிறதற்கு ஜெயகாரியம் பற்து எழுதி சர்க்கார் முனுசிமுருசா முகிப் அல்லிகையிலே கொடுத்து அனுப்புவித்து ரூபு ரூபாயும் சொல்லச்சொல்லி அனுப்புவித்தோம். அவன் வந்து சொல்லுகிறபடிக்கும், அவன் நடக்கவேண்டிய காரியத்திற்கு கொடுக்கிற பற்துபடிக்கு நடந்துகொண்டால் நீங்கள் சுகப்படுகிறீர்கள். சுகத்தைக் கோரி உங்களுக்கும் எங்களுக்கும் முன் நடந்த சிநேகத்துப்பேரிலே நிஷ்டிவைத்து எழுதினோமென்று முனுசி கையெழுத்தா எழுதி அப்பால் கோஜா நேமதுல்லாகான் சுவஸ்தமாயிப்போ எழுதினபடிக்கு நடந்தால் நீங்கள் சுகப்படுகிறீர்கள் உங்கள் நன்மையை கோரி எழுதினோமென்று எழுதியிருக்கிறதென்று சொன்னேன். அப்பால் பின்னை ஒரு காகிதம் என்னவென்று கேட்டார்? அது நாஜர் சங்குக்கான ஆறு சுபாவுக்கு பசலி பற்வனுபாதுஷா எழுதினதிற்கு சவ்வாது என்று சொன்னதற்கு, அதிலே என்ன யெழுதியிருக்கிறதென்று கேட்டார்? அதிலே அசாப் ஜாஹ் உங்கள் தகப்பனார் காலம் பண்ணிப்போன பிற்பாடு அந்த தெக்கான சுப நிமித்தியம் நீ அற்சி எழுதினபடியினாலே அந்த பந்தர்கான் பேரிலே கடாக்ஷ வீக்ஷணம் வைத்து பந்தர்விலே முக்கியமாகவும் பற்சந்து சாகா ஆகவும் பண்ணி பந்தாவாகிய நாஜர் சங்குக்கு அற்சி மாப்பிக்கிதக்கன்னி ஆறு சுபாவும் காலிபண்ணினோம். அவர் ஆணை ஆக்கினையிலே கில்லேதார்கள் சாகீர்தாரர்கள்

மன் சப்பதார்கள் சிர்மைதாரர்கள் கேரிம் வகையரா நடந்துகொள்ளுகிற தென்று குடிகள் வர்த்தகர்களை பிரதேச வர்த்தகர்களை முசாபிதாக்கள் முதலான பேர்களை ஞாயத்துடனே நடப்பிக்கச்சொல்லி இராஜ்யத்திலே ஏழைகளை பலவந்தர் சோராவரி பண்ணுமதும் அப்படி பண்ணு கிறவர்களை சிக்ஷிக்கச் சொல்லியும் அவர்களை அவரவர்கள் மட்டிலே நடந்துகொள்ளச் சொல்லியும் கட்டளையிட்டு ராஜ்யத்தை நியாயத்துடனே பரிபாலனம் பண்ணச்சொல்லி பின்னையுமவர்கள் எழுதுகிற தஸ்தாது படிக்கு பர்மானு எழுதியிருக்கிறதென்று சொன்னதற்கு நல்லது இந்த மூன்று காகிதபடிக்கு சவ்வாதெழுதி சந்தா சாயபுக்கு ஒரு காகிதமொன் றும் மச்சலிபந்தர் கொட்டடியிலிருக்கும் எங்கள் பிராஞ்சுகாரனுக்கு கோஜா நமதுல்லகான் எழுதியனுப்பின அந்த காகிதத்துக்கு சவ்வா தெழுதி நீங்கள் பார்க்கவேண்டுமென்று அனுப்பினேமென்று யெழுதி விடென்று சொன்னார். அந்தபடிக்கு மச்சலிபந்தரிலே இருந்துவந்த மூன்று காகிதத்துக்கும் நக்கலு யெழுதி சந்தா சாயபுக்கு காகிதமெழுதி அதிலே வைத்து மோகருபண்ணி சேருவைக்கார சாந்தப்பன் கையிலே கொடுத்து தபாலிலே அனுப்பச்சொல்லிப்போட்டு மச்சலிபந்தரிலே இருந்துவந்த மூன்று காகிதமும் துரையவர்கள் கையிலே கொடுத்துப்போட்டு வூருக் குப்போகிறோமென்று துரையவர்கள் கையிலே அனுப்பிவித்துக்கொண்டு அரைமணிக்கு வூரை வந்தோம்.

### சுக்கில ஸு ஐப்பசி மீ 29 உ க்கு 1749 ஆ நொவம்பர் மீ 10 உ சோமவாரம்

இந்த நாளும் பிரபு அண்டைக்குப் போகாதபடியினாலே வூரிலே தானே யிருந்து கும்பினிவர்த்தகர்கள் சம்மதியுமனேகம் பேசவேண்டியதுகள் பேசி னேம். அப்பால் சாயங்காலம் முதல் இராத்திரி பத்து நாழிகை வரைக்கும் இருந்து சுக்கு சேஷாசல செட்டியாருக்கும், லக்ஷுமணநாயக்கருக்கும் முத்து ராம செட்டிக்கும் அசமிதானமாய் லக்ஷுமண நாயக்கர் முதலானபேருக்கும் தகராராய் இருந்ததை சாத்தூர் ஜெயராம் பண்டிதர், சந்தா சாயபு ரகு நாதராயர் இருந்து சமாதானம் பண்ணி துரையவர்கள் பேருக்கு எழுதி கொடுக்கிற உடன்படிக்கை இருதிரத்தாருக்கும் சம்மதிபடிக்கு எழுதுவித்து கையெழுத்துப்போட்டு ஒருத்தருக்கொருத்தர் மனதிலே குறை விட்டு விட்டோமென்றும் இனிமேல் சமாதானமென்றும் பாக்கு, வெற்றிலை மாற்றுக்கொண்டு சந்தோஷத்தின்பேரிலே நம்முடைய கையிலேயும் பாக்கு வெற்றிலையும் வாங்கிக்கொண்டு மேலே எழுதப்பட்ட மத்தியஸ்தரும் கூட சாக்ஷிகள் கையெழுத்துப்போட்டு அனுப்பிவித்துக்கொண்டு போனார்கள். அந்த தகராறு நாமா இதன்கீழே எழுதியிருக்கிறது தெலுங்கிலே சவ்வாது

[ ]

### சுக்கில ௵ கார்த்திகை ௴ 1 உக்கு 1749 ஆ நொவம்பர் ௴ 12 உ புதவாரம்

இற்றைநாள்காலையில் மொறட்டாண்டிசாவடிக்குப் போயிருந்து இமாம் சாயபு குமாரன் அசனல்லிகான் அனுப்பின காகித சேதி துரையவர்களுடனே சொன்ன வயணமென்னவென்றால்: முன்னாலே தாங்களெழுதின காகிதமும் நபாபு சந்தா சாயபு மெழுதின பரிசு காகிதமும் வந்து சேர்ந்து சிபார்சு காகிதம் நபாபு சந்தாசாயபு அண்டைக்கு அனுப்பிவித்து நானும் காகிதமெழுதி அதற்கேற்ற பெரிய மனுஷர்களை அனுப்பினவிடத்தில் கில்லேதார்களுக்கும் தீர்த்தபடிக்கு எங்களுடைய சாகீருக்கும், கில்லாவுக்கும் இருபதினாயிரம் ரூபாய் தீர்த்துக்கொண்டு பதினாயிரம் ரூபாய் சம்மதி பண்ணினோம். இன்னும் பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் செல்லவேணுமதை செலுத்தச் சொல்லி வெகுசாய்க் கண்டிப்பு பண்ணுகிறார்கள். ஆனபடியினாலே தக்கா சாயபுக்கும், சந்தாசாயபுக்கும் ஷெ குமாரன் ரசாசாயபுக்கும் பத்துநாள் மனம் பொருந்து வாங்கிக்கொள்ள சிபார்சு காகிதம் வாங்கியனுப்பச் சொல்லியும் இமாம் சாயபு குமாரத்திக்கு கல்யாணம் வருகிறமாதத்திலே பண்ணப்போகிறோம். அந்த சிலவு நடக்கிறதற்கு தாங்கள் கொடுத்தனுப்பவேணுமென்று, எங்களுடைய ஆஸ்தி தங்கள் வசத்திலேயிருக்கிறதே யல்லாமல் வேறேயில்லை என்பது தங்களுக்குந் தெரிந்தபடியினாலே செலவு நடக்கத்தக்கதாக அனுப்பி வைக்கவேண்டுமென்றும் தாங்கள் எங்களுக்கு தகப்பனை இமாம் சாயபு என்று நம்பியிருக்கிறோமென்று, பின்னையும் உபசாரமாய் எழுதியிருந்தது. அந்த சேதியை காகிதத்து வயணப்படிக்கு சொன்னவிடத்திலே துரையவர்கள் பணமில்லையா? கொடுக்கிறதல்லோ என்று சொன்னார். அதற்கு நான் உத்திரம் சொல்லாமலிருந்தேன். அப்பால் அவர்தானே இமாம் சாயபு பணமெல்லாம் நிஜாமண்டையிலே போனவிடத்திலே இங்கேயிருந்து சமிதல்லிகான் முதலானபேர் எழுதின பிராதினாலேயும் மச்சலிபந்தர் முதலானதுகள் குத்தகை வாங்கின நிமித்தமாகவும், அப்பால் நஷ்டப்பட்ட சம்மதி கொடுத்ததிலும் நிசாமுக்கு தாறுமாருமாய் வெகு ஆசை சொல்லி கர்னாடகத்துக்கு அழைத்து வந்ததின் பேரிலே இவன் சொன்னதெல்லாம் பொய்யாய்போன நிமித்தமாகவும் தனக்கு எல்லாரும் வசிலாவாய் தனதாரிபு நிஜாமிடத்திலேயும் நாஜர்சங்கு இடத்திலும் பண்ணுகிறதற்கு பெரிய மனுஷயருக்கெல்லாம் வெகு பணம் சிலவு பண்ணினதினாலேயும் இமாம் சாயபு பணமெல்லாம் கரைந்துப்போயிற்று. இங்கேயிருக்கிறதெம்மாத்திரமோ! அது மாத்திரம் தப்பியிருக்கிறதென்றும் இந்த பணம் தனக்கு கவையில்லையென்றும் இப்போயிருக்கிற பிள்ளை அசனல்லிகானுக்கும் பெண் சாஹிரியாவுக்கும் ஆக எழுதுவித்து கோன்சே கையெழுத்துப்

பட அவர்கள் பேருக்குத்தானே இங்கே வைத்த பணத்துக்கும் சீட்டு வாங்கியிருக்கிறானென்று சொன்னார். இந்தப் பணம்வருக்கும் கவையில்லை என்றும் அவருடைய பிள்ளையையும், பெண்ணையும் சேருகிறதென்று முன்னே முசியே லெனுவார் (Lenoir) நாளையிலே பணம் வைக்கச்சே தானே அந்தபடிக்கு நிருமித்துவைத்து கோன்சேல் முறி வாங்கிக்கொண்டதும் நீங்கள் பத்து திரமுண்டு சொன்னதென்று சொன்னேன். அதற்கு துரையவர்களிருந்துகொண்டு நான் மற்றக் கோலாப்பு சொலீகள்தானல்லோ அறுவான்; அதனாலே தன் பேருக்கு இருந்தால் ஆக்ஷேபனை வருமென்று ஒரு வேலை செலவாய்போனால் அவர்கள் கெட்டுப்போவார்கள். இங்கேயிருந்தால் வட்டியைமாத்திரம் அனுப்புவித்துக்கொண்டு முதலென்றைக்கும் சேதமில்லாமலிருக்கும். யோசனை பண்ணித்தான் வைத்தானென்று சொல்லி அப்பால் பதிலுத்திரமெழுதுகிறதற்கு ஒரு உத்திரமும் சொல்லாமல் தனக்கா கிராமங்களிலேயிருந்து பணங்காசுகள் சுருக்கிலே அனுப்பிவைக்கவேண்டும். நூறு இரனூறு சேர்ந்தாலும் அந்தந்த க்ஷணம் அனுப்பித்துவிடச்சொல்லி எழுதியனுப்பசொன்னதற்கு நான் சொன்னது அந்தபடிக்குந்தானெழுதியனுப்பினேன். சீர்மை வழிகளிலே அன்வர்ந்திகான் சந்தா சாயபு வாராரென்று மூலைக்கு மூலை ஓடிக்கொண்டு திரிகிறதிலே குடிகள் நாட்டாரிவனுக்கு நிலைக்கிறதில்லையென்று வெகு குதிரைகள் வந்து கலாபம்படுகிறபோது இட்ட பயிர்களை கூட அழிந்துப்போமென்று பாதி சீர்மை வழியிலே பயிர்சாகுபடி மட்டாக பண்ணினார்கள். கொஞ்ச நஞ்சமிட்டபயிர்கள் தண்டு வந்து இறங்கியும் கைககயிடக்காரர்கள் போயும் அழிந்துப்போட்டார்கள். அதில் நமக்கு தண்டுகா பண்ணின சீர்மைகளெல்லாம் இவ்விடத்துக்கு சமீபமானபடியினாலே எஜமான்கள் புதுச்சேரிக்கு வந்து அவர்கள் பஷுஞ்சு வழுதாவூரண்டையிலே இருபதினாயிரம் குதிரையும் இரண்டு லக்ஷம் மாடுகளும் அதற்கேற்ற மனுஷர்களும் முப்பத்நாறு நாட்களிங்கேதானே நிலையாயிருந்தபடியினாலே கொசம் நஞ்சம் பயிரானதுகளையும், குடிகளையும், வீடுகளையும் கொள்ளையிட்டு பயிர்களெல்லா மறுத்து மாடுகளுக்கும், குதிரைகளுக்கும் போட்டும் வீட்டுமேற்கூரையெல்லாம் பிடிங்கிக்கொண்டு சுவரைமாத்திரம் வைத்து மற்றதெல்லாம் கொள்ளையிட்டதுமல்லாமல் பெண்டுகளை கெடுத்துப்போட்டதுமல்லாமல் சிரைபிடித்துக்கொண்டு கூடப்போனார்கள். சென்னப்பநாய்க்கன்பாளையம் முதலான திருவீதி சீர்மையிலே பெண்டுகளை ஒவ்வொருத்திபை பத்துபேரும், ஐந்துபேரும் தலப்பட்டங்காட்டியும் இருபது பெண்டுகள் நிர்வகிக்கமாட்டாமல் செத்துப்போனார்களிப்போ அதுவும்போதாமல் தண்டு இந்த மார்க்கமாய் போனபடியினாலே சம்மூலமும் போய் விட்டது. இப்படி போயிருக்கிறபடியாலே குடிகளுக்கு நிர்வாக

மில்லாததினலேயும் முன் இட்டபயிர் சேதப்படுத்தினலேயும் நலனையாகிலும் பயிரிடுவோமென்ருல் எருதுகள், கலப்பைகள் முதலான பயிரிடும் சாதனங்கள் கூட கொள்ளைபோய்விட்டதினலேயும் இந்த சீர்மையிலே பணங்காணுகிறது பிரயாசையென்று சொன்னேன். அதற்கு மெய்தான் நாம் வில்லியனல்லூர் தாலுக்கு கிராமங்களுக்கு நம்முடைய பயமவர்களுகிருக்கச்செய்யும் நாம் எத்தனை பத்திரம்பண்ணியும் கொள்ளையிட்டு நாசம்பண்ணிப்போட்டார்களே அவ்விடத்திலே போகிறதற்கு கேட்கவேண்டுமா மெய்தானென்று சொன்னர். அப்பால் முத்துமல்லாரெட்டி மனுஷன் தேவராயபிள்ளை என்கிறவனுடைய பெண்டுகள் தட்டு முட்டு ஒரு பாப்பான் வீட்டிலே ஒளிக்கவைத்தான் அதை நம்முடையவர்களிருந்து அந்த உடைமையை நாலு மத்தியஸ்தர் முன்பாக அதுகளெல்லாம் பொன்னகை அதற்கு கயிரு உட்பட இருநூறு விராகனெடையும் வெள்ளி நகை இருநூறு விராகனெடையும் ஜாபிதாவயணமெழுதியனுப்பினர்கள். அதுவந்து சேர்ந்து வைத்திருக்கிறது. மற்றபடி அங்கங்கே தானியங்கள் எருதுகள் பசுமாடுகள் அங்கங்கேயிருக்கிறதுகள் அகப்பட்டமட்டுக்கும் சோப்பிடித்தார்கள் தானியங்களெல்லாம் எடுத்து இவ்விடத்துக்கு வந்து வித்து அறுவான உடனே பணம் செலுத்துவார்கள். அச்சரபாக்கம் திருவதி புவனகிரி பணமும் இனிமேல் அறுவாகிறது கொஞ்சனஞ்சம் வரும். தைமாதம் பிறந்தால் அப்புரம் விஸ்தாரம் பணங்கள் நாலு மூலேயும் வரத்துவுண்டாயிருக்குமென்று சொன்னதற்கு மெய்தானுகிலும் எவ்வளவு வந்தாலும் நூறு, இரனூறு வந்தாலும் அந்த ரூபாயை யழைத்து செலுத்திப்போடென்று சொன்னர் அந்தபடிக்கு எழுதி அனுப்பிவைத்திருக்கிறேன். வந்ததெல்லாம் செலுத்திக்கொண்டு வருகிறேன் என்று சொன்னேன் மற்றப்படி யிப்போ விழுப்புரத்திலிருந்து நானூறு ரூபாய் வந்தது அதை நாளையதினம் உம்முடைய கணக்கப்பிள்ளையிடம் செலுத்திப்போடுகிறேனென்று சொன்னேன் செலுத்திப்போடென்று சொல்லி உடயார்பாளையம் மொகத்துமா என்னவென்று கேட்டார் அவர்கள் தேவனும்பட்டணம் விட்டு இப்பால் தெற்குநோக்கி இரண்டு பயணம் போனப்போலே முன் தீர்த்தபடிக்கு லக்ஷ ரூபாயும் கொண்டுவந்தோமென்று இருபத்தையாயிரம் பரங்கிப்பேட்டை வராகனுக்கு ஒப்புக்கொண்டுபோய் அல்லி நகீம் சாயபு அவர்கள் மாரிபத்திலே கொடுத்தார்களவர்கள் நல்லதென்று சம்மதித்து வாங்கிக்கொண்டார். அப்பால் நபா சந்தா சாயபுடனே சொன்னதற்கு முன் தீர்த்தமட்டும் கொடாமல் சலாம்பண்ணி இப்போ இரண்டும் அசல் வந்த பிற்பாடு கொடுக்கிரேமென்று வந்த படியினலே நாம் லக்ஷ வராகன் வாங்குகிறதே யல்லாமல் விடத்தக்கதில்லை என்று சொன்னரென்றும், போகச்சே உடையார்பாளையத்தின் பேரிலே மோகும் போகிறதாய் நிஷ்கர்ஷையாய்த் தீர்ந்ததாய் வக்கீல் எழுதியனுப்பினனென்று சொன்

னேன். நல்லது நீ ஊருக்குப் போ என்று சொன்னார். அனுப்புவித்துக் கொண்டுவரச்சே முஜாபர்கான் மனுஷர் ஒரு குதிரை சுவாரும், இரண்டு சிப்பாய்களும் விருத்தாசலத்தண்டையில் தண்டுவிட்டுப் போட்டு நாங்கள் துரைக்கு காகித மெழுதி கொடுத்ததை வாங்கிக்கொண்டு வந்தோமென்று சொன்னார்கள்.

இந்தனள் பகலுக்கு மேலாக துரையவர்கள் நான்கு மணிக்கு வந்தார் அவர் வந்து சேருவதற்கு முன்னே மூன்று மணிக்கு சேவகன் துரையவர்கள் கோட்டைக்கு நான்கு மணிக்கு வருகிறேனென்றும் உங்களை முன்னே கோட்டைக்கு போயிருக்கச் சொன்னாரென்று சொன்னபடியினாலே நான் கோட்டையை போயிருந்தேன். அவர் வந்த உடனே என்னைப்பார்த்து முசியே துக்கோன் (Duquesne) ஒரு கடுதாசியிலே எழுதினான் ராயப்ப ராஜா என்கிறவனை காவல் வைத்திருக்கிறதாமவனை விட்டு அனுப்பச் சொல்லியும் அவாகளை அங்கே காவல் வைத்திருப்பதனால் யானையக்காரர் ஒருத்தரும் வந்து காண்பித்துக்கொள்ளவில்லை. அதனால் அவனைவிட்டு அனுப்பச்சொல்லி சந்தா சாயபு அவர்கள் தங்களுக்கெழுதச் சொன்னா ரென்று யெழுதியிருந்தது. அவனாரென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது நம்முடைய அப்துல்லாயிமான் பொம்மை ராஜா அவருடைய யானை பதை வாங்கிக்கொடுக்கிறே மென்று ராயப்பனென்கிற கூலிக்காரனொருத் தனைக் கூட்டிக்கொண்டு போய் நபா சந்தாசாயபு கையில் இங்கே தானே வெகுமானம் வாங்கிகொடுத்து யானையின் பேரிலே வைத்து ஊரெங்கும் பிரதக்ஷணம் வந்து வெளியிலே கொண்டுபோய் இறக் கின சேதி தேவரீர் அவர்களுக்கு முஜாபர்சங்கு வீட்டிலே இருக் கச்சே உங்களுக்கு கபுறு வந்து என்னையழைத்து நடந்தது மெய்தானா வென்று கேட்டீர்கள். மெய்தானென்று சொன்னதின்பேரிலே நீங்களவனை கொண்டுபோய் காவல்வைக்கச்சொல்லி சொன்னீர்கள். நான் அன்றைய தினம் காவல்வையாமல் இன்னம் பார்த்துக்கொள்ளுவோமென்று இருந் தேன். இதிலே உள்ளே வந்து தேவடியாள் வீட்டிலே இறங்கியிருக்கிற விடத்திலே சாராயத்தைக் கொடுத்து இராத்திரி பதினைந்து நாழிகை யளவிலே ஒரு குடிசைகாரியும் பிரஷ்டாய் நிர்மாணமாய் ஒருத்தருக் கொருத்தர் அடிதடிகளும் நடத்தினதின்பேரிலே தலையாரிகள் போய் இராத் திரி பதினெட்டாம் நாழிகை அளவிலே இப்படி சாராயத்தைக் குடித்துக் கொண்டு தெருத்தெருவாய் ஓடித்திரிந்துக்கொண்டு அடிதடிகள் நடத்த லாமாவென்று கேட்டதற்கு போய் கேட்ட தலையாரிகளை அடித்துக் காய படுத்தினதின்பேரிலே வந்த தலையாரி போய் நயனாருடனே சொன்னார். வீடும் கிட்டே ஆனபடியினாலே அவன் வந்து ஏது இன்னேரத்திலே

இப்படி நடத்தினுயென்று கேட்டதற்கு அவனை நெத்தியில் கைப்பிள்ருந்த் சோட்டாவினுலே இடித்தான். அவனுக்கு பட்டமாத்திரம் இரத்தம் புறப் பட்ட உடனே அப்பால் தலையாரிகளைவிட்டு பின்கட்டாய் கட்டி சாவடியிலே கொண்டுவந்து அன்னேரத்துக்கு அடைத்து வைத்தார்கள். அப்பாலென் னுடனே பொழுது விடிந்து வந்து கபுறு சொன்ஞர்கள். நீங்களும் காவல் வைக்கச்சொல்லி உத்தாரம் கொடுந்தீர்கள். ஆனபடியினுலே நேரஞ்செய்து காவலிலே தன்னிச்சையாய் வந்து சேர்ந்தானேயென்று இனி விட கவையில்லை சாவடியிலேதானே இருக்கட்டும் என்று சொல்லி அப்போதானே நடந்த சேதியை தங்களுடனேயும் சொன்னேன். அதன்பிறகு முஜாபர்கான் என்னுடனே இவனை எப்படியாகிலும் விட்டுவிட வேண்டுமென்றும் அது நிமித்தியம் சொன்னவிஷயங்கள் சேனே உண்டு அது துரையவர்கள் வேலை என்று பரிகரித்து சொல்லிப்போட்டேன். அப்பால் நபாபு சந்தா சாயபு அண்டையிலே நான் பேசியிருக்கச்சே நவா புடனே அந்த ராயப்ப ராசாவை விட்டுவிடச்சொல்லி சொல்ல வேண்டு மென்று சொன்னதற்கு அது என்னுடைய வேலையல்ல நான் சொல்லுகிற தில்லை யென்று உத்தாரம் சொன்ஞர். மறுநாள் காலையில் முஜாபர்கானை நீங் கள் காவல் வைத்தீர்கள். அப்பால் இந்த பிரசங்கமே யில்லையென்று நடந்த பூர்வோத்திரம் சொன்னதின் பேரிலே அப்துலாயிமான் சந்தா சாயபுக்குச் சொல்லி முசியே துகோனுக்குச் சொல்லி எழுதுவித்தான். சந்தாசாயபுக்கு மனதுண்டாஞல் நித்தியம் அவருடைய காகிதம் வரச்சே யெழுதுவாரா? இவன் போய் முசியே துகோனுக்கு (**Duquesne**) ஒரு வார்த்தை சொன் ஞல் அவன் யெழுதியனுப்பி அழைப்பிப்பாரென்று அலட்டினதின் பேரிலே அலட்டு பொருக்க மாட்டாமல் முசியே துக்கோனை (**Duquesne**) போய் பேசி இருக்கிறவிடத்திலே சாடையாய் சொல்லி யிருப்பானதை வயணமாய் முசியே துக்கோனுக்கு (**Duquesne**) சொல்லி அப்துலாயிமான் எழுதி வைத்திருப்பானென்று சொன்ஞர். அது மெய்தானென்று நானுமதற்குப் பொசுங்குதலையாய் சொன்னேன். அதன்பேரிலே இந்த நியாயத்தை தொட் டென்ன? என்று அந்த நாய் பேய்ச்சு இனிவேண்டாமென்றும் அப்துல்லாயி மான் இத்தனையும் பண்ணுகிருனென்றும், முறுக்கி இனிமேல் அவர்களு மிந்தப் பேச்செடாமல் எழுதிப் போடுகிறேனென்று சொன்ஞர். அப்படித் தான் செய்ய வேண்டுமென்று பதிலுத்தாரம் சொன்னேன். அப்பால் சந்தா சாயபு எங்கே இருக்கிருர் என்று கேட்டார். உடையார்பாளையத்தின்பேரிலே மோகம் பண்ணுர்கள். முன்னே லக்ஷ ரூபாய் தீர்த்துக்கொண்டு வந்து கொடுக்கிறேமென்றவர்கள் பத்துனாள் கழித்து இவ்விடத்திலே லசுக்கர் மோகர் பண்ணபடியினுலே வடக்கத்துகாரியம் என்னமோவென்று யோசனை

பண்ணி நின்றார்கள். எப்போ பாளையம் கூச்சாய் தோக்கை நடந்ததோ அதன் பேரிலே முன் தீர்த்தபடிக்கு லக்ஷரூபாயும் சாயபுதாவுக்கு பதினாயிரம் ரூபாயும் அல்லிநக்கி முத்துக்கு பதினாயிரம் சில்லரை, ரகுனாதய்யர் சிலவு ஐயாயிரம் ரூபாயும் கொடுக்கிறோமென்று வந்து சொன்னார்கள். நல்லதென்று டப்பை வாங்கி இதாயத்து மொகதீன்கான் சர்க்காருக்கு காண்பித்து வாங்குகிறதில்லையென்று மறுபடி சவுக்கார் மாரிபத்திலே டப்பை கொடுத்துவிட்டு இரண்டு லக்ஷ விராகன் வாங்குவோமென்று சொல்லி பாளையம் உடையார் பாளையத்தின்பேரிலே கொண்டுபோயிறக்கி சண்டைக்கு ஆரம்பம் பண்ணி தெத்தின்பேரிலே போய் தங்குகிறதற்கு உடையாருக்குத் தரவேதாராயிருக்கிற செல்ல கனதராயப்பிள்ளையை அழைப்பித்து தெத்துக்குள்ளே பிரவேசிக்கிறதற்கு எத்தனம் பண்ணினார்களென்று சேதி வந்ததென்று சொன்னேன். அப்பால் லோகாபிராமமாய் பேசியிருந்து இங்கிலீஷ்காரன் தேவனாம்பட்டணத்திலே இருக்கிற குவர்னதோர் மேஸ்தர் பிளேயர் (**Floyer**) முதலானபேர் மயிலாப்பூர் பாதிரியை பிடித்தும் புருத்துக்கிசு கொடிபோட்டிருந்ததை பிடிங்கிப்போட்டு அந்தக் கொடி மரத்தின்பேரிலே இங்கிலீஷ் கொடிபோட்டது முதலாய் நடப்பிந்தக் காரியம் மேஸ்தர் புஸ்காவேன் (**Buscawen**) கோந்திர அமிரால் நியாயந் தப்பிதமாய் நடப்பித்தார் அதில்லாமல் மயிலாப்பூர் நபாபு சீர்மை இனி அதனாலே என்னமாய் நடக்குமோ அதுவும் அவர் உத்திரவாதம் பண்ண வேண்டியதேயல்லாமல் எங்களுடைய யோசனையின்பேரிலே நடத்தினதில்லையென்று இங்கே இருக்கிறவர்கள் தங்களைத்தொட்டு நல்லதல்லவென்று தங்கள் பதிலாமையை கழித்துக்கொண்டு சீர்மைக்குப் பிராது எழுதினதாய் கேள்விப் பட்டேனென்று சொன்னார். அதற்கு நான் முன் சுவீடன்) (**Sweden**) ராஜாவுடைய கொடிப்போட்டு பரங்கிப்பேட்டையிலே மேஸ்தர் பாரண்டன் (**Barringtan**) கொண்டுவந்த சரக்குகளை இறக்கிவைத்திருந்ததை பிரமாதீச வருஷத்தில் சென்னைப்பட்டணம் கொவர்னதோர் மேஸ்தர் பீட்டியும் (**Pitt**) [ ]

**சுக்கில ஞு கார்த்திகை மீ 2 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 13 உ குருவாரம்**

இற்றைநாள் காலையிலே முசியே கில்லியாரிடத்திற்கும் (**Guillard**) போனவிடத்திலே அவரும்மைவரச்சொன்னது கும்பினீர் மேலுக்கு அந்தணன் நிமித்தியம் உம்மை கேட்க வேண்டுமென்று வரச்சொன்னதற்கு முசியே சேன்ப்ரே (**Sainfray's**) 1748 ஆ நொவம்பர் மாதத்திலே எழுதின பிராதின்பேரிலே அவரை உத்தியோகம் கவையில்லாமல் பண்ணிக்கொண்டு உனக்கு சம்மதியானபேரை வைத்து காரியம் நடப்பித்துக்கொள்ளச் சொல்லி எழுதின சம்மதியை விளங்கினவிடத்தில் முசியே தெப்பிரே

மேனி (d'Epréménil) போகச்சே யானதிலே ராஜமகேந்திரம் வேலூர் சர்கார் சுபேதாரன் சென்னப்பட்டணத்திலிருந்து வெகு பணம் எடுத்துப் போரானென்றுடலாயித்திரை அனுப்பி மறித்து சிறிதுபணம் காசு வாங்கின சம்மதிக்கு முசியே சேன்ப்ரே (Sainfray) அந்தணன் வேலூர் ராஜமகேந்திரத்திற்குப்போய் அரமனையாருடனே சொல்லி வெகு காரியம் பண்ணி பணம் வாங்கி வைத்தவன் அந்தணனென்று எழுதியனுப்பினது அபத்தம். அதெப்படியென்றால்பிஞ்சிரம்பெத்திரகப்பித்தான் (chief of the Ingeram factory) மேல்தர் சாந்தமான (Saunders) என்கிறவன் வேலூருக்கு சென்னைப்பட்டணம் துரைத்தனம் பிராஞ்சுக்காரனுப்பு ஒருந்தன் வடக்கே போகதக்கதாக ஓடிவந்தான். இங்கிலீஷ்காரருடைமை இருந்ததை வெகு திரவியமெடுத்துக்கொண்டு வந்தானென்றும், அவனைப் பிடித்துக்கொண்டால் வெகு பணமுங்களுக்கு லக்ஷாந்திரம் வருமென்றும் எழுதி அல்லவென்றால் பிடித்து என் வசத்தில் ஒப்பித்தால் நான் அதற்கு நகற்கொடுக்கிறேனென்று மிப்படியாக அவனுள்ளபடியிலே வேஷம் பண்ணினசேதிகேட்டு முசியே ஷவசி (Choisy) அந்தணனை அனுப்பினதுமப்பால் அடிக்கடி இஞ்சீர் கப்பித்தான் நடப்பிக்கிற சேதி முசியே ஷவசி அறிந்து அந்தணனுக்கு இப்படி நடவென்று எழுதின தஸ்தாவேஜ் காகிதங்களை எல்லாம் அந்தணன் காண்பித்தபடியினாலே அந்தணன் கொவர்னதோரண்டைக்கு போகலாமா என்கிற அக்கசின் பேரிலே எழுதினானென்றும் அந்தணன் பேரிலே குற்றமில்லை. இதல்லாமல் இருபத்னைந்து வருஷமாய் கும்பினியாரை சேவிக்கிறான். புதுச்சேரிக்கு வருகிறமட்டுக்கும் இந்த துரைத்தனத்தாரெல்லோரும் இவன் செய்து வருகிறவேலை கும்பினிக்கு கூடிவருகிறவேலை யென்றும் நிஜாஸ்தன் என்றும் வெகு சமர்த்தனென்றும் இதுவரைக்கும் மிருந்த துரைகளெல்லாம் வெகு சந்தோஷத்துடனே பக்ஷமாய் சொல்லிவந்தபடியினாலே இப்போ ஒன்றுமில்லாமல் அவன் புதுச்சேரியிலிருக்கிற குவர்னதோர் அந்தணனை புதுச்சேரிக்கு அனுப்பு என்று யெழுதினது முதல் கொண்டு அந்தணன் பேரில் தப்பும் தாரும் எழுதினது மல்லாமல் அவன் கும்பினிக்கு கடன் கொடுக்கவேண்டுமோ? ஓடிப்போனானா? தன்னை அனுப்பிவித்துக்கொண்டு சுப்பேரியோரிருக்கிற இடத்துக்கு உத்திரத்தின் பேரிலே போயிருக்கிறபடி இருக்கிறவனுடைய வீட்டை திறந்து இருக்கிற பொன் தட்டு முட்டு வெள்ளி தட்டு முட்டு எல்லா மெடுத்துக் கொண்டதுமல்லாமல் வீடு முத்தரித்து சேவுகரையும் காவல் வைக்கவும் அப்பால் அந்தணன் குமாரன் முதலான பேர்களையும் நிஷ்காரணமாய் காவல் வைக்கவேண்டுமென்று நினைத்தபடியினாலே அவர்கள் வெளியே போய் விட்டார்கள். முசியே சேன்ப்ரே (Sainfray) இப்படி அகாரணமாய் நிற்பாரிதியாயிருக்கிறவன் பேரிலே இப்படி நடப்பித்தானென்றும் இரு

றைம்பது வாகன் நிலம் சம்மதி முசியே ஷெவசி (Choisy) ஒடுதி படிக்கு நடந்து கொண்டதற்கு முசியே ஷெவசி (Choisy) ஒடுதி கொடுத்த தற்கு சாதகம் காண்பித்தபடியினலே இவன் பேரிலே ஒன்றும் சொல்ல ஞாயமில்லை என்று ஊரிலே அவரவருக்கு கடன் கொடுக்கவேண்டிய துண்டானல் இவனுக்கும் அனேகம்பேர் கொடுக்கத்தக்கனவுண்டு அதற்கு கும்பினியாருக்கு விசாரிக்கவேண்டியதில்லை. நியாயமில்லையென்றும் வர்த்தகர் பிராது பண்ணுகிறுரென்றும் எழுதினதற்கு அங்கேயிருக்கிற ஷேப் பெண்சாதியின்பேரிலே எழுதினது மெய்யென்கிறதற்கு சாதகமெப்படி என்றுவிந்த அந்தணன் யானத்திலேயிருந்து சின்னோர் குவர்னதோரண்டைக்கு துரையவர்களுக்கு அவ்விடத்து வர்த்தகர்கள் அந்தணனை தூரிபு பண்ணி எழுதினபடியினலே இப்போ அங்கேயிருக்கிற எஜமான் அந்தணன்பேரிலே அகாசின்பேரிலே நடத்துகிற காரியத்துக்கு வர்த்தகரை யழைத்து நீங்களிந்தபடி எழுதுங்கோளென்று பொற்சாது பண்ணினபடியினலே எழுதினர்களென்றும் அதைத்தொட்டு அந்தணன்பேரிலே நேரமில்லையென்றும் அந்தணன் நிரபராதியென்றும் நாளதுவரைக்கும் கும்பினி காரியத்திலே ரொம்ப பிரயாசைப்பட்டானென்றும், விசுவாசியென்றும், வெகு சமர்த்தன் இவன் மாத்திரம் நிறுவாகி அவ்விடத்திலொருத்தருமில்லை. மற்றப்படி கும்பினியில் வேலைக்காரரிலே தண்டிக்கப்படாதவர்களில்லை. நாலுதரம் அஞ்சுதரம் நொஞ்சேஇத்து வாங்கிப்போட்டு மறுபடி வையாதவர்கள் ஒருத்தருமில்லை. இவன் மாத்திரம் இருபத்தைந்து வருஷமாய் ஒருத்தர் ஒரு குற்றம் சொல்லாமல் விசுவாசி சர்மத்தன் என்று சொல்லத்தக்கதாக எண்பித்து கொண்டவன் இந்த அந்தணன் தவிர வேறேயில்லையென்றும் தீர்த்து எழுதினேன் முசியே சேன்ப்ரேக்கு (Sainfray) வந்த முசியே லெனுவாரும் (Lenoir) அப்படியே நடப்பிக்கிறேமென்று எழுதியிருக்கிறதென்று சொல்லி இந்த இம்போர்மேஷன் (Information) காகிதத்தை நாளையதினம் மொறட்டாண்டிசாவடிக்குப் போய் துரைக்கு காண்பித்து அவரென்ன சொல்லுகிறுரோ அந்தபடிக்கு தீர்ப்புயெழுதி கோன்சேலிலே கையெழுத்து திருமென்று சொல்லி அங்கேயிருக்கிற வெங்கடேசனென்கிறவன் பெரிய திருடன் அவனை கட்டிவைத்து அடித்து காவலிலே வைத்து விளங்குப்போட்டு துரத்திவிட்டேன். அவனை முசியே ஷெவசி (Choisy) என்னமாய் உத்தியோகம் வைத்துக்கொண்டானே தெரியாது என்னத்திலே நான் பன்னிரெண்டு பதிமூன்று வருஷம் துரைத்தனமும் பண்ணினேன். மச்சரிபந்தவிலேயும் பத்து வருஷமிருந்து துரைத்தனம் பண்ணினேன். அங்கேயிருக்கிறவர்கள் திருடனென்று, கும்பினீர் காரியத்திலே பிரயாசைப்பட்டு விசுவாசியாயிருக்கிறவர்களையும் நான் நன்றுயறிவேன் இந்த அந்தணன் என் அமுலிலே பதினேழுவருஷம் இருந்தான்

எப்போதும் நிஜஸ்தன் காரியத்தில் ஜாக்கிறதையாய் மனதுவர நடந்துவர நடந்துகொண்டான் என்று இப்படி முசியே கில்லியார் விஸ்தாரமாய் இரண்டு நாழிகை நேரம் பேசிக்கொண்டிருந்து அப்பாவிப்போ முசியே லெனுவார் ( **Lenoir** ) எழுதின காகிதத்திலே அந்தனன் மகன் யாணத்து மெத்திரியின் பேரிலே வேலூர் ராசமகேந்திரம் சர்க்காரிலே தாறுமாராய் சொல்லி ராஜகாரியம் பண்ண நினைக்கிறதாய் சேதி கேள்விபட்டோம் என்று யெழுதினது பெரிய அபத்தம் அவன் தகப்பனிங்கே துரையவர் களண்டையிலே வந்து காரியம் சேகரம் பண்ணிக்கொண்டு போகவேண்டு மென்று பார்த்துக்கொண்டிருக்கச்சே அவனெப்படி செய்ய நினைக்கிறு னென்று எழுதினது ஏதாகிலுமொரு குறைதோற்ற யெழுதவேண்டும் அது நிமித்தம் எழுதினதேயல்லாமல் தப்பிதமென்று முசியே கில்லியார் ( **Guillard** ) சொன்னதற்கு நான் சொன்னது அவன் மகன் என்பேருக்கு எழுதினதும் அவன் தகப்பன் பேருக்கு எழுதின காகிதங்களும் இருக்கிறது அந்த அந்த காகிதத்திலே நாம் இருப்பத்தைந்து வருஷமாய் கும்பினி யாரை சேவித்து துரையவர்கள் அழைப்பித்ததின் பேரிலே நீயங்கே போனதின் பேரிலே எங்கே இருக்கிற சிஞ்ஞோர்களும் கும்பினி உத்தி யோகஸ்தான் தெலுங்கர்களுக்கும் கோள் சொல்லப்போனதாய் தோற்றி இத்தனை ராசகாரியம் பண்ணுகிருர்கள் எவர்கள் என்ன காரியம் பண்ணினலும் என்னமாய் நடந்தாலும் அந்த கோபத்தின் பேரிலே நீ ஏதாகிலும் இங்கே நடந்திருக்கிற காரியங்களை வாய் பதரி சொல் லப்போகிருய் அதன் பிற்பாடு கோளென்று ஒருத்தரும் நம்பார்கள் அப்படிப்பட்ட ஜோலிக்கும் போகாமல் நமக்கு வேண்டிய காரியத் துக்கு மாத்திரம் பேசிக்கொண்டு பிரபு எந்த காரிய நிமித்தம் அழைப் பித்தாரோ அதற்கு உத்திரம் சொல்லிப்போட்டு மார்க்கமாய் அவர் கள் தயவுவர பண்ணிக்கொண்டு வரச்சொல்லி அவரெழுதுகிற காகிதங் களிலே அந்தபடிக்கு எழுதிக்கொண்டு வரச்சே அவனப்படி தாரு மாறுபண்ண நினைக்கிருனென்று யெழுதினது மெத்த பெரிய பொய்யா இருக்குமென்று சொன்னதற்கு அவன் மெத்த புத்திசாலியான படியி னலே தகப்பனுக்கு அந்தபடியெழுதினுன். அப்படி எழுதாவிட்டாலும் முன் அவர்கள் அகாசின்பேரிலே தாருமாருய் நடத்திருக்கிருனென்று எழுதினதெல்லாம் பொய்யாய் போச்சுதே நினைக்கிருனென்று எழுதினது என்ன மெய்யாக போகிறது என்று பின்னையுமவர்கள் கும்பினிகாரியம் பார்க்கதக்கனவர்களல்லா மனதுக்குறைையை பாராட்டிக்கொண்டு பாபத்தை பாராமலும் கும்பினிகாரியம் கெட்டுப்போகிறதே என்று நினையாமலும் அபாண்டமாய் போட்டாகிலும் எதிராளியை கெடுத்தால் போதுமென்று பார்க்கிறவர்கள் என்று சொல்லிக்கொண்டிருந்து பிறகு தங்களுக்கு

[ ]

**சுக்கில ஹூ கார்த்திகை மீ 3 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 14 உ சுக்கிரவாரம்**

இற்றைனாள் அரும்பாத்தப்பிள்ளை சாவடியிலே பரசுராமப்பிள்ளை விருந்து பண்ணினபடியினாலே சாவடியிலே சாயங்காலபரியந்தமிருந்து ஊரை ஆறரைமணிக்குச் சேர்ந்தோம். நான் கோதண்டராமய்யர் முதலான பேர் நேற்று ராத்திரியிருந்து இன்று சாயங்காலம் ஊரை வந்தோம்

**சுக்கில ஹூ கார்த்திகை மீ 4 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 15உ சனிவாரம்**

இற்றைனாள் மொறட்டாண்டி சாவடிக்கு துரையவர்களண்டைக்குப் போகவில்லை. எதனாலென்றால்: நாளையதினம் பொம்மையப்பாளையம் புளியந் தோப்பிலே மத்தியானத்துக்கு சாப்பிட்டு நம்முடன் வருகிறாரென்று கபுறு வந்தபடியினாலே போகவில்லை இந்தனாள் கேள்விப்பட்ட சேதி என்னவென்றால் சென்னபட்டணத்து துரைத்தனம் முன் பிராஞ்சுகாரர் கையிலே வாங்கிக்கொள்ளச்சே முன் தேவனாம்பட்டணத்தில் மேஜாராயிருந்த மேஸ்தர் லோரான்சு (**Lawrence**) என்கிறவனைத்தானே துரைத் தனத்துக்கு மேஸ்தர் புசுக்காவென் (**Buscawen**) அமிரால் நியமித்து வைத்திருந்தவன் இப்போ தேவனாம்பட்டணத்து கீழ் துரைத்தனமான படியினாலே மேஸ்தர் பிரெஞ்சு (**Prince**) என்கிறவனை தேவனாம்பட்டணத்திலிருந்து சென்னபட்டணத்து துரைத்தனத்துக்கு அனுப்புவித்தார்களென்றும் அவன் இன்றையதினம் தேவனாம்பட்டணம் விட்டு கரைவழியாய் வருகிறானென்று அவன் தட்டு முட்டு முதலானதுகளும் சிறிதுபேர் அவர்கள் மனுஷர்களும் இந்தனாள் சென்னபட்டணத்து போகிறார்களென்று நம்முடைய சாவடியிலேயிருக்கிற பேர்களும் கூண்டோரத்தில் இருக்கிற பாளையக்காரன் சேவகர்களும் வந்து கபுறு சொன்னார்கள். பின்னையும் சென்னப்பட்டணத்து துபாசிகள் சம்சாரத்துடனே கூடலூருக்கு வந்து இருந்தவர்களும் சம்சாரத்துடனே மறுபடி சென்னைப்பட்டணத்துக்கு சாகிப்போகிறார்களென்றும் கபுறு சொன்னார்கள்.

மதாம் துப்ளேக்சு தன் சோபுதாரன் கிருஸ்தர் மருவானனந்தன் வசமாக அனுப்பினது சுங்கு சின்னசாமி செட்டி, லக்ஷ்மணராவும் சென்னைப் பட்டணம் ஆணிக்கார (**Assayer**) திம்மாசுக்கு எழுதி கொடுத்த ஐயாயிரத்து இரு நூற்று ஐம்பது விராகனுக்கு எழுதிகொடுத்த காகித சீட்டு ஒன்று துரைக்கு மேல்படி மனுஷன் வெங்கிட நாராயணப்பய்யன் இந்தப் பணம் வாங்கி கொடுத்தால் கால்வாசி கொடுக்கிறோமென்று எழுதிகொடுத்த உடன்படிக்கை சீட்டு ஒன்று இது ஓலையிலே எழுதி செந்திரிகாத்தில் சுருட்டியிருந்தது. இதல்லாமல் மதாம் துப்ளேக்சு கையில் வெங்கடநாராய

ணப்பய்யன் இரண்டாயிரத்தைனூறு ரூபாய் மேலே எழுதப்பட்ட சீட்டை குறுவை வைத்து எழுதிகொடுத்த சீட்டு 2 க்கு சீட்டு 1 க்கு ரூபாய் 2000|— சீட்டு 1 க்கு ரூபாய் 5..0 ஆக இரண்டு சீட்டுக்கு வயணம் சரி. என்பேருக்கு எழுதின காகிதமொன்று ஆக 2 க்கு ரூபாய் [ [ ஆக 5 கடிதம்

**சுக்கில ஞூ கார்த்திகை மீ 5 உ க்கு 1749 ஆ நொவம்பர் மீ 16 உ ஆதிவாரம்**

இற்றைனாள் காலையில் துரையவர்கள் பொம்மையபாளையம் புளியந் தோப்புக்கு வருகிறோமென்று நேற்று இராத்திரிதானே மேஜை, பலகை நாற்காலி முதலான சாமான்கள் சாந்தினிகூட அனுப்பிவித்து போட்ட விடத்திலே இந்தனாள் காலையில் நேற்று ராத்திரி எல்லாம் தலைவலியாயிருந்த படியினாலேவரவில்லை என்று மேஜை, பல்கை,முதலான சாமான்களெல்லாம் மறுபடிஎடுத்தனுப்பச்சொன்னதாய் சேதிவந்தது. நானும் சாமகிரியைகள்நம் முடைய சாவடிக்கு அனுப்பி அப்பாவையும், வெங்கடாசலத்தையும் போகச் சொல்லி அனுப்பிவிந்தேன். அதிலே பனிரெண்டு மணி வேளைக்கு முசியே பிரியேல் **Friell)** எருதுகட்டி ஒரு வடிக்கிற வண்டியின் பேரிலே துரை யவர்களும், பின்னையும் முசியே குவாலி **Carvalho)** வீட்டு பெண்கள் மூன்றுபேரும் துரையவர்கள் குமாரந்தி கூடஏறிக்கொண்டு தமாஷாவந்தார் களென்றும் மற்றப்பேர்களெல்லாம் அவரவர்கள் வாகனத்தின்பேரிலே ஏறிக்கொண்டு வந்தார்களென்றும் கபுறு வந்து சொன்னார்கள். இதல்லாமல் துரையவர்களும் மதாம் அவர்களும் அங்கே வந்து சேர்ந்த உடனே சவிர் சங்கு இருபத்தொரு பீரங்கி வீழ்க்காடு போடச்சொல்லி முஸ்தீப்பு பண்ணி யிருந்தேன். அந்தபடிக்குப்போட்டார்கள். அந்த சத்தமும் கேட்டிருந்த படியினாலேயும் நானே போகவேண்டுமென்று பன்னிரெண்டடிக்கிறவேளைக்கு புறப்பட்டு ஒன்றரைமணி வேளைக்கு பொம்மயபாளையத்து புளியந்தோப்பிலே போய் சேர்ந்து துரையவர்களைக்கண்டு பேசினேன். அவர் சாப்பிடுகிறபடியி னாலே என்னைப்பார்த்து இந்த மடத்திலிருக்கிற உங்கள் பாதிரி எங்களுக்கு சாப்பாடு அனுப்பினான். நீயும் கூட சாப்பிடலாமென்று துரையவர்களும் மதாமும் சொன்னார்கள் நான்கூட என்னை நம்பினவர்கள் கூட இந்தமடத்து பாதிரிகூட சாப்பிடுகிறது உங்கள் சாப்பாடாயிற்றே இதுவேறு சாப்பாடு சாப் பிடு என்று சொல்லவேண்டிய தென்னவென்று அதற்குத் தகுந்தாப்போலே உபசாரமாய் சொன்னதற்கு, ஆனால் நாங்கள் பண்டாரம் சாப்பாடு சாப்பிடு கிறோம். நீயும் போய் சாப்பிடு என்று சொன்னார். அவர்கள் கையி லனுப்புவித்துக்கொண்டு மடத்திலே சாப்பிடபோகச்சே துரையவர்கள் உங்கள் சாவடிக்கு ஒண்டியாய் நடந்துப்போகிறார் பிறகே சின்ன துரை போகிறார் என்று வந்து சொன்னார்கள்; ஆனபடிக்கு ஸ்னானத்தை பண்ணி சாறுஞ்சாதமாய் வாங்கிக்கொண்டு அவர்கள் கையிலே அனுப்புவித்துக்

கொண்டு நம்முடைய அக்ராகாரத்துக்குப் போகச்சே பொம்மையபாளை யத்து வடவண்டை குளத்துக்கு அப்புரம் நம்முடைய அக்ராகாரத்துக்கு தென்புறம் சென்னபட்டணம் சித்து காட்டு சின்னத்தம்பி முதலியார் எதிரே டோலி பிறகே வர இவர் முன்னே நடந்துவந்தார். என்னை கண்ட உடனே கும்பிட்டு "தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று" என்கிற திருவள்ளுவர் குறளை சொல்லி சுவாமி உம்முடைய ஜென்மம் திருவள்ளுவர் குறள் சொன்னபடிக்கு பிறப்பித்தார். ஆனபடியினாலே நீங்களெடுத்த ஜென்மமே அல்லாமல் மற்றபேர் பிறந்ததில் பிரயோஜனமில்லை என்று சொல்லி ஆயிரம் இரண் டாயிரம் காத வழி மட்டும் பாதுஷா முதலானவர்கள் கூட உங்களை இன்னாரென்று சொரூபத்தை அறியாமல் போனாலும் ஆனந்த ரங்கப்பிள்ளை என்கிற பெயரைக்கேட்டு சந்தோஷப்படும்படி நம்முடைய தமிழருக் குள்ளே கீர்த்தி சம்பாதித்தீரே, இதைவிட லோகத்துக்குள்ளே சம்பாத் தியம் பண்ணவேண்டிய வஸ்து ஒன்றுமில்லை என்று சொன்னார். அப்போ நான் நீங்கள் சின்னதம்பி முதலியாரோ என்று கேட்டேன். ஆம் என்று சொன்னார். அதன் பேரிலே உயர்வு சுகிப்பார் உத்தியோகத்திலே இருந் தாலும் வித்தையிடத்திலே உங்கள் மனது தேர்ந்து இருக்கிற சம்மதியும் திருவள்ளுவர் குறள் ஆயிரத்து முன்னூத்தி முப்பதும் பாடம்பண்ணி அதனுடைய அனுபவபபடியே உத்திரம் பிரதி உத்திரம் சொல்லுக்குச் சொல் உதாகரித்து சொல்லுகிறதும் கோபமென்கிறதை விட்டு சாந்தத் துடனே எப்போதும் விதவாம்ஸ்ருடனே பரிக்ஷித்துக் கொண்டு சகல ஜனங்களுக்கும் மித்திரத்துவமாய் நடந்து கொள்ளுகிற சேதி முதலா னதுகளெல்லாம் நாளது வரைக்கும் கேட்டுக்கொண்டு வந்ததற்கு பார்க்கவேண்டுமென்கிற அபிலாஷை ஒன்று வாதித்துக் கொண்டிருந்த தற்கு இன்றையதினம் மனதுக்கு சமாதான மாயிற்றென்று எனக்கு தோற்றினபடிக்கு சற்று விஸ்தரித்து உபசாரமான வார்த்தையாய் சொன் னேன். அவரும் ரொம்ப தோத்திரமாய் உபசாரத்தைச் சொன்னார். இன்னும் சாவுகாசமாய் பேசுகிறதற்கு துரையவர்கள் நம்முடைய மண்ட பத்தில் போனபடியினாலே நான் துரிதையாய் போகவேண்டியது. நீங் களும் இராத்திரிக்கு இவ்விடத்திலே வந்து யிருந்து இரண்டு நாழிகை சாவுகாசமாய் பேசியிருந்து கூட சாப்பிட்டு அனுப்புவித்துக் கொண்டு போகலாமென்று சொன்னதற்கு உங்கள் திருமலையப்பிள்ளை குமாரன் வெங்கடாசலம் நான் உங்கள் அக்ராகாரத்திலே வந்து இறங்கின உடனே வந்து கண்டுபேசி சாப்பாடு மற்றதெல்லாம் விருந்து பண்ணி வைத்து பாக்கு வெத்திலையுங் கொடுத்து அனுப்புவிக்க நான் அனுப்புவித் துக் கொண்டுவந்தேன் அப்பாலும் தேவனாம்பட்டணத்துக்கு துவறையாய்

நான் கொடுக்கவேண்டியது. நீ அங்கி தைத்துப்போட்டுக்கொள்என்றுசொல்ல சமஸ்தமும் சாப்பிடுகிற சாப்பாடு முதலாய் உங்களுடைமையா இருக்கச்சே இதென்ன நீங்கள் கொடுக்கவேண்டுமா வென்று பின்னையும் பெத்து நாயக்கன் சொல்லத்தக்க உபசாரமாய் சொல்ல அப்படியல்ல நான் கொடுக்கிறேனே நீ அங்கி தைத்துக்கொள் என்று சொன்னார். அந்த சேதி நான் வரச்சேதானே எதிர்க்க பெத்துநாய்க்கன் நடந்த சேதியை சொல்லியிருந்தால் நான் போனபிற்பாடு போனவருஷம் இங்கிலீஷ் காரர் வந்து கலாபம் பண்ணினபோது இதிலே நிரம்ப சுலுப்பு ஜாஸ்தி போக வேண்டியதிருக்கிறது. உத்தாரம் கொடுக்கவேண்டுமென்று கேட்க அதன் பேரிலே உபசாரமாய் சொல்லியனுப்பிப்போட்டு நான் துரையவர்கள் நம்முடைய தோப்பிலே இறங்கியிருக்கிற இடத்திலே போய்க் கண்டவிடத்திலே அப்பாவும் வெங்கடாசலமும் இரண்டுபேர்களும் எதிர்கொண்டு போய் இருபத்தொரு விராகன் வைக்க அதன் பேரிலே அவர் அந்த இருபத்தொரு வராகனும் மறுபடி அப்பாவு கையிலே கொடுத்து உங்களுக்கு பண்ணவில்லை என்று சொன்னார் கொஞ்சநஞ்சம் தென்னமரமும் இரண்டு மூன்று கிட்டாப்பிலாவையும் வெட்டிப்போட்டு அந்த பாரிசம் இப்போ புதிதாக கட்டியிருக்கிற வீடுகளெல்லாம் கொளுத்திப்போட்டு போனது மல்லாமல் இந்த கால் வீடுகளினுடைய வாசக்கால் கதவுகள் பாணுகள் முதலானதுகளெல்லாம் எடுத்துக்கொண்டு போனார்கள் அதுகளெல்லாம் இப்போதான் முஸ்திபுபண்ணிவைத்தேன் என்றுசொல்லி காலாப்பேட்டிலேயும் இப்படித்தான் சுட்டுப்போட்டு முசியே லெகே (Legau) தோட்டத்து மரங்கள் சாலைகள் தோப்புகளை ஒன்றும் செய்யாமல் விட்டு விட்டுபோனார் களென்று சொன்னேன் மெய்தானென்று ஒப்புக்கொண்டு அப்போ இங்கேயிருக்கிற பிராமணாள் முதலானபேர்கள் எல்லாரும் எங்கே போயிருந்தார்கள் என்றுகேட்டார் பிராமணர்களெல்லாம் வந்தவாசி திருவண்ணாமலை மட்டும் போனார்கள் பள்ளிகள் பட்டணவர்கள் முதலான பேர்களெல்லாம் மரக்காணம் ஆலம் புறவிமட்டும் போயிருந்து இங்கிலீஷ்காரர் வாங்கிப் போய் நம்முடைய முன்னூறு சிப்பாய்கள் சென்னைப்பட்டணம் மட்டும் வரிசையாயிருந்தபோது வந்து சேர்ந்தார்கள் பிராமணாள் மாத்திரம் தை மாதம் வந்து சேர்ந்தார்கள் என்று சொன்னேன் அப்பால் வெங்கடாசலத்தை யார் என்று கேட்டார். அவர்கள் தகப்பனை பெற்றப்பாட்டனும் எங்கள் தகப்பனாரும் அண்ணன் தம்பிகளென்று சொன்னதின் பேரிலே இவர்களெங்கேயிருக்கிறதென்று கேட்டார். சென்னைப்பட்டணத்திலிருந்தார்கள் எங்களது மெத்தை வீடு முதலானது மூன்று வீடுகளிருந்தன அது மூவாயிரம் நாலாயிரம் விராகன் பொரும் நம்முடையவர்கள்

கோட்டை வாங்கினபிற்பாடு அனேகம் வீடுகள் பிடித்துப் போட்டார் களே அப்போகூட பிடிபட்டு போயிற்றென்று சொன்னேன். அது மெய்தான் நானுமறிவேன். நீ முன்னாலேயும் சொல்லியிருந்தாயென்று சொல்ல அதிலே இவன் ஐந்தாறு வருஷமாய் முசியே பொசேத்து (Bausset) அண்டையிலே இருந்து பராங்கி வார்த்தை படித்துக் கொண்டதும் அப்பாவு இப்போ பிரான்சு வார்த்தை எழுதி படிக் கிறது முதலான பிரஸ்தபங்கள் நடக்கச்சே உன் மகன் நடக்கிறானாயென் றும் ஆரோக்யத்துடனே சுகமாயிருக்கிறானா என்றும் கேட்டார். உங்கள டிமை நன்றாயிருக்கிறான். கொஞ்சம் நடப்பானென்று உபசாரமாய் சொல்ல அவன்பேர் என்னவென்று கேட்டார் உம்முடையபேர் என்று சொல்ல முசியே தெபோலெத்தியேர் (Darbautére) என்கிறவன் பாதர் என்கிற தென்னவென்று கேட்க ஜெயங்கொண்டவன் என்று சொல்ல இப்படி சகல சந்தோஷத்துடனே பேசியிருந்து அங்கேயிருக்கிற மதாம் துப்ளேக்சு முசியே பொசேத்து (Bausset) மதாம் பொசேத்து (Bausset) முசியே துப்ளாம் கூட ஏகத்துக்கு புளியந்தோப்புக்குப்போய் அங்கேயிருந்து இவர்கள் கையில் அனுப்பிவித்துக் கொண்டு எருவெடுக்கிற வண்டியின் பேரிலே முன் வந்தவர்கள்கூட ஏறிக்கொண்டு அந்த கும்பல்படியே முறட் டாண்டி சாவடிக்குப் போனார்கள். போகச்சே இருபத்தொரு பீரங்கிப் போட்டார்கள். நானும் முசியே பொசேத் (Bausset) முதலான பேர்களும் நம்முடைய சாவடிபோய் இராத்திரி அங்கே யிருந்தோம்.

**சுக்கில ஸு கார்த்திகை மீ 6 உக்கு 1749 ஆ நவம்பர் மீ 17 உ சோமவாரம்**

இற்றைநாள் நம்முடைய திருவேங்கடபுரத்து அக்ராகாரத்திலே நேற்று இராத்திரியேப் பிடித்து இருந்தபடியினாலே இந்தநாள் மத்தியானத்துக்கு நம் முடைய மண்டபத்திலே விளையாட வந்திருக்கிற முசியே துப்ளாமும் (Duplan) அவர் பெண்சாதியும் முசியே பொசேத்தும் (Bausset) ரொம்ப வும் பிராதித்து மத்தியானத்துக்கு எங்கள் விருந்தாய் சாப்பிட வேணு மென்று அவர்கள் சொன்ன உபசாரம் காகிதத்திலெழுத முடியாது இதல் லாமல் எட்டு நாளைக்கு முன்பாகத்தானே ஒருதரம் வந்து இருந்து சாப் பிட்டு எங்களை சந்தோஷம் பண்ண வேண்டுமென்று எழுதியிருந்த படியினாலே நானவர்கள் மண்டபத்தில் விளையாட போயிருக்கிறார்க ளென்று இரண்டுதரம் அரிசி, பருப்பு, நெய், ஆட்டுக்கடாக்கள், கோழிகள் முதலான சாமகிரிகைகள் அனுப்பினதுமல்லாமல் மாத்தூர் பாளையக்காரர் முதலானபேர்களுக்கு எழுதியனுப்பி மான் முயல் கௌதாரி கள் முதலானதுகள் அழைப்பித்துக் கொடுக்கிறதினாலேயும் பட்டணவர் களுக்கு தாக்கீது பண்ணிவைத்து மீன்களை பிடித்துக்கொடுக்கிறதினாலே

யும் அவர்கள் பதிலுக்கு விருந்து பண்ண வேண்டுமென்று பிரார்த்தித்த தற்கு நான் சம்மதித்து இருந்த விடத்தில் அவர்கள் பிராமணன் வளவில் சாமகிரிகைகள் கொடுத்து விருந்து பண்ணச்சொன்னார்கள். அதை தொட்டு இருக்கிறப்போலே ஆச்சுதே நம்முடைய குத்தகையான நாலு வருஷமே பிடித்து புத்துபட்டுக்குப்போனதில்லை என்று யோசனைபண்ணிக்கொண்டு கவுசவரம் கோதண்டராமய்யர் அக்ராகாரத்திலே தானே இருக்கச்சொல்லி நானும் கிஷ்ணராயனும். பின்னையும் வரத்தக்கபேர்களுமாய் கூடப்போய் புத்துப்பட்டிலே இறங்கின உடனே முல்லாசாயபு முதலானபேர் குடியான வர்கள், மணியம் குமாரப்பிள்ளை முதலானபேர் கூடவந்து பதினொரு ரூபாய் நசர்வைத்து கண்டார்கள். அப்போ அந்த ஊர் குடிகள் முதலிமார்கள் பாளையக்காரர்கள் முதலானபேர்களுக்கு திலாசாவாய் சொல்ல அவர்கள் நீங்கள் சொல்லத்தக்கதில்லை. உங்கள் வசமான பிற்பாடு நாங்கள் சுகபட்டு வீடுவாசல்கள், உடைமைகள் தட்டுமுட்டுகள் கூட சம்பாதித்து சுகமா யிருக்கிறோம். ஆனால் கோயில் காரியத்துக்கு இப்போ நூறு பொன்மட்டுக் கும் கொடுத்து நடப்பிக்கிறீர்களே ஆடல் பாடல் இல்லாததை தொட்டு சோபிக்கவில்லை அதற்கு மாத்திரம் உத்தாரம் கொடுத்து நடப்பித்தால் தேவடியாக்கள் மோளக்காரர் முதலானபேர்கள் நாங்களழைப்பித்து கோயில் பரிசாரங்கள் கட்டியிருந்த வீடுகள் இப்போ குட்டி சுவராய் கிடக்கிறது அந்த வீடுகள் பத்திரமாய் கட்டி பலப்படுத்தி முன் இருபது முப்பது வருஷங்களுக்கு முன் நடந்தபடிக்கு நடக்கிறதென்று பண்பிக்க வேண்டுமென்று சொல்லி கேட்டார்கள். இப்படியே அழைப்பித்து முஸ்தீப்புபண்ணி சம்பிரமமாய் நடப்பிக்கச்சொல்லி உத்தாரம் கொடுத்துக் கோவிலுக்குப்போய் ஸ்வாமி தரிசனமும்பண்ணி, ஊரையும் சுற்றிப்பார்த்து முல்லா சாயபு முதலான பேர்களுக்கு பாக்கு வெற்றிலையும் கொடுத்து அவர்களை இருக்கச்சொல்லி நாங்கள் அக்ராகாரத்துக்கு பத்து நாழிகைக்கு வந்தோம். அப்போ முசியே கொர்னேத் (Cornet) அவர் பெண்ஜாதி முசியே தெப்ரேன் (Desfrene), முசியே புரி (Bury) இவர்கள் எல்லாம் வந்தார்கள். அவர்களைக் கண்டுபேசி அப்பாலங்கே இருக்கச்சே சென்னப் பட்டணத்து துபாசிகள் சடலூரிலிருந்து சம்சாரத்துடனே மறுபடி சென்னப்பட்டணத்துக்கு போகிறவர்கள் அங்கே வந்து சாப்பாட்டுக் கிறங்கி சமைத்துக்கொண்டு இன்னவேண்டுமென்று இருக்கச்சே இமாம் சாயபு குமஸ்தா சொக்கப்பமுதலியார் என்பவர் நான் அக்ராகாரத்திலே இருக்கிறேனென்று கிருஷ்ணராயருடனே கூட நேற்று இராத்திரிதானே வந்தபடியினாலே அவருக்கும் சென்னப்பட்டணத்து துபாசிகளுக்கும் சினேகமானபடியினாலே அவர்களை அவர்கள் கண்டுபேசினயிடத்தில் பின்னை யவர்களும் எங்களுக்கும் காகிதமுகனையாகவும் பழக்கமில்லை, முன் அறிமுக

மில்லே. அவர் நம்முடைய தமிழ்காலத்துக்குள்ளே மெத்த கீர்த்திபாவி பிருக்கிறமட்டுக்கும், நாங்கள் வந்தவர்கள் அவரை சந்தியாமல் போகிற தல்ல என்று சொன்னதாய் சொக்கப்ப முதலி என்னுடனே வந்து சொன்னான்.

நான் மெத்த நல்லதாயிற்று எப்போ ஒருகால் என் ஸ்னேகத்தைக் கோரி சொன்னபடியினாலே நான் அவர்களுக்கு மிகுதியும் பாத்யனாயிருப் பேனென்று வாசா உபசாரம் சொல்லிவரச்சொன்னபடிக்கு சீர்மை கப்பல் கப்பித்தான்மாரிடத்தில் துபாசிதனம் பண்ணுகிற வேலப்பமுதலியென்று ஒரு அகமடியனும் விஜயநாய்க்கன் என்கிற வடுகனும், ஆருமுத்தா முதலி என்று அகமடியன் சென்னப்பட்டணத்தில் எங்கள் வீட்டு அண்டையில் இருக்கிற நாட்டு பிள்ளையார் கோவில் தென்னண்டை சமீபத்தில் இருக்கிற சந்திலே குடியிருக்கிறதுமல்லாமல் பூர்வம் நான் சிறுபிள்ளையாயிருக்கச்சே அவன் தம்பியும் நானும் கூட சென்னப்பட்டணத்திலே எம்மார் வாத்தியா ரண்டே படிக்கச்சே அவர்கள் வீட்டுக்குப் போய் எந்நேரமும் விளையாடி கொண்டிருக்கிறதுண்டு. அந்த அறிமுகம் அவன் மறந்துப்போனாலும் அவனை பார்த்த உடனே இன்னானல்லவாயென்று பூர்வோத்திரம் சொன்ன உடனே மெய்தானென்று ஒத்துக்கொண்டான். அந்த ஆருமுக முதலி என்கிறவனும் பின்னை ஓர் துபாசி பேர்விளங்கனும் வந்து கண்டார்கள். நான் சற்றே உபசாரம் சொன்னேன். அவர்கள் உபசாரமாய் இந்த ஊரிலே குடியிருந்து கூட அறியாதவர்களானபடியினாலே தமிழருக்குள்ளே சுங்குராமசெட்டி ஒருத்தன் ஏரோப்பு ராஜ்யமும் இந்தியா ராஜ்யமும் கூட பேர்பெற்றவன் நீர் ஒருத்தர் என்று மாத்திரம் சொல்லி அப்பால் நான் சொல்லப்பட்ட மரியாதைக்கெல்லாம் எங்கள் தலைமேலே சும்மா சீர்மையை சுமத்திப்போடுகிறீர் என்று இரண்டுதரம் சொல்லி மேஸ்தர் பிரென்ஸ் (Prince) என்கிறவன் சென்னப்பட்டணத்துக்கு துரைத்தன மாய் வருகிறான். நாங்களித்தனை நாள் தேவனாம்பட்டணத்திலிருந்தோம். இப்போ சென்னப்பட்டணம் சம்சாரத்துடனே போய் சேருகிறோமென்று ஊருக்குப் போகிறோமென்றும் அனுப்பிவித்துக்கொண்டு எழுந்தார்கள். மறுபடி இருக்கச்சொல்லி மேஸ்தர் புசுக்காவேன் (Boscawen) சீர்மைக்கு எப்போ போகிறானென்று கேட்டேன். ஐப்பசி மாதத்தில் போகிறா னென்று சொன்னார்கள். மேஸ்தர் மர்சு (Morse) போகவில்லையாவென்று கேட்டதற்கு மாசு (Morse) சென்னப்பட்டணத்திலே இருக்கிறான் அவன் பெண்ஜாதி மாத்திரம் கப்பலின்பேரிலே சீர்மைக்கு போனாள். இவன்போய் சீர்மையில் மாசு (Morse)குற்றத்தை பரிகாரம் பண்ணி துரைத்தனம் மறு படி வாங்கிவரவேணுமென்று போனான் சுவாமியினுடைய சித்தமெப்படியோ

சீர்மையிலே மேஸ்தர் மாசும் (Morse) கோன்சேல்காரர்கள் பேரிலேயும் நேர மில்லையென்று ஆலோசனையிலே சிறிதுபேர் பேசினார்கள். சிறிதுபேர் நேர்ஸ் தன் என்று பேசினார்கள். அதிலே இவன் போய் மேஸ்தர் புசுக்காவேனை (Boscawen) கொண்டும், இவ்விடத்து நியாயமெல்லாம் சொல்லுவித்து துரைத்தனம் வாங்கி வாரேனென்று போனான். அப்புரம் அவன் பிராப் தானுசாரம் நடக்குமென்று சொல்லிவூருக்குப்போக செலவு கொடுக்க வேணுமென்று கேட்டார்கள். அப்பால் பாக்கு வெத்திலை, பன்னீர் கொடுத்து சாப்பிட்டுபோக வேண்டுமென்று சொல்ல நல்லதென்று ஒப்புகொண்டு சாப் பிட்டு அப்படிதானே போகிறோம் மறுபடி வர கூடுகிறதில்லை இதுதான் அம்பகமென்று சொன்னார்கள்.

நல்லதென்று அனுப்புவித்து அவர்களது சாப்பாட்டுக்கு அரிசி, பருப்பு நெய் முதலான சாமகிரிகைகளெல்லாம் கொடுத்து அனுப்புவித்து சாப் பாடு பண்ணி வைத்தேன். சாப்பிட்ட உடனே சொல்லி அனுப்பிப்போட்டு ஊருக்குப்பயணம் சாகிபோனார்கள். அப்பால் நாங்கள் சாப்பிடச்சே மதாம் துப்ளாம், முசியே துப்ளாம் (Duplan) முசியே பொசேத்து (Bausset) முதலானபேர் சாராயம் குடிக்கச்சே அடிக்கடி சாந்தே சொல்லி அனுப்பி கொண்டேயிருந்தார்கள். நாங்கள் சாப்பிடச்சேயும் அவர்களுக்கடிக்கடி சாந்தே சொல்லி அனுப்பிக்கொண்டேயிருந்து அப்பால் சாப்பிட்ட உடனே பெரிய தட்டிலே பாக்கு வெற்றிலை, கத்தகாம்பு, ஏலக்காய், சாபத்திரி, ஜாதிக்காய் முதலானதுகள் எடுப்பித்துகொண்டு முசியே பொசேத்து (Bausset) முசியே துப்ளாமும் (Duplan) நாங்கள் சாப்பிட்டு இருக்கிற பார்ப்பார் வீட்டுக்கு வந்து பாக்கு வெத்திலையும் கொடுத்து உபசாரமும் சொன்னார்கள். நானும் வெகு உபசாரமும் சொல்லி அவர்களை அனுப்பி வித்து இரண்டு நாழிகை சப்பிராச்சு கொண்டு இருந்து அப்பால் முன் சொல்லப்பட்ட வெள்ளைக்காரர்கள் வெள்ளைக்கார்ச்சிகள் கையில் அனுப்பி வித்துக்கொண்டு கோதண்டராமர் கிருஷ்ணய்யர் சொக்கப்பமுதலி முதலான வர்கள் அனைவரும் ஆறுமணி சாயங்காலவேளைக்கு ஊரை வந்து சேர்ந் தோம்.

**சுக்கில ஞு கார்த்திகை மீ 11 உ க்கு 1749 ஆ நோவம்பர் மீ 22 உ சனிவாரம்**

இற்றைநாள் துரையவர்கள் காலையிலே வந்து எட்டுமணிக்கு என்னை அழைப்பித்து அல்லிநகிம் சாயபு பணம் வந்ததாவென்று கேட்டார்? இன்னும் வரவில்லையென்று சொன்னேன். நயனார் நகர் ஒப்புக்கொண்ட பணம் வந்ததாதவென்று கேட்டார் இன்னம் வந்ததில்லை என்று சொன் னேன். நாளையதினம் வந்துவிடுமென்று சொன்னேன். அதை தம்முடைய

கணக்கப்பிள்ளை கையில் முதலிட்டால் அவன் தண்டுகாரருக்கு அனுப்பிவிப்பாமென்று சொல்லி அவனையும் அழைத்து ருசு முகாபணியாய் நயினார் சம்மதி வாங்கி பாசுராமப்பிள்ளை முதலிட்டு முசியே துக்கோனுக்கு (Duquesne) அனுப்பச்சொன்னார். மற்றபடி கோவனத்திலிருந்து முசியே புற்னோ (Bruno)காகிதமெழுதினன். மேஸ்தர் புசுகாவென் (Busquawen) திருச்சினாப்பள்ளியிலே இருக்கிறானென்று இங்கிலீஷ்காரர் சென்னைப்பட்டணத்திலே சொல்லிக்கொள்ளுகிறார்களென்று எழுதினன். எத்தனை பெரிய பொய்யைச் சொல்லுகிறார்கள். இந்த இங்கிலீஷ்காரர் என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது இங்லீஷ்காரர்களுக்கு பொல்லாத காலமும் நம்முடைய பிரான்சுகாரருக்கு சகல ஜெயகாலமானபடியினாலே அவர்களுக்கு இப்படி போய் சொல்லுகிறது இந்த ராஜ்யத்திலே. [ ]

**சுக்கில ஞு கார்த்திகை மீ 13 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 24 உ சோமவாரம்**

இற்றைநாள் காலையில் சந்தாசாயபு அவர்கள் உடையார் பாளையம் மோகத்துமா பைசலானதற்கு ஒரு காகிதமும் சாவனூர் மங்காபுரம் சுபாதாரன் அப்துல் அமின்கான் என்கிறவன் சந்தாசாயபு பேருக்கு எழுதின காகிதமுமவர் துரைபேருக்கு சாவனூர் பங்காபுரம் சுபேதாரன் தமக்கு காகிதம் அனுப்பினாரென்றும் அந்த காகிதமே தங்களண்டைக்கு அனுப்புவித்தோம் அது பார்த்துக்கொண்டால் தெரியவருமென்றும் அவர் ஒரு ஜோடு சீர்மை நாய்க்கும் ஒரு துறபினுக்கும் எழுதியிருந்தார். அந்தபடிக்கு அவாளையுமனுப்பிவிக்க வேண்டுமென்று அந்த காகிதம் படித்துப்பார்த்துக் கொண்டு மறுபடி அனுப்புவிக்கச் சொல்லியும் ஒரு காகிதத்திலெழுதியிருந்தது என்னவென்றால்: உடையார் பாளையத்தான் நாம் புதுச்சேரியில் வந்திருக்கச்சே ஆனந்தரங்கன் மார்பத்தில் வக்கீல்களை அனுப்பிவித்து லக்ஷ ரூபாய் தீர்த்துக்கொண்டு தர்பாருகாச்சும் வேறே கொடுக்கிறோமென்று அதுவேறே தீர்த்துக்கொண்டு பணம் கொண்டு வாரோமென்று போனவர்கள் நாசர் சங்கு வாராரென்று யோசனை பண்ணிக்கொண்டு பணம் கொண்டுவாராமலங்கேதானே நின்று சண்டித்தனம் பண்ணி சின்ன மனுஷருக்கு உங்கள் ஆசீர்வாதம் தயவினாலேயும் முசியே துக்கேன் (Duquesne) முதலான பேர்கள் போயிறங்கி பவுன்சை முன்னே அனுப்பினமாத்திரத்திலே முன்னே லக்ஷத்தி பதினாயிரம் ரூபாய் ரொக்கமும் லக்ஷ ரூபாய் தவணையாய் பேசினார்கள். அப்பால் மூன்று நான்கு தேத்து சுட்டு உள்ளே பிரவேசிக்கிற இடத்தில் எழுபதினாயிரம் ரூபாய் ரொக்கமாய் கொடுக்க தீர்த்துகொண்டு பணமும் சம்மதி பண்ணினார்களானபடியினாலே சிப்பந்தி காசுக்கு உங்கள் பணந்துக்கு வேசடை பண்ணிக்கொண்டு வந்தோமே அந்த சிப்பந்தி சிலவுக்கு உங்களை வேசடை பண்ணாமல் இங்கேதானே

தங்களுடைய பாச்சுது இனிமேல் தஞ்சாவூர் காரியமும் உங்களாசீர்வாதத்தினாலேயும் தயவினாலேயும் அதுவும் மார்க்கமாய் தீர்ந்துப்போகவேண்டியது வருகிறது. நபாபு முஜாபர்சங்கு அவர்கள் தஞ்சாவூருக்கும் இறங்கியிருக்கிறவிடத்துக்கும் பனிரெண்டு கோசிலே இருக்கிறோமென்றும் அதுவும் பேச்சு வார்த்தை நடக்கிறது சீக்கிரத்தில் தீர்ந்து போகுமென்று எழுதினானென்றும் காலாக்காலுக்கு திருநல்லாரு முதலான பர்காணுக்களுக்கு சமாதானமாகிறதானால் தஞ்சாவூர் ராஜாவினுடைய பர்வாணுய் இனமாய் வாங்கியனுப்பச் சொல்லியும் எழுதினார்களே ஆனால் நாங்களிறங்கியிருக்கிற இடத்துக்கும், கொள்ளடத்துக்கும் பனிரெண்டு கோசு அப்பால் தஞ்சாவூர் எட்டு கோசு ஆக இருபது கோசின்'பரிலே இறங்கியிருக்கிறோம் அப்படியே 'தஞ்சாவூருக்கும் எங்களுக்கும் ராசியானால் ராஜாவைக்கொண்டு தாங்களெழுதியனுப்பின சாபிதாபடிக்கு பர்காணுகளுக்கு இனம் பர்வணுவாங்கி அனுப்புவிக்கிறோம். அல்லவென்று சமாதானமில்லாமல் போனால் முசியே துகோன் (Duquesne) முதலான சறுதாரைக் கொண்டு கோட்டையை வாங்கிக்கொண்டு தாங்களெழுதினபடிக்கு பர்கணுவுக்கு இனம் பர்ாவணு நான்தானே யெழுதியனுப்பிவிக்கிறேனென்று சேஷாராவ் பாதர் போய் கொள்ளிடத்துக்கு இக்கரை திருச்சினாப்பள்ளி சீர்மையெல்லாம் தோரணம்கட்டி நான் திருனல்வேலி சீர்மை அதற்கு முன்னே சிறிது ராணுவு போய் தோரணம் கட்டினார்கள் இனிமேல் திருச்சினாப்பள்ளியும், கோட்டையும் உங்கள் தயவினாலே கைவச்மாகுதென்றும், இமாம் சாயபுவினது பத்திரம் ஒன்பதினாயிரத்து தொண்ணூறு அசாபியும் இருபதினாயிரம் சென்னைப்பட்டணம் கருக்கு வர வேணுமென்று தமசுக்கு ராகவபண்டிதர் கையில் கொடுத்து அந்தப்பணம் வாங்கிக் கொடுக்கச்சொல்ல சொல்லி வந்த சம்மதிக்கு அந்த தமசுக்குமேலே போகிறதில்லை என்றும் இன்னாருதென்று பேரில்லையென்றும் யாரைக் கொண்டு கேட்டு வாங்கலாமென்றும் அந்த சீட்டுக்கு ஆக்ஷேபங்களாய் சொன்னீர்களாம். இப்பவும் இப்படி நடக்கிறது உண்டென்று உங்களிடம் சொன்னேம். இப்பவும் நான்தானே இமாம் சாயபு மகனை கேட்டு வாங்கிக் கொள்ளுகிறோம், அந்த தமசுக்கும் கொடுத்து ராகவபண்டிதரையும் அனுப்பிவைக்கவேணுமென்று ஒரு துண்டு காகிதத்திலே எழுதிப்போட்டிருந்தது இந்த சேதியை துரையவர்களுக்கு சொல்வோமென்று துரையவர்கள் வருவாரென்று பார்த்தோம். இந்த மட்டுக்கும் வராதபடியினாலே பகலைக்கு மேலாக மொறட்டாண்டி சாவடிக்குப்போய் துரையவருடனே சொல்லுகிறவிடத்தில் பதிலுத்திரம் என்னமாய் எழுதச் சொல்லுகிறுரோ அறியவேண்டியது.

சுக்கில ஞு கார்த்திகை மீ 14 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 25 உ அங்காரகவாரம்

இற்றைநாள் காலையிலே துரையவர்கள் முறட்டாண்டி சாவடியிலேயிருந்து ஒன்பது மணிக்கு வந்த உடனே நேற்று 13 தேதி சோமவாரம்

சந்தாசாயபு காகிதங்கள் வந்ததை இந்தனுள் காலையிலே துரையவர்களுக்கு படித்து அதிலேயிருந்த வயணமெல்லாம் நேற்று தினசரியிலே எழுதியிருக்கிறபடி சொன்னவிடத்திலே உடையார்பாளையம் மொகத்தும் எழுபதினுயிரம் வராகனுக்கு தீர்ந்ததென்று சொன்னுயே முசியே துகோனெழுதிய (Duquesne) காகிதத்தில் அருபதினுயிரம்விராகனென்று எழுதினுனென்று சொன்னூர் தறுபார் காசு பதினுயிரம் விராகனதுகூட எழுபதினாயிரம் விராகன் என்று சொன்னேன். தஞ்சாவூர் போய் சேர்ந்த உடனே அல்லவா அவ்விடத்து மாமூலா பயிலாக வேணுமென்றும் நமக்குக் காரைக்காலுக்கு கொடுக்கப்போகிற கிருமங்கள் அப்போ அல்லவோ ஏற்படவேண்டுமென்று கேட்டார். ஆம் சமாதானம் பண்ணினதின் பேரிலே தீர்ந்தால் தஞ்சாவூர் ராஜாவைக் கொண்டு இனும் பர்வனு எழுதிவித்து தாரோமென்று அல்லது கோட்டையை வாங்கினுல் தாமேயெழுதி கொடுக்கிறுமென்று எழுதினுரே அந்தபடியே நடபிப்பாரென்ற சொன்னதற்கு நல்லது தஞ்சாவூர் மொகதுமா எத்தனே லக்ஷத்தின்பேரிலே பேசலாம்போலே உன் புந்திக்கு தோற்றுகிறதென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது சந்தாசாயபு அபிப்ராயம் கோடி ரூபாய்மட்டும் வாங்கவேண்டுமென்கிற அபிப்ராயமுண்டு அல்லது ஐம்பது லக்ஷரூபாயாகிலும் வாங்கவேண்டுமென்று இருக்கிறது.என் புந்திக்கேர்க்க இருப்பத்தைந்து லக்ஷம் முப்பது லக்ஷம் ரூபாய் தீரும்போல் தோற்றுகிறது என்று சொன்னேன். ஐம்பது லக்ஷ ரூபாய் தீர்ந்தால் சந்தாசாயபு மனதின்படிக்கு அபரங்கா இது மட்டுக்கும் கட்டுகிறதற்கு பவுன்சுவைத்து நடந்த வேணுமென்கிற காரியங்களெல்லாம் தாராளமாய் நடப்பிப்பாரென்று சொன்னுர். அதற்கு ராகவபண்டிதன் உங்கள் தயவு பரிபூரணமாயிருக்கச்சே அவர் மனதின்படிகே நடக்கிறதற்கு ஆலோசனை என்ன? அப்படியே நடக்க வேணுமென்று சொன்னுன். அதற்கு துரையவர்களிருந்துகொண்டு உடையார்பாளையம் முகதுமா தீர்ந்ததும் மற்ற ஜில்லா தாரர்கள் சம்மதித்து பைசல் பண்ணிக்கொண்டதும் என் பயமில்லாவிட்டால் நாஜர்சங்குக்கும் வந்திருக்கிறதற்கு ஒருத்தரும் சண்டைபண்ண போகிறதில்லே. ஒருகாசளவிலே கொடுக்கப்போகிறதுமில்லே என்று சொன்னுர். அதற்கு நான் சொன்னது உங்கள் மத்தத்துமில்லாவிட்டால் சந்தாசாயபு அன்வர்திகானே ஜெயித்து ஆற்காட்டு சுபாவே வரப்போகிறதில்லே என்று சூரியகிராணங்கள் படபட இராஜ்யமெல்லாம் ஏக வார்த்தையாய் சொல்லுதென்று சொன்னதற்கு நீ சொன்னவார்த்தை மெய்தானென்று சொன்னுர். அதற்கு நான் சொன்னது இப்போ கடப்பை அப்துல் நபிகான் குமாரன் கடப்பை நபா இருக்கிறவனுடைய தம்பி அப்துல்மா சிதுகான் என்கிறவன் சந்தாசாயபுக்கு எழுதின காகிதத்தில் உமக்கு சிஞ்ஞேர் பிரான்சுக்காரருடைய மற்றத்து பல,

பிருக்கச்சே தஞ்சாவூரென்ன திருச்சினப்பள்ளி என்ன மறற ஜில்லாதாரர் கள் தானென்ன வரங்குகிறதும் அவர்களை ஜெயிக்கிறதும் சுனுபசம் வடக் கத்து பவுன்சுகூட தீக்கரிக்கும்படி சுவாமி உமக்கு பிரான்சுக்காரருடைய மத்தத்து கொடுத்து உமக்கு சகல ஜெயமுமாம் சகல வசியமுமாம் ஆனாலும் செஞ்சிஜில்லாவை போலொத்தஜில்லா கர்னுடகம் முதலாய் இந்துஸ்தானி யில் கூடயில்லை அதைப்பலப்படுத்தி கொண்டாலும்மை சர்வாத்துமனுக ஒருத்தராலேயும் ஜெயிக்கக்கூடாது அதை பலபடுத்திக்கொண்டு நபாபு சாதுல்லாகான் பாதர் முஜாபர் சங்கு அவர்களையும் கையிலே வைத்துக் கொண்டு நடப்பித்து கொண்டாலும்முடைய மனோரதமெல்லாம் ஈடேரு மெனறும் நபாபு இதாயத்து மொகதீன்கான் முஜாபர் சங்கு தயவும் உம்முடைய தயவும் பரிபூர்ணமாயிருக்கச்சே என் தமயன் கடப்பை சுபா தாரன் தன் குஞ்சு குழந்தைகளை பெயிக்கிறுய் கடப்பையிலே வைத்துப் போட்டு கந்தனூர் சுபாதாரனுடன் கூட கம்ப காங்கரிலே என்கிற தேசத்து சொரை அடைக்கப்போனுர்கள் அவர்களும் சுத்தமாய் கொஞ்சனளையிலே வந்து சேருவார்கள் நீரும் எங்கள் பெரிய தகப்பனுர் முறையா யிருக்கிற சாத்துல்லாகான் செத்துப்போனவர் ஆற்காட்டு சுபாவிலே வெகு திரவியம் சம்பாதித்து எல்லோரையும் நன்னை வணங்க பண்ணிக்கொண்டு வெகுநாள் எப்படி சகல மேம்பாட்டுடனேயும் இருந்தாரே அப்படி நீரும் இருக்கவேண்டுமென்று சுவாமியைப்பார்த்து பிராத்திக்கிறோமென்று முன் புதுச்சேரி கவர்னருக்கும் எனக்கும் காகிதபத்திரங்கள் நடந்ததுண்டு அதன் பிற்பாடு இங்கிலீஷ்காரருக்கும் அவர்களுக்கும் சண்டையின் பிற்பாடு காகி தங்கள் போக்குவரத்து நின்றுபோனபடியினலே உங்களுக்கு எழுத வேண் டியது ஒரு சொடு சிர்ம்ம நாய்கள் மாயிருள்ளது சின்னதாயிருக்கிறதாயும் ஒரு தூற்பீனும் புதுச்சேரி கவர்னருக்கும் உங்களுக்கும் சினேகமாயிருக் கிறபடியினலே அவருக்கெழுதிபனுப்பி அழைப்பித்து வரலாயம் அனுப்ப வேண்டுமென்று எழுதியிருக்கிறதென்று துரையவர்களுடனே சொன்ன தற்கு அவன் எழுதின காரியமெல்லாம் சந்தாசாயபுக்கு நல்ல யோசனையு மாம் உண்மையுமாம் என்று சொல்லி நாய்க்கள் மாத்திரம் அகப்படாது எங்களுக்கு பசந்தானது துலுக்கர்களுக்கு பசந்தாகாது. முன்னல் இரண்டு கொடுத்ததுண்டு அதுகளவர்கள் பசுந்து பண்ணுமல் போனதுமுண்டு என்று சொல்லி நீ இந்த ஊரிலே அகப்படுமானல் விசாரியென்று சொன்னுர். அப் பால் இமாம்சாயபு சீட்டு கையெழுத்து இன்னுரென்று புலப்படவில்லை என்றும் மோகரில்லை என்றும் தகராறு பண்ணினுர்களென்றும் ராகவபண்டி தர் எழுதியிருந்தார் கை எழுத்தையும் பிரதானமாய் பார்க்கிறதுண்டு அத னுலே உங்களுடனே சொல்லி சீட்டையும் கொடுத்து ராகவ பண்டிதரையும்

வைத்து வந்தது. இப்பவும் அந்த சீட்டைக்கொடுத்து ராகவபண்டிதன்கிட்டே அனுப்பிவைத்தால் அப்படியே இமாம் சாயபு குமாரன் கையில் வாங்கிக் கொள்ளுகிறேமென்று எழுதியிருந்ததற்கு நல்ல மனதுடனே அந்த சீட்டு ராகவபண்டிதன் கையிலேதானே இருக்கிறபடியாலே ஆச்சுதே அப்படித் தானே நடக்கலாமென்று சொல்லி மறுபடி இமாம் சாயபு மகனண்டைக்கு போனகாகிதத்துக்குபதில் இன்று நாளையிலே வரவேணுமே வந்தவுடனே அந்த சேதியை அறிந்துக்கொண்டு போகலாமென்று சொல்லி இமாம் சாயபு மக னுக்கு ஒரு காகிதமொன்று யெழுதி முன் காகிதத்திற்கு பதிலுத்தாரம் சீக் கிறதுக்கு அனுப்பச்சொல்லி எழுதியனுப்பச்சொன்னார். அந்தபடிக்கு எழுதி வரச்சொல்லி மதனந்த பண்டிதனுடனே சொல்லிப் போகச் சொன்னேன். அப்பால் வில்லியனூர் ரெட்டிகள் சேரிகளிலே நம்முடைய மனுஷரை இருக்கிறவர்களைக்கூட அனுகூலம் பண்ணிக்கொண்டு கொள்ளையிட்டார் களாம் அது நீ விசாரிக்கவில்லையா வென்றுகேட்டார். அந்த நியாயம் சின்ன துரை சரியன்று வில்லியனல்லூருக்குப் போனதினம் விசாரித்து இங்கே கொண்டுவந்து அவர்களை விலங்குப் போட்டு இருக்கிறதென்று சொன்னேன் சிறிது ரெட்டிகளும் ஓடிப்போய்விட்டார்களென்று சொன்னார். அவர்கள் வாடிக்கைதானென்று சொன்னேன். அது நம்முடைய தர்பாரிலேகூடி வரா தென்று சொன்னார். அது மெய்தானென்று சொன்னேன். பணமேதாகிலும் வந்தது வென்றுகேட்டார். நயினார் சம்மதி இரண்டுபங்கு உம்முடைய கணக் கப்பிள்ளைகையில் முதலிட்டேன் விழுப்புரம் தனைக்கா சம்மதி ஆயிரம்ரூபாய் வந்தது. அதுவும் உம்முடைய கணக்கப்பிள்ளைகையில் முதலிட்டேனென்று சொன்னேன். நெல் ரொம்ப சவுக்கையாயிருக்கிறபடியாலே இருக்கிறது. நான் வரச்சே கடையிலே கும்பலாய் கொட்டியிருக்கிறது. ஜனங்கள் கும்பலேக்கா ணேமென்று சொன்னார். அது மெய்தான் ஐந்துபடி விற்ற மணக்கத்தை ஆறரை ஆறேமுக்கால் படி மட்டுக்கும் விற்கிறார்கள். அதற்கு ஒருவ ரும் கவிஞ்சு கொள்ளவில்லை சும்மா கும்பல் கும்பலாய் இருக்கிற தென்று சொன்னேன். அப்பால் இருபது பொதி சேலத்து புடவை வந்தது. அது நனைந்தபடியினாலே கோட்டையிலே பார்வைக்கு போடக் கூடாது. முத்திரைப்போட்டு வண்ணான் துரைக்கு அனுப்பி வைக்கி றேனென்று சொன்னதற்கு நல்லது அப்படி செய்யென்றுசொன்னார். அப் பால் பனிரெண்டுமணி அடித்துப்போனபடியால் வீட்டிற்குப் போனேன்.

**சுக்கில ௵ கார்த்திகை ீ 15 உ க்கு 1749 ஆ நோவம்பர் ீ 26 உ புதவாரம்**

இற்றைநாள் பிரபுவுக்கு முசியே கொர்னேத்து (Cornet) ஒழுகரையிலே விருந்து பண்ணுவிக்கிறபடியினாலே வீட்டிலே மாஷியேக்கு காகிதம் எழுதிக் கொண்டிருந்து பதினொன்றேகால் மணிக்கு ஒழுகரைக்கு போனபடியினாலே

ஒருபேச்சு மின்றையதினம் நடக்கவில்லை. இந்தஞள் வந்தவாசி அந்த பிராந்தியங்கள் வலசை வாங்கி, ஆரணி சேத்துப்பட்டு இந்த பிராந்தியங்களுக்குப்போகிறதாயும் நாஜர்சங்கு கலியாணேக் குல்பர்கா என்கிறவிடத்திலிருந்து இப்புரம் புறப்பட்டதாகவும், சைதுல் சுக்காகான் ஆராயிரம் குதிரையுடனே கிஷ்ணுவுக்கு இப்பால் புறப்பட்டு வரதாகவும் அவருக்கு எதிராக கடப்பை சுபாதாரரும் நந்தனூர் சுபாதாரரும் போனதாகவும் ஆற்காடு முதலான இவ்விடங்களிலே சேதிவந்து அவரவர் வலசை வாங்குகிறதாக கேள்விபட்டது. நான் பனிரெண்டு மணிக்கு கும்பினிவர்த்தகர் கிடங்குக்குப் போய் அங்கேயிருந்து வீட்டுக்குப்போனேன். கும்பினிகிடங்கிலே போயிருக்கச்சே சுங்கு சேஷாசலசெட்டி தங்கள் கடையிலே அவரவர் கடன் கொடுத்திருக்கிற பேர்களுக்கு ஐந்து வருஷம் பொருத்து வாங்கிக்கொள்ளச் சொல்லி நபாபு மோகனுட்பட எழுதியிருக்கிற கவில் காகிதத்தில் கடன்காரரெல்லாம் கையெழுத்துப்போட்டு இருக்கிறதிலே கும்பினி வர்த்தகர்களையும் கையெழுத்துப்போடச்சொல்லி வந்து கேட்டார் சித்தம்பல செட்டி, ஆதிவராக செட்டி முதலானபேர்கள் நாலந்து ரெண்டு பேர்களில்லை அவர்கள் வந்த பிற்பாடு கண்டு பேசிக்கொண்டு அப்படியே கையெழுத்துப் போடுகிறோமென்று சொல்லி போகச்சொன்னார்கள்.

**சுக்கில ஞு கார்த்திகை மீ 16 உ க்கு 1749 ஆ நோவம்பர் மீ 27 உ குருவாரம்**

இற்றைனாள் காலையில் பிரபு மொறட்டாண்டிசாவடியிலேயிருந்து இவ்விடத்துக்கு வரவில்லை நேற்று மத்தியானமட்டும் பிரபு வந்திருந்து போனபடியினலே நானுமிந்தனாள் போகவில்லை மற்றபடிக்கு பாகவபண்டிதர் வந்து சொன்னசெய்தியென்னவென்றால் அரியலூர் மொகந்துமாவும் நாற்பதினாயிரம் ரூபாய் பைசலாயிற்று இறைவாச நெல்லூர் வாலிகொண்டாபுரம் சீர்மை இதாயித்து மொகதீன்கான் பணத்துக்கு ஆவலாய் கொடுத்தபடியினலே அந்த சீர்மை மேலே லசுக்கர் போகிறபடியினல் அந்த சீர்மையை ஜப்தி பண்ணுவார்களென்று சொன்னார் இதல்லாமல் சங்கரனென்கிற சேவகன் நம்முடைய காகிதம் தண்டுக்கு கொண்டுபோயிருந்தவன். மதனந்த பண்டிதன் மருமகன் வெங்கிடநரசு என்கிறவன் எனக்கு எழுதின காகிதத்தில் முசத்திகான் தங்களுக்கு இனங்கொடுத்தது போதாதென்று இப்போ இரண்டொரு பர்கானு ஆக வேண்டியதற்கு அவர்கள் எழுதி கொடுக்கிறதில்லை என்று வேசாறுகிருர்கள். அவர்கள் பேருக்கு சாமர்த்தியமாய் ஒரு காகிதமெழுதியனுப்பச் சொல்லியும் உடையார் பாளையத்தண்டையிலே தண்டு இறங்கி இருக்கிறதே ஒரு நாள் மியாம்கூதென்கிறவன் சந்தாசாயபு அண்டைவந்து லக்ஷரூபாய் செலவுக்கு கேட்டதாகவும் அதற்கு சத்தியாயில்லை பணம் சேகாம் பண்ணி கொடுக்கிறோமென்று

சொன்னதாகவும் அதன் பேரிலே சந்தாசாயபை அவன் உதாசிந்த உதா சினமும் நடப்பித்த காரியமும் இனிமேலென்ன ஜீவனம் என்று நடந்தது சேனே உண்டு. மூன்றே முக்கால் நாழிகையிலே பிராணயமாய் தீர்ந்து போகுமென்றுப்போலே தோற்றிற்று. அதன் பேரிலே தெய்வாதீனமாய் ஒரு மார்க்கமாய் அன்னேரத்துக்கு ஒதுங்கிப்போனுர்களென்று எழுதினுன். அதல்லாமல் தண்டிலே சிப்பாய்களுக்கு சம்பளம் கொடாத படியினுலே சிப்பாய்கள் தங்கா எழுதிமுடியாது. இனிமேல் சிப்பாய்கள் நிற்கிறவழியா யில்லை என்று எழுதியிருந்தது. வந்த சிவசங்கரனும் அப்படியே சொன்னுன் இதல்லாமல் அல்லிகானுக்கும் அப்துலாயிமானுக்கும் பேச்சு நடந்து அதன் பேரிலே அல்லிகான் கட்டாரிவாங்கி அப்துல்லாயிமானை குத்தப்போனுப் போலேயும் அதன்பேரிலே அல்லிகானை பிடித்து காவல்பண்ணி இவ்விடத் துக்கு அனுபுப்கிருர்களென்றும் எழுதிவந்தது மற்றபடி விசேஷ சமாசாரங் க்ள் கேட்கப்படவில்லை.

இதல்லாமல் வெங்கடராசு அவனுக்கு பெண் கொடுத்த அம்மான் மத ஞுந்த பண்டிதனுக்கு எழுதின காகிதத்திலே நவாபு சாதுல்லாகான் பாதர் முஜபர்சங்கு திவான் தும்மலி கிஷ்ணுசி பண்டிதனுடையார் பாளையத்தண் டையிலே தண்டு இறங்கி இருக்கச்சே சரீரம் ஸ்வஸ்தமில்லாமலிருந்து முன் 11 தேதி சனிவாரனுள் இராத்திரி இரண்டு ஜாமத்துக்கு லோகத்தினுடைய ஆசையை விட்டு சரீரத்தை பூமியிலே போட்டு அவர் வைகுந்தத்தை போய் சேர்ந்தாரென்றும், அவர் காலம் பண்ணிப்போனது நவாபு முஜபர்சங் குக்கு வெகு கிலேசமாச்சு தென்றும் எழுதியிருந்தது ஆனுல் அவர் இதா யத்து மொகதீன்கான் இடந்தில் வெகுசனுவாயிருக்கிறவராம் இவரை நிஜாம்தானே தன் பேரனிடத்தில் திவானகிரி கொடுத்துவைத்ததாம் நாஜர் சங்கு உடனே நிசாமுடனேயும் இவர் வெகுசனுவாய் வாடா போடா என்று பேசுகிறதாய் அவாகள் அத்தியந்தம் பிரீதியாம் அவர் களிடமாய் முப்பது முப்பத்தைந்து வருஷமாய் சேர்ந்து வெகுவிசு வாசமாய் என்னமட்டு இருக்கிறவராம் அவர் ஜாதியிலே கோல் கொண்டா வியாபாரியாம் அவர் இதாயத்து மொகதீன் கானுக்கு பிதாமரியாதையாயிருந்து புத்திமதி சொல்லிக்கொண்டு குல்லே குத்தி யேறுய சர்வ சுதந்திரத்துடனேயும் திவான்கிரிபண்ணி கொண்டு வந்தவர் அன்வர்திகானை ஜெயித்து ஆற்காடு சேர்ந்து புதுச்சேரிக்கு வருகிற போது இவர் திருப்பதி பிரம்ம திருனுளுக்கு போயிருந்து திருப்பதி குத்த கைவாங்கி சீனிவாச்சாரியாருக்கு கொடுத்து திருப்பதிக்கும் போயிருந்த படியினுலே புதுச்சேரிக்கு நபாபு முஜபர் சங்கு வந்தபோது வராமல் போனுர் அப்பால் சுக்கார் உடையார்பாளையத்தண்டையிலே மோகுமிருக் கச்சே போய் லசுக்கர் சேர்ந்து வைகுண்ட பிராப்தியானுர் ஆனுல் வெகு

உத்தம புத்தியும் நல்ல நடத்தையும் பூதத்தையும் உள்ளவரென்று சமஸ்த மானவர்களும் சொல்லிக்கொண்டார்கள் இவர் ஆற்காடு வந்து சேர்ந்த உடனே எனக்கு திருப்பதிக்கு அனுப்புகிறதற்கு பச்சைகற்பூரமும் புனுகு சட்டமும் மலாகா சந்தன கட்டையும் அனுப்பசொல்லி வெகுமரியாதை யுடனே எழுதியனுப்பியிருந்தார். நானும் வாங்கி அனுப்பி பதிலுத்தரம் எழுதியிருந்தேன்.

**சுக்கில ௵ கார்த்திகை மீ 17 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 28 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலையிலே நேற்றையதினம் துரையவர்கள் மதனாந்த பண்டிதனை சந்தா சாயபுக்கு காகிதமெழுதுகிற நிமித்தம் பாரிசு மோகறை யும் முசியே பெத்துராமை கேட்டு (Bertrand) வாங்கிக் கொண்டுவர சொன்னபடிக்கு போன விடத்திலே நாளை காலையிலே வாவென்று சொல்லி அனுப்புவித்தபடிக்கு இந்தநாள் காலையிலே மதனாந்த பண்டிதன் போன விடத்திலே நடந்த சேதி சேத்துபட்டு வழுதாவூர் இரண்டுக்கும் கில்லேதார ஞக இருக்கப்பட்ட மிர்சந்து காகிதம் துரையவர்கள் பேருக்கு வந்ததிலே எழுதியிருந்த வயணம் வழுதாவூர் ஜல்லா ஜாகீர்களுக்கு கிராமமும் ஆய மும் நாற்பது வருஷமாய் நடந்து வருகிறதை இப்போ உங்கள் மனிதர் சோராவரியாய் கட்டிக்கொண்டது மல்லாமல் ஐந்து கிராமமும் வில்லிய னல்லூர் தாலுக்கு ஒன்று கட்டிக்கொண்டார்கள் அதுவுமல்லாமல் எங்கள் வழுதாவூருக்கு வருகிற நெல் பொதிகள் முதலானதுகளையும் தடைபண்ணு கிறார்களிப்படி நீங்கள் நியாயம் தப்பி நடப்பித்தால் செய்யவேண்டிய தென்ன வென்றும் இப்போது உங்கள் மனிதருக்கு தாக்கீதுபண்ணி எங்கள் வழுதா வூர் கில்லா ஜாகீர் ஐந்து கிராமமும் சுங்கமும் விட்டுவிடச்சொல்லி தாக் கீது பண்ணுகிறது மல்லாமல் நம்முடைய வூருக்கு வருகிற நெல் பொதிகள் வழி போகாமல்படிக்கும் தாக்கீது பண்ண வேண்டுமென்று சுதாமத்து நடந்தபடிக்கு எந்த காரியமும் நடத்தவேண்டுமே யல்லாமல் நூதனமாய்ச் சோராவரியாய் நடத்த நியாயம் அல்லவென்றும் அப்பாலும் நீங்கள் எப் போதும் ஸ்னேக வாத்சலியம் வைத்து ஏக கீர்த்தியுமாய் நடப்பித்துக் கொண்டுவந்தீர்கள் நாங்களுமுங்கள் ஸ்னேகத்தையே பிரதானமாய் எண்ணி இங்கிலீஷ்காரர் கலாபத்திலே உங்களுக்கும் அன்வர்திகானுக்கும் இருந்த இட்டோட்டும் போது நானுங்களவனயிருந்து நடந்து கொள்ளுகிறே னென்று அன்வர்திகான் என்பேரிலே கோபமாயிருந்த சம்மதிகளெல்லாம் நீங்களறிந்தே யிருக்கிறீர்களானபடியினாலே எப்போதும் பக்ஷம் வைத்து நடப்பிக்க வேண்டுமென்று உபசாரமாய் எழுதியிருந்ததாகவும் அந்த சேதியை துரையவாகளுடனே சொன்னதற்கு அவரங்கே வந்திருக்கிற தம் தம்முடைய கணக்கு ரங்கப்பிள்ளையையும் இப்போ அந்த ஆய்ங்களின்

பேரிலே திரிகிற திருட்டு தட்டாரப்பயல் சிதம்பரம் என்கிறவனையும் அழைத்து ஆயச்சம்மதி என்னவென்று கேட்டதற்கு ஆயத்தை பல வந்தமாய் கட்டிக்கொண்டது மெய்யென்றால் உங்களை யார் கட்ட சொன்னாரென்று கேட்டால் மதாம் உத்தரத்தின் பேரிலே கட்டினோ மென்றல்லவோ சொல்லவேண்டும் அப்படி சொன்னால் நமக்கு வில்லிய நல்லூர் பற்கானாவும் பாகூர் பற்கானாவுமல்லவே கும்பினீருக்கு ஜாகீர் விட்டது. அத்துடனே ஆயம் சேர்ந்ததல்லவோ அப்படியிருக்க அம்மாளுட னே இந்த ஆயத்தை கட்டவேண்டுமென்று நீங்கள் சொல்லாமல் ஊராரு டைய ஆயந்தை கட்டச் சொல்லப்போகிறதில்லையென்று தங்களுக்கு பேச்சு வரப்போகிறதென்றும் அந்தப்பேச்சை எடாமல் நாங்களிங்கே ஆயம் வாங்கி வர்த்தகர்கள் கையிலே அவர்களும் வாங்குகிறபடியினாலே வர்த்தகர்கள் நாங்கள் இரண்டு இடத்தில் கொடுப்போமா என்று வந்து சொல்லிக் கொண்டபடியினாலே வர்த்தகர்கள் வழுதாவூருக்கு கொண்டுபோகிற பொதி களை மறித்தோமென்று சொன்னார்கள் அதன்பேரிலே மதனாந்த பண்டிதன் உங்களுக்கு ஆயமேயில்லையே அப்படியிருக்க ஆயத்தை பலவந்தத்தின் பேரிலே கட்டிக்கொண்டாப்போலே ஆச்சுதே அதுவும் போதாமல் அவர்க ளூருக்குப்போகிற பொதிகளையும் சரக்குகளையும் மறித்தால் நன்றாயிருக்கு மா யென்று கேட்டாராம் அதுகளுக்கு அவர்கள் வாயை மூடிக்கொண் டிருந்தார்கள் அதற்கு துரையவர்கள் எனக்கு அந்த ஜாடை தெரியும் எல் லாவற்றிற்கும் ரங்கப்பிள்ளை வரட்டும் அவனைக்கண்டு பேசிக்கொண்டு இந்த காகிதத்துக்கு பதிலுத்தரம் எழுதுவோமென்று மதுனாந்தபண்டிதனைப் பார்த்துச் சொன்னாராம் சற்று நேரம் பொருத்து வெளியே வந்து நமக்கு எழுதிக் கொடுத்திருக்கிற இனும் பற்வானாவிலே ஆயத்துடனே சேர்ந் தது எழுதியிருக்கிறதாவென்று திரும்பியும் மதுரந்த பண்டிதரை கேட் டாராம் அதற்கு அவன் சொன்னது எப்படி எழுதிகொடுப்பார் வில்லிய நல்லூர் பர்கானாவுக்கும் பாகூர் பர்கானாவுக்கும் ஆயமுண்டாயிருந்தால் எழுதிக் கொடுப்பார் இல்லாததை எழுதிக்கொடுப்பாரா? அந்த தாலுக் குக்கு என்ன என்ன உண்டோ அது மாத்திரம் எழுதிக்கொடுத்தார் வழுதாவூர் கில்லாவுக்கு ஜாகிர் கிராமங்களும் ஆயமும் பாதுசா நிசாம் சன்னதுடனே எழுதப்பட்டிருக்கிறதாமே ஆனபடியினாலே நம்முடைய பர் கானாவிலே எழுதவில்லை என்று சொன்னாராம் நல்லது ரங்கப்பிள்ளையை அழைத்துவரச்சொல்லி சேவகனை அனுப்பிவையென்று சொன்னாராம். அதற்கு பல் நோவாயிருக்கிறாராம் அதை தொட்டு இன்றுவரவில்லை. இல்லா விட்டால் இன்று காலையிலே வரவேண்டுமென்றுதானிருந்தாரென்று சொன் னதற்கு ஆனால் அழைக்க வேண்டாமென்று சொல்லி ரங்கப்பிள்ளை வந்த பிறகு அவனை கண்டுபேசி கொண்டு பிராசத்து காகிதத்துக்கு பதில் காகித

மெழுதியனுப்புவோம் என்று சொல்லி சந்தாசாயபு காலு கானுக்கு முன் அனுப்பின காகிதத்துக்கு பதில் காகிதம் எழுதச் சொன்னவயணம் தாம னுப்பின இரண்டு காகிதங்களும் வந்து வாசித்துக்கொண்டு மிகுதியும் சந்தோஷமாச்சுது உடயார்பாளையம் மொகத்துமா பைசலாச்சென்றும் அப்பால் தஞ்சாவூரின் பேரிலே போகிறேமென்றும் அங்கே பைசலான உடனே காரைக்காலுக்கு கொடுக்கிறேமென்ற பர்கானு கிராமங்களும் இனும் பர்வானு எழுதியனுப்புகிறேமென்றும் கடப்பை அப்துல் ரோசு கான் தம்பி எழுதின காகிதபடிக்கு ஒரு ஜோடுநாயும் துராபினும் அனுப்பச் சொல்லியும் அந்தந்த சம்மதி வயணமாமட்படியே யெழுதியனுப்பினது பார்த்துக்கொண்டு சவிஸ்தாரமாய் தெரியவந்தது சுவாமி தயவினாலே நீர் எந்த காரியம் துவக்கினீரோ அதுகளெல்லாம் பந்தேயாம் தஞ்சாவூர் காரிய மும் உம்முடைய மனதின்படிக்கு பைசலாம் நமக்கு எழுதிக்கொடுத்த உடன்படிக்கைபடிக்கு காரைக்காலுக்கு இனும் பற்கானுவுக்கு பற்வானு அனுப்புகிறது மறக்கவேண்டாமென்றும் சிப்பாய்கள் மற்றுமுள்ள பேர்களுக்கும் சம்பளம் கொடுந்து வர வேண்டுமென்றும் நாயுமதுராபி னும் சத்தியாய் அகப்படாதென்றும் கப்பல் வந்த உடனே அனுப்புகிறே மென்றும் எழுதியனுப்பச் சொன்னாராம் அந்த படிக்கு உபசார மாய் எந்தெந்த சம்மதி விஸ்தரித்து எப்படி யெழுத வேணுமோ. அந்தபடிக்கு எழுதி மோகரு பண்ணி ஆனவுடனே இதாயத்து மொக தீன் கானுக்கு வெகுநாளாய் ஒரு காகிதமெழுதியனுப்பாமல் போனீ ரென்னு உபசாரமாய் ஒரு காகிதமெழுதி யனுப்பச்சொன்னாராம். அந்தப் படிக்கு யெழுதி மோகருபண்ணி சந்தாசாயபு காகிதமும், இதாயத்து மொக தீன்கான் காகிதமும் இரண்டும் தபாலிலே கொடுத்து அனுப்பச் சொன்ன படிக்கு அங்கே இருந்தாப்போலேதானே தயாலுக்கு கொடுத்து அனுப் பினுரென்றும், அப்பால் புளிச்சப்பள்ளத்து கிராமத்துக்கு குடியானவர் களுக்கு ஆறுபேருக்கு பனிரெண்டு கெஜம் சகலாத்தும், இரண்டுபேருக்கு மூன்று கெஜம் விழுக்காடு ஆறுகெஜம் சகலாத்தும் ரங்கப்பிள்ளை வந்து துரையுடனே சொல்லி கொடுப்பித்தாரென்றும் அவர்களிருபத்தொரு அசற்பிந்தர் கொண்டுவந்து கண்டார்களென்றும் அப்பால் மதாமுக்குப் பதினைந்து வராகன் சுருட்டு கொண்டுபோய் கொடுத்து ஊருக்குச் சொல் லிக்கொண்டு போனார்களென்றும் துரை இன்றையதினம் மெத்த உப சாரமாய் ஊஞ்சலின் பேரிலே ஆடுகிறதும், குண்டாடுகிறதும், ஓடிக் கொண்டு பெண்டுகளுமவர்களுமாய் விளையாடிக்கொண்டிருக்கிறாரென்றும் மதனாந்த பண்டிதன் வந்து இராத்திரி ஆறரை மணிக்கு கபுறு சொன்ன படிக்கு எழுதிவைத்தேன்.

**சுக்கில ஸு கார்த்திகை மீ 18 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 29 உ சனிவாரம்**

இற்றைனாள் மந்தியானத்துக்குமேல் துரையவர்கள் மொறட்டாண்டி சாவடியிருந்து ஊரில் வந்து கோட்டைக்குப்போன உடனே என்னை அழைத்துவர சொல்லியனுப்ப சேவகன் வந்து அழைத்தான். நான் சரீரம் லகுவாயிருக்கவில்லை என்று சொல்லியனுப்பினேன். அதற்கு தன் கணக்கப்பிள்ளையை அனுப்பச்சொல்ல சொன்னது உனக்கு சரீர ஆரோக்கியம் சுவாமி கொடுப்பாரென்று சொல்லச்சொன்னார் என்று கணக்கு ரங்கப்பிள்ளை தம்பி முத்தயப்பிள்ளை வந்து சொன்னான் அப்பால் அல்லிகானை லசுகாரிலிருந்து கூட்டிவந்து கபுறு சொன்னார்கள். மணிக்கூண்டு மேலே காவல் வைக்கச் சொன்னார். அப்பால் சற்று நேரம் முசியே புரி (Bury) முதலான பேர்களை கண்டு பேசிக்கொண்டிருந்து பிறகு முறட்டாண்டிசாவடி போனார்.

**சுக்கில ஸு கார்த்திகை மீ 19 உக்கு 1749 ஆ நொவம்பர் மீ 30 உ ஆதிவாரம்**

இற்றைனாள் காலையிலே பாக்கு கிடங்குக்கு வந்து காகிதங்களெழுதிக் கொண்டிருந்து அப்பால் லக்ஷ்மணநாய்க்கர் முதலான பேர்களுடனே கண்டு பேசி கொண்டிருந்தேன் அதுவேயல்லாமல் பின்னை வேறுசேதி கேட்கப்படவில்லை.

**சுக்கில ஸு கார்த்திகை மீ 20 உ க்கு 1749 ஆ தெசாம்பர் மீ 1 உ சோமவாரம்**

இற்றைனாள் காலையிலே மொறட்டாண்டி சாவடிக்கு போய் துரையவர்களைக் கண்ட உடனே துரையவர்கள் பூந்தமல்லி தனக்கா பணம், சிதம்பரம் தனக்கா பணம், சாபரல்லிகான் தனக்காப் பணம் வந்து சேரவில்லை. உன் கிராமத்திலேயிருந்து கொஞ்சநஞ்சம் வந்துகொண்டிருக்கிறது. தனக்கா கிராமத்துப் பணம் சொல்லவில்லை. அல்லிநகீம் சாயபு ஒப்புக் கொண்டு பீரங்கி கானு சிலவு மூவாயிரத்தைநூறு ரூபாயும் வந்து சேரவில்லை என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: நமக்கு தனக்கா பிறந்த மனுஷர் போனது ஐப்பசி மாதம் இருபதாம் தேதிக்கு மேல் ஆனபடியினாலே ஆனி மடங்கல் கம்பு கிஸ்திபணம் கூட அதற்கு முன் இருந்த அமுல்தாரார் அறுவுபண்ணி அந்தந்த எஜமானிடம் போச்சுது. இப்பால் பலனுடனே சேர்ந்ததும் மார்கழி மீ 15 தேதி 20 தேதிக்குமேல் அல்லாமல் இதற்குமுன் பலனில்லை. ஆனபடியினாலே நம்முடைய மனுஷர் போனவர்கள் பலனை மறித்து ஆமாதினி வருகிறதை தஸ்து பண்ணிக் கொண்டு பலனை விட்டு அந்தப்பணத்தை அனுப்புவார்கள். அதற்கு சிப்பந்திசிலவு கொஞ்சம்போக மற்றது வரப்போகிறதென்று சொன்னதின் பேரிலே மெய்தான். ஆனாலும் எவ்வளவாகிலும் வராதாயென்று கேட்

டார். இது பீடு கந்தாயம் வரமாட்டாதென்று ஆயங்களிருக்கிற இடத்திலே எவ்வளவாகிலும் வந்தால் அதிலேதான் சிப்பந்தி நடக்கப்போகிறதென்று சொன்னதற்கு சிப்பந்தி நடக்காவிட்டால் நமக்கென்ன, நூறு இரானூறு வந்தது என்று சொன்னார். அதற்கு பற்கானு மாமூலா இருக்கிற சிப்பந்திக்கு கிராமத்து தஸ்து பணம் கொடுத்து மற்றப் பணம் செல்லுகிறதென்று சொல். திண்டிவனத்துக்கு பற்கானு நபாபு இதாயத்து மொகதீன் கான் காகிதம் வந்தது அதிலே எழுதியிருந்த வயணம். [ ]

இந்தநாள் பகலைக்கு மேலாக நான்கு மணிக்கு துரையவர்கள் ஊரை வந்து என்னையழைத்தனுப்பினார். நான் கோட்டைக்குப்போன உடனே புதுசாய் கட்டுகிற குவர்னமாம் பார்த்து இப்பவே வரச்சே நான் கண்டு ஆசாரம்பண்ணினேன். என்னைப் பார்த்த உடனே இப்புரம் வந்து தண்டிலேயிருந்து சந்தாசாயபு சொன்னதாய் மூசியே துக்கோன் (Duquesne) எழுதியனுப்பினான்; அதிலே சந்தா சாயபு மோகரு கூட பண்ணியிருக்கிறது. அதிலே எழுதியிருந்த வயணம் பொம்மராஜாவுக்கு போட்டியாய் வந்த ராயப்பராஜாவை காவல் பண்ணியிருக்கிறதே அவனை விட்டு அனுப்பச்சொல்லியும் அவனை அனுப்பாததைத் தொட்டு வடக்கத்து பாளையக்காரன் ஒருத்தரும் வரவில்லையென்றும் ஆனபடியினாலே அகத்தியவேலை அனுப்பச்சொல்லியும் எழுதி பொம்மராஜா அவர்கள் ரங்கப்பனுக்கு பணம் கொடுக்கவேண்டும். எதன் நிமித்தம் நடப்பித்தானென்றும் அது நிமித்தியமவனை விடாமல பணணுகிறானென்று எழுதியிருந்தது அவனை விட்டு அனுப்பிவிடவேண்டுமென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது உங்களுக்கு கொடுக்கிறோமென்று சொன்ன சம்மதி சொட்டுங்கோளப்படியே விட்டு அனுப்பிவிடுவோம். ஆனாலிது சந்தா சாயபுக்கு அகத்தியமா [ ]

சுக்கில ௵ கார்த்திகை ௴ 21 ௳ க்கு 1749 ஆ௵ தேசாம்பர் ௴ 2 ௳ சுக்கிரவாரம்

இற்றைனாள் காலையிலே மொறட்டாண்டி சாடிவக்கு போகாதபடியினாலே நானிருக்கிற பாக்கு கிடங்கிலே வந்தேன். லக்ஷ்மணராவு சங்கு முத்துராமசெட்டி, சேஷாசல செட்டி, பாப்பய்யப்பிள்ளை, வெங்கடநாராயணப்பய்யன், என்கிறவர்கள் சென்னைப்பட்டணம் தங்கசாலையார் திம்மா சய்யன் குமஸ்தாக்கள் மதனந்த பண்டிதன் கூடவந்தார்கள் அவர்கள் சந்தி சங்கு சின்னராமு செட்டி, லக்ஷ்மணராவு கையெழுத்துப் போட்ட கடன் சீட்டு ஒன்றுக்கு 5250 விராகன் இதவும் சீட்டு ஒன்றுக்கு மூவாயிரத்து சிலுவனம் ஆக எண்ணாயிரத்தி சிலுவனத்துக்கும் சீட்டு ஹேறவினம்பி வருஷம் முதலானபடியினாலே வட்டி நூத்துக்கு அரையே அரைக்கால் எழுதியிருந்

தானும் நான் சென்றபடியினலே வெகு பணம் கூடியிருக்கும். இதுகள் வாங்கிகொடுத்தால் கால்வாசிப் பணம் துரையவர்களுக்கும் கொடுக்கிறே மென்றும், மதாம் துப்ளேக்கிடம் முகாந்திரமாய் பேசியிருந்த படியினலேயும் மதாம் துப்ளேக்சுக்கு கால்வாசி கொடுக்கிறேமென்றும் பேசியிருந்த படியின லும் இதல்லாமல் இதில் ஐயாயிரத்து இரனூத்தன்பது விராகன் சீட்டை மதாம் துப்ளேக்சு கையிலே கொடுத்து வைத்து இரண்டாயிரத்தைனூறு ரூபாய் வாங்கியிருந்த படியினலே ஆறேழுவருஷமாய் பிரயத்தனம் பண்ண விடத்தில் வாராதுபோன படியினலே மதாம் துப்ளேக்சுக்கு தான் கொடுத்த இரண்டாயிரத்தைனூறு ரூபாயாகிலும் வாங்கி கொடுக்கும்படி என்னண் டைக்குச் சொல்லி அனுப்பி கொண்டேயிருப்பான். நானும் சுங்குவாரை எப்போதும் எல்லாப் பணமும் கொடாமற் போனலும் மதாம் துப்ளேக்சு கொடுத்த இரண்டாயிரத்தைனூறு ரூபாய் மாத்திரமாகிலும் கொடுக்கப் போகாதா வென்று கண்டிப்பு பண்ணி கேட்டுக்கொண்டே வந்து நல்லது இந்த இரண்டாயிரத்தைனூறு ரூபாய்க்கு மாத்திரம் என்னமார்க்கமாகிலும் பண்ணி நம்முடனே சொன்னமட்டுக்கும் பணம் சேர பண்ணி போடுவோ மென்று அதற்கு ஏற்பாடு எடுந்து நடத்துகிற சமயத்திலே சந்தா சாயபு புதுச்சேரிக்கு வரவும் அதன் பேரிலே லக்ஷ்மணராவு சுங்கு முத்துராம செட்டி துரையவர்கள் சிபார்சின் பேரிலே நதிர் வைத்து சந்திப்பு பண்ணிக்கொள்ளவும், அதன்பேரிலே கவுலொன்று ஐந்து வருஷ மட்டுக்கும் இவர்கள் கொடுக்கவேண்டிய கடன்காரர் களொருத்தரும் கடன் கேளாமலிருக்கவும் சுங்குராம செட்டியார் பிங்கள (௵) தை மாதத்திலே காலம் பண்ணிப்போன நாள் முதலாய் இந்த ஐந்து வருஷமட்டுக்கும் கூட வட்டி வாங்க கவையில்லை யென்றும் இதற் குள்ளாக இவர்களுக்கு வர வேண்டிய கடன்காரர்களை கேட்டு வாங்குகிற பணம் மதாம் பிராயம் அவரவருக்கு கொடுக்கவும் இந்தப்படியாக யெழுதின உடன்படிக்கையில் சந்தாசாயபு மோகருங்கீழே துரையவர்கள் முகருகூட பண்ணி சம்புதாஸ் ஜலது வெங்கடாசல செட்டியார், கனகராய முதலியார் தம்பி தானப்பமுதலியார், பரசுராம்பிள்ளை, அபாசுகான் பெற்குற தோராய் வந்த ( **Abbas Khân attorney** ) துலுக்கன் பேர் விளங்கான் முதலான பேர் கையெழுத்துப்போட்டு ஆனபிற்பாடு இவர்களும் உடையார்பாளையம் தஞ்சாவூர் திருச்சினாப்பள்ளி மொகத்துமா தீர்க்கிறதிலே தங்களுக்கு வர வேண்டிய கடன்களும் மாரிகம் பண்ணிக்கொள்ளலாமென்றும் இதல்லாமல் பின்னையும் வரவேண்டிய இடங்களிலேயும் ஆனமட்டுக்கும் நவாபுசாயபு மற்றதின்பேரிலே வந்த மட்டுக்கும் அறவுபண்ணிக்கொள்ளலாமென்றும் யோசனை பண்ணிக்கொண்டு இந்தபடிக்கு மத்தத்து பண்ணி சகாயம் பண்ணி கடையை உண்டாக்கி கொடுக்க வேணுமென்று துரையவர்களை கொண்டு

சந்தா சாயபுக்கும் சொல்லுவித்து அவரும் உத்தரவு கொடுத்து இவர்களு மதண்டு பிறகே போகிறதாய் எத்தனம் பண்ணி நடப்பித்துக்கொண்டு வர இதிலே மதாம் துப்ளேக்சுடனே ஆணிக்கார குமஸ்தாக்கள் வெங்கட நாராயணப்பய்யனும், பாப்பய்யப்பிள்ளையும் போய் இப்போ பயணம் போகிற லக்ஷ்மணராவ் முத்துராமசெட்டி இவர்களை மறித்து எங்கள் எண்ணுயிரத்து சிலுவானு விராகனும் வட்டியும் வரவேண்டியதற்கு ஏகத்துக்கு சம்மதி பண்ணுமலெயல்லாமல் போகவேண்டாமென்று ரங்கப்பனுக்குச்சொல்லி ரங்கப்பிள்ளை கொண்டு அவர்களுக்கு தாக்கீது பண்ணிவித்தாலிந்த சமயத்திலே ஏகத்துக்கு ஒரு வட்டி சீட்டாகிலும் நாலாறுமாத தவணை வைத்து சுங்கு சேஷாசல செட்டியார் கையில் எழுதிவாங்கிக்கொண்டால் முன்னே அறுவிடுகிற பணம் வந்து சேரும் நீங்கள் பாதி எடுத்துக்கொண்டு மற்றப் பாதியை எங்களுக்குக் கொடுங்கோளென்றும் அல்லது உங்களுக்கெப்படி சம்மதமோ அம்மாத்திரம் கொடுங்களென்று சொல்லி அவனைக் கொண்டு முன் 4ம் தேதி சுங்குவாரெழுதிக்கொடுத்த ஐயாயிரத்திரனூற்று ஐம்பது விராகன்கள் சீட்டும், வெங்கட்ட நாராயணப்பய்யன் எழுதிக்கொடுத்து வாங்கிக்கொண்ட இரண்டாயிரத்தைநூறு ரூபாய் சீட்டு இரண்டும், வெங்கட நாராயணப்பய்யனை ஆணிக்கார திம்மா சயன் பெறகுறத்தோர் பண்ணி இந்தப்பணத்தை அவன் மனதின்படிக்கு வாங்கச்சொல்லி எழுதி கொடுத்த பெற்றெசமொன்றும் துரையவர்களுக்கும், இந்த பணம் வாங்கிக் கொடுத்தால் கால்வாசி கொடுக்கிறோமென்று முன் எழுதி கொடுத்த உடன் படிக்கை சீட்டொன்றும், என் பேருக்கொருக் காகிதமெழுதி இந்தப்பணம் சுங்குவார் கூட்டம் உடன்படிக்கை பண்ணுமலே அல்லாமல் அவர்கள் வெளியே போக உத்தாரம் கொடுக்க வேண்டாமென்று எழுதின காகிதமொன்றும் வகத்துக்கு சிகப்பு பட்டு சுருபடியிலே தைத்த ஒரு சின்ன பையிலே போட்டு மதாம் துப்ளேக்சு அண்டையிலேயிருக்கிற கிருஸ்துவ சோப்புதாரர் அருணைனந்தன் என்கிறவன் கையில் கொடுத்து என் அண்டைக்கு மொறட்டாண்டி சாவடியிலே யிருந்து அனுப்ப அதை அவன் நான் பாக்கு கிடங்கிலே யிருக்கச்சே கொண்டு வந்து கொடுத்துப் போட்டுப்போக அந்த லக்ஷணம் . லக்ஷ்மணராவு சுங்குவார் கூட்டத்தை கூட அழைத்தனுப்பிவிட்டு மதாம் கொடுத்தனுப்பின சம்மதியும் சொல்லி ஆணிக்காரர் பணத்துக்கு உடன்படிக்கை ஆனாலெயல்லாமல் போக வேண்டாமென்று நிருத்திப்போட்டதின்பேரிலே மதனுந்த பண்டிதன் முகாந்தரத்திலே பாப்பைய பிள்ளைக்கும், வெங்கடநாராயணப்பயனுக்கும் ஐனூறு வராகன் பரிதானம் கொடுக்கவும் ஆணிக்காரர் திமற்சயன் சீட்டுக்கு வட்டி கவையில்லாமலும் அசலுக்கு கால்வாசி தள்ளிப்போட்டு மற்ற முக்கால் வாசிக்கு இன்றுமுதற்கொண்டு சீட்டெழுதி கொடுக்கவும்

அதற்கு இவர்களுக்கு வருகிற பணத்தில் முதல் வருகிற பணத்தில் பிரமோதூத ஞு ஆடி மீ ஆவணி மீ த்துக்குள்ளாக சம்மதி பண்ணவும் லக்ஷ்மணராவ் சுங்குவார்கூட்டம் உடன்படிக்கை பேசுவித்து இந்தனுள் காலையிலே பாக்கு கிடங்கிலேவந்து முன் எழுதப்பட்டவர்கள் எல்லாரும் கூடிபேசி தீர்த்துக்கொண்டு பன்னிரண்டு மணிக்கு அவரவர் வீட்டுக்கு அனுப்பிவித்துக்கொண்டு போனார்கள். இனிமேல் சீட்டெழுதிக்கொண்டு போய் மதாமுக்கு காண்பித்து லக்ஷ்மண நாய்க்கன் முத்துசாமசெட்டி தண்டுக்கு போகிறதற்கு உத்தாரம் வாங்கிகொடுக்கிறோமென்றும் இவர்களை வெளியே போகச்சொல்லுகிறதற்கு எனக்குகூட உத்தாரம் வாங்கிகொடுக்கிறோமென்று பாப்பய்யாபிள்ளை வெங்கடநாராயணப்பய்யனும் என்னுடனே சொல்லிப்போட்டு போனார்கள். இராமச்சந்திர அய்யரும் குண்டூர் வெங்கடாசலசெட்டியும் சிங்கரிகோயில் குத்தகை கொடுக்கச்சொல்லி ஸ்ரீ இசுமாயிலுகான் ஜாகிரான் நவமால் சீர்மையில் திருவாரூர்த்தகில் முதலான கிராமங்கள் தங்கள் பணத்துக்கு முன் தனக்கா பண்ணியிருந்து அப்பாலது தாம்தூம்லே நின்று போயிற்றென்று இப்போ பதினைந்து நாளாய் ஜப்திபண்ணியிருக்கிற மகம்மதுகான் சிலேமான்ஜி லக்ஷ்மணராவு சுங்கு முத்துசாம செட்டியை கேட்க அதன்பேரிலே அவர்கள் சம்மதித்து நானூறு ரூபாய் கொடுக்க தீர்த்து இசாரு பட்டா பகலைக்குமேலாக மகம்மது கானிருக்கிற இடத்திலே போயவருக்கும் சொல்லி எழுதி கொடுக்கிறோமென்று சேஷாசல செட்டி இராமச்சந்திரய்யரையும் குண்டூர் வெங்கடாசல செட்டியாரையும் வரச்சொன்னார்கள். அந்தபேச்சை அவர்களை கேட்டுக்கொண்டு அவர்களும் சாப்பிடப்போனார்கள் நானும் பன்னிரெண்டு மணிக்கு வீட்டுக்குப்போனேன்.

**சுக்கில ஞு கார்த்திகை மீ 22 உ க்கு 1749 ஆ டெசாம்பர் மீ 3 உ புதவாரம்**

இற்றைனாள் காலையிலே சிங்கர்கோயிலுக்கு வந்து அவ்விடத்து திருப்பணி வேலைக்கு அவரவருக்கு யென்று ஒரு நேமம் பண்ணிப்போட்டு வரவேண்டுமென்று நீங்களவர் கையில் உடன்படிக்கை கையெழுத்துக்கூட வாங்காவிட்டால் அவனவன் பூண்டு கொள்ளுகிறது. நடத்தமாட்டார்களென்றும் சுங்கு சேஷாசல செட்டி லக்ஷ்மணராவு, முத்துசாமி செட்டி மகம்மதுகான், சிலெமான்ஜி கையில் சிங்கரிகோவில் நேற்று செவ்வாய்க்கிழமை இராத்திரி வருஷம் ஒன்றுக்கு நானூறு ரூபாய் வாங்கிக்கொடுத்தீர்களே அது ஐனூறு ரூபாய் மட்டுக்கும் காணுமே இந்த ஐனூறு ரூபாயும் கோயிலபிஷேக முதலான செவுகளுக்கு நடக்கவும் குத்தகை நானூறு ரூபாயும் அதுக்கு ஒரு பம்பக்கம் போட்டு அவரவர் கொடுக்கவும் இப்படி ஒரு

உடன்படிக்கைப்பண்ணி அப்பால் கோவில் சன்னதி வீதி பதினெட்டு வீடு அக்கிரகாரம் அவர் கட்டவும் மார்க்கம் பண்ணிப்போட்டு வர வேண்டுமென்று மேலுகிரி பண்டிதர் குமாரன் ராமச்சந்திரய்யரும் குண்டூர் வெங்கடாசல செட்டியும் ஆறுமாதமாய் சொல்லுகிறபடியினாலே துரையவர்கள் மொறட்டாண்டி சாவடிக்குப் போயிருக்கிறபடியினாலே இப்போ உங்களுக்கு போர்ச்சத்து உண்டாயிருக்கிறதே நீங்கள் வந்தால் சுவாமி காரியம் மார்க்கமாய் நடந்தேரி போகுமென்று இந்தனாள் காலையிலே வந்தழைத்த படியினாலே நான் சிங்கிரிகோவிலுக்குப் போனேன். என்னுடனே கூட வந்தவர்கள். சுங்கு சேஷாசல செட்டியார் ஐலுது வெங்கடாசல செட்டியார், கும்பினி வர்த்தகம் அழகிய மணவாள செட்டி, தர்மசிவ செட்டி, அருணாசலசெட்டி காளஸ்தி அய்யன் குமாரன் நாராயணப்பய்யன், அப்பால் மதனந்த பண்டிதன், கிஷ்ணராயன் முதலான பேர்கள் வந்தார்கள். அங்கே போய் மத்தியானம் சுவாமி தரிசனம் பண்ணி சாப்பிட்ட பிற்பாடு திருப்பணி கைங்கரியம் அவரவரை செய்யச்சொல்லி காகிதமொன்று எழுதி கைபெழுத்து வாங்கின விவரம். •

கோவிலுக்குள்ளே யிருக்கிற திருக்குள கைங்கரியம் அழிச்சபாக்கம் செட்டிகள் வெங்கடபதிசெட்டி, லஷ்மண செட்டி, நாராயணசெட்டி பிச்சக் கவுண்டன் இவர்கள்கிட்ட உடன்படிக்கைபண்ணி கையெழுத்துப் போட்டார்கள் வேலை சுமார் விராகன் நூற்றன்பது. கோவிலுக்குள்ளே கருங்கல் மண்டபம் முன் நமணப்ப செட்டி எத்தனம் பண்ணுகிறது கட்ட சுமார் பார்த்து வராகன் ஆயிரத்தைனூறு. இதற்கு மேலுகிரி பண்டிதர் குமாரன் பாப்புராயன், இராமச்சந்திர ராயன், கால்பங்கும், மற்ற முக்கால்பங்கு குண்டூர் ரமணப்ப செட்டி பேரன் வெங்கடாசலசெட்டியும் கையெழுத்துப் போட்டார்கள்; கோபுரம் பழுதுபார்க்கிறதற்கும வாகனமண்டபம் பழுது பார்க்கிறதற்கும் சுத்து பிரகாரம் பழுதுபார்க்கவும் குப்பனிவர்த்தகர் உடன்படிக்கை பண்ணிக்கொண்டது சுமார் நூறு விராகன் இதற்கு கையெழுத்துப்போட்டவர்கள். அருணாசலசெட்டி, அழகிய மணவாள செட்டி, காளாஸ்தி அய்யன் குமாரன் நாராயணப்பய்யன், குண்டூர் வெங்கடாசல செட்டி இவர்கள் கை எழுத்துப்போட்டார்கள்.

அனுமந்தராயன் கோவில் மண்டபம் பழுதுபார்த்து முஸ்தீப்பு பண்ணுகிறதற்கு பறங்கி அன்பதுபொன் கொடுக்கிறோமென்று மதனந்த பண்டிதன் கை எழுத்துப்போட்டான். சுங்கு சேஷாசல செட்டி சிங்கிரி கோவில் முன் மாஞ்செடி, தென்னைமரம் முதலான செடிகள் வைத்து தோட்டம்போட்டதை நரசிங்க ஸ்வாமிகோவிலுக்கு இனுமாய் கொடுத்துவிட்டோமென்று கையெழுத்துப்போட்டார்கள்.

### சுக்கில ஞு கார்த்திகை மீ 27 உக்கு 1749 ஆ தெசாம்பர் மீ 9 உக்கு ஆதிவாரம்

இற்றைநாள் காலையிலே நேற்றுசாயங்காலம் துரையவர்கள் ஒழுகரைக்கு வரச்சொல்லி அனுப்பின படிக்கு போன விடத்தில் துரையவர்கள் நேற்றையதினம் தலைநோவாயிருந்து இராத்திரி முப்பதும் நித்திரையில்லாமலிருந்தபடியினாலும் நேற்றியதினம் சூரத்து சோடா வந்ததினாலே சீர்மை காகிதங்கள் வந்ததை படிக்கிற நிமித்தியமாகவும் பன்னிரெண்டு மணி அடித்தபிற்பாடு ஒழுகரையிலே சின்னதுரை பண்ண விருந்து சாப்பிடுவதற்கு அரைமணி வேளைக்கு வந்தார். வந்த உடனே நானும் மதனந்த பண்டிதனும் போய் காண்பித்து கொண்ட உடனே நாசர் சங்கு காகிதம் திருச்சினாபள்ளியிலேயிருந்து அனுப்புவித்தான் அந்த காகிதத்துடனே கூடத்தான் துரையவர்கள் பேருக்கு ஒரு காகிதமும் என் பேருக்கொரு காகிதமும் முசியே திலார்ஷ் (Delarche) பேருக்கு ஒரு காகிதமும் அனுப்பி வைத்தான். இந்த நாலு காகிதமும் துரையவர்கள் என் கையில் கொடுத்து படித்து சொல்லச் சொன்னார். அந்தபடிக்கு காகிதம் படித்துப்பார்க்குமிடத்தில் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்.

நாசர்சங்கு காகிதம் தலைப்பு.

நாம் நாளது வரைக்கும் கேட்டுக்கொண்டு வருகிற தென்னவென்றால்: பாதுசானவர்கள் கட்டளைக்கு விரோதமாய் சிறிதுபேர் அந்த மட்டங்களிலே வந்து நடக்கிறவர்களுடனே கூடிக்கொண்டு நீங்களும் பிரத்தியக்ஷமாய் கூடிக்கொண்டு நடத்துகிறீர்களாம் இப்படி நீங்கள் நடந்துகிறது உங்களுக்கு மரியாதையல்ல நல்லது இந்த மட்டுக்கும் நடந்தது போகட்டும் இனிமேலாகிலும் கட்டளைக்கு விரோதமாய் நடந்து கொள்ளுகிறவர்களுடனே கூடியிராமல் பரிச்சேதமாய் விட்டுவிட்டு எப்போதையும் போலே நம்மிடத்தில் பக்தி விஸ்வாசமாயிருந்து சுகமாய் காரிய முகாந்திரத்திலே எழுதிக்கொண்டு நம்முடைய மனது சந்தோஷம் பண்ணிக்கொண்டு வரவும் அல்லவென்று அந்த விரோதிகளை கூட்டிக்கொண்டு இதற்குமுன் நடப்பித்த படிக்கு நடப்பித்தால் பங்களா முதலான உங்கள் கொடிகளிருக்கிற இடங்களுக்கு எழுதியனுப்புவித்து உங்கள் கொடிகளெல்லாம் பிடித்து சாப்புபண்ணி அவ்விடத்துக்கும் அப்படியே நடப்பிப்போம் இது கெட்டியாய் சறத்தென்று எண்ணவும் என்று எழுதி நம்முடைய பவுன்சு உத்திரவுக்கு விரோதமாய் அந்த விடங்களிலே வந்து நடக்கிறவர்களையே[ ]

### சுக்கில ஞு கார்த்திகை மீ 28 உக்கு 1749 ஆ தெசாம்பர் மீ 9 உ அங்காரகவாரம்

இற்றைநாள் காலையிலே மதனந்தபண்டிதன் வந்துசொன்னசேதி என்னவென்றால்: நேற்று பதினொருமணி வேளைக்கு சேவகன் வந்து அழைத்தானே

சாப்பிட்டு மொறட்டாண்டி சாவடிக்குப்போய் துரையவர்களை கண்டுபேசி னேன். அவர் முன் 26 உ ஆதிவாரம் நான் திருச்சிறைப்பள்ளியிலிருந்து மமூதலிகான் அனுப்பின காகிதங்களும் நாசர் சங்கு காகிதமும் படிக்கச் சொன்னேமே நாசர் சங்கு காகிதத்துக்கு பதில் காகிதமெழுத கவையில்லை மமூதலிகான் காகிதத்திற்கு மாத்திரம் பதிலுத்திரம் நாளை நாளையன்றை யிலே எழுதுவோமென்றல்லவோ சொல்லிப்போகச் சொன்னார் நேற்றைய தினம் அழைப்பித்ததும் மருதல்லிகானுக்கு மாத்திரம் காகிதமெழுதச் சொன்னார் அந்த காகித வயணம் தாமனுப்புவித்த காகிதமும் வாசித்து கொண்டு சகலமும் தெரியவந்தது தாமெழுதின காகிதத்தில் பகுதி ஒருத் தருக்கொருத்தர் பதிலாச்சுகொண்டோமென்றும் அந்தசிநேகம்எவ்வளவாகி லும் பாராட்டாமல் போகிறது ஞாயமா? உங்களுக்கு அன்வர்திகான் தகப்ப னென்று முறை வைத்து சினேகம் நடப்பித்து கொண்டு வந்தவர் களந்த சினேகந்துக்கு விரோதமாய் என்ன நடப்பிக்க வேணுமோ அது நடந்ததென்றும் நாசர் சங்கு அவர்கள் காகிதம் அனுப்பி வைத்தார்கள். அந்த காகிதமனுப்பிவைத்தோம். அது பார்த்துக்கொண்டு அந்தபடிக்கு நடப்பித்தால் இப்போ உங்களுக்கு அவர்களைத்தொட்டு எம் மாத்திரம் பிரயோஜனமோ அப்படி ரெட்டிப்பு பிரயோஜனம் வருகிறது மல்லாமல் சீர்மைக்கு எஜமானாயிருக்கப்பட்டவனுடைய சினேகம் இருக் கிறதைத் தொட்டு முன்னுக்கு எந்த காரியத்திற்கும் வெகு பலனாயிருக்கும் என்று இனிமேலாகிலும் நயவுபண்ணி சினேகம் உத்திரோத்திரா நடப் பித்துக்கொண்டு வரவேண்டும். இதல்லாமல் நாசர்சங்கு உத்திரத்திற்கு சத்துத்திரமாய் எழுதியனுப்பவேண்டுமென்றும் எழுதியனுப்பச்சொல்லி உபசாரமாய் எழுதியிருந்ததற்கு பதிலுத்திரம் துரையவர்களெழுதச் சொன்னது மெய்தான். பகுடி பதிலாயிச்சதும் அண்ணன் தம்பியென்று நடப்பித்துக்கொண்டு வந்ததும் அப்பால் இங்கிலீஷ்காரன் வந்து கோட் டையை வளைதுக்கொண்டு சண்டைபண்ணச்சே எங்கள் பேரிலே விரோ தத்தைப் பாராட்டி இங்கிலீஷ்காரருக்கும் மத்தத்து வந்து எங்கள் கோட் டையின்பேரிலே சண்டைபண்ணது முதலான காரியங்களனேகம் நடப்பித் தீர்கள். இதல்லாமல் பாதுஷா உக்கும்பேரிலே வந்த நபாபு சாதுல்லகான் பாதர் முஜாபர்சங்கு உக்குமை தள்ளிப்போட்டு பாதுஷாவுக்கு விரோதியா யிருக்கிற பேர்களுடைய உத்தாரத்தையே பிரதானமாய்க்கேட்டு நடந்து கொள்ளுகிறபடியினாலே உங்களை எப்படி ஸ்னேகமாய் எண்ணி நடப்பித் துக் கொள்ளலாமென்றும் இப்பவும் நபாபு முஜாபர்சங்கு அவர்கள் மனது வரத்தக்கதாக அவர் கட்டளை பிரகாரம் வா உக்குமத்திலே நடந்துகொண் டால் சினேகத்துடனே சேர்ந்தது புறவிருத்தியாய் நடக்குமென்றும் நாசர் சங்கு காகிதத்துக்கு பதில் ஜவாப்பு நாமிப்படி பாஸ்பாமாய் எழுதியனுப்பு

கிறோமென்றும் எழுதியனுப்பிவைக்கச்சொன்னார். அப்படிக்கெழுதி மழுதல்கானண்டையிலிருந்து வந்த திருச்சினாப்பள்ளி சேவகன் கையில் கொடுத்து அனுப்பிவைத்தோம். அப்பால் தஞ்சாவூர் [ ]

இற்றைநாள் பகலுக்கு மேலாக நாலு மணி வேளைக்கு துரையவர்கள் கோட்டைக்குப் போகச்சே என்னை அழைத்து வரச்சொல்லி சேவகனை போகச் சொல்ல சேவகன் வந்து அழைக்கச்சே நாலரை மணி நேரமுண்டு அப்போ நான் கோட்டையிலே போய் நுழையச்சே சின்னதுரையவர்கள் ஈசுரன் கோவில் தோட்டம் பண்ணிக்கொண்டிருக்கிறாரே அந்த தோட்டத்திலிருந்து அவரும புதிதாய் கட்டுகிற கொவர்னுமாவண்டையிலே வந்தார். அவரும் நானும் இரண்டுபேருமாய் கொவர்னுமா புதிதாய் கட்டுகிறதின் பேரிலே இருக்கிற கொவர்னதோரண்டைக்கு போன விடத்திலே அவர் இன்றையதினம் கார்கம் பார்வைபார்த்தார்களா என்று கேட்டார் பார்த்து சலவைக்கு விட்டார்களென்று சொன்னேன் பற்காணுவிலிருந்து ஏதாகிலும் பணங்காசு வந்ததாவென்று கேட்டார் வரவில்லை இன்னம் இரண்டு மூன். நாள் பொருத்து வந்த உடனே பணங்காசு உம்முடைய கணக்கப்பிள்ளை கையில் செலுத்திப்போடுகிறேனென்று முத்துமல்லாரெட்டி உடம்பிறந்தாருதென்றும் அவர்கள் தாயாருதென்றும் தெரியவில்லை அவ்விடத்திலே அவர்கள் புதைத்து வைத்ததை நம்முடையவர்கள் கண்டு எடுத்துக் கொண்டு வந்தார்கள். அது மூவாயிரத்தி முன்னூறு சில்வானம் என்று சொன்னார்கள் அதை நான் பார்த்ததில்லை இராத்திரிக்காயிலும் நாளை காலையிலாகிலும அதைப் பற்கார்வணி பண்ணி ஆயிரம் வராகனை ஒரு பைக்கு கட்டி உங்கள் கணக்கப்பிள்ளை கையிலே முதலிட்டு இன்னார் சம்மதியென்று பயணம் எழுதிவிக்கிறேன் என்று சொன்னதற்கு அவனறியலாகாது நான் ஊரைவந்த உடனே உன் கையில் வாங்கிக்கொள்ளுகிறேன். அந்த மட்டுக்கும் உன் வசத்திலே இருக்கட்டுமென்று சொன்னார் அப்பால் முத்துமல்லா ரெட்டி தன் பெண்சாதியை விடுவித்து கொள்ளுகிறதற்கு நாற்பத்தையாயிரம்ரூபாய் சேஷாசலசெட்டி மாரிபத்திலே பேச்சுவார்த்தை நடத்துகிறானென்று சொன்னீரே என்னமாச்சுது என்று கேட்டார். பேசுகிறார்கள் இன்னும் பத்துநாள் செல்லும் குவிந்து பணம் காசு வர, அவர்கள் ஏதாகிலும் அந்த தொகையிலே குறைத்துக்கொடுக்கச் சொல்ல வேண்டுமென்று பேசுகிறார்களென்று சொன்னதற்கு அந்த நாற்பத்தைந்து ஆயிரம் ரூபாவிலே ஒரு காசு குறைக்க வேண்டாமென்று அதை பத்திரமாய் சொன்னார். அப்பால் நாசர் சங்குவை சய்பாஜிராவ் வந்து சுத்திக்கொண்டு அலைக்கழிக்கிறானாம். அந்த அலைக்கழுவிலே தப்பித்துக்கொண்டு வரமாட்டாமல் விழிக்கிறானாம். சந்தா சாயபுக்கு சாகு ராஜா, நாஜர் சங்கு பயமில்லாமல் பண்ணுகிறேன். நீர் சுகமாய் போய் அன்வர்திகானை வெட்டிப்போட்டு ஆர்

காடு சுபாவைக் கட்டிக்கொள்ளுமென்று சொன்ன வார்த்தை பாகுபடிக்கு சாய்பாசிராவை விட்டு நாசர்சங்கு இவ்விடத்துக்கு வருகிற பிரயாணத்தை மட்டுகட்டினார்களானபடியினாலே சந்தா சாயபுக்கு நாசர்சங்கு பயம் கவையில்லை. தஞ்சாவூர் மொத்துமா பைசலாய் ஐம்பது லக்ஷ ரூபாய் மாத்திரம் வந்தால் முஜபர்சங்குக்கு சொன்ன நாற்பது லக்ஷத்துக்கு முன் கொடுத்தது நம்முடைய கையில் வாங்கிகொடுத்து உடையார்பாளையம் மொகத்துமாவில் வந்ததை கொடுத்து மா'புசுக்கானுக்கு திருச்சினாப்பள்ளி கோட்டையும், பேட்டையும் தவிர திருச்சினாபள்ளி ராஜ்யமெல்லாம் பதினேருலக்ஷம் ரூபாய் தீர்த்துகொடுத்து நெல்லூர் சர்வப்பல்லே சீர்மையில் வான்சூர்வாலி கொண்டாபுரம் சீர்மை பத்து லக்ஷம் ரூபாய் இசாரர் தீர்த்துக்கொடுத்தது உள்பட இருபத்தெட்டு லக்ஷ ரூபாய் மட்டுக்கும் சென்றது. குறை பன்னிரெண்டு லக்ஷ ரூபாயும் தீர்த்துப்போட்டு மற்றதை குதிரை சுவார்களுக்கும் கொடுத்து அவர் காரியம் செலாயித்து கொண்டு போவாரென்று சொன்னார் மெய்தான் நீங்கள் கைபிடித்தபடியினாலேயும் அவனுக்கு நல்ல அதிர்ஷ்டம் இருக்கிறபடியினாலேயும் சுவாமி அப்படித்தான் நயவு பண்ணுவாரென்று சொன்னேன்................

## சுக்கில ஞு கார்த்திகை மீ 30 உ க்ரு 1749 ஆ நேசாம்பர் மீ 11 உ குருவாரம்

இற்றைநாள் காலையில் சந்தா சாயபு இமாம் சாயபு வசம் நபாபு அல்லி தொஸ்துகான் ஆபித்து சாயபு கல்யாணத்துக்காக அமானத்து வைத்ததுக்கு ஒன்பதினாயிரத்தெநானூறு அசர்பியும், சென்னைப் பட்டணம் வாரிகள் இருபதினாயிரம் அமானத்து வைத்து வரவேணுமென்று பேரில்லாமல் மோகருமில்லாதது ஒரு காகிதமொன்று காண்பித்து இமாம் சாயபு பணம் லக்ஷ வராகன் மட்டுக்கும் கும்பினியில் கடன்கொடுத்து வைத்திருக்கிறதிலே எடுத்து கொடுக்கச்சொல்லி கேட்டதற்கு, இன்னார்களெழுதிக் கொடுத்தார்களென்று பேரில்லாமல் மோகரில்லாமல் இருக்கிறதை நம்பி எப்படி கொடுக்கிறதென்று அவன் குமாரன் அசனல்லிகானுக்கு எழுதி அனுப்ப சொல்லுகிறேமென்று சொன்னதின்பேரிலே அப்படியானால் நாங்கள் தானே இமாம் சாயபு குமாரன் கையில் கேட்டு வாங்கிக்கொள்ளுகிறேமென்று ராகவ பண்டிதரை அனுப்புவிக்கச் சொன்ன விடத்தில் நல்லது இமாம் சாயபு குமாரனுக்கு எழுதி அனுப்புவித்து ராகவ பண்டிதரை நாலு நாள் பொறுக்கச்சொல்லி சொன்னவிடத்தில் இமாம் சாயபு குமாரனுக்கு எழுதின காகிதத்துக்கு பதிலுத்தரம் அந்தக் கணக்கு சம்மதிகள் தீர்த்து கொண்டதற்குக் கணக்கும் இருக்கிறது. பாரிகத்தும் இருக்கிறதென்று அந்த அமானத்துக்கணக்கும் அசல் சீட்டும் இருக்கிறது அந்த அமானத்து

அவர்களுக்கு சென்றதற்கு சபுதல்லிகான் எழுதிக்கொடுத்த பாரிகத்து சீட்டுக்கு அபரங்காபாத்து காசி மொகருட்பட நகலுமனுப்பிவித்தோம் அந்த நகலு பார்த்துக்கொண்டால் தெரியவருமென்று எங்கள் தகப்பனர் ஒருத்தருக்கு ஒரு காசு கொடுக்கவேண்டியதில்லை எங்களுக்கு அவரவர் பேரிலே விஸ்தாரமாய் வரவேண்டியதேயல்லாமல் மற்றபடி அல்ல. அவை யவைகட்குக் கணக்கு அத்தாட்சியுடனே பாரிகத்துடனேயும் வரவேண்டிய தற்குக் கணக்கு சீட்டுடனேயுமிருக்கும் என்றும் இதல்லாமல் இப்போ பிரான்சு கும்பினியிலே வைத்திருக்கிற பணம் எங்கள் தகப்பனுருக்குகவை யில்லையென்றும் தனக்கும் தன் தங்கைச்சிக்கென்றும் வயணம்கூடயெழுதி யிருக்கிறதென்றும் இதல்லாமல் எங்கள் தகப்பனர் உங்கள் கும்பினிக்கு ரூபாய் முத்திரை முதலானது வாங்கிக்கொடுத்து வெகு வெகு காரியங்களை எல்லாம் செய்து கொடுத்ததெல்லாம் தனக்கு பிற்காலம் எங்களை நீங்கள் ரட்சிப்பீர்கள் என்று யோசனை பண்ணி நடத்தினது ஆனபடியினலே எங்களை ரட்சிக்கிறதற்கு உங்களுக்கு பாத்திய முண்டென்றும் எங்களுக்கு வேறே ஆதரவு இல்லையென்றும் இதல்லாமல் சந்தாசாயபு வந்தவுடனே எல்லா ஜாகீருக்கும் கில்லாவுக்கும் வாங்கினபடிக்கு எங்கள் கையிலேயும் இருபதி னுயிரம் ரூபாய் ஒப்புக்கொண்டு அதற்கு பதினுயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு மற்ற பதினுயிரம் ரூபாய்க்கு தவணைக்கு தவணைபடிக்கு சம்மதி பண்ணிப்போடுகிறேம். அப்படியிருக்க சந்தாசாயபு பூர்வ வைரத்தை மன தில் எண்ணிக்கொண்டு எங்கள் பேரிலே கோபத்தினலே எங்கள் ஜாகீர் ஜில்லாகூட சேக்கு அப்துலாயிமான் மாயெ சிப்பாய்களுடைய தப்பித்தா னுக்கு கொடுக்கிறதாய் பேச்சு வார்த்தை நடந்ததாம். பின்னை ஒருத்தருக்கு கொடுத்தால் முன்னலே உங்கள் சிபார்சு கொண்டுபோய் கொடுத்திருக்கிறபடி யினலே பின்னை ஒருத்தருக்கு கொடுத்தால் திருக்குண்டாம் அப்துலாயி மானுக்குத்தானே கொடுத்தாலும் உங்கள் பிரீதியும் உண்டாயிருக்கிறவனை படியினலே அவர்களுங்களுக்கு தெரியப்படச்சொல்லி நிலைக்கப் பண்ணிக் கொள்ளுவார்களென்று அப்துலாயிமானுக்கு கொடுக்கிறதாய் யோசனையிருக் கிறர்களென்று சேதி வந்தது. ஆனபடியினலே நீங்கள் சந்தாசாயபுக்கு யெழுதி இந்த ஜில்லா ஜாகீர் வழக்கு தொந்திரவு வாரமல் காகிதமொன்று எழுதியனுப்ப வேணுமென்று பின்னையும் உபசாரமாய் எழுதத்தக்க ஜாடை யாய் எழுதியனுப்பின காகிதத்தைக்கொண்டு சொக்கப்ப முதலியும் ஷெயார் மருமான் அம்மையப்ப முதலியும் துரையண்டைக்குப் போகவேணுமென்று அழைக்க ராகவபண்டிதரும் இமாம்சாயபு ஜோலி நிமித்தம் வெகுநாளாய் காத்திருக்கிறேன்.

அங்கே நானிருந்தாலிந்தமட்டுக்கும் பதினுயிரம் வராகன் சம்பாதிப்பே னென்று அவன் நீர் உத்தாரம் கொடுத்தாலும் போகிறேன். இல்லாவிட்டா

னும் போகிறேனென்று கண்ணீர்விட்டு அங்கலாயத்தபடியினாலே எனக்கு சரீரம் சொஸ்தமில்லாமல் ஜலதோஷமும் சிர நோவுமாயிருக்கிறபடியினாலே எனக்குவரக்கூடாது. நீங்களிருதிரத்நாரும் மொறட்டாண்டி சாவடிக்குப் போய் துரையவர்களுடனே சொல்லிக்கொள்ளுங்கள். வருவதற்கு பதிலுத்தாரம் சொல்லிப்போகச் சொல்லுவார். மதனாந்த பண்டிதனுமங்கே இருக்கிறானென்று சொல்லி போகச் சொன்னதின் பேரிலே இவர்களங்கே போய் துரையவர்களை கண்டு சொக்கப்ப முதலியும் டி மருமகன் அம்மயப்ப முதலியும் இருபத்தொரு வராகன் நாசர்வைக்க நசார் எடுத்துக்கொண்டு மதனாந்த் பண்டிதனையும் அப்புவையும் அழைப்பித்து மதனாந்த பண்டிதனை படிக்கச் சொல்லி அந்த மத்தலப்பெல்லாம் அப்புவை சொல்லச் சொல்லி கேட்கச்சே அப்பு அந்த பதசந்து அறிந்து சொல்ல தெரியாதபடியினாலே நல்லது ரங்கப்பிள்ளையை அழைத்துக்கொண்டு நாளையதினம் வாருங்களென்று சொன்னவிடத்திலே அங்கேகில்லாவை கட்டிக்கொள்ளுகிறதாயிருக்கிறது. ஒரு கொடியும் நாலு சொல்தாதுகளை மாத்திரம் அனுப்பினாலும் அவர்கள் கில்லாவழி வாரார்கள். அப்பால் சால் சாவாபு மென்ன ஆகுதென்று சொன்னதின் பேரிலே நல்லது ராகவ பண்டிதர் வந்திருக்கிறாரே அவருக்கு பரிகத்து படித்து காண்பிக்கச் சொல்லி அந்தபடிக்கு படித்து காண்பித்த விடத்திலே அவரப்படியிருக்கச்சே நான் காத்திருப்பானேன். நீங்கள் சொல்லிப்போன காகிதத்துக்குப் பணம் சென்றுபோனதற்கு சபிதல்லிகான் ரசீது இருக்கிறது யென்று அவர்கள் சம்மதி சொன்னார்களானபடியினாலே ராகவபண்டிதரை அனுப்பிவிட்டோம் ஒரு காகிதமெழுதி கொடுத்தால் நான் போகிறேனென்று கேட்டதற்கு துரையிருந்து கொண்டு நாளைகாயிலே ரங்கப்பிள்ளை வருவான் வந்த உடனே உங்களுக்கு காகிதமெழுதிக்கொடுத்து அனுப்புகிறேன். ஆனால் சந்தா சாயபு இமாம் சாயபு மகன் பேரிலே பூர்வ வைரம் விட்டவரல்லவென்று சொல்லி நீங்கள் எல்லாரும் நாளையதினம் ரங்கப்பிள்ளையை கூட அழைத்துக்கொண்டு வரச்சொல்லென்று சொல்லி போகச் சொன்னார். கோசர்சாமி சாவுனிகன் உத்யோக ஜாகீர் நாம் ஜப்தி பண்ணினோமென்று கோசர்சாமி வக்கீல் சந்தாசாயபுடனே அரசிபண்ண் அதை விட்டுவிடச் சொல்லி துரைபேருக்கு ஒரு காகிதமும் என் பேருக்கு ஒரு காகிதமும் ஒரு காயத்து கொண்டுவந்து கொடுத்தான் அதை படித்துப் பார்த்து மதனாந்த பண்டிதன் சொன்னதற்கு ரங்கப்பிள்ளை நாளை வந்தபிற்பாடு தெரிந்துகொள்ளுவோம். நாளையதினம் இவனையும் வரச்சொல்லென்று சொன்னார். அவனும் ராகவபண்டிதரும் சொக்கப்பமுதலியும் வந்து மேலே எழுதப்பட்ட சேதியெல்லாம் சொல்லதக்கதாக எழுதினேன் இதல்லாமல் நவாபு இதாயத்து மொகதீன்கான் ஒருகாகித மெழுதி அதிலே எழெட்டு துப்பாக்கி உயர்ந்த துப்பாக்கியா யனுப்பச்சொல்லி எழுதினாராம். அதுக்கு

பதினுத்திரம் கப்பல் வந்தாலேயல்லாமல் அகப்படுகிறதில்லையென்று எழுதி யனுப்பித்ததாய் மதனந்தபண்டிதன் எழுதினான்.

பகலைக்கு மேலாக கேள்விப்பட்ட சேதி என்னவென்றால்: முத்துமல்லா ரெட்டி பெண்சாதியுடனேகூட காவல் இருந்த கிளியனூர் பாபுரெட்டியை முனுக்கு அப்பு முதலி வந்து துரையவருக்குத்தாம் காவல் விட்டுவிடச் சொல் என்று சொல்லிவிட்டு விடச்சொன்னாரென்றும் சொல்லி விட்டுவிட் டார்களென்று சாவடியிலே காவல் கூடத் தலையாரி இருக்கிறவன் வந்து சொன்னான். இதற்குமுன் சின்ன பரசுராமபிள்ளை மதாம் துப்ளேக்சின் வழி யிலே துரையவர்களுக்கு நாற்பதினாயிரம் ரூபாய் கொடுக்கவும் மதாம் துப் ளேக்சுக்கு பதினாயிரம் ரூபாய் கொடுக்கவும் அப்பு முதலிக்கு இரண்டா யிரம் ரூபாய் கொடுக்கவும் மதனந்த பண்டிதனுக்கு 800 ரூபாய் கொடுக்க வும் சின்ன பரசுராமப்பிள்ளை சொல்லி கொள்ளுகிறதற்கும் இந்த பேச்சு பேசுகிறதற்கும் ஐயாயிரம் ரூபாய் பேசிக்கொண்டு நேத்து 29ம் தேதி புதவாரம் நான் முறட்டாண்டி சாவடியிலே பகல், ராத் திரி முப்பதும் போயிருந்து பசி தீர்த்துக்கொண்டு வருகிறதாய் காத் துக்கொண்டிருக்கிறானென்று கபுறு கேட்டிருந்ததற்கு தற்காலம் சரியா யிருந்ததா என்று எண்ணிக்கொண்டேன் இந்த காரியம் பேசியெனப்படுத்தி பிணையிருக்கிறதற்கு பெலனாக இருக்கவேண்டுமென்று இருபதினாயிரம் ரூபாய் முன்னதாக அனுப்பிவைத்ததாயும் சேதி கேட்டிருந்தேன். அந்த படிக்கு எனக்கு நாள்தோறும் வந்துக்கொண்டிருந்த கபுறுக்கும் இதற்கும் சரிபட்டது. ஆனால் இரண்டு மாதமாய் இந்த காரியம் நடக்கச்சேயும் நீ சுகமாய் இருப்பானேன்; ஏனென்றால் பிரபுக்கு ரொக்கம் சவுக்கமாய் பணம் சேருகிறது ஒன்றும் எதிராளிக்குப் பலன் குறைகிறதென்றும், முன்னிட் டிருக்கிற எனக்கு பதிலாகாமயில்லாமல் பரஸ்பரமாய் நடந்துப்போகிற தெல்லாம் நல்லதென்று பிற்பேதானே போகட்டென்று யோசனைபண்ணிக் கொண்டிருந்தேன். இதல்லாமல் முத்துமல்லாரெட்டி காரியமது தானியத் துக்கும் பரஸ்பரமாய் நடக்கத்தக்கதாக நான்தானே யோசனைகூட முத்து ரெட்டிக்குச்சொல்லி நடப்பித்துக்கொண்டு வந்தபடியை எண்ணிக்கொண்டு திண்டிவனம் சீர்மை யிப்போ நம்முடைய வசமாயிருந்தாலும் அப்படிபோகி றது நல்லது யென்று சும்மாயிருந்த யோசனை என் மனதுக்கு தெரியும் அப்பாலிந்த ரூபாயில் பாதி ரூபாய் இருபதினாயிரம் ரூபாய் துரைக்கு இரண்டு மூன்று நாளைக்குள்ளே செலுத்தின உடனே முத்துமல்லாரெட்டி பெண்சாதிபிள்ளைகள் சாவடியிலே காவலிருக்கிறவர்களை அப்பால் நயனார் வீட்டில் வைக்கவும், மற்ற பாதி பணம் சென்ற உடனே அவர்களை விட்டு ஊரை அனுப்பிவைக்கவும், முத்துமல்லாரெட்டி தானிய தவசம்; மாடு

ஆடுகளிப்போ ஜப்திபண்ணியிருக்கிறது விட்டு விடவும். இதுகளிலே விற்று இருக்கிறதற்கு கிறயம் கூட்டிக்கொடுக்கவும் · இந்தபடியே சிதைந்ததாயும் சீர்மைபேச்சுக்கு துரையவர்களை கேட்டதற்கு அது ரங்கப்பனது எனக்கு கவையில்லை யென்று சொன்னதாயும் இது முதலான சேதி பிற்பாடு இரண்டொருத்தர் சாயங்காலம் சொல்ல கேள்விப்பட்டேன். இராத்திரி கேள்விபட்ட சேதி என்னவென்றால்: சின்னபரசுராம பிள்ளை தான் பிடித்தகாரியம் நிருவாகமாச்சென்று பாபுரெட்டி முதலான பேர்களுக்கு விருந்து சமைத்துப்போட்டதும் தேவடியாட்களை அழைத்து பாடிவைத்ததும் அவர்களுக்கெல்லாம் வெகுமானம் அவர்கள் முன்னே தான் நிருவாகம்பண்ண காரியங்களை வெகு உற்சாகத்துடனே வாய்க்கு வந்தபடிக்கு பிதற்றினதுகளும் அப்பால் பாபுரெட்டியைக் கூட்டி சென்னப்பட்டணத்துக்குப்போய் முத்துமல்லாரெட்டியைக் கண்டுபேசி அவனையுமழைத்துக்கொண்டு மற்ற பணத்துக்கு உத்தரவு வாங்கிக்கொண்டு அது இருக்கிற இடததுக்குப்போய் எடுத்துவர நாளை காலையிலே பயணம் போகிறதாய் சேதிகேள்விபட்டேன் ஆனால் முற்றிலும பார்க்கவேணும் என்னமாய் நடக்குதோ என்று எதனாலே என்றால் முத்துமல்லாரெட்டிக்கு கஷ்டகாலம் நிவர்த்தியானால் இந்த பணத்துடனே இந்த சாடையிலே சமாதானமாய் போம் அல்லாமல் கஷ்டகாலம் இருந்தால் மடிந்துக்கொள்ளுமென்கிற சாடையைத்தொட்டு முற்றிலும் அறிய வேண்டுமென்று யெழுதினேன்.

**சுக்கில ஹூ மார்கழி ௴ முதல் தேதிக்கு 1749 ஆ டெசாம்பர் ௴ 12 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலையிலே மொறட்டாண்டி சாவடிக்கு துரையவர்களிடத்துக்கு போகச்சே சொக்கப்ப முதலியார் ராகவபண்டிதன் கூட வந்தார்கள் இவர்களையும் முன்னே அழைத்துகொண்டுபோய் விட்டு சமாசாரம் சொன்னவிடத்திலே நேற்றுதானே இம்மாம் சாயபு குமாரன் அனுப்பின அபரங்காபாது காசிமேர்களுடனே சபுதல்லிகானின் பாரிகத்தும் அல்லிதொஸ்துகான் ஆபித்து சாயபு கல்யாணத்துக்காக அமானத்து வைத்ததென்றும் அது நான் காசு பத்திகொண்டேனென்று எழுதியிருக்கிற சபிதல்லிகான் கொடுத்த பாரிகத்துக்கு நக்கல் சம்மதி ராகவபண்டிதர் பார்த்தாரே என்னசொன்னீரென்று கேட்டார். சந்தா சாயபு இவரிடத்திலே இருக்கச்சேயும் அல்லிதொஸ்துகான் இவனுடனே இருக்கச்சேயும் நடந்த மோகத்துமா அப்பால் சந்தாசாயபை சாத்தாராவுக்கு மராட்டியர் வந்து பிடித்துப்போனார்கள். அல்லிதொஸ்துகானையும் சண்டையிலே வெட்டிப் போட்டு தீர்ந்த பிறகு அவர் குமாரன் சபுதல்லிகான் தீர்த்து வாங்கிக்கொண்டு பாரிகத்து கொடுத்த சம்மதியானபடியினாலே சந்தா சாயபு வரக் கபுயில்லை என்றும் அப்பாலும் அந்த அமானத்து ரசீதுக்கும் இன்னார் வசமென்று

பேருமில்லாமல் மொகராயில்லாமல் இருக்கிறதைத் தொட்டு இதைப் பிரஸ்தாபமே பண்ணப்போகாதென்று சந்தா சாயபு ஏற்கனவே சொன்னார். அல்லிநகிம் சாயபு இந்த நக்கலே கொண்டுவந்து கொடுத்தது உங்களுடனே பேசச்சொல்லி பலவந்தம் பண்ணபடியினாலே பேசினதென்றும் மதனந்த பண்டிதன் முன்பாக என்னுடனே சொன்னானென்று நான் சொன்னதற்கு இப்போ நூசுபு ரூபாய் கேளுமென்று சொன்னார். அந்த படிக்கு துரையவர்கள் முன்பாக ராகவ பண்டிதனை கேட்க முன் என்னுடன் சொன்னபடிக்குத்தானே சொன்னாரைக்கேட்டு சந்தா சாயபு பெரிய மனுஷன் இப்படி புறப்படப் பண்ணி மோசம் பண்ணவேண்டுமென்று நினைப்பார்களா? என்று சொல்லி நல்லது சந்தா சாயபுக்கு ஒரு காகிதம் தாங்கள் பேர் ஊர் மோகருமில்லாமல் அமானத்து சீட்டு ஒன்று ராகவபண்டிதர் வசம் கொடுத்து இமாம்சாயபு பேரிலே வரவேண்டியதென்றும், அந்தப் பணம் வாங்கியனுப்பச்சொல்லியும் இராகவபண்டிதரையும் வைத்துப்போட்டுப்போனீரே அதுகாரியத்துக்கு இமாம்சாயபு குமாரனுக்கு எழுதியனுப்பினதற்கு ஆபித்து சாயபு கலியாண நிமித்தம் நபாபு அல்லி தொஸ்துகான் அமானத்து வைத்து ஆற்காட்டு சாபு அசாபி ஒன்பதினாயிரத்தென்னூரும் சென்னப்பட்டணம் இருபதினாயிரம் வராகனும் சபிதல்லிகான் பந்திக்கொண்டு மாரிகத்து யெழுதிகொடுத்ததற்கு அபாங்கா பாத்து காசி மொகனுடனே பண்ண நக்கலு வந்து உங்கள் ராகவ பண்டிதனும் படிந்நப்பார்த்தான். அதற்கு சவாத்தும் எழுதி ராகவ பண்டிதர் வசம் கொடுத்து அனுப்புவித்தோம். அந்த சம்மதி தீர்ந்துப்போயிருக்கிறபடியினாலே அது பேச வேண்டிய காரியமேயில்லே. அதுக்கு மோகரும் கையெழுத்தும் எப்போயில்லேயோ இப்போ நீங்கள் காண்பித்து முன் அமானத்து ரசீதுக்கு இது நகல் எழுதினதை இப்போ உங்களுடனே எச்சரிந்தவர்கள் நடந்த காரியத்தைச் சொல்லாமலும் போனார்கள். அது அறிந்தவர்களுமில்லே: அது எதனாலென்றால்: சபுதல்லிக்கான் மாமுலா எல்லாம் அவன் உறமுறையார் ஒருத்தாரியாயர்கள் ஒரு மார்சத்து தவிர ஆனபடியினாலே ஒருத்தருக்கு தெரியவும் தெரியாததெரிந்த மார்சந்துக்கும் உங்களுக்கும் வெகுதுவேஷம் ஆனபடியினாலே உங்களுக்கு அறியவும் கூடாது ஆனபடியினாலே நக்கலே கொண்டுவந்து அசலென்று சொன்னார்கள். அதுவும் தீர்ந்து போனதற்கு பாரிகத்துமிருக்கிறபடியினாலே அந்த பாரிகத்துக்கு நக்கலும் ராகவபண்டிதர் வசம் கொடுத்து அனுப்பிவைத்தோம் அது பார்த்து கொள்ளச்சேயும் ராகுவபண்டிதர் முகவுதனத்தினாலேயும் தெரியவரும் என்றெழுதியனுப்பச் சொன்னார். அந்தபடிக்கு எழுதி ராகவபண்டிதர் கைமேலே கொடுத்தனுப்புவிக்கிறேனென்று சொன்னதற்கு அனுப்பிவிடுமென்று சொன்னார். அந்த

படிக்கு மதனூந்தபண்டிதனுடனே சொல்லி பாரிசு காகிதமெழுதி மோகரு பண்ணிக்கொண்டு வரச்சொல்லி ஆன உடன் இமாம் சாயபு சாகீர் தியாக் கடையும் அதனுடைய சாகீரையும் சேக்கு அப்துலாயிமானுக்கு அவன் தம்பி சேக்கு அசனுக்கு சாகீரும் கில்லாவும் கொடுக்கிறதாய் சந்தா சாயபு மோகரு பண்ணூறென்று இமாம் சாயபு குமாரன் எழுதினனே, அது நமக்கேதாகிலும் பிரயோஜனமில்லாமல்தானே நாமதற்கு பிரயாசைப் பட்டு சந்தா சாயபுக்கு எழுதியனுப்பி நிருத்தவேண்டுமே. அதற்கு இமாம் சாயபு குமாரன் குமஸ்தா அம்மையப்பமுதலி என்கிறவன் இப்போ வந்தான். சொக்கப்ப முதலி என்கிறவன் முன்னே வந்திருக்கிறுன் அவர்களுடனே பேசி தீர்த்துப்போமென்று சொன் ஞர் இது காரியத்துக்கு நாளையதினம் அவர்களுடனே பேசிக் கொண்டு நாளையன்றையதினம் காலையிலே வந்து சொல்லி அப்பால் சந்தா சாயபுக்கும் முசபர் கானுக்கும் இமாம் சாயபு அவர்கள் கில்லாவும், சாகீர் வழிபோக கவையில்லையென்று காகிதமெழுதியனுப்புகிறேனென்று சொன்ன பிற்பாடு அது நாளுச்சுதே முந்துமல்லா ரெட்டி சம்மதி சேஷாசல செட்டி பேசுகிறுனே, அந்தப் பணம் ஏன் வரவில்லை யென்று கேட்டார். நேற்றைய தினம் மதாம் வழியிலே உங்களுடனே சின்ன பரசுராமன் தான் கொடுக் கிறேமென்று பேசி திர்த்துக்கொண்டதாயும் அதின் பேரிலே அப்புவந்து நேற்றுமந்தியானம் பாப்பு செட்டியை உங்களுத்தாரமென்று விட்டுவிடச் சொன்னுனென்று நயனுருடனேசொல்ல அதன்பேரிலே எனக்கு வந்து கபுறு சொல்லி விட்டு விட்டார்களென்று சொன்னதற்கு பரசுராமன் இந்த காரி யத்திலே பேசுகிறுனென்றும் மதாம் சொன்னுள். அதற்கு நான் அவளேன் இதிலே யெந்திரமேமிரானென்று சொல்லி உன்னுடனே பேசின தெப் படியென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது முன்னேதானே சுங்கு ராமன் பேசுகிறது உங்களுக்கு நாற்பதினுயிரம் எனக்கு ஐயாயிரம் என்று பேசினுர்கள் அந்த சேதியை நாற்பத்தையாயிரமாய் உங்களுடனே நான் சொன்னேனே என்று சொன்னதற்கு உன் ஐயாயிரம் கூடவா நாற்பத் தையாயிரமென்று கேட்டார் ஆமென்று சொன்னேன் அதை ஏன் கூட்டி சொன்னுயென்று கேட்டார். துரைக்கும் எனக்கும் வருகிறது கூடத்தானே சொல்லிக்கொடுத்து கொண்டு வந்தபடியினுலே இதுவும் சேர்த்து சொன் னேனென்று சொன்னதற்கு நல்லது இங்கேயிரு என்று சொல்லி இது ஒன் றும் நானறியேன் ஆனல் மதாமைக்கேட்டு வாரேனென்று தலை நோவுடனே இருக்கிறவன் பெண்சாதியண்டைக்கு போய்வந்து சொன்னபேச்சு என்ன வென்றுல் எனக்கு நாற்பதுனுயிரம் ரூபாய் நாலு நாளையிலே பரசுராமன் கொடுக்கிறேனென்று தீர்த்துக்கொண்டானும். உன் வழியிலே பேசாத படிக்கு இங்கே பேசின தென்னவென்று கேட்டதற்கு நீ இருபதினுயிரம்

ரூபாய் கேட்டாயாம். அதனாலே என் வழியிலே வந்து பேசினார்களென்று மதாம் சொன்னாளென்று சொன்னார். முன்னே பட்டாபிராமய்யன் என்று ஒரு பார்ப்பான் பேசினான் பெருமுக்கலார் பேசினார்கள் சேஷாசல செட்டி பேசினார். இவர்கள் எல்லோரும் இருக்கிறார்கள் உங்களுக்கு நாற்பதும் எனக்கும் பேசுவார்கள் எனக்கு கவையில்லை துரையவர்களுக்கு நாற்பத்தைந்தும் கொடுங்கள் என் உடமை தானியம் தவசம் என்ன இங்கிலீஷ்காரர் கொள்ளையின்போது கொள்ளையிட்டு கொண்டுபோனாளே அது கொடுக்கிறதென்று நான் பேசிக்கொண்டதற்கு அந்தபடிக்கு உன் உடைமைக்கு காசுகொடுக்கிறோமென்று உடன் படிக்கைப்பேசினார்கள் இப்பால் சங்குராமன் பேசினது சீர்மை உம்முடைய வசமாயிருக்கிறதே அது இசாராவாய் தீர்த்துக்கொள்ளுகிறோம். அதிலே உமக்கேதாகிலும் கூடிவர பேசுகிறேனென்று சொல்லவந்தார் சீர்மை ஒருக்காலும் அவனுக்குக் கொடுக்கிறதில்லை அவன் தமபிக்கு ஆதாயம் வாங்கிக்கொண்டு அவன் வசம் கொடுக்கிறதேயல்லாமல் வேறே ஒருத்தருக்கு கொடுக்கிறதில்லை என்று சொன்னதின்பேரிலே அவன் தம்பி முப்பத்தையாயிரம் ரூபாய் சொன்னானே அதென்னமாச்சுதென்று கேட்டார். நீங்கள் நாற்பதினாயிரம் ரூபாய் தீர்த்துக்கொண்டு அவன் மாடு கன்று தானியம் வகையரா தட்டுமுட்டுகளெல்லாம் விட்டுவிடுகிறோமென்று சொன்னீர்களாம் நான் யோசனை பண்ணினது நீங்கள் என்னத்துக்கு இந்த முப்பத்தையாயிரம் ரூபாய் வாங்க வேணும்? வந்தமட்டும் போதுமென்று விட்டுவிட்டீர்களாங்காட்டுமென்று யோசனை பண்ணிக்கொண்டேன். அதற்குமுன் நான் யோசனை பண்ணி இந்த நாற்பத்தையாயிரம் ரூபாயும் சென்று அவன் தானியம் மாடு, எருது, உடைமை வகையரா கொடுக்கச்சே அவன் தம்பி பங்கு பாதி உண்டே, அதை பிடித்துக்கொண்டு அதிலே முப்பத்தையாயிரம் ரூபாய் உங்களுக்கு செலுத்தி மற்றது அவனுக்கு ஒரு ஸ்திதியாக வைத்து சீர்மைனாட்டுத் தினத்துக்கும் அவனைவைத்து நடப்பித்துக்கொள்ளுவோமென்று யோசனை பண்ணி உங்களுடனேயும் சொல்லி அவன் தானியம் பசு எருது வகையரா எடுத்துவிற்கச்சொல்லி திட்டம்பண்ணது அதுவெல்லாமிருக்க என்னையும் கேளாமல் தீர்த்து கொண்டீர்களே, நீங்களிதுகளெல்லாம் மன்னாப்பு பண்ணி போட்டீர்களாங்காட்டும் என்று எண்ணிக்கொண்டேன் என்று சொன்னதற்கு மெய்தான் மறந்துபோனேன் இப்பவும் என்னமாச்சுது? அந்தப்பணம் வரட்டும் அப்பால் உன் மனதின்படியே நடத்திக்கொள்ளுமென்று சொல்லி முன் சம்மதி வெளிக்கிவிடாமல் பத்திரமாயிருக்கட்டும். காரியம் ஆனபிற்பாடு சீ போ என்று சொல்லுவோமென்று சொல்லி திரும்பியும் இந்த பரசுராமன் தன் காரியமென்னமோ அது பார்த்துக்கொள்ளலாம் இந்த காரியம் என் தலையில் போட்டு கொண்டானென்று சொல்லி இதற்குமேல் உனக்கு சம்

மதியானபடிக்கு நடப்பித்து கொள்ளென்று சொல்ல, அப்படி செய்ய வேண்டாம். உங்களுக்கு பணம் வருவதே நல்லது வருகிறதை சும்மா வர பார்த்துக்கொள் அப்புரம் நான் சொன்னபடிக்கு நடப்பியுங்களென்று சொன்னதற்கு நல்லதென்று சொல்லி அப்பால் நயினார் எனக்கு கொடுத்த பணத்துக்கு முசியே திலார்சு (Delarche) கையிலே கடன்வாங்கிகொடுத்தது மெய்தானாவென்று கேட்டார். அது சர்வஅபத்தம் குண்டு கிராமத்தார் கையிலேயும் தங்கசாலையார் கையிலேயும் வாங்கிகொடுத்ததென்று சொன்ன தற்கு சிறிது பேர்களைத் தொட்டு வெகுகாரியங்கள் கெட்டுப்போகிறது. அவர்களுக்கு புத்தி சொன்னாலே யல்லாமல் அடங்குகிறதில்லை ஆகட்டும் நீ ஊருக்கு போவென்று சொன்னார். அப்பால் நாங்கள் மதனாந்த பண்டிதன் வகையரா ராகவபண்டிதன் சொக்கப்பமுதலிகூட அனுப்பிவித்துக்கொண்டு பன்னிரெண்டு மணிக்கு ஊரைவந்து சேர்ந்தோம்.

### சுக்கில ௵ மார்கழி ௴ 3 உக்கு 1749 ஆ தெசாமபர் ௴ 14 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலையிலே துரையவர்களண்டைக்குப் போய சந்தா சாயபு ராகவபண்டிதர் ஊருக்கு போகிறாரென்று சொல்லி அவருக்கு உத்திரவு வாங்கிகொடுத்து இமாம் சாயபு பேரில் அமானந்து சம்மதி வரவேண்டுமென்று சொன்னதற்கு அது சேர்ந்துப்போய்பாரிகத்தும் இருக்குமென்று இமாம் சாயபு குமாரன் எழுதியனுப்பின சம்மதிக்கு சந்தா சாயபுக்கு முந்தாநாள் எழுதச்சொல்லி சொன்னபடிக்கு எழுதி தயார்பண்ணி காகிதத்தையும் கொடுத்துப்போகச்சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தபடிக்கு ராகவபண்டிதரும் அனுப்பிவித்துக்கொண்டார். அப்பால் சந்தா சாயபு கில்லாவும் சாகீரும் முசபர்கான் சேக்கு அசேனுக்கு கொடுக்கிறேனென்று அப்படி செய்யப்போகாது எங்கள் காரியத்திலே இமாம் சாயபு பிரயாசைப்பட்டு எங்களவன் என்று எண்பித்துக்கொண் டிருக்கிறபடியினாலே அவர்கள் காரியம் எங்கள் சொந்த காரியத்தை பார்க்கி லும் அதிகமானபடியினாலே உங்களுக்கும் எங்களுக்கும் அபெந்தபிறதி பத்தியாயிருக்கிறபடியினாலே நீங்களவர்கள் பேரிலே ராசக்காரியம் பண்ணு கிறது நியாயமல்ல. அப்பாலும் அந்தந்த கில்லேதாரர்களை தீர்த்துக் கொண்டபடிக்கு அவர்களுக்கு இருபதினாயிரம் ரூபாய் கொடுத்து தீர்த்து கொண்டிருக்கச்சே நீங்கள் மறுபடி அவர்கள்பேரிலே இப்படி விரோதம் பண்ணுகிறது நியாயமல்லவென்று எழுதி காகிதம் முஸ்தீப்பு பண்ணி யிருக்கிறது. இந்தபடிக்கு சாயபு சாதாவுக்கும் எழுதி தயார் பண்ணி யிருக்கிறது. இதுகாரியங்களுக்கும் உங்களுக்கும் இந்தவித சம்மதி சொல்லு கிறோமென்று சொன்னார்களென்று சொன்னதற்கு நல்லதென்று அந்த

காகிதத்தை சந்தா சாயபுக்கும் அவர் குமாரனுக்கும் கொடுத்தனுப்பச் சொல்லியும் முசபர்கான் சேக்கு அசேனுக்கும் இமாம் சாயபு மகன் கில்லா சாகிர் வழிபோகவேண்டாமென்றும் ஒரு காகிதமும் கூட எழுதி இமாம் சாயபு மகனுக்கு ஒரு காகிதம் மேலே எழுதப்பட்ட சந்தா சாயபு குமாரன் அப்துலாயிமான் சேக்கு அசேனுக்கும் காகிதமெழுதி அனுப்பி வித்தோம். இனிமேல் உங்கள் கில்லாஜாகீர் வழி வாரார்களென்றும் நீங்கள் காத்தினுசமாவாயிருக்கச்சொல்லி எப்படி எழுதவேணுமோ அப்படி எழுதி அதிலே ரங்கப்பன் காகிதம் பார்த்துகொள்ளச்சே தெரியவருமென்று இந்தபடி எழுதிகொடுக்கச்சொல்லி சொன்னபடிக்கு காகிதங்களெழுதி மோகருபண்ணி ஷையார் குமஸ்தா சொக்கப்பமுதலி அம்மையப்பமுதலி வசம் கொடுத்து அனுப்பச்சொன்னுர் அந்தபடிக்கு வாங்கிக்கொண்டு அவர்களும் அனுப்பிவித்துக்கொண்டு போனுர்கள் அப்பால் சிதம்பரத்தான் தனக்கா சம்மதிக்கு [1] இருபதினுயிரம் ரூபாய் கொடுக்கிறேமென்று உங்கள் ரசீதுவேண்டுமென்று சொன்னுன்.

அந்தபடிக்கு பாரிசில் எழுதிவித்து பாரீசு மோகரு பண்ணி அனுப்பி பணத்தை அனுப்பச்சொல்லி எழுதியனுப்புகிறேனென்று சொல்லிப்போட்டு அனுப்புவித்துக்கொண்டு ஊரை வந்தேன் இந்தனுள் கேள்விப்பட்ட சேதி என்னவென்றுல்: தேவனும்பட்டணம் குவர்னர் மேஸ்தர் பிளேயருக்கு (Flayer) நாசர்சங்கு சிரோப்பா வந்து அதை பல்லக்கின பேரிலே வைத்து திருப்பாதிரிப்புலியூரெல்லாம் சுற்றி தேவனும்பட்டணமும் பிரதக்ஷணம் வந்து பீரங்கிப்போட்டு வாங்கிக்கொண்டானென்று மேஸ்தர் கோப்பு (Cope) என்கிறவனும் முன்னூறு சொல்தாதுகளும் ஆயிரம் சிப்பாய்களும் திருச்சினுப்பள்ளி கோட்டையிலே போயிருக்கிறுர்களென்றும் கோட்டையிலே இங்கிலீஷ்காரர் கொடிபோட்டுக் கொண்டு இருக்கிறுர்களென்றும் மமுதல்லிகான் தன்வகை சிப்பாய்களும் தானுமாய் அவர்களுடனே கூட இருக்கிறுர்களென்றுப்போலேயும் இப்பவும் மருந்து குண்டு துப்பாக்கிகள் சாமான்கள் எல்லாம் போய்கொண்டிருக்கிறதென்றும் இது முதலானசேதி கேட்கப்படுகிறது இனிமேல் என்னமாய் நடக்குமோ அறியவேண்டியது.

இந்தனுள் பகலுக்கு மேலாக மொறட்டாண்டி சாவடியிலே இருந்து ஒட்டகம் நபாபு காகிதம் கொண்டுவந்து வைத்துக்கொண்டு இருக்கிறுனென்று துரையவர்கள் சேவகன் வந்து மதனுந்த பண்டிதனை அழைத்துப்போய் காகிதம்படித்துப்பார்த்து பாரீசு காகிதம் கொண்டுவந்து இராத்திரிக்கு படித்துக்காண்பித்து சொன்ன வயணம்: சந்தாசாயபு தன் சொஸ்தமாய் காகிதமெழுதியனுப்பினுன் அதிலே யெழுதியிருந்த

[1] இங்கிலீஷ் புஸ்தகத்தில் 25000-ம் என எழுதியிருக்கிறது

வயணம் : இளவாஞ்சூர் வாலிகொண்டாபுரம் றஞ்சன் கடை மொகத்துமா உசேன் சாயபு தாயார் குமாரன் படேசாயபு இரண்டு லக்ஷத்து ஐம்பதினாயிரம் ரூபாய் ரொக்கத்திலே கொடுக்கத்தக்கதாக தீர்த்துக்கொண்டார்களானபடியினாலே தஞ்சாவூர் மொகத்துமா திருக்கிறதும் முசியே துக்கோன் (Duquesne) வழியிலே விட்டால் . பணமும் உயர்ந்து ரொக்கமாய் வரும். ஆதலால் தஞ்சாவூர் மொகத்துமா முசியே துக்கோன் (Duquesne) மாரிபத்திலே தீர்க்கச்சொல்லி திட்டம் பண்ணினேன். நீங்கள் முசியே துக்கோனுக்கு (Duquesne) எழுதுகிற காகிதத்தில் தஞ்சாவூர் மொகத்துமாவின் விஸ்தாரமாய்கூட வர பேசி தீர்த்துப்போடச்சொல்லியும் இல்லாவிட்டால் அதற்கு எந்த சந்தி கோட்டையின் பேரிலே பண்ண வேண்டுமோ அந்தபடிக்கு சேகரம் பண்ணச் சொல்லி எழுதியனுப்பச்சொல்லியும் ஆயிரம் துப்பாக்கி அதனுடைய பத்திரி முதலான காடுதாசுகூட குதிரை சுவர்களுக்கு கொடுக்கவேண்டியிருக்கிறது. அனுப்பச்சொல்லியும் காரைக்காலுக்கு ஜாகீர் கொடுக்கிற திருநல்லாறு மாகாணமும் கோட்டச்சேரி மாகாணமும் பின்னை ஒரு பேர்விளங்கான் மாகாணமும் இதுகளுக்கு நானிப்போ இனம் பர்வானா எழுதியனுப்பினேன். இனிமேல் தஞ்சாவூர் மொகத்மா பைசலான உடனே ராஜா கையிலேயும் எழுதிவாங்கி அனுப்புகிறேனென்றும் நாவாப்பு இத்து மொதீன்கான் மாரிபத்தில் இரண்டு மூன்று மொகத்துமா தீர்ந்த தெல்லாம் தான் பத்துப் பணம் சுத்திக்கொண்டு அப்பால் அற்ப சொற்பமாய் தீர்த்து போகிறபடியிலே அந்தப்படி ஒத்துக்கொள்ளாவிட்டால் நமக்கும் அவருக்கும் மனஸ்தாபம் வருகிறதானபடியினாலே முசியே துக்கோன் (Duquesne) மார்பத்தில் நடந்தினால் ஒருத்தரும் பேசார்களானபடியினாலே முசியே துக்கோன் (Duquesne) வசம் பண்ணினேன் என்னும் எழுதியிருந்ததாம் இந்த சேதி எல்லாம் கேட்டு இதற்கு பதிலுத்தாரம் நாளையதினம் எழுதுவோமென்று வந்த காகிதத்தையும் காரைக்கால் ஜாகீர் பர்வானாவையும் உமக்கு படித்துக்காண்பித்து காலையிலே மறுபடி கொண்டுவரச் சொன்னாரென்றுசொல்லி காகிதமும் பர்வானாவும் படித்துக்காண்பித்து சேதியும் இராத்திரி வந்து மதனாந்த பண்டிதன் சொன்னான்.

### சுக்கில ஞு மார்கழி மீ 4 உக்கு 1749 ஆ தெசாம்பர் மீ 15 உ சோமவாரம்

இற்றைநாள் காலையிலே கோட்டையில் கும்பினிவர்த்தகர் சலவை புடவை பார்வையானபடியினாலே கோட்டைக்குபோன விடத்திலே புடவை பார்வையான பிற்பாடு எத்தனை கட்டாயிற்றென்று சின்ன துரை கேட்க நாற்பத்தொருகட்டு ஆச்சுதென்று கபுறு சொன்னார்கள். அப்போ என்னை பார்த்து செஞ்சியிலிருந்து வந்திருக்கிற பழைய கில்லேதாரன் இந்தவூர்

வர்த்தகர்கள் களவு போச்சுதென்று சொன்னால் திருடனை பிடித்து சவுதாயம் இருநூற்றன்பது வராகன் வாங்கிக்கொண்டு திருடனையும் கண்டித்து பணம் வாங்கி கொடாமல் விட்டுவிட்டானும் அந்த பணம் வாங்கிகொடுத்தாலல்லவோ இரநூற்றன்பது வராகன் ஆயிரம் வராகம் களவு போனதற்கு வாங்கிக்கொள்ள வேணும் ஆயிரம் வராகனுக்கு சவுதாயம் போக மற்றது சேராமல் போனபடியினாலே வாங்கிய சவுதாயப் பணத்தை கொடுத்துவிடச் சொல்லென்று சின்ன துரை சொன்னார். நல்லது அவர்களுடனே சொல்லி அவர்கள் சொல்லுகிற உத்திரம் நாளையதினம் சொல்லுகிறேனென்று சொல்லிப்போட்டு வந்தேன். அப்பால் இந்த சேதி அந்த கில்லேதாரனுக்கு சொல்லியனுப்பினதற்கு அவன் சவுதாயம் கொடுத்து கள்ளனையும் பாளையக்காரனையும் ஒப்பிச்சுக் கொண்டு தனக்கு பணம் சேர்ந்ததென்று ரசீதும் எழுதிக்கொடுத்துப்போடானென்று அவர்கள் குமஸ்தா அய்யன் சாஸ்திரி வந்து மறு கபுறு சொன்னான். இந்த சேதியை நாளையதினம் சின்ன துரைக்கு சொல்லலாமென்று இருக்கிறேன்.

இந்தனாள் பகலுக்கு மேலாக ஸ்ரீ துரையவர்கள் மூன்றரைமணிக்கு வந்தார்கள் என்னை கோட்டைக்கு வரச்சொல்லி அனுப்பினபடியினாலே நானும் கோட்டைக்குப் போனேன். நான் கோட்டைக்கு போன உடனே என்னை பார்த்து நபாபு இராயத்து மொகதீன்கான் ஒருகச்சோறு அவனங்கங்கே இருக்கிற மோகந்துமாக்குள்ளே நான் உள்ளே நுழைந்தும் தான் பந்து பணம் சந்து விசேஷமாய் சுந்திக் கொள்ளுகிறதும அப்பால் கொஞ்ச நஞ்சமாய் தீர்ந்துப்போட்டு சந்தாசாயபுவை அழைத்து மோகத்துமா பைசல் பண்ணினேன், இந்தபடி வாங்கிக்கொள்ளென்றால் அவனுக்கு பத்து பணம் விசேஷமாகவும் கொடுக்கவேணும் அப்பாலும் இவனுக்கு நாசர்சங்கு உத்தியோகம் பாதுசா கொடுத்திருக்கிற படியினாலே இவன் மேலாயிசாரொம்ப அதைத்தொட்டு ஒன்றும் பேசக்கூடுகிறது இல்லை என்று சொல்லி அது கொஞ்சம் தஞ்சாவூர் மோகத்துமாவை நம்முடைய முசியே துக்கோனை (Duquesne) அழைப்பித்து அவன் வசம்பண்ணி இது உமக்கு எப்படி சம்மதியோ அப்படி தீர்த்துப்போடென்று சொல்லி தஞ்சாவூர் வக்கீல் வந்தவர்களையும் முசியே துக்கேன் (Duquesne) அழைப்பித்து இவர்கள் என்னண்டைக்கு வரவேண்டாம். உம்மண்டைக்கு வந்து இராத்திரி பகலாய் காத்திருந்து தீர்த்துக்கொள்ளச்சொல்லி உத்தாரம் கொடுத்தேன். அந்த வக்கீலும் உங்களண்டைக்கு வருவார்கள். உமக்கு எப்படி சம்மதியோ அப்படி தீர்த்துப் போடச்சொல்லி சொன்னேமென்று காகிதமெழுதினது நீயும் பார்த்துக்கொண்டாயே. காரைக்காலுக்கு திருநல்லாறு முதலான மாகாணங்களுக்கு சந்தா சாயபு பர்வானா எழுதி மோகறும் அனுப்பினான்.

இனிமேல் இராஜா கையிலும் சன்னது வாங்கி அனுப்புகிறோமென்று எழுதி னுனே சுவாமி தயவினலே தஞ்சாவூர் மோகத்துமா ஐம்பது லட்சம் ரூபா யாய் தீர்த்தால் சந்தாசாயபு சுகப்பட்டுப் போவான் என்று சொன்னதற்கு சுவாமி தயவு அவர்கள் சுகப்படுகிற காலம் வந்தபடியினலேதான் தாங்கள் தையிரியம் பண்ணி கைப்பிடித்து ஒன்று சொன்னேன். அது மெய்தான் இந்த இங்கிலீஷ்காரர் சென்னப்பட்டணத்திலிருந்து கபிஸ் கோயில் பாதிரி களையும் தமிழர்களாயிருந்த கிருஸ்துவர், சட்டைக்காரர் வகையரு அடித்து வெளியே துரத்தி விட்டு சிறிது பேர்களையும் மேஸ்தர் புஸ்காவேன் ( **Bosquawen** ) சீர்மைக்கு கொண்டு போனுனே இதைத் தொட்டு சீர்மையிலே மறுபடி சண்டையாப்போலே காண்கிறது. மற்ற காரி யம் எது என்னமாய்ப் போனுலும் மதத்தினுடையக் காரியத்திலே சிவனைகூட பாரார்கள் என்று சொன்னுர். ஆனுலொருவேளை கலாபமாய் விட்டாலும் ஆம் என்று சொன்னேன். அதன்பேரிலே இங்கிலீஷ் காரனிப்போ தேவனும்பட்டணத்திலிருக்கிற மேஸ்தர் பிளோயா ( **Floyer** ) கவர்னர் ஒரு காசுபொரான் கோசா. பெத்துருசு ( **Petrus** ) முதலான அரமனைக்காரர் இங்கிலீஷ்காரர் வரவேண்டுமென்று பிராத்தித்தார்களே இங்கிலீஷ்காரர் வந்த பிற்பாடு கொரபெத்தருசு சென்னைப்பட்டணம் போய் சேர்ந்தானே இப்போ வூர் கடக்க துரத்திவிட்டார்களென்றும் சொன் னுர். நானுமப்படிதான் கேள்விபட்டேனென்று சொல்லி பின்னையும் அவர வர்கள் வந்தவர்கள் எல்லாம் சுவராசியம் தோற்றுமல் புரப்பட்டுப்போனுர்க ளென்று கபுறு இருக்கிறது என்று சொல்லிபேசி கொண்டு இருந்து மழை வந்தபடியினுலே புறப்பட்டு மொறட்டாண்டிச் சாவடிக்குப்போனுர்.

**சுக்கில ஞு மார்கழி மீ 5 உ க்கு 1749 ஆ தெசாம்பர் மீ 16 உ அங்காரகவாரம்**

இற்றைனுள் துரையவர்களண்டைக்கு போகாதபடியினுலே வீட்டி லேயிருந்து புவனகிரிபட்டணம் மொகத்துமா சிதம்பரம் மமுது கானுக்கு இசாராதீர்த்து ஷை குமஸ்தா நாராயணப்பனுயகான் கையிலே முச்சிலுக் காக ருசுநாமா வாங்கிகொண்டு முத்தாமியாவுக்கும் நாராயணப்பனுயகான் அந்த சீர்மை நாட்டார்கள் குமஸ்தாக்களுக்கும் விருந்து பண்ணிவைத்து இசாரபட்டாவிலே நான் கையெழுத்துப் போட்டு மமுதுகானுக்கு பதிலுத் தரம் உம்முடைய காகிதபடிக்கு உம்முடைய குமஸ்தா நாராயணப்பனுய கான் கையிலே முச்சிலுகாராக ருசநாமா எழுதிவாங்கிகொண்டு இசாரி பட்டமும் தோற்சீட்டும் கொடுத்து உமக்கு சிரோப்பா வெகுமானமும் கொடுத்தோமென்று யெழுதி நாராயணப்ப நாயகன் கையில் கொடுத்து அனுப்புவித்தேன் மற்றப்படி ராஜா காரியத்துடனே சேர்ந்தது சந்தாசாயபு அவர்கள் அனுப்பின காரியத்துக்கு பதில் தஞ்சாவூர் மொகத்துமா உடனே

சேர்ந்தது முசியே துகோனேத்தானே (Duquesne) தங்களெழுதினபடிக்கு எப்படி கூட்டிவரபார்த்து [ ]

சுக்கில ஸு மார்கழி மீ 7 உ க்கு 1749 ஆ தெசாம்பர் மீ 18 உ குருவாரம்

இற்றைனாள் காலத்தாலே பாப்புரெட்டியும், சின்ன பரசுராமனும் கூடிக்கொண்டு போனார்களென்று சேதி கேழ்விப்பட்டேன். எப்படியும் அவனுக்கு பொல்லாத காரியம் போய் நல்ல காரியமும், நல்லகாலம் வந்து அவனுடைய குரூர புத்தியையும் விட்டு விட்டு நல்ல புத்தி வந்து சுகப்பட வேணுமென்றே நினைக்கிறேன். ஆனாலவன் பண்ணின பாவத்துக்கு சுவாமி கல்தி தந்தத் போதுமென்றாப்போலே யெண்ணியிருக்கிறேன். ஆனால் சுவாமி யென்னமாய் நினைத்துக்கொண்டிருக்கிறாரோ நானறியேன் இவர்கள் கொண்டுப்போனது இருபதினாயிரம் ரூபாய் இதுமேலே அங்கே என்ன நடக்கிறதோ அறியவேண்டியது. இந்தனாள் பகலும் ராத்திரியுமாய் நாலஞ்சு செவி மழைபேஞ்சுது.

சுக்கில ஸு மார்கழி மீ 8 உக்கு 1749 ஆ தெசாம்பர் மீ 19 உ சுக்கிரவாரம்

இற்றைனாள் காலத்தாலே துரையவர்கள் மொறட்டாண்டி சாவடியி லிருந்து ஞாயிற்றுக்கிழமை ராத்திரிவருகிறாரென்று புகறுவந்தபடியினாலே யும் இவ்விடத்திலே திருவதி சீர்மை நாட்டார்வந்து அவர்கள் பேச்சு வார்த்தை நடக்கிறதினாலேயும் மொறட்டாண்டி சாவடிக்குப் போகாமல் இவ்விடத்திலே நின்றேன்.

இப்போ கேழ்க்கிற சேதி யென்னவென்றால்: நாசர் சங்கு கலபரிக்கு வந்துசேர்ந்தவன் மறுபடி சாத்தறாவின் பேரிலே போனானென்றும் போகச்சே சயிது லசுக்கர்கானே (Saiyed Laskkar Khan) கிஷ்ணைக் கிப்புற மிருக் கிற இதாயத்து மொகதீன்கான் (Hidayat Muhi-ud-din khane) சீர்மை ஆதிவென்னே (Adoni) ராச்சுவோடு (Rayachoti) முதலான சீர்மையெல்லாம் கட்டச்சொல்லி யெழுதியனுப்பிப்போட்டு அப்பாலே போனானென்றும் சயித்து லச்சுக்கர்கான் யென்கிறவன் கிஷ்ணைக்கிப்புறம் வந்து ராச்சுவோடு (Rayachoti) சீர்மையெல்லாம் துவசம்பண்ணி கட்டினானென்றும் யின்னேரத்தைக்கு நாசற்சங்கு யிந்த பிராந்தியங்களுக்கு வருகிற சுபுறு நின்றுயிருக்கிறதென்றும் யிது முதலான சேதிகள் சொல்லக் கேழ்விபடலாச்சுது. கோவளம் (Covelong) அந்த பிறாந்தியங்களிலே வீரமாராசாயென்கிறவன் கோவளந்தாலுக்கா முதலான கிராமங்களிலே தய்யூர் (Taiyur) முதலான அஞ்சாறு கிராமம் சுட்டுப்போட்டு கலாபம் பண்ணுகிறானென்றும் அவனுக்கு இங்கிலீஸ்காரரிடமாய்ச் சேர்ந்து யிருக் கிற மல்ராசா (Malraja) யென்கிறவன் கும்முக்கும் அனுப்பி மனுந்து

குண்டு முதலானது மனுப்பினுனென்று அவன் பெரியப்பனுன கலியாண ராசா (**Kalyana Raja**) அவனைப் பிடிக்கப்போனவனுக்கு பெலன் போதாமல் அவனிருக்கிற மலையைச் சுத்திக்கொண்டு இருக்கிறுனென்றும் முசியே புருனே (**M. Bruno**) தன்னண்டை முப்பதுபேர் சொலுதாருக ளிருக்கிறபடியினுலே அவனை அடக்குவதற்கு பெலன்போதாது யின்னம் நூறு சிப்பாயிகள் மாத்திரம்அனுப்புவித்தால் வீரமராசாவைப் பிடித்து அனுப்பலாமென்றுமிந்தச்சேதி துரையவர்களுக்கு யெச்சரித்து சீக்கிரமத்துக்கு நூறு சிப்பாயிகளை அனுப்பவேணும் என்று முசியே புருனே என் பேருக்குபிராஞ்செழுத்திலே எழுதின காகிதமும் அங்கப்பிள்ளை யென்பேருக்கு எழுதின காகிதமும் வந்துசேர்ந்து படித்துக்கொண்டு துரையவர்களுக்கு கபுறு சொல்லுவோமென்றுல் மூணும் சாமமான படியினுலே நாளையதினம் போய்ச் சொல்லுவோமென்று நிஷ்கருஷை பண்ணி அப்பால் சாயங்காலம் வண்ணுந்துரைபோய் விசாரித்து அங்கே யிருந்து கெட்டணைக்கூடம் வந்து விசாரிந்துப்போட்டு பாக்கு கிடங்குக்கு வந்து யெட்டுமணிநேரம் கும்பினீர் கிடங்குக்குப்போய் தை மீ பிறக்கிறது சாக்கு வந்து சேரவில்லையென்று அவர்களைக் கண்டித்து அப்பால் வீட்டுக்குப்போனேன். ஆனுல் சாயங்காலம் பாக்கு கிடங்கிலே யிருக்கச்சே துரை கணக்கு ரங்கப்பிள்ளை நம்பி முத்தயன் வந்து சிதம்பரம் தணக்கா சம்மதி இருபதினுயிரம் ரூபா வந்திருக்குமே அதை உங்களைக்கேட்டு வாங்கிக்கொள்ளச் சொன்னுரென்று வந்து கேட்டான். அதற்கு நான் சொன்னது ரசீதுகூட போயிருக்கிறது நாளை நாளை நன்றையிலே வருமென்று சொல்லிப்போகச் சொன்னேன். போகிறவன் என் கையிலே பதினுயிரம் ரூபா மட்டுக்குமிருக்கிறது. அதைக்காரைக்காலுக்கு அதை அனுப்பச்சொன்னுர். அது நாளையதினம் அனுப்பவேணும் அப்பால் சிலவுகளுக்கு வேணுமென்று சொன்னுர் அதற்கென்ன இரண்டு நாளையிலே வந்துசேரும் உம்முடைய சிலவுக்கும் உதவுமென்று சொல்லிப் போகச்சொன்னேன். அப்போ மதனுந்த பண்டிதன், திருமலைராயன் முதலானபேர் கூட யிருந்தார்கள் யிதல்லாமல் யிந்தனுள் சூரிய உதயத்துக்கு துரை கணக்கு ரங்கப்பிள்ளை வந்து வில்லிய நல்லூர், பாகூர் வகையரா கும்பினீர் சாகீர் கிராமங்கள் நான் விசாரிக்கிறதை விட சும்மாயிருந்தால் துரை கணக்கப்பிள்ளையென்று ஒரு மேம்பாடும் பாமுமிருந்ததா யிப்போ சவரிமுத்துமுண்டி சேருவைக்காரனுக்கு காவல் கொடுத்ததைத் தொட்டு அவன் துரைத்தனம் பண்ணுகிறபடியினுலே நான் அமுல் பண்ணுகிறது பெரிய வெழ்கக்கேடாயிருக்கிறதென்று அவன் பண்ணுகிற சோராவரியும் யென்னை தன் சேவகனைப்பார்க்க பீடாயென்றி அவன் பண்ணுகிற ஆட்டிகளும் அநேகவிதமாய்ச் சொல்லி குடிகள் நிற்கிறதில்லை: அவன் பண்ணு

கிற லூட்டிகளிதுகள் பிரபுவினுடனே சொன்னால் ஒருக்காலும் மனம் பொறார். அம்மாளுடைய ஈாடையினாலே சொல்லக் கூடுகிறதில்லையென்று அது அதுகள் வயணமாய்ச் சொன்னது பத்து காகிதமெழுதினாலும் முடியாது. அப்படியெல்லாம் சொல்லி கடைசியிலே கண்ணீர் விட்டுபோறோமென்று அழுது நானுவிட்டுவிட்டாலும் போராட்டம் யிருந்தாலும் யென் பேச்சு நடக்கிறதுமில்லை கிராமங்கள் சாகுபடியாகிறதுமில்லை. அதெதினாலேயென்றால் ஆமிலாயிருக்கிறவன் பேச்சு யெண்ணமாய் நடந்தாலல்லவோ கிராமங்களிலேயிருக்கிற நாட்டார் குடிகள் பயந்து சொற்படிக்கு கேட்டு பயிர்சாகுபடி விஸ்தாரமாய் நடக்கும்யிவன் பண்ணுகிற அவமரியாதையைத் தொட்டு குடியானவன் கூட சட்டப்பண்ணுகிறதில்லாமல் தீர்ந்ததுயென்று சொன்னான். அதற்குப் போதரவாய்ச் சொல்லிப்போகச் சொன்னேன்.

**சுக்கில ஞு மார்கழி மீ 9 உக்கு 1749 ஆ டெசாம்பர் மீ 20 உ சனிவாரம்**

இற்றைநாள் காலத்தாலே அப்புமுதலி துரையவர்கள் அல்மூசுபண்ணி ஒன்பதுமணிக்கு வந்து சேருகிறாரென்று சொல்லி அனுப்பி கூலிக்காரர்களையும் காப்பிரிகளையும் அனுப்பிவிக்கச்சொல்லி நயினாருக்கு தாக்கீது பண்ணச்சொல்லியும் கபுறு சொல்லி அனுப்பினபடியினாலே பாக்கு கிடங்கிலே பத்துமணிமட்டுக்கும் காத்திருந்து பிற்பாடு சாயங்காலம் வருகிறதாய் கபுறு வந்ததென்று சொன்னார்கள். நேற்றயதினம் கோவளாத்திலிருந்து ( **Covelong** )மதாம் துய்ப்பிளேக்சுக்கு ஒரு காகிதமும் எனக்கு வொரு காகிதமும் முசியே புருனோ அனுப்பினான். அதை யிந்தநாள் காலத்தாலே பாசுராமன் கையிலே கொடுத்து மொறட்டாண்டி சாவடிக்கு அனுப்பிவித்துப்போட்டு நானும் பனிரெண்டு மணிமட்டுக்கும் யிருந்து அப்பால் வீட்டுக்கு சாப்பிடுகிற வேளைக்குப்போனேன். மொறட்டாண்டி சாவடியிலேயிருந்து மேசைப்பலகைகள் முதலான குசினி தட்டு முட்டுகள் - சமஸ்தமும் துரைவீடுவந்து சேர்ந்தபடியினாலே சாயங்காலம வந்து சேருகிறதுக்கு அனுமானமில்லை துரையவர்களிடத்திற்கு வந்திருந்து முன் அற்பிசி மீ 24 உ புதவாரம் ராத்திரி மொறட்டாண்டி சாவடி போனது யின்று சாயங்காலம் வருகிறபடியினாலே நாற்பத்தஞ்சு நாள் சரி பார்த்து சில்லரை வெள்ளைக்காரர்கள் அங்கே போயிருந்தவர்கள் சாமான் தட்டு முட்டுகள் சமஸ்தமும் வந்தது. இந்தநாள் ராத்திரி பீறுலு பண்டிகை தெரு சுத்தி வருகிறது. நாளைக்காலத்தாலே போய் முழுகிப்போட்டுவந்து தீத்துப்போடுகிறது என்று துலுக்கர் சொன்னார்கள். இந்தநாள் சாயங்காலம் அஞ்சரை மணி வேலைக்கு துரையவர்கள் மொறட்டாண்டியிலே யிருந்து வீட்டே வந்து சேர்ந்தார் அவருடனே கூட முசியே பிரியேல் (**M. Friai**) கூடவந்தார். வரச்சே என்னை அழைக்கச் சொன்னார். சேவுகன் வந்தழைத்த

வுடனே மதனுந்த பண்டிதனையும் கூட அழைத்துக் கொண்டுபோனேன் போனவுடனே சந்தாசாயபு அனுப்பின காகிதத்தைக் கொடுத்து என்னை படித்து சொல்லென்றார் நான் மதனுந்த பண்டிதன் கையில் கொடுத்துப் படிக்கச் சொன்னேன். அவர் படித்துச் சொல்லுகிறதுக்குள்ளே துரையவர் கள் என்னைப்பார்த்து சொன்னது. சந்தாசாயபு அவர்களும் முசியே துக்கேன் **(M. Duquesne)** முதலானவர்களும் தஞ்சாவூர் கோட்டையை சுத்திக் கொண்டார்கள் யிதல்லாமல் சந்தாசாயபு முசியே துக்கேனுக்குச் சொல்லி காரைக்காலுக்கு திருநள்ளாறு முதலான மாகாணங்கள் சாகீர் யெழுதிக் கொடுத்தோமே அதற்கு தஞ்சாவூர் ராசாவினுடைய பர்வானு ஆகிறமட்டுக்கும் தோறணம் வைக்கவேண்டாமென்றல்லோ முன்னாலே சொன்னேன். யிப்போ காரைக்கால் கொமாந்தாம் முசியே ரிஷிக்கு **(M. de Riche)** எழுதியனுப்பிவித்து அந்த திருநள்ளாறு மாகாண முதலான மாகாணங்களெல்லாம் உங்கள் தோறணங்கட்டிவித்துக் கொண்டு உங்கள் வசம் பண்ணிக் கொண்டு யிப்போ சந்தியாய் கார் அறுப்பு நெல் போர் கட்டியிருக்கும் அதுகளெல்லாம் எடுத்துக்கொள்ளலாம். ஆனபடியினாலே சீக்கிரமத்துக்குத் தோறணங்கட்டச் சொல்லி யெழுதியனுப்பச் சொன்னபடிக்கு முசியே துக்கேன் முசியே ரிஷிக்கு எழுதியனுப்பினான் அந்தப்படிக்கு நாற்பது கிராமம் தோறணங்கட்டினானென்று சொன்னார் போன வருஷம் நமக்கும் அடமானம் பண்ணியிருந்த திருநள்ளாறு மாகாணமும், போலகம் மாகாணம் இங்கிலீசுக்காரர் புதுச்சேரியைச் சுத்திக்கொண்டு சண்டை போடச்சே இருபத்தையாயிரம் பொன் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து விட்டு திருநள்ளாறு மாகாணமும் போலகம் மாகாணமும் கைபற்றிக்கொண்டார்களே யிவ்வருஷம் சுவாமி அதுவும் பின்னையும் கோட்டுச்சேரி முதலான மாகாணம் கூட சாகிராய் யென்றென்னைக்கும் நடக்கத்தக்கதாய் தயவு பண்ணினுரென்றும் உம்முடைய அதிருஷ்டபலன் ஒருத்தருக்கும் யிந்த இந்தியாவிலேயும் ஏரோப்பாவிலேயும், கண்டதில்லை யென்றும் ஸ்தவுத்தியமாய் யெப்படி சொல்லவேணுமோ அப்படி சொன்னேன். அதிலே மதனுந்த பண்டிதர் சந்தாசாயபு அனுப்பின காகிதம் படித்துப்பார்த்து சொன்ன வயணம் முன்னாலே காரைக்காலுக்கு சாகிராய் திருநள்ளாறு முதலான மாகாணங்கள் யினும் பர்வானுபண்ணி உங்களண்டைக்கு அனுப்பினது வந்து சேர்ந்திருக்குமே யிப்போவும் முசியே துக்கேனுக்குச்சொல்லி அந்தக் காரைக்காலின் கீழேயிருக்கிற திருநள்ளாறு முதல்லான மாகாணங்களை யெல்லாம் உங்கள் தோறணங்கட்டிக்கொண்டு உங்களாதீனம் பண்ணிக் கொள்ளச்சொல்லி காரைக்கால் கப்பித்தானுக்கு யெழுதி யனுப்பச்சொன்னேன். அந்தப்படிக்கு முசியே துக்கேன் யெழுதியனுப்பினார். அவர்களும்

தோறணங்கட்டி பர்கானுக்கள் சுவாதீனம் பண்ணிக்கொண்டு யெழுதி யிருப்பார்களே எதினாலே யித்தனை துவறையாய் தோறணங்கட்டச்சொல்லி எழுதியனுப்பச் சொன்னேனென்றால் சோழமண்டலமெல்லாம் யிப்போ கார் அறுப்பு அறுத்துப் போர்கட்டியிருக்கிறதும் அறுக்கிறதுமாயிருக்கிறபடி யினாலே யிப்போ தங்களுக்கு விட்ட திருநள்ளாறு முதலானமாகாணங் களிலே ரெண்டு லட்சம் ரூபாய்க்கு நெல் உங்களுக்கு அகப்படும் அதைத் தொட்டு சீக்கிறம்த்துகது தோறணங்கட்டி மாகாலே சப்திபண்ணிக்கொள் ளச்சொல்லி யெழுதச்சொனனது. யிப்போ உங்களுக்கு காரைக்காலுக்கு விட்ட சாகீரைத்தொட்டு ரெண்டு லட்சம் ரூபாய் ஆதாயம் வருமென்று யிதல்லாமல் நாங்கள் தஞ்சாவூர் கோட்டையைக்கிட்ட இரண்டு நாழிகை வழியென்றச்சே யிறங்கினோம் சுவாமி தயவினாலே ராச்சியம் யிப்போ கார் அறுப்பு அறுத்து தானியம் போர்கட்டி யிருக்கிறதும் பிசானம் பயிர்கள் தை மீ பிறந்தாப்போலே அறுப்புமானபடியினாலே வெகு பணம் யிருபது நாளையிலே அகப்படும். மானோசி அப்பாவை தஞ்சாவூர் ராசா சண்டை பண்ணவேண்டாம் அவர்கள் கேட்ட பணம் கொடுத்து விடுவோமென்று யென்னமாயச் சொன்னாலும் இராசாவினுடையப் பேச்சைத்தட்டிப் போட்டு நான் சண்டை பண்ணுவேன் என்று எங்களுக்கு யெதிர் பாளையம் போட்டுக்கொண்டிருக்கிறான் ஆனால் மானோசி அப்பா மெத்த சின்ன மனுஷனானபடியினாலே ராசாபேச்சைகூட தட்டிப்போட்டு அவனுக்கு பொல்லாத காலமான படியினாலே உங்கள் மத்தந்து யிருக்குதென்று அறிந்திருந்து சண்டைக்கு யெதிரே வந்து நின்றான் ஆனால் சுவாமியுடைய தயவினாலே தஞ்சாவூர் கோட்டையை வாங்கிக் கொண்டு அந்த முபார்க்கு பாதி சந்தோஷ கபுறு உமக்கு உடனே அனுப்பு கிறோம் இப்பவும் முசியே துக்கேன் முதலான பேர்களுக்கு நீங்கள் இரண்டு மாசத்திய சம்பளம் முன்னே கொடுத்தீர்களல்லோ யிதல்லாமல் முசபர்கா னுக்கு ஒரு மாசத்திய சம்பளம் குடுத்தீர்களே யிந்த மோகர் மாசம் பதினேந் தாம் தேதிக்கு முசியே துக்கேன் முதலான வெள்ளைக்காரருக்கு சம்பளம் கொடுக்கவேணும். யிதல்லாமல் முசபர்கான் சமெத்துக்கும் ஒரு மாச சம்ப ளமும் கொடுத்தால் தஞ்சாவூர் பணம் வர யின்னம் யிருபதுநாள் செல்லும் அது வந்தவுடனே யிந்த பணம் அலாயிதாயிங்கேதானே முசியே துக்கேன் வசம் பண்ணிப்போடுகிறேனென்று பின்னையும் உபசாரமாய் யெழுதியிருந்த காகிதத்தை படித்துச் சொன்னார்.

அந்தபடிக்கு துரையவர்களுக்கு சொன்னதுக்கு வெள்ளைக்காரருக்கு மாத்திரம் சம்பளம் இருபத்தையாயிரம் ரூபாயும் நான் கொடுத்து அனுப்பி யிருக்கிறேன். முசபர்கான் சிப்பாயிகளுக்கு அவன் இருபது நாளும்

பொறுத்து பணம் வந்தவுடனே வாங்கிக்கொள்ளுவானென்று சொன்னார். அப்பால் முசியே துக்கேன் எனக்கழுதின காகிதத்திலே தஞ்சாவூர் சீர்மை எங்கே பார்த்தாலும் கோயில்களும் வூருகள் தெருவொழுங்கிருக்கிற நேத்திகளும் சாலைகளும் தோப்புகளும் பயிர்களுமிருக்கிற நேர்த்தி வரோப்பு ராச்சியத்திலே கூட யில்லையென்று எழுதினான். அந்தனை நேர்த்தியான சீர்மையா வென்று கேட்டார். மெத்த நேர்த்தியான சீர்மை எங்களுக்குள்ளே யிந்த ராச்சியத்துக்குள்ளே சோழமண்டலத்தைப் போலே ஒந்த ராச்சியம் யிந்த ஆயிரம் இரண்டாயிரம் காதவழிக்குள்ளேயும் யில்லை. இந்தப் பூமியிலேயே யில்லையென்று சொல்லுகிற வாடிக்கை யென்று சொல்லி திருச்சிராப்பள்ளி நாற்பத்தென் காதவழி என்றுபேர். அன்பது லட்சம் யெடுக்கிறது சிறிது நாள் கோடி திரவியம் யெடுத்நது. யிப்போ யிருபத்தஞ்சு லட்சம் முப்பது லட்சம் யெடுக்குது.

தஞ்சாவூர் சீர்மை பன்னிருகாதவழி கோடி திரவியம் யெடுத்தது ஆனபடியினாலே யிந்த ராச்சியத்துக்கு சமானமான ராச்சிய மில்லையென்று பேர் யென்று வழக்கம் யிதல்லாமல் வூரெல்லாம் தேருகள் ஒடத்நக்கதா ஒழுங்கு தென்னமரச்சாலைகள் வைத்து வீடுகள் வரிசையாய் கட்டி யிருக்கிற நேர்த்திகளும் கோயில்கள் மண்டபங்கள் அக்கிராகரங்கள் அங்கங்கே பந்தல்கள் போட்டிருக்கிற நேர்த்திகளும் அதுகள் பார்த்து சந்தோஷப்படவேணுமே அல்லாமல் சொல்லுகிறதிலே தெரியாது யிதல்லாமல் காவேரி ஆத்துப்பாய்ச்சல் கிராமம் பிறத்திக்கிராமங்களுக்கும் ஒவ்வொரு வாய்க்கால் ரெவ்வண்டு வாய்க்கால் அந்த வாய்க்கால்களிலே மாரளவு தண்ணீர் ஓடிக்கொண்டேயிருக்கும் நூறடி நிலமானாலும் விறுதாவாயிராது எல்லாம் பயிரிட்டுயிருக்குமே அல்லாமல் சும்மாயிராது. தஞ்சாவூர் சீர்மை உள்ளங்கை போலே நீர்மட்டம் போட்டு பிறிச்சாப்போலே எங்குஞ் சமனாயிருக்கிறதே யல்லாமல் மேடுபள்ளமாயிராது 'என்று சொன்னதின்பேரிலே முசியே பிரியேல் நீ பார்த்தாயாவென்று கேட்டார். ஆனால் காரைக்காலுக்குப் போகும்போது சிறிதுகள் பார்த்தேன் மத்தது யிந்த ராச்சியத்து சாடை வழக்கமாய் யென்னேரம் கேழ்விப்பட்டுக்கொண்டு யிருக்கிறபடியினாலே யிதுகளெல்லாம் தெரியுமென்று சொன்னேன் ஆனால்யிப்போ புதுச்சேரிக்கு விட்டசாகீர் வில்லியநல்லூர் முதலான பர்காணுக்களும் காரைக்காலுக்கு விட்ட திருநள்ளாறு முதலான மாகாணங்களும் புதுச்சேரி கோட்டை சிலவும் காரைக்கால் கோட்டை சிலவும் தானுமே யினிமேல் கும்பினியாருக்கு பணம் போடக் கவையில்லையென்று சொன்னார். அதற்கு நான் புதுச்சேரி காரைக்கால் அறுபதினாயிரம் வராகன் வருஷத்துக்கு செல்லப்போகுது. யிது அதனங்காணுமென்று சொன்னதுக்கு மூனு லட்சம் ரூபாய் காணுமாவென்று கேட்டார் சற்றேறக்குறையக்காணும்யென்று சொன்னேன் அதின்

பேரிலே முறட்டாண்டிச் சாவடியிலே யிருந்தேனே காத்தினலே தலைநோவு விடாமல் போமுடினபடியினலே வந்துவிட்டேன் இப்பவும் தலைநோவு பொறுக்கப்படவில்லையென் தலையை தொட்டுப்பாரென்று சொன்னர். நானும் முசியே பிரியேலும் தொட்டுப்பார்த்து கொதிக்குது மெய்தானென்று சொல்லிக்கொண்டிருக்கச்சே சந்தாசாயபுக்கு அன்பது லட்சம் ரூபா அகப்படும் தஞ்சாவூரிலேயென்று சொன்னதுக்கு துரை சொன்னர் அதனமா வாங்குவாரென்று நான் சொன்னேன். அதில்ல முசியே பிறியேல் யிந்த மழை பேஞ்சது எப்படி என்று கேட்டார். துரையிருந்து வரகு கேழ்வரகு முதலான பயிர்களுக்கு மெத்தநேத்தி யென்று சொன்னர், நானிருந்துக்கொண்டு யிப்படி கரை துரைபோக்கில் பேஞ்சதாய்ச் சொல்லுகிருர்கள். மேற்கே யிவ்வளவு இல்லையென்று சொல்லுகிருர்களென்று சொன்னதற்கு நாங்கள் பார்த்தோமே செஞ்சி அந்த விடங்களிலே மழைக்காலிறங்கி நன்றுய்ப் பேஞ்சுது யென்று துரையவர்கள் சொன்னர்கள். யிதற்கு முன் வந்தவுடனே தணக்கா சம்மதிப்பணங்கள் வரயில்லை ஆயிரம் இரண்டாயிரம் யிப்படி வருதென்றும் சிதம்பரந்தானிரு பதினயிரம் ரூபாய் அனுப்புகிறேமென்று ரசீது அழைப்பித்துக்கொண்டவனின்னம் யேன் ரூபாய் அனுப்பயில்லையென்றும் அவனை சோத்துக்குப் போகாமல் மறித்துப்போட்டு பணத்தை வாங்கச்சொல்லப் போகாதாவென்றும் கண்டிப்பாய்ச் சொன்னர். அதற்கு நான் வெகுதூரம் கச்சேரியிலே மறித்துப்போட்டுப் பசித்துண்ண உங்கள் நிமித்தியம் யெழுதுகிற கண்டிப்பும் அவன் பண்ணுகிற அஸ்தியும் சாடையாய் சொல்லி நாளை நன்றைக்குப் பணம் வருமென்று சொன்னேன். ரூபாய் புதுச்சேரி ரூபாய் ஆற்காடு ரூபாய் தகருறுகூடச் சொல்லி இரண்டாயிரம் ரூபாய் திருக்கோவிலூர் விழுப்புரம் வந்து செலுத்தின சேதியும் சொல்லி யிப்போ கேயர் அங்காம் தை மீ பிறந்தாலே அல்லாமல் பணம் விஸ்தாரமாய் வாராதென்று யிதுமுதலான பேச்சுகள் சொல்லி அதின் பேரிலே முறப்பலனை சந்தாசாயபு மனுஷர் கொண்டுபோனபடியினலே நமக்கு தணக்கா ஆன முதலாய் ஒண்ணரை மாசமாய் பிடித்து கேயர் அங்காம் வேளையிலே பணம் அறுவாகமாட்டாது. கொஞ்சம் நஞ்சம் வருகிறது சிப்பந்தி சிலவுக்கும் யிங்கே வருகிறதுமா, நான் சொல்லக்கவையில்லை. வில்லியநல்லூர், பாகூர் பற்காறுவிலோ உங்கள் கணக்கப்பிள்ளையிருந்து பணம் அறுபண்ணி நாளுக்கு நாள் உங்களுக்கும் கபுறு சொல்லுகிறதிலே தெரியுமென்று, யிதுமுதலான வயணங்கள் விஸ்தாரமாய்ச் சொன்னேன் அது கேட்டுக்கொண்டு சும்மாயிருந்தார். அப்பால் மொறட்டாண்டிச் சாவடியிலிருந்து மதாமும் மற்றுமுள்ள வெள்ளைக்காரர்களும் வந்தார்கள் நான் அனுப்பிவித்துக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்து ஒன்பது மணிக்கு வீட்டுக்குப்போனேன்.

இந்தனாள் சாயங்காலம் முத்துமல்லாரெட்டி துரை அவர்களுக்கு ஒப்புக்கொண்ட நாற்பதினாயிரம் ரூபாய்க்கு ஆக துரையவர்கள் கணக்கன் ரங்கப்பிள்ளை ஷை தம்பி முத்தய்யன் வசத்திலே சின்ன பரசுராமன் முத்துமல்லாரெட்டி குமாஸ்தா பாப்புரெட்டி ஷை சாராப்பு அபரஞ்சிசெட்டியிவர்கள் யிருபதினாயிரம் ரூபாய் கொண்டுபோய் ஒப்பித்தார்கள். கூட ஒப்பித்த சாராப்பு வந்து சொன்னான். அவர்கள் குஞ்சு குழந்தைகள் நாளை பகலைக்கு மேலாக விடுதலையாய் ஊருக்குப் போகிறதாய் டோலிகள் கூட அமர்த்தி தயார் பண்ணினார்களென்றும் கபுறு வந்து சொன்னார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் துரையவர்கள் வீட்டுக்குப்போய் துரையவர்களைக்கண்டு பேசிவரச்சே ஷை கணக்கு ரங்கப்பிள்ளை கணக்கு முடிப்பும் வைத்திருக்கிற கிடங்கிலே அஞ்சாறு பேர் காசுக்காரர்கள் திராசுப் போட்டுக்கொண்டு நிறுக்கிற சத்தம் கேழ்க்கப்பட்டது. இதல்லாமல் சின்ன பரசுராமன் வீரராகுவன் முதலான பேர் கும்பலாகவும் யிருந்தார்கள் அதுவும் தாக்கலாய் சரிப்பட்டது என்று எழுதிவைத்தேன்.

### சுக்கில ௵ மார்கழி மீ 10 உ க்கு 1749 ஆ டிசம்பர் மீ 21 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்களிடத்துக்குப் போனவிடத்திலே அவர் கோவிலுக்குப் போய் பூசை கேட்டுவந்து கப்பே குடித்து ஆனவுடனே யென்னை அழைத்து சந்தாசாயபு காகிதம் கொடுத்து வந்ததே அந்த காகிதத்துக்குப் பதில் உத்தாரமெழுதவேணுமே அந்தக் காகிதத்திலே யென்ன யெழுதியிருக்குதென்று கேட்டார். காரைக்காலுக்கு கிராமங்கள் திருநள்ளாறு முதலான மாகாணங்கள் முன் பர்வானா யெழுதிக்கொடுத்ததை தோறணம் கட்டிக்கொண்டு சுவாதீனம் பண்ணிக்கொள்ளச்சொல்லி யெழுதி அதிலே இரண்டு வருஷம் ரூபா உங்களுக்கு அதிலேயிருக்கிற பலனிலே சந்திப்பியுமவாமென்று யெழுதியிருக்கிறதென்று சொன்னதுபோல் அதற்குப் பதில் உத்தாரம் யெழுதச்சொன்னது பர்வானாவும் வந்து சேர்ந்தது தோறணங்கட்டி சுவாதீனம் பண்ணிக்கொண்டோம் ஆனாலும் உங்கள் பர்வானா மாத்திரம் போதுமா? தஞ்சாவூர் மோகத்துமா பைசல் பண்ணிக்கொள்ளச்சே இது ஒரு சம்மதியாய் வைத்துக்கொண்டு அவர் கைப்பட தஸ்துகம் மொகரும் பண்ணிவித்து இனம் பர்வானா அனுப்பவேணுமென்றும் இரண்டுவருஷம் ரூபாய் மட்டுக்கும் அந்தக்கிராமங்களிலே சந்தியாயிருக்கிற பலனிலே அகப்படுமென்று எழுதினீர்களே அந்த மட்டுக்கும் அகப்படாதென்று எழுதச்சொன்னார் அப்பால் தஞ்சாவூர் கோட்டை வாங்கியவுடனே சந்தோஷ கபுறு எழுதுகிறோமென்று எழுதினீரே அதற்கு உம்முடைய மனோரதப்படிக்கு சுவாமி தயவுபண்ணி வைக்கவேணுமென்று சுவாமி

யைப் பாரதது பிரார்த்தித்துக் கொள்ளுகிறுமென்று யெழுதச் சொன்னுர். அப்பால் வெள்ளேக்காரருக்கு கொடுக்கிற சம்பளத்துடனே சேர்ந்தது யிப்போ பணம் கடிசையாயிருக்கு மென்றுயெண்ணி பேற்கனவே தானே அவர்களுக்கு நான் சம்பளங்கொடுத்து அனுப்பிவித்தேன். ஆனல் மூசபர்சான் சமேத்து சிப்பாயிகளுக்கு மாத்திரம் நீர் • கொடுக்க வேணும் ஆனல் யிருபதுகூலியிலே பணம் வருமே அந்த மட்டுக்கும் பணம் பொறுத்து வாங்கிகொள்ளச்சொல்லி தாக்கீதுபண்ணிவைக்கிறேம் நீங்களும் யெவ்வளவாகிலும் கொடுத்துவர வேணுமென்றும் ஆனல் நான் உங்கள் காரியத்திலே நல்ல மனதுடனே சகல விதத்திலேயும் நடத்துகிறதற்குள்ளே தாக்ஷிபண்ணவில்லே. நீங்கள் தணக்கா பண்ணின சீர்மையிலே யிந்த மட்டுக்கும் பதினயிரம் ரூபா மட்டுக்கும் சென்னது யென்றும் யெழுதச்சொன்னுர் அப்பால் உபசாரமாய் எழுதி அனுப்பிவிடென்று சொன்னுர். அதன் பேரிலே நான் தங்கசாலே குத்தகை வாங்கி ரூபா ஒன்றேகால் பணவிடை சாசினி வைத்து புதுச்சேரி மாத்து நிறைபடிக்குச் பரியாய் போடச்சொல்லி உத்தரவிட்டீர்களே. அந்தப்படிக்கு போடுகிறுர்கள். அதிலே பத்து ரூபா வந்தது, அந்த ரூபாய் ராச்சியத்திலேயெல்லாம் யெடுக்கிறதேயல்லாமல் யிதற்குமுன்னே போட்ட மாத்து குறைச்சல் ரூபா எடுக்க கவையில்லே யென்று சீர்மை யெல்லாம் தாக்கீது பண்ணிவைக்க வேணுமென்று யெழுதி நாலு ரூபா மாத்திரம் கொடுததனுப்புகிறேனென்று சொன்னேன். அந்தப் படிக்கு யெழுதிவித்து ரூபாயும் கொடுந்து அனுப்பச்சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்தப்படிக்கு காகிதமுமெழுதி நாலு ரூபாயும் கொடுத்து வந்த காகிதப் பயணம் பண்ணி அனுப்பிவித்தேன். அப்பாலிந்த ரூபாயிலே பத்து ரூபா முசியே மேர் (**M. Le Maire**) கையிலே கொடுத்து புதுச்சேரி தங்கசாலேயிலே போடுகிற யிடை மாத்து சரியாயிருக்கிறதாவென்று பார்த்து வரசொல்லி சொல்லுங்கோவென்று கொடுத்தேன். அந்தப்படிக்கு முசியே மேர் கையிலே கொடுத்து அனுப்பினுர். அவன் அஞ்சுரூபாய் பார்த்து வந்து சரிதானென்று சொன்னுன். அதிலே அடையாளம் சூரியனேப்போலே ஒன்று போட்டிருந்தது. அந்த அடையாளம் நீர் போடச்சொன்னபடிக்கு போட்டேனென்று சொன்னதற்கு அதுபார்த்து நல்லது தான் ஆனுலிந்த அகல மிருந்தால் புதுச்சேரி ரூபா பிறசித்தப் படாதானபடியினுலே மாத்துயிடை சரியாய்வைத்து அகல மாத்திரம் சந்தே குறுக்கிப்போடச் சொல்லென்று சொன்னுர் நல்லதென்று சொன்னேன். அந்த அடையாளத்தை முசியே மேரிருந்து கொண்டு புதுச்சேரி ரூபாய் அடையாளம் போட்டு அதிலே ஒரு புள்ளிபோட்டு யிருக்கிறுப்போல யிருக்கிறபடியினுலே புதுச்சேரி ரூபாய் தள்ளப்பட்டதென்று குத்துப்பட்ட தாய்ச் சொல்லுவார்க ளென்று சொன்னுர். அதற்கு துரையிருந்துக் கொண்டு அந்த

அடையாளம் வேறே யிந்த அடையாளம் வேறேயென்று தெரியப் படச்சொன்னார் அப்பால் நான் சொன்னது புதுச்சேரி ரூபாயிக்குச் சரியா யிருக்கிறபடியினாலே அதற்குச் சரியாய் எடுக்கச்சொல்லி தங்கசாலைக்கு உத்தாரங்கொடுக்க வேணுமென்று கேட்டேன். நல்லதென்று முசியே மேரிக்கும் உத்தாரங்கொடுத்து யெனக்கும் காசுக்காரருக்குச் சொல்லச் சொல்லி உத்தாரங்கொடுத்தார். அதற்கு முசியே மேர் யிதற்கு மாத்து குவறயப் போட்டாலோயென்று கேட்டதற்கு நானப்போ தள்ளிப்போடுகிற தாலோ வென்று சொன்னேன். மெய்தானென்று துரை ஒத்துக்கொண்டு உத்தாரங்கொடுத்தார். அப்பால் கும்பினீர் சரக்குகள் யிந்தமட்டுக்கும் கட்டு விழயில்லையே யென்று கேட்டார். நீங்கள் கொடுத்தது நீங்கள் தீர்த்த ரூபாய் விலைப்படிக்கு லட்சத்திருபதினாயிரம் 12000 ர விராகன் கொடுத்தது இதற்கு முன் புரட்டாசி மீ அறுதிக்கு சரக்கு போட்டது நாற்பத்தோரா யிரத்து சிலவானம் விராகன் ஆக இப்போவிழுந்த கட்டு நாலாயிரத்து சில வானம் விராகன் ஆக நாற்பதினாயிரம் விராகன் சரியாய்ச்சென்று யிருக் கிறது முப்பந்து மூவாயிரம் வராகன் மட்டுக்கும் கிடங்கு வண்ணாந்துரை கிட்டனைக்கூடம் கொட்டைத் தர்மீதிகூட கையிருப்பு யிருக்கிறது. ஆக நிலுவை நாற்பது விராகன் மட்டுக்கும் யிருக்கிறது. ஆக நூற்றிருபதுக்கும் கணக்கு பார்த்திருக்கிறது இதறகுப் பிறகு செலுத்திக்கொண்ட லட்சம் ரூபாய்க்கு நீங்கள் சந்தசாயபுக்கு கொடுக்கச்சொல்லி அதற்கு செம்பு யீடு கொடுத்ததுபோக யெண்ணாயிரத்திச் சிலவானம் வராகன் கொடுத்தாலிந்த துகையென்று சொன்னதற்கு அது கணக்கு முசியே கொற்னேயைக் கேட்டுக் கொண்டு செம்பு என் பிரிவுக்கு வந்த விராகன் போக மத்த விராகன் கையிலே கொடுத்து விடுகிறேன் நீங்கள் சரக்கு சுருக்கிலே கொண்டுவந்து போட்டு தீர்த்துப் போடவேணுமென்று சொன்னார் இந்த செம்பு சம்மதி வராகன் யிப்போதான் வருகிறது ஆனபடியினாலே மாசி மீ 30 உக்குள்ளே பதினாயிரம் விராகன் யேறக்குறைய வாங்கின வராகனுக்கு கட்டுப்போட்டு தீர்த்து கப்பலின்பேரிலேயும் யேறிப்போமென்று சொல்லி காங்குப்புட வையோவென்று கேட்டார் முன்னே வாங்கின பணத்துக்கு ஒன்பதினாயிரம் வராகனுக்கு சொன்னுபோச்சுது பிறகு வாங்கின பணத்துக்கு செங்கல் வேணும். அது செம்பு சம்மதியிலே சேர்த்து விட்டதினாலே இப்போதான் செம்பு பணம் வருகிறது. செம்பும் அலபலாயிருக்கிறதைத் தொட்டு போகாம லிருந்து இப்போதான் போகிறது. அதுவும் சேர்த்து சனவரி மீ பிப்ர வரி மீ த்துக்குள்ளே சாடையாய்ப் போட்டு தீர்த்துப்போடுகிறேன் என்று சொல்லி [ ]

சுக்கில ஸு மார்கழி மீ 11 உ க்கு 1749 ஆ தெசாம்பர் மீ 22 உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே கோட்டையிலே புடவை பார்வையானபடி

னிலே கோட்டைக்குப்போய் பத்துமணி மட்டுக்கும் பார்வையாய் கட்டுப் போடுகிற மட்டுக்கும் இருந்து அப்பால் கட்டுப்போட்டானுப்போலே முன் வண்ணாந்துரையில் மறு சலவை பண்ணின கூலிக்கும் யெழுத்துப் புடவை சென்னபட்டணம் பிடித்தபோது அவ்விடத்திலிருந்து எடுத்துக்கொண்டு வந்த எழுத்துப்புடவைகள் கட்டுகளிலேகிடந்தது அரைகுறையாய் கிடந்தது எழுத்துக்காரர்கையிலே கொடுத்து தீர்வைத்ததற்கு, சிறிது வெள்ளைபுடவை கள் சலவைக்கு விட்ட வண்ணான் கூலிக்கும் கும்பினீரிலே வாங்கி கொடா மல் நாம் முன்னதாகக் கொடுத்த படியினாலே அந்தக் கணக்கு முசியே கொற்னேத்து கையிலே ஆகஸ்டு மீ" த்திலே யெழுதிவித்து அந்தப் பணம் கொடுத்துவிடச்சொல்லி முசிய கில்லியார் (M Guillard) பேரிலே ஒடு திணுசு பண்ணியிருந்த சம்மதி கடுதாசிகளை முசியே கொற்னேத்து யிற்றை னுன் யென்கையிலே கொடுத்த படியினாலே அதின் கீழே நான் அத்தப் பணம் பத்திக்கொண்டேனென்று சொல்லி ரசிதெழுதி நூத்தி முப்பத்தி மூணு வராகனும் பத்தே சில்லரை பணத்துக்கு நானூத்திருபத்தேழரை ரூபாய் முசியே கில்லியார் யென்கையிலே கொடுக்க நான் வாங்கிக்கொண்டு அங்கேயிருந்து துரை வீட்டுக்கு வந்து யிந்தனுள் முப்பத்தெட்டு கட்டு பார்வையிட்டு கட்டுப்போட்டார்களென்று கபுறு சொன்னதின் பேரிலே துரையவர்களிருந்துக் கொண்டு தஞ்சாவூர் சமாச்சாரம் அஞ்சாறு நாளாய் வரவில்லையென்று கேட்டார். கடுதாசியானுல் வந்ததில்லை. போன புதன் கிழமை நான் மானேசியப்பா தஞ்சாவூர் கோட்டைக்கு வெளியிலே ஒரு மாரியம்மன் கோயில் இருக்கிறது, அந்த மாரியம்மன் கோயிலுக்கும் நடு மத்தியே ஒரு மொற்சா வொன்று போட்டுக்கொண்டு அதிலே நாலா யிரம் குதிரையும் முப்பதினுயிரம் ஸெதாமமும் இங்கிலீசுக்காரர் ஒலாந்தாக்காரரும் அன்னூறு அறுநூறுபேரும் இங்கிலீசுக்கொடி ஒன்றும் பீரங்கிகள் மருந்துக்குண்டு சாமான்கள் முதலான முஸ்தீப்புகளுடனே யிறங்கி யிருக்கிறுர்களென்றும் நம்முடையவர்களும் அந்த மாரியம்மன் கோயிலைப்போய்ப்பிடித்து யிருக்கிறுர்கள். அங்கே யிருந்து அந்த புதன் கிழமை நாள் யிருவருக்குஞ் சண்டையாச்சுதென்றும் அப்பால் தஞ்சாவூரார் அபசெயப்பட்டு ஓடிப்போய்விட்டார்களென்றும் யிப்படியாக போக்குவரத் துக்காரர் சொல்லிக்கொள்ளுகிறுர்களென்று சொன்னதற்கு அவர்கள் சண் டைக்கு நிற்கமாட்டார்கள் ஆனுலும் யின்று நாளையிலே கபுறு வருமென்று பதிலுத்தரம் சொன்னுர். அப்பால் பூமலத்தாசெட்டி சின்னயன்பேரிலே முசியே எலியாசு (N. Eleas) செல்லா விலையிலே யேத்தக்குறைச்சல் பண் ணினுனென்று சொல்லி முசியே எல்லியாசு மகன் துரைக்கு பெத்திசாம் கொண்டுவந்து கொடுத்ததின்பேரிலே சின்ன துரையை அழைப்பித்து யிந்த விபகாரம் கேட்டுத்தீர்த்துப் போடச்சொல்லி சொன்னது மல்லாமல்

அப்பால் யிந்த விபகாரத்தில் சந்தையில்லே முசியே எல்லியாசு பெரிய வயதானபடியினாலே புத்தி செலுத்தி எழுதிக்கொண்டு வந்து கொடுத்தானே யல்லாமல் தாகு வாங்கிக்கொண்டு கொள்முதல் சில வும் யெழுதிவைத்துப் புடவையும் கட்டும்போட்டு தீர்த்து கப்பலின்பேரிலே அனுப்பிப்போட்டு ஆறுமாசத்திற்கு பிற்பாடு விபகாரம் பேசுகிறதுண்டா யென்று சொல்லிப் போகச்சொன்னான். பிற்பாடு நான் பனிரெண்டுமணி அடித்தபடியினாலே வீட்டுக்குப் போய் ஸ்நானம் பண்ணி சாப்பிடப்போகிற வேளையிலே தஞ்சாவூரின் பேரிலே போயிறங்கிய தண்டிலிருந்து முசியே துக்கேன் ( **M. Duquesne** ) காகிதம் கொண்டு ரெண்டுபேர் அறுகாறுகள் வந்தார்கள். அந்தக் கடுதாசி துரை பார்த்துக்கொண்டவுடனே யென்னை அழைத்துக்கொண்டு வரச்சொல்லி யென்னண்டைக்கு சேவுகனை அனுப்பி வித்தபடியினாலே நானுஞ்சீக்கிறமாய் சாப்பிட்டு அப்பால் ரெண்டரை மணிக்கு துரை வீட்டுக்கு வந்தவுடனே துரை யென்னைப்பார்த்து தண்டிலே யிருந்து முசியே துக்கேன் எழுதி அனுப்பின கடுதாசியைக் காண்பித்தார். நீ அவ்விடத்திலே சண்டையானது மெய்தானென்று சொல்லி அந்தக் கடுதாசி படித்துச்சொன்ன வயணம் யென்னவென்றால்; மாரியம்மன் கோவிலிலே நம்மவர்கள் யிறங்கியிருந்தார்களே அதற்கு எதிராக தஞ்சாவூர் பவுஞ்சு நாலாயிரம குதிரை முப்பதினாயிரம் ஸெநாமமும் இங்கிலீசுக் காரர் ஒலாந்துக்காரர், இங்கிலீசுக்கொடி போட்டுக்கொண்டு அன்னூறு பேர் சொல்நாதுகளும் மூன்று அந்தஸ்தாய் யேற பார்த்துக்கொண்டு யிறங்கியிருந்த பவுஞ்சும் பேரிலே முசியே துக்கேன். போய் விழுந்தவுடனே அவர்களெல்லாம் சின்னாபின்னமாய் பிரிஞ்சி வோடிப்போய் அப்பால் சிறிது குதிரைக்காரனும் ராணுவும் சேதப்பட்டுப்போனது மல்லாமல் அவர்களுக்கு மத்தத்தாய் டட்டாணைய மிருந்த இங்கிலீசுக்காரர் ஒலாந்தாக்காரருக்குள்ளேயும் சிறிதுபேர் சேதப்பட்டதுமாயும் அப்பாலிந்த இங்கிலீசுக்காரர் கொடியை நம்முடையவர்கள் வாங்கிக்கொண்டார்கள். அதின் பேரிலே அங்கேயிருந்தவர்கள் எல்லாரும் கவில் கவில்யென்று கேட்டார்கள். கவிலுங்கொடுத்து அங்கேயிருந்து நிர்ப்பயமாய்ப் போய் தஞ்சாவூர் கோட்டை வாசலைப் பிடித்தார்கள். அப்பால் கோட்டையிலே யிருக்கிற ராசா முதலான பேர்களெல்லாம் வெகுசாய் காபிறுபட்டு மனுசியின் பேரிலே கோபித்துக்கொண்டு முன்னேதானே அவர்களுடனே சமாதானம் பண்ணிக் கொள்ளுவோமென்று சொன்னால் நீர் துர்புத்தியினாலே அவர்களை யெதிர்த்து சண்டைக்கு நின்று கடைசியிலே யென் சமஸ்தானத்தை முழுக்கடிக்க நினைத்தாயென்று கோபம் பண்ணி அதின் பேரிலே முசியே துக்கேன் அண்டைக்கு சமாதானம் பேசத்தக்கதாக மாத்துபர் மனுஷரை

அனுப்பிவித்தானென்றும் அதுவும் சமாதானமாய்ப் போமென்று யெழுதி
வந்ததாய்ச் சொல்லி அப்பால் சந்தாசாயபு அவர்களுக்கும் நபாபு முசபர்
சங்கு அவர்களுக்கும் தஞ்சாவூரின் பேரிலே சண்டைபண்ணி செயித்த
சமாச்சாரமெல்லாம் முசியே துக்கேன் நமக்கு பயாவாறு யெழுதி அனுப்பி
வித்தான். அதினாலே நம்முடைய மனதுக்கு அத்தியந்த சந்தோஷமாச்சுது.
இப்பவும் தங்களுக்கு தஞ்சாவூர் கில்லாபத்தே யிருக்குதென்று சொல்லி
முபாற்கு பாதி கடுதாசிகள் யெழுதச் சொல்லி உத்தாரங் கொடுத்தார்கள்.
அந்தபடிக்கு நபாபு முசபர் சங்கு அவர்களுக்கும் சந்தா சாயபு அவர்களுக்
கும் தஞ்சாவூர் கில்லாபத்தேயான சந்தோஷ முபாற்குபாதி கடுதாசிகள்
யெழுதி யிங்கே யிருந்து முசியே துக்கேன் கடுதாசிகொண்டு வந்த அறுக்
காறுக்கள் ரெண்டுபேர் கையிலே கொடுத்து அவர்களுக்கு பத்து ரூபாய்
இனங்கொடுத்து, அனுப்பிவிக்கச் சொன்னபடிக்கி அனுப்பிவித்தேன். அப்
பால் சாயங்காலம் இதாயித்து மொகதீன்கான் (**M. Hidayat Muhind-
dinkhan**) அனுப்பிவித்த ஒட்டக சுவார்கள் இரண்டுபேரும் சந்தா
சாயபு அனுப்பிவித்த ஒட்டக சுவார்கள் ரெண்டுபேரும் ஆக நாலு
ஒட்டக சுவார்களும், தஞ்சாவூர் பத்தே ஆன சமாசாரத்துக்கு முசியே
துக்கேன் அனுப்பிவித்த கடுதாசி மத்தலபு படிக்குத்தானே யெழுதின
பத்தே ஆன முபார்க்கு பாதி காகிதங்களும் கொண்டு சாயங்காலம்
ஆறுமணி ஆன பிற்பாடு வந்து சேர்ந்தார்கள். அந்தக் காகிதங்களை
துரையவர்கள் யென்னை அழைப்பித்து யென் கையிலே கொடுத்து படித்து
இதுச் சொல்லச் சொன்ன விடத்திலே அந்த காகிதங்களிலே முசியே
துக்கேன் யெழுதினபடிக்குத்தானே தஞ்சாவூராருடனே சண்டை பண்ண
தும் அவர்கள் தெரித்தி அடித்ததும் அவர்கள் ஓடிப்போனதும் அப்பால்
தாங்கள் போய் தஞ்சாவூர் கோட்டை வாசலை பிடித்ததும் அவர்களுக்கு
கலில் கொடுத்ததும் அவர்கள் வந்து சமாதானம் பேசுகிறதும், கோடி ரூபாய்
கொடுத்தால் அதன்பேரிலே சமாதானம் என்றும் யிப்படியாக மிகுதியும்
உபசாரமாயெழுதி யிருந்தது யிந்த வயணமெல்லாம் துரையவர்களுடனே
சொன்னதற்கு வெகு சந்தோஷப்பட்டது. காகிதத்திலே எழுத முடியாது.
யிதல்லாமல் தண்டிலேயிருந்து தஞ்சாவூர்பத்தே ஆன சமாச்சாரத்திற்கு
வந்தவாசிக்கு அல்லிநகிம் சாயபுக்கு ஒரு கடுதாசி யெழுதி ஒரு ஒட்டக
சுவார் கையிலே கொடுத்து அனுப்பச்சொல்லி எழுதியிருந்தபடியினாலே
அந்தப்படிக்கித்தானே ஒட்டக சுவார்கையிலே அல்லி நகிம் சாயபுக்கு வந்த
கடுதாசியும் கொடுத்து நாமும் தஞ்சாவூர் பத்தே ஆனதுக்கு மேல்ல யெழுதி
யிருக்கப்பட்டபடிக்கு தக்கே சாயபுக்கும் முபார்க்கு பாதி கடுதாசியில்
யெழுதிக்கொடுத்து துரையவர்கள் உத்தாரப்படிக்கு நாலு ஒட்டக சுவார்
களுக்கும் பேருக்கு முப்பது ரூபாய் விழுக்காடு முடுப்பிறிமுத்துக்கு மாப்

பிள்ளைகையிலே நூற்றிருபது ரூபாய் வெகுமானம் வாங்கிக்கொடுத்து அதிலே ஒரு சுவாரைப் பயணம் பண்ணி வந்தவாசிக்கு யெழுதின கடுதாசி களைக்கொண்டு நாளைபொழுது விடிஞ்சவுடனே சாகிப்போகச்சொல்லி திட்டப்படுத்தி அனுப்பிவித்தேன்.

**சுக்கில ளு மார்கழி மீ 13 உ க்கு 1749 ஆ டிசம்பர் மீ 24 உ புதவாரம்**

இற்றைனாள் காலத்தாலே பத்துமணி வேளைக்கு துரையவர்களிடத்துக்குப் போன விடத்திலே அல்லிநகிம்சாயபு அனுப்பின காகிதசேதி துரையவர்களுக்கு சொன்ன வயணம் அந்தக் காகிதச் சேதியாவது தங்கள் கையில் அனுப்பிவித்துக் கொண்டு அசரத்து சந்தாசாயபு அவர்களுடனே கூடப்போய் உடையார்பாளையம் அரியலூர் வாலிகொண்டாபுரம் உசேன் சாயபு குமாரன் மொகத்துமாவும் பைசல் பண்ணி ஆனபிற்பாடு அசரத்து சந்தாசாயபு அவர்கள் கையிலேயும் அவர் குமாரன் ராசாசாயபு கையிலேயும் அனுப்பிவித்துக்கொண்டு தியாகரிடை (**Tyagar**) யிலே வந்து இமாம்சாயபு குமாரனைக் கண்டு உங்களுடைய ஆசிராவிலேயிருக்கிறவர்களானபடியினாலே அவர்கள் சம்மதியும் உங்கள் காகிதத்தின் நிமித்தியம் மார்க்கமாய்த்தானே பைசல் பண்ணி அப்பால் யெங்கள் தகப்பனார் பாத தெரிசனம் பண்ணிக்கொள்ள வேணுமென்று வந்தவாசிக்கு வந்து யெங்கள் தகப்பனார் பாத தெரிசனம் பண்ணிக்கொண்டேன். நான் வரச்சே நபாபு சந்தாசாயபு அவர்கள் சிறிது அந்தரங்கமான காரியம் யென்னுடனே சொல்லி தங்களுடனே சொல்லச்சொன்னார். அந்தக்காரியம் நான் காகிதந்திலே யெழுதக்கூடாதபடியினாலே நான் ரூபு ரூபிலேவந்து சொல்லவேணும் அது காரியத்துக்கு சிறிது பவுஞ்சும் கூட்டிக்கொண்டு நானும் புதுச்சேரி வந்து சேருகிறேன். அப்போ நான் தங்களுடனே அந்தக்காரியம் சொல்லச்சே தங்களுக்கு யெப்படி சம்மதியாயிருக்கிறதோ அப்படி நடப்பித்து சின்ன மனுஷர்கள் தலையெடுத்துக்கொண்டு திரிகிறவர்கள் அடக்கிப் போடத்தக்கதாக செய்வோமென்று யெழுதியிருந்த மத்தலபு பிரகாரம் துரையவர்களுடனே சொன்னது. நல்லது வரச்சொல்லி யெழுதச் சொல்லியும் அப்பால் இமாம் சாயபு குமாரன் கில்லா சாகீர் மொகத்துமா யெங்களாசிராவிலே யிருக்கிறவர்களென்று யெனக்கு பிரீதியர்த்தமாய் மார்க்கமாய் பைசல் பண்ணிபோட்டேன் யென்று யெழுதின உம்முடைய நல்ல மனதுக்கு மெத்தவும் பாத்தியமாகயிருக்கிறேன். அப்பால் யெங்கள் சாதிக்கட்டளையும் யெங்கள் சுபாவமும் யென்னவென்றால்: ஒருத்தன் யெங்கள் காரியத்திலே சிறிது காரியங்களிலே சிறிது காலம் பிரயாசைப்பட்டால் நாங்களெப்போதும் அவர்கள்

பிள்ளை பிள்ளைகளும் மகனவர்களைக்கூட முன்னன்றி பாராட்டி அவர்கள் காரியங்களை யெங்கள் காரியத்தைப்பார்க்கப் பந்து பங்கு அதனமாய் நடப்பித்துக்கொண்டு வருகிற சுபாவமானபடியினாலே அந்த காரியத்திலே தாங்கள் இமாம் சாயபு குமாரன் காரியம் யெங்கள் காரியத்தைப் பார்க்கிலும் அதனமானபடியினாலேயும் அந்தக் காரியத்திலே தாங்கள் யெப்போ மனது வைத்து தீர்த்து யெங்களுக்கு நடப்பித்த காரியத்தைப் பார்க்கிலும் அதனமானபடியினாலே உங்களுடைய நல்ல மனதுக்கு மிகுந்த பாத்தியமானேமென்று உபசாரமாய் எழுதச் சொல்லியும் அப்பால் பவுஞ்சுடனே வந்தால் பவுஞ்சை சமீபத்தில் கொண்டுவாராமல் துலவு தூரத்திலே வைத்துப்போட்டு வரச்சொல்லி காகிதமெழுதி மோகறு பண்ணி அல்லி நகீம் சாயபு மனுஷன் கையிலே கொடுத்து அனுப்பிவிட்டு அந்த கபுறு சொன்னதற்கு யிந்த பவுஞ்சுக்கூட்டிக்கொண்டு வர சாடை தெரிந்ததாவென்று கேட்டார் சேத்துப்பேட்டானை ஒடுக்கி பணம் விஸ்தாரமாய் வாங்க யோசனை பண்ணிக்கொண்டு வந்ததாய் தோத்துதென்று சொன்னேன் அதுகாரியத்துக்கென்றுதான் யெனக்கும் தோத்துதென்று சொன்னார். அப்பால் முசியே திலார்சு கையில் நேத்து தஞ்சாவூர் பவுஞ்சை முசியே துக்கேன் பந்தேபண்ணி கோட்டை வாசலைப்போய் ஓட்டி நின்றதற்கு மொபாற்கு பாதி சந்தாசாயபு ஒன்றும் யிதாயத்து மொகதீன்கான் ஒன்றும் எழுதியனுப்பின காகிதத்தை பிராஞ்செழுத்திலே யெழுதிவரச் சொன்னபடியினாலே அந்தப் படிக்கு நேத்திய தினம் யெழுதிக்கொடுத்ததில்லை இங்கிலீசுக்காரர், ஒலாந்துக்காரர் யிருந்தவர்கள் முறிஞ்சு ஓடிப்போனது மல்லாமல் அவர்கள் பவுஞ்சிலே நின்றவர்கள் அவர்கள் கொடியைக் கொண்டுவந்து நம்முடையவர்கள் கையில் கொடுத்தது மெத்த ஆச்சரியமாயிருந்ததென்று சந்தா சாயபு காகிதத்தில் யெழுதி யிருந்ததை முசியே திலார்சு யெழுத மறந்து போனபடியினாலே மறுபடி யின்று காலத்தாலே மதனானந்தபண்டிதன் முசியே திலார்சு அண்டைக்குப்போய் அந்த வயணத்தை யெழுதிவித்துக் கொண்டு வந்து யென்கையில் கொடுத்து அதை நான் துரை கையில் கொடுத்தவுடனே அதைப் பார்த்துக்கொண்டு இதாயித்து மொகதின்கான் கையில் ஒரு சொல் நீ படித்து சொன்னது அவன் எழுதினதிலே காணோம் அதென்னவென்றால்: என் அதிர்ஷ்டம் நல்ல அதிர்ஷ்டமானபடியினாலே நான் உம்மை வந்து சேர்ந்தேன் யென் பகையாளிகள் தங்கள் முன்னதாய்ச் சேராதே போனோமென்று மனதிலே திகில் கொண்டு யிருந்துகொண்டு அங்கலாத்துக்கொண்டு வந்த தென்னவென்றால்: யென் அதிர்ஷ்டமே உம்முடைய ரூபமாய்ப் போய் யென் சத்துருக்களை அடித்து யெனக்கு வெற்றி கொடுக்குமென்று நீ சொன்னது யிதிலே யெழுதியிருக்கக் காணோமென்று கேட்டார். அதிலே ஒரு சொல் யெழுதுகிறது அது யித்தனை ஆகிற

தற்கு யிடம் கொள்ளும் அந்த அர்த்தமாய்சொன்னேனென்று சொன்னதற்கு அந்த சாடையே பரிச்சேதமாய் யெழுதியிருக்கவில்லையென்று சொன்னார். அவர் மறந்தாரோ யென்னமோ தெரியாதென்று சொன்னேனதற்கு துரை யிருந்து இதாயத்து மொகதீன்கான் காகிதத்தை முசியே லெபோம் **(M. Lebeaume)** கையிலே யெழுதிவித்துக்கொண்டு வாவென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். யிப்பால் வந்தவுடனே மதனந்தபண்டிதனிருந்துக்கொண்டு நானெத்தனைதரம் எழுதச்சொன்னாலும் யெழுதான். சந்தா சாயபு இதாயத்து மொகதீன்கான் பேர் சொன்னால் நானே நாசர்சங்கு வந்து சூத்தை நக்கிழிக்கப்போகிறானே அப்போ யிந்த குசால் படுகிறவர்களும் மத்தத்து கூட்டி செயம்வந்து சந்தோஷப்படுகிறவர்களுடைய காரியமென்னவாய் நடக்கயிருக்குதென்றும் அப்போவல்லோ தெரியவருமென்று யிப்படி அவன் சனியப்படுகிறது யெத்தனையென்று சொல்வேன். இப்போ நீங்கள் ம்பாய் முசியே லெபோம் கையிலே யெழுதிவித்துக்கொண்டு வந்து கொடுத்தால் துரை அதைப் பார்த்து உடனே அவனை அழைத்துக் கோபம் பண்ணுவார். அவன் யென் தலைமேல் வைப்பான். நான் சொல்லச்சொல்ல யிவன் யெழுதாமல் போனானென்றுலல்லோ சொல்லவேணும். அப்போ யெனக்கும் அவருக்கும் திவேஷம வருமென்று பார்ப்பான். வேதனைப் பட்டது சேன உண்டு அப்பால் பார்ப்பான் சொன்னது. ........

## சுக்கில ஷு மார்கழி மீ 15 உ க்கு 1749 ஆ டிசாம்பர் மீ 26 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப்போய் வந்தவுடனே கல்விக்கில்லேதாரன் சபுதருசேன்கான் **(Safdor Hussain Khan)** துரையவர்களுக்கு ஒரு காகிதமும் சிறிது வாழைப்பழமும் மண்ணினாலே பண்ண கூசா முதலான உருப்படி நூறும் அனுப்பினான். யென் காகிதத்தை நான் பார்த்துக்கொண்டு துரையவர்களுக்கு வந்த காகிதத்தை படித்து அவருக்குச் சொன்னவயணம் துரையவர்கள் வெகு பேர் சேவுகத்திலே அடைந்த கீர்த்தியை விஸ்தரித்து யெழுதி அப்பால்தான் ஒரு கோட்டைபோல காகிதத்தின்பேரிலே யெழுதியிருக்கிறதாகவும், அதற்கு பீரங்கிகள் வைக்கிறதும், துப்பாக்கிக்காரர்களிருக்கிறது, பெண்டாரிகளிருக்கிறது முதலான கோட்டை அறணிப்போலே எல்லாம் எழுதி முன்னாலே நபாபு ஆசபுஷா அவர்களுக்கு கொடுத்து அனுப்பினதாகவும் அவர் வெகு சந்தோஷப்பட்டு தம்முடைய கலந்தானிலே வைத்ததாகவும் அப்படி நடந்த வேணுமென்றுயிருக்கிறதிலே அவர் வடக்கே போய் விட்டதாகவும் அப்பால் காலம் கூட ஆகிப்போகிறது அது மொகுப்பாய் நின்று போனதாயும் அப்பால் இதாயித்து மொகதீன் கானுக்கென்று யெழுதிக்கொடுத்ததாயும் அவரும் வெகு சந்தோஷப்

பட்டாரே அல்லாமல் அந்தப்படிக்கு அனுகூலம் பண்ணி நடத்தாமல் போனாரென்றும் இப்போ சந்தா சாயபு யிந்த கர்நாட்டக சுபாவுக்கு யெசமானாய் வந்தாரே அவருக்குச் சொல்லி நீங்கள் நடப்பிக்கவேணு மென்றும் அந்தக் கோட்டை அரணிப்பு யெழுதின காகிதம் தங்கள் வக்கீல் கையிலே கொடுத்து அனுப்புகிறோமென்றும் அந்தக் காகிதம் பார்த்துக் கொண்டு அந்தப்படிக்கு பவுஞ்சுவைத்து அதற்குத் தன்னை யெசமானாகி வைக்கத்தக்கதாக சந்தாசாயபுக்குச் சொல்லி காரியம் சேகரம் பண்ணிக் கொடுக்கவேணுமென்று முசியே தொத்தேல் (**M. d'Auteuil**) முசியே லாசு (**M. Law**) யிவ்விடத்திற்கு வந்தபோது அது காண்பித்தேன் என்றும் அவர்களுஞ் சொல்லியிருப்பார்களேயென்றும் யிந்தப்படிக்கு காகிதத்திலே யெழுதியிருக்குதென்று சேதி சொல்லி அவரனுப்பிவைத்த வாழைப்பழமும் வெள்ளை மண்ணினாலே பண்ணின கூசாக்கள் முதலான வுருப்படி நூறும் துரைமுன்னே வைக்க துரையவர்கள் வெகு சந்தோஷப்பட்டுக் கொண்டு வந்தவர்களுக்கிருபது ரூபாய் கொடுக்கச் சொன்னார். அப்பால் முசியே தொத்தேல் அழைப்பித்து அந்தக் கோட்டை எழுதியிருக்கிறதை நீ பார்த்தாயா வென்று கேட்டார் அவன் பார்த்தேன் என்று சொல்லி அப்பாலிவன் தாரிப்பும் ரொம்பச் சொன்னான் அதின் பேரிலே துரையவர்கள் பதிலுத்தாரம் எழுதச்சொன்னது தாமனுப்பின வாழைப்பழமுதலான தினுசுகள் வந்து சேர்ந்தது காகிதமும் பார்த்துக்கொண்டு மெத்தவும் சந்தோஷமாச்சுது தாங்கள் யென்பேரிலே பக்ஷம் வைத்து அனுப்பின மேவா தினிசுகளுக்கு நான் ரொம்ப பாத்தியப்பட்டு யிருக்கிறேனென்றும் கோட்டை சமாசாரத்திற்கு வக்கீல் காகிதம் யெழுதியனுப்புகிறோமென்றபடிக்கு வந்தவுடனே பார்த்துக்கொண்டு அதற்கு மேல் சால்சாபு பண்ணுகிறோமென்றும் முசியே தொத்தேல் எப்போதும் உம்முடைய தாரிப்பு பண்ணிக்கொண்டிருக்கிறானென்று அவன் சலாமெழுதச் சொல்லியும் சொல்லி காகிதம் மோகரு பண்ணிக்கொடுத்து அனுப்பச்சொன்னார். பைகம் பாடி முதலானதுகள் ரெட்டி தாலூக்கா சம்மந்தம் யிருக்குதென்று சப்தி பண்ணிவிட்டு விட்டமே. நாம் விடாததற்கு முன்னே அவர் கேட்டு விசாரித்துக்கொண்டு விட்டு விட வேணுமென்று இராசத்துக்கான் எழுதின காகிதத்திற்கு பதிலுத்தாரம் அப்போதானே தாக்கீது பண்ணிக்கொண்டு விட்டு விட்டோமென்று பதிலுத்தாரம் எழுதியனுப்பிவிடென்று சொன்னார். அந்தப் படிக்கி அவர்களிருவருக்கும் காகிதமெழுதியனுப்பிவித்தேன் இதன் பிற்பாடு முத்துமல்லா ரெட்டி தம்பி முத்து போலம் ரெட்டி போன விடத்தில் மீன் ஒன்று அகப்பட்ட சேதி வந்ததென்று சொன்னேன் நல்லது அவ்விடத்திலே நடத்துகிற காரியங்களவன் நடத்துகிறானென்று சொல். ஓங்கபண்ணி உள்ளபடியிலே அவர்கள் பணமெப்படி சரிவர பார்க்கவேணுமோ அப்படிப்

பார்யென்று சொல்லி அவர்களொப்புக்கொண்ட நாற்பதினுயிரம் ரூபாயும் நேற்றையதினத்துடனே சாடாவாய்ச் செலுத்திப்போட்டார்கள். அவர்கள் குஞ்சு குழந்தைகளை விட்டுவிடச்சொன்னேன் யினிமேல் நீ யொரு காரியம் நடப்பிக்கிறதாய் சர்வாத்துமனுக யெண்பிக்க வேண்டாம் அவன் தம்பி தனக்கு பங்கு வரவேணுமென்று நடத்துகிருனென்று செனங்களுக்குத் தோத்தும். அப்படியாகியும் நீ யறியாதபோலேயும் நடத்துவிடென்று சொல்லி சீர்மையை அவன் தம்பிக்கு கொடுக்கப்போகிருய் நீ பந்தோபஸ்து பண்ணிக்கொண்டு பத்து பணம் கூடிவரப்பார்த்துக்கோ வென்று சொல்லி முன் வந்த மீன்சம்பந்தமும் யின்று சொன்னதுமிப்போதானே கொண்டு வந்துக்கொடுத்து விடென்று சொன்னுர். அந்தக்ஷணம் வீட்டுக்கு நான் போய் கொண்டு வந்து காகிதங்கள் கொண்டு வரப்போனேனெண்பித்துக் கொண்டு போய் கொடுத்தேன். அப்பால் அவர்கள் குஞ்சு குழந்தைகள் சாவடியிலே போட்டிருந்தவர்களை விட்டு விட்டார்களென்றும் அவர்களை சின்ன பரசுராமன் தன் வீட்டுக்கழைத்துக்கொண்டு போய் ஸ்நானம் மத்ததுகள் பண்ணிவித்து பிராமணனுக்கு பூரிகானம் மத்ததுகள் கொடுப்பித்து கோயிலுக்கு அபிஷேகங்கள் பண்ணச்சொல்லி அனுப்பினுனென்று முத்து மல்லா ரெட்டிப்பிள்ளைகள் பெண்சாதி உடம்பிறந்தான் சமஸ்தமானவர்கள் கூட்டத்துக்கெல்லாம் விருந்து பண்ணிவிக்கிருனென்றும் தன்னைத் தோணி யிந்தக் காரியத்திற்கு வெகு பணத்தை அவர்கள் கையில் வாங்கி கொடுத்து விடுவித்தோமேயென்கிற பிறதிஷ்டையும் நாலு பேர் முன்னே தானே அம்மா ளுக்குத் தெரியச்சொன்னதும் துரைக்குத் தெரியச் சொன்னதும் அடிக்கடி சொல்லிக்கொள்ளுகிறது யிவனுக்கு செலெஷப்பம் உதவுராப் போலே பாணிமெதவயிருக்கிற முப்பது வெள்ளிக்காசுக்கு சுவாமியை வித்த ஞூதனுகிய வீருகும் யிந்தப்படி உச்சா கத்தை அடைந்திருந் தார்களென்று வந்து கபுறு சொன்னுர்கள். பின்னையும் சத்துநேரம் பொறுத்து சின்னப்பரசுராமன் முத்தய்யன் சிதம்பரத்துக்குப்போயிருக் கிறவனை பொங்கல் பெருசம்பிறமமாய் செய்யவேணுமென்று நீ யில் லாமல் சம்பிறமமாயிருதென்றும் சீக்கிரமத்துக்கு வரச்சொல்லியும் அவன் மத்திலேயும் செய்யாத வேலை ஒன்றுமேல் போட்டுக்கொண்டு நடத் தினதும் துசபலமானதுமே அவனுக்கு குரங்குக்கு கள்ளுவார்த்தாப் போலே பேத்திக்கொண்டு அதண்டை ஓடுகிறதும் யிந்தண்டையிருக்கிறவர் களைப்பார்த்துச் சொல்லுகிற உற்சாகத்துடனே யிந்த ஓலையெழுதச் சொன் னுனென்றும் வந்து கபுறு சொன்னுர்கள். இப்படிப்பட்ட காரியங்களும் சமஸ்தானங்களை ஒரு வசனத்தினுலே அழிக்கவும் அப்படி அனேகங் காரி யங்கள் நாள்தோறும் நடத்துகிறவர்களுக்கு யிது சகசமா நித்திய கீர்த்தியு மாய்க்காணும் அவன் அதை ஒருத்தனுடனே சொல்லர்னும் அது பெருமை

யாக்வும் தோணுது பெரியதாகவும் எண்ணுன். ஒரு நாளையிலே ஒருக்காலும் கெடாய் நெல்லரிசி சாதமறியாதவன் மணக்கத்தை அரிசி சாதத்தைக் கண்டால் தேவாமிர்தம் கெடைத்தவனுக்கு யெத்தனை சந்தோஷமோ அத்தனை சந்தோஷத்தை அடையுராப்போலேயிவன் தன் ஆயிசுக்குள்ளே யிந்தக்காரியம் செய்தலானபடியினாலே உற்சாகம் தலைக்கொண்டு சரீரஸ் மரணை தப்பிப்போய் பேத்துகிறது ஞாய்மே யென்று ஒத்துக்கொண்டேன் மைத்தப்படி துரையவர்களழைப்பித்து............... இற்றைனுள் மத்தியானம் முசியே பொற்னேவாலும் ஒரு இங்கிலீசுக்காரனும் பழவாற்காட்டிலிருந்து வந்தார்கள் துரையவர்களழைப்பித்து கோவளத்திலிருந்து சிறிது மாங்கட்டுமரம் கட்டி பரங்கிப்பேட்டையிலேயிருக்கிற லசுக்கறுகள் திருடினுர்கள். யிதல்லாமல் புடுதிசுக்காரன் (Portuguese) கப்பல் ஆறுவிட்டுப் புறப்பட்டு யிவ்விடத்துக்கு வரவேணும் அதற்கு சான்சாயின் பட்டணவர் முதலான பேர்கள் மத்ததுயென்ன என்ன வேண்டியதோ அதெல்லாம் சான்சாயின் பண்ணிக்கொடுக்கச் சொல்லி பரங்கிப்பேட்டை போசுதாரன் பேருக்கு லசுக்காறுகள் திருடினவர்களைக் கட்டி அடிக்கச்சொல்லியும் அதைத் திருடிக்கொண்டுபோன மரங்களை யெல்லாம் இவர் பண்ணச் சொல்லி யெழுதியனுப்பச்சொன்ஞர். அந்தபடிக்கு யெழுதியனுப்பிவித்தேன். மறுபடி பனிரெண்டு மணிக்கு அழைத்தனுப்பிவித்து தண்டிலேயிருந்து யிந்தமாசம் பதினைந்தாம் தேதி புறப்பட்ட காகிதம் வந்து சேரவில்லை. வழியிலே கள்ளரடித்து பறித்துக்கொண்டு போனதாய் கேழ்விப்பட்டேன். ஆனல் தபால்காரர்கள் வந்து சொல்லயில்லை. அது எவ்விடத்திலே நடந்தது வயணந்தெரிந்து சொல்லென்று சொன்ஞர். நல்லதென்று சொன்னேன். அப்பால் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு சாப்பாட்டுக்குவந்தேன். மத்தப்படி பகலைக்கு மேலாக பிறபு அழைக்கவுமில்லை. ரங்கப்பிள்ளைக்கு ஶ்ரீயஸ்திரி மகாஶ்ரீயஸ்திரி அம்மாளவர்களெழுதின விபரம்: நீர் ரெண்டு மூணு நாளாயிங்கே வாராதபடியினலே யெழுதியனுப்பினது முன்னலேதானே நான் சொல்லியிருந்தேனே சுங்குவாரவர்கள் ஆணிக்கார ரங்கனுக்கு கொடுக்கவேண்டிய சம்மதிக்கு அவர்கள் வெளியே போகிறதற்கு முன்னே அந்த பணத்துக்கு அடமானம் பண்ணிக்கொண்டு போகச்சொல்லவேணுமென்று சொல்லியிருந்தேனே அப்படி சொல்லியிருக்க அவர்கள் யிதற்கு அடமானம் சொல்லாமல் வெளியே போகிறதற்கு யெப்படி முஸ்தீபு பண்ணுவார்கள் முன்னலே பெதறு முதலியார் முன்னிலையாக துரையவர்களுடனேயும் சொல்லியிருக்கிறது துரையவர்கள் சொன்னது யிது சம்மதிபண்ணவேண்டிய ஞாயந்தான். அவர்கள் கணக்கு பார்க்கிறார்கள். கணக்கு பார்த்து தீரட்டுமென்று சொன்ஞர். ஆணிக்கார ரங்கய்யன் உத்தரம் வெங்கட்டனாரணப்பய்யனை யிந்தப்பணம் தண்டச்சொல்லியிருக்கிறார். அதற்கு

யெசமான் யிவன்தான் அவர்கள் சீட்டெல்லாம் உம்மண்டை அனுப்பி விக்கிறேன். அதுவெல்லாம் பார்த்து யென் பணம் எனக்கு சேரத்தக்க தாக ஒரு வயணம் செய்து சேரப்பார்க்கவும். தமிழருடைய திரியாபுரம் எல்லாம் எனக்கு நன்றாய் தெரியும். அவர்கள் செய்யும் பொல்லாத காரியங்களெல்லாம் யெனக்கு நன்றாய் தெரியவரும்; இதுவெல்லாம் வொரு வேளையிலே யெனக்கு கோபம் வந்துதானால் ஞாயத்திலே சொன்னால் அனேகம் பேருக்கு ஆக்கினை வரும் வராதபடி அல்லாரும் பார்த்துக் கொள்ளவும்...........

இற்றைனாள் பனிரெண்டு மணிக்கு மதாம் துப்பிளேக்சு தன் சோபுதாரன் மகமது உசேன் கையிலே சுங்குவார் சென்னபட்டணம் தங்கசாலை திம்மாசய்யனுக்கு யெழுதிக்கொடுத்த கடன் சீட்டும் மதாம் துப்பிளேக்சுக்கு யிது யீடாக வைத்து வாங்கிக்கொண்ட ரெண்டாயிரத்தன்னூறு ரூபாயிக்கு வெங்கட்ட நாரணப்பய்யன் யெழுதிக்கொடுத்த ரெண்டு சீட்டும் யென் கையில் துரைக்கு கால்வாசி கொடுக்கிறோமென்று யெழுதிக் கொடுத்த ஒடம்படிக்கை சீட்டு ஆக நாலு சீட்டும் என் கையில் முன் கார்த்திகை மீ 4 உ என்னண்டைக்கு கொடுத்து அனுப்பி வித்து யிந்தப்படிக்கு பணம் கொடுத்தால் லக்ஷ்முனாய்க்கன் முதலானவர்களை வெளியே போகச் சொல்லு யில்லாவிட்டால் போகாதபடிக்கு தடைபண்ணச் சொல்லி அனுப்பின சம்மதி சீட்டுகளை இந்தனாள் மந்தியானம் கேட்டனுப்பினபடியினாலே மதனாந்தபண்டிதன் முதலான பேர்களை கிட்டவைத்துக் கொண்டும் மகம்மது உசேன் சோபுதாரன் கையில் மேலே யெழுதப்பட்ட நாலுசீட்டும் அவனுக்கு காண்பித்து அவர்கள் முன்பாக கொடுத்து அனுப்பி வித்தேன்.

**சுக்கில ஞு மார்கழி மீ 16 உக்கு 1749 ஆ டெசெம்பர் மீ 27 உ சனிவாரம்**

இற்றைனாள் காலத்தாலே பிரபுவினிடத்தில் போனவிடத்திலே முத்து மல்லாரெட்டி பணத்துக்குச் சொல்லிக்கொண்டு பணம் செலுத்தின சின்ன பரசுராமனும் அவன் பிரிய சிஷன் சூதனான வீராகவனும் ரெண்டு பேரும் அப்பவும் துரையுடனே முத்துமல்லா ரெட்டி தானிய தவசம் வித்தகணக்கு அழைப்பித்து செல்லொத்துக்கொடுக்க வேணுமென்று கேட்டபடியினாலே யென்னுடனே விற்ற கிரயக் கணக்கு அழைப்பிக்கச் சொன்னார் நல்லதென்று சொன்னேன். மத்தபடி பின்னை வேற விசேஷம் நடக்கவில்லை.

இற்றைனாள் சாயங்காலம் ஆறுமணி வேளைக்கு சிதம்பரம் தணக்கா பணம் கொண்டு பாளோசி பண்டிதன் வந்து சேர்ந்த சேதி துரையவர்களண்டைக்குப்போய் சிதம்பரம் தணக்கா பணம் கூடலூர் முன் யிருபதினை

யிரம் ரூபாய் நாலு யெருது மாடு மேலே வந்துதென்று கபுறு சொன்னதற்கு நாளைக்காலத்தாலே பார்வையிட்டு தம்முடைய கணக்கப்பிள்ளை கையிலே செலுத்தச் சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டு வந்தேன்.

இற்றைனாள் வந்த சேதி யென்னவென்றால்: விழுப்புரம் ஈசுவரய்யர் முன் 12 உ செவ்வாய்க்கிழமை பௌர்ணமி சந்திரகிராணத்தன்று ராத்திரி கள்ளக்குறிச்சிலே காலம் பண்ணிப்போனானென்று தாசில் வெங்கிட்டராயன் நேத்து யெழுதின காகிதம் வந்து சேர்ந்தது. ஆனால் அவருக்கு ரெண்டு பிள்ளைகள், நாராயணசாஸ்திரியார் யென்றும் நீலகண்டய்யனென்றும் பெரிய பிள்ளைகளாய் இருந்தாலும் யெண்பது வருஷமட்டுக்கும் சீவித்துயிருந்தாலும் சாகிற பரியந்தம் யிவர் சம்பாத்தியமும் தற்பாயிலே யிவன் பேச்சும் யிவர் பேருமா யிருந்ததே யல்லாமல் பிள்ளைகள் பேர் ஊர் ஒருத்தரும் அறியார்கள் துலுக்கரிலே யிவர் மெத்த நிசஸ்தன் என்றும் கபடமில்லை என்றும் எண்ணப்பட்டு பெருயெத்துபாருய் நடந்தது. இனிமேல் பிள்ளைகள் அதிர்ஷ்டம் அறியவேண்டியது

**சுக்கில ஹூ மார்கழி மீ 17 உ க்கு 1749 ஆ டிசாம்பர் மீ 28 உ ஆதிவாரம்**

இற்றைனாள் காலத்தாலே பிரபு நித்திரைபோய் யெட்டரை மணிக்கு மேல் குடும்ப சமேதமாய் கோவிலுக்குப் பூசைக்குப்போய் வந்தார் நானும் போய் காண்பித்துக்கொண்டு அப்பால் நேற்று சிதம்பரம் தணக்கா யிருபதினாயிரம் ரூபாய் வந்ததை துரையவர்களுந்தாரப்படிக்கி கெடீ கணக்கு ரங்கப்பிள்ளை தம்பி முத்தய்யன் கையில் பார்வையிட்டு ஒப்பிக்கச் சொல்லி பாளோசிபண்டிதனையும் நம்முடைய சிதம்பர முதலியையும் ஆவலா பண்ணிப்போட்டு பாக்குக்கிடங்குக்கு வந்து கும்பினீர் வர்த்தகர்களை அழைப்பித்து சிதம்பரத்து தலைக்கும் (திருப்பாபுலியூர்—தலைக்கும் பணம் யெங்கள் வீட்டிலே கொடுத்த சீக்கிரமந்துக்கு அழைப்பிக்கச் சொல்லி கண்டிப்பாய்ச்சொல்லி அவர்களைப்போகச் சொல்லி அப்பால் பனிரெண்டு மணி வேளைக்கு வீட்டுக்குப்போனேன்.

பனிரெண்டு மணி அடித்த பிற்யாடு பாளோசிபண்டிதனும், சிதம்பர முதலியும், சளுப்புகளை வைத்து பார்வையிட்டுக்கொடுத்து வந்து சொன்னது கூடலூர் முளை—பதினையாயிரத்துச் சிலவானம், சிதம்பரத்து முளை நாலாயிரத்து சிலவானம் ஆக இருபதினாயிரம் ரூபா யெண்ணிக்கை குறைத்தல் ரூபாய் ரெண்டு கூடலூரு ரூபாய்க்கு நூற்றுக்கு ஒன்றரை ரூபாயாகவும் புதுச்சேரி ரூபாய்க்கொடுக்க சளுப்புகள் கேட்டபடிக்கு முன்னூத்தி சிலவானம் ரூபாய் வட்டம் போக பத்தொன்பதினாயிரத்தி அறுநூத்தி சிலவானம் ரூபாய் செலுத்தினேம் வட்டம் ரூபாய் முன்னூத்தி சிலவானம்

சரியாய்ச்சொல்லவேணுமென்று சொன்னார்கள். நல்லது சிதம்பரத்து லால்கான் தம்பி முதாமியாவுக்கு யெழுதியனுப்பி அப்படியே அழைப்பித்துக் கொடுத்து சரியாய் யிருபதினாயிரமாக்கிப் போடுவோமென்று பாளோசி பண்டிதன் வகையறுவந்து சொன்னவர்களைச் சாப்பிடப்போகச் சொல்லி சொன்னேன். மற்றபடி யிந்தனாள் கேழ்வியாகிறசேதி ஆனால் நம்முடைய பிராஞ்சுக்காரர் லசுக்கரும் சந்தாசாயபு முசபர்சங்கு லசுக்கரும் தஞ்சாவூர் கோட்டை அகரத்தையிலே யிறங்கி கோட்டை வாசற்படியிலே யிறங்கி யிருந்தவர்களை தஞ்சாவூர் ராசாதான்; ராசாதானே யினிமேல் சரீரத்தைப் பார்க்கிறதிலே காரியமில்லை யிருந்த காருபாறுகளிலே யிந்தமட்டுக்கும் கொண்டுவந்து விட்டார்கள். சரீரம்போன பிற்பாடு கோட்டையும் சீர்மையும் யெப்படிப்போனாலும் சரியென்று யோசனை பண்ணிக்கொண்டு புறப்பட்டு சண்டைபண்ணி கோட்டை வாசலிலே யிறங்கியிருந்தவர்களை முன் பிறங்கியிருந்த மாரியம்மன் கோயில் போய் சேரவிட்டதாயும் யிப்போ சந்தாசாயபு லசுக்கர் வகையரா யிப்போ மாரியம்மை கோயிலண்டையிலே யிறங்கியிருக்கிறார்களென்றும் பணத்துக்குப் பேச்சு வார்த்தை பேசுகிறார்கள் என்றும் சேதி கேழ்விப்பட்டது மற்றப்படி நாசற்சங்கு வெகுமானம் தேவனும்பட்டணம் வந்ததே அவர்கள் வெகுமானம் அனுப்புகிறதற்கு சகல தட்டு முட்டும் சம்பாத்தியம் பண்ணியிருக்கிறதுமல்லாமல் சகலாத்துக்கூடாரமொன்றும் அதற்குள்ளே செகப்பு முகமல் கூடாரம் ஒன்றும் முஸ்தீது பண்ணுகிறார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டது. இதல்லாமல் சென்னப்பட்டணத்திலிருந்த பெத்தரேசு முதலான அரமனைக்காரர் விரோதத்தின் பேரிலே புறப்பட்டு பழவேற்காடு போய்ச் சேர்ந்தார்களென்றும் முசியே பொற்னெவால் முசியே லமேத்திரி முதலான பிராஞ்சுக்காரர் கிறுஸ்தவ மதக்காரர் தமிழர் கப்புசுக்கோயில் பாதிரியார் கூட வெளிப்பட்டபடியினாலே வர்த்தகர்களுக்கும் சிறிது பேர்களுக்குமுன்னே பின்னே யோசனை பண்ணிக்கொண்டு கொடுக்கல் வாங்கலைத்தொட்டு போகாமலிருக்கிறார்களென்றுமிப்படியாக சேதி கேழ்விப்பட்டது. வெகுநாள் நூத்தியிருபத்தொரு வருஷம் நாளுக்கு நாள் அக்கிரமமாய் நடந்து அப்பால் அந்தபடியினாலே மறுபடி பஸ்தியாக மாட்டாது யென்கிறது பிறசித்தமானபடியினாலே கொஞ்சத்திலே பட்டணமா மாட்டாது. ஒன்று யில்லாவிட்டால் வொன்றைத்தொட்டு எப்போதும் கல்லப்பட்டுக்கொண்டு பஸ்தியாகாமலிப்படி யிருக்கத்தக்கனதுதானென்று யெனக்கு தோத்தி யிருக்கிறது அப்பால் சுவாமியுடைய சித்தப்படிக்கு நடக்கப்போகிறது இற்றைனாள் ராத்தி துரைவீட்டிலே வெள்ளைக்காரர் கூத்து ஆகிற நிமித்தியம் விளக்குகள் யெங்கும் பார்த்தாலும் திரளாய் வைத்தார்கள் அந்தச் சாடை யென்னவென்றால்; இவர் துரைத்தனத்துக்கு வந்தனாள்

முதல்வரைக்கும் அவராய் கூத்து ஆடினதில்லையானபடியினாலேயும் வர ஐப்பசி மீ தத்துக்குள்ளே சீர்மைக்குப் பயணம் போகவேணுமென்கிற கருத்தத்தைத் தொட்டு யின்றைக்கு சுவாமி பிறந்தநாளாம் நாமென்று சொல்லி கூத்தாடி பண்டிகை கொண்டாடினார்களென்று சொல்லிக்கொண்டார்கள். இது அதிசயம்.

**சுக்கில ஸ்ரீ மார்கழி மீ 18 உக்கு 1749 ஆ டிசம்பர் மீ 29 உ சோமவாரம்**

இற்றைநாள் காலத்தாலே பதினொருமணி மட்டுக்கும் நித்திரை போட் அப்பால் பன்னிரண்டு மணிக்கு உடுத்திக்கொண்டு சாப்பாட்டுக்கு வந்து உட்கார்ந்தபடியினாலே போய் கண்டு பேசக்கூடாமல் வீட்டுக்குப்போனேன் பகலைக்கு மேலாக துரை சாரிப்போனபடியினாலே யென்னை அழைத்தனுப்பி வித்தார்கள். நான் போய் கண்டு பேசினவிடத்திலே துரையவர்கள் சிதம்பரச் சம்மதி இருபதிபதினாயிரம் ரூபாயும் இராநூத்தெழும்பது ரூபாய் வட்டம் வாங்கிக்கொண்டு நம்மை எடுத்துக்கொள்ளச்சொல்லி சராப்புகள் சொன்ன படிக்கு அவர்களைத்தானேயெடுத்துக்கொண்டு மட்டுநாளையிலே புதுச்சேரி ரூபாய்த்தானே கொடுத்துவிடச்சொல்லென்று சொன்னார் அப்பால் கள்ளக் குறிச்சியிலிருந்து இரண்டாயிரம் ரூபாய் கெட்டிப்பணம் வந்தது அதை மாத்தி ரூபாயாய் நாளையதினம் செலுத்திப்போடுகிறேனென்று சொன்னேன். அப்பால் சின்னதுரை வந்து செஞ்சி கில்லேதாரன்பேரிலே களவு சம்மதி வாங்கிக்கொடுக்கிறோமென்று சவுந்நாயிருநூத்தைம்பது வராகன் வாங்கிக் கொண்டு அந்தக்களவும் வாங்கிக்கொடுக்கவில்லையாம் ஆனபடியினாலே அந்த வராகன் கொடுக்கவேணுமென்று பித்திசாமெழுதிக்கொடுத்தார்களே அந்தச் சம்மதி முன்னாலே சொல்லியிருந்தாப்போலே ஆச்சுமிந அதை தீர்த்துப் போடவேணுமென்று சொன்னாரதுக்கு வெளிப்பேச்சு பாது நடந்த சம்மதி அவர்கள் தங்களுக்கு கவையில்லை. தான் தானே பாளையக்காரன் கையில் வாங்கிக்கொள்ளுகிறோமென்று திருடனையும் விடுவித்துக்கொண்டு தன் வசம் பண்ணிக்கொண்டு பணம் சென்றதாய் சீட்டுமெழுதிக் கொடுத்துப்போனா னென்று அவர்கள் சொல்லுகிறார்களென்று சொன்னதுக்கு நீர் நாளைக் காலத் தாலே விசாரிப்போமென்றுசொல்லி காசுக்காரர் முத்துக்குமரப்பசெட்டி மஞ் சினீர் குடிச்ச வியாச்சியமொன்று வுன்னை நேமித்திருக்கிறேன். அதுவும் நீர் யிருந்துப் போட வேணுமென்று சொன்னார். நல்லதென்று சொல்லி யென் னேரஞ் சொன்னபடியினாலே ஞாயம் பார்த்தால் கன்னியாதானம் என்ற யிருக்குதென்று ஒன்றுஞ் சொல்லாமல் மய்யமாய் யெழுதச் சொன்னார்கள். நான்புறப்பட்டு பாக்கு கிடங்கிலே வந்தேன். செஞ்சி கில்லேதார் மகன் அண்டைக்கு சின்னதுரை சொல்லி அனுப்பினதாய் செஞ்சி கில்லேதார் மகனும் இவ்விடத்துக்கு வந்து சொன்னார். நானும் சின்னதுரை சொன்ன

சேதியும் சொல்லி நாளைக் காலத்தாலே கோட்டையை வரச்சொல்லி போகச் சொன்னேன்.

ஆச்சாரப்பமுதலி பெண்சாதிக்கும் ஆச்சாரப்பமுதலி தம்பி தைரிய முதலிக்கும் விபகாரமிருந்ததை முன் மகாராயராயஸ்ரீ துரையவர்களுந்தாம படிக்கு நான் மகாநாட்டாரை அழைத்து தீர்த்துப்போடச் சொல்லி சொன்னத்துக்கு லக்ஷ்மணநாயக்கர், சங்கரய்யர், சுங்கு முத்துசாமி செட்டி, சேஷாசல செட்டி, சிதம்பல செட்டி, முதலானவர்கள் வந்து ஒரு எட்டிலே எழுதி வந்து படித்து சொன்னதென்ன வென்றால்: தைரிய முதலி சொல்லுகிறதினாலே கன்னியாதான மென்று சொல்லக்கூட யில்லையென்றும் ஆச்சாரப்பமுதலி பெண்சாதி புரோக்கிதோர் மலையப்ப முதலி சொல்லுகிறதினாலே பரியம் போட்டதுதானென்று சொல்லுகிறதுக்கும்கூட யில்லையென்று யெழுதிவந்து படித்தார்கள். படித்த மகாநாட்டார் இருவரிலே வொருத்தர் ஞாயஸ்தர் பென்றும் ஒருத்தர் அபத்தம் என்றும் பிரபஞ்சமெல்லாம் தீர்ப்பார்கள் நீங்களிருவரையும் வியாச்சியம் செயிக்கப்பண்ணுகிறது புதுமை லோகத்திலே கண்டதாய் கேட்டதாயில்லை. ஆனாலிந்தப் புதுமை உங்களிடத்திலேயும் யிந்த வியாச்சியனிடத்திலேயும் கண்டோமென்று சொல்லி அப்பாலிதைப் பின்னை ஒரு விதமாய்ச் சொன்னால் பாதிரிமார் முதலானபேர் நாம் கனகராய முதலியார் வீட்டின் பேரிலே அக்கசு பண்ணுகிறோம் என்றும் யிந்த வியாச்சியத்தை நான் தூண்டிக்கொடுக்கிறேனென்று சொல்லுகிறதிற்கு அந்நாட்சி சரியாயல்லோயிருக்கும் ஞாயத்தைப் பாராட்டுகிற காலமல்லவோ ஆனபடியினாலே நாமாய்ச் சொன்னாலல்லோ அவர்களுக்குடனே யெச்சரிப்போம் நாளை வாருங்கோளென்று சொல்லிப்போகச் சொன்னேன். சின்ன முதலியிவர்களுக்கெல்லாம் நீங்கள் கன்னியாதானமென்று சொன்னால் பதினையாயிரம் வராகன் வாங்கிப்போடுவார்களென்று................

சுக்கில ஞு மார்கழி மீ 19 உ க்கு 1749 ஆ டிசெம்பர் மீ 30 உ அங்காரகவாரம்

இற்றைநாள் சாயங்காலம் ஆறரை மணிக்கு துரையவர்கள் அழைத்தனுப்பிவித்து முத்துமல்லா செட்டி தானிய தவசம் வகையரா வித்துமுதல் கணக்கு வந்ததாவென்று கேட்டார் வந்ததது அதையும் யிவ்விடத்துக் கணக்கும் தாக்கீது பண்ணிக்கொண்டு அப்பால் விக்கிறய பணமும், கணக்கும் கொண்டு வந்து கொடுக்கிறேனென்று சொன்னேனதற்கு யிந்தக்காரியம் உன் மாரிபத்தில் அல்லாமல் போச்சுதே யெந்தக்காரியமும் நீர் சுறுசுறுப்பாய் பார்க்கிறதில்லை. மெதுவிலே கொண்டு வருகிறபடியினாலே தாமதித்துப் போகுதென்று ஒரு சாடையிலே சொல்ல வந்தார். வாருமையா நீங்களிப்படி சொன்னால் நான் செய்யத்தக்கதென்னயென்று வேலையிலுடைய

குணமென்று யென்னைவேண்டியதே யல்லாமல் மற்றபடி அல்லா. முத்து மல்லாரெட்டி தம்பி மதாம் வழியிலே வந்து உங்களுடனே பேசி முத்து மல்லாரெட்டியைப் பிடித்துவர சகல யெத்தனமும் பண்ணி பிடிக்கப்போன விடத்திலே அவன் தப்பிப்போய் அவன் பெண்சாதிபிள்ளைகளைக்கொண்டு வந்து சாவடியிலே காவல்பண்ணி உடனே யித்தனை பிறயத்தனம பண்ண வன் காலம் பண்ணிப்போனவுடனே மதாமும் நீங்களும் நிராசைபண்ணிக் கொண்டீர்கள். முத்துமல்லா ரெட்டியும், சின்ன பரசுராமன் வழியிலே நொண்டி சவரிமுத்துவழியிலேயும், நாலாறுதரம் பேசினதும் திரும்பியும் பிறண்டு போனதும் அப்பால் அன்வர்த்திகானை கூட பவுஞ்சைக்கூட அழைப்பித்துப் பார்த்தும் அவன் பெண்சாதி போனால்தானே போச்சு யென்று நிராசை பண்ணிக்கொண்டு இருந்தான். அப்படியிருக்கச்சே அன்வர்த்திகான் விழுந்துப்போய் சந்தாசாயபு சுபாவுக்கு யெசமானை பிற்பாடு மெள்ள பிறயத்தனம் பண்ணிக்கொண்டு யிருந்தான் அதிலேயும் சுவாரசிய மில்லாமல் போனபிறகு யிதிலே நாசர் சங்கு வாராரென்கிற கபுரின் பேரிலே செங்கல்பட்டுக்குப் போய் சம்பத்திருபன் தம்பி உக்கு மத்து ராயனைக்கண்டு பேசிக்கொண்டு யிருந்தேன். அது மெதுப்பட்டாப் போலே சென்னப்பட்டணம் போய் விட்டானிந்த சேதியெல்லாம் உங்களு டனே அப்போதைக்கப்போது நான் சொல்லிக்கொண்டு வந்தபோது நீங்கள் திண்டிவனத்தைக் குத்தகை வாங்கி அவன் தானிய தவசம் முதலானதை விற்கிறப்போலேயும் பசுமாடுகள், எருதுகள், விற்கிறப்போலேயும் பண் ணினால் அதின் பேரிலே மார்க்கத்துக்கு வருவானென்று நீங்கள் சொன்ன படிக்கு திண்டிவனத்தையும் குத்தகை வாங்கி தானிய தவசம் மாடு முத லானதை விற்கிறயம் பண்ணின பிற்பாடு யென்வழியிலே சேஷாசல செட்டி மாரிபத்தில் பேச்சுவார்த்தை நடத்தினான் அதற்கு நான் மதாமுடனே சேந்த காரியம் அங்கேதானே பேசிக்கொள்ளுகிறதே அல்லாமல் யென்வழிலே பேசவேண்டாமென்று சொல்லி யென்னுடனே அவர்கள் பேசினதுகை உங் களுக்கு நாற்பதினாயிரமும் யெனக்கு அய்யாயிரமும் ஆக நாற்பத்தையா யிரம் ரூபா பேசினார்கள் என்று உங்களுடனே சொன்னதற்கு நல்லது மதாம் வழியிலே பேசப்பண்ணச் சொன்னபடிக்கு அவர்கள் மதாம் வழி யிலேபேசிக்கொண்டு உங்களுடனே தீர்ந்துக்கொண்டு குஞ்சு குழந்தைகளையும் விடுவித்துக்கொண்டார்கள். நீங்களும் என்னுடனே இதுவரைக்கும் அவர்கள் தானிய தவசம் பசுமாடு முதலானதுகள் வித்ததுகளுக்கு உள்ள பணத்தையும் கணக்கையும் கொண்டுவந்து முதலிடச்சொல்லியும் யினிமேல் விற்கவேண்டா மவர்கள் தட்டுமுட்டு அவர்கள் வசத்திலேநின்றதை ஒப்பித்துப்போடச்சொல் லியும் உன் கிராமத்திலே கொள்ளையிட்ட தானிய தவச முதலானதுகள் கொடுத்துவிடச் சொல்லுகிறோ மென்றும் திண்டிவனஞ் சீர்மை அவனுக்கு

கவையில்லே. அவன் தம்பியை நாட்டுத் தனத்துக்கு வைத்துக்கொண்டு நீ யெப்படி சீர்மையிலே பணந்தஸ்து பண்ணிக்கொண்டு ஆதாயம் க்ஷயம் உன் புறமாக்கி நடப்பித்துக் கொண்டு வரச்சொல்லி சொன்னபடிக்கு நல்ல தென்று நடந்து கொண்டேன். அப்படியிருக்க நான் ஆலசியம் பண்ண தென்ன, என்னைத் தொட்டு தாக்ஷியென்ன நான் பழிக்குக்கூட ஒட்டி நடத்தின படியினாலே அல்லோ அவர்கள் மார்க்கத்துக்கு வந்தார்கள் யிப்போ நடுவே பேசினவர்களெல்லாம் அவரவர் மாபிக்கு ஆதாயம்கொண்டு போனார்கள். நான் நாளது வரைக்கும் உமக்கு ஆதாயம் வந்தால் போதும் ஆருடைய துவேஷம் ஆனாலும் ஆகட்டுமென்று நடத்தினதற்கு நீங்களிப்படி சொன்னால் யென்னுடைய வேளையினுடைய குணமென்று யெண்ணிக் கொள்ளவேணுமென்று யென் மனதை நான் தானே நொந்துக்கொண்டேன் என்று சொன்ன மாத்திரத்திலே அவருக்கு சற்று கோபமாய், முத்துமல்லா ரெட்டி சம்மதி கணக்கும் வித்துமுதல் பணமும் கொண்டுவந்து கொடுத்து தீர்த்துப்போடுயென்று சொன்னார். யின்று நாளைக்குள் கொடுத்துத் தீர்த்துப் போடுகிறேனென்று சொன்ன உடனே வூரிலே ஜனவரிப்பண்டிகைக்கு அவ ரவரை மொகரா கொண்டுவரச்சொல்லி பொற்சாது பண்ணுகிறியாம் அவர் கள் வூரெல்லாம் கூக்குரல் போடுகிறார்களாமென்று சொன்னார் நீர் யிருந்து கொண்டு புடவைக்கொண்டு வருகிற வாடிக்கை நல்ல வாடிக்கை அல்ல மோகரு வாயாகிலும் வராகனாகிலும் கொண்டுவரப் பண்ணென்று சொன்ன படியினாலே நல்லதென்று உம்மைதானே மோகரு கேட்டு வாங்கி அவர்கள் கையில் கொடுத்து உம்முடைய கையிலே கொடுக்கப்பண்ணினேன். உம் முடைய ஆதாயத்தைக்குறித்து செய்ததேயல்லாமல் நானொரு காசு பிறயோ சனமுமறியேன் உம்முடைய அமுலிலே சகலப் பிரயாசைப்பட்டு நான் பொல்லாதவனெண்பித்துக்கொண்டு உன் மனதின்படிக்கு நடந்து கொண்ட துக்கு மதாம் மூணுவருஷமாய் கடைக்காரன் கூலிக்காரனைக்கூட அழைப் பித்து ரங்கப்பனுக்கு யென்ன கொடுத்தாயென்று விசாரித்தாள் கலியாணத் துக்கு யெங்களுக்குள்ளே மேர் எழுதிவைக்கிற வாடிக்கை உண்டு அதுகூட விசாரித்து அப்படியேதாகிலும் ஒருகாசளவிலே யிருந்தால் நான் யிந்த வூரிலே அரை நாழிகை நிற்க மாட்டேன் என்று யிப்படி மீதாம் விசாரித்து உங்களுடனே யெத்தினஞ் சொன்னாள் நீங்களெத்தினை விசாரித்தீர்கள் சொன்னவர்கள் அபத்தக்காரராய்ப்போன சம்மதி எல்லாம் உங்களுக்கு நன்றாய் மனதிலே யிருந்தும் நீங்களிப்படி சொல்லுகிறது யென்னுடைய வேளையினுடைய குணமென்று யெண்ணிக்கொண்டேனென்று சொன்ன மாத்திரத்திலே மனதில் யிவன் முறுக்காய் பேசுகிறானென்றும் சற்றுக் கோபம் தோன்றின சாடைகளிது. அதின்பேரிலே மறுபடி துரையவர்கள் காங்குப்புடவை முதலானதுகள் முஸ்தீது ஆச்சுதாவென்று கேட்டார். முஸ்தீதாகுதென்று சொன்னதின்பேரிலே நீ கும்பினீருக்கு வராகன்

கொடுக்கவேணுமே அதற்கு வருஷத்துக்கு அய்யாயிரம் வராகன் விழுக்காடு செலுத்திப்போடுகிறேன் என்று சொன்னீர்ப் யிப்போவானால் நீ திருவதி புவனகிரிவகை ஆறேழு பற்காணு வெகு சதிருய் குத்தகை வாங்கி யிருக்கிருய் அதிலே உனக்கு பத்து பணம் விசேஷமாய் ஆதாயங் கூடிவருமே யிதல்லாமல் உனக்கு இனுமாய்ச் சந்தாசாயபு அஞ்சு கிராமம் கொடுத்தான். அதிலே பதினுயிரம் ரூபா மட்டுக்கும் வருமே உனக்கு வந்த நஷ்டமெல்லாம் யிந்த வருஷமெல்லாம் கூடிவருமே கும்பினீர்பணம் சொன்னபடிக்கு அய்யாயிரம் வராகனும் செலுத்தி யிந்த ஆதாயத்துக்குள்ளேயும் பத்துபணம் விசேஷித்து செலுத்தினுலுனக்கு பளுவுதீர்ந்துபோமென்று சொன்னூர். மெய்தான் நீங்கள் சொன்னது ஆனல் ஆனிவரைமட்டுக்கும் சுராயிதமாயிருந்து நிலுவையில்லாமல் சாடாவாய் வந்தால் கூடிவருமே அல்லாமல் நிலுவைநின்ருல் இசாரா பணம் செல்லுகிறதல்ல வருத்தமாயிருக்கும் நீங்கள் சொன்னபடிக்கு பத்துபணம் விசேஷித்துக்காணும் இந்த வருஷம் போனவருஷம் பேய்ந்த மழையைப்போல பேஞ்சால் அது மட்டாய் போனபடியினலே சம்பா பலன் யெடுபட்டு போனபடியினலே அல்ப சுவல்ப ஆதாயத்தோடே நிற்குமோ யென்னமோ தெரியாதுயென்று சொல்லி நான்கொடுக்கவேண்டியது உங்களுக்குத் தெரியாததல்லவே யெனக்கு இங்கிலீசுக்காரர் கலாபம் வந்தபடியினலே வியாபாரம் தொட்டாப்போலே நின்றதினலே யிவ்விடத்திலே ஒரு பறங்கிப் பேட்டையிலேமாத்திரம் வீடு வாசல் நிலுவை வகையரு பதினையாயிரம் வராகன்மட்டுக்கும் நின்றுபோச்சு...............

**சுக்கில ஞூ மார்கழி மீ 20 உ ம்ரு 1749 ஆ தெசாம்பர் மீ 31 உ புதவாரம**

இற்றைனள் சூரிய உதயவேளையிலே மொகங்கழுவிக்கொண்டு விபூதியிட்டுக்கொண்டு உட்கார்ந்துயிருக்கச்சே வண்ணூந்துரை கணக்கு கணபதி பிள்ளை வந்து சொன்ன சேதி யென்னவென்ருல்: சின்னமுதலியார் விட்டிலே வரலாம், தைரியம் பிள்ளையும் இரண்டொருத்தர் கூடயிருந்து பேசிக்கொண்டிருந்ததாய் அவ்விடத்து மனுஷன் யெனக்கு உண்மையாய் வந்து சொன்னசேதி யென்னவென்ருல்: மசுக்கரைக்கு சீர்மைக்கப்பல் வந்ததாம் அதிலே துரைத்தனமும் கோன்சேலியேர் கூட வந்து யிருக்கிருர்களென்றும் அவர்களிந்த மாதத்தைக் கடசியாவது தைமாதத்திலேயாவது கப்பல் வருகுதென்றும் அந்தக்கப்பல் வந்த துரைத்தனம் வேறேயிருக்கிற படியினலே சீர்மையிலே தானே தைரிய முதலி பேருக்கு துவிபாசித்தனம்கூட எழுதிவருமென்றும் இனி பத்து பதினைந்து நாளையிலே ஒரு மாதத்துக்குள்ளே தானே சகல வேடிக்கையும் பார்ப்பீர்களென்றும் ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கொண்டு

நகைத்துக்கொண்டு யிருக்கிறதாயும் பின்னை அனேகம் சிகிற்தியான பேச்சு கள் பேசினார்களென்று இப்படியாக வந்து சொன்னான். மெத்தவும் நல்ல தாச்சுது அப்படி அவரவருக்கு பிராப்தியிருந்தால் விடத்தக்கதில்லை. நாமெப்போதும் யிந்த உத்தியோகந்தான் யெங்களுக்கு வர்த்தகம் யிதுவும் கலந்துவரும் பேருக்கு ஒருத்தரிருப்பார்கள். இப்போ நாம்தானென்று துரைகள் நேமித்து யெல்லாகாரியமும் யென்னைத்தானே பார்க்கச்சொன் னாரேயல்லாமல் நானாகப் பிறயத்தனம் பண்ணதில்லை யிப்பவும் அவர்க ளுக்குக் கொடுத்தால் மெத்தவும் நல்லதுதான் சிறமையில்லை யென்று சொல்லி உமக்குச்சொன்னதாரென்று கேட்டேன் பாமுனாத பிள்ளை சொன் னாரென்று சொன்னான் மெத்தவும் நல்லதாச்சுதென்று கோட்டையிலே நேத்தியதினம் காரைக்காலிலிருந்து புடவை வந்துதே சலவைக்கு விட வேணுமே நீ போவென்று போகச்சொன்னேன். அப்பால் திருவீதி சேர்மை யாரிலே சிறுபேர் வந்து பேசியிருந்தார்கள். அப்பால் கோட்டையிலே புடவை பார்வையானபடியினாலே கோட்டைக்குப் போய் நாற்பத்தஞ்சுக் கட்டுப்போட்டு ஆக பதினோருமணிமட்டுக்கும் யிருந்து அப்பால் முசியே கொற்னேத்து வீட்டுக்கும் போய் அவனண்டையிலே கணக்கு தீர்த்துக் கொண்டு அங்கே பேசிக்கொண்டிருக்கச்சே துரை அவர்கள் சேகுவன் ஒருத்தன் ரெண்டு மூணுபேர் வந்தார்கள். வந்தவுடனே முசியே கொற்னே கையிலனுப்பிவித்துக்கொண்டு துரையவர்கள் வீட்டுக்கு வந்தேன் அங்கே நம்முடைய கும்பினீர் கிராமங்கள் பாகூரிலே இங்கிலீசுக்கார சொல்தா துகள் வந்தாப்போலேயும் அந்தச் சொல்தாதுகளை அவர்கள் சேவகர் கூட துடர்ந்து வந்துப்பிடித்து அதின்பேரிலே தேவனாம்பட்டணத்திலிருந்து வெள்ளைக்கார ஒபிசியால் ஒருத்தனும் வெள்ளைக்கார சொலுதாதுகள் சிப்பாயிகள் வகையரு நூறுபேர் மாத்திரம் வந்து பாகூர் கோட்டையிலே யிருந்து தேவனாம்பட்டணத்திலிருந்து ஓடிவந்த ரெண்டு இங்கிலீசுக்கார சொலுதாதுகளையும் பிடித்துக்கொண்டு போனார்களென்று அந்தச்சேதி துரையவர்களுடனே சொன்னதின் பேரிலே கோன்சேல் செக்கிரத்தேர் முசியே போலோன் முன்பாக அங்கேயிருந்து வந்தவர்கள் சொல்லவும் அவர் எழுதி அந்தக்காகிதத்தை தேவனாம் பட்டணத்துக்கு அனுப்புகிற தற்காக யென்னை அழைக்கச் சொன்னது யென்று சொல்லி முசியே போலோன் அண்டையிலே உட்கார்ந்து அவர்கள் நடந்தபேச்சை சொல்லு வார்கள். அந்தப்படிக்கு முசியே போலோ கையிலே யெழுதிவையென்று சொன்னார், அந்தப்படிக்கு முசியே பெடுத்துரும் கபினேத்திலே முசியே போலோ முசியே பெடுத்துரும் நான் மூணுபேரும் உட்கார்ந்துக்கொண்டு பாகூரிலிருந்து வந்த................

இற்றைநாள் பகலைக்குமேல் கோட்டையிலே ஜூரிக்கப்புடவை பார்வை பார்த்தபடியினாலே கோட்டைக்குப் போயங்கே யிருந்து துரைவீட்டுக்கு வந்து அவ்விடத்திலே தஞ்சாவூர் சமாச்சாரம் முதலானதுகள் 'பிரஸ்தாபம் பண்ணிக்கொண்டு இங்கிலீசுக்காரர் யென்ன பைத்தியக்காரர்கள் நம்முடைய யெல்லையிலே வந்து பிடித்துக்கொண்டு போகிறதற்கு யென்று கேட்டார். பயித்தியக்காரர்களல்லாமல் போனால் யிப்படி நடத்துவார்களா வென்று சொல்லி அப்பால் சுங்கு வெங்கிட்டாசலசெட்டி குமார்கள் தேவனாம்பட்டணத்திலே கலியாணம் பண்ணிக்கொண்டதும் அப்பாலவர்கள் தோட்டத்தை மேஸ்தர் பீட்டி மேஸ்தர் பிரிங்கன் துரைத்தனத்திலே இடித்துப்போட்டு சிந்தாதிரிப்பேட்டை பிக்கின் சம்மதி சீர்மையிலேயிருந்து யெழுதிவந்ததாயும் அந்த தோட்டத்துக்கு நாலாயிரம் வராகன் யிவர்களுக்குக் கொடுத்ததாகவும் இதல்லாமல் ஒப்பந்தம் கொடுத்து பதினாயிரம் வராகன் சரக்குகூட்டிக்கொடுத்து அரிகை தீவட்டி கொடுத்ததாகவும் சேதி கேழ்விப்பட்டு தென்று சொல்லி சொன்னதின் பேரிலே தம்பு செட்டி தம்பி தேனிய சிங்கசெட்டி பேச்சென்ன வென்று கேட்டார். அவனுக்கு வொப்பந்தம் கொடுத்து முன் அவன் தமயனுக்கு நடந்தாப்போலே இவனுக்கும் பல்லேக்கு தீவட்டி கொடுக்கப் போகிறார்களென்றும் இது நிமித்தியம் யிவர்களுக்குச் சிலவான சம்மதியும் சொல்லக் கேட்டுக்கொண்டிருந்து அப்பால் ராச்சூருக்கு சயிது லசுக்கர்கான் வந்த சேதியும் அவன் கொள்ளையிட்ட சேதியும் முதலானது பேசி அப்பால் கிஷ்ணை முதல் கன்னியாகுமரி மட்டுக்கும் யெழுதியிருக்கிற ஊர் பேர் காகிதம் எடுத்துப் பார்த்து ராச்சூர் யின்னவிட மென்று ஆதி வன்னி (Adoni) முதலான விடங்கள் பார்த்துக்கொண்டு அப்பால் தாஞ்சாவூர் கோட்டை எழுதியிருக்கிறது பார்த்துக் கொண்டு அதுக்கடுத்த பேச்சுப் பேசிக்கொண்டிருந்தார் அப்பால் சிதம்பரத்தில் சேக்கு அப்துல் ரயிமான் சிப்பாயிலே ரெண்டுபேர் ஓடிவந்து யிருக்கிறார்கள். அப்துலாகானென்றும் அகமதுகானென்றும் அவர்களை ஒப்பிக்கச் சொல்லி சிதம்பரம் முத்தாமியாவுக்கு காகிதமெழுதி அனுப்பவேணும் லோஸ்தியென்கிறவன் வந்து உத்தரவுகேட்டான். யென்னை யழைத்து யெழுதிக் கொடுக்கச் சொன்னார். அந்தப்படிக்கு யெழுதிக் கொடுத்தேன். மற்றப்படி விந்தையான சேதி கேழ்விப்படவில்லை. இந்த நாள் கேழ்விப்பட்டசேதி யென்னவென்றால்: நாசர்சங்கு கிஷ்ணை நதிக்கிப் புறம்ராச்சூர் என்கிற இதாயத்து மொகதீன்கானுக்கு முன்னே நிசாம் கொடுத்திருந்த கோட்டையும் சீர்மையும் வந்து சேர்ந்ததாய் செங்கல்பட்டிலேயிருக்கிற சயிந்தல்லிக்கானண்டைக்கு காசிதுகள் கபுறு கொண்டுவந்ததாகவும் அந்த சந்தோஷ சமாச்சாரம் கொண்டு வந்தவர்களுக்கு முன்னூறு ரூபாய் வெகுமானம் கொடுத்து மிகுந்த சந்தோஷத்துடனே யிருக்கிறதாயும்

செங்கல் பட்டிலே யிருந்து நன்னுச்சி ருதுசாந்தி கலியாணத்திற்கு வந்தவர் களிந்தனுள் ராத்திரி சொல்ல கேழ்வியானேன். இதல்லாமல் மனேசியப்பா தஞ்சாவூர் கோட்டையிலே யிருந்து புறப்பட்டு வந்து விழுந்து ஒரு நாள் ராத்திரி சண்டையிலேயிருந்து அதினுலே வெகுசனங்கள் காயமும் சேதமும் பட்டு அவர்களிலே இவர்களிலேயும் ஆனதாயும் மறுபடி பணம் ஒடம் படிக்கை பேசினதை விட்டுவிட்டு திரும்பியும் சண்டை பண்ணுகிருர்களென்றும் மருந்துக் குண்டுகளனுப்பச் சொல்லி காரைக்காலுக்கு யெழுதி வந்ததாயும சிறிது காயக்காரர்கள் வந்து சேர்ந்ததாயும் முசியே பொசேத்துக்கு சேக்கு அப்துல்ரயிமான் யெழுதியனுப்பினதாய் படித்துப் பார்த்தக் கடுதாசி மத்தலப்பும் மதனுந்த பண்டிதன் யென்னுடனே சொன்னுன்.

**சுக்கில ஞ மார்கழி மீ 21 உ க்கு 1750 ஆ ஜனவரி மீ 1 உ குருவாரம்**

ஜனவரி பண்டிகை இந்தனுள் காலத்தாலே ஜனவரி பண்டிகையான படியினுலே துரையவர்களை சந்திக்கப்போனவிடத்திலே மதாம் துப்பிளேக்சுவைக்கண்டு மாதளம் பழத்தைக் கொடுத்து நல்ல வருஷம் நல்ல மாசம் நல்ல ஆரோக்கியம் முதலானது சுவாமி கொடுக்க வேணுமென்று உபசாரம் சொன்ன விடத்திலே அவள் கண்ணீர் விட்டழுது துரை சீர்மைக்குப் போகாமலிருக்க வேணுமென்று சுவாமியைப் பிரார்த்திக்கிறேம் என்றும் நீங்களும் பிரார்த்தியுங்கோள் என்று அழுதாள். அப்படி நான் பிரார்த்திக்கிறேம் என்று சொன்னேன் இதிலே துரை மச்சினச்சி மதாம் தொத்தேல் முதலானவர்களும் அவன் பிள்ளைகள் முதலான பேர்களும் சகலபாடிகள் மச்சினச்சி மகளைக்கொண்ட முசியே பிரியேல் முதலானவர்கள் வந்து பண்டிகை உபசாரம் சொன்னவர்களுக்கெல்லாம் இந்த வருஷம் மாத்திரம் யென்னைப் பார்க்கப்போகிறது முன் ஞ ஜனவரி பண்டிகைக்கு யென்னைப் பார்க்கப்போகிறதில்லையே என் இவர் வெகு துக்கத்துடனே அவரவரை மெனவ அவரவர் கண்ணீர் விட்டு அங்கலாயக்க இந்தப்படி துக்கமாய் மனது வெகு கிலேசத்தை அடைந்து அந்தச் சின்ன முகத்திலே காண்பிக்க யிருக்க நான் போய் ஒரு மாதளம் பழம் கொடுத்து சுவாமியுமக்கு நல்ல வருஷமும் கொடுத்து உம்முடைய ஆயுசு வெகு காலமிருக்கவும் உமக்கு இந்த ராச்சியத்திலே யிருந்து யெங்கள் மனதுக்கு சந்தோஷம் கொடுத்துக் கொண்டிருக்கத்தக்கதாகவும் நடத்த வேணுமென்று சுவாமியை பிரார்த்திக்கிறேம் அதெப்படி யென்றுல்: முன் யேரோப்பு ராச்சியத்துக்கு திக்கு விஜயம் கொண்டவர் லூயிசு கத்தோர்சு யென்கிற பதினலாம் ராசாவும் முன் யெங்கள் இந்திய ராச்சியத்திற்கு அபரங்கபாற்சாவையும் முன் யெங்களுக்கு முன் இருந்தவர்கள் கண்டார்கள். நாங்கள் கேழ்விப்பட்டு யிருந்தோம் இப்போ அறுவது வருஷத்துக்கு பிற்பாடு ஒருத்தரையுங் கேழ்

விப்பட வில்லை. இப்போ அதற்கு பதிலாய் தற்சமயமாய் உமமைபார்த்தோம் என்றும் ஆனபடியினாலே இந்த ராச்சியத்திலே செயத்தைக் குறித்து கீர்த்தி உமக்கு அடைய வேணுமென்று சொல்லத்தக்கதில்லை. இது ரெண்டும் சுவாமி பூரணமாய் தயவு பண்ணியிருக்கிறபடியினாலே அதை சிந்தியாமல் மேலே யெழுதப்பட்ட ஆயிசையும் இங்கே இருக்கத்தக்கதாக சுவாமி தயவு பண்ண வேணுமென்று சுவாமியைப்பாத்து பிரார்த்தித்ததென்று சொன்ன தற்கு யெப்போதும் நானிப்படி உத்தியமாய்ச் சொல்லுகிற சொல்லுக்கு வெகு சந்தோஷத்துடனே உத்தர பிரதியுத்தரம் சொல்லுகிறவர் மொகத்தைப் பார்த்தும் பாராமல்கூட நான் சொல்லுகிற சொல் காதிலே கேளாத போலே யிருந்தார் அப்பால் பிள்ளையும் மதனந்த பண்டிதன் யேனம் அந்தண்ன் முதலான கும்னீர் உத்தியோகஸ்தர் சமஸ்தமான பேரும் எலுமிச்சம் பழம் கொடுத்தார்கள் அவர்கள் மொகம்கூட பார்க்காமல் வாங்கிக்கொண்டார். அப்பாலுடனே கோயிலுக்குப் பூசைக்குப்போக வேணுமென்று புறப்பட்டுப் போகச்சே நாங்களனைவரும் ஆசாரம் பண்ணினோம் அங்கே அப்பால் புறப்பட்டு முசியே லெகு முதலானவர்கள் வீட்டுக்கு யெல்லாம் யெப்போதும் வாடிக்கைபடிக்கு வெள்ளைக்காரத்தெருவுக்கு யெல்லாம் கடசியிலே சம்பரவுலூ கோயிலுக்குப் போனோம். அவர் யெப்போதும் போனால் யெலுமிச்சம்பழம் கொண்டுவந்தால் கையினாலே தொட்டு வாங்கப்போகாதென்று சொல்லுவார்கள் இந்த வருஷம் வாங்கிக்கொண்டு சொன்ன உபசாரத்தையும் அங்கீகரித்து பதிலுபசாரமும் மார்க்கமாய்தானே சொன்னார்கள். அங்கேயிருந்து தானப்பமுதலி மேருகிரி பண்டிதர் குமாரன் முதலான பேர்களை அவரவர்கள் அனுப்பிவித்துக்கொள்ள நான் துரையவர்கள் வீட்டுக்குப் போகச்சே துரையவர்கள் சேகுவன் வந்து துரையவர்கள் யழைக்கிறாரென்று அழைத்தான். போனவிடத்திலே யித்தனை பெரிய பண்டிகையிலே வீடெல்லாம் நிர்மானுஷியமாய் அசோபிதமாய்க் கண்டதுக்கு சரியாய்யெசமானும் மூலை வீட்டிலே உட்கார்ந்துகொண்டு ஸீவுரை கையிலே பிடித்துக்கொண்டு முகவிலாசம் தப்பியிருக்கிறது. இந்த யெட்டு வருஷத்திலே யிப்படி ஒரு நாளுமிருந்ததில்லை. அத்தனை முகத்திலே வேசுண்ட காண யிருந்தார். அப்போ போனவுடனே தக்காசாயபு அண்டையிலே யிருந்து ரெண்டு சேவுகர் அல்லிநகீம் சாயபு ஒரு காகிதமும், தக்காசாயபுது ஒரு காகிதமும் அனுப்பினார்கள். அது ரெண்டு காகிதமும் முன் தஞ்சாவூர் மோறசாவை வாங்கிக்கொண்டதுக்கு மொபாற்கு பாதி யெழுதியிருந்தது. அந்தச் சேதியைச் சொன்னேன். அப்பால் புடவை சீலை சீக்கிறமத்துக்கு அழைப்பிக்கவேணுமென்று சொல்லிப்போவென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவித்துக்கொண்டு நம்முடைய பீறேவை வந்து அங்கேயிருந்து பணிரெண்டு மணி

யடித்து உடனே வீட்டுக்குப்போனவுடன் வண்ணாந்துறைக்கு பகலைக்கு மேலாக போய் விசாரித்து பாக்கு கிடங்கிலேயிருந்து அப்பால் வீட்டுக்கு வந்தேன்.

**சுக்கில ௵ மார்கழி ௴ 22 உ க்கு 1750 ஆ ஜனவரி ௴ 2 உ சுக்கிரவாரம்**

இற்றைனாள் நன்னாச்சிக்கிருது சாந்திகலியாணமானபடியினாலே நாச்சணப்பிள்ளை முதலானபேர் செங்கழுநீர்பட்டு பாளையத்திலிருந்தும் வந்தார். சாயங்காலம் துரையவர்கள் அழைத்தனுப்பி தானாசாரிக்குப்போன கப்பல் யேனும் மச்சிலிபந்தர் பிடித்து புடவை சீலை யேத்திக்கொண்டு வந்தது. அதெல்லாஞ்சுறுக்கிலே சலவையாக வேணும். இதற்கு வண்ணார் முதலான பேர்களை அழைப்பித்துக் கட்டணைக்காரர்களையும் அழைப்பித்து சுறுக்கிலே முஸ்தீது ஆகபாரென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் தனாசரியிலிருந்து அங்கேயிருக்கிற சோனகர்கள் மயிலாப்பூரிலே யிருக்கிற அசமத்துக்காரன் குண்டூர் பாலிசெட்டி வகையிராவுக்கு அஞ்சுபையிலே காகிதங்கள் போட்டு மேலே இன்னாருக்கு என்று பேரும் எழுதிவந்தது. அதை துரையவர்கள் யென் கையிலே கொடுத்தா யிந்த காகிதங்களாருதோ அவர்களுக்கு கொடுத்து விடென்று சொன்னார். இந்த அஞ்சுபைக்காகிதமும் மயிலாப்பூரிலே இருக்கிறவர்களுது அவர்களுக்கு அனுப்புகிறதற்கு குண்டூர் வெங்கிட்டாசலசெட்டி கையிலே கொடுத்தால் அவன் அனுப்பி விடுவான். அவர்களுக்கும் இதிலே ஒரு காகித பை யிருக்குதென்று சொன்னதுக்கு நல்லது கொடுத்து விடென்று சொன்னார். அதைக்கொண்டுவந்து குண்டூர் வெங்கிட்டாசலசெட்டி, கிருஷ்ணாயனும், நம்முடைய கிடங்கிலே யிருக்கச்சே கிருஷ்ணராயர் முன்பாக அவர் கையிலே கொடு அவர்கள் காகித பையை அவரை யெடுத்துக்கொள்ளச் சொல்லியும் அதை மயிலாப்பூருக்கு காகிதக்காரர்களண்டைக்கு அனுப்பிவிடச்சொன்னேன். அந்தப்படிக்கி நல்லதென்று வாங்கிக்கொண்டு அனுப்புகிறோமென்றார். அஞ்சு பைக்கும் சில தப்பு பெயர் வாறுய்யதின்கீழே யெழுதி யிருக்கிறது பார்த்துக்கொண்டால் தெரியவரும் அப்பால் நன்னாச்சிக்குருதுசாந்தி கலியாணமானபடியினாலே ராத்திரி இரண்டரை நாழிகைக்குள்ளாக லக்னம் நிஷ்க்கருஷை பண்ணியிருந்தபடியினாலே வீட்டுக்குப் போய் சகலமானபேர் வந்திருந்தவர்களுக்கெல்லாம் பாக்கு வெத்திலை பன்னீர் முதலானது கொடுத்து அனுப்பிவித்தேன். மற்றப்படி யிந்தனாள் சாயங்காலம் ஆறுமணிக்கு யிவ்விடத்திலிருந்து தானாசரிக்குப்போன சீர்மை கப்பல் பேர் பிறிவியாம் கப்பல் கப்பித்தான் பேர்........

இந்தக்கப்பலிலே வந்த காகிதங்கள் துரையவர்கள் யென் கையிலே கொடுத்து நான் குண்டூர் வெங்கடாசலத்தின் கையிலே கொடுத்து தனாசறியிலே யிருந்து வந்தபைகளில் காகிதங்கள் வயணம்........

**சுக்கில ளு மார்கழி மீ 23 உக்கு 1750 ஆ ஜனவரி மீ 3 உ சனிவாரம்**

இற்றைநாள் காலத்தாலே மழைத் தூத்தலும்துளியுமாயிருந்தபடியி னாலே நான் துரையவர்கள் வீட்டுக்குப் போனவுடனே இமாம் சாயபு மகன் அசல்லிகான் காகித மொன்றும் மீர்சத்துக் காகிதமொன்றும் ஆக இரண்டு காகிதம் வந்ததென்று சொல்லி இமாம் சாயபு மகன் காகிதச் சேதி சொன்ன வயணம் : தாங்கள் சந்தாசாயபு அன்வர்திகானை செயித்து ஆற்காட்டுக்கு வந்த உடனே யென் நிமித்தியமாய் தாங்கள் தயவுபண்ணி சந்தா சாயபுக்கு யெழுதின சிபார்சு காகிதத்தைக்கொண்டுபோய் கொடுத்து யெங்கள் கில்லா சாகீர்களுக்கும் கில்லாவுக்கும் ரூபாயிக்கு எட்டணா விழுக்காடு கில்லாக் களுக்கு படி போடுகிறபடிக்கு யெங்கள் கில்லாவுக்கும் சாகீருக்கும் இருப தினாயிரம் ரூபாய் படி போட்டபடிக்கு ஒன்பதினாயிரம் ரூபா கொடுத்தோம் மற்ற பதினோராயிரம் ரூபாயிக்கு எங்களுக்கு வேறே யீடு யில்லாததினாலே உங்களுக்கு யெழுதியனுப்பி ரூபாய் அழைப்பித்து கொடுப்போமென்று இருக்கச்சே இதிலே அல்லி நகிம் சாயபு தஞ்சாவூர் லசுக்கர் போய் சேர்ந்தவுடனே அங்கே யிருந்து அனுப்பிவித்துக்கொண்டு வந்தவாசிக்கு வாறவன் தியாககடைக்கு வந்து யெங்கள் குஞ்சு குழந்தைகளை சாப்பிட வொட்டாமல் தண்ணீருள்ளே போகாமல் பந்துபண்ணி அயிரான் பண்ணி வெகு கண்டிப்பெல்லாம் நடத்தி யிருபதினாயிரம் ரூபாயுக்கு சீட்டு ஒன்று ஒரு மாதத்தில் கொடுக்க வாங்கிக்கொண்டு புறப்பட்டுப் போனான். தங்க ளுக்கு யெழுதியனுப்பி உத்தாரம் அறிந்து சீட்டெழுதிக்கொடுப்போ மென்றால் அவன் பண்ணின கண்டிப்பினாலே சாவகாசமில்லாமல் யெழுதிக் கொடுத்தோம். யிப்போதும் தாங்கள் தயவுபண்ணி தங்களுக்கு சந்தா சாயபு கொடுக்கவேண்டிய பணத்திலே பதினோராயிரம் ரூபாய் செல்லு வைத்துக்கொள்ளச்சொல்லி ஒரு காகிதமும் அந்தக் காகிதத்திலே அல்லி நக்கீம் சாயபு வந்து பலவந்தம்பண்ணி சோறுவரியின்பேரிலே யிருபதினா யிரம் ரூபாய்க்கு உடன்படிக்கைப்பண்ணிக்கொண்டு போன சம்மதி கவையில்லாமல் பண்ணிப்போடத்தக்கதாக எழுதி அனுப்பவேணுமென் றும் யெங்கள் தகப்பனார் உங்கள் காரியத்திலே பிரயாசைப்பட்டது இப் படிப்பட்ட சமயத்துக்கு உதவுவீர்களென்று நடந்துகொண்ட நடத்தை யை யெண்ணி யெங்கள் வீட்டை நிலை நிறுத்த வேணுமென்றும் யெனக்குத் தாயுமில்லை தகப்பனுமில்லை நாங்கள் இரண்டுபேர் பெண்ணு, ஒன்று ஆண் ஒன்று யிருக்கிறவர்கள் உங்கள் ஆதீனம் பண்ணி எங்களாஸ்தியை உங்கள் வசமாக்கி யெங்கள் தகப்பனார் காலம் பண்ணிப்போன சம்மதி நீங்கள் அறிந் திருந்தும் உபேக்ஷைஷ பண்ணினால் சாகீரையும் கில்லாவையும் விட்டுப் போட்டு உங்களண்டையிலே வந்துயிருக்கிறோம் உங்களுக்கு சம்மதியான

படிக்கு நடப்பித்துக்கொள்ளுங்கோளென்றும் இனிமேலெங்களைத்தொட்டும் நிறுவாகமில்லை. என்றுமிப்படியாக யெழுதி காசிம்பாயியையும் அனுப்புவித்தோமென்றும் அவன் சொல்லச்சே தெரியவருமென்று எழுதியிருந்த சம்மதியெல்லாம் துரையவர்களுடனே சொன்னதற்கு பார்த்தாயா அல்லி, நகீம் சாயபு யெழுதின காகிதத்திலே உங்களாசிருவிலே இமாம்.சாயபு மகன் இருக்கிறானென்று ஒரு மார்க்கமாய் அவர்கள் சம்மதியை பைசல் பண்ணிப் போட்டேனென்று யெழுதி அங்கே இத்தனை சக்குத்தியா நடப்பிச்சானல்லவாயென்று சொல்லி நல்லது இருபதினாயிரம் ரூபாய் கொடுக்க இல்லையே ஒரு சீட்டல்லோ எழுதிக்கொடுத்தார்கள். அந்தச் சீட்டை மறுபடி வாங்கி கொடுப்போமே அல்லாமல் சந்தாசாயபுக்கு ஒரு காகிதமும் எழுதுகிறது இமாம் சாயபு மகன் கில்லாவுக்கும் சாகீருக்கும் ஒப்புக்கொண்ட இருபதினாயிரம் ரூபாயிக்கு அவர்கள் செலுத்தின.ஒன்பதினாயிரம் ரூபாய் போக மற்ற பதினோராயிரம் ரூபாயும் நீங்களெனக்குக் கொடுக்கவேண்டிய ரூபாய் வேலை யெழுதிக்கொண்டு அவர்களுக்குச் சென்றதுக்கு ரசீது கொடுத்து அனுப்பி இப்போ அல்லி நகீம் சாயபு வந்தவாசிக்குப்போறவர் யெங்கள் ஆசிருவிலே இருக்கிறவர்களென்று சற்றும் வைத்துப் பாராமல் அவர்களை வெகுசக்குத்தி பண்ணி இமாம் சாயபு மகன் கையில் இருபதினாயிரம் ரூபாய்க்கு உடன்படிக்கை பண்ணிக்கொண்டதான காகிதத்தை மாபு பண்ணி அந்த சீட்டை அனுப்புவிக்கச்சொல்லியும் இந்தக்காரியம் அவர்களுக்கு நடப்பிக்கிறது எங்களுக்கு நடப்பித்ததைப் பார்க்க ஆயிரம் பங்கு அதனமாய் அவர்கள் காரியம் எங்களுக்கு அகத்தியமானபடியினாலேயும் அந்தப்படிக்கு நடப்பிக்கவேணுமென்று எப்படி கண்டிப்பாயெழுதவேண்டுமோ அந்தப்படிக்கு சந்தாசாயபுக்கு ஒரு காகிதமெழுதி அனுப்பச்சொல்லியும் இமாம் சாயபு மகனுக்கு நீ ஒன்றுக்கும் பயப்படத்தேவையில்லை; உன் காரியத்திற்கு சந்தா சாயபுக்கு எழுதின காகிதந் தலபை இன்னின்னவிதமாய் எழுதினோம். அந்தப்படிக்கு நடக்கும் நீர் காத்தாசமாயிருக்கச் சொல்லியும் இப்போ சந்தா சாயபுக்கு நாங்கள் உன்னிமித்தியம் கொடுக்கிற பதினோராயிரம் ரூபாயிக்கும் ரசீது அனுப்பச்சொல்லியும், அல்லி நகீம் சாயபு மனுஷர் யிப்போ எழுதிக்கொடுத்த இருபதினாயிரம் ரூபாய்க் கேழ்க்க வந்தால் நாங்கள் கொடுக்கத்தக்கதில்லை அதற்கு சந்தா சாயபு காகிதமுங்களுக்கு அழைப்பித்துக்கொடுத்து நான் எழுதிக்கொடுத்த இருபதினாயிரம் ரூபா காகிதம் வாங்கிக்கொள்ளுகிறோமென்று சொல்லி அனுப்பிவிடச் சொல்லியும் இப்படியாக யெழுதி காசிம்பாயிக்கும் யிந்த வயணஞ் சொல்லி இந்த காகிதங்களையும் கொடுத்து அனுப்பிவிடு என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் மீர்சத்துக்காகிதச் சேதி யென்ன யென்று கேட்டார். அந்தக்காகிதத்திலே வழுதாவூர் ஆயத்துடனே சேர்ந்தது. பாற்சாக்கள்

சன்னதுபடிக்கு வழுதாவூர் கில்லாவுக்கு சாகீரும் ஆயமும் நடக்கிறது நாற்பது வருமே பிடித்து அதை நீங்கள் சோறுவரியாய் கட்டிக்கொண்டார்கள். அதைவிட்டுவிட வேணுமென்றும் கொல்லாகாரத்துடனே சேர்ந்ததுக்கு உங்களூரிலே யிருக்கிற தாக்கீது பண்ணிக்கொடுத்துவிடச் சொல்லியும் யிப்படி யெழுதியிருக்குதென்று சொன்னதற்கு பதிலுத்தரமெழுதச் சொன்னது நாங்கள் சந்தா சாயபுக்கு செய்து கொடுத்த வேலை உங்களுக்குத் தெரியுமே அதற்காக யிந்த வில்லியநல்லூர் பற்காவும், பாகூர் பற்காவும் ஆயமுங்கொடுத்தார்கள். நாங்கள் சுபாவே அவருக்குக்கொடுத்தோம் அதற்கு அவர்கள் வெகு சீர்மைக்கொடுத்தாலும் அதற்கு யீடா. அப்படியிருக்க யிந்தக்கொஞ்சகாரியம் அவர்களாய்ச் செய்தார்கள். அதுக்கு கூட நாங்கள் வாங்குகிற சம்மதியில்லை. அவர்களாய் பலவந்தமாய்க்கொடுத்ததை தள்ளலாகாதென்று வாங்கிக்கொண்டோம் இது காரியத்துக்கு யெங்களுக்கு நீங்களெழுத வேண்டியதில்லை. அவர்களுக்கெழுதிக் கொள்ள வேண்டியதென்று பதிலுத்தரம் யெழுதிக்கொடுத்தனுப்பச் சொன்னார். நல்லது என்று சொல்லி மதனந்த பண்டிதனுடனே துரை முன்பாக அந்த வயணமெல்லாம் சொல்லி காகிதமெழுதி மோகறுபண்ணிக்கொடுக்கச் சொல்லச்சொன்னேன். நல்லதென்று அவருங்காகிதம் யெழுதப்போனார். அப்பால் எனத்திலிருந்து முன்கோசாநேமதுல்லாகானுக்கு எனம் கொட்டடி கிமித்தியம் யெழுதினதற்கு பதிலுத்தரம் நேத்து வந்த கப்பலிலே வந்தது அந்தக்காகிதத்திலே யிருந்ததை படித்துசொல்லச் சொன்னார் அந்தக்காகிதத்திலே யெழுதியிருந்த வயணம்........

சுக்கில ஹூ மார்கழி மீ 24 உ௺ 1750 ஆ ஜனவரி மீ 4 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப்போய வந்த பிறகு துரையவர்களண்டைக்குப்போய் நேற்றியதினம் உத்தாரங்கொடுத்தபடிக்கு இரண்டு சோடி நாலு அறக்காறுகளை பயணம் பண்ணிக்கிஷ்ணை அண்டையிலே அக்கரையிலே யிருக்கிற முச்சூரண்டையிலே அக்கரையிலே யிறங்கியிருக்கிற நாசற்சங்கு லசுக்கர் போய்ப்பார்த்துவரச் சொல்லி அனுப்பினேன். என்று சொன்னதற்கு இன்னம் நாலு அறுக்காறுகளை ஒரு தெண்டகமும் அனுப்பி சமாச்சாரம் அறிந்து சொல்லென்று சொன்னார். இன்றையதினம் மகாநாட்டார் ஆரானாலும் சந்திக்கப்போகிறார்களாவென்று கேட்டார். நாளையதினம் வாரார்களென்று சொன்னேன். ஆனால் நேத்து ராத்திரி நல்ல மழை பேஞ்சு தானியம் விலை ஒசறயில்லையென்று கேட்டார். நாளையதினம் வாரார்களென்று சொன்னேன். இந்த நாளையிலே பொதிகளும் வருமா யிந்தபட்டணம்முன்னுக்கு சேறுயசையடைகிற காலமானபடியினாலேயும் உம்முடைய யோகத்தினாலேயும் நித்தியம் ஆயிரம் பொதி

அன்னூறு பொதி வருகிறதே அல்லாமல் யில்லாவிட்டால் ஒரு பொதி யிந்த நாளையிலே வரத்துண்டாவென்று சொன்னதின்பேரிலே தஞ்சாவூர் சமாச்சாரம் வரயில்லையாவென்று கேட்டார். யெழுபது லட்சம் ரூபாய் தீர்ந்துதென்றும் நமக்கு யெண்பது கிராமம் காரைக்காலுக்கு திருநள்ளாறு மாகாண முதலானது யெண்பது கிராமங்கள் முன் சந்தா சாயபு பற்வாறு அனுப்பியிருந்தானே அந்த யெண்பது கிராமத்துக்கும் ராசா அவர்கள் யினும் பற்வானுவும் எழுதிக்கொடுத்தாரென்றும் முன் காரைக்காலுக்கு இரண்டாயிரம் வராகன் வருஷா வருஷம் பேஷ்கஷ் கொடுக்கிறதையும் மாபு பண்ணி சன்னது வாங்கிக்கொண்டார்களென்றும் இப்போ சிறிது பணம் ரொக்கபணம் கொடுக்கவும் மத்ததுக்கு சீர்மைகள் அடமானம் பண்ணிக்கொள்ளவும் இப்படியாக சமாதானமாய் லசுக்கரிலேயிருந்து ஒரு பிராமணன் எனக்கு சிநேகிதமாயிருக்கிறவன் காகிதமெழுதியனுப்பிவித்தானென்று சொன்னேன்.

ஆனால் யெனக்கேன் காகிதம் வரயில்லையென்று கேட்டார். உங்களுக்கும் காகிதங்களின்றையதினம் வந்துசேரவேணும் யிப்போ யெழுதின சேதி நிஷ்கருஷை யெப்படி................

சுக்கில ஞு மார்கழி மீ 25 உக்கு 1750 ஆ ஜனவரி மீ 5 உ சோமவாரம்.

இற்றைனாள் காலத்தாலே துரையவர்களுக்குப்போய் சொன்னது கும்பினீர் வர்த்தகர்கள் தங்கசாலையார் மகாநாட்டார் முதலான பேர்கள் சந்திக்கவாரார்களென்று கபுறு சொல்லி பாக்கு வெத்திலை முதலானதுகளெல்லாம் முஸ்தீப்பு பண்ணிவைக்கச் சொல்லிப்போட்டு நம்முடைய கச்சேரியான பாக்கு கிடங்கிலே வந்து அப்பால் கும்பினீர் வர்த்தகர்களை அழைத்துப்போய் பேட்டிப்பண்ணிவித்து அன்பதறுபது விராகன் புடவை சீலையும் மோதிரசாடையும் நதிர் வைத்துக் கண்டு உபசாரம் சொன்னவுடனே அவரும் உபசாரமாய்ச் சொல்லி முசியே துக்கேன் தஞ்சாவூர் காரியம் யெழுபது லட்சம் ரூபாய் தீர்த்துக் காரைக்காலுக்கு முன் நவாபு சந்தாசாயபு யெழுதிக்கொடுத்த திருநள்ளாறு மாகாண முதலாகிய எண்பது கிராமங்களுக்கும் தஞ்சாவூர் ராசா யினும் பற்வானுவும் வாங்கிக்கொண்டு முன் இரண்டாயிரம் வராகன் வருஷா வருஷம் காரைக்காலுக்கு பேஷ்கஷ் கொடுக்கிறதுவும் மாபுபண்ணிக்கொண்டு தீர்ந்து சிறிது பணமும் சம்மதியாச்சுதென்றும் லசுக்கர் ரெண்டுகோசு யிப்பால் வந்து யிறங்கியிருக்கிறதுயென்றும் முசியே துக்கேன் யெழுதி அனுப்பினானென்றும் வெகு உச்சாகமாய் சொன்னாரிப்போ உம்முடைய அதிர்ஷ்டம் வெகு சுறுக்காய்

பிஷ்ஷின நதி பிரண்டு பிருக்கரையும் ஒத்து மேலதிகம் வரவேணுயு முண்டே ஆத்தப்படி உம்முடைய வமுசத்து சாடை யிவ்விடத்திலிருக்கும் அதிகாரத் திற்கு மிஞ்சி நடக்கிறபடியினுலே உம்முடைய அதிர்ஷ்டத்திற்கு சமான மாய்ச் சொல்லப்போகாது. இந்த ராச்சியம் துலுக்கர் சீர்மையிலே முச்சா விடத்திலேயிருந்து கொண்டு வியாபாரம் பண்ணிக்கொண்டு துலுக்க ளுக்கு ஆசில் கொடுத்துக்கொண்டு யிருக்கிற உங்களுக்கு பாதுஷா பட்டம் ஆனுகிறுப்போலே இதாயித்து மொகதீன்கான் சாந்தாசாயபு முதலான பேர்கள் உம்முடைய அனுஞ்சியின் பேரிலே நடந்து கொள்ள வும் உமக்கு லட்சம் வராகனுக்கு சாகீர் சனுயாசமாக சாகீர் நடக் கவும் ராச்சியமெல்லாம் சூரியப் பிரகாசம் போலே பிராஞ்சுக்காரர் கீர்த்தி பிரகாசிக்கவும் சுவாமி தயவுபண்ணினப்படியினுலே இதற்கு மேல் கீர்த்தியும், பராக்கிறமும், ராச்சியமும் சம்பாதிக்கவேண்டியதில்லே. இனி நீர் சீர்மைக்கி போகாமலிங்கே யிருக்கவும் உமக்கு ஆயிசு வெகு விஸ் தாரமாய் நீண்டு யிருக்கவும் வேணுமென்று பிரார்த்திக்கிறேமென்றும் சொன்னுர்கள்.

சுக்கில ஞு மார்கழி மீ 26 உ க்கு 1750 ஆ ஜனவரி மீ 6 உ அங்காரகவாரம்

இற்றைனுள் சாயங்காலம் சீர்மையிலிருந்து சீனத்துக்குப்போகத்தக்க தாக ல்ன்சோம் என்கிற கப்பல் மசுக்கரைக்கு வந்து அங்கேயிருந்து சீனத் துக்குப் பயணம் புறப்பட்டு போய் முடியப்போய்ச் சேராமல் காத்து மறித்து பலாக்கா பிடித்து அங்கேயிருந்து மூன்று அரமணேக்காரர் (**Armeniens**) களே யேத்திக்கொண்டு யிந்தவூர் துறைவைத்துப்பிடித்து பதிமூன்று பீரங்கிப்போட்டான் துறையிலேயும் அப்படிதான் போட்டான். துறையிலேயிருந்து சீர்மை கப்பல்காரன் தான் பெரியவனென்று அமிறுல் போட்டுக்கொண்டு யிருந்தான்; வந்தவன் தான் பெரியவனென்று அமிறுல் போட்டுக்கொண்டிருந்தபடியினுலே ஒருத்தருக்கொருத்தர் பீரங்கிப்போட்டு மரியாதைகள் பண்ணிக்கொள்ளவில்லே. கப்பல் கப்பித்தேன் காலமே யெறங் கினுன் என்று சொன்னுர்கள் கப்பல் கப்பித்தான் பேர் தெரிஞ்சு யெழுத வேணும்........ இந்த கப்பலிலே சீனத்துக்கு கொண்டுபோன பத்தாக்கு நாலு லட்சம் பத்தாக்கு வந்ததாய்ச் சொல்லி போய் கட்டை கட்டி யெறக்கிற துக்கு சலங்கு போச்சுது என்று கபுறு சொன்னுர்கள். மொக்காவுக்கு யாத்திரையாய் யிந்த கப்பலே அனுப்புகிறதாய் யோசனே துரையவர்கள் பண்ணினுரென்று முசியே தெப்ரேன் யென்னுடனே சொன்னுன்.

சுக்கில ஞு மார்கழி மீ 28 உக்கு 1750 ஆ ஜனவரி மீ 8 உ குருவாரம்

இற்றைனுள் மத்தியானம் தஞ்சாவூர் காகிதம் வந்தது. அதிலே யெழு பத்து லட்சம் ரூபாயாக தீத்ததுயென்றும் முப்பது லட்சம் கையில் கொடுக்க

மத்தது சீர்மை அடமானம் பண்ணவும் தீர்ந்தது இந்த முப்பது லக்ஷமும் வாயிதாவின்பேரிலே வாங்கிக்கொள்ளச் சொல்லி சந்தா சாயபுக்கு காகித மெழுதி அனுப்பவேணுமென்றும், காரைக்காலுக்கு யெண்பத்தொரு கிராமத்துக்கு இனும் பற்வானு எழுதிக்கொடுத்தது அல்லாமல் பேஷ்கஷ் ரெண்டாயிரம் வராகன்கூட தள்ளுபடியாய் மாப்பு பற்வானு யெழுதிக் கொடுத்தோம் என்று யெழுதியிருந்தது...........

**சுக்கில ஹு தை மீ 5 உ க்கு 1750 ஆ ஜனவரி மீ 14 உ புதவாரம்**

இற்றைநாள் காலத்தாலே தேவனும்பட்டணம் கொவர்னதோர் நாசர் சங்குக்கு டோரா வொன்று சகலாத்திலே முஸ்தீது பண்ணி அனுப்புகிறோ மென்று சொன்னதையே அந்த டோரா மேஸ்தர் புஸ்கவேன் கோந்தீர் அமிரால் இவ்விடத்துக்கு வந்தபோது இந்த ராச்சியத்து நபாபு தங்களுக்கு அனு கூலமாயிருக்கிறது மல்லாமல் மத்ததுகூட பண்ணிவைக்க வேணுமென்று அவருக்கு விஸ்தாரமாய் வெகுமானம் சீர்மையிலேயிருந்து கொண்டு வாரா னென்றும் நீயும் ஆற்காட்டு நவாபு உன் தரபாய் பண்ணிக்கொள்ளுகிற தற்கு ரெண்டு லட்க்ஷம் வராகன் மட்டுக்கு மாகிலும் கொடுத்து நவாபு இங்கிலீசுக்காரர் பாரிசமாயிராமல் உன் பாரிசமாய் இருக்கத்தக்கதாய்ப் பண்ணிக் கொள்ளச்சொல்லி கும்பினீரார் எனக்கு யெழுதியிருந்தார்கள் அப்போ வந்த அச்சடி சகலாத்து கூடாரம் அது அன்வர்திகானுக்கு கொடுபடாமல் நின்றுதே அதைத்தான் முஸ்தீதுபண்ணி நாசர்சங்குக்குக் கொடுக்கிறோமென்று யோசனைபண்ணினது அப்படி கும்பினீயார் ரெண்டு லட்க்ஷம் வராகனுகிலும் சிலவு பண்ணச்சொல்லி எழுதின காரியத்துக்கு புதுச்சேரி பணத்துக்கு அறுபத்து நாலு காசு அளவிலே ஒரு காசளவிலே சிலவில்லாமல் பண்ணினேனே பார்த்தாயா இந்த நன்றி கும்பினீயார் அறிய வேணும் என்றார். அதற்கு நான் சொன்னது இந்த காரியத்துக்கு மாத்திரம் ஆனால் நீங்கள் சொல்லவேண்டியது ரெண்டுமாசம் கோட்டையைச் சுற்றி முத்திகை போட்டுக்கொண்டு இருபதினாயிரம் ஸேத்தாரும் நாற்பது அன் பது கப்பலுடனேயும் வந்து சண்டை போட்டபோது நிறுவாகம் பண்ணு தற்காக அல்லது ராச்சியமெல்லாம் சூரியப்பிரகாசம் போல் பிராஞ்சுக்காரர் கீர்த்தி பிரகாசிக்க பண்ணதுக்கா கும்பினீருக்கு லட்சத்தன்பதினாயிரம் வராகனுக்கு சீர்மை பூமி உண்டாக்கினீரே அதற்கா யெந்த உபகா ரத்துக்கு யென்று உமக்கு நன்றியரிந்து ஒரு காரியத்தை நடத் தப்போகிறோமென்றும் இதற்கு என்னவிதமாய் பதில் நடப்பித்தால் திருப்தி ஆகப்போகுதென்றும் இந்தப்படி பல பலவிதமாய்யோசனைபண்ணிக் கொண்டு ஒன்றும் பிரியாமலிருக்கிறார்களென்று தோற்றுதே அல்லாமல் இல்லாவிட்டால் யிந்த மட்டுக்கும் நடக்கிற காரியம் வேறே அல்லவா என்று

சொன்னதற்கு அதுவுமெய்தானென்று ஒத்துக்கொண்டு மப்பால் ஒரு நாழிகை பொறுத்து முசியே மர்சியாவென்கிறவனுக்கு முன் அற்பிசி மீ 24உ முன் மொறட்டாண்டிச்சாவடிக்குப் போகிறதினம் ஒருபவழமாளிகை தாவடமும், ஒரு பவழக்கிளையும் கொடுத்தேனே அது என்ன கிறயமென்று கேட்டார். அது முன்னூத்திருபது ரூபாய் சட்டம் நாற்பது வராகனென்று சொன்னேன். அதற்கு நூத்திருபத்தெட்டு ரூபா ஆச்சுதே பிதோ நாற்பத்தெட்டரை பத்தாக்கு இதற்கும் அந்தபவழக்கிறயம் ரூபாயிக்கும் மச்சலிபந்தலிலே ஹுங்கிசு வாங்கி ஒரு சிப்பம் போட்டு கப்பல் போகச்சே ஒப்பித்துப் போடென்று சொன்னார். நல்லதென்று வாங்கிக்கொண்டேன் அப்பால் பாக்கு கிடங்கிலே வந்து விட்டேன். பகலுக்கு மேலாக மதனந்த பண்டிதனை அழைப்பித்துத்துரை பெண்சாதி தஞ்சாவூர் ராசாவுக்கு ஒரு காகிதமும் சந்தா சாயபுக்கும் ஷெகுமாரன் ராசாசாயபுக்கும் ஒரு காகிதமும் யெழுதச் சொல்லி அதிலே சிறிது காரியம் நிமித்தியமாய் தமிழ்க்காகிதமொன்று எழுதி மனுஷர்களை அனுப்பியிருந்தேனே அந்தப்படிக்கு அனுகூலம் பண்ணிக்கொடு சீக்கிறமத்துக்கு அனுப்பிக்கவும் யென்றும் நகப்பன் பிள்ளை ரெண்டுபேர் காகிதத்திலேயும் மொபார்க்குபாதி முன் யெழுதாததினாலே இப்போ யெழுதிவித்து அனுப்பிவித்ததாய் மதனந்த பண்டிதன் சொன்னான். அப்பால் ராத்திரி எட்டுமணி வேளைக்கு மதனந்த பண்டிதனை துரையும் மதாமும் அழைப்பித்து வைத்துக்கொண்டு......................................

**சுக்கில ௵ தை மீ 8 உக்கு 1750 ஆ ஜனவரி மீ 17 உ சனிவாரம்**

இற்றைனாள் காலத்தாலே கோட்டையிலே மறுச்சலவைப் புடவை கோட்டை கும்பினியாருது முன் கப்பல் நனைந்து வந்ததை மறுதடவை சலவை பண்ணி யிந்த நாள் கட்டுப்போட்ட படியினாலே கோட்டைக்குப் போயங்கேயிருந்து துரையவர்கள் வீட்டே வந்தேன். அவர் ரெண்டு கப்பல் காணுது வெள்ளைக்கொடி பறக்குது. பூவால்போட்டு இருக்கிறது. ஆனபடியினாலே சீர்மையிலிருந்து இரண்டு கப்பல் வரவேணுமென்று சொல்லிக்கொண்டு யிருந்ததுதான் வருகுதென்று யோசனை பண்ணிக்கொண்டு அதைமேல் வீட்டின்பேரிலே போயேறி பார்க்கிறது யிறங்குகிறதுமா யிருந்து அதற்குமுன் மோக்கா கப்பல் அரைமாசம் நிமித்தியமாய் கோன்சேல் கூடியிருந்து கலஞ்சயிருந்த படியினாலேயும் கப்பல் பார்வை பார்க்கிற சாடையிலேயும் யிருந்த படியினாலே பேசுகிறதற்கு சாவகாசமில்லாமல் போச்சுது. அப்பால் இரண்டு நாழிகை தேசகாலமிருந்து அப்பால் நம்முடைய தச்சிரியான பாக்குகிடங்கே வந்தேன்...............

சுக்கில ஞு தை மீ 9 உ க்கு 1750 ஆ ஜனவரி மீ 18 உ ஆதிவாரம்

இற்றைநாள் காலமே யெட்டுமணிக்கு துரையவர்கள் அண்டைக்கு வர்த்தகரையெல்லாம் அழைத்துக்கொண்டு அவரவர் யெலுமிச்சம் பழத்தைக்கொண்டுபோய்க் கொடுத்து பேட்டிபண்ணிக்கொண்டு தேவரீர் அவர்களுக்கு சீர்மையிலேயிருந்து ராசா அவர்கள் சந்தோஷப்பட்டு மரிக்கியென்கிற முத்திரை சிகப்பு பித்தாவிலே கோத்திருக்கிறது. வந்து நாம் அதுகளெல்லாம் யெங்களுடைய சந்தோஷமானபடியினாலே கண்டு சந்தித்துக்கொண்டு போகத்தக்கதாய் வந்தோம். உங்களுக்கு யிந்த முத்திரை வந்தது அதிசெயமல்ல யின்னம் வெகு அதிசெயமானதெல்லாம் வரப்போகுது. யென்று ரொம்பவும் உபசாரமாய்ச் சொன்னார்கள். அதற்கு துரை அவர்களும் வெகு சந்தோஷமாய் தானே அவர்களுக்கு உத்திரவு சொல்லி யனுப்பிவிட்டார்கள்....... ........

சுக்கில ஞு தை மீ 10 உ க்கு 1750 ஆ ஜனவரி மீ 19 உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போனவுடனே கப்பல் கப்பித்தான்மார் முதலான பேர்கள் யிருக்கச்சே சலவைப்புடவை யேன் கட்டுப்போடவில்லையென்று கேட்டார். முசியே செம்போல் வில்லியநல்லூருக்குப்போகிறேன் நாளையதினம் புடவை பார்த்து கட்டுப்போட்டு தீர்த்துப்போட்டு வைக்கிறோம் என்று சொல்லிப்போட்டுப் போனாரென்று கேட்டார் அவன் கல்பரிக்கி ராச்சூர் அந்தப் பிராந்தியங்களிலே தானே யிருக்கிறானென்று சொன்னதற்கு சயிது லசுக்கர்கான் முன் அடோனி அந்தப்பிராந்தியங்களிலே பதினாயிரங்குதிரையுடனே வந்துயிருக்கிறதாய் கேந்து சொன்னீயே அவனெங்கேயென்று கேட்டதற்கு அடோனி அந்தப்பிராந்தியங்களிலே வந்து இதாயித்து மொகதீன்கான் சீர்மையெல்லாம் நிர்ப்பந்தம் பண்ணிக்கொண்டிருக்கிறதாய் சேதி கேழ்விப்பட்டதென்று சொன்னதின் பேரிலே மீர்குலாம் உசேன் மைத்துனன் அக்பர் சாயபு யென்கிறவன் நானும் மைத்துனன் யென் பெண்சாதி பாகம் யெனக்கு வரவேணுமென்று கேட்டார். அவர்கள் யெத்தனியும் பரியாசம் பண்ணிப்போட்டு இந்துரைவிட்டு வேலூரை போய்ச் சேருகிறதாயிருக்குதென்று என்னுடனே சொல்லி நாளையதினம் உங்களுடனே வந்து சொல்லிக்கொள்ளுகிறோமென்று சொல்லி அவர்கள் வெளிப்பட்டு போகாமல்படிக்கு நானும் காற்குறேன் நீங்களும் விசாரித்துக்கொள்ளுங்கோளென்று சொல்லி போனான். அந்தப்படிக்கு நடப்பிக்கிறதற்கு உங்களுக்கு சம்மதியானால் பித்திசாமும்யெழுதிக்கொடுத்து அவனையும் விசாரிக்கும்படி சொல்லுகிறதும் அல்லாமல் மீர்ஷமுக்கு ஒரு காகிதமும் யெழுதியனுப்பிட்டா

லென்றதற்கு நல்லதென்றும் இப்போ சொன்ன காரியம் வழுவதல வாமல் நடத்தச் சொல்லியும் சொல்லி அப்பால் முசியே ரிஷி காரைக்காலுக்கு சந்தாசாயபு தஞ்சாவூர் சாகையில் யெண்பத்தொரு கிராமம் வாங்கிக் கொடுத்து முன் எழுபதினாயிரம் வராகன் காணுமென்றும் கிராமம் பிரதி கிராமம் கண்டு யெழுதியனுப்பினான். இப்போ நாற்பதினாயிரம் விராகன் காணுமென்று யெழுதியனுப்பினான். இப்படியிருக்கிறது. அவன் கும்பினீ அவைதி கொடுக்கிறது. ஆனால் நீர் கும்பினீர் கொருத்தியோரானபடியி னாலே (Courtier) உனக்கு விசாரிக்கவும் அதனுடைய பிரயோசனம் கும்பி னீரை சேரப்பண்ணவும் கடனானபடியினாலே நீயதுக்கேத்த மனுஷரைப் போட்டு விசாரித்து திட்டமாய்ச் சொல்லென்று சொன்னார். கும்பினீர் வேலை பார்க்கிற தெனக்கு கட்டளையிட்டு இருக்கிறபோலே ஆச்சுதே அப் படியே விசாரித்துச் சொல்லுகிறேனென்று சொன்னேன். அப்பால் அப்பு போய் யென்னமோ சொன்னான் அதின் பேரிலே யென்னை அழைத்து முத்துமல்லா ரெட்டி தானிய தவசங்கள் புகையிலை, மாடு வகையறு வித்து முதல் திண்டிவனத்திலிருந்து துமா பண்ணி அனுப்பின கணக்குப்படிக்கு கணக்கெழுதிவித்ததுக்கு வாங்குகிறதில்லை என்று அல்லோ போனார்கள். இப்போ அந்தப்படிக்கு பணம் வாங்கிக் கொள்ளுவார்கள். சீர்மை வழியிலே கம்பத்தம் முதலானதுகள் இவர்கள் மனுஷர்களை வசம்பண்ணி............

### சுக்கில ஹு தை மீ 14 உ க்கு 1750 ஆ ஜனவரி மீ 23 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் நவாபு சந்தாசாயபுக்கும் இதாயித்து மொக்தீன் கானுக்கும் அவர்கள் நாலாம் நாள் ஒட்டை சுவார்கள் கையிலனுப்பின காகிதத்துக்கு பதில் காகிதம் எழுதச் சொன்ன வயணம் என்னவென்றால்: சந்தா சாயபு காகிதத்தில் யெழுதின வயணம்: தாமெழுதின காகிதத்தில் நாசர்சங்கு வருகிறான் வந்தாலென்ன நாசர்சங்குக்கு அனுகூலமாயிருக்கிறார்களென்றும் அவன் பேரிலே சண்டைக்குப் போகிறபடியினாலே முசபர்சங்கு பெண்சாதியையும் தாயாரையும் அவ்விடத்திற்கு அனுப்புகிறார் அவர்களுக்கு வீடுவாசல் கொடுத்து பாராமரித்துக்கொள்ளுமென்றும் யெழுதியிருந்தது. அதற்கு அப்படியே வந்தால் விசாரித்துக்கொள்ளுகிறோமென்று உபசாரமா யெழு தச்சொன்னார். நாசர்சங்கு வருகிறபடியினாலே சண்டை சாமான் முஸ்தீது பண்ணுவிக்கவேணுமென்று எழுதினதுக்கு பதிலுத்தாம் அப்படியே முஸ்தீதாயிருக்கிறது வேணுமென்னதுதானேமென்றும் நாசர்சங்கு வாரது சத்துமட்டாயிருக்குமென்று யெழுதச்சொல்லி சுத்துப்பு சுவார் ரெண்டு பேர்களையும் யிங்கேதானே வைத்துக்கொண்டோம். யிந்த சமாசார முண்டானால் யெழுதியனுப்புகிறோமென்று தஞ்சாவூர் காரியம் அசுவா

நிச்சயம் விடாமல்படிக்கு சுறுக்கிலே பணத்தை அறுவிடச்சொல்லியும் யெழுதச்சொன்னார். அந்தபடிக்கு அவர் காகிதமெழுதின உடனே முசபர் சங்குக்கு உம்முடைய பெண்சாதியை அனுப்புகிறோமென்று எழுதி அனுப்பினீரே அப்படியே அனுப்பவுமென்றும் நாசர்சங்குப்பேரிலே சண்டைக்குப் போனால் உமக்கு பத்தே ஆகுமென்று..........................................................

சுக்கில ௵ தை ௴ 16 உ க்கு 1750 ஆ ஜனவரி ௴ 25 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை அழைக்கிறாரென்று சேவகன் வந்து அழைத்தான். அங்கே போய் துரையைக் கண்டவிடத்திலே சந்தா சாயபு காகிதம் வந்ததென்று கொடுத்தார். சந்தாசாயபு எழுதின காகிதத்தில் யெழுதியிருந்த மத்தலப்பு என்னவென்றால்: தஞ்சாவூரை செயித்த சேதி நாசர்சங்கு கேட்டு இவ்விடத்துக்கு வருவதை விட்டுவிட்டு பயத்தினாலே அப்படித்தானே போகிறதாய் யோசனை பண்ணினானென்றும் தஞ்சாவூருக்கு கூட யிந்தப்படி யெழுதிவந்ததின்பேரிலே முன்னேயினும் கொடுக்கிறதற்கு சலாம் பண்ணிக்கொண்டு யிருந்தவர்கள் யிப்போ பணம் கொடாவிட்டால் மோசம் வரும் என்று பணம் கொடுக்கிற யெத்தனத்திபேரிலே யிருக்கிறார்களென்றும் நாசர்சங்குக்கு பயந்தோன்றினது உங்கள் பவுஞ்சுனாலே தனக்கு நிறுவாகமாட்டாது யென்கிறது கெட்டியாய் தோத்திப் போச்சுதுயென்றும் முசியே தூக்கேனுக்கு சரீரம் சுவஸ்தயில்லையென்றும் மத்தப்பேர் எல்லாரும் சுகமே யிருக்கிறார்களென்றும் இப்படியாக அவர் சுவஸ்த லிகிதமாய் எழுதின காகிதம் வந்து அதிலெழுதியிருந்த மத்தலப்பும், துரையவர்களுக்குச் சொன்னதின்பேரிலே நாசறுசங்கு வாராதில்லையென்று சொல்லுகிற உச்சாகம் ஒன்று துரைக்கு வந்து முசியே பிரியேல் முதலானபேர்களுடனே எல்லாம் சொன்னார். அப்பால் சந்தா சாயபுக்கு பதில் காகிதம் நாசற்சங்கு வாராதில்லை யென்கிற கபுறுக்கு மொபாற்கு பாதியும் தஞ்சாவூரார்பணத்தை நிறுத்தாமல்வாங்கிப்போடச்சொல்லியும் இப்படி வெகு நாள் ஒரு விடத்திலிருந்தால் சிப்பந்தியிலே வெகு பணம் செல்லுமே ஆனபடியினாலே அந்தக்காரியத்தை சுறுக்கிலே தீர்த்துப் போடச்சொல்லியும் எழுதியனுப்பச் சொன்னார். அந்தப்படிக்கு எழுதிவித்து அவர் கையில்தானே கொடுத்துப்போட்டு பாக்கு கிடங்கிலே வந்தோம்.

சுக்கில ௵ தை ௴ 25 உ 1750 ஆ பிப்ரவரி ௴ 3 உக்கு அங்காரகவாரம்

இற்றைநாள் காலத்தாலே நாசறுசங்கு அடோனிக்கு (Adoni) யிப்புறம் ருயத்துற்கத்தண்டையிலே யிருந்தவன் சாவு ராசா சாவு சமாச்சாரம் கேட்டதினாலேயும் சவா பாசிருமன் சகல தளமும் தன் ஆசிறுவிலே

வைத்துக்கொண்டு நாசருசங்குவை யிப்பால் படாமல் பண்ண நினைத்து ராகோசி பூசலா முதலானபேர்கள் அப்பரோடா தேச முதலானதுகள் கொள்ளையிடுவிக்கிறதைத் தொட்டும் நாசருசங்கு மனதிலே அதிக விசார மாய் யிந்தப் புறத்திலே சந்தாசாயபு இதாயித்து மொகயதீன்கான் சாயபு அவர்களும், பவுஞ்சு பிலக்கப் பண்ணினதுமல்லாமல் சகல சிப்பாயிகளுக் கும் பயங்கரத்தையும், தோல்வையும் கொடுக்கிறபடியினாலே இந்தப் பிருஞ் தியத்திற்குப்போனால் அபசெயம் தப்பாது யென்றும் சாவு ராசா பிலன் ரொம்பயிருந்தது. அவன் விழுந்து போனான் யென்கிற விசாரத்தினாலேயும், டில்லியிலிருந்து பவுஞ்சும் தக்கன சுபாவும், சுபேதாராக பாற்சாவினாலே நேமிக்கப்பட்டு ஒருத்தன் பாரிபவுஞ்சுடனே வாரானென்றும் யிப்படி நானா விதமாய் யோசனையினாலே ஆள் பேசாமல் அந்த முகமாய் திரும்பிக் கொண்டு அவுரங்காபாத்து சாத்தாரா அந்தரோக்குக்கு போகத்தக்கதாக சண்டாவடக்கே போட்டு ஒரு மசலி நடந்தாரென்றும் .... .... ....

## சுக்கில ஞு மாசி மீ 2-உக்கு 1750 ஆ. பிப்ரவரி மீ 10 உ. அங்காரகவாரம்

இற்றைனாள் காலத்தாலே கோட்டையிலே நம்முடைய காங்கு கட்டு பத்தொன்பதும் ஏன்த்துப் புடவை பார்வையிட்டு கட்டுப்போன படியி னாலே நான் கோட்டையிலே போய் பனிரெண்டு அடிக்குந்தனிலுமிருந்து அப்பால் நானும் சின்னதுரையும் துரையவர்கள் வீட்டுக்குப்போய் முப்பத் தாறு கட்டுபோட்ட சேதியை கப்புறு சொன்ன மாத்திரத்தில் அவரிருந்து கொண்டு மீர்ஷம் சாயபு தண்டிலேயிருந்து நவாபு சந்தாசாயபு அனுப்ப வந்தவன் சிறிது அந்தரங்கஞ் சொல்லி அனுப்பிவித்ததாய்க் காகிதத்திலே யெழுதி வந்தபடிக்கு மத்தியானம் ஆனபடியினாலே யிப்போ நான் சாப்பிடப் போகிறேன் சாப்பிட்டாகுந்தனிலும் நீரும் அவருமிருங்கோளப்பால் பேசு வோமென்றும் நீர் பேசியான பிற்பாடு சாப்பாட்டுக்குப் போகலாமென்றும் சொன்னபடியினாலே சாப்பிட்டான பிற்பாடு துரையவர்களண்டைக்கு ஒரு ஏழரை மணிக்குப்போய் மீருஷம் சொன்னதும் அதற்கு துரையவர்களுத் தரம் சொன்னதும் யெழுதினவயணம்:

மீர்ஷம் சொன்னது சந்தாசாயபு துரையவர்களுக்குச் சொல்லச் சொன்னது தஞ்சாவூர் கோட்டை முன் சாவுராசா நிமித்தியமாய் வாங் காமல் நிறுத்திப்பண்ண உடன்படிக்கை பேசினதும் யெழுபது லட்சம் ரூபாயாக் தீர்த்துக்கொண்டதும் அதற்கு நாற்பது லட்சம் ரூபாய் சீர்மை அடமானமும் முப்பது லட்சம் ரூபாய் ரொக்கம் கொடுக்கிறதிலே பதி னைந்து லட்சம் கையில் கொடுக்க மத்த பதினைஞ்சு லட்சம் ரூபாய் தண்டு கதனிபோய் சேர்ந்த உடனே அப்புறம் எங்கே போகவேணுமோ அந்த

படிக்காணப்போய் சேர்ந்த உடனே கொடுக்க உடன்படிக்கை. அதற்கு யிந்தமட்டுக்கும் எழு லட்சம் ரூபாய்க்குப் பொன் நகை, வெள்ளி நகை, ரத்தின நகை வகையறாவும் ரொக்கம் கொடுத்தது ரூபாய் உள்பட எழு லட்சம் ரூபாய் மட்டுக்கும் சென்னது. மத்தது யின்னம் வரவேணும் அப்படியிருந்தாலும் யிப்போ சாவுராசா விழுந்துப்போனபடியினாலே கோட்டை வாங்கவேணுமென்கிற விஷயமாய் அபிப்பிராயத்தோடு மோற்சாவும் போட்டோம். மோற்சா போடுகிறபடிக்கு கோட்டையை வாங்கி தீர்த்துப் போடுகிறேன். ஆனால் கோட்டை வாங்கினால் சொல்தாது சிப்பாயிகள் வகையறா கொள்ளையிடாதபடிக்கு யெழுதி உங்கள் பவுஞ்சுக்கு யெசமானாகயிருக்கிற மூசியே குப்பிக்கும், சிப்பாய் கப்பித்தான் முசபர்கான், சேக்கு உசேனுக்கும் யெழுதியனுப்ப வேணுமென்று சொன்னார். அதற்கு துரையவர்கள் சொன்னது; நல்லது அப்படியே யெழுதுவோம், ஆனால் மறாட்டியர் பெத்துயிருக்கிற படியினாலே சாவு ராசா விழுந்துப் போனாப் போலே நீர் தஞ்சாவூர் கோட்டையைக்கட்டிக்கொண்டு தங்களுடைய கவிலே யில்லாமல் போனார்கள் யென்றும் இனிமேல் சாவு ராசாயிடத்துக்கு வரவேணும் அவரிடத்திலிருக்கிற பெரிய பெரிய அமீர் வசீர்கள் சவாபாசிராயன் ராகோசி பூசலா பத்தேசிங்கு ஸ்ரீ பதிறாயர் வகையறா யிருக்கிறவர்களுக்கு ரோஷம் பிறந்து சாவுராசா செத்துப்போய் விட்டானென்றும் இனிமேல் மராட்டியர் பிறபஞ்சம் போச்சென்றும் சந்தாசாயபு செய்த உபகாரத்தையும் மறந்துப்போட்டு நம்முடைய கோட்டையாயிருந்த தஞ்சாவூரையும் வாங்கிக் கொண்டானென்று அவர்களுக்கு ரோஷம் பாதித்து நாசர்சங்கு உடனே யிப்போ யிருந்தமாயிருக்கிறதை விட்டுபோட்டு அனுகூலமாய் சந்தாசாயபுக்கு பொல்லாப்பு பண்ணவேணுமென்று நினையார்களோ. இப்போ இருக்கிற காரியத்தைப் பார்த்தாலவர்களுறவு இருக்கவேண்டியதாமே அப்படி இருக்க கோட்டையை வாங்கினால் அதினாலே முன்னுக்கு அதைத் தொட்டு பொல்லாப்பு இல்லாமலிருக்க வேண்டிய காரியம் என்னமோ அதின்பேரிலே திஷ்டிவைத்து தீர்த்து ஆலோசனை பண்ணி பார்க்கவேண்டியது அல்லவென்று அது கவையில்லை கோட்டை வாங்க வென்றால் அவசியம் மோபாற்கு இருக்கிறது கோட்டை வாங்குகிறது எனக்கும் சம்மதிதான். அங்கேயிருக்கிற யெங்கள் பவுஞ்சு சறுதார் மூசியே குப்பிக்கும் சிப்பாயிகளுக்கு சறுதார் முசபர்கான் சேக்கு உசேன் அவர்களுக்கு கொள்ளை வல்லடியிடவேணுமென்றும் கோட்டையிடித்தால் உங்களுக்கு வெகுமானம் யித்தனை லட்சம் ரூபாய் கொடுக்கிறோமென்று உடன்படிக்கை பண்ண அந்த உடன்படிக்கையை வாங்கிக்கொண்டு ஒரு துரும்பு ஆகிலும் எடாமல் சந்தா சாயபு உத்தாரப்படிக்கு நடந்து

கொள்ளச்சொல்லி கோட்டை லெக்கைப் பிடித்து பேதி விழுந்தால் யெத்தினை உடன்படிக்கைச் சொன்னாலும் கொள்ளேயிடாமலிரார்கள். அல்லவென்று வெள்ளைக்காரர் யிருந்தாலும் சிப்பாயிகளும் முசபர்சங்கு வகையரு அவர்களுக்கு வெகுமதி ஒவ்வொருத்தனுக்கு லட்சம் ரூபாய் வெகுமானம் கொடுக்கிறோமென்று சொன்னாலும் கொள்ளேயிடாமல் கேளார்களானால் கோட்டை சென்னப்பட்டணத்து சாடையாய் லெக்கை பேறாமல் சமாதானமாய்க் கோட்டையை ஒப்பித்துப்போட்டு யெதிரிகள் வெளியே போகிறதானால் அப்போது யிவர்களை வெளியே வைத்து உங்கள் மனுஷர்களும் நீங்களுமாத்திரம் உள்ளே போனால் கொள்ளேயிடாமல் தப்பும் யில்லாவிட்டால் தப்பதக்கதில்லையென்று சொன்னார். இந்தமட்டுக்கும் தஞ்சாவூர் மொகதமா மீர்ஷம் சொன்னது வேலூர் மீறுத்தசல்லிகான் அவனிங்கேயிருந்துகொண்டு வெகு பித்துவர் பண்ணிக்கொண்டிருக்கிறான். அவனேன் அண்ணன் தம்பி சகலபாடியென்று யெத்தனை விதமாய்ப்பார்த்தாலும் அவன் சப்பித்தரல்லிகானைக் கொன்றும் போட்டு நவாபித்தரை கெடுத்ததுமல்லாமல் யிப்போ நான் வந்தமட்டுக்கும் தனக்கு சகல மேன்பாடும் நடந்தச்சே அதை யெண்ணாமல் திரும்பி உள்ளபடியிலே யிருந்துகொண்டு வெகு பித்துவர் பண்ணுகிறான். ஆனபடியினாலே ருசாசாயபையும் கூட்டி சிறிது பவுஞ்சு மனுப்பிவிக்கிறேன். அந்தக் கோட்டையை வாங்குகிறதற்கு குந்தாணி பீரங்கி நெடும் பீரங்கி முதலான சான்சாமி அனுப்பிவித்து கோட்டையை வாங்கவேணுமென்று சொல்லச்சொன்னார் என்று சொன்னதுக்கு .......

துரையவர்கள் சொன்னது மெய்தான் மீறுத்தசல்லிகான் பொல்லாதவனானபடியினாலே கோட்டை வாங்கவேண்டியது சரூறா ஆனாலும் வேலூர் கோட்டைவாங்குகிறதுக்கு நோப்பிடியாது சுட்டிக்கே போட்டால் கோட்டை வாங்கினதாயும் நம்முடைய வசமாச்சுதென்றுயெண்ணவேண்டியது. இப்போ தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மொகத்துமா பைசலானால் அப்போதும் அங்கே பவுஞ்சு சிறிது யிங்கே சிறிது பிரித்தால் நல்லதல்ல வென்று தோத்துது. அல்லவென்று வாங்கவேணுமென்றால் மொபாற்கு யிருக்கிறது. பீரங்கி, குந்தாணி பீரங்கிகள் முதலான சண்டை சரஞ்சாமிகள் தயாராயிருக்கிறது. இதற்கு பார்பர்தார் யெருதுகள், வண்டிகள் மாத்திரம் வேணுமென்னதுக்கொடுத்தால் தயாறு தானென்று சொன்னார்.

3—வது. மீர்ஷம் சொன்னது: முசபர்சங்கும், சந்தாசாயபும், நாசர்சங்கும் பேரிலே சண்டைக்குப் போகிறபடியால் முசபர்சங்கு தம்முடைய சமுசாரமும் புதுச்சேரிக்கு அனுப்பிவிக்கிறோம். சந்தா சாயபு குஞ்சு குழந்தைகளிருக்கிறபடியால் வீடுகள் தயாறு பண்ணிவைக்கச் சொல்லி

முசாபர்சங்கு பெண்சாதியாருக்கும் வேறே விடுகள் சம்பாதித்து வைத்தால் யெங்கள் குஞ்சு குழந்தைகளிருந்த விடு முன்னிருக்கிறபடியினாலே நூதனமாய்ச் சம்பாதிக்க கவையில்லை யென்று சொல்லச் சொன்னதற்கு துரை சொன்னது அவசியமப்படியே முசாபர்சங்கு குழந்தைகளிருக்கிறதாகவேறே விடுகள் முஸ்திதாயிருக்கிறது யெப்போ அவர்கள் வாராங்களோ அப்போ வரலாமென்று சொல்லி யெழுதச் சொன்னார்.

4 வது. மீர்ஷம் சொன்னது: பார்சாவிலிருந்து உங்கள் பேருக்கு பர்வானு கொஞ்ச நாளையிலே வருமென்று பாதுசாவண்டையிலே யிருக்கிற வக்கில் யெழுதி யனுப்பிவித்தான் என்று சொல்லச்சொன்னனென்று சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது அப்படிவந்தால் மெத்த பலன் தான் ஆனால் சீக்கிரமத்தாக்கு அழைப்பிக்க வேணுமென்றுச் சொன்னார்.

5-வது. மீர்ஷம் சொன்னது: பாதுஷாவினுடைய அம்மானும் ஒரு வசீரும் நாசர்சங்கைப்பிடிக்க வெகு பவுஞ்சுடனே புறப்பட்டார்களென்று யெழுதி வந்துதென்று சொன்னதுக்கு துரையவர்கள் மிகுதியும் சந்தோஷமாச்சுது யென்று பதிலுத்தரம் எழுதச் சொன்னதுமல்லாமல் இப்படித் தானே தினந்தினம் சந்தோஷக்கபுறு வரவேண்டியதென்று சொல்லச் சொன்னார்யென்று எழுதச்சொன்னார் என்று யெழுதச் சொன்னார்.

6-வது. மீர்ஷம் சொன்னது: மொபார்சுகான் குமாரன் அமானத்து கான் நாசறுசங்கு பேரிலே சண்டைபண்ண வாரானென்று கபுறு வந்ததாய் எழுதச்சொன்னதற்கு முசாபர்கான் மாறுபாடாயெழுதினனென்று சொன்னதற்கு யினிமேல் எந்தக்காரியம் உண்டானாலும் தாங்களெழுதி யனுப்புகிறதேயல்லாமல் முசாபர்கான் அறியப்பண்ணக் கவையேயில்லை யென்று யெழுதச்சொன்னார்.

7-வது. மீர்ஷம் சொன்னது: சீர்மைக்குப் போகிற கப்பலிலே எழுத வேண்டியது கும்பினியாருக்கு யெழுதியனுப்பி மூவாயிரம் வெள்ளைக்காரர்களும் இரண்டாயிரம் காப்பிரிகளும் அழைப்பித்தால் யென் தவுலத்து யிருக்கிற மட்டுக்கும் அவர்களுக்குண்டான சம்பளம் நான் கொடுத்து யிக்கிறேன் என்று யெழுதியனுப்பி அழைப்பிக்கச் சொன்னுரென்று சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது: நீங்கள் சந்தாசாயபு காகிதம் யென் பேருக்கு அழைப்பிக்க வேண்டிய தென்னவென்றால்: சீர்மைக்கு நீர் எழுதி அனுப்பி கும்பினியார் மூவாயிரம் சொல்தாதுகளும் இரண்டாயிரம் காப்பிரிகளும் அழைப்பித்தால் அந்த சம்பளம் யென் தவுலத்துயிருக்கிற மட்டுக்கும் நான் வைத்துக்கொண்டிருந்து சம்பளங்கொடுத்து விடுகிறேன் என்றும்

மிந்தப்படி தபவுபண்ண வேணுமென்று காகிதம் அழைப்பிக்கச் சொல்லிச் சொன்னார். அதற்கு மீர்ஷம் நல்லதென்று சொன்னான்.

8-வது. மீர்ஷம் சொன்னது: ஆயிரந்துப்பாக்கியும் அதற்கு கடுத்துசிந்துரோம் முதலான சாமான்கள் கேழ்க்கச் சொன்னாரென்று சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது இப்போ நானூறு பேர் அன்னூறு பேர் சிப்பாயிகள் வாரார்களே அவர்களுக்கு துப்பாக்கிகள் பந்திரங்கள் கடுத்துசிகள் முதலானதுகள் கொடுக்கிறோம். மந்தப்படி அதற்கு அதனம் துப்பாக்கிகள் கொடுக்கக் கூடாதென்று யெழுதச் சொன்னார்.

9-வது மீர்ஷம் சொன்னது: காளிச்சரத்தின் கம்பினி முன்னே நாமங்க வந்தபோது நீங்கள் கொடுக்கவந்தது வாண்டா மென்றமே இந்த தஞ்சாவூர் கலபத்தில் டோரகில் கிழே போட்டிருந்தபோது செல்லடித்துப் போட்டுப் போச்சுது ஆனபடியினாலே கும்பினியிலே இருக்கிறது பெரிய கம்பினி சின்னது யெவ்வளவு இருக்கிறதோ அவ்வளவும் கொடுக்க வேணுமென்று கேட்டதற்கு துரையவர்கள் சொன்னது: அந்தப்படிக்கெல்லாம் காரைக்கால் படகின்பேரிலே போட்டு அனுப்பி அங்கேயிருந்து தண்டுக்கனுப்பச் சொல்லி யெழுதியனுப்புகிறோம். அங்கேயிருந்து வந்து சேருமென்று யெழுதச் சொன்னார். அப்போ முசியே கொர்னேத்தையும் அழைத்து ரவாணபண்ணி அனுப்பச் சொல்லி உத்தாரங் கொடுத்தார்.

10-வது மத்துகிரி பெத்த பள்ளாபுரத் தண்டையிலே யிருக்கிற நாசர் சங்கு அவர்கள் அவர்களண்டையிலிருந்து அவர் திவான் மோரோ பண்டிதரும் காசி ஆமது என்கிறவரும் ஆயிரங் குதிரைசுவாருடனே திருச்சினாப்பள்ளிக்கு முசாபர் சங்கு அண்டைக்கு வந்து சமாதானம் பேசிக்கொண்டு போக வாரார்களென்கிறசேதி நேற்று சாயங்காலம் அல்லி நகிம் யெழுதியனுப்பிவித்தான். அதுமெய்தானாவென்று கேட்டார் மெய்தானென்றால் நான் வாச்சே அந்தப்படிக்குப் பார்த்து அறுக்காறுகள் வந்து கபுறு சொன்னார்கள் ளென்று மீர்ஷம் சொன்னதுக்கு துரை அவர்கள் சொன்னது நீர் சந்தா சாயபுக்கும், முசாபர் சங்குக்கும் யெழுதுகிற தென்னவென்றால்: உங்களுடைய தவுலத்துக்கு காரணம் புதுச்சேரி கொவர்னதோரான படியினாலே ஒரு குல்லாவிலே மூணு தலை பூந்து கொண்டிருக்கிறபடியினாலே ஒன்றறை வரங்கினாலும் அந்தப்படிக்கு கெட்டுப்போறாப் போலே என்னை அல்லாமல் நாசர் சங்கு சமாதானம் பேசத்தேவையில்லை அதற்கு மோரோ பண்டிதனும் காசி ஆமதும் வந்தாப்போலே அவர்களுக்கு எந்த மரியாதைப் பண்ண வேணுமோ அந்த மரியாதை விஸ்தாரமாய்ப் பண்ணி அப்பால் சமாதானப் பேச்சு எடுத்தால் நாங்கள் வொரு சீவனும் மூணு கூடுமாய் யிருக்கிறதான

படியினலே புதுச்சேரி கொவர்னதோரை அல்லாமல் பைசலாகமாட்டாது. ஆனபடியினலே அவரண்டைக்குப் போய் தீர்த்துக்கொள்ளுவோ மென்று அவர்களை யிங்கே யழைத்துவரச்சொல்லி யெழுதுகிறது பெலப்பாயிருக்கும் உங்கள் காரிய மெத்த பெலத்து நடக்குமென்று யெழுதச்சொன்னர் மீர்ஷம் அந்தபடிக்கு நல்லதென்றால் துரையவர்களும் தம்முடைய காகிதத்திலேயும் யெழுதச் சொல்லுகிறோமென்றும் சொன்னர்.

11—வது கப்பலின்பேரிலே சொல்தாதுகள் வந்ததாய் சேதி கேழ்விப்பட்டு யெங்குங் கொல்வாயிருக்கிறபடியினலே தாங்கள் கொஞ்சம் சொல்தாதுகளை அனுப்பிவித்தால் அது வந்து நாலாயிரஞ் சொல்தாதுகள் வந்தார்களென்று யெங்கும் போராம் அதற்கு சத்துருக்களுக்கு குண்டை ஒடைஞ்சு கலங்கிப்போவார்களென்று சொல்லச்சொன்னர் என்று மீர்ஷன் சொன்னன். அதற்கு துரையவர்கள் கப்பலிலே அதனமாய்ச் சொல்தாதுகள் வரயில்லை. யிப்போயிருக்கிற பேரிலே அனுப்புவோமென்றால் வேலூர் காரியம்மோக்கு பண்ணினேமென்று யெழுதியனுப்பச்சொல்லி துரை சொன்னர்.

12—வது சகலாத்து சாரிச்சியும் வேணுமென்று சொல்லச்சொன்னர் என்று மீர்ஷம் சொன்னதுக்கு சகலாத்து பரிச்சேதம் கிடையாது சாரிசி அகப்படுமென்றும் துரையவர்கள் உத்தாரம் சொன்னர். மீர்ஷம் சொன்னது: அசாத்து சந்தா சாயபும் ஷெ குமாரன் ராசாசாயபும் ரெண்டு பேரும் உங்களுக்குச் சொல்லச்சொன்னது என்னவென்றால்: நீங்கள் நவாபு யிடத்திலே வைத்து ரட்சித்து இந்த நவாபத்துக் கூட்டம் அடங்கிப் போனதை பிறபலம் பண்ணினதற்கு நாங்கள் யென்ன பிரதி உபகாரம் பண்ணப்போகிறோம். ஆனல் நாங்கள் பாகூர் தாலுக்கா முப்பத்தாறு கிறாமமும் வில்லியநல்லூர் தாலுக்கு நாற்பத்தி ஆறு கிராமமும் காரைகாலுக்கு திருநள்ளாறு மாகாண வகையறு யெண்பத் தொரு கிராமமும் இனம் கொடுத்ததெல்லாம் கும்பினிருக்கு கொடுத்துவிட்டாப் போலே ஆச்சுதே. அப்பால் நகது நாலு லட்சம் ஆறு லட்சம கொடுத்தது. ஒப்பிசியால்மார் சொல்தாதுமார் எடுத்துக்கொண்டு போனப்போலே ஆச்சுது. ஆக இருக்கு நீர்மாத்திரம் ஒன்று மனுப்புவித்ததில்லை. ஆனபடியால் சீர்மை பூமி கொடுத்தால் மறுபடி கும்பினியை சேர்த்துப்போடுவீரென்று யிப்போ தஞ்சாவூரிலே யிருந்து வருகிற பணத்திலே உங்களுக்கு சந்தோஷமாகும்படியாய் விஸ்தாரமாய் இரண்டாம் பேரறியாமல் ரொக்கமாய் கொடுத்தனுப்புகிறோம் என்று சொல்லச்சொன்னர்களென்று சொன்னதற்கு அவர் சொன்னதெல்லாம் மெய்தான் இப்போ நமக்கு விசேஷித்து ரொக்கமா யெவ்வளவு செய்தாலும் யென்னை அடைகிறதானபடியினலே அவருக்கு யெப்படி சந்தோஷமோ அப்படி நடப்பிக்கச்சொல்லென்று துரைசொன்னர்.

**சுக்கில ௵ மாசி ௴ 7 உ க்கு 1750 ௵ பிப்ரவரி ௴ 15 உ சுக்கிரவாரம்**

இற்றைநாள் காலத்தாலே நேத்தது ராத்திரி பொழுது விடியகாலு நாழிகை யென்னச்சே சீர்மைக்குப் பாயெடுத்துப் போகிற பெரோன்சு யென்கிற கப்பலும் மசக்கரைக்குப் போகிற தேவனுபத்தாம் என்கிற கப்ப லும், ரெண்டும் பாய் எடுத்து ஓடிப்போகிறது காத்துமேதவலனாலே பொழுது விடிஞ்சு யேழுமணி மட்டுக்கும் கப்பல் கண்டுது. அப்பால் மறைந்தது என்கிற கபுறு வந்து சொன்னார்கள். அப்பால் நேத்து ராத்திரி வெகு நேரம் துரையவர்கள் விழித்துக்கொண்டிருந்தபடியினாலே யிந்த நாள் ஒன்பது மணிமட்டுக்கும் நித்திரைபோய் அப்பால் எழுந்திருந்து கோயி லுக்குப்போய் பூசைகேட்டு வந்து அப்பால் கபே குடிச்சானபிறகு சந்தா சாயபு மச்சினச்சி மகன் அல்லிநகீம் சாயபு ஒரு. காகிதம் அனுப்பின சேதி சொன்னவயணம்: நாசற்சங்கு சீரப்பிவந்து சேர்ந்து அங்கேயிருந்தும் அவருடைய திவானை மோரேபண்டிதரையும் காசிதாயிம் யென்கிற பெரிய மனுஷர்களையும் சமாதானம் பேசுகிற நிமித்தியம் அனுப்ப அவர் களும் தஞ்சாவூர் அந்தப் பிராந்தியங்களுக்குப் பயணம் போய் சேருகிற தற்கு முன்னே சந்தா சாயபு அவர்கள் சிறிது சொல்தாதுகள், காப்பிரிகள் நிமித்தியம் சான்சாமிகள் கூட கொடுத்து அனுப்பிவிக்கச் சொல்லி உங் களுக்கு காகிதமெழுதி மீர்ஷம் சாயபுவையும் அனுப்பினார்களே அந்தப் படிக்கு சான்சாமி பண்ணி அனுப்பிவிக்க வேணுமென்றும் மோரே பண்டி தர் முதலானபேர் போய்ச்சேர்ந்து சமாதானமாகிறதாய் தோற்றுது யென் றும் யெழுதினசேதி சொன்னேன். அதற்குப் பதிலுத்தரம் எழுதப் போயிருக்கிறது. அங்கே யிருந்து யெழுதி வருகிறபடிக்கு நடக்கிறே மென்று யெழுதிப்போடச் சொன்னார். அப்பால் செஞ்சி கில்லேதார் காதர் சாயபு தாயாயென்கிறவன் துரை பேருக்கு எழுதின காகிதச் சேதி சொன்ன வயணம்: நாசறுசங்கு சமீபமாய் வந்துபோகிறமட் டுக்கும் செஞ்சி கில்லாவிலே நூறுபேர் வெள்ளைக்காரர் யிருக்கவேணும். மருந்துகுண்டு போம்புகுந்தாணி பீரங்கி முதலான சான்சாமிகளிருந்தால் பயமில்லை. ஆனபடியினாலே தாங்களிந்த மட்டுக்கும் அனுப்பவேணுமென் றெழுதின சேதியை சொன்னதற்கு நல்லது அப்படியே அனுப்புகிறே மென்றார். ஆனால் சந்தாசாயபுவுக்கு அவருத்திரந்தெரிந்து கொண்டு அனுப் புகிறோமென்றெழுதி அனுப்பச்சொல்லி சந்தாசாயபுக்கும் செஞ்சி கில்லே தாரன் யெழுதியனுப்பினபடிக்கு அனுப்புகிறதாயென்று ஒரு காகிதமெழுதி அனுப்பச்சொன்னார். அந்தப்படிக்கி மூணுபேருக்கும் காகிதம் எழுதி அனுப்பிவிட்டோம். அப்பால் மறுபடி அழைத்து நேத்து ராத்திரி சூரத் திலேயிருந்து காசிதுகள் சீர்மை காகிதம் கொண்டு வந்தார்களே அந்தக் காகிதத்துடனே கூட சூரத்து நவாபுடனே ஒரு காகிதம் யெழுதியனுப்பி

னன் அந்த காகிதத்தைப்பார்த்து படித்துசொல்லென்று சொல்ல அதைப் படித்துச்சொன்ன வயணம் நாசறு சங்கு எனக்கு எழுதியனுப்பி உங்கள் கொட்டடி யெசமான் முசியே வெறியேருக்குச் சொல்லி அவரைக் கொண் டும் உங்களுக்குத் தெரியயெழுதச்சொல்லியும் தெரியப்பட்டயெழுதியனுப்பச் சொல்லியும் யெழுதி வந்தது. அவ்விடத்திலே தம்முடைய வுத்திரவுக்கு வியத்திருத்தமாய் சிறிதுபேர் வந்து அந்தப்பிராந்தியங்களிலே தப்பு நடத் தையாய் நடக்கிற பேர்களுக்கு நீங்களாசறுய்க்கொடுத்து மத்ததுக்கு கூட்டியும் நடப்பிக்கிறது நல்லதல்லவென்றும் அவர்களை விட்டு விட்டு தங்கள் மாரிபத்தில் நடப்பித்துக்கொள்ளச் சொல்லி உங்களுக்குத் தெரிய பட்ட எழுதி அனுப்பச்சொல்லி யெழுதி வந்தது.

**சுக்கில ஞு மாசி மீ 8 உக்கு 1750 ஆ பிப்ரவரி மீ 26 உ சோமவாரம்**

இற்றைனள் சாயங்காலம் ஆறுமணிக்கு நபாபு முசபர் சங்கு அவர்க ளுடைய ஒட்டை சவார்கள் ரெண்டு வந்து காகிதமுங் கொடுத்தார்கள். அந்தக் காகிதத்தில் எழுதியிருந்த வயணம் நாசர் சங்கு ஆனல் சிறப்பி அண்டையிலே வந்து இப்புரமும் வாரான் சந்தா சாயபு ஆனல் சத்துரு கிட்டவந்தாரென்று எண்ணமல் தஞ்சாவூர் மொகத்துமாவிலே இருந்து கொண்டு அந்த கோட்டையை வாங்கினலே அல்லாமல் அப்பால் நடக்கத் தங்கினதில்லை என்று வெகு சுவித்தன் பேரிலே இருக்கிறர். இப்பால் நடக்க வேண்டிய தென்னமாய் நடத்த வேணும் யோசனை தெரியும்படியாய் எழுதியனுப்பச் சொல்லி எழுதியிருந்தது. அந்தச் சேதி படித்து சொன்ன மாத்திரத்தில் இத்தனை நாளும் நாசர் சங்கு ஊரிலே இருந்து அப்பால் வடக்கே போனனென்றும் காசிதாயிம் என்கிறவன் குறுன் எடுத்துக் கொண்டு சமாதானம் பண்ணுவதற்கு திவான் மோரோ பண்டிதனையும் கூட அழைத்துக்கொண்டு வாரானென்று அல்லி நகீம் ரெண்டு மூணு காகிதம் எழுதி நாசர் சங்கு திருப்பிக்கொண்டு போகிறன். என்கிற கபுறு வந்தது என்று எழுதிக்கொண்டு வர இதாயித்து மொகதீன்கான் மாத்திரம் நாசர் சங்கு வார கபுறு எழுதின தென்ன? சந்தா சாயபு எழுதாமல் போன தென்ன? அந்த சாடைபார்த்தால் முசபர் சங்கு தஞ்சாவூர் காரியம் தன் மாரிபத்திலே நடக்கவில்லையே கோட்டை வாங்குகிற சாடையாய் தோத் துதே இதை கல்ல பண்ண வேணுமென்று யோசனைபண்ணி இந்த யோசனை எடுத்து நமக்கு யெழுதினனே.........................

இற்றைனள் காலத்தாலே தஞ்சாவூரின் பேரிலிறங்கி சண்டை பண்ணு கிற லசுக்கரிலிருந்து முசியே குப்பில் எழுதின காகிதத்தில் தஞ்சாவூர் கோட்டை முன் பாரிசத்தில் விழுந்து தென்றும் முசியே லாசுவுக்கு சாவு காயம் என்றும் முசியே தான்சிங்கு அசவுகாய மென்றும் காரைக்காலுக்கு எடுத்துவந்தார்களென்றும் கோட்டை ரெண்டு மூணு நாளையிலே கைவச

மாகு மென்றும் ஆனல் நாசர் சங்கு சிறப்பிக்கு இப்புர மிருக்கிற மத்துக் கிரிக்கு வந்தானென்றும் நாசர்சங்கு திவான் மோரேபண்டிதன் என்கிறவன் காசிதாயிம் என்கிறவனும் சம்பந்திருயனும் சிறிது பவுஞ்சும் ஆற்காட்டிலே சண்டா கொண்டு வந்து போட்டு வந்தவாசி முதலான சில்லாக்களையெல்லாம் சுத்திக்கொண்டு அவர்கள் குஞ்சு குழந்தைகளை பிடிக்கவும் அதிலே நாசறு சங்கு தஞ்சாவூர்போய் சேர்ந்து முசபர்சங்கையும் சந்தா சாயபையும் சுத்திக் கொண்டு சண்டை பண்ணுகிற சாடையாயங்கேயிருந்து மூசியே குப்பி யெழுதினனென்று சொல்லி நாசறுசங்கு திரும்பிக்கொண்டு போகிறு னென்று சொல்லி சேதிவந்ததாயெழுதினர்களோ யிப்போ நாசறுசங்கு திருப்பிக்கொண்டு போகிறவன் அப்போதே வந்து விட்டானு? எதனு லே நாசறு சங்கு திருப்பிக்கொண்டு சமீபத்திலே வந்ததாய்ச் சொன்னல் தஞ்சாவூர் கோட்டையை வாங்குகிறதை விட்டுப்போட்டு அப்பால் போனல் பணத்துடனே சேர்ந்தது தன்கை பத்தலாமென்று முசபர்சங்கு சொல்லி யிப்படி பிறப்பித்தானென்று சொன்னர். அதற்கு நான் சொன்னது நாசறு சங்கு சிறப்பி மத்துகிரி வந்து சேர்ந்ததிலே மோசமில்லை. முன்னதாக சமா தானம் பண்ணுகிற நிமித்தியமாய் ஷ திவான் மோரே பண்டிதனும் காசி தாயிமென்கிறவனும் குருனும் எடுத்துக்கொண்டு வாருர்கள் என்றும் முன் னலேதானே யெழுதிவந்ததே அதிலேயும் பிசகுயில்லை. இப்போ அந்த சேதியை சண்டையின்பேரிலே வாரதாய்ச் சொல்லுகிருர்களப்படியே க்காயெக்கியாய் அவன் தூரத்து யோசனைபண்ணிக்கொண்டு யெதுவும் செய் வான் ஆனபடியினலே முன்னதாக மோரேப................................

சுக்கில ஸு மாசி மீ 24 உ ௲ 1750 ஆ மார்ச்சு மீ 4 உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே பிரபுவினிடத்துக்குப் போனவிடத்திலே நாசறுசங்கு காகிதமும் மோரே பண்டிதனுடனே கூடவந்த காசிதாயிமென் கிறவன் காகிதமும் ரெண்டும் ரெண்டு காசிதான் கொண்டு வந்தான். அவர் களைக்கேட்டால் நாசறுசங்கு செங்கமாகணவாயண்டை வந்தான் என்று சொன்னர்கள். முந்தாநாள் அல்லிநகீம் எழுதின காகிதத்தில் தங்களுக்கு அறுக்காரருக வந்தவர்கள் சொன்னது நாசறுசங்கு சகதேவ (Sahadave) வந்து சேந்தானென்று யெழுதினனென்கிறதை மனதிலே வைத்துக்கொண்டு சகதேவண்டையிலே யிருக்கச்சே சிங்கரிப்பேட்டை கணவாய் யிறங்கினு னென்று எப்படி சொன்னுயென்று கேட்டதற்கு நாங்கள் புறப்பட்டு நாலு நாள் ஆச்சுது இதற்குள்ளே வந்து சேருவானென்று சொன்னன். அப்பால் காகித சேதி என்னவென்று துரை முன் 19உ நாசறுசங்கு காகிதம் வந்ததே அதிலே சந்தா சாயபுவை இராயத்து மொகலீன்கான் விட்டுவிடச்சொல்லி

யும் உங்கள் பவுஞ்சை அழைப்பித்துக் கொண்டு உங்கள் மட்டிலேயிருக்கச் சொல்லியும் யெழுதியிருந்தபடிக்குத் தானே இரண்டு எழுதி முன் அறுக்காரர் ஒருத்தன் கையிலே வந்ததும் இப்போ வந்ததும் அந்தப்படிக்குத் தானே யெழுதி வந்தது. அப்போ இரண்டெழுதி ஒன்று அறுக்காரர்கள் கையில் கொடுத்து செவ்வையாயிவ்விடத்துக்கு அனுப்பிவித்தார்கள். மற்றொன்று காகிதாயிடம் மோரோபண்டிதர் அண்டைக்கு அனுப்பிவித்ததாக வேணுமென்று சொல்லி அந்த காகிதத்துடனே கூட காகிதாயிம் யென்கிறவன் ஒரு கடுதாசிகூட யெழுதியனுப்பிவித்தான் என்று சொன்னதற்கு துரையவர்கள் பதிலுத்தரமெழுதச் சொன்னது முன் நாசறுசங்குக்கு எழுதின நக்கலிருக்கிறதே அந்தப்படிக்கு நாசறு சங்குக்கு ஒரு காகிதமும் காகிதாயிமுக்கு நீர் எழுதின கடுதாசி வந்தது. நாசறுசங்குக்கு பதிலுத்தரம் அனுப்பிவித்தோம் வந்த காரியம் நாசற்சங்கு அவர்கள் நினைக்கிறபடிக்கு நடக்கறியாது.. அவரெந்த மார்க்கம் எடுத்தால் சமாதானமாய் தம்முடைய ஊக்கமில்லை வருமோ அந்த யினம் தேடினால் யிந்தக்காரியம் அவர் கையிலிருக்குதென்று அறிஞ்சுக்கொள்ளலாமென்றும் யிதுகளுக்கு தாமசம் பக்ஷமானால் யெல்லாம் முகதாவிலே பேசச்சே தெரிய வருமென்றும் உபசாரமாயெழுதி நாசற்சங்கு காகிதத்துக்குப்பைபோட்டு அனுப்பவேண்டாமென்றும் நாசறுசங்கு யெழுதுகிற காகிதம் அறுசுநாலது காகிதத்திலே யெழுதாமல் நாசறு சங்கு அவர்கள் யெழுதின அபுசானிக்காகிதப்படிக்குத்தானே அப்புசானிக்காகிதத்திலே யெழுதிக்கொடுக்கச் சொல்லி சொன்னார். அந்தப்படிக்குத்தானே காகிதங்களெழுதி வந்த அறுக்காரர்கள் கையில் கொடுத்து அவர்களுக்கும் பேருக்கு ஒரு ரூபாய் கொடுக்கச் சொன்னப்டிக்குக் கொடுத்து அனுப்பிவிக்கச்சொல்லி பரசுராம பிள்ளைக்குச் சொல்லி அனுப்பி பயணம் அனுப்பிவிட்டோம். அவர்கள் நாசறுசங்கு செங்கமா கணவாயண்டையிலே யிறங்குகிறுனென்று முன்னதாக பீரங்கி வகையரு சாமானுகளிறங்குதென்றும் கபுறு சொன்னார்கள்...............

### சுக்கில ஸு மாசி ௴ 27 உ க்கு 1750 ஆ மார்ச்சு ௴ 7 உ சனிவாரம்

இற்றைனாள் காலத்தாலே நாசறுசங்கு உடைய நவாசுகான் என்கிறவனண்டையிலிருந்து ஆசி அப்துல்லா என்கிற துற்கி ஒருத்தன் குதிரையின் பேரிலேஏறிக்கொண்டு நாசறுசங்கு உடைய அறக்காறுகளை ஆரேழுபேரையும் கூட அழைத்துக் கொண்டு ஒழுவுகரை வழி குண்டு சாலையிலண்டையிருக்கிறுர். மேட்டிலே வந்துதான் நாசர்சங்கு அண்டையிலிருந்து நாசறுசங்குடைய காகிதம் கொண்டு வந்தேனென்று சொல்லி அனுப்பினபடியினாலே அப்பாலிங்கே இருந்து ஒரு சேவுகனை அனுப்பி அழைத்துக்

கொண்டு வரச் சொல்லி பென்னன்ண்டைக்கும் துரையவர்கள் சேவகனை அனுப்பிவித்து நாசறுசங்குவுடைய காகிதம் வருது. சீக்கிரமத்துக்கு வரச் சொல்லி சொல்லியனுப்புவித்தார்கள் நானும் மதனாந்தபண்டிதரண்டைக்கும் சேவகனை அனுப்பிவித்து நான் துரை வீட்டுக்கு வந்தேன். என்னை துரையவர்கள் கண்டவுடனே நாசறுசங்கண்டையிலிருந்து யாரோ ஒருத்தன் வாரானும் அவன் நாசறுசங்கண்டையிலிருந்து வாரதாய்க் காணவில்லை மோமோ பண்டிதனோ பின்னையாரவன் அண்டையிருக்கிற சர்தாரண்டையி லிருந்துவாரவனோ தெரியாது. நல்லது வரட்டும். என் இப்படி அடிக்கடி வருகிறார்கள் நல்லதுதான் வரட்டும். இவனென்ன போய் சொல்லுகிறானோ பார்ப்போம் என்று சொல்லிசொன்னார். இப்படி சொல்லிக்கொண்டே இருக்கச்சே இதிலே கோன்சேல் காரரை யெல்லாரும் வந்தவுடனே அழைக்கச் சொன்னார். அவர்களெல்லாரும் வந்தவுடனே அவர்களுடனே இந்த கலாபத்து சமாசாரங்கள் நாசறுசங்கு வருகிறது முதலானதுகள் என்னென்ன பேசிக்கொண்டு இருந்தார்களோ இப்படி பேசிக்கொண்டிருக்கச்சே அந்த துற்கியும் அஞ்சாறு அறுக்காருகளும் உள்ளே வந்தார்கள். வந்தவுடனே என்னை அழைத்து யிங்கேயானல்சச்சாயிருக்கிறது அவனை நீ முசியே பெடுத்தரும் (M. B rtrand) எழுதுகிற கோந்தலார் வீட்டுக்கு இப்பாலே இருக்கிற காம்பிராவிலேஇருக்கிறதுக்கு அவனை அழைத்து கொண்டுபோய் அவன்வந்த சேதி என்னமோ அந்தச்சேதியை அறியச்சொல்லி சொன்னார் அதின்பேரிலே அவனை அழைந்துக்கொண்டுபோகச்சே முசியே கில்லியாரைகண்டுநன்றாயிருகிறீரா நீர் யென்று சொல்லி பிராஞ்சுக்கார வார்த்தையிலே கேட்டுப்போட்டு அந்தக் காம்பிறாவிலே வந்தான். வந்து பெரிய மனுஷரண்டையிலிருந்துவந்தவனையிப்படி மரியாதையாய் அழைப்பித்து உட்காரவைத்துக்கொண்டு பேசாமல் யிந்தண்டையிலே கொண்டுவந்து நிறுத்திவைத்துயிருக்கிறது; இதல்ல ஒரு மரியாதையென்று அவன் வேசடைப்பட்டதும் அவன் வெகுவாய்ப் பேசினதும் காகிதத்திலே யெழுதி முடியாது. இதிலே துரையவர்கள் யென்னையழைத்து அவன் யென்னசொன்னானென்று கேட்டார். அவனுங்களுடனே பேசுகிறதேயல்லாமல் யென்னுடனே பேசுகிறதில்லையென்று சொல்லுகிறான் யென்று கடுதாசி கேட்டதுக்கும் அதுவும் என் கையிலே கொடுக்கிறதில்லையென்று சொல்லுகிறான் யென்று சொன்னதற்கு அதின் பேரிலே கோன்சேல்காரர்களையெல்லாம் அனுப்பிவிட்டு நல்லது யிங்கே வரச்சொல்லு யென்று சொன்னார். அப்பால் அவனை அழைத்துக்கொண்டு போய் துரையவர்கள் முன்னே விட்டுவிட்டவுடனே அவன் துரையவர்கள் கையிலே சான்வாசுகான் காகிதமொன்றும் நாசறுசங்குவுடைய காகிதமொன்றும் கொடுத்தான். நாசறுசங்கு காகிதத்து முத்திரை யெப்போதையும் வருகிற முத்திரை அல்ல அது சச்சவுக்கமாய் கிசாமுத்தவுல

என்று போட்டிருக்கும் இது நிகளமாய் நாசரு சங்கு என்று போட்டிருக்கிறது கடுதாசியிலே போட்டிருக்கும் எழுத்தும் எப்போதையும் எழுதி வருகிற கையெழுத்துமல்ல. அதிலே நியாய நிஷ்டூரமாம்படியே எழுதி இதாயத்து மொகதீன்கானையும் சந்தாசாயபும் பாச்சாவுடைய ஆக்கினை பண்ணினதை மீறி விதிரிக்கிந்தமாய் நடந்துகொள்ளுகிறவர்களான. படியினாலே இதுவரைக்கும் நீங்களவர்களுடனே அனுகூலமாயிருந்தாலும் இனிமேலவர்களை விட்டுவிட்டு அவர்களண்டையிலிருக்கிறார். உங்கள் பவுஞ்சையும் நீங்களழைப்பித்துக்கொண்டு யெங்களுடனே அனுகூலமா யிருக்கவேணுமென்று சொல்லி எழுதியிருந்தது. சான்வாசுகான் காகிதத்திலேயும் கோசா ஆசி அப்துல்லா யென்கிறவனை உங்களண்டைக்கு அனுப்புவித்தோம் அவன் சொல்லச்சே தெரியவருமே யென்றும் நீங்கள் சந்தாசாயபு இதாயத்து மொகதீன்கான் அண்டையிலிருக்கிற பவுஞ்சையும் அழைப்பித்துக்கொண்டு உங்கள் பவுஞ்சுடனே நீங்கள் நாசருசங்கு அவர்களுக்கு எதிர்கொண்டுவந்தால் சகல காரியங்களும் உங்கள் மனதுப்படியே அனுகூலமாய் நடக்கும் யென்று எழுதியிருந்தது இந்த சேதியை துரையவர்களுடனே சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது: இதுகள் எல்லாம் ஒன்றுமில்லை சும்மா அவர்கள் பயந்து யிப்படியெல்லாம் லகுவு பிகுவாய் யெழுதுகிறார்கள் என்று சொல்லி இது நாசருசங்கு அண்டையிலிருந்து வந்ததல்ல சான்வாசுகான் இவ்விடத்திலேயிருந்து போகிற காகிதங்களை பார்த்துக்கொண்டு பதிலுத்தரமெழுதி அனுப்பினான் என்று சொன்னார். அதற்கு நான் உண்மை தானென்று சொன்னேன் அதின்பேரிலே இப்போ வந்த துற்கி ஆசி அப்துல்லாவென்கிறவன் யாரென்றால் முன்னே முசியே நுவார் நாளையிலே முசியே தேவலத்தோச் என்று ஒரு சொல்தாது சூதாடி சிறிது பணம் கெளித்து அப்பால் பறிட்டவனையாய் சரக்கு கொள்ளுகிறதைப்போலே விக்கிறாப்போலேயும் அவரவர் கையிலே பரபத்தியம் வாங்கி மறுபடி சூதாடி தோத்துப்போட்டு அவனைக் கலியாணம்பண்ணியிருந்த மீன்கடை வாசுக்கு மகனை அழைத்துக்கொண்டு சென்னபட்டணத்து மார்க்கமாய் கோவளம் போய்ச் சேர்ந்தான். அதன்பேரிலே முசியே நுவார் யிங்கேயிருந்து சிறிது சேவுகரை அனுப்பிவித்து அவனைப் பிடித்துக் கொண்டுவரச்சொல்லி சொன்னார். அதன்பேரிலே அவ்விடத்திலிருக்கிற மிய்யா சாயபு குமாரன் படேசாயபு யென்கிறவன் சேவுகருக்கு அங்கே யில்லை யெண்பித்து அங்கேயிருந்து மெல்ல நெல்லூரைகொண்டு போய் சேர்த்தான் அங்கே யிருந்து அவன் அதிர்ஷ்டம் நன்றாயிருந்தபடியினாலே கோல்கொண்டை அவுரங்காபாத்து போய்சேர்ந்து அங்கேயிருந்து டில்லியிலே பாதுஷா விடத்திலே வசீராயிருக்கிற கமரத்திகானண்டை போய் சேர்ந்து வைத்தியனென்றெண்பித்துக் கொண்டு அப்பால் நாதர்ஷா

கலகம் வந்ததும் மகம்மதுஷா பாதுஷாவைப் பிடித்துக் காவல்பண்ணி டில்லிபட்டணம் கொள்ளையிட்டு காருசங்கியாய் ரெண்டு லட்சத்து முப் பதினாயிரம் கணக்கிலே யெழுதப்பட்டவர்கள் செத்தபோது அப்போ யிவனுக்கு அதிர்ஷ்டம் நன்றாயிருந்தபடியினாலே பத்து லட்சம் இரு பது லட்சம் கொள்ளை அகப்பட்டபோது அந்த சமயத்திலே கமறத்துகான் வீட்டையும் அவன் பெண்டுகளையும் பத்திரமாய் காத்துக்கொண்டு நாதர்ஷா கூட்டம் அங்கே வந்து விழாமல்படிக்கு இருந்து தான் மகா சேவகன் என்று எண்பித்துக்கொண்டிருந்த முசியே தேவலத்தோமென்கிறவனண்டை யிப்ப வந்த ஆசி அப்துல்லா யென்கிறவன் அவ்விடத்திலே வெகு நாளாயிருந்து முன்னாலே பிராஞ்சுக்காரருக்கு நவபொத்துக்கும் ரூபா முத்திரைக்கும் யேனம் கொட்டடி நிலந்துக்கும் புதுச்சேரியிலே போடுகிற மூணு பிறதமை விராகனிடை அவ்விடத்திலே சலாவாணி ஆகிறதுக்கும் யிதுகளுக்கெல்லாம் கமறத்திகான் யென்கிற வசீருடைய பற்மானுக்கள் டில்லியிலிருந்து வாங்கி வந்து யேனத்திலிருந்த முசியே கில்லியார் கையிலேயும் மச்சிலிபந்தரிலே யிருந்த முசியே போருஷே வசத்திலேயும் கொடுந்துப்போட்டு மறுபடி டில் லிக்குப் போனவன் யிதல்லாமல் முசியே நிவார் நாளையிலே இருபது இருபத் தஞ்சு வருஷத்துக்கு முன்னே இந்தூரிலேயும் வந்திருந்தேனென்றும் யிது முதலான சமாசாரங்களெல்லாம் துரையுடனே அவன் வாயினாலே சொல்லி அப்பால்தான் சொஸாந்தி ஜெப்புருயென்கிற யெம்பறதோர் ராச்சியத்திலே பிறந்தேனென்றும் பிறிதென்கிற பிரான்சு ராசா இருக்கிற பட்டணத்திலே லூய்சு கந்தோர்சு செத்துப் போய் லூயிசு கேன்சு பட்டத்துக்கு வருகிறார் அப்போதுதான் அவ்விடத்திலே யிருந்தேனென்றும் யிதல் லாமல் யிங்கிலித்தேருவில் சிறிது நாளிருந்தேனென்றும் பின்னையும் அந்த ராச்சியத்து விநோதங்களும் யிதுகளை யெல்லாம் முசியே துரைத்தேலை யும் கூட வைத்துக்கொண்டு ஒரு கதையாய்ச் சொன்னான். இந்நாள் ராத் திரி சிதம்பரத்திலே யிருந்து கலிச்சியப்பிள்ளை யெழுதி யனுப்பிவித்த ஓலை வயணமென்ன வென்றால்: மகாராசா மாணிய ராசஸ்திரி பிள்ளையவர்கள் ஆனந்த ரங்கப்பிள்ளை அவர்கள் தாங்கள் நினைத்திருந்த நன்மை யினாலே கலிச்சியப்பிள்ளை சுக்கில வருஷம் மாசி மாதம் 26 தேதி சுக்கிர வாரம் நாள் வரைக்கும் சிதம்பரத்துக் கோட்டைக்குள்ளே சுக மேயிருக்கிறேன் முன்னே இவ்விடத்து சமாசாரங்கள் யெல்லாம் அசறத்து மமுதுகான் சாயபு அவர்கள் பெண்சாதி விழுந்துபோன சேதிக்கு யெழுதினதை அனுப்பிவித்திருந்தேனே நாளது மீ 24 உ வெடிஞ்சு சாமத்துக்குள்ளே மராட்டியர் முராரி ராயர் பின்னையும் சற்தார் பெரிய மனுஷர்கள்கூட பத்து பன்னீராயிரம் குதிரையுடனே வந்து சிதம்பரம் சுற்றிக்கொண்டு யிதிலே அசறத்து சந்தாசாயபு அவர்கள் மனுஷர் ஆயிரங்

குதிரைக்காரர் கோபால நாறுயணப்பய்யனை வைத்துக்கொண்டு சிதம்பரத்திலே நாகச்சேரி குளத்தண்டையிலே யிறங்கி யிருந்தார்கள். அவர்கள் தெற்கே அவர்கள் யெசமானண்டைக்கு மாயுபுரத்துக்குப் போகவேணு மென்று பயணப்பட்டு நாந்தி மங்கலம் மூலாமெடுக்குச் சேவையிலே போகச்சே அவர்களை சுத்திவளைத்துக்கொண்டு குதிரைகளையும் சிறிது பிடித்துக்கொண்டு கோபால நாறுயணப்பய்யன் ஆனையின் பேரிலேயிருந்தான் அவருக்கு கையிலே வெட்டுக்காயங்களை பண்ணி ஆனையுடனே பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். சிதம்பரத்திலேயும் அவர்கள் குதிரைகள் சிறிது முறிஞ்சு தேத்துக்குள்ளே வந்து சேர்ந்தது. அதை சாக்கிட்டு வந்து பட்டணமெல்லாம் கொள்ளையடித்து லூட்டிகள் சிலாருகள் பண்ணினார்கள். அதின்பேரிலே முறுரிராயர் அண்டையிலிருந்து அறக்காறுவும் வந்து சொன்னார்கள். அசரத்து முகம்மதுகான் சாயபு அவர்களும் பீரங்கிகள் செசாலுகளை எடுத்துகட்டி கோட்டையிலே யிருந்தவாக்கிலே சுட்டார்கள். அதின்பேரிலே முறுரிராயரண்டையிலிருந்து அறுக்காறுவும் வந்து சந்தி சமாதானமாய் நதிர் பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் கொடுத்து தீர்ந்தார்கள். இதிலே வியாழக்கிழமை நாள் ரெண்டரை சாமத்துக்கு சேஷாராயரும் சேக்கு மகம்மது ஷரிப்பு மாய் ரெண்டாயிரம் குதிரையுடனே சோழமண்டலத்திலே யிருந்தவாக்கிலே சிப்பாய் வழியாய் வந்து வல்லத்துறையிலே யிக்கரைப்பட்டு வந்தார்கள். அவர்கள் வரச்சே மருட்டியர் யெதிர்ப்பட்டு வந்து பழையக்கொள்ளிடத்துச் செவ்வையிலே யெடுத்துச் சண்டை கொடுத்தார்கள். சேஷாராயரும் நல்ல சண்டை கொடுத்து மீனகாயம் குண்டுகாயம் பட்டு அவர் சிவலோக பிராப்தியானார் குதிரைகள் ஆனைகள் சகலமும் மருட்டியர் பிடித்துக்கொண்டுவந்து தங்கள் பாளையம் போய் சேர்ந்தார்கள். மறுநாள் சுக்கிர வாரநாள் ரெண்டரை சாமத்துக்கு மேலே மருட்டியர் குதிரைகளெல்லாம் கூட்டிபண்ணி மேற்கே புறப்பட்டு திருமிட்டத்துக்குச் சேவையாய்ப் போனார்கள் அசரத்துகிபலே இநாயத்து மொகதீன்கான் சாயபு அவர்களும் சந்தா சாயபு அவர்களும் அரைசூர் துறையிலே யிக்கரையேறி நாளை புவனகிரி பட்டணத்து வழியாய் வருகிறார்கள் யென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். இன்ன மருட்டியரும் வந்து சுத்துகிறார்கள் என்று அவர் இசாயிருக்கிறது அப்புறம் யென்ன நடக்குமோ தெரியாது நாங்களுமானால் தப்பிப் பிழைந்நது கடினம். யெங்களண்டை தயினாந்து சுவார் அப்துல்லா காதர் யெங்கள் பிறகே குதிரையைப் பிடித்துக்கொண்டு கோட்டைக்கு வரவேணும் என்று வரச்சே மருட்டியர் இருபது குதிரைக்காரராய் வந்து சுத்திக்கொண்டார்கள். அப்துல் காதரையும் அருதியாய்

வெட்டிப்போட்டு குதிரையும் பிடித்துக்கொண்டுபோய்விட்டார்கள். நாங்கள் க்ஷணிக்கு முன்னே தப்பி கோட்டை வாசல் வந்து சேர்ந்தோம்

சிதம்பரத்தை வெங்கும் மனுஷரையும் சேதப்படுத்தி சருவசோ பாரமும் கொள்ளையிட்டுப்போட்டார்கள் கோட்டை வாசலிலே ஓடிவருகிற விடத்திலே மெதிர்பட்டு நாற்பது அன்பது சனங்கள் கையருதியாய் செத்துப்போய்விட்டார்கள். அவ்விடத்திலேயானால் யெழுதிமுடியாது. தங்கள் பிறப்பிலே நான் வந்திருந்தபடியினாலே தங்கள் யோகாதிசெயத்தினாலே யிந்த வேளைக்குத் தப்பிப்பிழைத்தேன். எல்லாம் ரூபு ரூபாய் வந்து கண்டு பேசிக்கொண்டால் சகலமுந் தெரியவரும் மத்தப்படி நானிவ்விடத்தில் நடந்துகொள்ளவேண்டிய காரியத்துக்கு யெழுதியனுப்பிவிக்கும்படிக்கு பண்ணவும் வேணும். இப்படியாக யெழுதியனுப்பிவித்தார். ஆனால் சிதம்பரத்துக்கு யித்தனை நாள் வரையிலே ஒரு ஆடங்களும் வராமலிருந்த தள்த்துக்கு யிந்தவிசை யிந்த முதாமியர் நினைத்தது ரோக சிந்தனையினாலே சுவாமி அவனுக்கு புத்திசொல்லிவித்தார் அதுக்கு சந்தேகமில்லை.

மேலே யெழுதப்பட்ட ஓலை மத்தலப்பு பார்த்துக்கொண்டிருக்கச்சே விழுப்புரத்திலே அப்துல் சல்லிகான் மனுஷர் வந்து தோறணம் வைத்ததை அறுத்துப்போட்டுவந்த மனுஷரையும் தெருத்திவிட யிவ்விடத்திலே யிருந்து வெள்ளைக்காரர் சிப்பாயிகள் முதலான பவுஞ்சும் சருதாராய்ப் போன முசியே மடுத்தேயும் வொரு சிப்பாயும் ஓபிசியாலும் இன்று உதித்த சாமத்துக்கு விழுப்புரம் போய் சேர்ந்து அவ்விடத்திலே அப்துல்சல்லி மனுஷர் வந்து கட்டின தோறணத்தையும் அறுத்து யெறிந்து போட்டு கோட்டையிலே இருந்தவர்களையும் அடித்து தெருத்தி யின்று மத்தியானம் விழுப்புறங் கோட்டையிலே பிரான்சுக்காரர் செண்டாப்போட்டு பத்தே பண்ணின சேதியை முசியே மடுத்தேயும் ஓபிசியாலும் துரையவர்கள் பேருக்கும் யெழுதியனுப்பின காகிதத்தை அறுக்காறுகள் ராத்திரி எட்டுமணிக்கு கொண்டு வந்து யென்கையிலே கொடுத்தார்கள். அப்பால் நான் துரையவர்களண்டைக்குப்போய் விழுப்புரத்தை நம்முடையவர்கள் பத்தே பண்ணசேதியும் சொல்லி முசியே மடுத்தேன் யெழுதின காகிதமும் கொடுத்து அப்பால் கலிச்சிப்பிள்ளை யெழுதின மத்தலப்பு யெல்லாம் பயாவாறுகப்படித்து அந்தரங்கத்திலே சொன்னவிடத்திலே துரையவர்கள் சொன்னது பேர்பேர் சிதம்பரத்தண்டையிலே முறாரிராயன் ஏது வந்தது அந்தச்சேதி அபந்நம் தஞ்சாவூர் யேதாகிலும் வந்து கலாபம் பண்ணியிருக்கவேணும் யென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது உத்த சேதியாய் அவ்விடத்திலே யிருந்து யெழுதிவந்தது யென்று சொல்லி அப்பால் துரையவர்கள் விழுப்புறத்திலே இருக்கிற வெள்ளைக்காரரையும் முசியே

மடுத்தேயும் வரச்சொல்லியும் அவ்விடத்திலே இருபது பேர் சிப்பாயிகளை வைத்துப்போட்டு வரச்சொல்லி காகிதமெழுதிக்கொடுத்தார் இப்பதானே வெளியே அனுப்பிவிக்கிறதானால் வழுதாவூர் வாசர்படிக்கு சீட்டு வேணு மென்று கேட்டதற்கு அப்படியே சீட்டுக்கொடுத்தார். அப்பால் நான் வீட் டுக்கு வந்து விழுப்புரத்திற்குப்போயிருக்கிற நம்முடைய அமுல்தாரனுக் கும், காகிதமெழுதி துரைகாகிதமும், நம்முடைய காகிதமும் மூன்றுபேர் அறுக்காறுகள் கையிலே கொடுத்து ஆறு ரூபாயுங்கொடுத்து கெவனிக்கு வெளியே அனுப்பிவிட்டேன்.

சுக்கில ஞூ மாசி மீ 28-உக்கு 1750 ஆ மார்சு மீ 8 உ ஆதிவாரம்

இற்றைனாள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போய் வந்த பிற்பாடு நான் போய் நேத்து நாசற்சங்குனுடைய லசுக்கரையிலே இருந்து வந்த துற்கி ஆசி அப்துல்லா என்கிறவன் குதிரை யேறிக்கொண்டு வந்து அறுக்காறுகளையும் கூட்டிக்கொண்டு சாருயக்கூடையும் யெடுப்பித்துக் கொண்டு வழுதாவூர் வாசற்படியாலே புறப்பட்டு செஞ்சி மார்க்கமாய்ப் போனான் என்று சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது நேத்து ராத்திரி மூசியே தொத்தேல் வீட்டிலே சாப்பிட்டுப் புறப்படச்சே மதாம் அழைப் பித்து ஒரு வெள்ளைச்சாலுவையும் கொடுத்து நூறு வராகனுங்கொடுத் தான். அதை வாங்கிக்கொண்டு அனுப்பிவித்துக்கொண்டு போனான் என்று சொல்ல வெகு அபத்தக்காரன் என்று சொன்னார். அதற்கு நான் சொன் னது வெகு தேசம் எல்லாம் திரிஞ்சான் பனிரெண்டு பதிமூன்று பாஷை கத்துயிருக்கிற மட்டுக்கும் அபத்தத்துக்கு குருக்கள் ஸ்தானமானபடியி னாலே யல்லவோ சொல்லவேணும் என்று சொல்லி ஏறோப்பு ராச்சியமெல் லாம் சுத்திப்பார்த்து அப்பால் யிந்த ஸ்தானமெல்லாம் பார்த்து இந்த ராச் சியமும் பார்த்து இருக்கிறவனுக்கு கவடு, வஞ்சனை, பொய் இதுகளுக்கெல் லாம் குருவிடமாயிருப்பானென்று சொல்லிக்கொண்டிருக்கச்சே மூசியே திலார்ஷூம், மூசியே தொத்தேலும் வந்து அப்பாலிந்த துற்கிமுன் மூசியே லெனுவார் நாளையிலே வந்தபோது சென்னப்பட்டணத்திலே பாதிரி தோமாசு னிடத்திலே ஞானஸ்தானம் வாங்கிக்கொண்டான். அப்போ சுமாமி புத்தி சுத்தி என்கிறபேர் கொடுத்தார்களென்று சொல்லி இவன் பரிதிலே ஞாயிசு கத்தோர்சுனையிலே அநந்தரங்கங்களாய் சாயபு சர்தாக்களாகிய ராசவ முசத்தார் வீட்டிலே நடந்த சமாசாரங்கள் கூடச் சொல்லுகிறான்

இற்றைனாள பகலைக்கு மேலே நபா சந்தா சாயபு தண்டிலே யிருந்து மூசியே புசி துரையவர்கள் பேருக்கு கடுதாசி எழுதி அனுப்பின வயணை மென்னவென்றால்: இதாயித்து மொகதீன் கானும் சந்தா சாயபும் பிரான் சுக்காரர்தளத்துடனே மத்து முண்டான பவுன்சுடனேயும் தெற்கே சோழ

மண்டலத்திலே யிருந்துவந்த தண்டு வில்லத்துரையிலே கொள்ளிடமிக் கரை பழங்கொள்ளிடத்துக்கு அக்கரை நடுமத்தியிலே சிதம்பரத்துக்கு நேர் தெற்கே வந்து இறங்கிற சேதி யெழுதியனுப்பினன் அதை துரையவர் கள் பார்த்துக்கொண்டு யென்னை அழைப்பித்து நம்முடையவர்கள் லசுக்கர் பிறுவரைக்கும் பின்னவிடத்திலே இருக்குமென்று சேதி தெரியாமலிருந்து இப்போது விசிதப்பட சேதி யெழுதிவந்தது யென்றும் அப்பால் முறாரி ராயரும் மொறு பண்டிதனும் அந்தப் பிராந்தியங்களிலே கொள்ளை யிட்டுக் கொண்டு இப்போ சிதம்பரத்துக்கு மேற்கே பத்துனழிகை வழியிலே பாளை யம் கோட்டையிலே இறங்கின சேதி பார்த்தால் நம்முடையவர்கள் வந்த அதினலே பின்வாங்கின சாடையாய்க் காணுதுயென்று சொன்னர் அதற்கு நான் சொன்னது. நீங்கள் மகா யோகசாலிகளும் அல்லாமலும் உங்களுடைய தைரியஸ்தர் பிரியத்தினலேயும் உங்களுடைய பராக்கிறமும் யெதிரளிகள் கேட்டமட்டிலே பின்வாங்கிப் போகிறதற்கு ஆலோசனை பண்ண என்ன இருக்கிறது. என்றுசொல்லி நேர்ந்திரமாய்ச் சொன்னதுக்கு துரையவர்கள் நாம் சொன்னது கேட்டு சந்தோஷப்பட்டு ஒத்துக்கொண் டார். அப்பால் காகிதங்கொண்டு வந்தவர்கள் மேலே எழுதப்பட்ட பழங் கொள்ளிடத்து வெளியிலே சேஷா ராயனும் முறாரி ராயனுக்கும் சண்டை யானதும் சேஷா ராயனுடைய கசானு லட்சம் பொன் மட்டுக்கும் கொள்ளை போச்சென்றும் ரகுநாதராயனு நு பதினயிரம்பொன் மட்டுக்கும் கொள்ளைப் போச்சென்றும் சேஷா ராயன் சண்டையிலே விழுந்து போனதும் இதுகள் வாய் விசேஷமாய்ச் சொன்னர்கள். அப்போ தானே நம்முடையவர்கள் தண்டு இந்த வழியாக வாராமல்படிக்கு அப்படிக்குத்தானே மேற்கு வழியாய் புறப் பட்டு செஞ்சியேபோய் சேரச்சொல்லி காகிதமெழுதி யனுப்பிவித்தார்கள்

சுக்கில ஞு மாசி மீ 29 உக்கு 1750 ஆ மார்ச்சு மீ 9 உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் அழைத்தனுப்பிவித்து தண்டு சமாசாரம் வந்துதாயென்று கேட்டார். நேத்து மத்தியானத்துக்கு மேல் மூனு மணிக்கு சிதம்பரம் வந்து சேர்ந்து உங்களுக்கு சமாச்சாரம் வந்ததே அந்தபடிக்குதான் நேத்து சாயங்காலம் திருவீதியிலிருந்து யெழுதி வந்தது பின்னையும அங்கங்கேயிருந்துவந்த மனுஷர்களும் அப்படியே சொன்னர்களென்று சொன்னதற்கு, பாளையங்கோட்டைக்கும் சிதம்பரத் துக்கும் எத்தனை தூரமென்று கேட்டார். காதவழிக்குள்ளேயிருக்கும் என்று சொன்னதற்கு, ஆனல் மோரோ பண்டிதனும் காசிதாயிமென்கிற வனும் ரெண்டு பேர்களும் பாளையங்கோட்டையிலேயிருந்து முறாரிராவுக் குதிரைகள் சமீபமாயிருந்தால் மோறுபண்டிதன் சமாதானம் பண்ணவந்தது

மெய்யானால் இவர்களிப்படி கொள்ளையிடுவானேன். அவன் வந்து கண்டு பேசாமல் போவானேன் யென்று கேட்டார்.

சுக்கில ௵ பங்குனி ௴ 1 ௳ க்கு 1750 ஆ௵ மார்ச்சு ௴ 10 ௳ அங்காரகவாரம்

இற்றைநாள் காலத்தாலே நவாபு சந்தா சாயபு இதாயித்து மொகதீன் அவர்கள் நம்முடைய பிரான்சுக்காரர் பவுஞ்சுடனே திருவீதி பண்ணுருட்டி வந்து சேர்ந்தார்களென்று சொல்லி குப்பண்ணன் பண்டிதர் யெழுதி யனுப்பிவித்த கடுதாசி மத்தலப்பு துரையவர்களுடனே சொன்னதின் பேரிலே துரை சொன்னது தண்டு யித்தனை சமீபமாய் வந்து யிருக்க அஞ்சாறு நாளாய் தண்டு சமாச்சாரத்துக்கு உனக்கு கடுதாசிகள் வந்து நீ சேதி சொல்லுகிறதேயல்லமல் தண்டிலேயிருந்து நமக்கு யெழுதிவரயில்லை. அது யெனக்கு மெத்த ஆச்சரியமாயிருக்கிறது யென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது நம்முடையவர்கள் தண்டு புறப்பட்டு கடந்து வருகிறபடியினாலேயும் அவர்கள் சுத்தி மராட்டியர் குதிரைக்காரர் பின் தொடர்ந்து வருகிற படியினாலேயும் அந்த மராட்டியரை தப்பிப் பிழைத்துக் கொண்டுவருகிறதினாலே காகிதங்கள் யெழுதுகிறதற்கு புரசத்தியில்லாமலிருக்கும் அல்லவென்று காகிதங்களெழுதி மனுஷரைப் போகச் சொன்னாலும் யிந்த மராட்டியர் பயத்தினாலே வருகிறதற்கு முன் பின் பார்த்துக்கொண்டு இருப்பார்கள் இந்த அடுக்கிலே யிருக்குமே அல்லாமல் வேறேயில்லை என்று சொல்லி அப்பால் திருவீதிக்குவந்து சேர்ந்தாப்போலே ஆச்சுதே இனிமேல் தடையில்லாமல் அப்போதைக்கப்போது சேதி வந்து கொண்டேயிருக்கும் என்று சொன்னேன். இதல்லாமல் வந்த மனுஷன் சொன்னது புவனகிரி பட்டணம் சீர்மை திருவீதி சீர்மை முதலான அந்த பிராந்தியத்து கிராமம் எல்லாம் பயிர்பச்சை வீடுவாசல்கள் சமஸ்தமும் நம்முடையவர்கள் தண்டுக்காரனாலேயும் மராட்டியர்னாலேயும் யெங்கும் படு சூரணமாய் அடையாளம் தெரியாமல்படிக்கு நிர்தூம் தாம் பண்ணிப் போட்டார்களென்று சொன்னார்கள்.

இதுவுமல்லாமல் இன்றையதினம் மத்தியானம் வந்த சமாச்சாரம் அசரத்து இதாயித்து மொகதீன்கான் சாயபு அவர்களுடைய பாளையத்தின் சமாச்சாரம் கவிச்சியப்பிள்ளை யெழுதியனுப்பிவிட்டார். அதன் விபரம்:— மராட்டியர் குதிரைகள் சிதம்பரத்துக்கு மேற்கே யிறங்கி யிருந்தது. அசரத்து அவர்களுடைய பாளையம் இந்த மாதம் 27 ௳ சனிவாரம் அன்றைக்கு சிதம்பரத்துக்கு மேற்கே நாலு நாழிகை தூரத்துக்கு வந்து யிறங்கியிருந்து மறுநாள் 28-௳ ஆதிவாரம் உதயத்தில் லசுக்கர் கூச்சாப்பேராய் புவனகிரிக்குவரவேணுமென்றுபுறப்பட்டுவந்தார்கள். அவ்விடத்திலிருக்கும் மராட்-

டியர்களுடைய குதிரைகள்வழிக்கட்டி நாலுபக்கத்திலும் சுத்திக்கொண்டார்கள். அவர்களெப்படி சுத்திப்போட்டுக் கொண்டபோதிலும் தோப்புகானுறெம்பயிருந்தபடியினுலே கிட்டசேரவொட்டாமல் அடித்துக்கொண்டுவந்து சாயங்காலம் புவனகிரிபட்டணம் சேர்ந்தார்கள். 29-உ சோமவாரம் அன்றைக்கு கூச்சாயி திருவீதி மார்க்கமாய் வழி நடத்தி வருகிறார்கள். இனிமேல் நடக்கப்போகிற சமாச்சாரம் யெழுதியனுப்புகிறேன் என்று யெழுதியிருக்கிறான். ஆகையால் இந்த சமாச்சாரம் மத்தியானம் சாப்பிட்ட பிற்பாடு மகா-ா-ா-ஸ்ரீ துரையவர்களுடனே சொல்லுவோமென்றிருக்க துரையவர்கள் சேவுகனை அனுப்பி அழைப்பித்தார். ஆகையால் அப்போதே போய் துரையவர்கள் கோட்டையிலிருக்க இந்த காகிதத்தின் சமாச்சாரம் சொன்னதற்கு தங்கினவர்கள் தமக்கு சமாசார காகிதம் யெதுவும் யெழுதவில்லையா வென்று கேட்டார். இல்லையென்று சொன்னேன். அது யென்ன யெழுதியனுப்பாமல் போனது என்று மற்றொரு விசை கேட்டார். அதற்கு ஒன்றும் சொல்லாமல் சும்மாயிருந்தேன் இப்படியிருக்க திருவந்திபுரத்திலிருந்து சமாச்சாரம் ஒரு சேவுகன் கொண்டு வந்தான். அவ்விடத்தில் நடந்த சமாச்சாரம் என்னவென்றால்: தேவனும்பட்டணத்திலிருந்து இங்கிலீசுக்காரர் பாருடனே கூட தேவனும்பட்டணம் குவர்னதோர் துரைவந்து திருவந்திபுரத்தில் புளிமரத்தின்முன்னேகட்டியிருந்தபிராஞ்சுக்காரருடைய வெள்ளைக்கொடியை யிறக்கிப்போட்டு தங்கள் தங்கள் நிசானியைப்போட்டு மூன்று வரிசை துப்பாக்கிகள் ஆவாசா பண்ணி அதன் பேரிலே பதினொரு பீரங்கிப்போட்டு திருவந்திபுரம் சீர்மை தங்களுதாய்ப்போச்சுது. காப்பு கடல் யெல்லோரும் சுகமாய்ச் சேர்ந்திருக்கிறது யென்று தமுக்குப்போட்டு வைத்து அதின்பேரிலே அங்கே அமுல் செய்துக்கொண்டுவந்த சந்திரசேகர பண்டிதரை தேவனும் பட்டணத்திற்கு யிட்டுக்கொண்டு போய்விட்டார்களென்று சேவுகன் வந்து சொன்ன கபுறு துரையவர்களுடனே யிந்த சமாச்சாரமெல்லாம் வயணமாய்த் தெரியப்படுத்தினேன். இதை எல்லாம் கேட்டவுடனே சற்றுநேரம் விசனமுகத்தில் தோணுகிறாப்போலே காணப்பட்டது. அதற்குப் பிற்பாடு பாக்கு கிடங்குக்கு வந்தேன். அதன் பிறகு சாயந்திரம் ஆறுமணிக்கு துரையவர்கள் கோட்டையிலிருந்து வீட்டுக்கு வந்து யென்னை யழைப்பித்து யிந்த சமாசாரமெல்லாம் காகிதத்தின்பேரிலே யெழுதிவைத்துக்கொண்டு இதற்கு அதின்பேரிலே தேவனும்பட்டணம் துரைக்கு காகிதம் யெழுதினர். அந்த காகிதத்திலே யெழுதினதெல்லாம் என்னவென்றால்: திருவந்திபுரம் சீர்மை யெங்கள் கும்பினி குடுத்தியோராயிருக்கும் தங்கள் பிள்ளை வசமாயிருக்கும் சங்கதி தாங்களறிந்ததற்கு தாக்கலா முன் அவ்விடத்திலே அமுல்தாரனை அப்துல் சலிலி பிடித்தழைப்பித்த சங்கதிக்கும் நாம் அப்துல் சலீலுக்குச் சொல்லியனுப்பி

தங்களூரிலிருந்து யிப்படிப்பட்ட வேல்லகள் செய்பலாமா இது மரியாதையல்ல வென்று சொல்லி யிதுவுமல்லாமல் அந்த சீர்மை குடிகள் தங்கள் வூரில் குடியாயிருந்து ரங்கப்பிள்ளையை சீர்மை குத்தகை கேட்ட சங்கதியுமிப்படிப்பட்ட சங்கதிகளை எல்லாம் தங்களுக்குத் தெரிந்து தங்கள் துபாசி முகாந்திரமாய் இந்த அமுல்தாரனை அழைப்பித்து மரியாதைசெய்து பல்லக்கு கொடுத்து மறுபடியும் அனுப்பி வைத்ததற்கு எங்கள் ரங்கப்பிள்ளை தங்கள் துபாசிக்கு மெர்சி எழுதின சங்கதி தெரிந்திருந்தும் இப்போது நாம் திருவந்திபுரத்துக்கு யார் அனுப்பி மூன்று வரிசை துப்பாக்கிகள் போட்டு பதினொரு பீரங்கி போட்டு சீர்மை தங்கள் வசமானதென்று தமுக்குப் போட்டு வைத்தார்களென்று சேதியைக்கேட்டு யெங்களுக்கு ரொம்ப ஆச்சரியமாய்விட்டது அதுவுமல்லாமல் அவ்விடம் யெங்கள் நிசானியுமிருந்தெடுத்து தங்கள் நிசானிப்போட்டுக்கொண்டதாய் கேட்டு பரம ஆச்சரியமாய் யிந்தபிரகாரம் உங்கள் நிசானி ஒரு திக்கிலிருந்து யெங்களுக்கு டில்லி பார்சா உத்திரவு யெழுதிவந்துப் போகிறதைக்கும் நாங்களும் உங்களுக்கு அறிக்கை செய்யாமலுங்கள் உங்களுத்திரவில்லாமல் இப்படிப்பட்ட வேலையை ஒரு நாளைக்கு செய்யமாட்டோம் இந்த சங்கதிகள் யெல்லாம் உங்களுக்கு யெஜமானுகளாயிருக்கிறவர்கள் கேட்டால் அவர்களுக்குத் தாங்கள் யென்ன ஞாயஞ் சொல்வீர்களோ யென்று யெங்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது யிந்த நிசானியை சேர்ந்த நம்ப ஞாயங்கள் தங்களுக்கு மின்னும் பின்னும் செம்மையாய்த் தெரிந்திருந்தும் தாங்களிந்தப்பிறகாரமாய் நடத்தினது யெங்களுக்கு மொரு சமயத்துக்கு உதவும்படியாய் செய்தீர்கள் யென்கிறதாய் யித்யாதி விபகாரங்களாய் காகிதமெழுதி அனுப்பினர். மேலே யெழுதின திருவந்திபுரத்தில் நடந்த வர்த்தமானம்.

மகா-ள-ள-ஸ்ரீ ஜெனரல் அவர்களுடனே யெச்சரிக்கும்போது அவர் சொன்னது நீ அசறத்து சந்தாசாயபு அவர்களால் ஐந்து கிராமங்கள் சாகீர் வாங்கிக்கொண்டாயே அந்த கிராமங்கள் தூரமாய் வாங்கிக்கொண்டதென்ன இப்பவும் சமீபமாய் நல்ல கிராமங்கள் பார்த்துச்சொன்னால் அந்தப் பிரகாரமாய் உத்திரவுகொடுப்பேன் மேலும் கொஞ்சம் கணக்கு அதிகமாய்த் தானே காணுகிற கிராமங்களாய் பார்க்கச்சொல்லி கட்டளையிட்டார். யிதுவுமல்லாமல் தேவனும்பட்டணம் சீர்மை இங்கிலீசுக்காரர் கட்டிக் கொண்டார்களே ஒரு காரியத்துக்கு நலமாச்சுது யேனென்றால் அந்த சீர்மை பணம் இங்கிலீசுக்காரர் உத்திரவாதஞ் செய்யவேண்டியிருக்கிறபடியால் அந்தப்பணம் ஒரு பெட்டியிலிருக்கிறதாகப் பார்த்துக்கொள்ளச் சொல்லி உத்திரவு செய்தார்.

**சுக்கில ஞு பங்குனி மீ 2 உ க்கு 1750 ஆ மார்ச்சு மீ 11 உ புதவாரம்**

இற்றைனுள் காலத்தாலே துரையவர்கள் அழைத்தனுப்பிவித்து திருவீதியிலிருந்து யேதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார் தண்டெல்லாம்வந்து ராத்திரி திருவீதியிலேதானே யிருந்து இன்றைக்கு வொருவேளை திருவீதியிலேதானே மோக்காமாயிருக்குமோ அல்லவென்று புறப்பட்டு துக்குணம் பாக்கத்து மார்க்கமாய் வந்து திருக்காஞ்சி வில்லியநல்லூருக்குமடுத்த ஆத்தோரத்திலே யிறங்குமோவென்று தோத்துதுயென்று சொன்னதுக்கு நான் செஞ்சிக்குப்போகச்சொல்லி எழுதினேனே அங்கும்போகாமல் அப்பால் முந்தாநாள் எழுதின காகிதத்தில் வழுதாவூரண்டையிலே போயிறங்கி வழுதாவூர் கோட்டைவாங்கிக்கொண்டு அதிலே சபுறு சல்த்துடனே ரஸ்த்து முதலானதுகள் வேண்டியதை வைத்துக்கொண்டு வெள்ளைக்காரர் பவுஞ்சையுங்கூட வைத்துக்கொண்டு பீரங்கிகளெல்லாம் கோட்டையின்பேரிலே யெடுத்துக்கட்டிக்கொண்டு அவ்விடத்திலிருந்து அடித்தால் நாசறு சங்குவைக்கூட கனவாய்க்கு அப்பால் துறத்திவிடலாமென்று சொல்லி நாமெழுதி யனுப்பியிருக்க திரும்பியும் பயந்துக்கொண்டு ஓடிவந்து வில்லியநல்லூரண்டையிலே இறங்கினர்களாமென்று இப்படி பேசிக்கொண்டிருக்கச்சே தண்டிலே யிருந்து முசியே லத்தூசுவுடைய கடுதாசி வந்தது. அதிலே திருவீதியிலேயிருந்து புறப்பட்டு வருகிறோமென்றும் திருவீதிவந்து சேருகிறதுக்குள்ளே மராட்டியர் அங்கங்கே தங்களை துடர்ந்து வந்ததும், தாங்கள் மராட்டியர் பேரிலே பீரங்கி சுட்டதும் அதினாலே மராட்டியரிலே பத்தஞ்சு விழுகிறதும் நாலு ரெண்டு காயப்படுகிறதும் மறுப்படி அவர்கள் ஓடிப்போகிறதும் இந்த தண்டு பிறகே தஞ்சாவூர் சீர்மையிலேயிருந்து கொள்ளையிட்டுக்கொண்டு வந்ததும் பசுமாடு எருமை மாடுகளாயித்தானே ரெண்டு லட்சத்துக்கு வுண்டென்றும் அவரவர்கள் கொள்ளையிட்டுக்கொண்டு உடமை தட்டுமுட்டுகள் மிதமில்லையென்றும் ஆனால் சந்தாசாயபு இதாயத்து மொகதீன்கான் இவர்களுடைய பயத்தை நான் காகிதத்திலே நானென்னமாய் எழுதப்போகிறேன். ஆனால் சுவாமியிவர்களுடைய சீவனை நம்முடைய பிரான்சுக்காரருடைய பவுஞ்சு வந்ததினாலே இவர்கள் சீவனுடனே வந்தார்கள். அல்லாமல் இல்லாவிட்டால் என்றைக்கு நாசறு சங்கு கணவாய்விட்டு யிறங்கினான் என்ற சேதி கேட்டார்களோ அன்றைக்குத்தானே செத்துப்போய்விடுவார்கள் இதிலே அறிந்துக்கொள்ளும் இவர்களுடைய தைரியஸ்தரியங்கள் என்று இதுமுதலான சமாசாரங்கள் எழுதி அனுப்பினர். அது பார்த்துக்கொண்டு நம்முடைய பவுஞ்சுகூடயிருந்து எதிராளிகளை கிட்டச்சேர வொட்டாமல் அடித்து நிபாயித்துக்கொண்டு வருகிறது இவர்கள் கண்ணினாலே பார்த்துக்கொண்டிருந்தும் இத்தனை அதைரியமாய் பயப்படுகிறமட்டுக்கும் இந்த துரைத்தனத்தின்பேரிலே ஆசை

வைப்பார்களா அப்போ தன்மட்டுக்குள்ளே அல்லவோ யிருக்கவேணும் ஆனுலிவர்கள் கையிலே ஆனதென்னவென்றால்: குடியானவர்கள் பயிரிட்டதை வாரம் கூட விடாமல் வொடவாரம் யெடுத்துக்கொண்டு மீதி மிக்கிலி அவர்களுண்டைய மாடு கன்றுகள் அவர்களுடைய ஆஸ்தி பாஸ்திகள் சகலமும் அபகரிக்கிறதும் கொடுத்தது குத்தகையை அடிக்கடி தோறணமாருட்டமாய் பண்ணி அவர்களுடைய ரத்தமெல்லாம் குடித்துயில்லாத பதுமாலி போடுகிறதுக்கு மாத்திரந்தெரியுமேயல்லாமல் சத்துரு வந்தால் கத்தியைப்போட்டு யெந்த ஊருவுண்டோ யெந்த செடிவுண்டு யாரெப்படி போனல்தான் யென்னயென்று யெதுபோனுலும் போகட்டும் தன் சீவன் தப்பினல் போதுமென்று வோடிப் போகத்தெரியும். இது ரெண்டுகாரியத்துக்கும் யிவர்கள் மனுஷரேயல்லாமல் மத்தகாரியத்துக்கு மனுஷரல்ல யிந்தனுய்கள் பேச்சை நம்பி யிவர்களுடனே கூட வொரு வேலை செய்தால் அவர்களுடைய வெட்கம் கூடப்போய் அவன் அபகீர்த்திப்பட்டுப்போவான் என்றும் யிதுமுதலான வேசடையான சொல்லுகள் பேசிக்கொண்டேயிருக்கச்சே பீரங்கி சப்தங்கள் விஸ்தாரமாய் கேட்டுக்கொண்டே வந்தது அதின்பேரிலே துரையவர்கள் யிதென்ன யிப்படி பீரங்கி சத்தங்கள் கேழ்க்கிறது யென்றார். மராட்டியர் வந்து யெதிர்த்துக் கொள்ளவேணும் அதினலே நம்மிடவர்கள் பீரங்கி சுடுகிறர்கள் யென்று அடிக்கடி சொல்லிக்கொண்டே வந்தேன் ஆனல் சீர்மையெங்கும் பலகாலமானபடியினலே இவர்கள் வந்ததைத்தொட்டு ராச்சியமெல்லாம் கேட்டு நிபார்த்தமாய் போச்சுது. நெல்லுகள், வீடுகள், வைக்கல் இது முதலானதுகளை யெங்கே யிருந்தாலும் அதிலே நெருப்பை போட்டு கொளுத்துகிறதும் பயிர் யெங்கே யிருந்தாலும் அங்கே குதிரைகளை விட்டு மேச்சும் மனுஷரெரிச்சும் நாலுவிதத்திலேயும், பூமியைக்கூட கொளுத்திப்போட்டு சூரணம் பண்ணிப்போட்டார்கள். தஞ்சாவூர் சீர்மையானல் இவர்கள் போனதினலே நிர்ப்பந்தமாய் பாழ்த்தும் போச்சுது. இனிமேல் யிந்த ராச்சியத்திலேயும் யிவர்களும் மராட்டியருமாய்க் கலந்து நிற்தூம்தாம் பண்ணிப் போட்டார்கள். இப்படியாக நாலுவிதத்திலேயும் சீர்மை பாழாகப்போச்சுது. இனிமேல் நாலஞ்சு வருஷம் போனலே அல்லாமல் சீர்மைக்கு துறப்பாடுபடத்தக்கதில்லை என்றும் இது முதலான சமாசாரங்கள் துரையுடனே சொன்னதுக்கு அவருங்கேட்டு ஒத்துக்கொண்டு அதுவே பிரஸ்தாமா அவரும் நானும் நாலு நாழிகை நேரம் பேசிக்கொண்டிருந்தோம். இதிலே ரெண்டு தரம் மூன்றுதரம் திருவீதிகோட்டையிலே போயிருக்கிறவெள்ளைக்காரன் முசியே செயிஞ்சோர்ஷ் யென்கிறவன் இங்கிலீசுக்காரர் தேவனும் பட்டணத்திலே யிருந்து இப்போ வந்திருக்கிற முருரிராயனுக்கும் மத்தத்தாயி ஐனூறு பேர் வெள்ளைக்காரரும் ஐனூறுபேர் சிப்பாய்களும், நாலு பீரங்

கிடும் முஹுரிர்ராயன் தண்டை போய்சேர்ந்தார்கள் யென்று யெழுதி யனுப்பிவித்தான் அதற்கு துரையவர்கள் சொன்னது தேவனும்பட்டணத்திலே யிருக்கிறவர்களெல்லாருமாய்க்கூடி இருநூறு, இருநூத்தன்பதுபேர் சொல்தாதுயில்லையே அப்படியிருக்க ஆயிரம் பேரும், ஐனூறுபேரும் யெங்கே யிருந்து புறப்பட்டார்கள் அதுகளெல்லாம் பொய்யாயிருக்கவேணும் சொல்லி இன்றைக்கு எட்டு நாளைக்குமுன்னே செஞ்சிக்குப்போன சான்ம்றகர் என்ற ஒபிசியாலும் அன்பதுபேர் சொலுதாதுகளும் பனிரெண்டுபேர் குதிரை சிப்பாய்களும், நூறுபேர் கால்நடை சிப்பாய்களும், மூவாயிரம் விராகனையும் கொண்டு போனார்களே அவர்கள் போய் சேர்ந்த சேதி என்ன இன்னும் வரவில்லையென்றுகேட்டார். சுறஷஷிதமாய் இப்போசெஞ்சிசேர்ந்த சேதி நாளை நாளை நன்றைக்குள்ளே வரப்போகுது யென்று சொன்னேன். அப்பால் விழுப்புரத்து சமாசாரமெல்லாம் யென்னவென்று கேட்டார். நம்முடையவர்கள் போய் பத்தே பண்ணினார்கள். யென்கிற சேதி கேழ்க்கப் பட்டது. ஊர்ச்சிதமான சேதி இதோ வரப்போகுது யென்று சொல்லிக் கொண்டிருக்கச்சே விழுப்புரம் பத்தே ஆன சேதிக்கெல்லாம் கொலைக்காரன் காகிதங்கொண்டுவந்தான். அதிலே யென்னசேதி யென்றால் நம்முடையவர்கள் போயிரங்கினவுடனே விழுப்புரத்துக் கோட்டையிலே அப்துல் சல்லீல் மனுஷரென்று வந்திருந்த இங்கிலீசுக்காரரும் சட்டைக்காரரும் சேவகருமாயிருந்தவர்கள் ஷணிக்கு சண்டைபண்ணி அவர்களிலே பத்து பனிரெண்டுபேர் செத்தஉடனே கோட்டைய விட்டு ஓடினதாயும் அப்பால் நம்முடையவர்கள் விழுப்புரம் கோட்டையை பத்தே பண்ணிக்கொண்டு போயிருக்கிறதாக யெழுதிவந்தது. அப்பாலிந்த சமாசாரம் கொண்டுவந்த கொலைக்காரனுக்கு இரண்டு ரூபாய் இனாம் கொடுத்தனுப்பச்சொல்லி மறுபடி அப்பநானே பதிலுக்கு ஒரு சீட்டு ஒன்று யெழுதி யிப்படியானால் சமீபத்திலே தண்டுவந்து இரங்கியிருக்கிறது தாங்கள் சீக்கிரமாய் புறப்பட்டு வரவுமென்று எழுதி அப்பநானே அனுப்பிவிந்தார்.

இந்தனாள் பகலைக்கு மேலாய் தண்டுக்கு கொள்ளு, ரொட்டி, சாராயம், மற்ற சாமானுகள் சான்சாமி பண்ணி அனுப்பிவிந்தார்கள்.

இற்றைநாள் சாயங்காலம் நேத்து திருவந்திபுரத்திலேயிருந்து இங்கிலீசுக்காரர் வந்து சண்டைபோட்டதற்கு இங்கேயிருந்து தேவனும்பட்டணத்துக் காகிதம் கொண்டுப்போன சோபுதார் வந்து சொன்னது: நான் கொண்டுபோன காகிதம் அவர்கள் வாங்கிவைத்துக்கொண்டு யிதற்கு பதிலுத்தரம் நாளைக்கி யெழுதி. எங்கள் மனுஷர் கையிலே அனுப்பிவிக்கிறோமென்று அவர்கள் சொல்லிப்போகச்சொன்னதாய் வந்து சொன்னான்.

சந்திரசேகர பண்டிதன் சொல்லியனுப்பிவித்த சேதி யென்னவென் ருல்: தம்மை நசர்பந்து பண்ணியிருக்கிருர்களென்று சொல்லியனுப்பிவித் தார்; இதல்லாமல் கூடப்பாக்கம் அந்தப் பிராந்தியங்களிலே மருட்டியர் குதிரைக்காரர் வந்து கொள்ளையிடுகிறதும் யெருதுக்காரரை நாலு ரெண்டு பேரை காயத்தைப்படுத்தி அவர்கள் யெருதுகளையும் ஓட்டிக்கொண்டு போனுர்கள் யென்கிறசேதி வந்தது.

இதல்லாமல் இந்தனுள் ராத்திரி நடந்த அதிசய மென்னவென்ருல்: மகாராசஸ்ரீ ஜெனரல் முசியே துப்பிளேக்சு அவர்கள் இவ்விடத்திலே இங் கிலீசுக்காரர் வெகு கப்பலுடனே வந்து சண்டை பண்ணதிற்கு அவர்களை செயித்ததுக்கும் துலுக்கருடனே சேர்ந்த காரியங்கள் அடித்து தெருத்தி விட்டு செயங்கொண்டதும் இதுமுதலான சமாசாரங்கள் சீர்மையிலே ராசானவர்கள் கேட்டு வெகு நிருவாகம் பண்ணுரென்று சந்தோஷப்பட்டு சேன்லூசேன் என்கிற முந்திரை சிகப்பு பித்தையுடனே கட்டி அந்த முத் திரையை சான்சோமாயென்கிற கப்பலிலே போட்டு அனுப்பிவித்தார்கள். அத்துடனே கூட இவ்விடத்திலே முசியே புரிபோட்டிருக்கிற சட்டப் படிக்கி முசியே தாஷிக்கு ஒரு முத்திரையும் முசியே லத்துசுக்கு ஒரு முத் திரையும் முசியே பிமரெக்கு ஒன்றும் ஆக மூனு பேருக்கும் மூனு முத்தி ரையும் அனுப்பிவித்தார்கள் இதல்லாமல் சீர்மையிலே முசியே கொற்ஷா முக்கும் ஒரு முத்திரைக் கொடுத்தார்கள் மேலே எழுதப்பட்ட முத்திரை கள் கொண்டுவந்த கப்பல் மசுக்கரைக்கு வந்து பிடித்த விடத்திலே அந்த கப்பலிலே வந்த முத்திரைகளை முசியே தாவேத்து வாங்கி முசியே புலோரி யென்கிற கப்பலின் பேரிலே அனுப்பிவித்தார். அந்தக் கப்பல் இன்றையத் தினம் சாயங்காலமான ஏழரைமணிவேளைக்கு வந்து துறைபிடித்ததுக்கு அடையாளம் ரெண்டு பிரங்கி போட்டார்கள். அப்பாலிவ்விடத்திலே யிருந்து சலங்கு அனுப்பின பிறகு கப்பல் கப்பித்தான் அந்த முத்திரைகளை யெடுத்துக்கொண்டு ஒன்பது மணிக்குமேல் கப்பலை விட்டுயிறங்கிவந்து துரையவர்களண்டைக்கு வந்து அங்கே மதாம் துவசியிருக்கச்சே அந்த முத்திரைகளையும் காகிதங்களையும் கொடுத்தான் அதின் பேரிலே துரை அவர்கள் சீர்மை காகிதங்கள் பார்த்துக்கொண்டு வெகு சந்தோஷப்பட்டு நான் வீட்டுக்குப் போனபடியினுலே அப்புமுதலியை யென்னண்டைக்கு அனுப்புவித்து அழைத்து வரச்சொன்னபடிக்கு அப்புமுதலி வந்து கப்பல் வந்த சேதியும் அதிலே துரையவர்களுக்கு முத்திரை வந்த சேதியும் இது முதலானதுகள் நம்முடனே சொன்னுன். நானந்த சந்தோஷ கபுறுகேட்டு அப்பு முதலிக்கு ஒவ்வொரு கண்டி சல்லாவும் ஒரு பாகையும் வெகு மானம் பண்ணி நூறு விராகன் துரையவர்களுக்கும் நதீர் வைக்கிறதுக்கு எடுத்துக்கொண்டு நான் துரைவீட்டுக்கு வந்து துரையவர்களைக்கண்டு

சலாம்பண்ணி நதிரும் வைத்தேன். துரையவர்கள் பென்னைப்பார்த்து நாலும் இனிமேல் லோகத்துக்குள்ளே பிறதிஷ்கை சம்பாதிக்க வேண்டியதில்லே சீர்மையிலே ராசாவானவர்கள் தயவு பண்ணி சேமலு பென்கிற முத்திரையும், சிகப்பு பித்தையும் கொடுத்து அனுப்பி வித்தார்கள். இனிமேல் நாம் மேன்பாடு சம்பாதிக்க வேணுமென்று கவையில்லே. இந்த முத்திரை வந்ததினாலே நாம் ராசாவினுடைய ஒபிசியாலே யானேம். இந்த முத்திரைபடிக்கு பரிசிலே ராசாவண்டையிலே இருபத்தினாலுபேருக்கு இருக்கிறது பென்னுடனே கூட இருபத்தஞ்சாம் பேராச்சுது யென்று சொல்ல அதற்கு நான் எப்படி அவரை தோத்திரமாய்ச் சொல்லவேணுமோ அந்தப்படிக்குச் சொன்னேன். அப்பால் துரையவர்கள் சேம்லுயி என்கிற முத்திரைக்கு தாழ்வான முத்திரைரெண்டு மாசம் போட்டிருந்தும் அப்பால் அந்த முத்திரை தரிக்கவேண்டியதான படியினாலே ஒரு சின்ன முத்திரை அப்பதானே தரித்துக்கொண்டு பீரங்கி மேல்திரியை அழைப்பித்து இருபத்தோரு பீரங்கி போடுவித்து பண்டிகை கொண்டாடினார்கள். நான் பாக்கு, வெத்திலே, பன்னீர் வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்து சதீர் பண்ணச் சொல்லி சங்கீத மேளதாள சம்பிறமத்திடனே கூட சகலமான பேருக்கும் சக்கரை வழங்கி பாக்கு வெத்திலே பன்னீர் கொடுத்து அவரவர்களை வீட்டுக்கு அனுப்பிவித்தேன்.

சுக்கில ஹு பங்குனி மீ 4 உக்கு 1750 ஆ மார்ச்சு மீ 13 உ சுக்கிரவாரம்

இற்றைனாள் காலத்தாலே சந்தாசாயபு இவ்விடத்துக்கு வந்து துரையவர்களைக்கண்டு பேசவேணுமென்று சொல்லிக் காகிதமெழுதியனுப்பிவித்தார் அப்படியே வந்து கண்டு பேசிக்கொண்டு போகலாமென்று துரையவர்கள் பதில் காகித மெழுதியனுப்பிவித்தார்கள் அப்பால் தண்டிலேயிருந்து முசியே புசிவந்து துரையவர்களைக்கண்டு சந்தா சாயபுக்கும் முசபர்சங்குக்கும் இருக்கிற நிர்வாகமும் இவ்விடத்திலே வந்து பாபத்தியம் கேழ்க்கயிருக்கிற சாடையும் அவர்கள் சிப்பாய்கள் பணங்காசு நிமித்தியம் தங்கா பண்ணுகிறதும், அப்பால் தாங்கள் புறப்பட்டு வருகிறபோது மறாட்டியர் வந்து சுத்திக்கொண்டதும் அவர்களுடனே தானே தாங்கள் சண்டை போட்டு நிபாச்சுக்கொண்டு வந்ததும் இது முதலான சேதிகள் யெல்லாம் சொன்னான்.

அப்பால் திருவீதி கோட்டைக்கு தானியம் போயிருந்த முசியே சேன் மோர்ழ் வந்து துரையுடனே சொன்னசேதி யென்ன வென்றால்: மறாட்டி குதிரை லக்ஷம் குதிரை மட்டுக்கும் தான் கண்ணினாலே கண்டேனென்றும் ரெண்டு லக்ஷம் மூணு லக்ஷம் பாயிதுளம் கண்டேன் என்றும் அப்பால்

இங்கிலீசுக்காரர் ஒரு தட்டவை யொன்றுக்கு யெண்ணூறுபேர் சொல்தாதி களும், தடவை ஒன்றுக்கு ஐனூறுபேர் சொல்தாதுகளும், தட்டவை ஒன்றுக்கு முன்னூறுபேர் சொல்தாதுகளும், இதல்லாமல் ரெண்டாயிரம் பேர் மட்டுக்கும் சிப்பாய்களும், புறப்பட்டு அங்கங்கே போனார்களென்றும் தாங்கள் கொண்டுபோன பீரங்கியிலே ஒரு பீரங்கி ஒடைந்துப்போச்சென்றும் இப்படியாக துரையவர்களுடனே சொன்னன்.

அதற்கு துரை என்னைப்பார்த்து பார்த்தாயா சருதாறு மகன் சொல்லுகிற பேச்சை இவனுடைய சேவுக தர்மத்துக்கு நான் யென்ன சொல்லப் போகிறேன் யென்று சொன்னார். அப்பால் துரையவர்கள் திருவீதி கோட்டைக்குப்போன சொலுதாதுகள் சிப்பாய்கள் வந்துவிடச்சொல்லி காகித மெழுதி அனுப்பிவித்தபடியினாலே அவர்கள் அவ்விடம் விட்டு புறப்பட்டதினாலே நம்மிட அமுலாயிருந்த குப்பன் பண்டிதர் முதலானவர்கள் பதினாயிரம் வராகன் மாகூலை விட்டுவிட்டுப்போட்டு புறப்பட்டு வந்துசேர்ந்தார்கள் இதல்லாமல் பின்னையும் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால்; தேவனும்பட்டணம் குண்டுக்குள்ளே மராட்டியர் குதிரைக்காரர் புகுந்து கொள்ளையிட்டார்களென்றும் பின்னையும் சீர்மையிலே எங்கே பார்த்தாலும் முராரிராயன் குதிரைக்காரர் புறப்பட்டு கொள்ளை வல்லடியிட்டு சோறு சூரை பிடிக்கிறார்களென்று சொல்லி சேதி கேழ்விப்பட்டது.

அப்பால் யிந்தனாள் ராத்திரி யேழரை மணிக்கு சந்தாசாயபும் சேக்கு உசேனும் ரசாசாயபும் பின்னையும் ரெண்டுபேர் சமேதாரர்களும் புறப்பட்டு வில்லியநல்லூர் வாசற்படியினாலே வந்த படியினாலே அங்கே கொத்தளங்கள் பேரிலே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் அவர்கள் துரையவர்கள் வீட்டிலே வந்தவுடனே துரையவர்கள் சந்தாசாயபுவை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உள்ளே போய் உட்கார்ந்துக்கொண்டு சந்தாசாயபு துரையவர்களுடனே தாங்களிவ்விடம் விட்டுப் புறப்பட்டுபோன பிற்பாடு ஒடையார்பாளையம் அரியலூர் நொறயூர் முதலான பாளையப்பட்டுகள் மொகத்துமாக்கள் பைசல் பண்ணிக்கொண்டதும் அப்பால் தஞ்சாவூரின் பேரிலே போயிறங்கினதும் அங்கே சண்டை போட்டதும் இதினாலே நாசர்சங்கு வருகிற சேதிகேட்டதினாலே அப்பால் தாங்கள் புறப்பட்டு வந்ததும் இதிலே மராட்டியர் குதிரைக்காரர் வந்து நடுவழியிலே யெதிர்த்ததும் அவர்களுடனே போராடிக்கொண்டு வந்ததும் இதுமுதலான சமாசாரங்களாகவும் துரையவர்களை மிதமில்லாத தோஸ்திரங்களுமாக இப்படியாக நாலஞ்சு நாழிகை நேரம் பேசிக்கொண்டிருந்து இதிலே மீருஷம் வீட்டிலுமிருந்தும் சந்தாசாயபு முதலானவர்களுக்கு சாப்பாடு வந்தபடியினாலே அவர்களுக்கும்

மேசை போட்டபடியினாலே யெல்லாரும் சாப்பிட்டு அப்பால் பாக்கு வெத்திலே போட்டுக்கொண்டு அவர்களுக்கு வேதபுரீசுரன் கோயிலண்டை வீடு இருக்கிறபடியினாலே அந்த வீட்டுக்குப் புறப்பட்டுப்போனார்கள்.

இதல்லாமல் பின்னையும் நடந்த சேதியென்னவென்றால்; முசபர்சங்கு சொன்ன சேதியாய் சந்தா சாயபு துரையவர்களுடனே சொன்ன யிப்போ சத்தியாய் தண்டுக் கருசுக்கு அஞ்சாறு லட்சம் ரூபாமட்டுக்கும் நீங்கள் கொடுத்து நடப்பித்ததே உண்டானால் அதை நாங்கள் கொடுத்து விடுகிறோம் ஏன் என்றால் முசபர்சங்குக்கு நாம் சொல்லிக் கொண்ட சம்மதிக்காக பதிமூனு லட்சம் ரூபா செலுத்தினோம் மற்ற பணமும் இதற்குள்ளாக சென்றுபோம். அதென்னத்தினாலே அடிப்பட்டுதென்றால் நாசர்சங்கு வருகிற குபாறுனாலே மாபூசுகான் பத்து லட்சமாக தீர்த்துக் கொண்டதற்கு ஒன்றரைலட்சம் கொடுத்தான். மற்றது நின்று போச்சுது. தஞ்சாவூர் உடன் படிக்கையிலே ரொக்கமாய் கைக்கு வருகிறதுகளெல்லாமில்லாமல் நானாவிதமாய் அடிபட்டுபோனதினாலே பணத்துக்கு நோக்கடையாச்சுது முசபர்சங்கு வசத்திலே சிறிது பணங்காசு இருக்கிறதுண்டு அதை அழைப்பிக்கிறதுக்கும் நாசர் சங்கு வந்து குறுக்கே இறங்கியிருக்கிறதினாலே அழைப்பிக்ககூட இல்லை. இப்பவும் முசபர் சங்கு பெண்டுகள் பிள்ளைகள் இவ்விடத்திலே தானே வந்து இருக்கிறாப்போலே ஆச்சுதே எப்படியும் இந்த மட்டுக்கும் பருபத்தியங்கொடுத்து நடப்பிக்கவேணுமென்று மெத்தவும் தானே கேட்டுக் கொண்டார் அதற்கு துரையிருந்துகொண்டு பணங்காசுடனே சேர்ந்தது மாத்திரம் பரிச்சேதமாயினாங்கொடுக்கத்தக்கதில்லை இன்னம் சொல்தாதுகள் சிப்பாயிகளுக்கும் மருந்து குண்டு பீரங்கி முதலான சண்டை சாமான்கள் வேண்டியது குதிரையிருக்கிறோம். சொலுதாதுகளுக்கும் முசபர்கானுடைய சிப்பாய்களுக்கும் உண்டான சம்பளம் நாம் கொடுத்துவிடுகிறோம் நீரதற்கு யோசனைபண்ணிக் கவையில்லையென்று அவர்களுக்கு பருபத்தியங் கூடாத சாடையெதுவோ அந்தப்படிக்கெல்லாம் பிரஸ்தாபம் நடந்தது.

சுக்கில ஸு பங்குனி மீ 5 உ க்கு 1750 ஆ மார்ச்சு மீ 14 உ சனிவாரம்

இற்றைநாள் காலத்தாலே பத்துமணிக்கெல்லாம் துரையவர்கள் வீட்டுக்கு சந்தா சாயபும் வந்து துரையவர்களை பணங்காசுடனே சேர்ந்ததும் மத்தத்து பண்ணவேணும் யென்று கேட்டதற்கும் துரையவர்கள் சொன்னது: நீரானால் பணங் கேழ்க்கிறீரே அப்படியே இனம் கொஞ்சநஞ்சம் கொடுத்ததே உண்டானால் அதை உங்களுடைய சிப்பாய்களுக்கு கொடுக்கப்போகிறீர்கள் அவர்கள் இதையும் வாங்கிக்கொண்டு அப்பால் ஒரு சண்டைசாரிக்குப் போகச்சொன்னால் யெங்களுக்கு கொடுக்கவேண்டிய

நிலுவையெல்லாம் சாடாவாய்க் கணக்கு பார்த்துத் தீர்த்து கையிலே ரொக்க மாய்க்கொடுத்தாலே அல்லாமல் நாங்கள் சண்டைக்குப் போகத்தக்கதில்லை யென்று இப்படி தாங்கள் தக்கா பண்ணிக்கொண்டு சமயத்திலே பின்வாங் கிப் போகிறதும் அல்லாமல் சத்துருக்களுடனே கூடிப்போவார்களென்றும் ஆக்ஷேபிப்போ அவர்களுக்குக் கொஞ்ச நஞ்சமிருந்து கொடுத்தாலும் காரியமாகிறதில்லை. இன்னம் மத்தத்து வேணுமென்றால் இப்ப மத்தத்து பண்ணியிருக்கிற சொலுதாதுகள் சிப்பாய்களும் அல்லாமல் இன்னம் ஐநூறுபேர் சொலுதாதுகளுக்கும் ஐநூறுபேர் சிப்பாய்களுக்கும் முப்பத் தாறு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கி ரெண்டும், மருந்து குண்டும் கொடுத்து எங்கள் சொலுதாதுகளுக்கும் முசபர்கான் சிப்பாய்களுக்கும் நாம்தானே சம்பளம் கொடுத்துவிடுகிறோம். உங்களுக்கும் சொந்த சிலவுக்கு எம்மாத்திர மாகிலும் கொடுக்கிறோம் என்றும் மருந்து குண்டு யெடுத்தனுப்பிவைக்கச் சொல்லுகிறதற்கு எருதுகளையும், சக்கடாக்களையும் அனுப்பிவையும் என்று மிப்படி எல்லாம் துரையவர்கள் சொன்னதற்கு அந்த உத்திரங்கள் சந்தா சாயபுகேட்டு நாசற்சங்கு உடனே எதிர்த்து சண்டை பண்ணுகிறதற்குத் தைரியமில்லாமல் சொன்ன உத்திர மென்ன வென்றால்: இந்த வேளையிலே யெதிர்த்து அவனோடே சண்டைபண்ணுவானேன் ரெண்டு மாதமட்டுக்கும் நாங்கள் புதுச்சேரியிலேதானே யிருந்தால் அப்பால் நாசர்சங்கு புறப்பட்டு வடக்கே போய்விடுகிறான் பிற்பாடு நாமெப்போதையும் போலே நம்முடைய பவுஞ்சுடனே புறப்பட்டு ஆற்காடு கட்டிக்கொண்டு சுபாபண்ணலாம் என்று சந்தாசாயபு சொன்னார். இத்தனை அதைரியமான பேச்சு சொன்னபடியி னாலே அந்த சாடை துரையவர்களுக்குச் சொல்லாமல் ஒரு சாடையாய்ச் சொன்னேன் அந்த சாடை துரையவர்கள் கண்டுபிடித்து சந்தாசாயபு யென்ன சொல்லுகிறார் அவர் சொல்லுகிற சாடையெல்லாம் நீ யெனக்கு வயணமாய் சொல்லுகிறாப்போலே காணவில்லை. உனக்கு சம்மதமான பேச்சு கள் சொல்லி சம்மதமானதில்லாத பேச்சுகள் தள்ளிப்போடுகிறதாய்க் காணுது அப்படியெல்லாம் சொல்லவேண்டியதென்ன அவர்யென்னயென்ன சொல்லுகிறாரோ அதுகளையெல்லாம் நன்றாய்க்கேட்டு அப்பால் நாம் பதிலுத் தரம் சொல்லவேணுமே அல்லாமல் மற்றபடி அல்லவென்று அப்போ முசியே திலார்சுவை அழைத்துக்கொண்டு வரச்சொல்லி சொன்னார். அப்ப டியே முசியே திலார்சு வந்தார். அவரை துரையவர்கள் பார்த்து சந்தா சாயபு மதனாந்தபண்டிதனுடனே சொல்லவும் அதை ரங்கப்பிள்ளைக்கேட்டு யென்னுடனே சொல்லவுமாயித்தனை அந்தஸ்தாயிருக்கிறது. ஆனபடியி னாலே ஒரு பேச்சு நடக்கிறதற்கு ஒரு நாழிகை செல்லுமென்று சொல்லி முன் நடந்த பேச்சுகள் திலார்சுடனே வொன்றுஞ் சொல்லாமல் நீர்தானே சந்தா சாயபு சொல்லுகிற சேதி நமக்கு சொல்லுமென்று சொல்லி அப்பால்

நாம் தானே சொன்னதென்ன வென்றால்: சகல மத்நத்தும் பண்ணுகிறோம் அப்படியிருக்க இவர்கள் பின் நடக்க வேண்டிய காரியமென்ன இருக்கிறது. எந்த விதத்திலேயும் நீரும் முசபர்சங்கும் ரெண்டுபேருமாய் நாசர்சங்கு பேரிலே போயிறங்கி எதிர்த்துச் சண்டைப்பண்ணி செயிக்க வேணுமேயல்லாமல் வேறே காரியமென்ன இருக்கிறது. நீங்களிப்படி பின்வாங்குகிறதினாலே நாங்களுங்களுடனேகூட கூடினதற்கு எங்களுக்கும் கீர்த்தியைவிட அபகீர்த்தி வந்ததில்லை. இப்பவும் அந்தப்படிக்கு யெதிர்த்து சண்டை பண்ணச்சே சுவாமியினுடைய சித்தம் யெந்தப்படி யிருக்கிறதோ அப்படி முடியுமே அல்லாமல் வேறே யென்ன யிருக்கிறது. அந்தப்படிக்கு சுவாமி பேரிலே பாரத்தைப்போட்டு சண்டை பண்ணச்சே ஒன்று நாசற்சங்கு விழுந்துபோனால் எங்களை அவுரங்காபாத்து மட்டுக்கும் கொண்டுபோய் விட்டு தக்கன சுபாவெல்லாம் உங்கள் வசம் பண்ணிப்போடுகிறோம் அல்லவென்று உங்கள் பேச்சு சரியாய்ப்போனால் சுவாமியுடைய சித்தப்படிக்கு முடியுது. ஆயிசு இல்லாதவன் எந்த விதத்திலே யாகிலும் சாகிறானென்று இப்படியெல்லாம் துரையவர்கள் சந்தாசாயபுவைப்பார்த்துச் சொன்னார். இப்படி யெல்லாம் நடக்கச்சே சந்தாசாயபு பெண்சாதி காகிதமெழுதி யனுப்பிவித்த வயணம் யென்ன வென்றால்: நாசற்சங்கு பேரிலே சண்டைக்கு போகவேணுமென்று சொன்னால் தன் புருஷன் போகவேண்டியதே யல்லாமல் தன் பிள்ளை ராசா சாயபு சண்டைக்குப் போகக்கவையில்லை என்று இப்படியாக எழுதி யனுப்பிவித்த சங்கதிக்கு ராசா சாயபு சொன்ன உத்திரம் முன்னாலே இவ்விடத்திலே யிருந்து பவுஞ்சைக் கூட்டிக்கொண்டு போய் அன்வர்திகானுடனே சண்டைப்போட்டு பந்தேந பண்ணி இப்போ இந்த சண்டைக்கு நான் பின்வாங்கி தகப்பனை மாத்திரம் சண்டைக்கு அனுப்பிவித்து நான் புதுச்சேரியிலே யிருந்ததே வுண்டானால் இதைவிட அபகீர்த்தி வேறேயில்லை. ஆனபடியினாலே நான் சண்டைக்குபோகிறதே யல்லாமல் பின்வாங்கத்தக்கதில்லை யென்று ரொம்பவும் தைரியமாய்ச் சொல்ல அப்போ சந்தாசாயபு கண்ணிலே தண்ணீர் புறப்பட்டது. அதை ராசாசாயபு பார்த்தவுடனே அவருக்கும் கண்ணீர் புறப்பட்டது இப்படி ஒருவருக்கொருவர் பார்த்து தாபந்தப்பட்டு அப்பால் ராசா சாயபு புறப்பட்டு இப்பாலே வந்துவிட்டார். அதன் பேரிலே துரையவர்கள் சொன்னது: இப்படியெல்லாம் தாபந்தப்படுவார்களா. லோகத்திலே கீர்த்தி சம்பாதிக்க வேணுமே யல்லாமல் உங்களைத்தொட்டு வமுசத்துக்கெல்லாம் அபகீர்த்தி கொள்ளுவார்கள். ஆனபடியினாலே நீங்களிந்தக்ஷணம் புறப்பட்டு தண்டுக்குப் போய் வாருங்களென்று சொல்ல அதுக்கு அவர்கள் சொன்னது: முசபர்சங்கை அழைத்துக்கொண்டு மறுபடி ராத்திரிக்கு வாறோமென்று சொல்லி அனுப்பிவித்துக்கொண்டு புறப்பட்டு மூணு மணி வேளைக்கு தண்டுக்குப் போனார்கள்

அப்பால் நாலு மணி வேளைக்கு முசபர்சங்கு தாயாரும் பெண்சாதியும் பிள்ளைகளை தண்டிலே யிருந்து வந்து வழுதாவூர் வாசற்படிக்கு வெளியில் யிருக்கிறார்கள் யென்று அவர்களுக்கு சீதா மத்ததுகளை சவறணையாய்முஸ் தீது பண்ணி அனுப்பச்சொல்லி உத்தாரங்கொடுத்து துரை வீட்டிலே வந்தவுடனே துரையவர்கள் முசபர் சங்குவை ராத்திரிக்கு கொண்டுவாரூ மென்று சந்தாசாயபு சொல்லிப்போனாரே ஒரு வேளையிலே அவர் வந்தாலும் வருவாரென்றும் நீ உன்னுடைய பாக்கு கிடங்கிலேதானே பதினொருமணி மட்டுக்கும் இரு யென்று சொல்லி அவர் தாம்தானே வீணை வாத்தியம் பண் ணிக்கொண்டு உத்சாகமாயிருந்தார். அப்பால் நான் பதினொருமணி மட்டுக் கும் நான் கிடங்கிலேதானே யிருந்து முசபர் சங்கு வராத படியினாலே அப் பால் நான் வீட்டுக்குப்போனேன்.

இதல்லாமல் பின்னையும் நடந்த சேதி என்னவென்றால்: இதாயித்து மொகதீன் கானும் சந்தாசாயபு ராசாசாயபும் துரையவர்களைக் கண்டுபேசு கிற நிமித்தியமாய் தண்டிலே யிருந்து புறப்பட்டு வில்லியநல்லூர் வாசற்படி யாலே வரச்சே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள் அப்பால் துரையவர் கள் வீட்டிலே சந்திப்பு ஆகச்சே கோட்டையிலே 23 பீரங்கிபோட்டார்கள் வாசற்படிக்கு உத்தாரம் வேண்டுமென்று முசபர்கான் துரையவர்களண் டைக்கு வந்தேன் இதல்லாமல் முசபர்சங்கும் சந்தாசாயபுக்கு யிப்படி நம் முடைய பெண்டுகளை புதுச்சேரிக்கு அனுப்பிவித்தோமென்றும் தண்டிலே யிருந்து காகித மெழுதி அனுப்பிவித்தார். அப்பால் துரையவர்கள் என்னை யும் முசியே தொத்தேலையும் வழுதாவூர் வாசற்படி அண்டையிலிருந்து முசபர்சங்கு சமுசாரத்தையும் அவர்கள் வெலைக்காரரை மாத்திரம் கோட் டைக்குள்ளே விட்டுவிடச்சொல்லியும் மற்ற சிப்பாய்களை குதிரை சுவாரி களை ஒருத்தரையுங் கோட்டைக்குள்ளே விடக்கவையில்லை என்று உத்தா ரங்கொடுத்துப்போகச் சொன்னாரானபடியினாலே நானும் முசியே தொத்தே லும் வழுதாவூர் வாசற்படி அண்டையிலேபோயிருந்து துரையவர்கள் உத் தாரப்படிக்கு முசபர்சங்கு சமுசாரத்தையும் வேலைக்காரரையும் உள்ளே விட்டு அவர்களுக்கு விடுதி அமர்த்தியிருந்த முத்தியப்பிள்ளை அவர்கள் வீட்டிலே கொண்டு போய்விட்டு ரத்தினகம்பிளி தண்டு திவர்சு முதலான துகள் நம்முடைய வீட்டிலிருந்து அனுப்பிவித்து அப்பால் துரை அவர்க ளண்டைக்கு வந்து கபுறுசொல்லி பரசுராமபிள்ளையை அழைப்பித்து........

**சுக்கில ஹு பங்குனி மீ 6 உக்கு 1750 ஆ மார்ச்சு மீ 15 உ ஆதிவாரம்**

இற்றைநாள் காலத்தாலே எட்டுமணிவேளைக்கு இதாயத்து மொகதீன் கானும் சந்தாசாயபும் ரசாசாயபும் துரையவர்களைக் கண்டு பேசிக்கொள்ளும்

நித்தியம் தண்டிலேயிருந்து புறப்பட்டு வில்லியநல்லூர் வாசற்படியாலே வரச்சே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் துரையவர்கள் வீட்டிலே சந்திப்பு ஆகச்சே கோட்டையிலே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் துரையவர்களும் இதாயித்து மொகதீன்கானும் சந்தாசாயபும் ரசாசாயபும் நாலும் முசியே திலார்ஷூம் (**Mr. Delarche**) துரைவீட்டிலே ஒரு காம்பிறாவிலே போயிருந்துக்கொண்டு கோன்சேல் கூடின விடத்திலே நடந்த சேதி என்னவென்றால்: இதாயித்து மொகதீன் கான் துரையவர்களுடனே பத்து லட்சம் ரூபாய் தங்களுக்கு பரிபத்தியம் வேணுமென்று கேட்ட விடத்திலே அதற்கு துரையவர்கள் சொன்னது முன்னாலே நாம் கொடுத்த கடனுக்கே காலுவாசி சென்றதில்லையே அப்படியிருக்க மறுபடி நாம் கடன் கொடுக்கிறதில்லையே எங்கள் சொல்தாதுகளுக்கும் சிப்பாய்களுக்கும் நாம் சம்பளம் கொடுத்து விடுகிறோம் எதிராளி பேரிலே சண்டை பண்ணுகிறவர்கள் யெங்கள் பவுஞ்சான படியினாலே நீங்கள் கடன்வாங்கிக் கொண்டுபோய் உங்கள் சிப்பாய்களுக்கு கொடுத்ததே உண்டானால் அவர்களைத் தொட்டு காரிய சாதகமென்ன அல்லவென்று யிப்போ கொடுத்தாலும் மறுபடி கேட்டுக் கொண்டிருக்கிறதும் காரியம் வந்தபோது பின் வாங்கிப்போகிறதே யல்லாமல் காரியமில்லை யென்று யிப்படி யெல்லாம் சொல்லி நாம் கடன கொடுக்கிறதில்லை என்று சொன்னதற்கு அதுக்கு அவர்கள் இருந்துக்கொண்டு அப்படியல்ல சத்துருவந்து யிருக்கிறபோது நம்மண்டையிலிருக்கிற பவுஞ்சு பலஹீனமாய்ப்போய் விட்டால் யெதிராளிக்கு இளப்பமாயிருக்குமென்று அதைத்தொட்டு அபகீர்த்தி வருமென்றும் கடைசியிலே அஞ்சு லட்சம் ரூபாயாகிலும் கொடுக்கவேணுமென்று இதாயித்து மொகதீன்கான் கேழ்க்க அதற்குத் துரையவர்கள் அப்படியெல்லாம் நாம் கொடுக்கத்தக்கதில்லை நமக்குத் தோன்றினது கொடுக்கிறோமென்று சொல்லி யென்னை அழைப்பித்தார் அப்பால் இதாயத்து மொகதீன்கான் முதலானவர்கள் எழுந்திருந்து அம்மாளவர்களண்டைக்குப் போனார்கள். துரையவர்கள் என்னுடனே இவர்களானால் கடன் கேழ்க்கிறார்களே இதற்கென்ன யோசனையென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது நீங்களிட்ட வேலை செய்கிறவனேயல்லாமல் உங்களுக்கு யோசனை சொல்லுகிறதற்கு நான் பாத்திரனா நீங்கள் சகலமான பேருக்கும் யோசனைசொல்லத்தக்கதாக உங்களுக்கு சுவாமி தயவு பண்ணியிருக்கச்சே நான் சொல்லவேண்டியதென்னயென்று நான் சொன்னதற்கு அதுக்கு துரையவர்கள் கோபமாய் போய்விட்டார். அப்பால் மறுபடி அழைத்துக்கேட்டார். அப்பவுமப்படித்தானே சொன்னதற்கு இதுவானால் திலார்சு அறியப்போகாது உன்னுடைய மனது நான் அறிவேன் யென்மனதிலே எம்மாத்திரமாகிலும் கொடுக்கவேணுமென்று சொல்லி நிஷ்க்கருஷை

யாயிருக்கிறது; மூனு லட்சம் ரூபாய் கொடுத்தால் சம்மதியார்களாவென்று கேட்டார். அதற்கு நான் சொன்ன உத்திரமென்ன வென்றால்: இந்த சமயத்திலே இவர்களுக்கு ஒரு காசு யார் கொடுக்கப் போகிறார்கள் அவர்கள் உற்றார் உறவினர் முறையார் தம்பி தமையமார் மற்றுமுள்ளவர்கள் கொடுத்து நடப்பித்தார்களா ஆசிர் சாவசித்து ஒப்புக்கொள்ளுவார்களென்று சொன்னதற்கு இதுக்கு யெங்கே யீடு வென்று கேட்டார் அதற்கு நான் சொன்னது: மீர்குலாமுசேன் ரசீது கொடுத்த சம்மதி ரூபாய் 64000. இமாம் சாயபு சம்மதி ரூபாய் 15000. சீனு அம்சாம் சம்மதிப்போல் தோத்துது ரூபாய் 32684. மணிலா கப்பல் இமாம் சாயபு சம்மதி மமுதுசா சாருல் என்ற கப்பல் இங்கிலீசுக்காரர் பிடித்துக்கொண்டு ஒலாந்தாக்காரருக்கு வித்ததுக்கு முசியே லபூர்தொனே (**Mr. de (Labourdonnais)** நாகப்பட்டணத்தின்பேரிலே போய் பிராஞ்சுக்காரர் உடமையென்று அறிந்திருந்து யெப்படி வாங்குவீர்களென்று கண்டித்து கப்பல் கிறயம் வாங்கிக்கொண்ட பதினேயாயிரம் விராகன் சம்மதி ரூபாய் 41186 மீரு அஷம் அக்பர் சாயபு ரசிது சம்மதி ரூபாய் 30000 மீருஅஷம் கையில் ரசீது இருக்குதென்று சொன்னதற்கு மீருஅஷம்மை பதினொரு மணிக்கு அழைப்பித்து ரசீதைவாங்கிக்கொண்டார். அப்போ மீருஅஷம் தனக்கேதாகிலும் சத்தியாய் சிலவுக்கு வேணுமென்று கேட்டதற்கு நல்லதென்று சொன்னார்கள். ஆக பைந்து ரூபாய் 5 அயிட்டத்துக்கும் கூடினது ரூபாய் 182860 மேலே யெழுதப்பட்ட நூத்தி யெண்பத்தீராயிரத்தி யெண்ணூத்தி யறுபது ரூபாய்க்கும் அயிவேசு பார்த்துக்கொண்டு முசியே கில்லியார் பேரிலே ஒடுதனைசு கொடுத்தார். தம்முடைய கணக்கு ரங்கப் பிள்ளை கையிலே வாங்கி கொடுப்பித்தது ரூபாய் 17160—பதினேழாயிரத்தி நூத்தறுபது ரூபாய் ஆக துகை 2 அயிட்டத்துக்கும் கூடினது ரூ. 20000 (0)– ஆக ரெண்டு லட்சம் ரூபாயும் நம்முடைய வசத்திலே ஒப்பித்தது பாக்கு கிடங்கிலே வந்து சேர்ந்தது குறை லட்சம் ரூபாயும் கும்பினீர் வர்த்தகரைக்கேட்டு வாங்கிக்கொள்ளச் சொல்லி துரையவர்கள் இரண்டு லட்சம் ரூபாய்க்கும் ரசீது கொடுத்து இது கும்பினீர் வர்த்தகர் வெகு பேரானபடியினாலே வெளிப்படுமென்று சொல்லி நீ தானே வைத்திருவென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது அவர்கள் வந்து கேட்டால் கொடுக்க வேண்டியிருக்கும் ஆனபடியினாலே அப்போ கொடுத்து விடுவேனென்று சொன்னதுக்கு இது வெளிக்கு வராதபடிக்கு உனக்கு கொடுக்கலாம்போலே யிருந்தால் கொடு இல்லாவிட்டால் நான் பணம் கொடுத்து ரசீது வாங்கிக்கொள்ளுகிறேன் என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் வர்த்தகர் சம்மதி லட்சமும், மேலே எழுதப்பட்டது ரெண்டு லட்சமும் ஆக மூன்று லட்சம் ரூபாயும் பாக்கு கிடங்கிலே வந்து சேர்ந்தது.

அப்பால் சாயங்காலம் இதாயித்து மொகதீன்கானுடனே துரைய்வர் கள் மூன்று லட்சம் ரூபாய் கொடுக்கிறோமென்றும் அதற்கு அபிவேசு யென்னவென்றுகேட்டார். அதற்கு இதாயித்து மொகதீன்கான் சொன்னது நீங்களிந்த மூன்று லட்சம் ரூபாய் கொடுத்ததே உண்டானால் அதற்கு அடோனியிலே (Adoni) உண்டிக்கொடுக்கிறோமென்றும் சொன்ன தற்கு துரையவர்கள் நல்லதென்று சம்மதித்தார். இதுக்கு உடன்படிக்கை கள் என்னவென்றால் ஒரு வேளை நல்லது பொல்லாததானாலும் நாசர்சங்கு வைக்கேட்டு வாங்கவேண்டியிருந்தாலும் முன்னுக்கு நமக்கே ஒரு சாதக மிருக்க வேணுமென்று சந்தாசாயபு கொடுக்க வேண்டிய நாலு லட்சம் ரூபாய்க்கும் இப்போ கொடுக்கிற மூன்று லட்சம் ரூபாய்க்கும் நீர் கொடுக்க வேண்டியதென்று சொல்லி இதாயித்து மொகதீன்கானை எழுதிக்கொடுக்கச் சொல்லி துரையவர்கள் கேட்டதற்கு அதற்கு அவர் சொன்ன உத்தரம். நல்லது நாமந்தப்படிக்கு எழுதிக்கொடுக்கிறோம். ஆனால் /நாம் கொடுக்க வேண்டியது மூன்றுலட்சம்போக மற்ற நாலுலட்சமும் சந்தாசாயபு கொடுக்க வேண்டியதாச்சே நாம் தஸ்தவேசு எழுதிக்கொடுத்தாலெப்படி என்று முசபர் சங்கு கேட்டதற்கு துரையவர்கள் ஒரு வேளை நாசர்சங்குக்கு தஸ்தவேசு காண்பிக்கவேணுமென்று நாமெழுதி கொடுக்கச்சொல்லிகேழ்க்கிறதேஅல்லா மல் அந்த நாலு லட்சமும் சந்தா சாயபு யெங்களுக்கு செலுத்தவேண்டியதே யல்லாமல் உங்களுக்கு கவையில்லை. என்று ஒரு தஸ்தவேசு ஒன்று யெழுதிக்கொடுத்து நீங்கள் இப்போ வாங்கிக்கொள்ளுகிற மூணு லட்சம் ரூபாயும் அடோனியிலிருந்து (Adoni) வருகிறதற்கு ஒருவேளை அட்டிபட் டாலும் உங்கள் பெண்டுகள் குஞ்சுகளிவ்விடத்தில் இருக்கிறார்களே அவர் கள் எங்களுக்கு பணம் செல்லுகிற மட்டுக்கும் இங்கேயிருந்து சென்றபிறகு வெளியே போவார்களென்று சொன்னார். அதற்கு இதாயித்து மொகதீன் கான் நல்லதென்று சம்மதித்து இந்த ஏழு லட்சம் ரூபாயும் நாம் கொடுக்க வேண்டியதென்று தஸ்தாவேசு எழுதிக்கொடுத்தார். அப்பால் இதாயித்து மொகதீன்கான் நம்முடைய காசா மூணு லட்சம் ரூபாயும் அடோனியிலே நல்லது ஒப்பமாய் ஒரு வேளை செல்லாத போனாலும் அந்த மூணு லட்சம் ரூபாயும் தங்களுக்குச்செலுத்தி அப்பால் நம்முடைய பெண்டுகள் வெளியே வரக்கடவார்களென்று எழுதிக்கொடுத்தார். அப்பாலிந்த மூணு லட்சம் ரூபாயும் மீயாம் மருதா கையிலே செலுத்தச் சொல்லி தாம் தண்டுக்குப் போறோமென்று துரை அவர்கள் கையிலே அனுப்பிவித்துக்கொண்டு தம் முடைய மகலிலே போய் அரை நாழிகையிருந்து அப்பால் புறப்பட்டுப் போனார்.

இற்றைனாள் பதினொருமணி வேளையிலே நபாபு சந்தா சாயபு அவர்கள் துரையவர்களுடனே தாம் வரச்சே தஞ்சாவூர் மோகத்துமா தீர்த்துக்

தொண்டு வடணம் சொன்னது: தஞ்சாவூர் கோட்டையிலே நம்முடைய திவான் ராமராயரையும் முசபர்கான் வக்கீல் செகனாதராயரும் முக்கிய நம்புலையும் அனுப்பிவித்து தஞ்சாவூர் ராசா அண்டையிலே பைசல் பண்ணி கொண்டதென்ன வென்றால்: தஞ்சாவூரார் சொன்னது சிறிது ரத்தினம், பொடி நகைகளும் பொன்னு, வெள்ளி, தட்டுமுட்டும் சரிகைமுதலான பட்டு சேலைகளும் இதுகளை கொடுக்கிறோம் நகரத்துடன் சேர்ந்தது நாலு லட்சம் ரூபாய் அஞ்சு நாளையிலே கொடுக்கிறோம் குறை ரெண்டு லட்சத்தி அறுபதினாயிரம் ரூபாய் நாகப்பட்டணத்திலே பாவாடை செட்டி பேருக்கு யெழுதிக் கொடுத்து தாரோமென்று சொன்னார்கள் இதெல்லாமல் முசபர்கான் மத்தியஸ்தமாய்த்தானே தீர்த்துக்கொள்ளுகிறோமென்று சொன்னார்கள். அப்படியே நம்முடைய முசபர்கான் மனுஷரும் நம்முடைய மனுஷரும் சம்மதித்துச் சொன்ன உத்திரம் இந்த ஆறு லட்சத்து அறுபதினாயிரத்துக்கும் புதுச்சேரி கொவர்னதோர் பேருக்கு யெழுதிக்கொடுக்கச் சொல்லிக் கேட்டார்கள். அதற்கு தஞ்சாவூரார் சம்மதிக்கவில்லை, ஆனால் புதுச்சேரியார் சர்தார் மூசியே கொப்பியென்று வந்திருக்கிறார். அவர் பேருக்காகிலும் யெழுதிக்கொடுக்கச்சொல்லி கேட்டார்கள். அந்தப் பிரகாரம் சம்மதியாமல் முசபர்கான் பேருக்கு யெழுதிக்கொடுக்கிறோமென்று சொன்னார்கள். அந்தப்படிக்கு நம்முடைய மனுஷர் சம்மதித்து அந்த ஆறு லட்சந்நறுபதினாயிரத்துக்கும் முசபர்கான் பேருக்குத்தானே ராசாவுடைய சீட்டு யெழுதிவித்துக்கொண்டு ரத்தின பொடி பெட்டியும் பொன் வெள்ளி தட்டுமுட்டும் சரிகை முதலான புடவை சேலைகளும் யெடுப்பித்துக்கொண்டு கோனேரி நாயக்கன் சாவுக்கார் மாரிபத்திலே கொண்டு வந்தார்களென்று சந்தாசாயபு துரையுடனே சொன்னது மல்லாமல் யேகத்துக்கு எழுபது லட்சம் ரூபாய் தஞ்சாவூர் ராசா தீர்த்துக்கொண்டு அதற்கு முப்பது லட்சம் நகதுகொடுக்கவும் நாற்பது லட்சத்துக்கு சீர்மை அடமானமும் யிப்படியாகக் கொடுக்கிறதாய் நமக்கு ராசா யெழுதிக்கொடுத்தாரென்று சந்தா சாயபு துரையுடனே சொன்னார். அதற்கு துரையவர்கள் கேட்டது அந்த யெழுபது லட்சத்துக்கு யெழுதிக்கொடுத்த சீட்டும் ஆறு லட்சத்து அறுபதினாயிரத்துக்கு யெழுதிக்கொடுத்த சீட்டும் ஆக ரெண்டு சீட்டும் அழைப்பியும் என்று கேட்டதற்கு சந்தாசாயபு சொன்னது யெழுபது லட்சத்துக்கு யெழுதிக்கொடுத்த சீட்டு தண்டிலே யிருக்கிறது. அதை நாம் தண்டுக்குப் போனவுடனே யெடுத்து உங்களண்டைக்கு அனுப்பிவிக்கிறோமென்று சொன்னார். அதற்கு துரையவர்கள் அப்படியே அனுப்பிவியுமென்றுசொல்லி அப்பால் ஆறு லட்சத்து அறுபதினாயிரத்து ரூபாய் சீட்டு யெங்கேயென்று கேட்டதுக்கு முசபர்கான் வசத்திலே யிருக்குதென்று

சந்தா சாயபு சொன்னதற்கு துரையவர்கள் முச்சிய நம்புலை (**Muchiya Nambulai**) அழைப்பித்து அந்த சீட்டு யெங்கேயிருக்கிறது யென்று கேட்டதற்கு அந்த ஆறு லட்சத்து அறுபதினாயிரம் ரூபாய்க்கும் முசபர் கான் பேருக்கு யெழுதிக் கொடுத்திருக்கிறார்கள், அந்த சீட்டு முசபர் கானண்டையிலே யிருக்கிறதை வாங்கிக் கொண்டுவரச் சொன்னால் வாங்கிக் கொண்டு வருகிறேன் என்று சொன்னதற்கு தம்முடைய சோபுதாருடனே நம்புலைக் கூடக்கூட்டி முசபர்கானண்டைக்குப் போய் அந்த சீட்டை வாங்கிக்கொண்டு வரச்சொல்லி தண்டுக்கு அனுப்பிவித்தார்கள். அவர்கள் தண்டுக்குப் போய் முசபர்கானைக் கேட்டவிடத்திலே தன்வசத்திலேயில்லை, ராமறாயன் வசத்திலேயிருக்குதென்று முசபர்கான் சொன்ன உத்தரம் கூறபடி துரையவர்களுடனே நம்புலை வந்து சொன்னதுக்கு ராமறாயனை அழைப்பித்து கேழ்க்கச்சொல்லி யெனக்கு துரையவர்கள் உத்தாரங் கொடுத்தபடியினாலே நான் ராமறாயரை அழைப்பித்து தஞ்சாவூர் ராசா முசபர்கான் பேருக்கு யெழுதிக்கொடுத்த ஆறு லட்சத்து அறுபதினாயிரம் ரூபாய் சீட்டு உம்முடைய வசத்திலே யிருக்குதாம் அந்த சீட்டு யெங்கே யென்று கேட்டதற்கு ராமறாயர் சொன்னது அந்த சீட்டு தம்முடைய வசத்திலேயில்லையென்று வெள்ளி தட்டுமுட்டு சரிகை முதலான புடவை சேலை ரத்தினபொடி பெட்டியும் யிதுகள் சாவுக்காரர் கோனேரிநாய்க்கன் மனுஷனைக் கூடக்கூட்டி ராசா உடைய வக்கீல் ருத்ராசி பண்டிதனையும் அறுக்காரக்கனையும் கூடக்கூட்டி ராசா தம்முடைய மனுஷருக்குச் சொன்னது இந்த தட்டுமுட்டு பின்னெங்கும் சேரக் கவையில்லை. முசபர் கான் வசத்திலே ஒப்பித்துப்போடவும் யென்றுசொல்லி அனுப்பிவித்த படிக்கு தட்டுமுட்டு சாமானுடனே சேர்ந்ததெல்லாம் முசபர்க்கான் தம்பி சேக்கசேன் (**Shaikh Hasan**) டேறாவிலே சேர்த்தார்கள். இந்த சமாச் சாரம் நபாபு சந்தா சாயபு அவர்களுடனே சொன்னேனென்றும் ராசாயெழுதிக்கொடுத்த சீட்டும், முசபர்கான் வசத்திலேதானே வந்து சேர்ந்திருக்குமென்று இந்த சமாச்சாரமெல்லாம் முசபர்க்கான் மனுஷன் செகன்னாதறாயன் அறிவான். அவரை அழைப்பித்துக்கேட்டால்தெரியு மென்று சொன்னார். அப்பால் செகன்னாதறாயனையும், நம்புலையும் அழைப் பித்துக்கேட்ட விடத்திலே அவர்கள் ரெண்டுபேரும் சொன்னது நாங்கள் ரெண்டுபேரும் தஞ்சாவூர் கோட்டையிலிருந்தோம் ரத்தினப்பொடியும் பொன்னு, வெள்ளித்தட்டு முட்டும் புடவை சேலையும் ராமறாயர் பிறகாலே அனுப்புவித்தார்கள். ஆறு லட்சத்து அறுபதினாயிரம் ரூபாயிக்கு முசபர் கான் பேருக்கு ராசாவுடைய மனுஷர் எப்படி யெழுதிக்கொடுக்க வேணு மென்று கேட்டதற்கு நாங்கள் மசூதா யெழுதி ராமறாயர் கையிலே கொடுத்தோம். அவர் ராசாவண்டைக்குப்போய் அந்தப்படிக்கு அசல் எழுதி

வித்துக்கொண்டு ராமரூயர் மேலே எழுதப்பட்ட தட்டுமுட்டும் இந்த சீட்டும் யெடுப்பித்துக்கொண்டு ராசாவுடைய மனுஷரையும் கூட அழைத்துக் கொண்டு புறப்பட்டுப் போகச்சே கும்பகோணம் வழிபோகத்தேவையில்லை. திருவையாறு மார்க்கமாய் தண்டு சாகிப்போகவும் யென்று கருரும் பண்ணி அனுப்பிவித்தார்கள் அப்போ தண்டு திருவையாறு மார்க்கமாய்ப் போகாமல் கும்பகோணம் மார்க்கமாய்த்தானே புறப்பட்டு வந்தபடியினாலே யெங்கள் ரெண்டு பேரையும் தஞ்சாவூர் ராசா வெளிபோக வேண்டாம் யென்றும் கோட்டையிலேதானே இருக்கச் சொல்லியும் வெளிவிடாமல் போனார்கள். ஆனபடியினாலே அந்த சீட்டு ராமரூயர் வசத்திலேதானே இருக்கவேணு மென்றும் சொன்னார்கள். அந்த சீட்டு இன்னார் வசத்திலே இருக்குதென்று படிக்காணு இல்லாதபடியினாலே இந்த மூணு பேரையும் கிஷ்ணரூயன் பிறகே கூட்டி நாலுபேர் சேவுகரையும் அனுப்பிவித்து சந்தா சாயபு அண் டைக்குப்போய் இந்த மூணுபேர் சொன்ன சமாச்சாரமும் அவருடனே சொல்லி அவர்யென்ன சொல்லுகிறரோ அதையும் அறிந்துக்கொண்டு மறு படி இந்த மூணு பேரையும்கூட அழைத்துக்கொண்டு வரச்சொல்லி சொல்லி யனுப்பிவித்தோம் அப்படியே அவர்களுடனேகூட கிஷ்ணரூயர்போய் சந்தா சாயபுடனே சொன்னதற்கு அவர் சொன்ன உத்தாரம் அந்த ஆறு லட்சத்து அறுபதினாயிரம் ரூபாய் சீட்டும் தம்முடைய வசத்திலே வந்ததுயென்று சொல்லி சந்தோஷமாய் வந்து தம்முடனே சொல்லியிருக்கிறன். அந்தச் சீட்டுப் போட்டிருந்த பையும் நாம் பார்த்த ஞாபகம் இருக்கிறது. என்று சந்தா சாயபு சொன்ன சேதி கிஷ்ணரூயர் அவர்கள் மூணு பேரையும் கூட வைத்துக்கொண்டு வந்து நம்முடனே சொன்னார். அந்தச் சேதி நாம் துரை யுடனே சொல்லவேணுமென்று சொல்லி துரையவர்கள் வீட்டண்டைக்குப் போனவிடத்திலே ராத்திரி பதினொருமணியான படியினாலே கதவைச் சாத் திப் பூட்டிப்போட்டிருந்ததை திறக்கச் சொல்லி அப்பால் துரையவர்களண் டைக்குப்போய் மேலே யெழுதப்பட்ட சமாச்சாரமெல்லாம் சொன்னதற்கு அந்த மூணு பேரையும் காவலிலே வைக்கச் சொல்லியும் இப்பதானே சேக்க சேன் அண்டைக்குப்போய் சீட்டு சேதி கேட்டு வாவென்று சொல்லி மூசபர் சங்கு அவர்களுக்கு மூணு லட்சம் ரூபாயும் செலுத்திப்போட்டு விட்டாயா வென்று கேட்டார். அவர்கள் குமாஸ்தாவை அழைப்பித்துப்போய் வாங்கிக் கொண்டு போகச் சொல்லி சொன்னதற்கு ராத்திரி பதினொருமணி ஆச்சுதே இப்போ நாங்கள் எங்கே வாங்கிக்கொண்டு போகப்போகிறோம் காலமேவந்து வாங்கிக்கொண்டு போகிறோமென்றும் சொன்னார்கள் என்று சொன்னதற்கு இந்தமட்டுக்கும் அந்த மூணு லட்சம் ரூபாயும் அவர்கள் வசத்திலே ஏன் செலுத்தாமல் வைத்திருந்தாய் இது போய் அல்லவோ அவர்கள் சம்பளக் காரருக்குகொடுத்துத் தீரவேணும் ஆனபடியினாலே இப்பதானே அவர்கள்

மநுஷரை அழைப்பித்து ரூபாய் செலுத்திப்போட்டு அவர்கள் வெளியே ரூபாய்கொண்டு போகிறதற்கு வாசற்படிக்கு சீட்டு யெழுதிக்கொடுக்கிறோ மென்று சொன்னார். நல்லதென்று பாக்கு கிடங்குக்கு வந்து குருவப்ப செட்டியுடனே துரையவர்களானால் யிப்படி சொன்னார். அவர்கள் குமாஸ்தாக்களை அழைப்பிக்கச் சொல்லி சொன்னதற்கு ராத்திரி பனிரெண்டு மணிக்கு நேரத்திலே அவர்கள் யெப்படி வந்து வாங்கிக்கொண்டு போவார்கள். காவிப்போ அவர்கள் குமாஸ்தா வண்டைக்குப்போய் அதிகாலமே வந்து ரூபாய் வாங்கிக்கொண்டு போகச் சொல்லி அவர்களுக்கு தாய் நீதாய்ச் சொல்லிப்போட்டு வீட்டுக்குப் போகிறோம் என்று சொல்லி குருவப்ப செட்டியும் வீருநாயக்கனும் அனுப்பிவித்துக்கொண்டு போனார்கள். அப்பால் நான்—சேக்கசேன் வீட்டுக்குப்போய் யிந்த சேதியெல்லாம் அவனுடனே சொன்னதற்கு சேக்கசேன் சொன்ன உத்தாரம் பொன்னு, வெள்ளி, தட்டு முட்டு புடவை சேலை யிதுகள் என்னுடைய டேருவிலே சேர்ந்தது. நீங்கள் கேழ்க்கிறசீட்டு சமாச்சாரம் எங்கே சேர்ந்திருக்குமோ தெரியாது இப்பவும் நான்காலமே முசபர்கானண்டைக்குப் போய் அவனுடனே யிந்த சமாசாரமெல்லாம் சொல்லி அவனை அனுப்பிவிக்கிறேன். அவன் வந்து ரூபு ரூபாய் சொல்லச்சே தெரிய வருமென்று சொன்னான். அப்பால் நான் புறப்பட்டு பாக்கு கிடங்குக்கு வந்து துரை சமையம் விசாரித்தால் ஒரு மணி வேளை யானபடியினாலே அப்பால் நான் பாக்கு கிடங்கிலே தானே ராத்திரிக்கு யிருந்தேன். துரையும் நித்திரைபோனார் யென்கிற சேதி வந்தது. செகன்னாத ரூயன் ராமறூயர் நம்புலை மூன்றுபேருக்கும், நாலுபேர் சேவகரை தயினாத்து வைத்தபடியினாலே அவர்களும் பாக்கு கிடங்கிலேதானே படுத்துக்கொண்டார்கள்.

### சுக்கில ஞூ பங்குனி மீ 7 உ க்கு 1750 ஆ மார்ச்சு மீ 16 உ சோமவாரம்

முன்னே ரெண்டு மூன்று மாசத்திற்கு முன்னமே பச்சாகுப்பத்திலே முசபர்சங்கு சர்வுக்காரர் மனசுக்குறுயர் ( Mansuk Rao ) தங்கசாலை போட்டுக்கொள்ளுகிறார் உத்தாரம் கொடுக்கவும் என்று சொல்லி நம்முடைய பேருக்கு நபாப் சாயபு அவர்கள் பற்மானா எழுதி அனுப்பிவித்தார்கள். அந்த பற்மானாவிலே யித்தனை மாத்துக்குப் போடுவிக்கிறது யித்தனை ரூபாயிக்கு யென்று சொல்லி விபரம் கண்டு எழுதி வாராதபடியினாலே நாம் உத்தாரம் கொடுக்கிற தில்லை யென்றும் அந்தப்படிக்கு எழுதிவித்துக்கொண்டு வாருமென்றும் சொன்னதற்கு அவர்கள் தண்டுக்குப் போகாமல் இங்கிலீசுக்காரர் குண்டுக்குள்ளே திருப்பாபுலியூரிலேயிருந்துகொண்டு அவ்விடத்திலே ரூபாயிக்குப் பில்லைகள் அடிக்கிறதும், அதுகளுக்கு முத்திரை அவர்கள் குண்டுக்கு வெளியே ஓரமாய் சாக்காற சீர்மையிலே

ரெண்டு மூணு லட்சம் ரூபாய் மட்டுக்கும் வெட்டுப்போடுவித்துக்கொண்டார்கள். இந்த சேதி நாம் கேட்டு மனசுக்குருயன் குமாஸ்தா வெங்கர்சி பண்டிதருக்கும் கோவாத்தனதேவுக்கும் ரெண்டு பேருக்கும் நாம் கடுதாசி யெழுதி அனுப்பினவயணம் மென்னவென்றால்: நீங்கள் நம்முடைய உத்தாரமில்லாமல்படிக்கு அப்படி வெட்டுப் போட்டுக்கொள்ளுகிறது ஞாயமில்லே; அதற்குண்டான அபாரதமும் ஆசிலும் நசரும் நாம் உங்கள் கையிலே வாங்கிப்போடுவோமென்றும் அல்லாமல் விடத்தக்கதில்லேயென்று யெழுதியனுப்பிவித்தோம். இந்த சமாசாரத்துக்கு நபாபு சாயபு அவர்களுக்கும் சாயபு சாதாவுக்கும் நமக்கானல் பணம் வெகுசாய் நஷ்டம் வந்திருக்கிறது. உங்கள் வர்த்தகராயிருந்து இங்கிலீசுக்காரர் குண்டுக்குள்ளே போய் யெப்படி தங்காசாலே போடுவிப்பார்களா? இது யென்ன ஞாயம்? அவர்களும் தாக்கீது யெழுதி அனுப்பவும் யென்று யெழுதியனுப்புவித்துப் போட்டோம் இப்போ அவ்விடத்திலே போட்டுக்கொண்ட ரூபாயிக்காக மனசுக்குருயனே மூணு லட்சம் ரூபாயிக்கும் உண்டான ஆசிலும் நசரும் யேழாயிரத்தி ஐனூறு ரூபாய் உண்டென்று கேட்டவிடத்திலே மனசுக்குருயன் சொன்ன உத்திரம் நமக்கு லட்சம் ரூபாயிக்கு மாத்திரம் வெட்டுப் போடுவித்ததே அல்லாமல் அதனமாய் நாம் போடுவித்ததில்லே. நாம் போடுவித்த லட்சம் ரூபாயிக்கும் உண்டான ஆசிலும் நசரும் கொடுத்து விடுகிறோம். மற்ற ரெண்டு லட்சம் ரூபாயுக்கும் யெங்கள் குமாஸ்தாக்களைக்கொண்டு ருசுவுபண்ணிவித்ததே உண்டானல் அதற்கும் உண்டான ஆசிலும் நசரும் கொடுத்துவிடுகிறோம் என்று சொன்னார். அதற்கு நாம் சொன்ன உத்திரம்: ஆனல் லட்சம் ரூபாய்க்கும் உண்டான ஆசிலும் நசரும் கொடுத்து உம்முடைய குமாஸ்தாக்கள் மற்ற ரூபாய்க்கும் நசரும் ஆசிலும் கொடுத்துவிடுகிறோம் யென்று சொல்லி பேசியிருக்கிறார்கள். நாம் ருசுபண்ணிவித்ததே உண்டானல் கொடுத்துவிடுகிறோமென்றுசொல்லி ஒரு சீட்டு யெழுதிக்கொடுமென்றும் உங்கள் குமாஸ்தாக்களையு மிவ்விடத்துக்கு அழைப்பியுமென்று சொன்னதற்கு நல்லதென்று சம்மதித்து அந்தப் படிக்கு மனசுக்குருயர் கராரு சீட்டு ஒன்று யெழுதிக்கொடுத்து லட்சம் ரூபாயுக்கும் ஆசிலும் நசரும் ரெண்டாயிரத்தி ஐனூறு ரூபாய் குருவப்ப செட்டி மாரிபத்திலே கொண்டுவந்து செலுத்தினர் மனசுக்குருயர் எழுதிக் கொடுத்த உடன்படிக்கை சீட்டை குருவப்பசெட்டி மாரிபத்திலே கோபால் சுவாமி கையிலே கொடுத்து யிருக்கிறது.

இற்றைநாள் பதிஞேருமணி வேலேக்கு தண்டிலேயிருந்து முசபர்கான் துரையவர்கள் வீட்டுக்கு வந்தவுடனே துரையவர்கள் யென்னே அழைப்பித்து ராமருயனே செகன்னதருயனே முச்சியநம்புலே அழைப்பிக்கச்சொல்லி

உத்தாரங்கொடுத்தார் ஆனபடியினாலே அவர்களை அழைப்பித்து அப்பால் முசபர்கானை துரையவர்கள் ஆறு லட்சத்து அறுபதினாயிரம் ரூபாய் சீட்டு உன்வசத்திலேயிருக்குதென்று சந்தாசாயபு வந்து நம்முடனே சொன்னதுமல்லாமல் நீயும் என்வசத்திலே சீட்டுயிருக்குதென்று சந்தா சாயபுடனே சொல்லியிருக்கிறீராம். அந்தச் சீட்டுக்கொடுக்கச்சொல்லி கேட்டதற்கு என் வசத்திலே யேது சீட்டு ராமராயன்வசத்திலேயிருக்கிறது நம்முடையகுமாஸ்தாக்கள் கூட சொல்லுகிறார்கள் யென்று முசபர்கான் சொன்னபடியினாலே செகன்னாதராயனையும் நமபுலையும் துரையவர்கள் கேட்டதுக்கு அவர்கள் சொன்னது நாங்கள் சொன்னது ரெண்டு பேரும் தஞ்சாவூர் கோட்டையிலேதானே யிருந்தோம். ராமராயன் பிறகே ரத்தினப்பொடிப் பெட்டியும் பொன்னு வெள்ளித்தட்டு முட்டு சரிகைமுதலானபுடவை சேலைகளும் அந்த ஆறு லட்சத்து அறுபதினாயிரம் ரூபாய்க்கு யெழுதிக்கொடுத்த தஞ்சாவூர் ராசா தம்முடைய் அறுக்காருக்கள் கையிலே கொடுத்து அனுப்பிவித்தார்கள். அது நாங்கள் அறிவோமென்று சொன்னார்கள் அப்பால் ராமராயனை துரையவர்கள் கேட்டதற்கு அவர் சொன்னது: தட்டு முட்டு முதலான சாமான்களெல்லாமும் முசபர்கான் பேருக்கு யெழுதிக்கொடுத்த சீட்டும் ராசா தம்முடைய வக்கீலையும் அறக்காருக்களையும் யென் பிறகாலே கூட்டி அவர்கள் வசத்திலே கொடுத்து அனுப்பிவித்தார். அந்த சாமான் தட்டு முட்டு எல்லாம் சேக்கசேன் டேராவிலே சேர்ந்தது அந்தச்சீட்டை அறக்காருக்கள் கொடுத்தார்களோ யில்லையோ தெரியாதென்று ராமராயன் சொன்னதுக்கு துரையவர்களுக்கு இவர்கள் இப்படி யெங்கும் டிக்காணாயில்லாமல் சொன்னபடியினாலே கோபித்துக்கொண்டு ராமராயனை கோட்டையிலே காவல் பண்ணச்சொல்லி உத்தாரங்கொடுத்தார். அப்பால் துரையவர்கள் யென்னை அழைப்பித்து நயினார் வீட்டிலே காவல் பண்ணச்சொல்லி உத்தாரம் பண்ணார்கள் அந்தபடிக்கு நயினாரை அழைப்பித்து நயினார் வீட்டிலே காவல் யண்ணச் சொல்லி உத்தாரங்கொடுத்து அனுப்பிவித்தேன் ஆனால் ராமராயன் பேரிலே நேரமில்லை. முசபர்கான் வசத்திலே சீட்டு இருக்குதென்று சொன்னபடியினாலே துரையவர்களிடத்திலே நபாபு சொல்லியிருக்கிறபடியினாலேயும் நம்புலையும் அப்படியே முசபர்கான் வசத்திலே சீட்டு இருக்கிறது என்று சொன்னபடியினாலேயும் துரையவர்கள் மனதிலே அந்த சீட்டு முச்பர்கான் வசத்திலே இருக்குதென்று நன்றாய்த் தெரியும் ஆனாலிப்போ கலாபவேளை யானபடியினாலேயும் சிப்பாய்கள் எல்லாரும் அவனுடைய உக்குமிலே இருக்கிறபடியினாலேயும் அவனை ஒன்றும் கண்டிக்கலாகாது என்று சொல்லி யிந்த வேளைக்கு ராமராயனைக் காவல் பண்ணினார்கள்.

இற்றைநாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு நேரத்திலே சந்தா சாயபும் சாயபு சாதாவும் சவாரி புறப்பட்டு தண்டுக்கு அனுப்புகிறதிற்கு முப்பத்தாறு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கி ரெண்டு பீரங்கி கடலோரத்திலே முஸ்தீது பண்ணியிருக்கிறபடியினாலே அந்த பீரங்கியைப் பார்க்க வந்த விடத்திலே ரெண்டுபேரும் சந்தித்துக்கொண்டு துரையவர்கள் சந்தா சாயபுவை அழைத்துக்கொண்டு கோட்டைக்குப் போய் அவ்விடத்திலே புதுசாய் கட்டுகிற மேல் வீடு வேடிக்கையெல்லாம் காண்பித்து அவ்விடத்திலிருந்து துரையவர்கள்விட்டுக்கு ரெண்டுபேரும் கூடவந்தார்கள். நான் அவ்விடத்திலே இருக்கச்சே சந்தா சாயபு யென்னுடனே சொன்னது இதாயித்து மொகதீன்கான் அவர்களுக்கு இப்போ கடன் கொடுத்த மூணு லட்சம் ரூபாயிக்குள்ளே எனக்கொரு சின்ன காசாகிலும் அவர்கள் கொடுத்ததில்லை. நமக்கு சேர்ந்ததுக்கு துரையவர்களுடனே சொல்லி அன்பதினாரம் ரூபாமாத்திரம் பருபத்தியம் வாங்கிக்கொடுத்தால் தேவலை என்று சொன்னார் அதுக்கு நான் சொன்னது இந்த சங்கதி துரையுடனே சொன்னால் அவர் மனதிலே யெப்படியிருக்கும் முசபர்சங்குக்கு கடன்கொடுத்தது உங்களுடைய சினேகத்தைத் தொட்டுத் தானே கொடுத்தது. அல்லவென்று அவருடனே சொன்னாலும் கோபித்துக்கொள்ளுவார் காரியம் கெட்டுப்போம் ஆனபடியினாலே நான் சொல்லப்போகாதென்று சொன்னதுக்கு சந்தா சாயபு யிதவு அயிதவு ரெண்டும் சொல்லாமல் ஒரு சாடையாயிருந்தார். அப்போ ரெண்டு பேர் சமேதார்கள் சந்தா சாயபு அண்டையிலே வந்திருந்தார்கள். அவர்கள் ரெண்டுபேரையும் துரையவர்கள் பார்த்து இவர்களை யாரென்று கேட்டார் அதுக்கு சந்தா சாயபு சொன்ன உத்தாரம் இவர்கள் கந்தனாரிருக்கிறது. நாசர்சங்கு அண்டை தீவானாயிருக்கிற மோரூ பண்டிதன். ராமதாசு பண்டிதன் யென்று ரெண்டுபேர்யிருக்கிறார்கள். ராமதாசு பண்டிதன் யென்கிறவன் முசபர்சங்கு அண்டைக்கு நாசர்சங்கண்டையிலிருக்கிற பவுன்சை உடாயித்து சிப்பாயிகளை யெல்லாரையும் கொண்டுவந்து சேர்த்துப்போடுகிறோம் யென்று ராசவட்டம் அனுப்பிவித்தான். இவர்கள் முன்னே முசபர்சங்கு அண்டைக்குப் போகாமல் நம்மண்டை வந்து கண்டு பேசினார்கள் என்று சொல்லி முசபர்சங்கு அசுவாரசியமாயிருக்கிறார். ஆனபடியினாலே இவர்கள் ரெண்டுபேரும் நம்முடனே கூட சாப்பிட்டுக்கொண்டிருக்கிறார்களென்று சொன்னார். அதற்கு துரை அவர்களிருந்துக்கொண்டு அப்படியிருந்த கலாப வேளையிலே எதிராளி பவுன்சை உடாயிக்கிறோமென்று ஒரு ராசவட்டம் வந்தாலதைப் பிடித்துப் பேசாமல் சும்மாயிருப்பானேன் யென்று கேட்டதற்கு முன்னே தம்மண்டைக்கு வந்து பேசயில்லை என்று சொல்லி முசபர்சங்கு மனதிலே குறையாய் உத்திரமொன்றும் சொல்லாமல் சும்மாய்ப் போட்டு வைத்துக்கொண்டு இருக்கிறார் என்று பேசிக்கொண்டிருக்கச்சே

துரையவர்கள் சந்தா சாயபுவைப்பார்த்து நீர் தண்டுக்குப் போகயில்லையா வென்று கேட்டதற்கு அவர் அனுமானமாய்ப்போகிறேமென்று சொல்லி சடையாய் சொல்லிக்கொண்டிருந்தார். இப்படி சொல்லிக்கொண்டிருக்கத்தே துரையவர்கள் யெழுந்திருந்து சந்தாசாயபுவை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு சுவாமியுங்களுக்கு சகல ஜெயமும் கொடுக்கவும் யென்று சீக்கிரமாய் தண்டுக்குப் போய் வாருங்கோளென்று சொல்லி அனுப்பிவித்தார். நவாபு துரை கையிலே நல்லதென்று சொல்லி யனுப்பிவித்துக்கொண்டு புறப்பட்டுப் போனார். சந்தாசாயபு மனதிலே அனுப்பிவித்துக் கொண்டுபோகிறது சந்தோஷமாயிருக்கவில்லை. பலவந்தமாய் அனுப்பிவித்தாப்போலே ஆச்சுது.

அவர் அனுப்பிவித்துக்கொண்டு போன பிற்பாடு ரசாசாயபும், துரையவர்கள் கையிலே அனுப்பிவித்துக்கொள்ளுகிறதுக்கு வந்தார். துரையவர்கள் ரசாசாயபுவைப் பார்த்துச் சொன்னது நீ உங்களுடைய தகப்பனாரைப் பிரிந்திருக்கவேண்டாம் உங்களுக்கு சகல ஜெயமும் சுவாமி கொடுக்கிறார். உங்களுக்கு பத்தே ஆகப்போகிறது யென்று சொல்லி அனுப்பிவித்தார். அவரும் அனுப்பிவித்துக்கொண்டு தண்டுக்குப்போனார். இதல்லாமல் மோருபண்டிதனண்டைக்கு நம்முடைய வக்கீல் திருமலைராயனை அனுப்பியிருந்தபடியினாலே அவர் போய் பேட்டி ஆனதுக்குப்பிறகு மோருபண்டிதன் துரையவர்கள் பேருக்கு காகிதமெழுதியனுப்பின வயணமென்னவென்றால் உங்களண்டை ஆனந்த ரங்கப்பிள்ளை யென்கிறவர் வெகுசமர்த்தன் கெட்டிக்காரன். சபாபுசாலு பண்ணுகிறவர் யென்று கேட்டிருக்கிறோம் அவரை யனுப்பிவித்தால் சகலகாரியமும் பேசிக்கொள்ளலாமென்று யெழுதியனுப்பிவித்தார். நம்முடைய பேருக்கும் நீர் வந்தால் நடக்கவேண்டிய காரியங்கள் பேசிக்கொள்ளலாம் யென்றும் நம்மை வரவேணுமென்றும் யெழுதியனுப்பிவித்தார். அந்த மத்தலப்பை துரையவர்களுடனே சொன்னதற்கு அவர் சொன்னது யென்னவென்றால்: மோருபண்டிதனுக்கு யெழுதச்சொன்ன வயணம் நம்முடைய மனதிலே நீங்கள் சமாதானத்துக்கு வந்தீர்களென்று சொல்லி நாம் கேட்டதினாலே நம்முடைய வக்கீலை உங்களண்டைக்கு அனுப்புவித்தோமே அல்லாமல் இப்படி நீங்கள் ராச்சியம் நிர்ப்பந்தம் பண்ணுகிறதற்கு வந்தீர்களென்று நாம் அறிஞ்சதே; ஆனால் நம்முடைய வக்கீல் உங்களண்டைக்கு அனுப்பத்தக்கதில்லை. இப்பவும் நம்முடைய வக்கீலுக்கு சிலவுகொடுத்து தயவுபண்ணி ருத்திரிக்கு ஒரு தஸ்துக்கு யெழுதிக்கொடுத்து அனுப்பவும் யென்று யெழுதி அனுப்பிவிடச்சொல்லி உத்தாரம் கொடுத்தபடியினாலே அப்படியே துரை காகிதம் வொன்றும் யெழுதி ரெண்டுபேர் அறக்காறுக்கள் கையிலே கொடுத்து நம்முடைய

க்கில் திருமலைராயன் பேருக்கும் மேலே யெழுதப்பட்ட காகிதங்கள் சமாச்சாரமும் யெழுதி பின்னையும் பிராஞ்சுக்காருடைய பராக்கிறமத்தை யினி மேல் பார்க்கப்போகிறீர்கள். சேதம் நடந்ததும் நீங்கள் கேட்டுயிருப்பீர்கள் யென்று மோரு பண்டிதனுடனே சொல்லி நீரும் புறப்பட்டுவரவும் யென்று ஒரு காகிதமும் யெழுதிக்கொடுத்து ரெண்டுபேர் அறக்காருக்களையும் நாளைய காலத்தாலே புறப்பட்டு போகச்சொல்லி உத்தாரங்கொடுத்தேன்.

இதெல்லாம் சந்தா சாயபு அனுப்புவித்துக்கொண்டு போகச்சே அப்போ துரையுடனே சந்தாசாயபு நமக்கும் எம்மாத்திரமாகிலும் சிலவுக்கு வேணுமென்று சொல்லிக்கேட்டதற்கு நல்லதென்று முசபர்சங்குக்கு ஒரு காகிதமெழுதிக்கொடுக்கிறோமென்றும் சொல்லி யென்னுடனே முசபர்சங்கு பேருக்கு பவுன்சுக்கெல்லாம் யேகத்துக்கு மூணு லட்சம் ரூபாய் கொடுத்தாச்சே அந்த ரூபாயிலே அன்பதினாயிரம் ரூபாய் சந்தா சாயபுக்கு கொடுக்கவும் யென்று சொல்லி எழுதியனுப்பச்சொல்லி உத்தாரங் கொடுத்தபடியினாலே அந்தபடிக்கு துரை காகிதம் முசபர்சங்குக்கு யெழுதுவித்து ராசோ பண்டிதர் கையிலே கொடுத்தனுப்பிவித்தோம்.

சுக்கில ளு பங்குனி மீ 8 உக்கு 1750 ஆ மார்ச்சு மீ 17 உ அங்காரகவாரம்

இற்றைனாள் காலத்தாலே எட்டு மணிக்கு துரையவர்கள் அழைத்தனுப்பிவித்து தேவனாம்பட்டணம் கொவர்னதோர் மேல்தர் பிளேயர் யென்கிறவன் காகிதமெழுதியனுப்பினான். அது இங்கிலீசு பாஷையானபடியினாலே முசியே பிரியேல் அண்டைக்கு திராதிக்சியோம் (Traduction) பண்ணிவரச்சொல்லி அனுப்பிவித்தேன். செடுகதீ பிகசாமென்று தெலுங்கிலே ஒரு கடுதாசியும் தமிழாலே ரெண்டு காகிதங்களும் யெழுதி அவரவர் கையெழுத்துப்போட்டிருக்கிறது அதுயென்ன வென்று யெழுதியிருக்குதென்று பார்க்கச்சொல்லி மூணு காகிதமும் கொடுத்தார் அந்த காகிதங்களுக்கு வயணம்:

தேவனாம் பட்டணம் சீர்மை அமில் சந்திரசேகர பண்டிதன் யெழுதிக்கொடுத்த தெலுங்கு மாசா ஒன்று அதிலே எழுதியிருந்தது. வெள்ளைக்கொடி போடச்சொல்லி மாசி மீ 27 உ யெழுதிவந்தது. போடுகிறதற்குன்னே இங்கிலீசுக்காரர் வந்து தங்கள் கொடிபோட்டுக் கொண்டார்கள் என்று சந்திரசேகர பண்டிதன் சுவஸ்தமென்று யெழுதி அதின் கீழே சிசுவனாத ரெட்டி முதலான தேவனாம் பட்டணம் சீர்மை நாட்டாரெல்லாரும் கையெழுத்துப் போட்டதுமல்லாமல் சிவனாக ரெட்டியும் கையெழுத்துப்போட்டிருக்கிறதாக யெழுதி வந்தது.

தேவனும்பட்டணம் சீர்மை நாட்டார் விசுவனாத ரெட்டி வகையரு மெல்லாரும் கையெழுத்துப் போட்டதாக ஒன்று அதிலே சீர்மை இவர்களுக்கு வந்த பிற்பாடு இன்றையவரைக்கும் வெள்ளைக்கொடி போட்டதில்லையென்று எழுதி அந்த மாசாவெழுதினது ஒயான்சு குமரப்ப முதலி சாட்சிகூடப் போட்டதாக வெழுதின மாசா ஒன்று.

நம்முடைய சாகிர் கிராமங்கள் நல்லூத்தூர் மண்டகப்பட்டு வானமா தேவி அன்னவல்லி வீரப்பெருமாள் நெல்லூர் இந்த கிராமங்கள் ஐந்தும் அமுல்பண்ண கோபாலய்யன் யென்கிறவன் சொன்னதாய் வாகுலம் வெள்ளைக்கொடி போட்டதில்லை யென்று யெழுதி அதிலே தேவனும் பட்டணம் சீர்மை நாட்டார் யெல்லாரும் முன்ரெண்டு மாசரிலே கையெழுத்துப் போட்டவர்களெல்லாம் கையெழுத்துப்போட்டதாகயொரு மாசறு இந்தப் படிக்கு மூனுமாசறு வந்ததை யென்கையில் கொடுத்துப் படித்துப்பார்த்துச் சொல்லச்சொன்னார். மேலே யெழுதியிருக்கிறபடிக்கு கொடி போட்டதில்லை யென்று யிருக்குதென்று அதிலே விசுவனாத ரெட்டி முதலான பேர் கையெழுத்துப் போட்டதுமல்லாமல் சிவனாகரெட்டி கூட கையெழுத்துப் போட்டிருக்கிறானென்று சொன்னதுக்கு நல்லது கொடிபோட்டது மெய் தானாவென்று கேட்டார் கொடி போட்டதுக்கும் சந்தேகமா? கொடிபோட்ட மரம்கூட அடையாளம் காண்பிக்கிறோம். அந்தக் கொடிபோட்டது சிலவு நாட்டாரது அது மராமத்து பண்ணி கொடுத்ததில்ல சிலவு யெழுதியிருக்கிறது. இப்போ கையெழுத்துப் போட்டனுப்பின செடுதிபிக்காமிலே தானே அவர்களை யிங்கே அழைப்பித்தால் கொடிபோட்ட சிலவு எழுதினதுமெய்தான் அவர்களுரிமில்ல நாங்களிருக்கிறபடியினாலே அவர்கள் போடச்சொல்லி பலவந்தம் பண்ணினால் போட்டார்களென்று சொல்லி மறுபடி கொடி போட்டிருந்தது மெய்யென்று கையெழுத்துப் போடுவித்து அனுப்பிவிக்கிறோமென்று நீங்களெழுதலாம் இதல்லாமல் நம்முடைய அமுல்தார்களும் யெங்களை பயமுறுத்தினால் அவர்கள் சொல்லச்சொன்னபடி சொன்னோம். எழுதிக்கொடுக்கச் சொன்னபடி யெழுதிக்கொடுத்தோம் என்று சொல்லி மறுபடி அந்தப்படி செடுதிப்பிக்காவில் கையெழுத்துப்போட்டு அனுப்பி விக்கிறோமானபடியினாலே நீர் யெழுதியனுப்பின மாசறுவொன்றும் கவைக்கு வராது எங்கள் சீர்மையென்று ராச்சியமெல்லாம் அறிஞ்சு பிரசித்தமா யிருக்கிற காரியத்துக்கு நாங்கள் சாதகம் சொல்லவேணுமா நீங்களிப்படி ஒருபோக்கு சம்பாதித்து எழுதினால் கடைசிமட்டுக்கும் நிறுவாகத்தக்கதாக அல்லவோயிருக்க வேணுமென்று யெழுதி அனுப்பலாமென்று சொன்னதுக்கு மெய்தான் பிரசித்தமாயிருக்கிறதற்கு வேறே சாதகம் தேடவேண்டிய தென்ன அப்படிதான் எழுதுவோமென்று சொல்லி ஆனாலவர்கள் எழுதின காகிதம் முசியே பிறியேல் திராதிக்சியோம் பண்ணி அனுப்புவான். அது

பார்த்து பிற்பாடு அவர்கள் யென்ன எழுதினார்களோ அந்த சங்கதி பார்த்துக்கொண்டு அப்பால் பதில் உத்தரம் எழுதுவோமென்று சொல்லி அப்பால் இங்கிலீசுக்காரர் மெத்த புத்தியில்லாதவர்கள் கண்ணைமூடிக்கொண்டு முன்னை நாசர்சங்கோ, மாபூசுகானோ, மோரோபண்டிதனோ ஆரோயென்ன யெழுதினார்களோ அதின்பேரிலே தங்களுக்கு வெகு அதிசயம் வந்ததாய் யெண்ணிக்கொண்டு முன்னை பின்னை யோசனை பண்ணாமல்போய் கொடியை போட்டு துப்பாக்கிகளைச் சுட்டுப்போட்டு பதினொரு வேட்டுப் பீரங்கிகளை சுட்டு சாராயங்குடித்துப் போட்டுப் போனார்கள் அப்பால் அன்று சாயங்காலம் கொடிமேல் கொடி யெப்படி பறக்குமென்று யெங்கள் கொடி போட்டிருக்கிற விடத்திலே நீங்கள் கொடி போடலாமா கொடியினுடைய ஞாயம் நமக்குள்ளே யிருக்கிறது நீங்களறிந்திருந்தும் யிப்படி செய்தது மெத்த ஆச்சரியமாயிருக்கிறதென்று யெழுதினதற்கு இன்று யெட்டாம்நாள் செவ்வாய்க்கிழமைனாள் ராத்திரி எழுதி அனுப்பின காகிதத்திற்கு யிந்தமட்டுக்கும் அவர்கள் யென்ன யெழுதுவோமென்று உபாயம் தேடி யிந்த பொய்யை முடைஞ்சு பெழுதியனுப்பினார்களென்று சொன்னேன் அது மெய்தானென்று இதல்லாமல் யிவர்கள் நாசர் சங்குக்கு யெழுதினதென்னவென்றால்: இந்த அப்துல் சலீல் உபாயத்தினாலே அவன் பேச்சைக்கேட்டு நாங்கள் யெவ்வளவு மத்தத்துகூட வேணுமோ அந்தமட்டுக்கும் மத்தந்து கூட்டுகிறோமென்று கன்னு பின்னுயென்று வெகு பொய்களை யெழுதுவார்கள் அதை பின்னையும் ஒன்றை நூறாய்ப்பெருக்கி அப்துல் சலீல் வெகு பொய்களை யெழுதியிருப்பான் அந்தப் பாவத்தை நம்பி சமபத்ராயன் நாசர்சங்கை எப்படியும் யிழுத்துவர வேணும் என்று யோசனை பண்ணி இங்கிலீசுக்காரர் முழுங்கிப் போடுவார்கள். என்றும் நீங்கள் சாட்சிபூதமாய் வந்தால் போதுமென்றும் இவன் வெகு புளுகினதின்பேரிலே அவனும் சிவனைக்கையிலே பிடித்துக்கொண்டு அவனும் பிறகே வந்துக்கொண்டு முன்னே சம்பத்திராயனை மாபூசுகானை மோரோபண்டிதன் முராரிராயன் வகையறுக்களைக் கூட்டிமுன்னே அனுப்பிவித்துதான் பின்னையிவர்கள் சாடைபார்த்து காரியமிருந்தால் தானும்கூட வந்து கலந்துக்கொண்டு நடத்துவோம் அல்லவென்று மார்க்கம் தப்பிப் போனவர்களுக்கு பங்கம் கண்டால் தானப்படிதானே நின்று ஒரு சமாதானத்திலே விடுவித்துக்கொண்டு கடிக்கமாட்டாது பாக்கு உத்தமதானமா எண்ணிக்கொண்டு நடத்திப்போட்டு போடுவோமென்று அவன் சிறப்பி (Sirpi) அந்த வட்டங்களிலேதானே இருக்கிறானென்று சொல்லி இது முதலான சேதி விஸ்தாரமாய் பேசிக்கொண்டிருந்தார். அதற்கு நான் சொன்னது: நாசறுசங்கு செங்கமா அந்த வட்டங்களிலேயாகிலும் வந்து இருக்கிறதாக யோசனை பண்ணினாலும் உம்முடைய அதிருஷ்டம் ஆர்க்

காடு நவாபை ஜெயித்து கீர்த்தி வந்ததே நாசறுசங்கு பாதுஷாவுக்கு கூட மாறுபாடு பண்ணிக்கொண்டு எதிரியாயிருக்கிறவனை ஜெயித்துப்போட்டீர் என்கிற கீர்த்தி உமக்கு வருவிக்கவேண்டியதைக் கொண்டு வந்து விட்டார். இங்கிலீசுக்காரருக்கும் மாபூசுகான்பேர்கள் முதலானவர்களுக்கும் பொல்லாதகாலமானபடியினாலே நாசறுசங்கு யிங்கே வந்தவுடனே இங்கிலீசுக்காரர் பவுன்சுயெங்கே யென்று கேழ்ப்பான். மாபூசுகான் இங்கிலீசுக்காரர் முன் பதினாயிரம் ஐயாயிரம் பேர் வந்து நிருவாகம் பண்ணுகிறோமென்று சொல்லிப்போட்டு யிப்போ இருநூறு முன்னூறு வெள்ளைக்காரர்களை அனுப்பி மோசம் பண்ணினார்களிதல்லாமல் எங்களுக்கும், பிராஞ்சுக்காரருக்கும்சமாதானமானபடியினாலே அவர்கள்வரக்கூடாதென்றுசொல்லுகிறார்களென்று இப்படி முன் சொன்ன பொய்யைப்போலே இப்பவும் வெகு பொய்யைச் சொல்லுவார்கள். அந்தப் பொய்யை முன் கேட்டதைப்போல் சந்தோஷமாய்க்கேழ்க்கமாட்டான் இப்போ காரியம் நேர்ந்த வேளையானபடியினாலே இப்போ சொல்லுகிறபொய்யைக் கேழ்க்குந்தோறும் முன் சொன்னது கூட பொய்யின் கீழே வந்து இவர்களும் அவர் கோபத்துக்கு உள்ளாய்க்காவலிலே விழுந்து பின்னையும் அவர் தெண்டனைக்குப் பாத்திரமாவார்கள். இங்கிலீசுக்காரர்கள் நாமுறுதாக்கள் அபந்தக்காரர் யென்கிற அபகீர்த்தியை அடைந்து முகத்தைக் கருப்பாக்கிக்கொண்டு பூமி யென்கிற ஸ்திரியின்பேரிலே தானே திருஷ்டியை வைத்துப்போட்டு இருக்கிறதற்கு காலமானபடியினாலே இப்படி எல்லாம் நடக்குது கடைசி உமக்கு நாசறுசங்குவை செயித்து போட்டீரென்கிற கீர்த்தி நாசறுசங்கும் அவரைச்சேர்ந்த பேர்களுக்கும் தோற்றி ஓடிப்போனார்களென்கிற அபகீர்த்தியும் வரயிருக்கிறதென்று சொல்லி தமிழர் வாடிக்கைசொல்லாய்ச் சொல்லுவார்கள். நல்ல பாம்பு படமெடுத்து ஆடுதுயென்று கையிப்பூச்சி பாம்பு படமெடுத்தது யென்கிறனுமம் நமக்கும் கூடத்தானேயென்று ஆடப்போனதைப்போல யென்று லோக வழக்கம் சொல்லுவார்கள். அது இங்கிலீசுக்காரரிடத்திலேதானே கண்டோமென்று சொல்லி யிப்படி பேசிக்கொண்டுயிருக்கச்சே வந்த இங்கிலீசுக் காகிதத்தை முசியே பிரியேல் பிராஞ்சு யெழுத்திலே யெழுதியனுப்பினார். அதை துரை படித்துப்பார்த்துச் சொன்னதென்ன வென்றால்: இங்கிலீசுக்காரர் நமக்கெழுதின காகிதத்திலே இதற்கு முன் அப்துல் சலீல் நம்முடைய குண்டுக்குள்ளேயிருந்து உங்கள் மனுஷன் சந்திரசேகர பண்டிதனை அழைப்பித்து காறுபாரு பண்ணத்தக்கதாக யிருந்தால் அது நாம் கேட்டு உங்கள் சினேகிதம் குறித்து அப்துல் சலீலுக்கு தாக்கீது பண்ணி உங்கள் மனுஷனை விடுவித்து அனுப்பிவித்தோமென்றும் இதல்லாமல் உங்கள் மனுஷர்தானே திருவந்தபுரத்திலே வெள்ளை நீசான் போடயில்லையென்று யெழுதிக்கொடுத்திருக்கிறான். அந்தக் காகி

தம் உங்களண்டைக்கு அனுப்புவித்தோமென்றும் உங்கள் நீசான் திருவந்தி புரத்திலே போடயில்லையென்று அப்படி போட்டிருந்தால் நாங்களந்தவழி போகத்தக்கதில்லையென்றும் யிந்தப்படி இங்லீசுக்காரர் நமக்கு யெழுதி யனுப்பினார்களென்று துரையவர்கள் என்னுடனே சொல்லி யிப்போ அவர்கள் யெழுதினது யென்ன மாச்சுதுயென்றார்: இதுவே நமக்கு பெரிய சாதகமாச்சுது. நம்முடைய மனுஷனென்று சொல்லி அவர்கள் அறிந்து யெழுதினமட்டுக்கும் அவன் பண்ணுகிற அமுல் நம்முதாச்சு யென்கிற தற்கு சந்தேகமில்லையே யினிமேல் வேறே சாதகம் வேண்டியதென்ன யிருக்கிறது யென்று இப்படிக்கு துரையவர்கள் சொன்னார்கள், நம்முடைய மனுஷன் என்கிறதும் லோகப் பிறசித்தமாயிருக்கச்சே கொடி போட்டி ருக்குதென்றும் அந்த சீர்மை நம்முடைய தென்கிறதும் பிரசித்தமாயிருக் கிறதே கொடிபோட்டதில்லை யென்கிறஞாயம் என்ன இருக்கிறது? இப்போ சந்திரசேகர பண்டிதன் கையிலே மகசர் வாங்கி அனுப்புவித்தார்களே யிப்படிப்பட்டது நான் வேணுமென்றால் ஆயிரமகசர் வாங்கி அனுப்பு வேன். இந்த மகசர் ஒரு காசு பொறாது யென்று சொல்லி இதுகளுக் கெல்லாம் அவர்களுக்கு கடுதாசி யெழுதியனுப்புகிறவயணமென்னவென் றால்: இந்த ஞாயமெல்லாம் நான் சீர்மைக்கு எழுதியனுப்புகிறேன். நீங்க ளும் சீர்மைக்கு யெழுதிக்கொள்ளுங்கோளென்றும் அவ்விடத்திலேதானே யிந்த ஞாயம் கேட்டு தீர்ப்பார்களென்று பின்னையும் அதற்குத்தக்க சங்கதி களாக யெழுதி அனுப்பவேண்டியபடிக்கெழுதியனுப்புகிறோமென்று சொன் னார். இதல்லாமல் இங்கிலீசுக்காரர் யிவ்விடத்திலே பின்னையும் ரெண் டொரு சங்கதி நடப்பித்துயிருக்கிறார்கள். அது நான் தஸ்தரித்திலே யெழுதிவைத்திருக்கிறேன். அந்த சங்கதி கூட யிதுகூட நான் சீர்மைக்கு யெழுதியனுப்பிவிக்கிறேன் அதினாலே அவர்களுக்கு ரொம்பமோபாதி வருமென்று சொன்னார். முன் திருவந்திபுரத்திலே மேஸ்தர் பிளேயரும் (Mr. Floyer) சொலுதாதுகளும் வந்து அந்த வூரிலே பிள்ளையார் கோயில் இடிஞ்சு போனதின் முன்பாக நாலு அஞ்சு செடிகள் இருக்கிறது அதிலே ஒரு மரத்தின்பேரிலே தங்கள் நீசான் கட்டி மூணுதரம் துப்பாக்கி களை சுட்டு பதினேரு வேட்டு பிரங்கியும் போட்டு சாராய மத்ததுகள் குடித்து அவ்விடத்து அமில் சந்திரசேகர பண்டிதனைப் பிடித்துக்கொண்டு போகிறபோது இவ்விடத்திலிருந்து அவருக்குமுன் கடுதாசி கொண்டுபோன சேவுகன் மறுபடி புதுச்சேரிக்கு போகவேணுமே யெனக்கென்ன உத்திர கேட்டதுக்கு யென்னையானால் யிவர்கள் பிடித்துக்கொண்டு போகிறார்களே நான் தேவனாம்பட்டணத்துக்குப் போனதுக்குப் பிறகு சேதிகளெல்லாம் யெழுதியனுப்புகிறேன். நீ போயிவ்விடத்திலே நடந்த சேதியும் யென்னைப் பிடித்துக்கொண்டு போகிற சேதியும் சொல்லு யென்றுசொல்லி அனுப்பின

படியினாலே அந்த சேவுகன் இங்கேவந்து யென்னுடனே சொன்ன வயணம் மேலே யெழுதப்பட்ட வயணமெல்லாம் சொல்லி வெள்ளைக் கொடிபோட்ட தற்கு சந்தேகமென்ன யிருக்கிறது யிதல்லாமல் முன் கேசவராயர் யென்று முதல்னாள் அனுப்பின அமுல்தாரன் திருவந்திபுரம் தேவனாம் பட்டணம் சீர்மைக்கு சுப்பாவராயிருக்கிறது அந்த கிராமத்திலே தோரணம் வைத்து வெள்ளைக்கொடி போட்ட சிலவு அவனை தகீர் பண்ணி கோதண்டராமய்யர் வசம் அமுல் கொடுத்தபோது அவன்தானிருந்த மட்டுக்கும் வசூலான பணமும் செல்லும் சிலவும் பாக்கியும் யெழுதி அதிலே அந்த சீர்மை நாட்டார் கையெழுத்துப் பட்டதுமாரென்று வாங்கி வாரதுண்டு அந்த சிலவிலே வெள்ளைக்கொடி போட்டசிலவு ரெண்டரை பணம் கண்டெழுதியிருக்கிறது. இப்போ நாட்டார் கொடி போட்டதில்லை யென்று யிப்போவந்த மாசரிலே கையெழுந்துப் போட்ட ரெட்டிகள் கையெழுத்துப்பட யிருக்கிறது கொடி போட்டிருந்ததுக்கு அந்த மரம்கூட அடையாளம் காண்பிக்கிறோம் அந்தப் படிக்கு கிராமம் பிரதிக் கிராமந்துக்குகூட கொடிபோட்டிருந்த மரம்கூட காண்பிக்கிறோம். இதல்லாமல் இநாயிந்து மொகதீன்கான் சந்தாசாயபு பவுஞ்சு இங்கே இறங்கி யிருந்தபோது வீட்டுக்கு வீடு கொடி போட்டதுக்கு கூட சாட்சி சொல்லிவிக்கிறேன் இதல்லாமல் தேவனாம்பட்டணம் சீர்மை மாத்திரமல்ல அப்படி திருவதி சீர்மை அப்படி புவனகிரி அப்படி தீர்த்த நகரி அப்படி வெங்கிட்டாம் பேட்டை பறங்கிபேட்டை விழுப்புரம் திண்டி வனம் செய்யூரு அச்சரப்பாக்கம் வகையறா நம்முடைய சீர்மை யெங்கே உண்டோ அங்கே யெல்லாம் போட்டதுக்கு மரங்கள்கூட சாட்சி சொல்லி விக்கிறோமென்றும் நம்முடைய சீர்மை அல்லாததுக்குகூட வெகு சீர்மை யெல்லாம் வெள்ளைக் கொடி போட்டதுக்கு சாட்சிகள் கூட சொல்லிவிக்கிறேனென்றும் சொல்லி அப்பால் இங்கிலீசுக்காரர் காசா மேஸ்தர் பிரோயர் கொவர்னதோர் தாமேவந்து அன்பது சொலுதாதுகளுடனே வந்து பிடிஞ்சுபோன பிள்ளையார் கோயிலண்டையிலே அஞ்சாறு மரம் நிற்குதாம் அந்த மரங்களிலே ஒரு மரத்திலே தங்கள் கொடிபோட்டு மூணுதரம் பாறு துப்பாக்கிகளை தீந்து அப்பால் பதினொரு பீரங்கிகளை போட்டு சாராயங் குடிந்து நம்முடைய அமுல்தாரன் சந்திரசேகர பண்டிதனையும் பிடித்துக்கொண்டு போகச்சே இங்கேயிருந்து அந்த அய்யனுக்கு காகிதம் கொண்டுபோன சேவுகன் பள்ளி புத்திரன் என்கிறவன் சொன்னது அப்போ அப்புறந்து தெருவிலே புளிய மரத்திலே வெள்ளைக்கொடி போட்டிருந்தது ஆனாலவர்கள் அதையிறக்கயில்லை யிவர்கள் தங்கள் கொடிமாத்திரம் போட்டு அமுல்தாரனையும் அழைத்துக்கொண்டு போகச்சே நான் காகிதம் கேட்டதற்கு நீ போ இங்கேநடந்த சேதியாம் படியே போய் சொல்லென்றுசொல்ல அந்த உத்திரத்தைக் கேட்டுக்கொண்டு புறப்பட்டு வந்து

நாளும் மதனந்தபண்டிதனும் இமாம்சாயபு குமாஸ்தா சொக்கப்பமுதலியும் பின்னையும் நாலத்துரெண்டுபேர் கூட யிருக்கச்சே அவன் வந்துசொல்ல அந்தச்சேதியாம்படியே நாலுங்களுடனே யின்று எட்டாம் நாள் பங்குனி மீ˚ முதல் உ அதற்கு அந்த மாத்தைக்கூட அடையாளம் காண்பித்து அந்த ஊரிலேயிருக்கிற பேர்களைக்கூட சாட்சிச்சொல்லியிருக்கிறேனென்று சொன்னான். இன்றெட்டாம் நாளிவன் வந்து ரங்கப்பிள்ளையுடனே சொல்லச்சே நீங்கள் இரண்டுபேருமிருந்தீர்களா வென்று கேட்டார். நாங்கள் மாத்திரம் பின்னையுமஞ்சாறு பேர்கள் கூடயிருந்தார்கள். ஆனாலவர்களை கூட அழைப்பிக்கிறோமென்று சொன்னார்கள். இது பிறசித்தமாயிருக்கிற காரியத்துக்கு கேழ்க்கவேண்டியதென்ன ஆனாலும் அப்புமிவன் வாக்கு மூலப்படிக்கு நீ பெடுத்தருமண்டையிலே மறுபடியிவனை சொல்லச்சொல்லி திக்கு வேரேசோம் யெழுதிவித்து இவன் கையெழுத்தும் அப்பால் மதனந்தபண்டிதன் சொக்கப்பமுதலி கையெழுத்துக்கூட போடுவிக்கச் சொல்லிச்சொன்னார். அந்தப்படிக்கு அவர் சக்கிரந்நார் முசியே பெடுத்தரும் **(M. Bertrand)** கையில் யெழுதிவித்து மூணுபேர்களும் கையெழுத்துப் போட்டார்கள் அந்த பெடுத்திக்கசாமை முசியே பெடுத்தரும் துரை கையிலேகொடுக்க துரை படித்துப்பார்த்து நாளைக்கு அவர்களுக்கு யெழுதுகிறகாகிதத்திலே யிதைக்கூடவைத்து அனுப்புகிறேனென்று வாங்கிக் கொண்டார். அப்பால் மீருகுலாம் உசேன் உடன்பிறந்தாள் மகளைக் கலியாணம் பண்ணியிருக்கிற மீர்ஷும் சாயபு வந்து முந்தாம்நாள் மார்ச் மீ˚ 15 உ பங்குனி மீ˚ 6 உ ஞாயிற்றுக்கிழமை நாள் அல்லி அக்பர்சாயபு என்னை செவ்வாய்க்கிழமை நாள் மத்தியானத்துக்குமேல். நீங்கள் கடற்கரையிலே யிருக்கச்சே நாலுமணிநேரம் வந்து சொன்னேன். நல்லது சாயங்காலம் ஆறுமணிக்கு நான் கோட்டைக்குப்போய் வீட்டிற்கு வந்தவுடனே வந்து ஞாபகம் பண்ணினால் தேவனாம்பட்டணங்கொவர்னதோருக்கு காகித மெழுதுவோமென்று சொன்னீர்கள். அந்தப்படிக்கு அந்த ரூத்திரித்தானே காகிதமெழுதி அனுப்பினீர்களென்று சொன்னதுக்கு அந்த சேவுகனை அழைப்பிக்கச் சொல்லி சொக்கப்பமுதலியையும் மதனந்த பண்டிதனையும் கூட அழைப்பித்து சேவுகன் சொல்லுகிறபடிக்கு அவர் மூன்றுபேர்களும் வந்து கபுறு சொன்ன உடனே தம்முடைய துபாசி அப்புவை அழைப்பித்து சேவுகன் சொல்லுகிறபடிக்கு உண்டானபடி நீ சொல்லென்று கேழ்க்க அந்த புத்திரன் யென்கிற சேவுகன் பிராமணத்தெருவிலே புளியமாத்திலே வெள்ளைக்கொடி போட்டிருந்ததும் அப்பால் முன்பங்குனி மீ˚ முதல் உ செவ்வாய்க்கிழமை நாள் சூரிய உதயவேளை இங்கிலீசுக்காரர் தேவனாம் பட்டணம் கொவர்னதோர் அன்பது சொலுதாதுகளுடனே வந்ததும் இடிந்துப்போன பிள்ளையார் கோயிலும் மாங்களுமிப்பால் தெருவிலே

இருந்ததாகவும் அந்த மரத்திலே கொடி போட்டது முதலாய் முன்சொன்ன படிக்கு சொன்னான். அதையெல்லாம் துரைகேட்டு மெய்தானவென்று கேட்டார். வாங்கிக்கொள்ளச்சொல்லி யெழுதிக்கொடுத்த முப்பதினாயிரம் ரூபாய் ரசீதை உங்கள் கையில் கொடுத்த நீங்கள் மீர்குலாமுசேன் பணம் கும்பினீரிலே இருக்கிறத்திலே முன் உங்களுக்கு எழுதிக்கொடுத்த அறு பத்தினாலாயிரத்துடனே கூட இந்தப் பணமும் கும்பினீரிலே வாங்கி இந்தப் பணமிப்போ இதாயித்து மொகதீன்கானுக்கு கடன் கொடுக்கிறேன். உனக்கு ஆறுமாதத்திலே நான்—100-க்கு 8 ஆக வட்டி கூட்டி முதலும் வட்டியும் கொடுக்கிறோமென்று சொல்ல நான் நாலாயிரம் எனக்கு சிலவுக்கு கொடுத்து மத்தது இருபத்தாறுயிரம் ரூபாய்க்கு சீட்டெழுதிக்கொடுக்கிறோ மென்று சொன்னபடிக்கு இருபத்தாறுயிரம் ரூபாய்க்கு சீட்டும். ரொக்கம் நாலாயிரம் ரூபாயும் கொடுக்க வேணுமென்று கேட்டேன். அந்தப்படிக்கு இருபத்தாறுயிரம் ரூபாய்க்கு வட்டிச்சீட்டும் எழுதிக்கொடுத்து யென்னை அழைத்து திண்டிவனம் சம்மதி ஐயாயிரம்—5000 ரூபாயிருக்குதென்று சொன்னியே அதிலே நாலாயிரம்—4000 ரூபாய் மீர்ஷத்துக்கு கொடுக்கச் சொல்லி தம்முடைய கணக்கு ரங்கப்பிள்ளை தம்பி முத்தியப்பிள்ளையை அழைத்து திண்டிவனங்குத்தகை ரங்கப்பிள்ளை வரவு திண்டிவனம் சம்மதி நாலாயிரம் ரூபாய் வரவு வைத்துக்கொண்டு மீர்ஷத்துக்குக் கொடுத்ததாய் மீர்ஷம் பைத்துயெழுதிக்கொள்ளச் சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கு அவன் கணக்கெழுதிக்கொண்டான் மீரஷம் 26000 இருபத்தாறுயிரம் ரூபாய் சீட்டை துரைகையில் வாங்கிக்கொண்டு யென்னை நாலாயிரம் ரூபா கொடுக்கச் சொல்லிக் கேட்டான். வீட்டே வந்தால் தாரேன் என்று சொன்னேன். நல்லதுயென்று அனுப்புவித்துக்கொண்டுபோனான்.

இற்றைநாள் பகலைக்குமேலாக மூணுமணிக்கு துரை அழைத்தனுப்பி வித்து இதாயித்து மொகதீன்கான் காகிதம் வந்தது. அதிலென்ன யெழுதி யிருந்தது பாரென்று சொன்னார். அதிலே தண்டிலே யிருந்தசுவார்களெல் லாம் பயிர் பூண்டுகள் கொண்டுவந்து தேத்துக்கு வெளியே குண்டுசாலைக்கு உள்ளே இரங்கியிருக்கிற குதிரைசுவார்கள் சிப்பாய்கள் வெகுபேர் இவ்வி டத்துக்குவரயில்லை. இதல்லாமல் கடைக்காரர்களும்வரவில்லை. அவர்களுக்கு தாக்கீது பண்ணி சீக்கிரமத்துக்கு அனுப்பச்சொல்லி யெழுதியிருக்கு தென்று சொன்னதற்கு யிப்போ மயோராயிருக்கிறவனை அழைப்பித்து இருபது வெள்ளைக்காரர்களைக் கூட்டிக்கொண்டுபோய் கெவுனிவாசலுக்கு வெளியே குண்டுசாலையிலே இதாயித்து மொகதீன்கான் பவுஞ்சு யிறங்கி யிருக்கிறதே அதிலே காயக்காரர்கள் காயப்பட்ட குதிரைகள் சிப்பாய்கள் பெண்டுகள் சிப்பாய்கள் தவிர அவர்கள் தட்டுமுட்டு சக்கடா ரதம் காடி ஒட்டகம் யெருதுகள் தவிர மத்தபேர் சிப்பாய்கள் குதிரை சுவார்கள் கடைக்

காரர்களைக்கூட லசுக்கரைக்குப் போகச்சொல்லி தாக்கீது பண்ணி யிருந்தால் சுட்டுப்போடுவோ மென்று மெறட்டி தெருத்திவிடச்சொல்லி பெரியண்ண நயினாருக்கும் தாக்கீது பண்ணி போகச்சொன்னார் அந்தப்படி போனார்கள். அப்பாலென்னைப் பார்த்து இதாயித்து மொகதீன்கான் அடோனியிலிருக்கிற (Adoni) தன் காசான்சி யாகோத்து (Treasurer-yatut) க்கு யிந்த மூனுலட்சம் ரூபாயும் மனசுக்கு ராயன் உண்டிகையெழுதின்படிக்கு உண்டிகை கண்ட உத்திரக்ஷணம் கொடுத்துவிடச் சொல்லி ஒரு தாக்கீது யெழுதி அனுப்பச்சொல்லி நேத்துமத்தியானம் காகிதமெழுதினமே அந்தப்படிக்கு தாக்கீது அனுப்பாமலிரான். அவன் பெண்சாதி பிள்ளை தாயாரைக்கூட நம்முடைய கையில்வாங்கின பணத்துக்கு கிரிவைத்துக்கு கொடுத்து போயிருக்கச்சே யெழுதியனுப்பாமலிருப்பானா அனுப்பாமல் போனதென்ன வேறேயென்னமோ நினைத்துக்கொண்டு அனுப்பாமலிருக்கிறான். என்று சொல்லவந்தார். அனுப்பாமலிரான் ஆனால் சிப்பாய்கள் தங்காலைத் தொட்டு யெழுதியனுப்புகிறதற்கு மறந்து போனானென்று சொன்னதுக்கு நீயாய் மனசுக்கு ராயனுக்கு துரையவர்கள் யென்பேரிலே கோபித்துக் கொள்ளுகிறதாய் அடோனி காசான்சி (Treasurer) யாகொத்துகான் பேருக்கு தாக்கீது அழைப்பித்து வையாத போனதென்ன யென்று கோபித்துக்கொள்ளுகிறதாயும் ஆனபடியினாலே சீக்கிரமத்துக்கு முசபர்சங்குதாக்கீதுவாங்கி அனுப்பச்சொல்லியெழுதியனுப்புமென்றுசொன்னார். அந்தப்படிக்கு மனசுக்கு ராயன் பேருக்கும் யெழுதி முசபர்சங்கு பேருக்கு துரையவர்கள் மறந்நீர் காகிதமெழுதுகிறதினாலே சிப்பாய்கள் சுவார்கள் கடைக்காரர்கள் வகையறாயெல்லாருக்கும் வெள்ளைக்காரர் போய் தாக்கீது பண்ணுகிறபடியினாலே அவர்கள் வருவார்கள் யென்று யெழுதி யிந்த யாகோத்துக்கும் தாக்கீது அனுப்பச்சொல்லி யெழுதி அவர்கள் சிலேபுதாரன் கையிலே கொடுத்து நம்முடைய வெங்கிட்டனைக் கனை கூட்டி லசுக்கருக்கு அனுப்பிவித்தேன்.

சுக்கில ஹூ பங்குனி மீ 9 உக்கு 1750 ஆ மார்ச்சு மீ 18 உ புதவாரம்

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் அழைத்தனுப்பிவித்து நேத்து ராத்திரி பனிரெண்டு மணிக்கு உன் பேருக்கு காகிதம் யெழுதி அனுப்பினேன். அந்தப்படிக்கு பத்து ஒட்டகமும் அனுப்பிவித்தாயாவென்று கேட்டார். அனுப்புவித்தேனென்று சொன்னேன். அப்பால் ஒரு நாழிகைக்கு செஞ்சிக்கு இவ்விடத்திலிருந்து போயிருந்த சாம்மர் என்கிற (Saint-Marc) சார்சண்டும் பத்து வெள்ளைக்காரரும் யிருபது சட்டைக் காரரும் அன்பது சிப்பாய்களும் மூவாயிரம் விராகன் கொண்டுப்போன

ஆறுபேர் போயபண்டாக்களும் (Palaukin Boys) அதற்கு மேன் சேவுகர் ஆறுபேரும் மறுபடியும் பிந்தனுள் காலத்தாலே மூவாயிரம் விராகன் கூட மேலே வெழுதப்பட்டவர்களும் சுகமாய் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் முசியே சாமரேக் (Saint Maro) என்கிற சார்சண்டு மாத்திரம் மூவாயிரம் விராகனையும் பிடித்துக்கொண்டுவந்து துரையவர்கள் வசம் விராகனை ஒப்பித்துச் சொன்னவயணம் நாங்கள் செஞ்சிக் கோட்டைக்குப் போய் சேர்ந்த பிற்பாடு ஒரு தரம் வெளியே புறப்பட்டு பழஞ் செஞ்சிமண்டு ரூப்புராசா மனுஷர்களை அடித்து துரத்தி அவன் மருமகன் யெசமானாக வந்தவன் குண்டுப்பட்டு விழுந்துப்போனான். பின்னையும் நாலைந்து சிப்பாய்கள் அறுதியாய்ச் செத்தும்போனார்கள் யெட்டுப் பேர்களுக்குக் காயம். இந்த மட்டிலே அவர்கள் ஓட்டிப்போய் மறுபடி செஞ்சிக்கோட்டைவழி சேரவில்லை. அந்த சண்டையிலே நம்முடைய சிப்பாயிலே ஒருத்தன் செத்தான்; ரெண்டு பேருக்குக் காயம் யென்று சொல்லி அப்பால் நாங்கள் கோட்டையிலேயிருக்கச்சே நீங்களனுப்பின கடுதாசியும் வந்தது. இதிலே நாசறுசங்கு சுவார் என்று முன்னூறு குதிரை சுவார்களும் ஒரு யொமசனும் வந்து கோட்டைக்கு வெளியிலேயிருக்கிற கொத்தவால்சாவடியண்டையிலே யிறங்கி நாசறுசங்கு கொடிபோட்டு ஒரு சுபேதாரன் கையிலே ஒரு காகிதமொன்று நாசறுசங்கு ஒடுதிலை சோபுதாரன் கையில் கொடுத்தனுப்பிவித்தான். அந்த சோபுதாரன் வந்து காகிதத்தை காண்பித்ததே அவனுக்கு வெகுமானம்பண்ணி அந்த உத்திரட்சணம் கோட்டையை விட்டுப்போட்டு அந்த சோபுதாரன் பிறகே கில்லேதாரன் போய் பேட்டி பண்ணிக்கொண்டு அந்த சமேதாரன் மனுஷர்களை அழைத்துக்கொண்டுவந்து கோட்டைக்குள்ளே வந்து கோட்டையை ஒப்பித்துப்போட்டு யெங்களையும் போகச்சொல்லிச்சொன்னான் நாங்கள் நல்லதென்று புறப்பட்டு கோட்டைக்கு வெளியே வந்தவுடனே நாசறுசங்கு பர்மானாவொன்று ஒருகாகிதம் கொண்டுவந்து எங்கள் கையில் கொடுத்தார்கள். அந்த பர்மானாவிலே பாரிசிலே எழுதி ஒரு முத்திரை போட்டிருந்தது அதை வாங்கிக்கொண்டு புறப்பட்டுவரச்சே மேலச்சேரி பழஞ்செஞ்சி குதிரைக்காரர்கள் சத்தே காண்பித்துக்கொண்டார்கள். நாங்கள் ஒருதரம் துப்பாக்கிகள் தீந்தவுடனே அவர்கள் ஓடிப்போனார்கள். எங்களை பெருமுக்கலிலே சேர்த்துப்போட்டு வரச்சொல்லி ரெண்டுபேர் சேவுகர்களை கூடக்கூட்டினார்கள். அவர்களும் நாங்களும் பெருமுக்கல் வந்து சேர்ந்தோம். வழியிலே பத்து அஞ்சு குதிரைக்காரர்கள் கிராமங்களிலே கொள்ளையிடுகிறார்கள் எங்களைப்பார்த்த உடனே ஓடிப்போவார்கள் அங்கே விட்ட பிற்பாடு செஞ்சி சேவுகர்கள் போய்விட்டார்கள் அப்புறம் பெருமுக்கல் மியாசாயபு ரெண்டுபேர் சேவுகர்களைக் கூட்டிவிட்டார். அவர்களை அழைத்துக்கொண்டு நாங்களும் ராத்திரியே புறப்

பட்டு யிங்கேவந்து சேர்ந்தோமென்று சொல்லி நாங்கள் போகச்சே பத்துப்பேர் குதிரை சுவார்கள் அப்துல் ரயிமான் தானுக்கு யெங்கள் பிறகே வந்தார்களே அவர்களை நாங்கள் வரச்சே யெங்கள் பிறகே வரவொட்டாமல் மாட்டோமென்று பிறகே நின்றார்கள். யென்று சொன்ஞன். அப்பால் துரையவர்கள் பணமுங்கொண்டு வந்து சேர்த்து இத்தனை கொஞ்சம் பேர்களுடனே யித்தனை தூரம் பெகு பவுஞ்சு சுத்தி யிருக்கச்சே சுறஷ்ஷிதமாய் வந்து சேர்ந்தபடியினுலே நம்முடைய பவுஞ்சு யென்கிற விடத்திலே நாசறுசங்கும் அவர் பவுஞ்சும் பெகு பயம் பிடித்து இருக்கவேணுமென்று சொன்னூர். நானும் உள்ள பசுமைத்தான் அதினுலேதான் நாசறுசங்குகூட யிங்கே வர பயந்து துளவிலே யிருக்கிறு னென்று யெப்படி சொல்லவேணுமோ அப்படி சொன்னேன். ஆனுலிந்த சாமரேக் (**Saint Marc**) யென்கிற சார்சந்துக்கு ஒபிசியாலு உத்தியோகம் கொடுக்கவேணுமென்று யென்னுடனே சொன்னூர். அப்படிதான் செய்ய வேணுமென்று சொன்னேன். ஆனாலும்முடைய அதிருஷ்டத்தினுடைய பெலத்துக்கு சமானமானதாய் யோகசாலி ஒருத்தருமில்லை. அதெப்படி யென்றால் மூவாயிரம் விராகனும் வைத்துக்கொண்டு பத்துபேர் வெள்ளைக் காரர் சட்டைக்காரர் இருபதுபேர் அன்பதுபேர் சிப்பாய்களிவர்கள் தவிர வேறேயில்லையே. செஞ்சி கோட்டைக்குள்ளே அகப்பட்டார்கள். அசாரிகள் ஆயிரத்தன்னூறுபேர் மட்டுக்கும் யெங்தெந்த நவாபுகள் வந்தாலும் போனாலும் அவர்கள் போரதுமில்லை. கில்லேதாரன் வந்தவுடனே அவனுக்கு அனுகூலமாயிருப்பார்கள். அவன் மாறிப்போச்சே அவனுக்கு பொல்லாப்பு பண்ணுகிற வாடிக்கையாய் வருகிறது. அப்படி இருக்க யிப்போ நாசர்சங்கு சண்டாபோட்டு மூன்னூறு சுவார்களும் கில்லேயிக்கு புதுசாய் கில்லே தாரனும் வந்து பழயகில்லே தாரனும் வாயை மூடிக் கொண்டு ஒப்பித்துப்போட்டு யிருக்கச்சே நாசர்சங்கு பவுஞ்சு புதுச்சேரியை சுத்திக்கொண்டு நம்முடைய பேரிலே தானே சண்டைக் கொடுக்க வேணுமென்று வந்திருக்கச்சே அந்த பவுஞ்சிலிருந்தும் புறப்பட்ட சுவார்களும் செஞ்சி கில்லா கைவசம் பண்ணிக்கொள்ள இப்படியெல்லாம் யிருக்கச்சே நம்முடைய மனுஷருக்கு நிறுபாதியாய் புதுசாய் வந்தவர்கள்கூட நாசர் சங்கு பர்வானுவொன்று அவர்கள் பேருக்கு செஞ்சி கோட்டையிலே யிருக்கிற சவுரிய பராக்கிரமுள்ள பிரஞ்சுக்காரர் பார்த்துக்கொண்டு காமனுப்பின கில்லேதாரன் பேர்விளங்கன் சொற்படி கேட்டு நடந்துக்கொண்டால் உங்களுக்கு சுகத்தைக்கொடுக்குமென்று மெழுதின மட்டுக்கும் யெத்தனைபயம் அவனுக்கு யிருந்து அப்படி யெழுதவேணும் அப்பாலுமிந்தக் கோட்டை அசாரிகள் அவர்களுக்கு யெத்தனை பயமில்லாமல் யிவர்கள் வழி போகாமல் ஆளக்கூட வந்த புதுகில்லேதாரன் கூட ஆள்வழிகாட்ட கொடுத்து உபசாரமாய்ச்சொல்லி அனுப்பினுனே ஆனால் உம்முடைய அதிஷ்டத்துக்கு சமான

மான அதிருஷ்டமுண்டானவர்கள் ஒருத்தருமில்லை. இவர்கள் செஞ்சியினி ருந்து வந்து சேர்ந்ததற்கு கேட்டவர்களுக்கெல்லாம்ஆச்சரியமா யிருக்கிறது மல்லாமல் யிப்போ நாசர்சங்கும் அவன் பவுன்சும் வந்து யுத்தசன்னுகமாயி ருக்கிற காரியமும் யிப்படித்தான் நடக்கப்போகிறது. ஆனுலிது வந்தது யெது நிமித்தியமென்றால் உமக்கு பாற்சாவுக்குகூட யெதிரியாயிருந்துக் கொண்டு பாற்சா ராச்சியத்துக்குத்தான் யெசமானென்று தக்கன் (Deccan) சுபாவுக்கு யெசமானுயிருக்கிற நாசர் சங்கைக்கூட செயித்து செயங் கொண்ட கீர்த்தி உமக்கு வருகிற நிமித்தியம் வந்ததேயல்லாமல் மத்தப்படி பின்னை யொன்றுக்காக வந்ததில்லை யென்று சொல்லுகிறார்கள் யென்று சொன்னதற்கு துரையவர்கள் சொன்னது நீ சொன்னது மெய்தான் ராச் சிய மெல்லாம் நிர்பந்தமாய்ப் போச்சுது யென்று சொன்னர் அதுமெய்தான் கலகம் சுவாமி கொடுக்கிறது சனங்கள் செய்கிற பாவத்திற்கு ஆக்கினை கொடுக்கிற தானபடியினலே சனங்களுக்கு சுவாமி ஆக்கினை கொடுத்து உமக்குத் தயவினலே செயத்தை கொடுத்தாரென்று சொன்னேன். அவர் கடாட்சம் யென்னிடத்தில் யில்லாவிட்டால் யிப்படி நடக்கத்தக்கதில்லை யென்று சொன்னர். பின்னையும் யிப்படி லோகப்பிரமமாய் வெகுநேரம் பேசி யிருந்தும் யிப்படி பேசியிருக்கச்சே முசியே பிலவுவான் (M. Pilavoine) வந்து முசியே லவீல் பாகு (M. de le ville bague) சேர்ந்த அரம்சாம் பணம் வந்துதே அதற்குப் பங்காளிகள் அவரவர் வைத்தப்பணம் வீதம் பங்கு தீர்த்து யெழுதிவந்தேனென்றும் நூத்துக்கு அறுபத்தொண்ணே சில் லறை விழுந்துதென்றும் முதல் பணத்துக்கு யிப்போ வந்தது. யென்று சொல்லி கணக்கும் கொடுத்தான். அதிலே முசியே றுபேர் (M. Robert) யென்கிறவனது தொளாயிரம் ரூபாய் முதலுக்கு அவன் வீதத்துக்கு ஐனூரே சில்லறை ரூபா யெழுதியிருந்தது. அவனுக்கு யிவர் பேருக்கு ருதோரானபடியினலே அதிலே யிவர் கையெழுத்துப்போட்டு அந்தப் பணத்தை தம்முடைய கணக்கப்பிள்ளை முத்தியப்பிள்ளை கையிலே போய் முசியே பிலவுவான் கையிலே வாங்கி வரச்சொல்லி முசியே பிலவுவானுக் கும் தம்முடைய கணக்கு முத்தியப்பிள்ளை கையிலே கொடுக்கச் சொல்லிச் சொன்னர் அப்பால் யென்னைப் பார்த்து உன் வீதத்துக்கு யென்ன விருக் கிறதோ அதை யெனக்குக் கொடுத்து யென்பத்தே யெழுதிக்கோ யென்று சொன்னர். நல்லதென்று சொல்லி முசியே பிலவுவான் கொண்டு வந்த பங் கீடு கணக்கெழுதி யிருக்கிற காகிதத்திலே நான் பத்திக்கொண்டேனென்று கையெழுத்துப்போட்டு முசியே பிலவுவானைப்பார்த்து நான் வைத்த முதல் பதிமூவாரத்தெட்டு ரூபாயிக்கு யெனக்கு வீதம் ஏழாயிரத்தெண் ணூத்தி நாற்பத்து ரெண்டு ரூபாயும் கந்தாபதிலும் வரவேணுமே அதை முசியே கொவர்னதோரவர்களுக்கு கொடுத்துவிடென்று முதனிவு

சொன்னேன். நான் சொன்ன மாத்திரத்திலே தம்முடைய கணக்கு முத்தியப்பிள்ளையைப் பார்த்து ரங்கப்பிள்ளை ரூபாய் ஏழாயிரத்தி யெண்ணூத்தி நாற்பத்திரெண்டு ரூபாயும் கந்தா பதினுலும் முசியே பிலவுவான் கையிலே முசியே ரொபேர் பணத்தோடே கூட வாங்கி வாவென்று சொன்னதுமல்லாமல் கணக்கிலேயும் ரங்கப்பிள்ளை வரவு மனிலா முசியே லவீல்பாகு பங்கு வீதம் வந்ததென்று கணக்கெழுதச் சொல்லி முசியே பிலவுவானைப்பார்த்து ரங்கப்பிள்ளை தன் பங்குக்கு வந்த ஏழாயிரத்தி யெண்ணூத்தி நாற்பத்திரெண்டு ரூபாயும் பதினுலு கந்தாவும் யெனக்குக் கொடுக்கச்சொன்னுலே யேன் கணக்கப்பிள்ளை உன் பிறகே வாரான் அவன் கையிலே முசியே ரொபேர் சம்மதி ரூபாயும் ரங்கப்பிள்ளை சம்மதி ரூபாயும் ரெண்டு சம்மதியும் கொடுத்தனுப்புயென்று சொல்ல நல்லதென்று சொல்லி உன் சம்மதி கொடுக்கட்டா வென்று யென்னைப்பார்த்து கேட்டான். கொடுவென்று சொன்னேன். நல்லதென்று துரை கையிலே அனுப்பிவித்துக்கொண்டு யென்னைப்பார்த்து ஆசாரம் பண்ணிப்போட்டு முத்தியப்பிள்ளையையும் அழைத்துக்கொண்டு போனுன். அப்பால் துரை யென்னைப்பார்த்து உன் வரவை என் கணக்கிலே எழுதிக்கொள்ளுகிறேன் உன் கணக்கிலே என் பத்து எழுதிக்கொள்ளென்று சொல்லி மற்றபணம் வருகிற—று வருமென்று சொல்லி ஆனுல் மனிலாவிலேயிருக்கிற முசியே கேர் (M. Guerre) யென்கிறவன் பெரிய திருடன் பணத்தை யெல்லாந்திருடிப்போட்டானென்று சொல்லி நல்லது போவென்று சொன்னுர். நானும் கணக்கு எழுதிக்கொள்ளுகிறேனென்று சொல்லிப்போட்டு அனுப்பிவித்துக்கொண்டு பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

பகலைக்கு மேலாக என்னை துரையழைத்தனுப்பிவித்து முசபர்சங்கு காகிதம் அடோனியிலே (Adoni) யிருக்கிற கசாஞ்சி கோசாயாகோத்துக்கு அனுப்பயில்லையாவென்று கேழ்க்கச்சே ஓசந்த சோபுதாரனும் நாமனுப்பின நாருயணதாசனுயக்கன் மகன் வெங்கிட்டானுயக்கனும் ரெண்டு பேரும் துரைபேருக்கு ஒரு காகிதமும் அடோனியிலிருக்கிற தனக்கசான்சி கோசாயா கொத்து பேருக்கு மூனு லட்சம் ரூபாயும் மனசுக்கு ராயன் யெழுதிக்கொடுத்த உண்டிகைக்கொண்டு வாரவர்கள் வசம் கொடுக்கச் சொல்லி தாக்கீது எழுதியிருக்குமென்று தன் காகிதத்திலேயும் யெழுதி ஏகத்துக்கு ரெண்டு காகிதமும் கொடுத்து அனுப்பிவித்தான். துரையவர்கள் பேருக்கு வந்த காகிதத்தில் முன் எழுதின மத்தலப்பைப்படித்துச் சொல்லி கோசாயாகொத்து (Mr. Cojayakut) பேருக்கு வந்த காகிதத்தையும் உண்டிகைப்படிக்கு பணம் கொடுக்கச்சொல்லி யாகொத்துக்காகிதத்தையுங் கொடுத்தேன். அதை வாங்கிக்கொண்டு துரையவர்கள் முசபர்சங்குக்கு பதில் காகிதமெழுதச் சொன்னது அடோனி (Adoni) யாகுத்து (Yakut)

பேருக்கு அனுப்பின காகிதம் வந்து சேர்ந்து மெத்தவும் சந்தோஷமாச்சுது இப்போ முசியே தொத்தேல் ( M. d'Auteuil ) வருகிறான் பெதிருளி யுடனே சண்டைக்குப் போகிற விடங்களிலே நடக்க வேண்டிய வயண மெல்லாம் சொல்லி அனுப்பிவிக்கிறேன். அவன் வந்து எப்படி நடத்து கிறானோ அப்படிக்கு நீங்கள் நடப்பித்துக்கொண்டீர்களா சுவாமி யுங்கள் சத் துருவை செயிக்க கடாட்சம் பண்ணுவாரென்று சொல்லி யெழுதி அனுப் பச்சொன்னார். அந்தப்படிக்கு யெழுதி அனுப்பிவித்தேன். அப்பால் நாலரைமணிக்கு முசியே தொத்தேல் வில்லியநல்லூர் வாசற்படியே வந்து உங்களுக்கு கபுறு சொல்லச்சொன்னாரென்று ஒரு சொல்தாது வந்து துரைக்கு கபுறு சொன்னவுடனே துரை சட்டை போட்டுக்கொண்டு பல்லக் கின்பேரிலே ஏறிக்கொண்டு என்னைப்பார்த்து நீயும் வில்லியநல்லூர் வாசற் படிக்கு வாவென்று சொல்லிப்போட்டு நடந்தார். எனக்கு பல்லக்குகாரர் யில்லை என்றும் தாம் பல்லக்குகாரரைக் கூட்டிவரச்சொல்லி தம்முடைய சோபுதாரனை அனுப்பிப்போட்டு தாம் போனார் நானும் போயண்டாவந்து பல்லக்கு எடுத்துவருந்தனிலும் பார்த்துக் கொண்டு இருக்கலாகா தென்று நானும் நடந்து போய் வில்லியநல்லூர் வாசற்படியே போய் சேர்ந்தேன். துரையவர்களும் முசியே தொத்தேலும் ஒரு மணி நேரம் பேசியிருந்து அப்பால் புறப்பட்டு உடனே துரை யும் முசியே தொத்தேலும் கட்டிக்கொண்டு முத்தமிட்டுக்கொண்டு அனுப்பிவித்துக்கொண்டு போகச்சே காலத்தாலே செஞ்சியிலிருந்துவந்த மூவாயிரம் விராகனும் போகச்சொல்லி தம்முடைய கூண்டிலே வைத்துக் கொண்டு போனார். அதை யெடுத்து முசியே தொத்தேல் வசம் கொடுத் தார்; அதை வாங்கிக்கொண்டு அவன் வில்லியநல்லூரிலே யிறங்கியிருக்கிற லசுக்கரை அனுப்பிவித்துக்கொண்டு போனான். இதிலே சேக்கு அசேன் லசுக்கரையிலிருந்துவந்தான். அவனுடனே கூட சேக்கு இப்ராம் தம்பி யும் கூடவந்தான். அப்பாலவன் துரையுடனே சொன்னது நாசறுசங்கு திருச்சினாப்பள்ளிக்குப்போய் சேர்ந்தாரென்று கபுறு வந்ததென்றும் முசபர் சங்கு யிங்கே வாங்கிப்போன மூனு லட்சம் ரூபாயும் தன் பவுன்சுக்கு மாத் திரம் கொடுத்தாரென்றும் சந்தாசாயபு பவுன்சிலேயிருக்கப்பட்ட சிப்பாய் கள் குதிரைகள் குதிரைக்காரர்களெல்லாரும் யின்னேரமட்டுக்கும் சந்தா சாயபை மறித்துப்போட்டு அவர்கள் பண்ணின பசீது எந்தமட்டுக்கென்று சொல்லப்போகிறேன் யென்று துரையுடனே சொல்லி யினி சிப்பாய்கள் கேட்கத் தக்கதில்லை. சந்தாசாயபுக்கு மடிப்பு வருமென்று சொன்ன மாத் திரத்திலே அனுப்புவித்துக் கொண்டுபோன முசியே தொத்தேலை மறுபடி அழைத்து சந்தாசாயபுக்கு சிப்பாய்களைத்தொட்டு போறுட்டம் வறுமல் பத்திரமாய் பார்க்கச்சொல்லி பின்னையும் தன் தந்திர காரியங்கள் சிறிது

ரகசியமாய்ச்சொல்லி அவரை அனுப்பிவிட்டுஅப்பால் முசியே பிறியேலுக்கு உத்தாரங்கொடுத்து சேக்கு இப்றும் தம்பிக்கு மூவாயிரம் ரூபாயும் தம்முடைய கணக்கப்பிள்ளையை அழைப்பித்து சேக்கு அசேனுக்கு ஐயாயிரம் ரூபாயும் கொடுக்கச்சொல்லி சேக்கு இப்றும் தம்பியை பார்த்து யின்று முதலுங்கள் சிப்பாய்களுக்கும் நீயும் முசியே தொத்தேல் சொல்படிக்கு கேளுங்கள் இனிமேல் சந்தாசாயபுவை பணம் கேட்கவேண்டாமென்றும் யினிமேல் தாம் கொடுக்கிறோமென்றும் சொல்லிப்போட்டு கவுனி வாசல் காரரை அழைத்து ஒட்டகம் எருதுகள் வண்டில்கள் சுமையேத்தி வந்தால் உள்ளே விட்டு மறுபடி வெறும் எருது ஒட்டகங்கள் வண்டிலுகள் வெளியே போகிறதுகள் தடையில்லாமல் விட்டுவிடவும் யென்று யிங்கேயிருந்து போகிற சிப்பாய்கள் படவு தட்டு முட்டு அரிசி தடையில்லாமல் விட்டுவிடச்சொல்லியும் பல்லக்குகள் குதிரைகள் போய் வாரவர்களைக்கூட விட்டுவிட சொல்லிப்போட்டு கோட்டையே வந்தார். அங்கே முசியே பிறியேல் முசியே சேம்போல் முசியே புரி யிவர்களுடனே பேசியிருக்கச்சே ஒரு வெள்ளைக்காரன் ஒபிசியாலை அழைத்துத் தண்டுக்குப் போகவேணுமென்றுச் சொன்னதுக்கு வெய்யலிலே நின்றால் ஒரு மூர்ச்சை வந்து விழுந்து யெட்டுனாள் சரீர ஸ்மரணை யில்லாமலிருந்து அது முசியே புரி அறிவார் என்று சொன்னதுக்கு மெய்தான் குதிரை மேலே யேறி விழுந்ததும் நடந்த பூருவோத்திரம் மெய்தானென்று சொல்லி ஆனவுடனே அப்படியானால் போகவேண்டாமென்று சொல்லிப்போகச்சொன்னார். அப்பால் துரை வீட்டே வந்தார் நான் பாக்குக்கிடங்கே வந்தேன்.

இற்றைநாள் வில்லியநல்லூரிலே நாம் நம்முடைய தண்டுக்காரிருக்கச்சே காப்பிரிகள் நாலுபேர் சந்தைத்தோப்பு யிருக்கிற யிடத்துக்கு போன விடத்தியே மருட்டிய குதிரைக்காரர் போய் வளைத்துக்கொண்டு நாலு பேர்களையும் தலையை வெட்டிப்போட்டு போனார்களென்கிற கபுறு வந்தது.

இற்றைநாள் ராத்திரி சிறிது சொலுதாதுகளும் சிப்பாய்களும் ஆக புறப்பட்டு மருட்டியர் யிருக்கிற யிடம் பார்த்துப்போய் சுட்ட மாத்திரத்திலே பத்தஞ்சு குதிரை விழுந்தது. மற்ற குதிரைக்காரர்கள் ஓடிப்போய் விட்டார்கள் யென்ற சேதி துரையுடனே மறுநாள் காலத்தாலே சொன்ன சேதியை யிதிலேதானே யெழுதிவித்தேன்.

இற்றைநாள் ராத்திரி அரும்பாத்தபிள்ளை சாவடியிலே மராட்டியக் குதிரைக்காரர்கள் விழுந்து சிறிதுபேர்களை வெட்டிக் கொள்ளையிட்டு ஆபாசம் பண்ணிப்போட்டு போன சேதி கேழ்க்கப்பட்டது.......................

சுக்கில ளூ பங்குனி மீ 14 உ. க்கு 1750 ஆ. மார்ச்சு மீ 23 உ. சோமவாரம்

இற்றைனுன் துரையவர்கள் அழைப்பித்து சந்தாசாயபுக்கு அனுப்பு கிறதற்கு ரூபாயனுப்பினல் பெருசமயமாயிருக்கும் ஆனபடியினலே வராகனுகப்பார் யென்று சொல்லி முசியே கில்லியார் தானப்பமுதலி நான்தான் சின்னதுரை முசியே லெகு வகையரு வீராசெட்டிகூட ஐயாயிரம் வராகன் மட்டுக்கும் அகப்பட்டது அதிலே மூவாயிரம் விராகன் ஆறு பேர் போயிண்டா கையிலே கொடுத்து ஒரு சாற்சாந்தும் முப்பது சிப்பாய்களும் கூட்டக்கூட்டி முசியே தொத்தேல் வசம் ஒப்பிக்கச்சொல்லியும் முசியே தொத்தேலே சந்தாசாயபுக்கு கொடுத்து சந்தாசாயபு ரசீதுவாங்கி அனுப்பச்சொல்லியும் காகிதமெழுதிக்கொடுத்து அனுப்பிவித்தார்.

சந்தாசாயபு முத்தசத்தி ருசோபண்டிதனும் மகம்மது ராசா சாயபு யென்கிறவனும் சந்தாசாயபு காகிதமொன்றும் மோரூேபண்டிதன் காகிதமொன்றும் காசிதாயிம் காகிதமொன்றும் யிதுகள் கொண்டு வந்து கொடுத்து அவர்கள் சொன்ன சேதி யென்னவென்றுல்: மோரூேபண்டிதர் சயிது லசுக்கர்கான் சொன்ன சேதி சந்தாசாயபுக்கு ஆற்காடு சுபா கொடுக்கிறதுக்கு நியாயமுண்டு— ஏனென்றுல் சாதத்துல்லாகான் நாள் முதல் நாற்பது வருஷமாய் சுபாவாண்டு யிந்த சுபா முன்னிலேயாய் சிவன் கூட கொடுத்து யிருக்கிறபடியினலே சந்தாசாயபுக்கு ஆற்காடு கொடுக்கிறதற்கு நியாயந்தான் இல்லாமல் நீங்கள் கைபிடித்து அன்வற்திகானே வெட்டிப் போட்டு இவரை சுபாவுக்கு நிஷ்கருஷை பண்ணினபடியினலே இவருக்கு சுபா கருரு ஆனலே அல்லாமல் உங்களுக்கு சம்மதியில்லேயே அதைத் தொட்டு உங்கள் ருசிவைக்கவேண்டி சந்தாசாயபுக்கு ஆற்காட்டு சுபா கொடுக்கிறோமென்று நிஷ்கருஷை பண்ணினேம் முசபர் சங்கு காரியம் வெகு சம்பமாயிருக்கிறது. ஆனபடியினலே இதாயித்து மொகதின்கான் பயிர் புணுகு கச்சற் யெல்லாம் மேலண்டை பாரிசமிருந்ததெல்லாம் வடபாரிசம் போய் சண்டாபோட்டு அங்கே போய்ச்சேர்ந்தது யென்று கபுறு வந்தது. இங்கிலீசுக்காரர் முன் யெழுதினதுக்கு பதிலுத்தரம் யெழுதினதில் யெங்கள் மனுஷர் நாசறுசங்கு அண்டைக்குப்போனர்கள் யென்றும் உங்கள் காரியம் வேணுமானல் அவர்களே பேசி சமாதானம் பண்ணிப்போடுகிறேனென்று யெழுதினர்களே அல்லாமல் முன் தேவனும் பட்டணம்சீர்மை வெள்ளேக்கொடி போட்டிருந்ததற்கு சாதகமெழுதினதுக்கும் நீங்கள் நாங்கள் மேலுபோட்டுக்கொண்டு நடத்துகிற காரியங்களுக்கு நீங்கள் நடத்துரதுயுத்தமல்லவென்றும் தஞ்சாவூர் காரியம் நீங்கள் துவக்கிநடத்துகிறபோது முசியே தும்மாவுக்கு காரைக்கால் கொடுக்கிறபோது சண்டையானல் மத்தத்துபண்ண உடம்படிக்கை யெழுதிக்கொடுத்திருந்தாலும் நீங்கள் கைபிட்

டத்திற்கு நாங்கள் உதவி பண்ணுகிறது அல்லவென்று நினைத்ததினலே உங்களுக்கு சீக்கிரமாய் தீர்ந்துதேயல்லாமல் யில்லாமல் போனல் தீரத்தக்க தில்லேயே அன்வர்திகானப்படியுமல்ல எங்களுக்கு பிறதானம் சத்துரு அன்வர்த்திகானுனபடியினலே நாங்களவனைக்கொன்றதும் சந்தா சாயபை அந்த இடத்துக்கு வைத்தோம் அப்படிப்பட்ட காரியத்திலே நீங்கள் வூராது ஞாயமல்லவே. அல்லவென்று நம்முடைய சீர்மை ஞாயம் நம்முடைய ராசாக்கள் மரியாதை தெரிஞ்சிருந்தும் நீங்களிப்படி நடப்பித்ததினலே அது எதிரிகளுக்கு வழிகாட்டினப்போலேயிருக்குமென்றும் இதன்பேரிலே நன்றாய் யோசனை பண்ணிக்கொள்ளச்சொல்லி எழுதினதுக்கு அவர்கள் எங்கள் மனுஷர் நாசறு சங்கண்டைக்குப் போகிறவர்கள் உங்கள் பேச்சும் சமாதானம் பண்ணிப் போடுவிக்கத்தக்கதாக செய்விக்கிறோமென்றெழுதினது சாராயக் குடித்த வெறியின்பேரிலே எழுதினர்களோ, புத்திதான் திரும்பிப்போச்சோ என்றும் ஆச்சரியப் பட்டுக்கொண்டு என்னுடனே சொன்னர். பகலைக்கு மேலாய் ராசோ பண்டிதன், ரசாசாயபு என்றொருத்தன் ரெண்டுபேர்களும் சந்தாசாயபு காகிதமும் மோரோ பண்டிதன் காசிதாயும் காகிதமும் கொண்டு வந்தார்கள். பதில் ரெண்டாயிரம் வராகன் அனுப்பினதும் காகிதமனுப்பி தண்டுக்கு அனுப்பினர்.

இற்றைநாள் தண்டு மொக்காம் பண்ணச்சொல்லியெழுதினபடியினலே லசுக்கர்மொக்காம்......................

**சுக்கில ஞூ பங்குனி மீ 15 உ க்கு 1750 ஆ மார்ச்சு மீ 24 உ அங்காரகவாரம்**

இற்றைநாள் பனிரெண்டுமணிக்கு இதாயித்து மொகதீன்கான் காகிதமொன்றும் சந்தாசாயபு காகிதமொன்றும் வந்தது. இதாயத்து மொகதீன் கான் காகிதத்திலே நீங்கள் மொக்காம் பண்ணச்சொன்னதாய் முசியே தொத்தேல் மொக்காம் பண்ணினர் இந்தவேளை மொக்காம் பண்ணலாகாதென்றும் எதிராளிகள் பயந்து கலந்துயிருக்கிறவேளையிலே நாம் போய் சண்டை கொடுக்கவே சின்னபின்னமாய் ஓடிப்போம் என்றும் மகம்மது ராசா யென்கிறவன் என் லசுக்கரிலே வெகுநாளிருந்தான் அவன் வந்து மெத்த அபத்தக்காரன் என்றும் அவன் வந்து உங்களுடனே சொன்னபேச்சு மெய்யென்று சல்லூக்காய் நடக்கும் என்று யோசனை பண்ணி மொக்காம் பண்ணச்சொல்லி யெழுதினது நன்றாய்க்காணவில்லை, இப்பவும் கூச்சு பண்ணச் சொல்லி எழுதியனுப்புவிக்கச் சொல்லியும் சந்தாசாயபு காகிதம் மதில்மேல் பூனைச்சாடையாயும் யெழுதியிருந்தது. அது பார்த்துக்கொண்டு துரை அப்போதானே பதில் காகிதமெழுதச்சொன்னது. மகம்மது ராசா வந்து மோரோ பண்டிதன் காசிதாயும் காகிதமும் கொண்டு வந்தபடியினலே........

.................... சாயங்காலம் மறுபடி முசியே தொத்தேல் காகிதமும் சந்தாசாயபு காகிதமும் இதாயத்து மொகதீன்கான் காகிதமும் வந்தது பகல் வந்த சாடைப்படிக்கித்தானே வந்தது. முசியே தொத்தேலுக்கு மாத் திரம் மருட்டியர் தண்டில் நாளைபதினம் கூச்சு பண்ணி நடக்கச்சொல்லி எழுதினார்.

ராத்திரிபத்து மணி வேளைக்கு முசியே தொத்தேலுது. ஒரு காகிதம் வந்தது. மருட்டியர் வந்து சண்டைபோட்டார்களென்று எழுதி வந்தது. பதினுத்தாம் நாளைபத்தினம் கூச்சுப்பண்ணச் சொல்லி காகிதம் பத்து மணிக்கு அனுப்பிவித்தார்.

திண்டிவனத்துக்கு இருபது சிப்பாய்கள் பத்து சட்டைக்காரர் நம் முடைய சேவுகர் இருபது பேர். ஆக 50 பேர் போனார்கள். ராத்திரி பனி ரெண்டு மணிக்கு முசியே தொத்தேல் காகிதம் வந்தது.

**சுக்கில ௵ பங்குனி மீ 17 உ க்கு 1750 ஆ மார்ச்சு மீ 26 உ குருவாரம்**

(காசு பெருநாள்). இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் அழைப் பித்து லசுக்கருக்கு அரிசிவகையறு றல்து அனுப்பவேணும் வெளிமாட்டிலே பிருதாறு எருது முஸ்தீதுபண்ணச்சொல்லி சொல்லிட்போட்டு கோயிலுக்கு பூசைக்குப் போனார்கள். அப்பால் கோவிலுக்குப் போய் வர பத்து மணி யாச்சுது இதிலே முசியே தொத்தேல் காகிதம் வந்ததிலே மேஸ்தர் பிளேயர் நாசறுசங்குக்கு ஒரு காகிதமும் சான் நவாசுகானுக்கு ஒரு காகிதமும் அன்வர்த்திகானுக்கு பாதர் பேருக்கு ஒரு காகிதமும் கெரிசிலே எழுதி அப்பால் நாசற்சங்கு லசுக்கரிலே யிருக்கிற மேஸ்தர் கோபு யென்கிறவன் பேருக்கு இங்கிலீஷிலே ஒரு காகிதமும் எழுதி ஒட்டகக்காரன் கையிலே கொடுத்து அனுப்பினது. அந்த ஒட்டகக்காரன் வழிதப்பி இதாயித்து மொகதீன்கான் டேருவிலே வந்து அகப்பட்டானென்றும் அந்தக் காகிதம் படித்துப்பார்த்த விடத்திலே நாளையதினம் நீங்கள் சத்துருக்களு டனே சண்டை கொடுக்கிறதாய் கேழ்விப்பட்டோம். நாளையத்தினம் சண்டை கொடுக்கிறதை மொகப்பு பண்ணினால் மேஸ்தர் லோரேன்சு **(Major Lawrence)** யென்கிற மயோராயிருக்கிறான் அவன் மெத்த கெட்டிக்காரன் வெகு சண்டையிலே இருந்து ஜெயங்கொண்டவன். பெரிய மனுஷன் தளதந்திரம் அறிஞ்சவன் அவனை நாளைக்கு அனுப்பிவிக்கிறோம். அவன் வந்து சேர்ந்த உடனே நீங்கள் சண்டை பண்ண யெத்தினம் பண்ண லாம அப்படி யெத்தனம் பண்ணினால் சத்துருக்களை ஜெயிக்கலாமென்று எழுதியிருந்தது. அந்த மூனு பாரிசிக்காகிதத்திலேயும் மேஸ்தர் கோபுக்கு எழுதின காகிதத்தில் மேஸ்தர் லோரேன்சு மேசரை அனுப்பிவித்தோம். அவன் சொல்லுகிறபடிக்கு நீயும் அவனுமிருந்து நடப்பிச்சுக்கொள்ளச் சொல்லி எழுதியிருந்ததாயும் மேஸ்தர் லோரேன்சும், ஐனூறு சொல்

தாதுகளும், ஆயிரம் ரெண்டாயிரம் சிப்பாயிகளும் இருபத்துநாலு ராத்தல் குண்டு பீரங்கியுமாக எட்டு பீரங்கியும், பதினெட்டு ருத்தல் குண்டு ஓடுகிற பீரங்கி எட்டும் இழுத்துக்கொண்டு மாபூசுகானும் கூட அவர்களை முஸ்தீது பண்ணி நாசர்சங்குக்கு கொடுக்கவேணுமென்று யிருந்த சகலாத்துக் கூடாரம் பின்னையும் அதிசெயமான தினுசுகள் கூட பிடித்துக்கொண்டு பயணம் புறப்பட்டு வாராதாய் சேதிவந்ததென்று யெழுதினன். அந்தக் காகிதம் துரையவர்கள் பார்த்துக்கொண்டு யென்னை அழைப்பித்து மேலே யெழுதப்பட்ட வயணமும் சொல்லி ஒட்டகக்காரன் வழிதப்பி வருவானுவென்று கேட்டார். ஒட்டகக்காரன் சாராயங் குடிக்கிறது மிச்சம் அப்பாலும் ராத்திரி காலத்திலே புறப்பட்டபடியினலே வழிதப்பியிருந்தாலும் யிருப்பார்களென்று சொன்னதற்கு அப்படி என் புத்திக்கேற்க தோணயில்லை. அவன் மோசம் பண்ண நினைத்து யிந்த காகிதங்களை பிறப்பித்து வழிதப்பிவந்ததாய் போலேவந்து இதாயத்து மொகதீன்கான் கூடாரத்திலே செவ்வையாய்வந்து அங்கேநின்று ஆர் கூடாரமென்றுப்போலேயும் முசபர்சங்கு தென்றுப்போலேயும் அதன்பேரிலே அந்தக் காகிதங்களைப் பார்த்தாப்போலேயும் அதிலே யெழுதியிருந்த வயணமும் முன் அந்தப்பக்கத்திலே யெழுதியிருக்கிறபடிக்கு யெழுதியிருந்ததைப் பார்த்தால் யிவர்களுக்கு மனதுக்கு அச்சம் தோத்தும் இவர்கள் சண்டைக்குவாரது மொகப்பு பண்ணுவார்களொன்று ஒருயோசனை பண்ணி யெழுதினதாய் தோணுதென்று சொன்னர் அதற்கு நான் சொன்னது மெய்தான் அப்படி மோசம் பண்ணுகிறதுண்டு ஆனுலிதிலே பெகுடம்பமாய் எழுதியிருக்கவில்லை. எப்படியென்றல் நாங்கள் அனுப்புகிறோமென்றதிலே கொஞ்சம் பேரையும்கூட்டி மேஸ்தர்லோரென்சையும் கூட்டிஅனுப்பிவிக்கிறோமென்று அல்லோ யெழுதியிருக்கிறது. ஆனபடியினலே மெய்யாயிருக்கும் யென்றுப்போலேயும் தோத்துது. இதல்லாமல் இங்கிலீசுக் காரருக்கும் உங்களுக்கும் சமாதானமாயிருக்கிற பேச்சு அவர்கள் தாங்கள் பிறதிஷ்டமாயிருந்து சண்டை பண்ணப்போகாதென்றும் பரஸ்பரமாய் நடத்தவேணுமென்றும் இருக்கிறவர்கள் தங்கள் தஸ்தாவேசு சண்டை அவர்கள் கொடுக்கிறதாயிருக்கிறதை நிறுத்தச் சொல்லியும் தாங்களனுப்புகிற மேஸ்தர் லோரேன்சும் (**Major Lowrence**) வந்த பிற்பாடு அவன் யெப்படி சொல்லுகிறுனே அப்படிக் கேட்டு சண்டை கொடுக்கச்சொல்லி யெழுதினல் யிவர்கள்தான் உங்களுக்கு பிரதிஷ்ஷ சத்துருவாச்சே அப்படிப்பட்ட தஸ்தாவேசு உங்கள் கையிலேதானே அகப்படத்தக்கதாக அவர்களாய்த் தானே யோசனை அனுப்பினல் சண்டை உங்களுக்கும் அவர்களுக்கும் திக்கிலோரரிட்டாப்போலே ஆச்சுதே இது ராசாக்கள் கூட வைத்து பார்க்கிற காரியத்துக்கு கும்பினீயார் மனுஷனுக ஒரு ரேவிலே பெரியவனுக யித்தனை பெரிய யோக்கியத்துக்கு ஒட்டுவானு ஒட்டமாட்டானென்றுப் போலே தோந்துது. ஒருத்தர்மனதை ஒருத்தர் அறியப்போமா

தான்தான் சுகப்படவேணு மென்று நினைபாதவனொருத்தனுமில்லை. அப்படி யிருக்க தலை யேன் போக்கடித்துக்கொள்ளுகிறது முதலான பொல்லாத நடக்கைகளை என் நடத்துகிறார்கள். அதனாலே ஏன் கெட்டுப்போகிறார்கள் அப்படிப்போலே இவனுக்கு என்ன விபரீதமோ தோணி யிந்த காரியத்தை நடத்தினானோ தெரியாது யென்று இப்போ தேவனாம்பட்டணம் சீர்மை நம்முடைய கொடி போட்டு யிருந்தது. நம்முடைய வசமாயிருந்ததிலே தன் கொடி எப்படி போட்டுக்கொண்டான் ஏரோப்பியானுக்குள்ளே ஒரு கொடி போட்டயிடத்தில் மறுகொடி போடப்போகாதே அந்த நியாயம் தப்பி செய்த வனிப்படியும் ஒரு வேளை புத்திமயங்கி செய்தாலும் செய்வார்களென்று சொல்ல அதெல்லாம் அவன் வழி தப்பி வந்ததில்லை. அவர்கள் மோசம் பண்ண வேணுமென்று நினைத்து நடத்தினதாய் தோத்துது யென்றும் இவர்கள் சொலுநாது ஐனூறுபேர் வெள்ளைக்காரர் புறப்பட்டார்களென்று முசியே தொத்தேல் எழுதினது பொய்யோ மெய்யோ வென்று கேட்டார். அது மெய்தான் சென்னைப்பட்டணம் தேவனாம்பட்டணம் கூடலூர் நீவிக் கோட்டை முதலான யிடங்களிலே இருக்கிற வெள்ளைக்காரரெல்லாரும் கூட்டி ஐனூறுபேருண்டு அதிலே நூத்தன்பது வெள்ளைக்காரர்களும் மேஸ்தர் கோப்பும் பொம்பாய் சிப்பாய்களும், மாயே சிப்பாய்களும், திருச்சினாப்பள்ளிக்குப் போனாப்போலே அங்கே இருந்து நாசறுசங்கு லசுக்கருக்கு வந்து இருக்கிறார்கள். அல்லவென்று அனுப்பினால் யின்னம் நூறு பேர் வெள்ளைக்காரர்கள் தானனுப்புகிறான் அப்புறம் அனுப்புகிறதற்கு அடமானம் யெங்கே ஆனாலுங்களுடனே நான் முன் சொன்ன அப்துல்சலீல் நூறு பேர்களுக்கு அதமுண்டு சட்டைக்காரர்களும், இருநூறு முன்னூறுபேர் துலுக்கும் கர்னாட்டகத்தாருமாய் கூட்டி அவர்களுக்கெல்லாம் இங்கிலீசுக்காரர் கையில் இங்கிலீசு துப்பாக்கிகள் வாங்கிக்கொடுத்து ஆறு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கி நாலு பீரங்கிகள் கூடவைத்து யிருக்கிறான். அது மாபூசுகான் அண்டைக்கு அனுப்பியிருக்கிறானென்றும், இருபது முப்பது பேர் வெள்ளைக்காரர் யிஸ்திரஞ்சோர்கள் உத்தியோகமில்லாமலிருந்தவர்களுக்கும் யிவன் சம்பளம் நிர்ணயம் பண்ணி வைத்திருக்கிறதாய் முன்னே கேழ்விப்பட்ட சேதி உங்களுடனே சொல்லியிருந்தேனே அந்தப்படி.........

சுக்கில ௵ பங்குனி ௴ 19 உ க்கு 1750 மார்ச்சு ௴ 28 உ சனிவாரம்

இற்றைனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு நயினார் சேவுகன் முத்து என்கிறவன் முசியே தொத்தேல் காகிதமொன்று துரையவர்கள் பேருக்கும் யென் பேருக்கும் வக்கீல் சுப்பய்யன் காகிதமொன்றும் கொண்டுவந்து கொடுத்து அவன் துரையவர்களுடனே சொன்ன சேதி யென்ன வென்றால்: நேத்து பண்ணைக்குப்பத்திலிருந்து தண்டுபுறப்பட்டு ரெண்டு மூனுநாழிவழி போயங்கே செஞ்சு ஆற்று ஓரம் கும்பளமாத்தூர் என்று யிருக்கிறது..

அந்த ஊரிலேபோய் நம்முடைய பாளையம் யிறங்கினதாயும் அதிலே கூடாரம் அதுகளெல்லாம் போட்டான். உடனே மூசியே தொத்தேல் நாசறு சங்கு விழுப்புறத்திலிறங்கி யிருக்கிறது திட்டமாய்ப் பார்த்துவரச் சொன்னதின்பேரிலே முச்சிய நம்புலு போய் பார்த்துவந்து சொன்னசேதி மூசியே தொத்தேல் துரைக்கு யெழுதினதும் வக்கீல் சுப்பய்யன் பேருக்கு எழுதின காகிதத்திலே யெழுதின வயணம்படிக்கு யெழுதினது முச்சிய நம்புலு நாசறுசங்கு லசுக்கர் பார்த்துவந்து மூசியே தொத்தேல் சந்தாசாயபு முதலானபேருக்குச் சொன்னபடிக்கு: விழுப்புரம் கோலியனூர் மத்தியே நாசறுசங்கு நிசாமுக்கவுலர் யிறங்கியிருக்கிறாரென்றும் அக்காடி கோலியனூர் யென்றும் லசுக்கரிலே நாசறுசங்கு உடனே கூடியிருக்கிற வயணம் மீருசத்து, சம்பந்துருயன், மாபூசுகான், திருச்சினுப்பள்ளி சுபா அன்வற்திகான் குமாரன் மமுதல்லிகான் முன்வற்திகான் கயிருத்தீகான் அப்துல் சலீல் வெள்ளைக்கார இங்கிலீசு சொல்தாதுகள் 200. மீஸ்தீசுக்காரர் சொலுதாதுகள் 100. (Mestees) சட்டைக்காரர் சொலுதாதுகள் 200. சிப்பாய்கள் 400. கர்நாடகத்து சேவுகர் 600 இது முதலானது தேவனும்பட்டணத்தார் ராணுவம் வந்து யிருக்குதென்றும் பனிரெண்டு சின்ன பீரங்கியும் ரெண்டு பெரிய பீரங்கியும் யிதுக்கு கொமாந்தாமாய் மேஸ்தர் கோப்புவந்து கொமாந்தரிடுகிறார் யென்று இவன் கீழே ஒபிசியால்மார் அஞ்சாறு பேர்கள் கூடவந்து யிருக்கிறார்களென்றும் யிதல்லாமல் திருச்சினுப்பள்ளி சீர்மை கள்ளர் மூவாயிரம்பேர் மமுதல்லிகான் அழைத்து வந்தவர்களையும் மாபூசுகான் கூடாரத்தண்டையிலே யிருக்கிறார்களென்றும் அப்பால் மாபூசுகான் கூடாரத்தண்டையிலேயிருக்கிற சவுக்கி வயணம் இங்கிலீசு வெள்ளைக்காரர் சொலுதாதுகள் பேர்கள் 50. பீரங்கி நாலும் தேவனும் பட்டணமிருந்துவந்த வெள்ளைக்காரர் சட்டைக்காரர் சிப்பாய்கள் வகையறு கூடாரம் 36 துரைத்தனத்தார் கூடாரம் 2 இதுக்குத்தக்க மருந்து குண்டுகள் மாபூசுகான் மமுதல்லிகான் கூடாரம் சுத்திலும் ராச்சூர் பாணங்களும் சேசாலுகளும் யிதுமுதலானது யிடமில்லாமல் படிக்கு நெருக்கிக்கொண்டிருக்கிறார்களென்றும் தண்டுக்கு மேற்கே நாசறு சங்குடைய தோப்புக்கானு அங்கங்கேயிருக்கிறதும் மீர்சத்து அந்த பாரிசமாய்தானே யிருக்கிறான். யாடந்த யென்கிற கிராமத்திலே (Yadandai) மராட்டியர் பவுன்சும் ரொம்பயிருக்கிறது தண்டுக்கு வடபுரத்திலே நாசறுசங்கு தோப்புகானு அங்கேயும் சிறிதுயிருக்கிறது அவுதா அம்பாரிகள் யிருக்கிற பானைகள் நூத்தன்பது யிருக்கிறது. கடப்பை கந்தனூர் ராச்சூர் முதலான சருதாறுகள் ஒவ்வொருத்தனண்டையிலே ரெண்டாயிரம் குதிரையுடனே யிருக்கிறார்கள் கிழக்கு புறத்திலே நூறு பீரங்கியும் வெள்ளைக்காரரும் கூடவந்து யிருக்கிறார்கள் நிம்பாளசேவுகன் சந்திரேசன் ரகோசி முராரிறாவு ருமச்சந்திரராவ் அனுமந்தராவு

மோரூே பண்டிதர் காசிதாயிம் யிவர்களெல்லாரும் அங்கங்கே சவுக்கியமாய் நம்முடைய தண்டு முதல் கொண்டு நாசருசங்கு தண்டு வரைக்கும் யிருக்கிறுர்கள் யிதல்லாமல் நாசருசங்கு கூடாரம் சுத்திலும் ஒட்டைகள் பேரிலே ராச்சூர் பாணங்களும் சேசாலும் மகாசபுருசந்தியா யிருக்கிறுர்கள் முகல்நாரு கூடாரங்கள் (**Royal Tents**) ஒரு வீதியா யிருக்கிறது சில்லரை பசாறுகள் (**Bazaars**) அபரிமிதமாயிருக்கிறது அவர்கள் தண்டிலே ரூபாய் ஒன்றுக்குப் பணிரெண்டு சேர் அரிசியும் கொள்ளு பதினெட்டு சேரும் நெய் பக்கா ஒன்றே முக்கால் சேரும் கோதும்பை கடலே பத்துசேர் வீதமும் விற்கிறது நாசரு சங்கு தண்டிலே யிருக்கிற யெருதுகள் சோத்துப்பாளையம் சில்லரைக் கடைகள் யெல்லாம் செஞ்சிக்கு அனுப்புவித்து முஸ்திப்பா யிருக்கிறுர்கள்.

காசா நாசருசங்கு தண்டு வடக்கு தெற்கு நாலு நாழிகை தூரமும் கிழக்கு மேற்கு ரெண்டரை நாழிகை தூரமும் யிறங்கியிருக்கிறது யென்றும் யிதுமுதலான சமாசாரங்கள் முச்சிய நம்புலு நாசரு சங்கு தண்டு போய்பார்த்துவந்து முசியே தொத்தேலுடனேயும் சந்நாசாயபுடனேயும் சொன்ஞன் யென்று வக்கீல் சுப்பய்யன் யெழுதியனுப்பிவித்தான்.

**சுக்கில ஞு பங்குனி மீ 20 உக்கு 1750 ஆ மார்ச்சு மீ 29 உ ஆதிவாரம்**

இற்றைநாள் காலத்தாலே துரையர்களழைந்தனுப்பிவித்து நேத்து ராத்திரி பகலேக்குமேலாக அவ்விடத்திலே சண்டை நடந்ததும் நடவாததும் தெரியவில்லேயே ஏதாகிலும் சேதி வந்ததாவென்று கேட்டார் சண்டை நடக்கயில்லேயென்று சேதி வந்துதென்று சொன்னேன் யார் வந்தார்கள் யென்று கேட்டார். வெளியிலே இதாயித்து மொகதின்கான் பயிர்புனுகு, சென்னபட்டணம் வாசற்படிக்கு அப்புரம் இறங்கியிருக்குதே அந்த மனுஷர்கள் இதாயித்து மொகதின்கான் லசுக்கருக்கு போயிருந்து நேத்து ராத்திரி சாமத்துக்கு பிற்பாடும் பொழுது விடியற்காலம் ஆறுமணிக்கு வந்தார்கள் கதவு திறந்தாப்போலே மனுஷர்களே அனுப்பிவித்தேன் அவர்களே விசாரித்து வந்தவர்கள் சொன்ஞர்கள் யென்று சொன்னதுக்கு பரிச்சேதமா சண்டையே பண்ணவில்லேயா நேத்து தலேயாரிப்பயல் முத்து யென்கிறவன் சண்டை நடந்ததாய்ச் சொன்ஞனே என்றுர் எப்போதும் குஸ்து மாதுப்படிக்கு மராட்டியர் வந்து காண்பித்துக் கொண்டார்கள். இவர்கள் மூணு நாலு பீரங்கி சுட்டார்கள். அந்த மட்டுக்கும் ஓடிப்போய்விட்டார்கள். மறுபடி வரவில்லே. யாம் ராத்திரி கள்ளரானல் பத்து இருபது ராச்சூர் பாணம் கொளுத்திப் போட்டார்களாம் இவர்கள் ரெண்டொரு பீரங்கி சுட்டார்கள் அந்த மட்டிலே கள்ளர் ஓடிப்போய் விட்டார்கள். மறுபடி சுகமாய் லசுக்கரிலே இருக்கிறுர்கள் சண்டை யென்கிற நாமதேயமே இல்லே. மராட்டியர் லசுக்கரும் மொரூே பண்டிதர்

வகையறு நாசர்சங்கு லசுக்கரிலே இருக்கப்பட்டவர்கள் ஏழெட்டு ஆனையின் பேரிலே காண்பித்துக் கொண்டதுமல்லாமல் முன் வளவனூர் கோவியனூர் திழுப்புற மிந்த பிராந்தியங்களிலே இருந்த நாசர்சங்கு லசுக்கரில் ஆற்றோரமாய் விக்கிரவாண்டி அண்டையிலே போயிறங்கினதாய்ச் சொன்னார்கள் என்று சொன்னேன். ஆனால் சண்டையில்லையே நல்லது பாசுராமனுடனே சொல்லி அன்பது எருது அரிசி சாமான் அனுப்பு என்று சொல்லிப் போட்டு உடுத்திக்கொண்டு கோயிலுக்குப் போனார். அப்பால் நான் சின்ன பாசுராமனை அழைப்பித்து அன்பது எருது அரிசி சாமான் லசுக்கருக்கு அனுப்புவிக்கச்சொல்லி இதை லசுக்கரிலே கொண்டுபோய் சேர்த்து வாரத்துக்கு முப்பது சிப்பாய்களை புட்டனுடனே சொல்லி கூட்டி யனுப்பச் சொல்லி சொல்லிப்போட்டு நான் பாக்கு கிடங்குக்கு வாச்சே தியாகு சொன்னது துரையவர்கள் இந்த பாசுக்குருநாளிலே (**Maundy Thursday of Holy week**) இந்த சுமானுசாந்தூரிலே காசுபெருநாள் முதல் கொண்டு இன்றையதினம் நாலு நாளாகுதே இதிலே எப்போதும் பாவசங்கிர்த்தனம் பண்ணிக்கொள்ளுகிற வாடிக்கை இந்த வருஷ மிந்த நாசறுசங்கு வந்த கலாபத்து விசாரித்ததின் பேரிலே அதின்பேரிலே நினைப்பு கூட யில்லாமல் போச்சுது யென்று சொன்னான். அப்படியானால் எப்படி என்று கேட்டுப் போட்டு பாக்கு கிடங்கியே வந்தேன். நான் பாக்கு கிடங்கிலே யிருக்கச்சே சந்தா சாயபு அனுப்ப ஷை முத்தசத்தி சாமாறுயன் துரைபேருக்கு ஒரு காகிதமும், யென்பேருக்கு வொரு காகிதமும் கொண்டு வந்தார். அப்பாலவரை அழைத்துக்கொண்டு துரை வீட்டுக்குப் போகச்சே துரை கோயிலுக்குப் போய்வந்தார். இவரைப் பார்த்தவுடனே கபே குடித்து ஆனவுடனே யெழுந்திருந்து கிட்ட வந்து யெங்கு வந்தாய் என்று கேட்டார். காகிதத்தைக் கொடுத்தார். காகிதத்திலே சிப்பாய்கள் ரொம்ப தல்கா பண்ணுகிறார்கள் இன்னேரத்துக்கு எங்களுக்கு சாப்பாட்டுக்கு கொடுத்து எங்களைக் கொண்டு வேலை செய்வித்துக்கொள்ளவும் மற்ற சேதி எல்லாம் சாமாறுயன் சொல்லத்தெரியவருமென்று எழுதியிருந்தபடிக்கு துரையவர்களுடனே சொன்னதுக்கு அங்கே இருந்த முசியே கில்லியாரை அழைத்து பொன்விராகன் ரெண்டாயிரம் விராகன் கொண்டு வாச்சொல்லச்சொன்னார். அந்தப்படிக்கு ரெண்டாயிரம் விராகன் தன் துபாசி கையில் கொடுத்து துரையவர்கள் கணக்கு முத்தய்யன் கையில் கொடுக்கச் சொல்லி அனுப்பிவித்தான் அவன் கொண்டு வந்து முத்தய்யன் கையில் கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு துரைக்கு முசியே கில்லியார் ரெண்டாயிரம் பொன் விராகன் கொடுத்தனுப்பினனென்று சொன்னதுக்கு கொண்டு வாச்சொல்லி சாமாராயன் கையில் கொடுத்து என்னைப்பார்த்து சாமாராயன் கையில் ஒரு ரசீது ரெண்டாயிரம் விராகன் பூவராகன் சந்தாசாயபுக்கு செலுத்துகிறது முசியே தொத்தேல் மாரிபத்தில் கொண்டுபோய்க் கொடுக்கிறதென்று

ஒரு ரோசு வாங்கி தம்முடைய கணக்கு முத்தப்பன் கையில் கொடுக்கச் சொன்னார். அந்தப்படிக்கு சாமாராயன் கையில் ரெண்டாயிரம் வராகன் வாங்கிக்கொண்டு முசியே தொத்தேல் மாரிபத்திலே சந்தாசாயபுக்கு கொண்டுப்போய் செலுத்துகிறோமென்று ஒரு ரசீது எழுதிக்கொடுக்கச் சொல்லி வாங்கி முத்தப்பன் கையில் கொடுத்தேன். அப்பால் பதில் காகிதம் சந்தாசாயபுக்கு சாமாராயன் கையில் ரெண்டாயிரம் விராகன் கொடுத்தனுப்பிவித்தோம். அவர் கொண்டுவந்து முசியே தொத்தேல் கையில் கொடுப்பார். அவர் கையில் நீர் வாங்கிக்கொள்ளவும் யென்றும் தயிரியமாக யிருந்து சத்துருக்களை செயித்ததுக்கு மோபார்க்கு பாதி யெழுதியனுப்பச்சொல்லி எழுதியனுப்பு என்று சொன்னபடிக்கு எழுதி சாமாராயன் கையிலே கொடுத்தோம். அன்பது பொதி அரிசி லசுக்கருக்கு ரஸ்த்து கொண்டுபோகுது அத்துடனே கூட முப்பது சிப்பாய்கள் துப்பாக்கிகளையும் துப்பாக்கிக்காரர்கூட போகிறார்கள் சாயங்கால மவர்களுடனே கூட நீரும் இந்த விராகனை பிடித்துக்கொண்டு சாக்கிரதையாய்ப் போகச் சொன்னார். நல்லதென்று சொல்லி அனுப்பிவித்துக்கொண்டுபோனார். இதிலே முசியே தொத்தேல் காகிதம் வந்தது அதின்பேரிலே துரையவர்களுக்கு நேத்தைய தினம் சண்டையில்லாமல்போனது மெத்த சந்தோஷமாகத்தானே அப்பால் உற்சாகமாய்ப் பேசியிருந்து இங்கிலீசுக்காரர் இனிமேல் யென்னமாவார்கள். அவர்களை ஒருவேலை தேவனாம்பட்டணம் போக்கடித்துக்கொண்டாலும் போக்கடித்துக்கொள்ளுவார்கள் யென்று சொன்னார். அதெப்படியென்றால் மொபாரத்து சங்குக்கும் முசபர்சங்குக்கும் சீர்மை நிலைச்சால் அவர்கள் இங்கிலீசுக்காரர்கள் வியாபாரமிந்த ராச்சியத்திலே நடக்க வொட்டப்போகிறதில்லை. அப்பாலவர்கள் கொடிபறக்கிற பட்டணங்களையும் வாங்கிக்கொள்ளுவார்கள். ஆனபடியினாலே இங்கிலீசுக்காரர்களுக்கும் நல்லகாலமல்ல இப்போ நாசருசங்குடனே கூடியிருக்கிறயிந்தபிராந்தியத்திற்கு கில்லேதாரர்களுக்கும் அப்படித்தான் யென்று சொன்னார். அதற்கு நான் பொல்லாத காலத்திற்கு பொல்லாத புத்திதோணி அதினாலே அவர்களுக்கு சேதம் வருத்திவிக்கிறது சுவாமியுடைய கட்டளையல்லவா; ஆனபடியினாலே அவரவர்நடத்தைக்குத்தக்க அனுபவம் வருமென்று யிதைத்தானே ரெட்டித்து ரெட்டித்து ஆறேகணை அவறேகணையாய் வெகுநேரம் பேசியிருந்து அப்பால் படுத்துக்கொள்ளப்போனார்.

இற்றைனாள் பகலைக்கு மேலாக அன்பது பொதி அரிசியும் முப்பது சிப்பாய்களும் லசுக்கருக்குப் பயணம் போகச்சே சந்தாசாயபுனுடைய சாமாராயனும் நானும் அவர்கள் கூடப்போனோம். இந்த மோத்திகான் சித்தாராம் யென்கிறவன் யிங்கே அரிசி பருப்பு வகைபற சாமான்கள் வாங்குகிறான். அவனுக்கு நூத்தன்பது விராகன் கொடுத்தால் நானிந்த

விராகன் முசியே தொத்தேல் மாரிபத்திலே சந்தாசாயபுக்கு செலுத்தின உடனே வாங்கியனுப்புகிறேன் யென்று சொல்லிப்போட்டுப்போன சேதி கூட துரையவர்களுக்கு சாயங்காலம் அறிக்கைபண்ணிப்போட்டேன்.

**சுக்கில ஞு பங்குனி மீ 22 உக்கு 1750 ஆ மார்ச்சு மீ 31 உ அங்காரகவாரம்**

இற்றைநாள் காலத்தாலே துரையவர்கள் அழைப்பித்து முசியே தொத்தேல் காகிதம் வந்தது. அந்த காகிதத்திலே நாசறுசங்கு அண்டையி லிருந்து நேத்து ஐயாயிரங் குதிரைக்கு யெசமானொருத்தன் வந்தா னென்று நேத்தயதினம் யெழுதின காகிதத்திலே யெழுதினதேயல்லாமல் இன்றையதினம் யெழுதின காகிதத்திலே அந்தப் பிரசங்கமே எடுக்க வில்லை என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது அவ்விடத்திலே பிரசங்கங்கள் நடந்து தெற்கடையான சேதி யெழுதுவோமென்று இருக்கி றார்களோ என்னமோ தெரியாதென்று சொன்னதுக்கு வக்கீல் சுப்பய்யன் உன் பேருக்கு எழுதின காகிதமிதோயிருக்கிறது. அதைப்பார்த்து சொல்லென்று சொன்னார் அந்தக் காகிதம் பார்த்தவிடத்திலே நாசர்சங்கு அண்டையிலி ருந்து வந்த பெரியமனுஷன் மகம்மது அன்வருகான் பகதூர் கசான்சி யென் கிறவன் நாசர்சங்குடைய பவுன்சுக்கும் தக்கனுக்கும் பக்குசுயென்றும் அவர் ஆனையினுடைய அம்பாரியின் பேரிலே வந்தார். வந்து நேத்து 21-உ) சோமவாரம் பத்துமணிக்கு வந்தார் வந்தவர் முசபர்சங்குடனே பேசியி ருந்து ராத்திரி பத்து நாழிகைக்குப் புறப்பட்டுப் போகச்சே முசபர்சங்கு முன்சி சுக்காமால் (**Munshi Sukamal**) யென்கிறவனை முன்னும் நாசர் சங்கு லசுக்கருக்குப் போய் இப்போவந்த பக்குசு அன்வர்கான் வரச்சே கூடவந்தார் இப்பவும் கூடத்தானே அனுப்பிவித்தார். அவர்கள் பத்து நாழிகைக்குப் போனார்கள். சந்தா சாயபு அவர் கூடாரத்திலே தானே இருந்தார். அவர் வந்துபேசிப் போனகாரியம் சமாதான மென்றும் யிதுக்கு தாம் நாசர்சங்கு சம்மதித்தால் சண்டையில்லை யென்றும் நாசர் சங்கு சம்மதியாவிட்டால் சண்டைக்கு யெத்தனம் பண்ணி நடப் பார்களென்றும் மேன்பேச்சு மெத்த சுருக்கிலேயிருக்குதென்றும் யெழுதி யிருந்தது இந்தசேதி சொன்னவுடனே துரையிருந்து பார்த்தாயா சமாதா னத்துக்கு வந்தாப்போலே சந்தா சாயபையும் அல்லாமல் முசியே தொத்தே லையும் யல்லாமல் முசபர் சங்கு தானே பேசியனுப்பிவிட்டான். நல்லது யிந்தக் கச்சேறுக்கு நன்றாய்த் தோற்றத்தக்கதாக யெழுதியனுப்புகிறேன். அப்போதே மறந்துபோய்விட்டார்கள் துலுக்கருடைய சாடையே அப்படி காரியம் வந்தாலப்போ பஞ்சைப்பாட்டுப்பாடி காலிலேகூட விழுகிறதும் சுமையம் தாண்டினால்ப்போ அவர்கள் பேசுகிற பெடாயும் மனுஷர்களை

பெண்ணும்ல் நடக்கிறதற்கும் துலுக்கர் சாதியைப்போலே பின்னேயொரு சாதியுமில்லே யென்ருர். மெய்தான் துலுக்கர் சாதியிலே மெத்த விஸ்தாரம் மற்ற சாதியிலே யெல்லாம் கொஞ்ச நஞ்சம் உண்டாயிருக்கும் யென்று சொன்னதற்கு மெய்தானென்று சொல்லிப்போட்டு கோயிலுக்குப் பூசை கேழ்க்கப்போனுர். அவர் பூசைகேட்டு யெட்டு அடிந்த உடனே வந்து கபே குடித்து ஆனவுடனே யெபூந்து முசியே தொத்தேலுக்கு காகிதமெழுத வேணுமென்று காம்பிருவிலே போனவுடனே யிதிலே கும்பளம் மாத்துராண்டையிலே யிறங்கியிருக்கிற நம்முடைய அறமாதிலிருந்தும் காகிதங்கள் (Camp) வந்தது. சந்தாசாயபு காகிதத்தின் பேரிலே முசியே தொத்தேல் முத்திரை போட்டிருந்தது. நபாபு முசபர்சங்கு காகிதம் துரைக்கொன்றும் முசபர் சங்கு பெண்சாதிக்கொன்றும் அவர் தாயாருக்கொன்றும் அவர் வீட்டு தயினுத்து ஆசிபாசல்கான் யென்கிறவருக்கொன்றும் வந்தது. முசபர் சங்கு வீட்டுக்கு அனுப்பின காகிதங்களை வீட்டுக்கு அனுப்பிவித்து துரைக்கு வந்த காகிதத்தைப்படித்து அதிலேயிருந்த மத்தலபு துரைக்குச் சொன்னது. இன்றையதினம் பத்து நாழிகைக்கு நாசறுசங்கு லசுக்கரி லிருந்து மத்தத்துக்குயெல்லாம் லக்குசியாயிருக்கப்பட்ட மகம்மது அன்வற்திகான் என்கிற பெரிய மனுஷரும் அவருடனே கூட பின்னையும் வாரத்தக்க பெரிய மனுஷர்களும் சமாதான பேச்சு பேச வந்தார்கள். அதற்கு நான் முசியே தொத்தேலுக்கு சொல்லியனுப்பிவித்தேன். அவர் நம்முடைய பாருதியாய் முசியே புசியே அனுப்பிவித்தார் அவரையும் வைத்துக் கொண்டு சந்தாசாயபையும் வைத்துக்கொண்டு அவர்கள் சொல்லத்தக்க உத்திரமெல்லாம் சொல்லச்சொல்லி கேட்டு அப்பால் அதற்கு நான் சொல்லத்தக்க உத்திரமெல்லாம் வெகுதிட்டமாய் நடக்கவேண்டிய வயணமாம் படியே சொல்லியனுப்பிவித்தேன் அந்தப்படிக்கு சமாதானமானுர்களா அவர்களுக்கும் நல்லது அல்லவென்று அவர்கள் சமாதானத்துக்கு வராமல் போனுல் சுவாமியுடைய கடாட்சம் பரிபூரணமாயிருக்கிறபடியினுலேயும் தங்கள் தயவு பரிபூரணமாயிருக்கிறபடியினுலேயும் சத்துருக்களை செயித்து செயங்கொள்ளவேண்டும் அந்தப்படியே செயங்கொள்ளவே போகிறேம். இதுகளுக்கெல்லாம் தங்கள் ஒதவி ஒத்தாசை பட்சம் பூரணமாயிருக்கச்சே யெப்படியும் செயம் நம்முடையதென்று கெட்டியாய் யெண்ணவேண்டிய தென்று இதுமுதலான சேதி பயாலாறுய் சந்தாசாயபு முசியே தொத்தேலும் யெழுதுகிற காகிதத்திலேயும் உங்களுக்கு இவ்விடத்திலே நடந்த சங்கதி விசிதமாய்த் தெரியவருமென்று யெழுதியிருக்குதென்று துரையவர்களுக்கு சொன்னதின்பேரிலே சந்தாசாயபு யெழுதின காகிதம் படித்து சொல்லென்று துரையவர்கள் சொல்ல சந்தாசாயபு காகிதம் படித்து சொன்ன வயணம்:

இந்த துலுக்க மீ 21 உ. ரோமவாரம் நக்கன் பக்குசியாயிருக்கிற மகம்மது அன்வற்திகான் யென்கிறவர் பெரியமனுஷர் நிசாமுத்தவுலா சமா தானம் பேசுகிறதற்காக அனுப்ப அவர் முசபர்சங்கு அண்டைக்குவா அவருக்கும் யிவருக்கு மிலாகந்தாய் ஒருத்தருக்கொருத்தர் சொன்னதற்கு வயணம்:

மகம்மது அன்வற்கான் பக்குசி சொன்னது: நிசாமுத்தவுலா சொல்லச்சொன்னது தம்முடைய பயங்கரமான குதிரைகளுடைய பவுன்சும் சிப்பாய்களுடைய பவுன்சும் பீரங்கி முதலான பவுன்சும் மருந்து சாமான் விஸ்தாரங்களும் அப்பால் அந்தந்த சுபாதார்கள் அவர்களுடைய பவுன் சுடனே வந்திருக்கிறதும் அந்தந்த சீர்மை பாளையக்காரர் பவுன்சுகள் அவரவர் தங்கள் பவுன்சுடனே வந்துயிருக்கிறது இப்படி பயங்கரமான பவுன்சுடனே நான் வந்தாலும் நீ யெனக்கு பிள்ளையாளுலென்ன யென் உடப்பிறந்தாள் பிள்ளையாளுலென்ன பேதகமில்லையே யென் வயற்றிலே பிறந்த யென் ரத்தந்தானே நான் கொல்ல நினைக்கிறது எனக்கு சுறுவாந்துமாளுக மனது வரவில்லை. என்னை நான் கொல்ல வேண்டு மென்று நினைப்பேனு அப்படிப்போலே யென் ரத்தத்துக்கு யாதொரு பொல்லாப்பு நினைக்க சம்மதியில்லாதபடியினாலே உனக்குப் புத்தி சொல்லி அனுப்பினதென்ன வென்றால் உமக்கும் அந்த உம்மாலே மனுஷனுக்கப் பட்ட சந்தாசாயபுக்கும், அவரவருக்கு சாகிறு சந்தோஷமாம்படியே கொடுக்கிறோமென்று அப்பால் புதுச்சேரி கொவர்னதோர் கையில் கடன் வாங்கி இருக்கிறது எத்தனை லட்சம் ரூபாயோ அத்தனையும் ரொக்கத்திலே கொடுத்துவிடுகிறோமென்றும், உம்முடைய சிப்பாய்கள் சுவார்களுக்கு நீர் யிந்த மட்டுக்கும் சம்பளம் யெத்தனை லட்சம் ரூபாய் கொடுக்கவேணுமோ அதுகளெல்லாம் கொடுத்து தீர்த்துப்போடுகிறோமென்றும், சத்தியமென் றும் இந்தப்படிக்கு சமாதானம் பேசவந்த பக்குசி மகம்மது அன்வற்கான் சொன்னதுக்கு இதாயிந்து மொகதீன்கான் பதிலுத்திரம் சொன்னது.

அடோனி (Adoni) முதலான என்னுடைய சீர்மை யெனக்கும், ஆற்காட்டு சுபா சந்தா சாயபுக்கும், நாங்கள் பட்ட கடன்களை கொடுத்துவிடுகிறதும் இதுகளெல்லாம் புதுச்சேரி கொவர்னதோருக்குச் சம்மதியானால் நாங்கள் தீர்த்துக்கொள்ளுகிறதென்றும், அவருக்குச் சம்மதி இல்லாவிட்டால் இந்த உடன்படிக்கை கவையில்லை என்றும் பதிலுத்திரஞ் சொல்ல அதற்கு அவன் நாசறுசங்குடனே சொல்லி நாளைக்கு பதிலுத்தரஞ் சொல்லி அனுப்புகிறோமென்றுமென்றும் சொல்லிப்போனார். நாம் நினைத்த படிக்கும், அவனுக்குக் கொடுத்த கடனுக்கும், சிப்பாய்கள் சுவார்கள் சம்பளம் பாக்கிக்கூட அவன்தானே கொடுக்கிறோமென்றால் இதைவிட நாம்

யெண்ணி சண்டை பண்ணி வரப்போகிற ஆகாரியமென்ன ஆனபடியினாலே சுவாமியுடைய பரிபூரண கடாட்சத்தினாலேயும் தாங்கள் எங்களைக் கைப் பிடித்ததினாலேயும் சமையம் நம்முடையதாயிருக்கிறபடியினாலே இதை விட வேறே சந்தியில்லை யென்று முசியே தொத்தேலுடனே சொல்லி நாளையதினம் அவர்கள் உத்திரவு வருந்தனிலும் மொக்காம் பண்ணச் சொல்லச்சொன்னோம். அவரும் இந்த காலசவாபுக்கு தம்முடைய பாருத் தியாய் முசியே புசுயை அனுப்பியிருந்தார். அவர் கூட யிருக்கச்சே இந்த காலசவாபு நடந்து அப்பால் ராத்திரி பத்து நாழிகைக்கு வந்த பக்குசி நாசறு சங்குக்கு சொல்லி இதற்குத்திரம் நாளை மத்தியானம் எழுதியனுப்புகிறே னென்று சொல்லி அனுப்பிவித்துக்கொண்டு போகச்சே முசபர்சங்கு தம்முடைய முனிசி (**Munshi**) சோகாமல்லை (**M. Sukamal**) யும் அவருடனே கூட அனுப்பிவித்தாரென்றும் முசியே தொத்தேல் யெழுதுகிற காகிதத்தினாலே சகலமும் விசிதமாகுமென்றும் யெழுதியிருந்தது. அந்தப் படிக்கு துரையவர்களுடனே சொன்னதற்கு முசியே தொத்தேல் காகிதம் எனக்கு வாராமலிருக்கிறது மெந்த ஆச்சரியம் என்று சொன்னார் அதற்கு நான் சொன்னது சந்தாசாயபு காகிதத்திலேயும் முசபர்சங்கு காகி தத்திலேயும் முசியே தொத்தேல் காகிதம் பார்த்துக்கொள்ளச்சே தெரியவரு மென்று மிப்படி யெழுதியிருக்கிறபடியினாலே அந்தக் காகிதமும் இப்போ வந்து சேருமென்று சொன்னேன் மெய்தான் ஆனாலிதுக்கு உத்திரம் யெழு தச்சொன்ன வயணம் சந்தா சாயபுக்கு எழுதின காகிதச்சேதி!

தாங்களெழுதின காகிதமும் பார்த்துக் கொண்டோம் அந்தக் காகிதத் திலே இந்த மீ 21 உ சோமவாரம் நபாபு நீசாமுத்தவுலா அவர்கள் அண் டையிலிருந்து தக்கன் பக்குசி (**Deccan Paymaster**) மகம்மது அன்வர்தி கான் யென்கிறவர் சமாதானம் பேசவந்தார் என்றும் அவர் முசபர்சங்கு டனே நீசாமுத்தவுலா சொல்லச் சொன்னபடிக்குச் சொன்ன சேதியும் அதற்கு முசபர்சங்கு பதிலுத்திரம் சொன்ன வயணமும் இதுக்கு முசியே தொத்தேலுத்தாரம்படிக்கு முசியே புசிசால் சவாபுக்கு கூடயிருந்த சேதி முதலானது வயனமாயெழுதியனுப்பிவித்தது பார்த்துக்கொண்டு அபார மான சந்தோஷமாச்சுது எனக்கும் நிசாமுத்தவுலா நாசர்சங்குக்கும் பகை யில்லை. சத்துருத்தனமில்லை. ஒரு முன்னிலையிலே திருவேஷமில்லை. ஆனால் உமக்கும் முசபர்சங்கும் நிசாமுத்தவுலாவுக்கும் சத்துருவும் வந்ததைத் தொட்டு உங்களை ரெண்டுபேரையும் கைப்பிடித்ததைத்தொட்டு நானும்யிந்த காரியத்திலே கை வைத்துக்கொண்டபடியினாலேயும் உங்கள் சிரேயசைக் கோரி உங்களுக்கு நன்மைவர வேணுமென்று யெண்ணி யெங்கள் பவுன்சு உங்களுக்கு மத்தத்து பண்ணதைத்தொட்டு நான் உங்கள் சுகதுக்கத்துக்கு

உடன்கைதயானோம். ஆனபடியினாலே இப்பவும் உங்களுக்கு சமாதானத்தி மேலே மனது இருந்ததா அதுவும் நமக்கு சம்மதிதான் அல்லவென்று சண்டைக்கு சம்மதி இருந்ததா அதுவும் எனக்கு சம்மதிதான் ஆனபடியினாலே இப்பவும் பவுன்சுக்கு எசமானாக இருக்கிற முசியே தொத்தேலுக்கு நான் எழுதியனுப்பின தென்னவென்றால்: நீங்களெப்படி சொல்லி உத்தாரங் கொடுக்கிறீர்களோ அந்தப் பிரகாரம் நடந்து கொள்ளச்சொல்லி எழுதியனுப்பிவித்தேன். எது உங்களுக்கு சவுகரியமாய் சொல்லுகிறீர்களோ அந்த படிக்கு நடத்துவான் எந்தவிதம் பார்த்தாலும் சுவாமி சத்துருக்களுக்கு அபசெயமும் நமக்கு செயமும் கொடுப்பாரே யல்லாமல் பின்னை வேறே யெண்ணக்கவையில்லை என்றும் ஆனால் இந்த சமாதானம் என் முகாமுகமாய் சமஷ்ஷமத்திலே நடந்தால் சமாதானம் பேசுகிற உடன்படிக்கைகளெல்லாம் வெகு பிலனாக புஷ்டியாய் அவர்களுக்கு பிசகக்கூடாமலெப் படி பெலப்பாய் பத்திரம் பண்ணி கடவுதல் பண்ணவேணுமோ அந்தப் படிக்கு பண்ணிவிப்பேன் ஆனபடியினாலே என் மாரிபத்திலே சமாதானம் பேசவும் அப்படி பேசாமல் போனால் எனக்கு சம்மதியில்லை என்றும் இதல்லாமல் இப்போ நீங்கள் சொல்லி அனுப்பின உடன் படிக்கைகளுக்குள்ளே யாதொரு உடன்படிக்கையாகிலும் அவர்கள் சம்மதியாமல் சிறிது உடன்படிக்கைக்கு சம்மதிந்து யெழுதினால் அதற்கு நீங்கள் பரிச்சேதமாய் சம்மதிக்கத் தேவையில்லையென்றுமப்பால் சண்டைப் பண்ணுகிறதுக்கு யுத்தியுக்குத்தமாய் நடத்துகிறதேயல்லாமல் பின்னை வேறே யோசனை பண்ணத்தேவையில்லையென்றும் யின்னமொரு அயிவேசுவாசம் தோத்துகிறது அவர்களெங்கே மோசம்பண்ணுகிறார்களோவென்று தோத்தது; ஆனால் அப்படி நடக்கறியாது. அப்படி நடந்துதானல்லவோ அவர்களே மோசம்போவார்கள் யென்றும் யிப்படியாக யெழுதியனுப்பச்சொன்னபடிக்கு சந்தாசாயபுக்கு காகிதமெழுதினோம். அந்தபடிக்குத்தானே நபாபு இநாயித்துமொகதீன்கான் முசபர்சங்குக்கும் யெழுதச்சொன்னார். அந்தபடிக்கு ரெண்டுபேருக்கும் காகிதம் யெழுதி வுடனே மோகருபண்ணி தயாருபண்ணுவித்தேன். இப்படியிருக்கச்சே முசியே தொத்தேல் யெழுதின காகிதம் சேவுகன் கொண்டுவந்து கொடுத்தான். அதை துரையவர்கள் படித்துப்பார்த்து சந்தாசாயபு காகிதமத்தலப்பு படிக்கச்சே அந்தப்படிக்கே சமாசாரமெல்லாம் ஆனதினாலே முசபர்சங்குக்கு அடோனி (Adoni) முன் சீர்மை மாத்திரம் அல்லோ சந்தாசாயபு காகிதத்திலே யெழுதியிருந்தது யிதிலே கிஷ்ணைக்கப்புறமெல்லாம் முசபர்சங்குக்குக் கொடுக்கிறதாய் பேச்சுவார்த்தை நடத்தினதாய் யெழுதியிருந்ததுமல்லாமல் முசபர்சங்குடனே அந்த பக்குசி சிறு வார்த்தைகள் சந்தாசாயபை விடச்சொன்னதும் அதற்கு முசபர்சங்கு பதிலுத்தரம்

சொன்னது: சந்தாசாயபைத் தொட்டு பிரான்சுக்காரர் எனக்கு ஒத்தாசை மத்தத்து பண்ணினதின்பேரிலே நானித்தனை முன்னுக்கு வந்ததாச்சே சந்தாசாயபையும் விடக்கூடாது. பிரான்சுகாரனையும் எனக்கு விடக்கூடாதென்று கெட்டியாய் சொல்லிப்போட்டானென்றும், புதுச்சேரியிலே கொவர்னதோர் அண்டையிலே போயிந்த சமாதானம் பேசித்தீர்க்கிறதே யல்லாமல் மத்தப்படி பேசத்தக்கதில்லையென்று கெட்டியாய் உத்தரம் முசபர்சங்கு சொன்னதாய் யெழுதியிருந்தது. அந்த வயணத்தை யென்னுடனே வெகு உற்சாகத்துடனே இனிமேல் இங்கிலீசுக்காரர்கள் யென்ன கெதியாய் போவார்களென்றும் கோவையிலேயிருந்து விசரே (Vicery of Goa) தேவனுமபட்டணம் கொவர்னதோர் மேஸ்தர் பிளேயருக்கு (Mr. Floyer) மேஸ்தர் புசுக்காவேன் (Mr. Boscawens) மயிலாப்பூரிலேயிருக்கிற புடுதிக்கிசு (Portuguese) பாதிரியைப் பிடித்துப் போனதுக்கும் மயிலாப்பூரிலே புடுதிக்கிசு கொடி போட்டிருந்ததின் பேரிலேதானே இங்கிலீசுக்காரர்கொடி போட்டதுக்கும் வெகு கண்டிப்பாயெழுதி யுத்தம் பண்ணுகிற சாடையாய் யெழுதிவந்து இங்கிலீசுக்காரனுக்கு அது முன்னிலையாயும் சூத்துக்கிழிஞ்சுபோயிருக்கிறது. அந்தச் சேதி நேத்துப் பகல் ஒரு புடுதிக்கிசு ஒப்பிசியாலொருத்தன் யெனக்கு காகிதம் கொண்டுவந்து கொடுத்தானே அவன்தான் தேவனும்பட்டணம் கொவர்னதோருக்கு காகிதம் கொடுத்துப்போட்டு தானிங்கே காகிதம் நேத்து கொண்டுவந்து கொடுத்தான். அதைத்தொட்டு முக்காலே மூணு வீசம் பங்கு இங்கிலீசுக்காரருக்கு சூத்துக்கிழிஞ்சுபோச்சுது இம்போதோர் கப்பல் (Imperial Ships) கப்பல்கள் புறப்பட்டது இந்த ராச்சியத்திலே வியாபாரம் பண்ணுகிறதுக்கு அதைப்பிடிக்க இங்கிலீசுக் கப்பல்களும் புறப்பட்டது இவர்களுக்கும் யிந்த ரேவுகளிலே அவர்கள் கப்பல்களைக் கொண்டுவந்து வைத்துப் பிடித்து யிறங்கி வியர்பாரம் பண்ணுமல்படிக்கு அதற்கு யெப்படி நடத்தைபண்ணவேணுமோ அப்படி செய்யச் சொல்லி யெழுதியிருக்கிறது. முன்னேயே எம்பிறதோர்களுக்கும் இவர்களுக்கும் அன்னியோன்னியமாயிருந்தார்களே இப்போ அவர்கள் கப்பலைதானே பிடிக்கச்சொல்லி யெழுதினதுமல்லாமல் கப்பல்கள் கூட பயணம்பண்ணி அனுப்பினார்கள். ஆனால் இங்கிலீசுக்காரர்கள் சிநேகிதரைக்கெடுக்க வேணுமென்று நினைத்து தாங்கள் கெட்டுப்போரபேர் யென்று சொல்லி சென்னப்பட்டணம் வலங்கை இடங்கை கொடங்கை மெத்த விபரீதமாய் நடக்குதென்று இதுமுதலான சேதி சொல்லிக்கொண்டிருந்து அப்பால் முசியே தொத்தேலுக்கு காகிதம் யெழுதிக்கொண்டு வந்து என் கையில் கொடுத்து முசபர் சங்குக்கும் சந்தாசாயபுக்கும் யெழுதின காகிதமும்கூட கொடுத்தனுப்பச் சொன்னார். அந்தப்படிக்கு நானும் சந்தாசாயபுக்கும் வக்கீல்

சுப்பய்யனுக்கும் அவர்களெழுதினதற்கு பிதிலுத்தரம் யெழுதிக்கொடுத்தது யேகத்துக்கு றவாணு பண்ணி ரெண்டு மணிக்கு லசுக்கருக்கு கொடுத்து அனுப்பிப்போட்டு நானும் பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

அப்பால் முசியே தொத்தேல் காகிதமும் சந்தாசாயபுக்கு சாமாராயன் மாரிபத்திலே அனுப்பின ரெண்டாயிரம் பூ விராகனுக்கு சந்தாசாயபு கையெழுத்துப்பட ரசீதும் அதிலவர் மோகரும் கூடப்போட்டு வந்தது. முசியே தொத்தேல் அனுப்பின காகிதம் படித்துப்பார்த்து ரசீதை யென் கையில் கொடுத்து சரியா யெழுதியிருக்குதோ பார் யென்று சொன்னார். மதனுந்தபண்டிதருக்கு காண்பித்து ரெண்டாயிரம் விராகன் சாமாராயன் மாரிபத்திலே அனுப்பின ரெண்டாயிரம் வராகனும் முசியே தொத்தேல் முன்பாக வாங்கிக்கொண்டோமென்று யெழுதியிருந்தது. அந்தச் சேதியை துரையவர்களுக்குச் சொல்லி அவர் கையில் கொடுத்துப்போட்டு மறுபடி பாக்கு கிடங்குக்கு வந்தேன்.

இற்றைனாள் பகலைக்கு மூனு மணிக்கு அழைத்தனுப்புவித்து நூற்றம் பது எருதுகளின்பேரிலே அரிசி முதலான சாமான்கள் லசுக்கருக்கு அனுப் பினார்களாவென்று கேட்டார். அனுப்பினோமென்று பரசுராமன் வந்து சொன்னானென்று சொன்னேன். அப்பாலிப்போ வந்து பேசின பக்குசி மகம் மது அன்வற்திகான் என்கிறவன் பெரிய மனுஷனு பேசி தப்பிப் போகானே ஒருவேளை நாசறுசங்கு தப்பினாலும் நீ பேச்சு தப்பினபடியினாலே நாங்கள் உன்னிடத்திலே இருக்கிறதில்லையென்று சொல்லுவானுவென்று இது முத லான பேச்சைத்தானே மறுபடிவந்து கேழ்ப்பார். நானும் அப்படி பேச்சு தப்புகிறவனுமாய் மோசம் பண்ணுகிறவனுமானால் இருபதுநாளாய் காதவழி யிலே வந்திருந்துக்கொண்டு அவனை ராசவட்டத்துக்கும் ஆள் விடக்காரிய மென்ன சண்டை பண்ணுகிறநானல்லோ உள்ளது அவனுக்கு பயம் ரெண்டு பங்கு பயிராச்ச காரியத்தினாலேயும் யிருக்கிறபடியினாலே வெளிக்குத்தான் பலகீனப்பட்டுப் போனதாய் எண்பியாமல் முசபர்சங்கு அவர்களாய் ராச வட்டம் விட்டுப் பேசிவித்தார்கள். என் பிள்ளையானாலென்ன என் உடன் பிறந்தாள் பிள்ளையானாலென்ன என்று இவரைத்தானே நேமித்துப் போட்டு பணத்துக்கு ஒரு உடன்படிக்கைப்பேலே பண்ணிக்கொண்டு புறப்பட்டுப் போய்விடுவான் அதைவிட்டு யெக்கியாய் சம்மதித்து நடத்தினால் மெத்த அபகீர்த்தியென்று இந்தனை தூரம் நூத்திருபதிங்காதவழி வந்தவன் பரிந்த சுபாவுக்கெல்லாம் தான் எசமானென்று யிருக்கிறவன் தன் பிகுவு எவ்வளவு ஆகிலும் காரியத்திலே காட்டயில்லாமல் போனாலும் வாய்ப்பேச்சிலேயானா லும் பிகுவிலே பேசி கொடுக்காமல் போவானு ஆனபடியினாலே அஞ்சாறு நாள் செல்லும் சமாதானமாய் ஒன்று எற்படுகிறதற்கென்று தோற்று

தென்று சொன்னேன். அது மெய்தானென்று ஒத்துக்கொண்டு இது ராசி யாய் சண்டையில்லாமல் தீருமாவென்று திரும்பியும் கேட்டார். பரிச்சேத மாய் சண்டையில்லாமல் ராசியாய்த்தானே தீர்ந்துபோமென்று வெகு சம்மதி சொன்னேன். அவர் கேழ்க்கிறது வெகு அதைரியத்தின்பேரிலே பல பலவித மாய் கேழ்க்கிறபடியினாலே அதை நான் விஸ்தரித்து எழுதுகிறதல்லவே ஆனபடியினாலே எழுதவில்லை அப்பால் எனக்கு தோற்றினபடிக்கு அவருக்கு தைரியம் வர எப்படி சொல்லவேணுமோ அப்படியெல்லாம் பெலப்படுத்தி சொன்னேன் என்று சொன்னாலும் மெய்தானென்று அன்னேரம் ஒத்துக் கொண்டு மறுபடி இப்படி இருநூறு தரமுண்டு கேட்டது. அப்பாலெப்படியும் சமாதானமாம் என்கிறது தைரியப்பட்டு அப்பால் உற்சாகமாய் அப்போ ஒரு காகிதம்,முசியே தொத்தேனுக்கு யெழுதியனுப்பிப்போட்டு வெளியே வந்தார். துரையைப்பார்த்தாப்போலே சுவாரிப்போனார்.

சுவாரி போய்வந்தாப்போலே யென்னை அழைக்கச் சொன்னார். நான் போனவுடனே யென்ன சாமாசாரமென்று கேட்டார். என்னுடனே பறங்கிப் பேட்டை அய்யாக்கண்ணு செட்டியார் வந்து சொன்னது: மேஸ்தர் கோப்பு (**Mr. Cope**) தேவனும்பட்டணம் வந்து சேர்ந்தாரென்று சொன்ன சேதி யாம்படியே துரையுடனே சொன்னேன். அதற்கவர் மெய்யாயென்று கேட் டார் வந்து சொன்னபேர் வயணமாம்படியே சொன்னேன். இப்படி இருக் கச்சே மதாமுடனே போய் சொன்னதற்கு சவரிமுத்து சேர்வைக்காரன் எழுதியனுப்பிவித்தான் யென்று சொன்னபேச்சைக்கேட்டுக்கொண்டு மெய் தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் மீர்ஷம் சாயபும், சயிதுசேன்கான் பட்டாணி சமேதாரன் வந்து இனிமேல் சமாதானமான சேதியே அல்லாமல் இதுக்கு வித்தியாசம் வரத்தக்கதில்லை யென்று சொல்லுகிறார்கள் யென்று சேதி சொன்னேன் மீர்ஷம் சொன்னானென்று கேட்டார். சொன்னான் யென்று சொல்லி அப்பால் முத்துமல்லாரெட்டி ஒறத்திப்பாளையத்தி லிருந்துக்கொண்டு இருநூறு முன்னூறு சேவுகர்களைக் கூட்டிக்கொண்டு விழுந்து நயினாத்தே முதலியென்கிற குடியையும் பிடித்துக்கொண்டு வந்து விழுந்து நயினாத்தே முதலியென்கிற குடியையும் பிடித்துக்கொண்டு தானிய தவசம் கட்டிக்கொண்டு இருக்கிறவேளையிலே திண்டிவனம் கசுப்பாவிலே இந்த சிப்பாய்கள் சட்டைக்காரர்கள் போய்ப்பார்த்து பத்து வெடி தீர்ந்த வுடனே ஓடிப்போய்விட்டார்கள் குடியையும், தானியத்தையும் கூடகொண்டு போனார்கள் யென்று சொன்னேன். அதைக்கேட்டு நல்லது! அவர்களுக் கெல்லாம் [illegible] யென்று சொன்னார்,

